# மத் பகவத்கீதை



பாகம் I

அத்தியாயங்கள் I to IX



சுவாமி சின்மயானந்தர்

# ஸ்ரீமத் பகவத் கீதை

பாகம் I

அத்தியாயங்கள் I to IX





சுவாமி சின்மயானந்தா

Sreemad Bhagavad Geeta

Volume I

Chapters I to IX

Commentary

*by*

Swami Chinmayananda

*Published by*
CENTRAL CHINMAYA MISSION TRUST,
Tamil Publication Division,
2, 13th Avenue Harrington Road,
Chetput, Madras – 600 031.
*வெளியிட்டோர்:*
சென்ட்ரல் சின்மயா மிஷன் டிரஸ்ட்,
தமிழ் வெளியீடு,
2, 13வது அவென்யூ, ஹாரிங்டன் ரோடு,
சேத்துப்பட்டு, சென்னை–600 031.


1st Edition May 1985, 2000 Copies.
2nd Edition January 1995, 2000 Copies.

முதற் பதிப்பு மே 1985, 2000 பிரதிகள்
இரண்டாம் பதிப்பு ஜனவரி 1995, 2000 பிரதிகள்

From the English Edition of
"BHAGAVATH GEETA",
Central Chinmaya Mission Trust,
Sandeepany Sadhanalaya,
Saki Vihar Road,
Powai Park Drive,
Bombay – 400 072.
பகவத் கீதை, ஆங்கில பதிப்பிலிருந்து,
சென்ட்ரல் சின்மயா மிஷன் டிரஸ்ட்,
சாந்தீபனி சாதனாலயா,
ஸாகி விஹார் ரோடு,
போவை பார்க் டிரைவ்,
பம்பாய்–400 072.

*Printed by*
Devi Press, Madras – 600 007.
*அச்சிட்டோர்*
தேவி பிரஸ், சென்னை–600 007.

19-2

# தியான சுலோகம்

ஓம் பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா நாராயணேன ஸ்வயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுநிஞ மத்யே மஹாபாரதம்
அத்வைதாம்ருத வர்ஷிணீம் பகவதீம் அஷ்டாத சாத்யாயிநீம்
அம்ப த்வாம்அனுஸந்ததாமி பகவத் கீதே பவத்வே ஷிணீம்

நமோஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே புல்லார விந்தாயத பத்ரநேத்ர
யேன த்வயா பாரத தைலபூர்ண: ப்ரஜ்வாலிதோ ஞானமய: ப்ரதீப:

ப்ரபன்ன பாரிஜாதாய தோத்ரவேத்ரைக பாணயே
ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம:

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபால நந்தன:
பார்த்தோ வத்ஸ: ஸுதீர்போக்தா துக்தம் கீதாரும்தம் மஹத்

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸசாணூர மர்த்தனம்
தேவகீபரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்

பீஷ்மத்ரோணதடா ஜயத்ரதஜலா காந்தார நீலோத்பலா
சல்யக்ராஹவதீ க்ருபேண வுஹனீ கர்ணேன வேலாகுலா
அஸ்வத்தாமவிகர்ணகோரமகரா துர்யோதனாவர்த்தினீ
ஸோத்தீர்ணா கலு பாண்டவை ரணநதீ கைவர்த்தக: கேசவ:

பாராசர்யவச: ஸரோஜமமலம் கீதார்த்த கந்தோத்கடம்
நாநாக்யானக கேஸரம் ஹரிகதாஸம்போதனா போதிதம்
லோகே ஸஜ்ஜன ஷட்பதை ரஹரஹ: பேபீயமானம் முதா
பூயாத் பாரத பங்கஜம் கலிமலப்ரத்வம்ஸின: ச்ரேயஸே

மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம்
யத்க்ருபா தமஹம் வந்தே பர்மானந்தமாதவம்

யம் ப்ரம்மா வருணேந்த்ர ருத்ரமருத: ஸ்துன்வந்தி திவ்யை: ஸ்தவை:
வேதை: ஸாங்கபதக்ரமோபநிஷதைர் காயந்தி யம்ஸாமகா:
த்யானாவஸ்தித தத்கதேன மனஸா பச்யந்தி யம் யோகினோ
யஸ்யாந்தம் ந விது: ஸுராஸுரகணா தேவாய தஸ்மை நம:

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ. மோக்ஷயிஷ்யாமி மா சுச:

# ஸ்ரீ குருஸ்தோத்ரம்

அகண்டமண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம் |
தத்பதம் தர்ஸிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 1 ||

அஞ்ஞானதிமிராந்தஸ்ய ஞானஞ்சனஸலாகயா |
சக்ஷுருந்மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 2 ||

குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேஸ்வர: |
குருரேவ பரம் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 3 ||

ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப்தம் யத்கிஞ்சித் ஸசராசரம் |
தத்பதம் தர்ஸிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 4 ||

சின்மயம் வ்யாபி யத்ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் |
தத்பதம் தர்ஸிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 5 ||

ஸர்வஸ்ருதிசிரோரத்னவிராஜிதபதாம்புஜ: |
வேதாந்தாம்புஜசூர்யோ யஸ்தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 6 ||

சைதன்ய: ஸாஸ்வத: ஸாந்தோ வ்யோமாதீதோ நிரஞ்சன: |
பிந்துநாதகலாதீதஸ்தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 7 ||

ஞானஸக்திஸமாரூட: தத்வமாலாவிபூஷித: |
புக்திமுக்திப்ரதாதா ச தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 8 ||

அனேகஜன்மஸம்ப்ராப்தகர்மபந்தவிதாஹினே |
ஆத்மஞானப்ரதானேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 9 ||

ஸோஷணம் பவஸிந்தோஸ்ச ஞாபனம் ஸாரசம்பத: |
குரோ: பாதோதகம் ஸம்யக் தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 10 ||

ந குரோரதிகம் வம் ந குரோரதிகம் தப: |
தத்வஞானத் பரம் நாஸ்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 11 ||

மந்நாத: ஸ்ரீஜகந்நாத: மத்குரு: ஸ்ரீஜகத்குரு: |
மதாத்மா ஸர்வபூதாத்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 12 ||

குருராதிரநாதிஸ்ச குரு: பரமதைவதம் |
குரோ: பரதரம் நாஸ்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 13 ||

ப்ரஹ்மானந்தம் பரமசுகதம் கேவலம் ஞானமூர்த்திம்
த்வந்த்வாதீதம் ககனஸத்ருஸம் தத்வமஸ்யாதிலக்ஷ்யம் |

ஏகம் நித்யம் விமலமசலம் ஸர்வதீஸாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுணரஹிதம் ஸத்குரும் தம் நமாமி || 14 ||

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ்ச ஸகா த்வமேவ |

த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவதேவ || 15 ||

# ஸ்ரீமத் பகவத் கீதை

## ஒரு வார்த்தை—பதிப்பாளர்களிடமிருந்து

நினைவுக்கெட்டாத காலம் தொட்டுப் பாரதத்தின் கலாசாரத்தைப் போற்றி வளர்த்து வந்திருக்கும் ஆன்மிக நூல்களுள் பகவத் கீதையே மிகச் சக்தி வாய்ந்தது, கீர்த்தி மிக்கது. சனாதன தர்மம் (அல்லது ஹிந்து தர்மம்) என்கிற அற்புதமான மாளிகையின் மூன்று தூண்களாக உபநிடதங்களும் பிரம்ம சூத்திரங்களும் கீதையும் விளங்குகின்றன என்றால் அவற்றுள் உள்ளத்துக்கு மிக நெருக்கமாக உள்ளது கீதைதான்.

இக்காலத்தவர் அதனுடைய போதனைகளின் சிறப்பைப் புரிந்துகொண்டு வாழ்க்கையில் கடைப்பிடிக்க வழிகாட்டி வருபவர் என்ற முறையில் சுவாமி சின்மயானந்தர் கீதையின் தலைசிறந்த விளக்க உரையாளராகத் திகழ்கிறார். சுவாமிஜியின் விரிவுரைகளும் வியாக்கியானங்களும் படித்த இளம் தலைமுறையினரின் மனத்தில் பதியும்படியாக அமைந்திருக்கின்றன. அவற்றில்தான் எவ்வளவு தெளிவு; எவ்வளவு சரளம்; காலத்துக்குத்தான் எத்தனை பொருத்தம்! நாட்டின் குறுக்கும் நெடுக்குமாக அவர் நடத்தியுள்ள நூற்றுக்கணக்கான ஞான யக்ஞங்கள் கணக்கற்ற மக்களின் உள்ளங்களில் கீதை என்னும் தீபத்தை ஏற்றி வைத்திருக்கின்றன. மேலும் சுவாமிஜியின் சீடர்கள் நாட்டின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று, அந்தந்த மாநிலத்தின் மொழியில் கீதை சொல்லும் செய்தியைப் பரப்பி வருகிறார்கள்.

கீதை, உபநிடதம் போன்ற நூல்களைத் தமிழில் கொணர வேண்டுமென்ற நோக்கத்துடன் மத்திய சின்மயா மிஷன் டிரஸ்ட் 1982 செப்டம்பரில் தமிழ் பதிப்புப் பிரிவை அமைக்கத் தீர்மானித்தது.

தமிழ்ப் பிரிவு மேற்கொண்ட முதல் முதல் பணி சுவாமிஜியின் கீதைப் பேருரைகளைத் தமிழில் மொழி பெயர்ப்பதாகும். அதாவது, ஞான யக்ஞங்களில் சுவாமிஜி விளக்கிச் சொன்ன கீதையின் உண்மைத் தத்துவம் வெளிப்படும் முறையில் மூலம் முழுவதையும் ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்ப்பது.

சுவாமிஜியின் வியாக்கியானத்தைத் தமிழில் மொழி பெயர்ப்பதும் பதிப்பிப்பதும் மாபெரும் வேலை. இருபது வருடத்துக்கு மேலாக சுவாமிஜியின் சீடராகவும் இருந்து

வருபவரும், பத்து வருட காலமாக கீதை, உபநிடதச் சொற்பொழிவாளராக இருந்து வருபவருமான சென்னை ஸி.ஜி. வாசுதேவன் அவர்களிடம் அது ஒப்படைக்கப்பட்டது. அவர் முதல் பத்து அத்தியாயங்களைத் திறம்பட மொழி பெயர்த்துக் கொடுத்துள்ளார். வேலையைத் துரிதப்படுத்தும் பொருட்டு, மற்ற அத்தியாயங்களின் மொழி பெயர்ப்பை மேற்கொள்ளும்படி மதுரை ஸ்ரீ டி. சேஷாத்திரியை சுவாமிஜி பணித்தார். முப்பதாண்டுகளுக்கு மேலாக சுவாமிஜியின் சீடராக இருந்து வரும் ஸ்ரீ சேஷாத்திரி, *11* முதல் *18* வரையிலான அத்தியாயங்களைச் சிறப்பாக மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார். இந்த அன்பர்களுக்கு எங்கள் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்களுடைய ஒப்பற்ற சேவை கிடைத்திராவிட்டால் இந்தப் புத்தகம் வெளிவந்திருக்காது.

கீதை போன்ற ஒரு நூலை வெளியிடுவதென்றால், அதற்குப் பெருந்தொகை செலவு செய்ய வேண்டும். *1984'*ம் ஆண்டு பிப்ரவரி மாதம் சென்னையில் நடைபெற்ற *370'*வது கீதை ஞான யக்ஞத்தின் மூலம் கிடைத்த தொகை மொத்தத்தையும் பிரசுரவேலை தொடங்குவதற்கு உதவியாக, சுவாமிஜி அன்புடன் ஒதுக்க முன் வந்தார். இந்தத் தொகையை பிரசுர வேலையைத் தொடங்க வழங்கியதற்காக சென்னை சின்மயா மிஷனுக்கு நாங்கள் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். இந்த நிதிக்குத் துணையாக, என் தந்தை காலம் சென்ற டி. கேசவ ரெட்டி அவர்களின் நினைவாகக் கொடுக்கப்பட்ட ஒரு கணிசமான தொகையையும் சுவாமிஜி அருள் கூர்ந்து பெற்றுக் கொண்டார்.

தமிழ் மக்களுக்குப் பணி புரிய ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது எங்கள் பாக்கியமாகும்.

இந்த ஒப்புயர்வற்ற நூலை சுவாமிஜியின் பாதங்களில் சமர்ப்பிக்கிறோம். இந்தப் பெரும் பணியில் பங்கேற்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்த மகத்தான பேறு. இந்தப் பொன்னான வியாக்கியானத்தை ஆன்மிக உணர்வுள்ள தமிழ் மக்கள் போற்றிப் பெரிதும் பயனடைவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

தமிழ்ப் பிரசுரப் பிரிவுக் குழுவினரான ஸ்ரீமதி லீலா நம்பியார், ஸ்ரீமதி பத்மா நரசிம்மன், ஸ்ரீ தீபக் ஷா, ஸ்ரீ ஸி.ஜி. வாசுதேவன் (செயலாளர்) ஆகியோர் தொடக்கம் முதல் பங்கேற்று எல்லா வகையிலும் சிறப்பாக யோசனைகள் கூறி உதவிகள் புரிந்திருக்கிறார்கள். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

டி. கோபாலகிருஷ்ண ரெட்டி,
தலைவர்,
சென்ட்ரல் சின்மயா மிஷன் டிரஸ்ட்,
சின்மயா பிரசுரம் (தமிழ்ப் பிரிவு)

# ஸ்ரீமத் பகவத் கீதை

முன்னுரை

மனிதன், உலகம், கடவுள் ஆகியவை பற்றித் தத்துவ பூர்வமான அடிப்படைக் கொள்கைகளை உபநிடதங்கள் விளக்கு கின்றன என்றால், அவ் வேதாந்தக் கருத்துக்களை ஒவ்வொருவரும் வாழ்ந்து காட்டுவது எப்படி என்பதற்குக் கையேடாக அமைந் துள்ள நூல் கீதை.

இறைவனின் இத் தெய்வீகக் கீதம்—ஸ்ரீமத் பகவத் கீதை—மகாபாரதத்தில், பீஷ்ம பருவத்தில் 25 முதல் 42 வரையில் 18 அத்தியாயங்களாக உள்ளது. நடைமுறை வாழ்க்கைக்கு வழி காட்டும் இம்மகத்தான நூல், இந்து மதத்தில் தோன்றிய திட்ட வட்டமான புரட்சியைக் குறிப்பதுடன், புராண காலத்திற்குப் பிறகு இந்து மறுமலர்ச்சியைத் தோற்றுவித்து, தொடர்ந்து வரும் தலைமுறையினரும் அதைப் பின்பற்ற வழி வகுத்தது.

இமய மலையின் குகைகளில் தனித்து ஒதுங்கி நின்ற வேத உண்மைகளை, கவிஞரும் முனிவருமான வியாசர் இத் தெய்வீகக் கீதத்தின் மூலம் அவருடைய காலத்திற்கேற்பப் பொருத்திக் காட்டுகிறார். அரசியல் பரபரப்பு, சகோதரர்களை சகோதரர்கள்

கொன்று குவிக்கப் போகும் குழப்பமிக்க பதட்டநிலை, இத்த கைய சூழ்நிலையிலும் வேத உண்மைகளை வியாச முனிவர் நிலை நாட்டுகிறார். குழப்பத்தினால் உண்மையான பகுத்தறிவுடன் நடந்துகொள்ளச் சக்தியற்று நிற்கிறான் அருச்சுனன். அவனு டைய நோயுள்ளத்தைச் சீராக்குவதற்கு வேத உண்மைகளை அடிப்படையாகக் கொண்ட மருத்துவ முறையை கிருஷ்ணர் கையாளுகிறார்.

தத்துவத்தின் செயல்முறையே மதம்! கால மாற்றத்திற் கேற்ப, பண்டைய தத்துவங்களுக்கு அறிவு பூர்வமான புதிய விளக்கங்கள் தேவையாகின்றன.

ஒரு மனிதன், அவனது தற்கால வாழ்க்கையில் இப் பண்டைய விதிமுறைகளைப் பயனுள்ள முறையில் எவ்வாறு கடைப்பிடிப்பது என்பதை ஞானிகளும், தீர்க்கதரிசிகளும், அறிஞர்களும் கற்றுக் கொடுக்கிறார்கள்.

வேத ஒளியில் கீதோபதேசத்தின் அரிய தத்துவங்களைச் சரிவர உணர்ந்து கொண்டால் அகந்தையிலிருந்து தோன்றும் ஆசைகள் அகலும். அதன்பின் செய்யப்படும் செம்மையான செயல்கள், மனத்தின் ஆழத்தில் பதிந்த மாசுகளை நீக்கும். அத்து டன் மனத்தைத் தூய்மைப்படுத்தி, இறைநாட்டத்தில் உயர உதவும்.. இதனை விளக்க, மனம் என்றால் என்ன, நம் அன்றாட வாழ்க்கையில் அது எவ்வாறு செயல்படுகிறது என்று ஆராய் வோம்.

மனமே மனிதன். மனம் எப்படியோ மனிதனும் அப்படி. மனம் சலனப்பட்டால் மனிதனும் சலனமடைகிறான். மனம் சிறந்ததாக இருந்தால் மனிதனும் சிறந்தவனாக இருக்கிறான். நம் ஆராய்ச்சிக்கு, இந்த மனத்தை இரு பக்கங்களுள்ள ஒரு பொரு ளாகக் கொள்வோம். ஒரு பக்கம் வெளி உலகத்தை நோக்க, அதன் பொருள்களினால் உண்டாகும் தூண்டுதல் பதிவுகளை ஏற்கும் கருவியாக இருக்கும் புறமனதாகும். மற்றொன்று, உள் மனதாய் இருந்துகொண்டு, புறத் தூண்டுதலுக்கு ஏற்ப இயங் கும் அக மனதாகும். உலகப் பொருள்களை நோக்கியிருக்கும் புற மனத்தை 'மனம்' என்றும், உள்நோக்கியிருக்கும் அகமனத்தை 'புத்தி' என்றும் சம்ஸ்கிருதத்தில் கூறுகிறார்கள்.

அகமனதும் புறமனதும் எவனிடம் ஒன்றுபட்டு இணைந்து இயங்குகிறதோ, சந்தேகம் எழும் தருணத்தில், புறமனது அகமனதின் ஆணைக்கு உட்பட்டிருக்கிறதோ, அவனே முழுமை யான மனிதனாவான். ஆனால் ஒரு சிலரைத் தவிரப் பெரும் பாலோர், அகமனமும் புறமனமும் ஒன்றுபடாத நிலையில் இருப்பது வருந்தத்தக்கது. இந்த வேறுபாடு, ஒருவனிடம் இருக்கும் அகங்காரத்தினால் உண்டாகிறது. இவ்விரு மனங்களின்

தன்மைகளுக்கிடையே எவ்வளவு இடைவெளியுள்ளதோ, அவ்வளவு அதிகக் குழப்பமும், தான் என்னும் செருக்கும் கீழ்த்தர உணர்ச்சிகளும் அவனிடம் இருக்கும். இவற்றை அவன் வாழ்வு வெளிப்படுத்துகிறது.

நாம் விழித்துக்கொண்டிருக்கும்போது, புலன் உறுப்புகளானது ஐந்து 'அறிவு வாயில்' களின் வழியாக எப்போதும் உலகப் பொருள்களை அனுபவித்துக் கொண்டே இருக்கிறோம். நமது ஐம்பொறிகளின் மீது செயலாற்றும் எண்ணற்ற புறத் தூண்டுதல்கள், புறமனத்தைச் சென்றடைந்த பிறகு ஏற்ற அகத் தூண்டுதல்களை உண்டாக்குகின்றன. பிறகு புறமனத்திற்கும் அக மனத்திற்கும் இடையேயுள்ள அகங்கார எண்ண இழைகளின் வழியே ஊடுருவிச் செல்லும் இத் தூண்டுதல்கள் அகமனத்தை அடைந்து அங்கு சேமிக்கப்பட்டுள்ள கடந்தகாலச் செயல்களின் நினைவுத் தடங்களுக்கேற்ப எதிர் செயலாற்றி, ஐந்து கர்ம இந்திரியங்களின் மூலம் வெளியுலகத்தில் செயலாற்றுகின்றன.

குறிப்பிட்ட புறத் தூண்டுதலின் விளைவாகச் சுய உணர்வுடன் ஒருவர் வெளியுலகில் செய்யும் வேலையை படம் அ விளக்குகிறது.

படம் 'அ



ஒவ்வொரு கணமும் பல்வேறு வகையான புறத் தூண்டுதல் களின் பாதிப்புக்கு மனிதன் உள்ளாவதால் அகமனத்தில் பல புதிய நினைவுகளை அவன் சேமித்துக் கொள்கிறான். அகமனத்தை அடையும் ஒவ்வொரு தூண்டுதல் தொகுதியும் அங்குள்ள நினைவு களோடு சேருவதுடன் அங்கு ஏற்கெனவே குவிந்துள்ள மனத் தடங்களினால்* பாதிக்கப்படுகிறது. இவை செயல்களாக மாறும் போது அகமனத்திலுள்ள வாசனைகளின் இயல்பைப் பெறு கின்றன.

வாழ்க்கையில் பல்வேறு அனுபவங்களை நாம் தொடர்ச்சி யாகப் பெற்று வருகிறோம். ஒவ்வோர் அனுபவத்தையும் உணர்ந்து, அதன் விளைவாக வெளியுலகத்தில் செயலாற்றுகின் றோம். இம்முறையில் நாம் நம்மை அறியாமலேயே மேலும் மேலும் புதிய வாசனைத் தடங்களைப் பதிப்பித்துக் கொள்கிறோம். நமது பழைய சொந்த அனுபவங்களின் தொகுதி அகமனத்தில் பெருஞ்சுமையாக அழுத்துகிறது. இம்மாசுகள் அகமனத்தை மந்தமாக்கி, ஜடமாக்கி, நமக்கும், நம்முள் இருக்கும் புனிதத் தன்மைக்கும் நடுவே கடக்க முடியாத சுவரைப் போல் எழுந்து நிற்கின்றன.

மனத்தைப் பக்குவப்படுத்த வேண்டுமென்றால் 'வாசனை' களைக் குறைக்க வேண்டும் என்று வேதாந்தம் கூறுகிறது. ஒரு உருவத்தைப் பிரதிபலிக்கவில்லை என்பதில்லை. கண்ணாடி மீது படிந்திருக்கும் தூசிப் படலம் என் உருவத்தை மறைக்கிறது. ஒரு துணியால் அதைத் துடைத்தால் அந்தத் தூசி மறைந்து அதில் என் உருவம் தெரிகிறது. கண்ணாடியில் பிரதிபலித்த என் உருவத்தைப் பார்க்கிறேன். அதுபோலவே மனிதன் தனக்குள் இருக்கும் புனிதத் தன்மையை உணரவில்லையென்றால் அதற்குக் காரணம் புனிதத் தன்மையைப் பிரதிபலித்துக் கொண்டிருந்த அகமனம், அகந்தையினாலும் பாசத்தினாலும் கடந்த கால வாழ்க்கையில் சேமித்த மந்த குண வாசனைகளின் அடர்த்தியால் மறைக்கப்பட்டதேயாகும்.

மனத்தின் இரு பகுதிகளான அகமனத்தையும் புறமனத்தை யும் ஒன்றுகூட்டி ஒருநிலைப்படுத்தி, புறமனது அகமனத்தின் ஆணைக்கு ஏற்பச் செயல்படுவதே, கீதையில் கூறப்படும் யோக மாகும். இவ்விரு மனங்களின் இடையே நின்று பிரிக்கும் அகந் தையையும் பாசங்களையும் நீக்குவதன் மூலமே இந்த யோகம் கை கூடும். இந்த யோகத்துக்குக் கீதை குறிப்பிடும் சரியான சொல்லே புத்தி யோகம்.

படம் 'ஆ'வில் குறிப்பிட்டுள்ளபடி அகமனமும் புறமனமும் ஒன்றுபட்டுவிட்ட நிலையை எய்தினுல் ஒருவர் சமநிலை பெற்ற யோகி ஆகிருர். பிறகு செயல் திறனில் அவருக்கு இணை யாரு மில்லை.* இந்த யோகி தன் புறத் தூண்டுதல்களை முழுமை யாகவும் செம்மையாகவும் சந்திக்கும் புறமனத்தோடு திகழ் கிருன். இத்தகைய யோகியின் செயல்கள் அகமனத்தில் ஏற்கனவேயிருக்கும் வாசனைகளை அகற்றி, மனத்தைத் தூய்மை யாக்குகிறது. ஒரு மனிதன் புத்தி கூர்மையான செயல்களினுல் தன்னுள் படிந்த மாசுகளை நீக்கி அகமனத்தைப் பளிங்குபோல் தூய்மை பெறச் செய்கிருன்.

படம் 'ஆ'




சங்கரரைப் போன்ற சிறந்த உரையாசிரியர்களால் இத்தத்துவமே வலியுறுத்தப்பட்டுள்ளது. அகந்தையின்றி, தன்னலமற்ற செயல்களை மேற்கொண்டு பரம்பொருளிடம் செலுத்தும் பக்தியே மனத் தூய்மையை விளைவிக்கிறது என்பதே இவர்கள் வலியுறுத்தும் உண்மையாகும். அகமனம் உள்முகமாய் நோக்கிப் பரம்பொருளை நாடவேண்டுமானுல் அதற்கு முன் மேற் குறிப்பிட்ட மனத் தூய்மை இன்றியமையாத அடிப்படை என்று சங்கரர் கூறுகிருர்.

ஆன்மீகப் பார்வையில் நோக்கும்போது நாம் 'திரட்டி' வைத்திருக்கும் வாசனைகளை அகற்றும் வெளிவாயாகப் பயன் படும், கட்புலனுக்குத் தெரியாத ஒரு கருவியாக இந்த அகமனது அமைந்துள்ளது. அறியாமை காரணமாக சாதாரண மனிதன் இந்தக் கருவியைத் தவருகப் பயன்படுத்தி, தனக்குத்தானே

* 'யோக: கர்மசு கௌசலம்'—செயல்களின் திறமை யோகம். 2 அ, 50 பா.

அழிவு தேடிக் கொள்வது வருந்தத்தக்கது. மனிதன் தன்னை அறியாமலேயே இந்த வெளிவாயை நுழைவாயாக மாற்றிக் கொண்டு தன்னலமிக்க கீழ்த்தர நோக்கங்களினாலும், செயல்களாலும் மேலும் மேலும் புதிய மாசுகளைப் புகுத்திக் குவித்துக் கொள்கிறான்.

இந்த மாசுகளை நீக்குவதற்கு, மனிதனின் அதே அகந்தைக்குப் புதிய பிறவிகளை (உடல்களை) மீண்டும் மீண்டும் இயற்கை அளிக்கிறது. அவற்றை வாழ்ந்து தீர்த்துக்கொண்டு தூய்மை பெறவேண்டும் என்பதற்காகத்தான் செயல்களைத் தவிர்க்கக் கூடாது, உலகப் பொருள்களை மறுக்கக் கூடாது என்று கீதை வற்புறுத்துகிறது. இவைகளையே விவேகத்துடன் பயன்படுத்தித் தன்னலமற்ற முறையில் செயலாற்றி மன மாசுகளை நீக்குவதற்கு இந்த வாழ்க்கையைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

பிளவுபட்டு செம்மையற்ற நிலையிலுள்ள மனம், மன நோய்களின் தாக்குதலுக்கு எளிதில் இரையாகிறது. தனது பலவீனத்தினால் தொற்று நோய்களுக்கு வெகு எளிதில் பலியாகிறது. மகாபாரதம் கூறுவதிலிருந்து அர்ஜுனன் சாதாரணக் கல்வியறிவு பெற்றவன் என்பதும் எத்தகைய சூழலில் வளர்ந்தான் என்பதும் தெரிகின்றன. மகாபாரதம் முழுமையாகக் கிடைத்திருக்காவிட்டால் அர்ஜுனனின் மனநிலையை நாம் புரிந்து கொண்டிருக்க முடியாது. அதனால் கிருஷ்ணனின் உபதேசங்கள் நமக்குப் பொருளற்றவையாகத் தோன்றியிருக்கும். எனவே, கீதை, மகாபாரதத்தின் பிரிக்க முடியாத ஒரு பகுதியாக அமைந்துள்ளது. ஸ்ரீமத் பகவத் கீதை இல்லையெனில் இந்த இதிகாசம் சாரமும் சிறப்பும் அற்ற தாறுமாறான கதைக் குவியலாக அமைந்திருக்கும். மகாபாரதம் பின்னணியாக அமையாவிட்டால் இந்தக் கீதை ஒரு தத்துவ ஞானியின் புதிராக விளங்கியிருக்கும். கதையும் (இதிகாசம்) புதிரும் (கீதை) ஒன்று சேர்ந்த உயிர்த்தொடர்புள்ள முழு நூலாகிறது. ஒன்றைப் பிரிந்த மற்றொன்று சாரமற்றதாகவும் பயனற்றதாகவும் இருக்கும்.

உணர்ச்சிகளை அடக்கி ஒடுக்குவதால் உண்டாகும் தீமைகளைப் பற்றித் தற்கால உளவியல் மிக விரிவாகக் கூறுகிறது. வேண்டுமென்றே நாம் அடக்கி வைக்கும் உணர்ச்சிகளைத் தவிர, அன்றாட வாழ்க்கையில் நம்மையும் அறியாமலேயே எத்தனையோ தடவைகளில் உணர்ச்சிகளை அடக்கி வைத்துக் கொள்கிறோம். வெளிப்படுத்த வேண்டிய உணர்ச்சிகளை அடக்கியிருப்பதால், அவை அணைபோட்ட நீர்பெருக்குப் போலத் தேங்கி நிற்கின்றன. இந்த உணர்ச்சிகளைச் சரியான வழியில் திருப்பவில்லையென்றால் அவை சுழன்று வந்து நம்மையே தாக்கி அழித்துவிடும்.

அர்ஜுனன் தன்னையும் அறியாமலேயே உணர்ச்சிகளை

அடக்கி வைத்துக் கொண்டிருந்தது பற்றி நூலில் வெளிப்படையான குறிப்பு எதுவுமில்லை. எனினும் இந்த இதிகாசத்தைச் செம்மையாகக் கற்கும் ஒருவன், போர்க்களத்தே நின்ற மாவீரனுன அர்ஜுனன், தன் உணர்ச்சிகள் அடக்கப்பட்ட நிலைக்கு ஆளானதால் மனநிலை குலைந்த மனிதனுகச் செயல்பட்டான் என்பதைத் தெரிந்து கொள்வான்.

அர்ஜுனனின் உணர்ச்சிகள் அடக்கப்பட்டதன் காரணங்கள் யாவரும் அறிந்ததே. தன் பேராற்றலை நன்குணர்ந்த மாவீரனுன அர்ஜுனன், பழிபாவங்களுக்கு அஞ்சாத சூதுமதி கொண்ட தாயாதிகளின் அநீதியான சர்வாதிகாரத்திற்குட்பட்டு வாழ வேண்டிய கட்டாயத்துக்குள்ளாகிருன். அதே நேரத்தில் தன் தமையனுன தருமனின் 'எதை இழந்தும் அமைதியைக் காத்தல்' என்னும் அறக் கொள்கையை மேற்கொள்ள வேண்டிய அவசியத்தினுல் இந்த வியத்தகு வில்வீரன், தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்த முடியாமல் தவித்தான். இவ்வாறு அணைக்கப்பட்ட உணர்ச்சிகள், அவன் காடுகளில் வாழ்ந்தபோது செய்த தவங்களில் பயனுள்ள முறையில் வெளிப்பட்டன.

அக்ஞாத வாசத்தின் கடைசி ஆண்டில் பாண்டவர்கள் விராட மன்னனின் அரண்மனையில் பணியாட்களாக வாழ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இன்னும் எத்தனையோ கொடுமைகளுக்கும் அநீதிகளுக்கும் இடையில் அர்ஜுனன் தனது உணர்ச்சிகளை அடக்கி ஒடுக்கி வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. ஆனுல் விராடனுடைய பசுக் கூட்டத்தைக் கவர்ந்ததால் துரியோதனனுக்கும் விராடனுக்கும் ஏற்பட்ட போரிலே அர்ஜுனனுடைய அடக்கியொடுக்கப்பட்ட உணர்ச்சிகள் வெளியாவதற்கு ஆரோக்கியமான சூழ்நிலையொன்று தோன்றிற்று.

நீண்ட காலம் பல்வேறு துன்பங்களைப் பொறுமையுடன் அனுபவித்து, துரியோதனன் இட்ட நிபந்தனையை முடித்துக் கொண்டு, பாண்டவர்கள் சொந்த நாட்டை அடைந்த போது, கொடியவனுன துரியோதனன் நீதியும் நடத்தையும் அற்ற முறையில் அவர்களுக்குரிய பாதி ராஜ்யத்தைத் தர மறுத்ததுடன் சமாதானத்துக்குரிய எந்த முறையையும் ஏற்றுக்கொள்ள மறுத்தான்.

கௌரவர்களின் தந்தையும், சூழ்ச்சிகளில் தேர்ந்தவனுமான குருட்டு திருதராஷ்டிரன் மாவீரன் அர்ஜுனனின் மனநிலையை உணர்ந்திருந்தான் என்றே தோன்றிற்று. அதனுல், பாரதப் போர் தொடங்குவதற்கு முந்திய நாள் ஓர் இரகசியச் செய்தியுடன் சஞ்சயனை அர்ஜுனனிடம் தூதனுப்பினுன். சூழ்ச்சி நிறைந்த இந்தச் செய்தி, அர்ஜுனனின் மனத்தில் ஆபத்தான

கருத்துக்களை ஊன்றி, உணர்ச்சிகளை அடக்கி வைத்ததனால் உண்டான மனச் சுமையைத் தவறான வழியில் திருப்பியது. அதனால் அவன், மாபெரும் போர்க் களத்தின் நடுவே மனங் குலைந்து நின்றான். போருக்கு முன்னால் திருதராஷ்டிரன் சொல்லி யனுப்பிய கருத்துக்களை அவன் தன்னையுமறியாமல், கிளிப் பிள்ளைபோல், திருப்பிச் சொல்வதை முதல் அத்தியாயத்தில் காண்கிறோம்.

போர் தொடங்கும் அந்த முக்கிய நாளில், இருதரப்புப் படைகளும் அணிவகுத்து நின்றபோது, பகைப் படையின் தரத்தைக் காணும் பொருட்டுத் தனது தேரை இரு படைகளின் நடுவே கொண்டு செல்லுமாறு சாரதியான கிருஷ்ணரை அர்ஜுனன் பணித்தான்.

எண்ணிக்கையில் உயர்ந்து, தகுந்த போர்க் கருவிகளைப் பெற்று, சிறந்த தளபதிகளின் தலைமையும் கொண்டு, தேவை யான எல்லாப் பொருள்களையும் எளிதில் பெறும் கௌரவப் படை, பாண்டவர்படை என்னும் கோழிக் குஞ்சைக் கொத்திச் செல்லச் சிறகு விரித்து இறங்கும் பருந்து போலக் காட்சியளித் ததைக் கண்டான். இக்காட்சி, பாண்டவரின் மாவீரனான அர்ஜு னனின் திடமனத்தை உலுக்கியது. இத் தூண்டுதலுக்கு உட் பட்ட அவனது புறமனம், அகமனத்திடமிருந்து எவ்வித உதவியும் பெறமுடியவில்லை. அகந்தையோடு கற்பனைகளும் பாசப் பிணிப்பு களும் ஒன்று சேர்ந்ததால் அர்ஜுனனின் மனம் இந்நிலையை அடைந்தது. உணர்ச்சிகளை அடக்கியதால் ஏற்பட்ட மனவேகம் சரியான முறையில் வெளிப்படுத்தப்படாமல் திருதராஷ்டிரனின் கருத்துக்களால் தவறான வழியில் திருப்பப்பட்டன. அதனால் இணையற்ற வீரனான அர்ஜுனன் திடீரென்று, மனம் தளர்ந்து புத்தி குழம்பி ஒரு பித்தனின் நிலையை அடைந்தான்.

மனத் தளர்ச்சியடைந்த அர்ஜுனனுக்கு கிருஷ்ணரின் மருத்துவம் சிறந்த பயனளிக்கிறது. இது, கடைசி அத்தியாயத் தில் அர்ஜுனன் ''என் மோகங்கள் யாவும் முடிவெய்தின'' எனக் கூறுவதிலிருந்து தெரிகிறது. அவன் சுயநிலையை அடைந்தது, புத்துணர்ச்சி பெற்று மாவீரனாகத் திகழ்ந்தது முதலிய எஞ்சிய நிகழ்ச்சிகள் யாவும், இந்த இதிகாசத்தைப் படித்துள்ள அனை வரும் அறிந்தவையே.

ஒவ்வொரு மனிதனுக்கும் இந்த அர்ஜுன—நோய் வெவ்வேறளவில் இருந்து வருகிறது. இந் நோயைப் போக்கும் கிருஷ்ண—மருத்துவம் கீதோபதேசத்தில் எல்லோருக்கும் எப்போதும் கிடைக்கிறது.

கீதையின் சுருக்கம் எனக் கூறத்தகும் இரண்டாவது அத்தி யாயத்தில், கிருஷ்ணர் இம் மருத்துவத்தில் இரு முக்கிய முறை

களைச் சுட்டிக் காட்டுகிறார். ஒன்று ஞானயோக முறை. இம் முறையில் அர்ஜுனன் தன்னுடைய மனம், புத்தி, அகங்காரம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்ட உண்மை நெறியில் செலுத்தப்படு கிறான். அதனால் அவனது அகமனத்துக்கும் புறமனத்துக்கும் இடையே உள்ள வேற்றுமை ஓரளவு நீங்குகிறது. அதே அத்தியாயத்தின் பிற்பகுதியில், தன்னலமற்ற செயல்கள் மனித னின் வாசனைகளை நீக்குகின்றன என்பது கூறப்படுகிறது. அர்ஜுனன் க்ஷத்திரியனாதலால் அவன் மனத்தில் ரஜோ குண சாயம் பூசப்பட்டிருந்தது. எனவே அவனுடைய 'வாசனை'களை நீக்குவதற்கு ஒரு போர்க்களம் தேவைப்பட்டது:

எனவே, கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு மீண்டும், மீண்டும் ''எழுந்து நில்! தொடங்கு போரினை!'' என்று தூண்டுகிறார். இவ்வாறு கூறுவதனால் கீதையை அரச குலத்தின் போர் வெறி கொண்ட நூலாகக் கருதக் கூடாது. நம் வாசனைகள் நீங்கி மனத் தூய்மை பெறுவதற்கு ஏற்ற முறையில், ''எழுந்து நில்! தொடங்கு போரினை!'' என்று நம் ஒவ்வொருவருக்கும் வாழ்க் கைக் களத்தில் தன் சுய தர்மத்திற்கு (வாசனைகளுக்கு) ஏற்பப் போரிடத் தூண்டும் அழைப்பாகும்.

ஒவ்வொரு பாடலாக நாம் கற்று நூலின் உட்பொருளை அறிய முற்படும்போது, அதே சத்தியத்தை கிருஷ்ணர் எவ்வாறு வெவ்வேறு கோணங்களிலிருந்து காட்டுகிறார் என்பதையும், அதைப் பல வகைகளில் விளக்கிக் கூறுகிறார் என்பதையும் தெரிந்து கொள்வோம்.

வேதாந்த போதனையை இலக்கிய மணம் வீசும் நாடகப் பாங்கில் எடுத்துக் கூறும் செயலில் பண்டைய இந்துக்களைப் போல உலகில் வேறு இனத்தவர் எவரும் இவ்வளவு சிறந்த வெற்றி பெற்றதில்லை.

சாந்தமும் அமைதியும் தங்கிய இமயச் சூழலில், குருவுக்கும் சீடனுக்கும் இடையே நடந்த உரையாடல்களாக உபநிடதங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

கீதையில் ஆரவாரமிக்க போர்க்களச் சூழலில் மிக விரிவாக வும் விளக்கமாகவும், சிறந்ததும் சீரியதுமான இந்த இந்து தத்துவம் மீண்டும் அழுத்தந்திருத்தமாகக் கூறப்படுகிறது.

குருதி பாயும் கொடூரமிக்க போர்க் களத்தில், மனம் துடிதுடிக்கும் இக்கட்டான சூழ்நிலையில் சிக்கித் தவிக்கும் அர்ஜுனனுக்கு ஆண்மையுடனும் ஆற்றலுடனும் போரிட வேண்டியதன் அவசியத்தை கிருஷ்ணர் விளக்குகிறார்.

நூற்றுவரான கௌரவர்கள், மனித உள்ளத்திலிருக்கும் கணக்கற்ற தீய எண்ணங்களைப் பிரதிபலிக்கிறார்கள். பாண்டவர்கள் அதே மனத்திலுள்ள புனித எண்ணங்களைப் பிரதிபலிக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

நம் ஒவ்வொருவர் மனத்திலும் இக்கட்டான சூழ்நிலை தோன்றும்போதெல்லாம் ஒரு மகாபாரதப் போர் நிரந்தரமாக நடந்துகொண்டிருக்கிறது. எப்போதும் நம் ஒவ்வொருவரிடத்திலும் தீய எண்ணங்களே அதிகமாகவும், ஆற்றல் மிக்கவையாகவும் இருக்கின்றன. புனித எண்ணங்கள் எண்ணிக்கை குறைந்தவையாகவும் தீவிரமாகச் செயல் புரியும் வல்லமையற்றவையாகவும் இருக்கின்றன. அதனால் ஒவ்வொரு மனிதனும் தன் மனத்திலுள்ள எண்ணங்களை ஆராயும்போது அர்ஜுனனைப் போன்று தளர்ந்த மனநிலையைப் பெறுகிறான்.

தூய எண்ணங்கள் மிகச் சிலவாக உள்ளன. எனினும் அவற்றை ஒழுங்குபடுத்தி, ஒருமுனைப்படுத்தி ஈடு இணையற்ற இறைவனான கிருஷ்ணரின் அருளைப் பெற்று அவருடைய துணையோடு போராடினால், பேராசையையும் ஆவல்களையும் முறியடித்து, தீய எண்ணங்களை வெகு எளிதில் வெற்றி கொள்ளலாம். எனவே மகாபாரதக் கதை மனிதனுக்கு தன்னம்பிக்கையூட்டுகிறது.

பிறவிக் குருடனான திருத்ராஷ்டிரன் என்னும் அரசனுக்கும், தானாகவே பார்வையை மறைத்துக்கொண்ட செயற்கைக் குருடியான அவனுடைய மனைவி காந்தாரிக்கும் பிறந்த பிள்ளைகளே, தீய எண்ணங்களையும் பாவத்தின் வித்துக்களையும் பிரதிபலிக்கும் கௌரவர்கள் ஆவர். உரையாசிரியர்கள் இதில் ஒரு சிறந்த உண்மையைக் காண விரும்புகிறார்கள்.

தொடக்கத்திலிருந்தே உண்மையைக் காணாது குருடாக இருக்கும் ஒரு மனம், குருட்டுத் தன்மையைச் செயற்கையாக ஏற்றுக்கொண்ட புத்தியை மணந்து கொள்கிறது. இவ்வாறு தீய எண்ணங்கள் கீழ்த்தரமான உணர்ச்சிகளுடன் சேரும்போது, நூற்றுக்கணக்கான பாவங்களும் பாதகங்களுமே உருவாகும்.

தனக்குள் அமைந்த ஆன்மீக வளர்ச்சிக்குத் துணையாகும் களத்தில் (தர்மக்ஷேத்திரம்) தீய எண்ணங்கள் தூய எண்ணங்களோடு போரிட ஆயத்தமாகின்றன. தூய எண்ணங்களின் தலைவனாக விளங்கும் உத்தம சாதகன் ஒருவன் விவேகமுள்ள புனித புத்தியின் துணையுடன், பகைப் படையின் திறனைக் கண்டறிய இருபெரும் அணிகளுக்கும் நடுவே பொதுவாகவுள்ள ஓரிடத்தில் தன் மனத்திலுள்ள தீய அல்லது தூய எண்ணங்களுடன் சாராத

நிலையில் நின்று காண்கிருன். .உள்முகத் தியானமான இந்த நிலையில் 'தான்' என்னும் அகங்காரமானது, செயலற்று விரக்தி யடைகின்றது. அதனுல் அகமனப் போராட்டத்தில் ஈடுபடும் ஆன்மீக வீரச் செயலே மேற்கொள்ளத் தயங்கி வெற்றி பெறும் நம்பிக்கையை முற்றிலும் இழக்கிருன்.

சாதகனின் இத்தகைய அபூர்வ மனநிலையை முதல் அத்தியா யத்தில் இடம் பெறும், விரிவாகச் சித்தரிக்கப்பட்ட அருச்சுன னின் விரக்தி நிலே காட்டுகிறது.

சமஸ்கிருத இலக்கியத்தில், தொடக்கப் பாடலிலேயே நூலின் முழுக் கருத்தையும் விளக்கவேண்டும் என்பது மரபு. நூலின் பெரும் பகுதி, பல்வேறு கருத்துக்களே விளக்கமாகக் கூறி எல்லா வகையான வாதப் பிரதி வாதங்களேயும் தருகிறது. இறுதிப் பாடல், நூலின் முதற்பாடலில் குறிப்பிட்ட கருத்தை, நூல் காணும் முடிவை, சுருக்கிக் கூறுவதன் மூலம் தருகிறது. இதே முறையில் கீதையை அணுகும்போது இப்புனிதப் பாடல் 'தர்ம' என்னும் சொல்லோடு தொடங்கி 'மம' (எனது) என்னும் சொல்லோடு முடிகிறது. ஆதலால் 'எனது தர்மம்' என்பதே கீதையின் உட்பொருளாக அமைவதைக் காண்கிருேம்.

இந்து தத்துவத்தில் 'தர்மம்' என்பது இது என எளிதில் விளக்க முடியாத ஒன்ருகும். மனநிலே அடைதல். நிலே பெறல், தாங்குதல், என்னும் பொருள்களேத் தரும் தர் (த்ரி) என்னும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததே, 'தர்ம' என்பது. எனவே தர்மம் என்பது ஒரு பொருளின் பல்வேறு தன்மைகளேயும் இயல்புகளேயும் முழுமையாகத் திரட்டி மேம்படச் செய்வது என்னும் பொருள் தருகிறது.* பொதுவாக தர்மம் என்னும் சொல்லுக்குச் சமய ஒழுக்கம், நன்னெறி நன்னடத்தை, கடமை, ஈகை முதலிய பொருள்களும் உண்டு. ஆனுல் தர்மம் என்னும் சமஸ்கிருதச் சொல் மேற்கொண்ட பொருள்களுக்கு அப்பாற் பட்ட தனிப் பொருள் உடையது. நான் அறிந்த வரையில் 'இயல்பு நெறி' என்பதே ஓரளவு பொருத்தமான பொருள். இது ஒரு பொருளே அல்லது ஓர் உயிரை அதன் இயல்புக்கேற்ப இருக்கச் செய்வது என்பதைக் குறிக்கும். உதாரணமாக நெருப்புச் சுடுவதும், சூரியன் ஒளி தருவதும் அவற்றின் தர்மங் களாகும்.

எனவே நன்னெறி, நல்லியல்பு என்பன மட்டும் தர்மத்தின் அர்த்தங்கள் ஆகா; அது, ஒரு பொருள் எந்த இயல்பை இழந் தால் அந்தப் பொருளாகத் திகழாதோ அந்த முக்கியமான இயல்

* தாரணுத் தர்மம் இத்யாஹு, தர்மனே
வித்ருதஹ் பிரஜாஹ

பைப் பெற்றிருப்பதையே குறிக்கும். குளிர்ச்சி பெற்ற இருள டைந்த சூரியன் இருக்க முடியாது ஏனெனில் வெம்மையும் ஒளியும் சூரியனின் தர்மமாகும். இதைப் போலவே நாம் சக்தி வாய்ந்த வீரர்களாக வாழ வேண்டுமானல் நம் சுய இயல்புக் கேற்ற முறையில் வாழவேண்டும். கீதை இதையே 'எனக்குரிய எனது தர்மம்' என்று கூறுகிறது.

இப்புனித நூல் பதினெட்டு அத்தியாயங்களில் கூறியுள்ள வற்றை ஒருவன் மனத்தால் உணர்ந்து, வாழ்வில் கடைப் பிடித்து, அனுபவத்தால் அறியவேண்டும் என்பதையே 'எனக்குரிய எனது தர்மம்' என்பது சுட்டிக் காட்டுகிறது.

# அர்ஜுன விஷாத யோகம்

## 1

திருதராஷ்ட்ர உவாச—

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:
மாமகா: பாண்டவாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய. 1:1

திருதராஷ்டிரன் கூறினன்:

சஞ்சயா, தர்மபூமியாகிய குருக்ஷேத்திரத்தில் போர்த்துடிப்புடன் கூடியுள்ள என் மக்களும் பாண்டுவின் மக்களும் என்ன செய்தார்கள்?

கீதை முழுவதிலும் குருட்டுக் கிழவனை திருதராஷ்டிரன் கூற்ருக அமைந்த பாடல் இது ஒன்றே. குருக்ஷேத்திரப் போர்க் களத்தில் யுத்தம் துவங்கும் முன் என்ன நடந்தது என்று சஞ்சயன் விரித்துரைப்பதையே எஞ்சிய எழுநூறு பாடல்களும் கூறுகின்றன.

தன் தம்பி பாண்டுவின் புதல்வர்களுக்குத் தான் வேண்டுமென்றே செய்த கொடுமைகளை திருதராஷ்டிரன் நன்கு அறிந்

திருந்தான். அக்குருட்டுக் கிழவன் இரு படைகளின் வலிமையையும் நன்கறிந்தவன். தன் மைந்தனது படையின் பெருவலிமை அவனுக்குத் தெரியும். கடந்த காலத்தில் செய்த பழி பாவங்களை அறிந்திருந்த குற்ற உணர்வு மனத்தில் பாரமாக அழுந்தியதால் போரின் முடிவைப் பற்றிய ஐயம் அவனுக்குத் தோன்றியது. குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் நடப்பவற்றை விளக்குமாறு சஞ்சயனை அவன் கேட்டான். அஸ்தினபுரத்து அரண்மனையில் திருதராஷ்டிரனுக்கு அருகில் அமர்ந்தவாறே வெகு தூரத்திலுள்ள போர்க்களத்தில் நடப்பவற்றை நன்ருகக் காணவும் கேட்கவுமான சக்தியை சஞ்சயனுக்கு வியாச மாமுனிவர் அளிக்கிருர்.

சஞ்சய உவாச—

*த்ருஷ்ட்வாது பாண்டவானீகம் வ்யூடந் துர்யோதனஸ்ததா*
*ஆசார்ய முபஸங்கம்ய ராஜா வசன மப்ரவீத்* **1:2**

சஞ்சயன் கூறினன்:

போர்க்களத்தில் அணிவகுத்து நின்ற பாண்டவப் படையைப் பார்த்த பிறகு, அரசன் துரியோதனன் ஆசானை (துரோணரை) அணுகி (பின்வருமாறு) பேசினன்.

இப்பாடலிலிருந்து, குருக்ஷேத்திரக் களத்தில், சஞ்சயன் கண்டதையும் கேட்டதையும் நாம் அறியப் போகிருேம். அணி வகுத்து நின்ற பாண்டவ சேனை, அளவில் தன் படையை விடச் சிறியதாக இருப்பதைக் கண்ட பிறகும், கொடியவன் துரியோதனன் தனது தன்னம்பிக்கை மெல்லக் குறைவதைக் கண்டான். பயந்த குழந்தை பெற்றோரை நோக்கி விரைந்து ஓடுவதைப் போல துரியோதனன், மனங்கலங்கியவனய் தன் குரு துரோணசாரியரைத் தேடி ஓடினன். நம் எண்ணங்கள் தீயவையாகவும், நோக்கம் அநீதியாகவும் இருந்தால், நாம் எவ்வளவு வலிமை பெற்றவராயினும் நம்து மனம் அமைதியிழந்து அல்லல் அடைவது இயல்பே. கொடுங்கோலனுகவும் வலிமை மிக்கவனுயும் திகழும் எந்தச் சர்வாதிகாரியின் மனநிலையும் இவ்வாறேயிருக்கும்.

பஸ்யைதாம் பாண்டு புத்ராணும்
ஆசார்ய மஹதீஞ்சமூம்
வ்யூடாந் த்ருபத புத்ரேண
தவ சிஷ்யேண தீமதா. **1:3**

ஆசார்யரே, உம்முடைய பேரறிவு பெற்ற சீடனை துருபதன் புதல்வனல் அணிவகுக்கப்பட்டுள்ள பாண்டு புதல்வர்களின் மாபெரும் சேனையைப் பாருங்கள்.

பாண்டவர்களின் அணிவகுப்பைத் துரோணருக்குச் சுட்டிக் காட்டுவது துரியோதனனின் மூடச்செயலாகும். இதன் பின்னரும் துரியோதனன் இதுபோல அதிகப்பிரசிங்கித்தனமாக நிறையப் பேசுகிறான். இதுவே அறத்துக்கு மாறாகத் தான் நடத்தும் போரின் முடிவைப் பற்றிய அச்சம் அப்பேரரசனின் மனத்தில் இருந்ததைக் காட்டும் அறிகுறியாகும்.

அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுன ஸமாயுதி
யுயுதானோ விராடஸ்ச த்ருபதஸ்ச மஹாரத: 1:4

போரிடுவதில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் நிகரான தீரரும் வில்வீரருமான யுயுதானன், விராடன் துருபதன் ஆகிய ஒவ்வொருவரும் பதினாராயிரம் வில்வீரர்க்குத் தலைமை தாங்கி நிற்கின்றனர்.

த்ருஷ்டகேதுஸ் சேகிதான: காசிராஜஸ்ச வீர்யவான்
புருஜித் குந்திபோஜஸ்ச ஸைப்யஸ்ச நரபுங்கவ: 1:5

திருஷ்டகேது, கேசிதானன், காசிராஜன், புருஜித், குந்தி போஜன், சைப்பியன் ஆகியோர் வீரர்களில் தலைசிறந்தவராவர்.

யுதாமன்யுஸ்ச விக்ராந்த
உத்தமௌஜாஸ்ச வீர்யவான்
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச
ஸர்வஏவ மஹாரதா: 1:6

பெரும் பலங்கொண்ட யுதாமன்யு, தைரியசாலியான உத்த மௌஜஸ், அபிமன்யு, திரௌபதியின் புதல்வர் ஆகிய அனைவரும் மகாரதர்களாக இருக்கிறார்கள்.

இம்மூன்று பாடல்களில் பாண்டவர் படையில் குறிப்பிடத்தக்க வீரர்களின் பெயர்ப்பட்டியலைப் பார்க்கிறோம் அணிவகுத்து நிற்கும் எதிரிப் படையைப் பார்வையிடுகையில், சிறப்புமிக்கவர்கள் பாண்டவர் படையில் மகாரதர்களாக விளங்குவதைத் துரியோதனன் கவனிக்கிறான். பண்டைய இந்து சேனையில், பதினாராயிரம் வில்வீரர்கள் கொண்ட ஒரு பிரிவுக்குத் தலைமை வகிப்பவன் மகாரதன் என வழங்கப்பட்டான்.

அர்ஜுனனும் பீமனும் வில்வித்தையிலும் உடல் வலிமையிலும் புகழ்பெற்ற போர் வீரர்களாவர். இங்கே குறிக்கப் பெற்ற வீரர்கள் ஒவ்வொருவரும் அர்ஜுனனுக்கும் பீமனுக்கும் நிகரானவர் என்று துரியோதனன் சொல்கிறான். படை வீரர்களின் எண்ணிக்கை குறைந்ததாக இருப்பினும் அவர்களது மொத்தத்

திறனும் தகுதியும் கௌரவர் சேனையின் ஆற்றலைவிட அதிகமாக இருக்கிறது என்பது கருத்து.

அஸ்மாகந்து விசிஷ்டாயே
தாந்—நிபோத த்விஜோத்தம
நாயகா மம ஸைன்யஸ்ய
ஸம்ஞார்த்தம் தான் ப்ரவீமிதே. 1:7

பிராம்மணரில் சிறந்தவரே, நம்மவர்களில் சிறந்தவர்களும் படைப் பிரிவுகளின் தலைவர்களுமான வீரர்களின் பெயர்களையும் ஒரு குறிப்பிற்காக உங்களுக்குச் சொல்கிறேன்.

தன் குருவை 'பிராம்மணரில் சிறந்தவன்' என்று அழைக்கும் துரியோதனன் தனது படையின் சிறந்த வீரர்களின் பெயர்களைச் சொல்கிறான். இருளில் செல்லும் ஒரு பயங்கொள்ளி தன் மனப் பயத்திலிருந்து தப்பித்துக் கொள்ளத் தனக்குத்தானே சீட்டி யடித்துக் கொண்டு போவான். அவ்வாறே இக்கொடுங்கோல னின் குற்றமுற்ற நெஞ்சு அவனது வலிமையை அழித்து விடுகிறது. எதிரி அணிவகுப்பில் தலைமை தாங்கியுள்ள போர் வீரர்களின் வலிமையை உணர உணர, சிறந்த படைத் தலைவர்கள் தனது அணியில் இருக்கும்போதும் அவனது பயம் அதிகரிக்கின்றது. தன்னைத் தேற்றிக் கொள்வதற்காகத் தன் குருவிடமிருந்தும் பெரியோர்களிடமிருந்தும் ஊக்கமளிக்கும் உரைகளைக் கேட்க அவன் விரும்புகிறான். துரியோதனன் இவ்வாறு துரோணரை அணுகியபோது அவர் ஏதும் சொல்லாமல் மௌனமாக இருப்பதையே விரும்பினான். அதனால் பேதை அரசன் தன் மனத் தளர்ச்சியைப் போக்கி உற்சாகம் பெற வேறு வழியைத் தேட லானான். இதன் விளைவாகவே தன் சேனையிலுள்ள சிறந்த வீரர் களின் பெயர்களை ஒவ்வொன்றாகக் கூறத் தொடங்கினான்.

தான் செய்த பழிச் செயல்கள் தன் மனச்சாட்சியை உறுத்து வதால் ஒருவன் இவ்வாறு ஒழுங்கு நிலையை இழக்கின்றான். இந்நிலையில் அவன் அதை எப்படிப் பேச வேண்டும் என்னும் முறையை இழப்பது இயல்பே. இத்தகைய மனவேதனையின் போது ஒவ்வொருவனும் தன் உண்மையான மனப் பண்பாட் டைப் புலப்படுத்துகிறான். அவன் தன் குருவை 'பிராம்மண சிரேஷ்டர்' என்று அழைக்கிறான். ஆன்மீக வளர்ச்சி காரண மாகவே ஒரு பிராம்மணன் 'இரு பிறப்பாளன்' என்று அழைக்கப் படுகிறான். தாயின் வயிற்றிலிருந்து வெளிப்படும்போது மனிதன் என வழங்கப்பெறும் விலங்காகவே விளங்குகிறான். அதன் பின், கற்றலினாலும், தியானத்தினாலும் அவன் மேன்மேலும் ஒழுக்கம் அடைகிறான். பண்பாடுள்ள இந்துவே பிராம்மணன் எனப்

படுகிறான்.

துரோணர் பிறவியில் ஒரு பிராம்மணர் ஆதலால் அவர் எளிதில் உருகும் மென்மனம் பொருந்தியவராக இருக்கவேண்டும். அதைத் தவிர பகை அணிவகுப்பின் தலைவர்கள் அனைவரும் அவருடைய அன்புக்குரிய சீடர்களே. ஆதலால் அறிவு நுட்பமுள்ள சர்வாதிகாரியான துரியோதனன் தன் குருவின் நேர்மையைச் சந்தேகிக்கும் இழிநிலையுடையவனானான்.

தீய எண்ணங்களும் வஞ்சகச் செயல்களும் நிறைந்த எல்லா மனிதர்களிடமும் இத்தகைய இயல்பான பய உணர்ச்சி தோன்றுதல் சர்வ சாதாரணம். நாம் தீயவர்களாக இருந்தால் நம்மைச் சுற்றி நிற்கும் நம் பணியாளர்களிடத்தும் அதே தீயவை இருப்பதாக நினைக்கத் தோன்றும்.

பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய:
அஸ்வத்தாமா விகர்ணஸ்ச ஸௌமதத்திஸ் ததைவச.
1:8

தாங்கள், பீஷ்மர், கர்ணன், போரில் எப்போதும் வெற்றியே பெறும் கிருபர், அஸ்வத்தாமர், விகர்ணன் ஆகியோரும் சோமதத்தன் மகனும்—

தன்னுடைய தீய எண்ணங்களும் பஞ்சமா பாதகங்களும் தன்னையே தாக்கியதால் சற்று மனந்தளர்ந்த போதிலும் உண்மையான சர்வாதிகாரிக்கு உரிய முறையில் அவன் விரைவிலேயே சமாளித்துக் கொண்டான்.

குருவை இழிவுபடுத்தும் முறையில் 'பிராம்மணரே' என்று ஆணவத்துடன் அழைத்த கணத்திலேயே துரியோதனன் தான் எல்லை மீறிப் பேசிவிட்டதை உணர்ந்தான். ஆசிரியப் பெருந்தகையின் மௌனம் பேச்சுமூலம் அவர் உணர்த்தக்கூடிய வெறுப்பைக் காட்டிலும் கடுமையானதாக துரியோதனனுக்குத் தோன்றியிருக்கலாம்.

அன்யேச பஹவ: சூரா மதர்த்தே த்யக்த ஜீவிதா:
நானா ஸ்ஸ்த்ர—ப்ரஹரணா: ஸர்வே யுத்த—விசாரதா:
1:9

பற்பல போர்ப் படைகளோடும் ஏவுகணைகளுடனும் யுத்தத்தில் கைதேர்ந்த இன்னும் பல சூரர்கள் இங்கிருக்கிறார்கள். அவர்கள் எனக்காகத் தம் உயிரையே கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள்.

'எனக்காக'த் தம் உயிரையும் கொடுக்க 'இத்தனை வீரர்கள்' முன்வந்துள்ளனர் என்று துரியோதனன் கூறும்போது

அவனுடைய அளவிலா தற்பெருமை வெளியாகிறது. ஆனால் கௌரவர் சேனைக்கு பீஷ்ம பிதாமகர் தலைமை தாங்க முன்வரா விட்டால் இந்த வீரர்களில் எத்தனை பேர் துரியோதனின் அணி யில் சேர்ந்திருப்பார்கள் என்பது மகாபாரதத்தை ஊன்றிப் படிப் பவர்களுக்குத் தெரியாமல் போகாது.

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம்
பர்யாப்தம் த்விதமே தேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம்.
1:10

பீஷ்மரின் பாதுகாப்பில் இருக்கும் நமது சேனை போதுமான தல்ல. ஆனால் பீமனின் பாதுகாப்பில் இருக்கும் அவர்களது சேனை போதுமானதாக இருக்கிறது.

அல்லது

பீஷ்மரின் பாதுகாப்பில் இருக்கும் நமது சேனை அளவுக்கு மீறியதாக இருக்கிறது. ஆனால் பீமனின் பாதுகாப்பில் இருக்கும் அவர்களது சேனை அளவுக்குட்பட்டதாக இருக்கிறது.

பண்டைய இந்துக்களிடம் திகழ்ந்த போர்க்கலையில் ஒரு சேனை அதற்கு ஆணையிடும் தளபதி ஒருவனைப் பெற்றிருந்த தோடு, சேனையைப் பாதுகாக்கும் பொறுப்பேற்ற காவலனாக வீரமும், துணிவும், அறிவுச் சிறப்பும் அமைந்த ஒருவரையும் பெற்றிருந்தது. கௌரவ சேனைக்கு பீஷ்மர் பாதுகாவலராகவும், பாண்டவ சேனைக்கு பீமன் பாதுகாவலனாகவும் இருந்தனர்.

அயனேஷுச ஸர்வேஷு
யதா பாகமவஸ்த்திதா:
பீஷ்மமேவாபி ரக்ஷந்து
பவந்த: ஸர்வ ஏவஹி 1:11

எனவே நீங்கள் அனைவரும் சேனையில் அவரவர்க்கு உரிய இடத்தில் இருந்துகொண்டு, பீஷ்மரைக் காப்பதையே முதன்மையாகக் கருத வேண்டும்.

அணிவகுத்து நின்ற இரு சேனைகளின் பலா பலத்தையும் தரத்தையும் மதிப்பிட்டு அதைத் தனக்குத்தானே பேசிக் கொள்ளும் முறையில் எடுத்துக்கூறிய துரியோதனன் தனது மனக்கிலேச மேக மூட்டங்களை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, கம்பீரமாகத் தன் படைத் தலைவர்களுக்கு அரச உத்தரவுகளைப் பிறப்பித்தான். படைத் தலைவர் ஒவ்வொருவரும் தமக்குரிய நிலையில் இருந்துகொண்டு கட்டுப்பாட்டோடு போரிட வேண் டும் என்றும், அதே நேரத்தில் மதிப்புக்குரிய பீஷ்மருக்குத் தீங்கு நேராதபடி எப்பாடு பட்டேனும் பாதுகாக்க வேண்டும் என்றும் அறிவுறுத்துகிறான். தான் திரட்டிய தூர நாடு நகரங்களிலிருந்து

வந்து திரண்டுள்ள குறுநில மன்னர்களும் அரசர்களும் அடங்கிய முரண்பட்ட இயல்புகளைப் பெற்ற கலப்படச் சேனையானது, ஒன்றுபட்டு எல்லாச் செயல்களிலும் ஒரே வகைப் போர் முறையில் செயல்பட்டால்தான் படையின் பலம் பயன் தரும் என்று நம்பினான். போர் முறையின் பல்வேறு செயல்களை ஒருங்கிணைப்பதே ஒரு சேனையின் முதுகெலும்பான செயலாகும். சிறந்த போர்க்கலை வல்லுனன் என்ற முறையில், இதைச் சாதிக்க, படையின் பல்வேறு பிரிவுகளுக்குப் பொறுப்பேற்ற தலைவர்களிடம் பீஷ்மரைக் காப்பது என்னும் ஒரே குறிக்கோளை மேற்கொள்ளுமாறு துரியோதனன் கூறுகிறான்.

தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம்
குருவ்ருத்த: பிதாமஹ:
ஸிம்ஹ நாதம் விநத்யோச்சை:
சங்கந் தத்மௌ ப்ரதாபவான் 1:12

இந்தச் சமயத்தில், குரு வம்சத்தினருள் மிக மூத்தவரும்; பாட்டனார் முறையிலுள்ளவருமான பீஷ்மர், துரியோதனனுக்கு உற்சாக மூட்டுவதற்காக சிங்கம்போல் கர்ஜித்துத் தம் சங்கை முழக்கினார்.

துரியோதனன் இவ்வளவு நேரமும் தன்னைக் கேலிக்குரியவனாக ஆக்கிக்கொண்டு, பதற்றத்தில் தன் படையின் தலைவர்கள் அனைவரும் மனக்கசப்புற்று இக்கட்டான நிலையடையும்படி செய்துவிட்டான். அருகிலிருந்த பீஷ்மர் துரியோதனின் இந்தப் பரிதாப நிலையை அறிந்தார். செயல் வீரரான துரோணாசாரியரின் மௌனத்தில், ஒரு மேதையின் பெருங்கோபம் பொதிந்திருப்பதைத் தன் புத்தி கூர்மையால் பீஷ்மர் உணர்ந்தார். படைத் தலைவர்களின் மனக் கசப்பை நீக்கினால்தான் இந்த இக்கட்டான நிலை மாறும் என்று அவர் நினைத்தார். துரியோதனனிடம் அவர்கள் கொண்ட வெறுப்பு நீடித்தால் அவர்களது போர்த்திறன் குறைந்துவிடும். எனவே தன் தலைமையின் கீழ் கூடியுள்ள தலைவர்களின் உள்ளத்தை நன்கறிந்த மாபெரும் தளபதியான பீஷ்ம பிதாமகர், போர்ச் சங்கை ஒலித்து அவர்களுடைய மனத்தில் நம்பிக்கையையும் உற்சாகத்தையும் அலையலையாகப் பெருகிப் பாயச் செய்தார்.

தளர்ந்த மனநிலையிலிருந்த துரியோதனனிடம் கொண்ட இரக்கத்தின் விளைவாகவே இச்செயல் பிறந்தது என்றாலும் முதல் குண்டை வெடித்து வலுத்தாக்குதல் செய்து ஆக்கிரமிக்கும் தற்காலத்துப் போர்முறைபோல, பீஷ்மரின்செயல், முதல் அடி கொடுத்து போரைத் துவங்குவது போல அமைந்தது.

உண்மையில் இந்தச் சிங்கநாதமே மகாபாரதப் போரின்

தொடக்கமாக இருந்தது. வரலாற்றைப் பொறுத்தவரை, இச் செயல் மூலம் கௌரவர்கள் ஆக்கிரமிப்பாளர்களாகிறார்கள்.

ததः சங்காஸ்ச பேர்யஸ்ச பணவானக கோமுகா:
ஸஹஸைவாப்ய ஹந்யந்த ஸ சப்தஸ் துமுலோபவத்.
1:13

(பீஷ்மர் சங்கை முழக்கிய) பிறகு சங்குகள் பேரிகைகள், தப்பட்டைகள், பறைகள், ஊதுகொம்புகள் ஆகியன திடீரென ஒலித்தன. அது பேரொலியாகப் பரவியது.

பதற்ற நிலையில் இருந்த தலைவர்கள் அனைவரும் தளபதியின் சங்க நாதத்தைக் கேட்டதும் தத்தம் ஒலி எழுப்பும் கருவிகளை எடுத்துப் போர் முழக்கம் செய்தனர். இவ்வாறு, சங்குகளும், பேரிகைகளும், தப்பட்டைகளும், தாரைகளும், ஊதுகொம்பு களும் திடீரென்று பகைவரை அழைக்கும் போர் முழக்கமாக வெடித்துக் கிளம்பியதை சஞ்சயன் அரைமனத்துடன் 'பேரொலி' என வர்ணித்தான். பிறகு இம்முழக்கத்துக்குப் பாண்டவர் எதிர் முழக்கம் செய்யும்போது, அதை 'பயங்கரமானது' என்றும் 'விண்ணும் மண்ணும் அதிருமாறு ஒலித்து, கௌரவரின் நெஞ்சைப் பிளப்பதாயிருந்தது' என்றும் வருணிக்கின்றான். துரியோதனனின் போர் நோக்கம் ஒழுக்க முறைக்கு மாறுபட்டதென்ற கருத்துடையவன் சஞ்சயன் என்று நிரூபிக்கத் தெளிவான மற்றொரு உதாரணம் இது. எனவே புனித கீதையின் மூலமாக கிருஷ்ணர் போர்க்களத்தில் செய்யும் உப தேசச் செய்திகளை, அனுதாபத்துடன் அனுப்பும் நிருபர் சஞ்சயன் என்று நாம் கருதலாம்.

ததः ஸ்வேதைர்—ஹயைர் யுக்தே
மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ
மாதவः பாண்டவஸ்சைவ
திவ்யௌ சங்கௌ ப்ரதத்மது: 1:14

வெள்ளைக் குதிரைகள் பூட்டிய எழில்மிக்க தேரிலே வீற்றிருந்த மாதவனும் பாண்டு மைந்தனும்கூட, பிறகு தங்களுடைய திவ்விய சங்குகளை முழக்கினார்கள்.

பாண்டவர்களுடைய படையிலிருந்து கிருஷ்ணரும் அர்ஜுனனும் போர் முழக்கம் செய்தனர் என்னும் சாதாரண விஷயத்தை, சிறப்பும் நுட்பமும் பொருந்திய சொற்களை அள்ளிச் சொரிந்து அழகுறக் கூறுவதிலிருந்து சஞ்சயனின் பரிவு யாரிடம் உள்ளது என்பது நன்றாகத் தெரிகிறது. 'வெள்ளைக் குதிரைகள் பூட்டிய மகத்தான தேரிலே அமர்ந்து மாதவனும் அர்ஜுனனும் திவ்விய சங்குகளை முழங்கினார்கள்' என்று விவரிக்கும் சஞ்சயன் இரு படைகளுக்கும் இடையே நிலவும் வேறுபாட்டையுணர்ந்து இத்தருணத்திலாவது திருதராஷ்டிரன் தன்னுடைய புதல்

வர்களைப் போர்க் களத்திலிருந்து திருப்பி அழைத்துக்கொள்ளு மாறு செய்ய முடியுமாவென்று முயற்சிப்பதைப் போன்று இவ் வார்த்தைகள் அமைந்திருக்கின்றன.

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ
தேவதத்தம் தனஞ்ஜய:
பௌண்ட்ரந் தத்மௌ மஹாசங்கம்
பீமகர்மா வ்ருகோதர: 1:15

ஹ்ருஷீகேசன் பாஞ்சஜன்யத்தையும் தனஞ்சயன் (அர்ஜுனன்) தேவதத்தத்தையும், வீரச் செயல்களுக்குப் பெயர் போன விருகோதரன் (பீமன்) மாபெரும் சங்கான பௌண்ட்ரத்தையும் முழங்கினர்கள்.

பாண்டவர் அணியைப் பற்றி இந்த வர்ணனையில் சஞ்சயன் எல்லாத் தலைவருடைய சங்குகளின் சிறப்புப் பெயர்களை மறக் காமல் குறிப்பிடுகின்றார். கிருஷ்ணர் பாஞ்சஜன்யத்தை முழங் கினர்.

ஹ்ருஷீகேசன் என்பது பகவானின் பெயர். இதன் பொருள் ஐம்புலன்களின் அதிபதி. ஹ்ருஷீக+ ஈச= ஐம்புலன்களின் அதிபதி என்னும் பழைய சொல்முறைப்படி வந்த பொருளாகும். ஹ்ருஷீக என்னும் சொல் எளிதில் விளங்காத ஒன்று. நவீன உரையாசிரியர்கள் ஹ்ருஷீ + கேச எனப் பிரித்துக்'குறுகிய முடி உடைய' எனப் பொருள் கூறுவதையே விரும்புகிறார்கள்.

அனந்தவிஜயம் ராஜா குந்தீ புத்ரோ யுதிஷ்டிர:
நகுல: ஸஹதேவஸ்ச ஸுகோஷமணி புஷ்பகௌ
1:16

குந்தியின் மைந்தனான யுதிஷ்டிர மன்னன் அனந்த விஜயத்தை முழங்கினன். நகுலனும் சகாதேவனும் சுகோஷத்தையும் மணிபுஷ்பகத்தையும் முழங்கினர்.

காஸ்யஸ்ச பரமேஷ்வாஸ: சிகண்டீச மஹாரத:
திருஷ்டத்யும்னோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜித: 1:17

தலைசிறந்த வில் வீரனான காசிராஜனும், பதினோராயிரம் வில்வீரர்களின் மகாரதனான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும், விராடனும் தோல்வி கண்டறியாத சாத்யகியும்,

த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச
ஸர்வச: ப்ருதிவீபதே
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹு:
சங்கான் தத்மு: ப்ருதக்ப்ருதக் 1:18

துருபதனும், திரௌபதியின் மைந்தர்களும், தோள் வலிமை மிக்கவனான சுபத்திரையின் புதல்வனும், புவியாளும் மன்னனே, தத்தமக்குரிய சங்குகளை முழங்கினார்கள்.

படைப் பிரிவுகளின் தலைவர்களாகிய சிறந்த மாரதர்கள் உற்சாகம் பெற்றவர்களாய் தத்தம் சங்குகளை ஒன்றினும் மற்றொன்று ஒலி சிறக்கும் வகையில் அடுத்தடுத்து முழங்கினார்கள். இவ்வாறு முழங்கியவர்களின் பட்டியலை இம் மூன்று பாடல்களும் தருகின்றன. மகாபாரதப் போரில் சிகண்டி எய்த அம்பு தான் பிதாமகரை வீழ்த்தியது, கிருஷ்ணரின் தேரோட்டியாகிய சாத்யகி, பாண்டவர் படையில் ஒரு மகாரதனாக விளங்கினான்.

இந்த வர்ணனை திருதராஷ்டிரனுக்குச் சொல்லப்படுவது ஆகையால் சஞ்சயன் அவரை, 'புவியாளும் மன்னனே' என அழைத்தான்.

ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம்
ஹ்ருதயானி வ்யதாரயத்
நபஸ்ச ப்ருதிவீம்சைவ
துமுலோ வ்யனுநாதயன் 1:19

எங்கும் பரவிய அந்தச் சங்கநாதம், விண்ணையும் மண்ணையும் அதிர வைப்பதாக இருந்ததுடன் திருதராஷ்டிரனுடைய புதல்வரின் இதயங்களையும் பிளந்தது.

பதினான்காம் பாடலிலிருந்து சஞ்சயன் பாண்டவர் சேனையின் விரிவான வர்ணனையை விளக்கமாகக் கூறுகிறான். பாண்டவர் படையின் மேம்பாட்டை திருதராஷ்டிரன் உணருமாறு செய்ய எல்லா வகையிலும் முயல்கிறான். இக் குருட்டுக் கோமான் இப்போதாவது போரின் அவல முடிவை உணர்ந்து சகோதரரிடையே நடக்கவிருக்கும் போரினை நிறுத்துமாறு ஆணையிடுவான் என்று மந்திரி சஞ்சயன் நினைக்கிறான்.

அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா
தார்த்தராஷ்ட்ரான் கபித்வஜ:
ப்ரவ்ருத்தே சஸ்த்ர ஸம்பாதே
தனு–ருத்யம்ய பாண்டவ: 1:20

ஹ்ருஷீகேசம்ததா வாக்யம்
இதமாஹ–மஹீபதே 1:21

புவியாளும் மன்னனே! பிறகு, அணிவகுத்து நின்று ஆயுதப் பிரயோகம் செய்யத் தயாராக திருதராஷ்டிரக் கூட்டம் இருப்பதைக் கண்டு, குரங்குக் கொடி

யுடைய பாண்டுவின் மைந்தன் (அர்ஜுனன்) தன் வில்லைக் கையி லெடுத்துக் கொண்டு ஹ்ருஷீகேசனை நோக்கிக் கூறலானுன்.

மேற்கண்ட ஒன்றரைப் பாடலில் மகாபாரதப் போரின் தலைமகனுன அர்ஜுனன் போர்க் களத்தில் பிரவேசிப்பது வருணிக்கப்பட்டுள்ளது. அர்ஜுனன் எப்போது எந்தச் சூழ்நிலை யில் வந்தான் என்பது துல்லியமாகக் குறிக்கப்பட்டுள்ளது. யாரும் இன்னும் அம்பு எய்யத் தொடங்கவில்லை. ஆனுல் அது தொடங்கப் போகிறது. மிகப் பரபரப்பான சூழ்நிலை. நெருக்கடிச் சூழல் உச்சக் கட்டத்தை அடைந்திருருந்தது. இத் தருணத்தில் அனுமக் கொடியோனுகிய அர்ஜுனன் கிருஷ்ணரிடம் இவ்வாறு கூறுகிருன்.

பண்டைய காலத்து வீரப் போரில் புகழ்பெற்ற ஒவ்வொரு வீரனும், யாவரும் அறிந்த ஓர் அடையாளச் சின்னம் தெளி வாகப் பொறிக்கப்பட்ட கொடியைத் தனக்கெனப் பெற்றிருந் தான். தேரின் உச்சியில் பறக்கும் கொடியைக் கண்டே தேருக்குள் இருப்பது யார் என்பதைப் பகைவர்கள் அறிந்து கொள்ளக் கூடும். ஒரு மாவீரனுடன் ஒரு சாதாரணப் படை வீரன் போரிடுவது வழக்கமில்லை. ஒவ்வொருவனும் தனக்குச் சம மான மற்ருெரு வீரனுடன்தான் போரிடுவான். போர்க் களத் தில் வீரர்களை அறிந்து கொள்ளத் துணைபுரியும் அடையாளச் சின்னங்களைப் பயன்படுத்தும் முறையை நவீன போர் முறை யிலும் அப்படியே பின்பற்றி வருகின்றனர். உயர் அதிகாரிகளின் வாகனத்தில் அந்த அதிகாரியின் அந்தஸ்த்தைக் குறிப்பிடும் சின்னம் வாகனத்தின் எண் பொறித்த தகட்டிலேயே இருப் பதைக் காணலாம். அவர்கள் அணிந்துள்ள சீருடையிலேயே அவர்தம் பதவியை உணர்த்தப் போதுமான அறிகுறிகள் பொருத்தப்பட்டுள்ளன. அர்ஜுனனின் அடையாளம் குரங்கு. அர்ஜுனன் அறப்போரைத் தொடங்கத் துடி துடித்துக் கொண்டிருந்தான் என்பதையும் பாடல் கோடிகாட்டிச் செல் கிறது. தான் போர் தொடங்கத் தயார் என்பதை வில்லை உயர்த்துவதன் மூலமாக அவன் வெளிப்படுத்தினுன்.

அர்ஜுன உவாச

ஸேனயோருபயோர் மத்யே 1:21
ரதம் ஸ்தாபயமேச்யுத
யாவதேதான் நிரீக்ஷேஹம்
யோத்து காமானவஸ்த்திதான்
கைர்மயா ஸஹயோத்தவ்யம்
அஸ்மின் ரணஸமுத்யமே 1:22

அர்ஜுனன் உரைத்தான்:

அச்சுதா, போர் தொடங்கவிருக்கும் இந்நேரத்தில் போரிட விரும்பி வந்தவர்களைக் காண்பதற்கும் யார் யாரோடு நான் போரிட வேண்டும் என்பதை அறிவதற்கும் என்னுடைய தேரை, இரு சேனைகளுக்கும் நடுவில் நிறுத்து.

மாபெரும் போரில் கலந்துகொள்ள வந்தவர்களைக் காணவும் யார் யாரிடம் தான் போரிட வேண்டும் என்பதை அறியவும் விரும்பி, அர்ஜுனன் ஒரு மாவீரனுக்கு உரிய தோரணையில் தேரோட்டிக்கு ஆணையிடுவதை நாம் கேட்கிறோம். பகைவரின் அணிவகுப்பைப் பார்வையிட விரும்புவதைத் தெரிவிக்கும் மாவீரன் அர்ஜுனன், இச் செயல் மூலம் தன் வீரத்தையும் தைரியத்தையும் தளராத உறுதியையும், வீரதீரச் செயலாற்ற விரும்பும் துடிதுடிப்பையும், அடக்க முடியாத ஆற்றலையும் வெளிப்படுத்துகின்றான். தோல்வி காணாத மாபாரத வீரனாகிய அர்ஜுனன் கதையின் இக்கட்டம் வரை எத்தகைய மனக் குழப்பத்திற்கும் ஆளாகாமல் தன் சுய நிலையையே பெற்றிருந்தான்.

யோத்ஸ்யமானனவேக்ஷேஹம் யஏதேத்ர ஸமாகதா:
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர் யுத்தேப்ரியசிகீர்ஷவ: 1:23

தீய உள்ளம் படைத்த திருதராஷ்டிரனுடைய மைந்தனைப் போரில் திருப்தி செய்வதற்கென்றே அணிவகுப்பில் சேர்ந்திருப்போரை நான் காண விரும்புகிறேன்.

இப்பாடல் இதற்கு முந்திய பாடலில் நாம் கண்ட அர்ஜுனனின் சுயநிலையையே உறுதி செய்கிறது. தான் பகைவன் அணிவகுப்பைக் காண விரும்பியதன் காரணத்தை அவன் கூறுகிறான். செயல்வீரனான அர்ஜுனன், அனாவசியமான அபாயங்களுக்கு இடந்தர விரும்பாமல் பழிபாவங்களுக்கு அஞ்சாத துரியோதனனின் வெளிப்படையான எதேச்சாதிகாரத்திற்கும் அப்பட்டமான அநீதிக்கும் ஆதரவாக, கீழ்த்தர எண்ணமும், அதிகார வெறியும், பேராசையும் கொண்டு கௌரவர் சேனையில் சேர்ந்துள்ளவர்கள் யார் என்பதைத் தானே நேரில் கண்டறிய விரும்பினான். இந்தப் பாடலை நாம் படிக்கும் போதே இரக்கமற்ற சகோதரர்களைப் பற்றிய தன் மனக் கருத்தைப் புலப்படுத்தும் கடுஞ் சொற்கள் அந்த மாவீரனின் வாயிலிருந்து தெறித்து வருவதும் அவன் தன் பற்களை நறநறவென்று கடிக்கும் ஒலியும் நம்மால் கேட்க முடிகிறது.

ஸஞ்ஜய உவாச—
ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ
குடாகேசேன பாரத
ஸேனயோ—ருபயோர் மத்யே
ஸ்தாபயித்வா ரதோத்தமம் 1:24

சஞ்சயன் சொன்னுன்:

ஓ பரதா (திருதராஷ்டிரனே) குடாகேசன் இவ்வாறு கூறியதைக் கேட்டபின் ஹ்ருஷீகேசன் இரு அணிவகுப்புகளுக்கு மத்தியில் உன்னதமான தேரை—

பீஷ்மத்ரோண—ப்ரமுகத:
ஸர்வேஷாம்ச மஹீக்ஷிதாம்
உவாச பார்த்த பச்யைதான்
ஸமவேதான் குரூனிதி *1:25*

பீஷ்மர், துரோணர், அங்கிருந்த மற்ற வேந்தர்கள் ஆகியோரின் முன்னிலேயில் தேரை நிறுத்தி, 'பார்த்தா, இங்கே திரண்டிருக்கும் கௌரவர்களேப் பார்' என்று கூறினுர்.

பீஷ்மருக்கும் துரோணருக்கும் மற்ற வேந்தர்களுக்கும் எதிரிலிருந்த இடத்தில் குதிரைகளே இழுத்துப் பிடித்து ரதத்தை நிறுத்திவிட்டுத் தேரோட்டியின் கடமையையொட்டி, 'பார்த்தா! இங்கே கூடியுள்ள கௌரவர்களேப் பார்,' என்று கிருஷ்ணர் கூறினுர். முதல் அத்தியாயம் முழுவதிலும் அவர் கூற்ருக அமைவது இது ஒன்றே. அந்த மாவீரன் அர்ஜுனன் தன் அகங்காரத்தைக் கவர்ச்சி மிக்க உறைவிடமாக அமைத்துக் கொண்ட ஆணவம் என்னும் தவருன கருத்துக்களேக் கொண்ட கோட்டையை எரித்துப் பொசுக்கும் தீப்பொறிகளாக கிருஷ்ணரின் இச்சொற்கள் அமைந்துள்ளன. அர்ஜுனன் இந்தச் சவாலே எவ்விதம் ஏற்ருன் என்பதையும் அதன் விளேவாக அவனது உள்மனம் எவ்வாறு தளர்ந்து தவிடு பொடியாயிற்று என்பதையும் பிறகு பார்க்கப் போகிருேம்.

'பிருதிவின் மகன்' என்று பொருள்தரும் சொல்லான 'பார்த்தன்' என்பது அர்ஜுனனின் மற்ருெரு பெயர். குந்தியின் வேறு பெயர் பிருதி. 'களிமண்ணுல் செய்யப்பட்டது,' 'மண்ணுருவம்' என்னும் பொருள்தரும் 'பார்த்தவம்' என்னும் சொல்லினது வேறு வடிவம் போலவும் 'பார்த்தா' என்னும் சமஸ்கிருதச் சொல் அமைந்துள்ளது.

என்றென்றும் மனிதனின் பிரதிநிதியாகத் திகழ்ந்த போதிலும் ஏதோ ஒரு நாள் அழிந்தே தீர வேண்டிய அர்ஜுனனுக்கு அழியாதவனுல் உரைக்கப்பட்ட அறப்பாடலே கீதை என்னும் கருத்தை மேற்கூறிய பெயர்ப்பிரயோகம் உய்த்துணரச் செய்கிறது.

தத்ரா பச்யத் ஸ்திதான் பார்த்த:
பித்ருனத பிதாமஹான்



ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன்
புத்ரான் பௌத்ரான் ஸகீன்ஸ்ததா: 1:26
ஸ்வஸுரான் ஸுஹ்ருதஸ் சைவ
ஸேனயோருபயோரபி

இரு சேனைகளிலும் தந்தையரும், பாட்டன்மாரும், குருமார்களும், அம்மான்களும் சகோதரர்களும், புதல்வர்களும், பேரர்களும் நண்பர்களும் நின்றிருப்பதைப் பார்த்தான் பார்த்தன்.

தான்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய:
ஸர்வான் பந்தூனவஸ்த்திதான்
க்ருபயா பரயா விஷ்டோ
விஷீதன்னிதமப்ரவீத் 1:27

இரு சேனைகளிலும் மாமனர்களையும், நண்பர்களையும் அணி வகுத்து நின்ற உறவினர்களையும் கண்ட குந்தியின் மைந்தன் சோகமும் இரக்கமும் ததும்ப இவ்வாறு சொன்னன்.

கிருஷ்ணரால் சுட்டிக் காட்டப்பட்ட உற்ருர், உறவினர், சுற்றத்தார், சகோதர்கள், தாயாதிகள், குருமார்கள், சான்ருேர்கள், அன்பர், அன்பர் நண்பர்கள் ஆகிய அனைவரையும் அர்ஜுனன் அங்கு கண்டான். தன் அணிவகுப்பில் இருக்கும் நெருங்கிய உறவினர், பகைவர் அணி வகுப்பிலும் இருப்பதைக் கண்டான். சகோதரர்க்கிடையே நடக்கும் போரின் முடிவான அவலங்களை இக்காட்சி முதன் முறையாக அவன் மனக்கண் முன் கொண்டு வந்தது. தனது ஆசை நிறைவேறவும் துரியோதனன் செய்த கொடுமைகளுக்குப் பழி தீர்த்துக்கொள்ளவும் நாட்டு மக்கள் எந்த அளவுக்குப் பெருந்தியாகம் செய்ய வேண்டி யிருக்கும் என்பதைப் போர்வீரன் என்ற முறையிலும் செயல் வீரன் என்ற முறையிலும் அவன் அதுவரை முழுமையாக உணராமலிருந்திருக்கலாம்.

காரணம் எதுவாக இருந்தபோதிலும் இக்காட்சியைக் கண்ட அர்ஜுனனின் மனத்தில் இரக்கமும் பரிவும் வெள்ளமாகப் பெருகின.

இது உண்மையான உணர்ச்சியல்ல என்பது வெளிப்படை. இந்தப் பரிவு உண்மையானதாக இருந்திருந்தால் அவனுடைய பரிவும், இரக்கமும், புத்தருக்கு ஏற்பட்டது போன்று இயல் பாகவும் உள்ளுணர்விற்கேற்பவும் தோன்றியதாக இருந்திருந் தால், போர் தொடங்குவதற்கு முன்னரே அவன் வேறு விதமாக நடந்து கொண்டிருப்பான். அர்ஜுனனிடத்தில் தோன்றிய இந்த உணர்ச்சியை 'இரக்கம்' என்று சிறப்பிக்கும் சஞ்யனின் சொல் சரியான ஒன்று. ஒருவன் மனத்தில் தோன்றும் பலவீனத்தைத்

தனக்கனுகூலமாகச் சிறப்புமிக்க ஒரு பெயரிட்டு, அதற்கு ஒரு புனிதத் தன்மையைக் கொடுப்பது மனித இயல்பாகும். ஒரு பணக்காரன் தான் நிரந்தரமான புகழ் பெற வேண்டும் என்னும் ஆசையை மனத்தில் மறைத்துக்கொண்டு கோயில் கட்டும் ஆடம்பரச் செயலானது அறச் செயல் எனத் தவருக அழைக்கப்படுகிறது. இவ்வாறே, தன் மனச் சமநிலே சிதறியதால், அர்ஜுனனின் மனத்தில் தோன்றிய அவன் உணர்ச்சி தவருன பெயர் சூட்டப்பட்டு 'இரக்கம்' என்று சிறப்பிக்கப்படுகிறது.

அர்ஜுனன் நீண்ட நாளாக உணர்ச்சிகளே அடக்கியதால் உண்டான மனஅழுத்த வேகத்தை வெளிப்படுத்துவதற்கு, தகுந்த ஒரு சூழ்நிலே தேவையாயிருந்தது. அக்காலத்தின் மிகச் சிறந்த வீரன் தானே என்ற அகங்காரத்தாலும், போரின் முடிவில் தானே மாபெரும் வெற்றி பெற வேண்டும் என்ற வேட்கையாலும் போரின் முடிவைப்பற்றியே சிந்தித்து மனக் கோட்டை கட்டியதன் விளேவாலும் அவனுடைய அகமனதும் புறமனதும் பிரிவுபட்டிருந்தன.

ஒரு மன நோயாளியைப் போல அர்ஜுனன் பிதற்றுவதையும், நரம்புத் தளர்ச்சிக்குரிய பல்வேறு அறிகுறிகளேப் பெற்றிருப்பதையும் இவ்வத்தியாயத்தின் பிற்பகுதியில் நாம் காணப் போகிருேம். 'அர்ஜுன நோயால்' அவதிப்படும் ஒரு நோயாளியின் நோயைப்பற்றிய முழு வரலாற்றையும் கூறுவதே முதல் அத்தியாயத்தின் குறிக்கோள். நான் முன்பு கூறியதைப் போல ஆன்மாவைச் சீர்குலேக்கும் 'அர்ஜுன நோய்'க்கு அளிக்கப்படும் சரியான 'கிருஷ்ண மருந்து' தான் பகவத் கீதை.

அர்ஜுன உவாச:—
த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் க்ருஷ்ண
யுயுத்ஸும் ஸமுபஸ்த்திதம்
ஸீதந்தி ம்ம காத்ராணி
முகம்ச பரிஸுஷ்யதி 1:28

அர்ஜுனன் கூறிஞன்:

கண்ணு, போரிடும் ஆவலோடு என் உற்ருர் உறவினர்கள் அணிவகுத்து நிற்பதைப் பார்க்கும்போது,

வேபதுஸ்ச சரீரேமே ரோமஹர்ஷஸ்ச ஜாயதே 1:29

என் கை கால்கள் சோருகின்றன; நா வறண்டு போகிறது. என் உடல் நடுங்குகிறது! மயிர்க் கூச்செறிகிறது.

நோயாளி தன் மனக் குழப்பத்திஞல் உடலில் தோன்றிய அறிகுறிகளே அறிந்து அவற்றை விளக்கமாகக் கூறுவதை இவ்விரு

பாடல்களில் காண்கிறோம். சஞ்சயனுல் 'பரிவு' என்று சிறப்பிக்கப்பட்டது, அர்ஜுனனின் கூற்றில் உண்மையான சொற்களால் குறிக்கப்படுகிறது. 'என் உற்றூர் உறவினர்கள் போரிடும் ஆவலோடு கூடியிருப்பதைக் காணும்போது என் கை கால்கள் நடுங்குகின்றன' ...என்றெல்லாம் அர்ஜுனன் கூறினன்.

இங்கே கூறியுள்ள எல்லா அறிகுறிகளும், நவீன மருத்துவ நூல்களில் ''கவலை நிலையால் தோன்றும் நரம்பு மண்டல நோய் *(anxiety-state-neurosis)*'', என்று மருத்துவர்கள் குறிப்பிடுகிறூர்களே, அதற்கேற்ப அமைந்திருக்கின்றன.

காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத்
த்வக்சைவ பரிதஹ்யதே
ந ச சக்னோம்—யவஸ்தாதும்
ப்ரமதீவச மே மன: 1:30

எனது வில்லாகிய காண்டீவம் கரத்திலிருந்து நழுவுகிறது; என் உடல் எரிகிறது; என்னல் நிற்க முடியவில்லை; என் மனம் சுழல்வதாகத் தோன்றுகிறது.

இங்கு அர்ஜுனன் தன் நோய்க்குரிய இன்னும் சில அறிகுறிகளைத் தெரிவிக்கின்றூன். உடலை அந்நோய் எவ்வாறு பாதித்தது என்பதை இதற்கு முன் அவன் முறையிட்டுக் கொண்டான். கருத்துக் குழப்பத்திலிருந்து வரும் அறிகுறிகள் மனமட்டத்தில் எவ்வாறு தன்னைப் பாதிக்கின்றன என்று இப்பாடலில் அவன் கூறமுயல்கிறூன்.

மனம் உறுதியிழந்து, நிலைகலங்கி குழப்பமுற்றதுடன், ஒழுங்குணர்வை அவன் முற்றிலும் இழந்திருந்தான். பயங்கரமான தோல்விகளையும், அதன் விளைவுகளையும் முன்கூட்டியே தெரிவிக்கும் அபசகுனங்களாக நினைக்கும் மூட நம்பிக்கையைக்கூட ஏற்கும் பேதைமை நிலைக்கு அவன் மனம் சரிகிறது.

பின் வரும் பாடல், அவனது மனக்குழப்பத்தை நமக்கு நன்கு விளக்குவதுடன், அவனது பகுத்தறிவு பறி போனதையும், ஒழுங்குணர்வு அழிந்ததையும் விளக்குகிறது.

நிமித்தானிச பச்யாமி விபரீதானி கேசவ
நசச்ரேயோனு பச்யாமி ஹத்வா ஸ்வ ஜனமாஹவே
1:31

கேசவா, அபசகுனங்களைக் காண்கிறேன்; என் உற்றூர் உறவினர்களைப் போரில் கொல்வதில் ஒரு நன்மையும் காணவில்லை.

இத்தகைய மனக்குழப்பத்தில் அவனுடைய உணர்ச்சிகள் புத்தியை விட்டு விலகிய நிலையில், புறமனமானது அகமனத்தின்

துணையில்லாமல் தலைதெறிக்க ஓடி, அறிவற்ற முடிவுகளை ஏற்கிறது. 'வெற்றியையோ, பேராசையையோ, போகங்களையோ நான் விரும்பவில்லை' என்று அவன் கூறுகிறான். நரம்புக் கோளாறு நோயாளியைப் பேசவிட்டால், அவன் தன் நோய்க்கான காரணத்தை நேர்மாறாகக் கூறுவான் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை. உதாரணமாக, ஒரு மாது நரம்புத் தளர்ச்சியினால் கூச்சலிடும்போது, அவள் 'நான் என் கணவனிடம் அலுப்புக் கொள்ளவில்லை. இன்னும் அவரிடம் மதிப்பு வைத்துள்ளேன். அவர் இன்னும் என்னை நேசிக்கிறார். எங்கள் இருவரிடையே சண்டை சச்சரவு இல்லை' என்று கூறுவாள். இக்கூற்றின் மூலம், அவள் தன் மனக்குழப்பத்திற்கான தகுந்த காரணங்களை வெளிப்படுத்திவிடுகிறாள்.

இதைப்போலவே, அர்ஜுனன் மறுத்துக் கூறுவன யாவும், இத்தகைய மனக் குழப்பத்திற்கு எப்படி, ஏன் அவன் ஆளானான் என்று விளக்குவதை இதைப் படிக்கும் யாவரும் எளிதில் உணரலாம். அவன் வெற்றியை விரும்பினான்; ராஜ்யத்தை உடனே பெற விரும்பினான். தனக்கும் தன் உறவினர்களுக்கும் சுக போகங்கள் கிடைக்க வேண்டும் என்று ஆவலுடன் எதிர்பார்த்தான். ஆனால் கௌரவர்களின் மாபெரும் சேனை விடுத்த சவாலையும், அச்சேனையில் போரிட ஆயத்தமாக நின்ற மிகச் சிறந்த திறமைவாய்ந்த வீரர்களையும் கண்டவுடன், அவனுடைய நம்பிக்கையும் பேராவலும் தகர்ந்து விடுகின்றன. தன்னம்பிக்கை அடியோடு அழிந்து விடுகிறது. அதனால் அவன் யாவரும் அறிந்த 'அர்ஜுன வியாதி'யை மெல்ல மெல்லப் பெற்றான். இதை நீக்கும் மருத்துவமே கீதோபதேசம்.

நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண நச ராஜ்யம் ஸுகானிச
கிம்நோ ராஜ்யேன கோவிந்த கிம்போகைர் ஜீவிதேனவா
*1:32*

வெற்றியையோ இராஜ்யத்தையோ, சுகபோகங்களையோ நான் விரும்பவில்லை, கிருஷ்ணா, இராஜ்யத்தாலும் சுகபோகங்களினாலும் என்ன பயன்? வாழ்ந்துதான் பயன் என்ன, கோவிந்தா?

ஏஷா மர்த்தே காங்க்ஷிதன்னோ
ராஜ்யம் போகா: ஸுகானிச
த இமே வஸ்த்திதா யுத்தே
ப்ராணான்ஸ் த்யக்த்வா தனானி ச *1:33*

யாருக்காக அனைத்து சுகபோகங்களையும் விரும்புகிறோமோ, அவர்கள் தங்கள் வாழ்வையும் செல்வத்தையும் துறந்து போர்க் களத்தில் நிற்கிறார்கள்.

ஆசார்யா: பிதர: புத்ரா:
தநைவச பிதாமஹா:
மாதுலா: ஸ்வசுரா: பௌத்ரா:
ஸ்யாலாஸம்பந்தினஸ்ததா 1:34

தந்தையர்கள், புதல்வர்கள், பாட்டனுர்கள், அம்மான்கள், மாமனுர்கள், பேரர்கள், மைத்துனர்கள், மற்றுள்ள உறவினர்கள்—

ஒரே அரச குடும்பத்தைச் சேர்ந்த இரு பிரிவினர்களுக்கிடையே ஓர் உள்நாட்டுப் போர் நடப்பதை எதிர்க்கும் அர்ஜுனன் தன் வாதத்தைத் தொடர்கிறுன். தர்மத்தைத் தேடும் அர்ஜுனன், கடமை செயல் புரியவேண்டுமென்று ஆணையிடும் போது, கட்மையிலிருந்து பின்வாங்குவதை நியாயமென்று நிரூபித்த காரணத்தைக் கற்பனைசெய்து காட்டுகிறுன்.

அர்ஜுனனின் மனோபாவத்தை கிருஷ்ணர் தன் மௌனத்தின் மூலம் குறை கூறியதால் முன்னே கூறியதையே அவன் மீண்டும் கூறுகிறுன். பகவானின் இதழில் தோன்றும் கேலிப்புன்னகை அர்ஜுனனைத் தாக்கித் தலைகுனியச் செய்கிறது. தன் மனத்தில் நினைப்பதே ஏற்கத்தக்கதும் நியாயமானதும் ஆகும் என்பதைத் தோழனும் தேரோட்டியுமான கிருஷ்ணர் ஆமோதித்து, அம்முடிவையே ஏற்க வேண்டும் என்று அர்ஜுனன் விரும்புகிறுன். ஆனுல் அவருடைய பார்வையும், பேச்சும், அதை ஆமோதிப்பதாகவோ, ஏற்றுக்கொள்வதாகவோ இல்லை.

ஏதாந் ந ஹந்துமிச்சாமி
க்னதோபி மது சூதன
அபித்ரைலோக்ய—ராஜ்யஸ்ய
ஹேதோ: கிம்னு மஹீக்ருதே 1:35

மதுசூதனு, என்னை அவர்கள் கொன்றுலும், நான் அவர்களைக் கொல்லப் போவதில்லை, மூவுலகங்கள் வருவதாயிருந்தாலும் செய்யாததை இம் மண்ணுலகுக்காகவா செய்யப் போகிறேன்?

தன் முடிவை கிருஷ்ணர் ஏற்குமளவு அதை விளக்கமாகத் தான் சொல்லவில்லை என்று நினைத்தான் அர்ஜுனன், அதனுல் தான் அவர் அதை ஆதரிக்கவில்லை என்று நினைத்தான் அர்ஜுனன், அவர் அதை ஆதரிக்கவில்லை என்று நினைத்து, சகோதரர்கள் தன்னைக் கொன்றுலும், தான் அவர்களைக் கொல்லப் போவதில்லை என்ற பரந்த மனப்பான்மை தன்னிடத்தில் இருப்பதுபோல ஒரு போலித் துறவியாகப் பேசுகிறுன். 'மூன்று உலகங்கள் கிடைப்பதாக இருந்தாலும் போரிட மாட்டேன்' என்றும், 'வெறும் அஸ்தினபுர அரசுக்காக நிச்சயம் போரிட

மாட்டேன்' என்றும் ,அர்ஜுனன் மிகைப்படுத்திக் கூறுவது கோமாளித்தனத்தின் உச்சக்கட்டமாகத் தோன்றுகிறது.

நிஹத்ய தார்த்த ராஷ்டிராந் ந:
காப்ரீதி: ஸ்யாஜ்ஜனுர்த்தன
பாபமேவாச்ரயேதஸ்மான்
ஹத்வைதா னுததாயின: 1:36

திருதாஷ்டிரன் மைந்தர்களைக் கொன்று நாம் என்ன சுகத்தை அனுபவிக்கப் போகிறோம் ஜனார்த்தனா. எந்தப் பாதகத்திற்கும் அஞ்சாத இவர்கள் வஞ்சகர்களானாலும்கூட, இவர்களைக் கொல்வதால் பாவமே நம்மை வந்து அடையப் போகிறது.

இதுவரை அர்ஜுனன் உரைத்த அனைத்தையும் கேட்ட கிருஷ்ணர் கற்சிலை போல மௌனமாக இருந்தார். எனவே அர்ஜுனன் நடைப்பாங்கிலான தனது பேச்சுமுறையைக் கைவிட்டு, மந்த புத்தியுள்ள நண்பனுக்கு முக்கியமான விஷயத்தை விளக்க முயலும் ஒருவனைப்போல மென்மையாகப் பேசத் தொடங்கினான். கிருஷ்ணருடைய நீடித்த மௌனத்தைக் கவனிக்கும்போது, அர்ஜுனனின் வாதத்தில் மேற்கண்ட முறை மாற்றம் ஒரு கேலிக் கூத்தானது என்பது எளிதில் விளங்குகிறது.

பாடலின் முதல் வரியில் திருதராஷ்டிரனின் மைந்தர்களைக் கொல்வதால் ஒரு நன்மையும் ஏற்படப் போவதில்லை என்று விளக்குகிறான். அதன் பின்பும் கிருஷ்ணர் முகத்திலிருந்த உற்சாகமற்ற புன்னகை மாறவில்லை. புத்தி பேதலித்த அர்ஜுனன், அவருடைய இந்த மனப்போக்கிற்குக் காரணம் என்ன என்பதைக் காண முயல்கிறான். உடனே கௌரவ சகோதரர்கள் பாண்டவர்களிடம் வஞ்சகர்களாக நடந்து கொண்டமுறை அவன் கவனத்திற்கு வருகிறது. 'ஆததாயினஹ' என்றால் 'எப்பாதகத்திற்கும் அஞ்சாத வஞ்சகர்கள்' என்று பொருள். அர்த்த சாஸ்திரத்தின்படி அவர்கள் * கொல்லத்தக்கவர்கள்.

பாவம் என்பது அகந்தை செய்யும் தவறு. தான் அழியா ஆன்மா என்பதை அறியாது இயங்கும் காரணமாக வரும் ஆபத்து. இது உடலாக, மனதாக, புத்தியாக இயங்குவது. மனிதருக்கேற்ற முறையில் செயல்படுவதாகாது. அது மிருகவுணர்ச்சித் தூண்டுதலால் செயல்படுவதாகும். நமது உள்ளத்தில் வெறுக்கத்தக்க கனமான தடங்களை விட்டுச் செல்லும் வேலைகளும் நோக்கங்களும் நமக்குள்ளே இருக்கும்

---

* ஒரு பாதகன் குருவாகவோ, முதியவனாகவோ வேதம் கற்ற பிராம்மணனாகவோ இருந்தாலும்கூட, அவனைக் கண்டவுடனே யோசனை செய்யாமல் கொல்ல வேண்டும். அந்த ஆததாயியை கொலைகாரனைக்—கொல்வதால் பாபம் விளைவதில்லை. —மனு VIII. 35-350-351.

தெய்வீக ஒளியைக் காண விடாது மறைத்து விடுகின்றன. இவ் விளைவுக்குக் காரணமான செயல்களும் நோக்கங்களுமே பாவங்கள்.

பகைவர்களைக் கொல்லக் கூடாது என்று அர்ஜுனன் எல்லாம் தெரிந்தவனைப் போல் எழுப்பிய மறுப்பு, நமது புனித சாத்திரங்களுக்கு முரணானது. அதற்கேற்பச் செயல்பட்டிருந் தால், அது நமது கலாச்சாரத்தை நாமே அழித்தது போலா யிருக்கும். ஆதலால் அர்ஜுனனின் மனப்போக்கை எந்த அறிகுறி மூலமும் கிருஷ்ணர் ஆமோதிக்கவோ எதிர்க்கவோ இல்லை. நண்பன் மனநோய்பிடித்துப் பிதற்றுகின்றான் என்பதைப் புரிந்து கொண்டு, இப்படிப்பட்ட நோயாளி, அவன் மனத்திலிருக்கும் யாவற்றையும் மீதம் வைக்காமல் வெளியே கொட்ட அனு மதிப்பதே சிறந்த முறை என்று கிருஷ்ணர் கருதுகிறார்.

தஸ்மாந் நார்ஹாவயம் ஹந்தும்
தார்த்தராஷ்ட்ரான் ஸ்வபாந்தவான்
ஸ்வஜனம்ஹி கதம் ஹத்வா
ஸுகின: ச்யாம மாதவ 1:37

எனவே திருதராஷ்டிரனுடைய மைந்தர்களான எங்கள் உறவினர்களை நாங்கள் கொல்லமாட்டோம். ஏனெனில்; எங்கள் சுற்றத்தாரைக் கொன்றபின் எங்களால் எவ்வாறு மகிழ்ச்சியாய் இருக்கமுடியும், மாதவா?

இந்து சாத்திர விதியை ஒத்தது போன்ற பொய்த் தோற்ற முடைய, நியாயம் போல் தோன்றுகின்ற, தன் வாதத்தை அர்ஜுனன் இங்கே முடிக்கிறான். இந்து சாத்திரங்களை வேண்டு மென்றே இழிவுபடுத்திப் பேசுபவர்களைவிட, தங்களை அறியாம லேயே தவறான விளக்கம் தரும் அப்பாவிகளே அச்சாத்திரங் களுக்கு அழிவு தேடுகிறவர்கள் ஆகிறார்கள். சமையலறையில் தன் உடலை நாவால் தடவியபடி திருப்தியோடு மெல்ல ஒலியெழுப்பும் பூனைக்குட்டியைப் போல இப்பாடலில் அர்ஜுனன், தன் வாதங்களையெல்லாம் பூசி மழுப்பி 'தாக்கலிருக்கும் பகைவரைக் கொல்லக்கூடாது. அவர்களுடைய அறத்துக்கு மாறான சவாலை ஏற்கக் கூடாது' என்னும் பயங்கர முடிவுக்கு வருகிறான். அப்போதும் கிருஷ்ணர் மௌனம் சாதிக் கிறார்.

அர்ஜுனன் படும் அவதி, அவனது அலங்கோலத்தை அதிகப் படுத்துகிறது. இப்பாடலின் இரண்டாவது வரியில் கிருஷ்ணனுக்கு நேரடியாகவே ஒளிவுமறைவின்றி ஒரு வேண்டு கோள் விடுத்து, தனது நிலையை நினைத்துப் பார்த்து, தனது பைத்தியக்கார முடிவுகளை ஏற்றுக் கொள்ளும்படி பார்த்தன்

கெஞ்சிக் கேட்டுக்கொள்கிருன்.

நீண்ட காலமாகத் தொடர்ந்து வரும் நட்பின் உரிமையினுல் அர்ஜுனன் தன் தேரோட்டியை 'ஓ மாதவா' என்று அன்போடு அழைக்கிருன். தன் சுற்றத்தார்களைக் கொன்றபின் ஒருவன் எவ்வாறு சந்தோஷமாக இருக்க முடியும் என்று அவரிடம் கேட்கிருன். அப்போதும் அவர் மௌனமாகவே இருக்கிருர்.

யத்யப் யேதே ந பச்யந்தி லோபோ பஹத—சேதஸ:
குலக்ஷய க்ருதந் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம்.

*1:38*

பேராசையினுல் மதியிழந்த இவர்களுக்கு,சமூகத்தில் உள்ள குடும்பங்களை அழிப்பதும், நண்பர்களுக்குக் கொடுமை இழைப்பதும் தவருகத் தோன்றவில்லை என்ருலும்,

கதம் ந ஜ்ஞேய—மஸ்மாபி: பாபா—தஸ்மாந்—நிவர்திதும்
குலக்ஷய க்ருதந் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜனர்தன.

*1:39*

குடும்ப முறையை அழித்தல் தீது என்பதைத் தெளிவாக அறிந்த நாமாவது இப்பாவத்தைக் கைவிடத் தெரிந்துகொள்ள வேண்டாமா, ஜனர்த்தன?

ஆஸ்தியிலும், அதிகாரத்திலும் பேராசைகொண்ட கௌரவர்கள், இந்தப் போரினுல் சமுதாய அமைப்பு முழுவதும் அழியப்போவதைக் காண முடியாத குருடர்களாக இருக்கிருர்கள். நண்பர்களை அடியோடு அழிப்பதில் இருக்கும் கொடுமையை அறிந்து கொள்ளாத அல்லது புரிந்துகொள்ளாத அளவுக்குக் கௌரவர்களது பேராசை அவர்களது அறிவை முற்றிலும் மறைத்துவிட்டது.

சகோதரர்களிடையே நடக்கும் போரினுல் சமுதாயம் முழுவதும் அழியப் போகிறது. அதனுல் விளையும் பெருங்குழப்பத்தை முன்னதாகவே தெளிவாக உணரும் அறிவுத்திறனை அர்ஜுனன் இழக்காதது போல ஒரு தோற்றம் ஏற்படுகிறது. அவனது வாதம் பின்வருமாறு அமைந்துள்ளது: 'நமது நண்பன் ஒருவன் குடி போதையில் நம்மிடம் கீழ்த்தரமாக நடந்துகொள்கிருன். அதற்காக அவனை நாம் தண்டிப்பது அவன் போதைச் செயலைவிடக் கீழ்த்தரமானது. ஏனெனில் குடிபோதையில் உள்ள நண்பன் தனது செயலை அறிந்து கொள்ளும் அறிவு நிலையில் இல்லை'

இத்தகைய சந்தர்ப்பங்களில், அவன் செய்த தீங்கை

மன்னித்து, எல்லை மீறிய செயலைப் பொருட்படுத்தாது விட்டு விடுவதே நமது கடமையாகும். இதைப் போலவே துரியோதனனும் அவனைச் சேர்ந்தவர்களும் கண் மூடித்தனமாகத் தாக்குதலை மேற்கொள்ளும்போது, பாண்ட வர்கள் ஒன்றும் செய்யாமல் களத்தைவிட்டு விலகிச் செல்ல வேண்டாமா? அதனால் வரும் தோல்வியையும் அவமானத்தையும் தாங்கிக்கொள்ள வேண்டாமா? அதையே அமைதிக் கோயிலில் தாங்கள் செலுத்தும் காணிக்கையாகக் கருத வேண்டாமா? இது தான் அர்ஜுனன் வாதத்திலுள்ள உட்கருத்து. கீதையின் பிற பகுதிகளைப் படிக்கப் படிக்க இந்தத் தத்துவம் எவ்வளவு ஆபத் தானது என்பதை நாம் நன்கு அறிவோம். இந்து வாழ்க்கை முறையின் சத்தும் சாறுமான தத்துவத்தின் சிறப்பை உணரு வோம். கீதையில் கண்ணன் உபதேசித்த கருத்தே ''எப்பாடு பட்டேனும் தீமையைத் தடு'' என்பதே.

குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸநாதனு:
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்னம் அதர்மோபி பவத்யுத
1:40

குடும்பம் அழிந்தால் தொன்றுதொட்டு இருந்துவரும் குல தர்மங்கள் அழிந்து விடுகின்றன; ஆன்மிக மரபு அழிந்தொழிந் தால் அதர்மம் குடும்பத்தைச் சூழும்.

கதை சொல்லும் ஒருவன், ஒரே கதையைத் திரும்பத் திரும்பச் சொல்லும் போது புதுப்புது விவரங்களைச் சேர்த்துச் சொல்வது போல, அர்ஜுனன் தனது மடமையிலிருந்து புத்துணர்ச்சி பெற்றவனாய், தனது தவறான தத்துவத்துக்கு ஆதர வாக ஒவ்வொரு தடவையும் கற்பனை வாதங்கள் புதிது புதிதாகச் சேர்த்துக் கொள்ளுகிறான். ஒரு தடவை பேசி முடித்தவுடன் திடீ ரென்று புதிய கருத்து ஒன்று வந்து விட்டதைப்போல் பிதற்றத் தொடங்கி, அந்த வாதங்களில் ஒளிந்துகொள்ளப் பார்க்கிறான் அர்ஜுனன்.

தனிப்பட்ட குடும்பங்கள் அழியும்போது அவற்றுடன் சமூ கத்தில் உள்ள குலதர்மங்களும் அழிந்து அதர்மம் அரசோச்சத் தொடங்கும் என்று அவன் குறிப்பிடுகிறான்.

ஓழிந்த நேரங்களில் நம் மூதாதையர்கள் கலாச்சார ஆராய்ச்சியை மேற்கொண்டனர். ஒவ்வொரு குடும்பத்தின் கலாச்சாரமும், மரபும் நாடு முழுவதுக்கும் பொதுவான கலாச் சாரம் ஒருமைப்பாடு ஆகியவற்றின் ஒரு சிறு பகுதியாக அமைந் திருந்தது அவர்களுக்குத் தெரிந்திருந்தது. எனவே இந்த உள் நாட்டுப் போரை எதிர்க்கும் வாதத்தில், குடும்ப தர்மத்தின் முக்கியத்துவத்துக்கு அர்ஜுனன் சிறப்பிடம் அளித்துப் பேசு கிறான்.

அதர்மாபிபவாத் க்ருஷ்ண
ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய:
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய
ஜாயதே வர்ண ஸங்கர: **1:41**

க்ருஷ்ணு, அதர்மம் நிலவினுல் குடும்பப் பெண்கள் கற்பிழந்து விடுவார்கள். குலப் பெண்கள் கற்பிழந்தால் ஜாதிக் கலப்பு ஏற்பட்டுவிடுமே, வார்ஷ்ணேயா!

முன் பாடலில் கூறிய வாதங்களைத் தொடர்ந்து, உண்மையான குடும்ப தர்மத்தின் ஒருமைப்பாடு அழிந்தால் ஏற்படக் கூடிய விளைவுகளைப் பார்த்தன் விளக்குகிருன். சமூகத்தில் நிலவியிருக்கும் ஒழுக்கம் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து ஜாதிக் கலப்பு தலை தூக்கும்.

படித்தவர்கள் தற்காலத்தில் 'ஜாதி' என்னும் சொல்லுக்கு விபரீத பொருள்கொண்டு அதைக் குறை கூறுகிருர்கள். 'ஜாதி' என்பதற்கு இப்போது உள்ளதே உண்மையான பொருளாக இருந்தால், அவர் குறை கூறுவதில் நியாயமிருக்கிறது. ஜாதியின் பெயரால் இன்று நம்மைச் சுற்றிலும் நடைபெறுவது, இந்து வாழ்க்கை முறை அடைந்துள்ள இழி நிலையையே எடுத்துக் காட்டுகிறது. பழங்காலத்தில் ஒவ்வொருடைய அறிவு நிலைக்கும் மன அமைப்புக்கும் ஏற்ப சமுதாயத்தில் இருந்த மனித சக்தியை அறிவு பூர்வமாகப் பிரித்த பிரிவுகளே ஜாதிகளாகும்.

அறிவுத்திறன் மிக்கவர்களும், கல்வியிலும் ஆராய்ச்சியிலும் ஆர்வம் உள்ளவர்களும் பிராம்மணர்கள் என்று வழங்கப் பட்டனர். தலைமைப் பதவியைப் பெற விரும்பிய அரசியல் நாட்டமுள்ளவர்களும், நாட்டில் அமைதியையும் வளத்தையும் பாது காக்கும் கஷ்டமான பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்களும், உள்நாட்டு, வெளிநாட்டுத் தாக்குதலிலிருந்து நாட்டைக் காப் பாற்றக் கூடியவர்களும், க்ஷத்திரியர். விவசாயத்தின் மூலமும் வாணிபத்தின் மூலமும் சமுதாயத்திற்குச் சேவை செய்பவர்கள் வைசியர்கள். கடைசியாக, மேற்கூறிய பிரிவுகளில் அடங்காத அனைவரும் சூத்திரர்கள் என அழைக்கப்பட்டனர். அவர் களுடைய கடமை, தொண்டும், உழைப்புமாகும். தற்காலத்துச் சமூக சேவையாளர்கள், அதிகாரிகள், உழவர்கள், தொழி லாளிகள் ஆகிய அனைவரும் இந்த உன்னதமான பிரிவைச் சேர்ந்தவர்கள்.

ஜாதிப் பாகுபாட்டை அதன் பரந்த பொருளில் உணரும் போது, அது இன்றைய தொழிற் பிரிவாகக் காணப்படுகிறது. எனவே, அவர்கள் 'ஜாதிக் கலப்பு' ஏற்கத் தக்கதல்ல என்று கூறும்போது, நம் சமுதாய அமைப்பில் முன்னரே உண்மையென ஒத்துக்கொள்ளப்பட்டதையே குறிப்பிடுகிருர்கள். அதாவது ஒரு

இன்ஜினியர் ஒரு மருத்துவமனைக்குத் தலைவராகி, அவரே டாக்டராக ஆபரேஷன் செய்ய முன்வருவது சமுதாயத்திற்கே தீங்கு விளைவிப்பதாகும். ஒரு டாக்டர், ஒரு அணைக்கட்டுத் திட்டத்தை உருவாக்கவும், வழிகாட்டவும் நிர்வகிக்கவுமான பொறுப்பேற்றுக் கொள்வதும் இதைப் போன்ற ஆபத்தே அல்லவா?

சமுதாயத்தின் பொதுவான ஒழுங்குமுறை சீரழியும்போது வாலிபரும், பருவப் பெண்களும் அடக்க முடியாத காம வெறியால் அறிவுக் கண்ணிழந்து கட்டுப்பாடற்ற முறையில் பாலுறவு கொள்ளத் தொடங்குகின்றனர். காமத்துக்கு விளைவுகள் பற்றிய கவலை இல்லை. வளர்ச்சிச் சிறப்பு பற்றியோ கலாச்சார உயர்வு பற்றியோ அவர்களுக்குக் கவலையே இல்லை.

ஸங்கரோ நரகாயைவ குலக்னானாம் குலஸ்யச
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த—பிண்டோதக க்ரியா:
*1:42*

குடும்பங்களை அழித்தவர்களை 'ஜாதிக் குழப்பம்' நரகத்திற்கு இட்டுச் செல்லும். ஏனென்றால் அவர்களுடைய மூதாதையர்கள், பிண்டச் சோற்றையும் நீரையும் பெற முடியாதவர்களாகி நரகத்தில் வீழ்வார்கள்.

வாதம் இன்னும் தொடர்கிறது; ஜாதிக் கலப்பினால் ஏற்படும் விளைவுகளை அர்ஜுனன் சுட்டிக் காட்டுகிறான். ஜாதிக் கலப்பினால் வாழ்க்கையில் ஒழுக்கம் குறைகிறது. உள்ளத்தின் தன்மையும் சீர்குலைவிற்கு உள்ளாகிறது. இதனால் குல மரபு என்ற பண்பே அழியும் நிலைக்கு வந்து விடுகிறது.

மறைந்த மூதாதையர்கள், தாம் வாழ்ந்த காலத்தில் கண்ணும் கருத்துமாகப் பேணி வளர்த்ததும் பிள்ளைகளின் உள்ளத்திலே நிலைபெறச் செய்ததுமான கலாச்சாரத் தூய்மையினை இப்போது வாழ்கிறவர்களும் தொடர்ந்து காத்து வருகிறார்கள் என்பதன் சின்னமே மூதாதையர்களுக்கு அளிக்கப்படும் பிண்டச் சோறு என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் அறிந்து கொள்ள வேண்டும். தலைமுறை தலைமுறையாகச் சமூக நெறிக் கோட்பாடுகளை கவனத்துடன் சிறுகச் சிறுக மலரச் செய்த நமது கலாச்சாரத்தை சமுதாயம் சிதைப்பது நம் மூதாதையர்களின் பேருழைப்பை அவமதிப்பதாகும். நம் மூதாதையர்கள் விண்ணுலகத்திலிருந்து இம்மண்ணுலகத்திலுள்ள தம் சந்ததியர்களைக் கண்காணித்து, அவர்களுடைய வாழ்க்கை முறைகளை உற்று நோக்குகிறார்கள் என்று கருதுவதே கவர்ச்சியானதாகவும் கவிதையுணர்வு மிக்கதாகவும் இருக்கிறதல்லவா? முன்னோர்களால் முறைப்படி அமைக்கப்பட்ட ஒரு நந்தவனத்தைப் பின் வந்தவர்கள் புதர்கள் நிறைந்த காடாகச் செய்வதைக் காண நேரிட்டால் முன்னோர்கள் அடையும் துன்பம் கொடும்

பசியினாலும் கடுந்தாகத்தினாலும் ஏற்படுகின்ற துன்பத்தைப் போன்றது. இக்கருத்தை உணர்ந்து கொண்டால் இப்பாடல் முழுவதும் பொருத்தமாக அமைந்திருப்பது தெரியவரும்.

ஒவ்வொரு தலைமுறையினரும் தம் கலாச்சார ஒளி விளக்கை, தம் சந்ததியரான அடுத்த தலைமுறையினரிடம் கொடுத்துச் செல்கின்றனர். இந்த ஒளி விளக்கைக் கண்ணும் கருத்துமாகப் பேணிக் காத்து தமக்குப் பின்வரும் தலைமுறை யினரிடம் ஒப்படைக்க வேண்டும். அவ்வாறு ஒப்படைக்கும் போது தாம் பெற்றபோதிருந்த ஒளியினும் அதிகமாகப் பிரகா சிக்கச் செய்ய முடியாவிட்டாலும் ஒளிகுன்றாத நிலையிலாவது கொடுப்பது அவர்தம் கடமை.

இந்தியாவில் தவத்தில் சிறந்த ஞானிகள் ஆன்மிகமான ஒரு கலாச்சாரத்தைக் கண்டு பிடித்துக் கடைப்பிடித்தனர். இவர்கள் இந்த ஆன்மீகக் கலாச்சாரத்தை, மத சம்பந்தமான செயல் முறைகள் மூலம் வெளிப்படுத்திக் காத்து வந்தனர். எனவே இந்துக்களுக்கு கலாச்சாரமும் மதமும் ஒன்றேயாகும். பண்டைய இலக்கியத்தில் கலாச்சாரம் என்னும் சொல்லாட்சியைக் காண்பது அரிதாகும். மதச் செயல் முறைகளைப் பற்றிக் குறிப்பிடப் படுவதையும் அவை வற்புறுத்தப் படுவதையும் நாம் ஆங்காங்கே காண்கிறோம்.

உண்மையில், ஆன்மிகக் கலாச்சாரத்தைச் சமுதாயத்தில் செயல்படுத்தவும், பாதுகாக்கவுமான ஓர் செயல் முறையே இந்து சமயமாகும். எனவே, இப்பாடல்களில் குடும்பத்தில், அல்லது சமுதாயத்தில் திகழும் சமய வாழ்க்கை அழுத்தத்திருத்தமாக வற்புறுத்தப் படுவதைக் காண்கிறோம். நமக்குள் இருக்கும் ஆன்மிக உணர்வை மிக அதிகமாக வெளிப்படுத்த உதவுவன தெய்வீகக் கோட்பாடுகள். இக்கோட்பாடுகளின்படி வாழ்ந்து வருவதே, 'தர்மம்' எனப்படுவது. ஒன்றுபட்ட, சரிவரத் திட்ட மிடப்பட்ட குடும்பத்தின் வாழ்க்கை, நினைவு, செயல் ஆகிய வற்றின் விதி முறைகளே குடும்பதர்மமாகும். இவ்விதி முறைகளைச் சரிவரப் பின்பற்றி வாழ்வதன் மூலமாக நமது வீட்டின் பூஜை அறையிலே அரிய கலாச்சாரத்துத்துக்கேற்ற சிறந்த குடிமக்களாக எப்படி வாழ்வது என்பதை எளிதில் அறிந்து கொள்ளுகிறோம்.

தோஷை ரேதை: குலக்னானாம். வர்ண சங்கர காரகை:
உத்ஸாத்யந்தே ஜாதி தர்மா: குல தர்மாஸ்ச சாஸ்வதா:

*1:43*

குடும்ப நாசம் செய்பவர்களின் தீய செயல்களினால் ஜாதியின் நிரத்தரமான மதச் சடங்குகளும் ஜாதிச் சடங்குகளும்

அழிகின்றன.

அர்ஜுனனின் இந்தக் கூற்ருல், முன் பாடலில் கூறப்பட்ட கருத்து தெளிவு பெறுகிறது. சகோதரர்களிடையில் நடக்கும் இச் சண்டையினுல், குடும்பத்தின் சமய மரபுகள் அழிவுறும் என்று அர்ஜுனன் இப்பாடலிலும் வருந்துகிருன். அவன் இவ்வாறு சொல்லும்போது, நான் முன்பு குறிப்பிட்டதுபோல இந்தியாவின் ஆன்மிகக் கலாச்சாரமே மதம் என்பதையும், இதற்கான பயிற்சி ஒவ்வொருவர் குடும்பத்திலும் அளிக்கப்படுகிறது என்பதையும் உணர்ந்து கொண்டால், இப்பாடலின் பொருள் தானே விளங்கிவிடுகிறது. ஒரு போர் முடிந்த பிறகு, சமுதாயத்தில் நிலேபெற்ற கலாச்சாரக் கோட்பாடுகள் சிதைகின்றன என்பது நாம் அறிந்ததே. ஒழுக்கக்கேடு, ஏமாற்றுச் செயல் என்னும் பாரத்தைத் தாங்க முடியாமல் பெருமூச்சு விடும் இன்றைய உலகமே, ஒரு போரிலே காலும் கையும் இழந்து முடமானவர்களேத் தருவதோடு மனநிலே சிதைந்தவர்களேயும் பல்வேறு வகைகளில் உண்டாக்குகிறது என்பதற்குச் சான்ருக நிற்கிறது. அர்ஜுனனே இப்பாடல் மூலம், உலகத்திலே போரினுல் விளேயும் கேட்டை உணர்ந்து அதை எதிர்க்கும் முதல் மனிதனுக நாம் காண்கிருேம். இப்பாடல்களில், எக்காலத்துக்கும் பொருந்தக்கூடிய சமாதானத்தை நிலேநாட்டும் வாதங்களே அர்ஜுனன் அளித்துள்ளான்.

உத்ஸன்ன குலதர்மாணும் மனுஷ்யாணும் ஜனர்தன
நரகே நியதம் வாஸோ பவதீத்யனு சுச்ரும.

*1:44*

ஜனர்த்தன, சமயச் செயல் முறைகள் எந்தக் குடும்பத்தில் அழிந்துவிடுகின்றனவோ, அந்தக் குடும்பத்தினர் வெகுகாலம் நரகத்தில் வாழ்வார்கள் என்பது தவிர்க்க முடியாத விதி.

இன்னமும் பகவான் மௌனம் சாதிக்கிருர். அர்ஜுனன் தனது வாதத்தை நிறுத்த முடியாத நிலேயிலிருக்கிருன். ஆனுல் வாதாட வார்த்தைகள் கிடைக்கவில்லே. இந்த வியக்கத்தக்க நிலேக்கு அர்ஜுனனே ஆளாக்கியது, கிருஷ்ணரின் மௌனமே. இப்பாடலில் அர்ஜுனன் தன் விவாதத்தை முடிக்கும் நிலேக்குக் கொண்டுவந்துவிட்டான். அதனுல் ‘ஒரு குடும்பத்தின் சமயநெறி அழிந்தால் அக்குடும்பத்தினர் நரகத்துக்குச் செல்வார்கள்’ என்று தான் கேள்விப்பட்ட மரபினேத் தெரிவிக்கின்ருன்.

அர்ஜுனனின் வாதங்களே விஞ்ஞான பூர்வமாக நோக்கும் போது, நம்மில் கடைப்பட்டவர்கள் கூடத் தமது இலட்சியத்தில் ஒரு புரட்சி உண்டாக்க வேண்டும் என்று நினேப்பது தெரிய வரும். தற்காலச் சூழ்நிலேயில் சமுதாயத்தின் ஒரு அங்கமான

குடும்பத்தின் கலாச்சாரத் தூய்மையே குடும்ப தர்மமாகும் என்பதையும், இந்துக்களுடைய கலாச்சாரம் ஆன்மிகமானதாக இருப்பதால் 'மதமும் கலாச்சாரமும் ஒன்றே' என்பதையும் முன்பே பார்த்தோம்.

குடும்பத்தின் ஒன்றுபட்ட வாழ்வு சிதைந்தால் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையில் வாழ்வின் தூய்மையும் எண்ணங்களின் புனிதமும் அழிந்தால், அந்தத் தலைமுறையினர் நரகவேதனையும் துயரமும் நிறைந்த துன்பக் காலத்தை உருவாக்குகின்றனர் என் பதை அர்ஜுனன் உணர்த்துகிறான்.

அஹோபத மஹத்பாபம் கர்த்தும் வ்யவஸிதாவயம்
யத்ராஜ்ய ஸுக லோபேன ஹந்தும் ஸ்வஜனமுத்யதா:
1:45

ஐயோ, நாடாளும் சுகம் என்ற பேராசையினால் நம் உறவினரைக் கொல்லும் பெரும் பாவத்தைச் செய்ய நாமும் முன் வந்திருக்கிறோமே!

மேலும் விவாதிக்க முடியாமல் அர்ஜுனன் அறிவிலும் உணர்ச்சியிலும் ஒய்ந்துபோய்ப் பேசுவதைக் கேட்கும்போது, ஒரு புறம் பரிதாபமாக இருந்த போதிலும், மற்றொருபுறம் நமக்கு சிரிப்பும் வருகிறது. அவன் ஒரு பேதையைப் போல 'நாம் பாவத்தில் ஈடுபட்டிருக்கிறோம், என்ன கொடுமை,' என்று அங்கலாய்த்துக் கொள்கிறான். சூழ்நிலையைக் கட்டுப்படுத்தி ஆள்பவனாகத் திகழ்வதற்குப் பதில், அவன் சூழ் நிலைக்கு அடிமையாக மாறிவிட்டான் என்பதை இப்பாடல் தெளிவாக்குகிறது. தான் சூழ்நிலைகளை அடக்கியாளும் தலைவன் என்ற உறுதியான தன்னம்பிக்கை அவனிடம் இல்லை. கோழைத் தனம் மேலிட்டு அவன் செயலற்றவனாகி, இவ்வுணர்ச்சிக்கு ஆட் படுகிறான்.

விரும்பத்தகாத இந்த மனத்தளர்ச்சி அவனது வீரத்தை விரயமாக்குகிறது; அவன் தனது கோழைத்தனத்துக்கு திரை போட்டு மறைத்து, அதை தெய்வீகமானதாகவும், பரிசுத்தமான தாகவும் காட்டிக் கொள்வதற்காக, 'இரக்கம்' என்று அதை விளம்பரப்படுத்த முயல்கிறான். இவ்விதம் அவன் வேண்டு மென்றே போரின் நோக்கத்திற்குத் தவறான பொருள் கற்பித்து, தனது சமாதானக் கொள்கையை நியாயமானதாக்க வேண்டும். என்பதற்காக உண்மையில் அறப் போரான இதை மிகக் கீழ்த்தர நோக்கமுள்ளதாகத் திரித்துக் கூறுகிறான். இந்தக் கருத்து அவனது உண்மையான வலிமையிலிருந்து வெளிப்படாமல், நோயுற்ற மனத்திலிருந்து கசிந்து வருகிறது என்பது தெளிவு.

யதிமா மப்ரதீகாரம்
அசஸ்த்ரம் சஸ்த்ர பாணய:
தார்தராஷ்ட்ரா ரணே ஹன்யு:
தன்மே க்ஷேமதரம் பவேத். **1:46**

திருதராஷ்டிரனுடைய மக்கள் ஆயுதங்களை ஏந்தி, ஆயுதமின்றியும், எதிர்க்காமலும் நிற்கும் என்னைக் கொல்வார்களானால் அதுவே எனக்கு நல்லது.

இவ்வளவு நேரம் நொண்டிச் சாக்குகளை எல்லாம் சொல்லித் தீர்த்த பிறகு அர்ஜுனன் தனது முடிவான கருத்தை இங்கு வெளியிடுகிறான். வேட்டையாடப்படும் ஒரு மானைப் போலத் தனது ராஜ தேகத்தைப் பல அம்புகள் தைக்கக் கௌரவர்கள் வீழ்த்தும்போது எந்த ஆயுதமும் இன்றி எதிர்ப்பின்றி இறப்பதே மேலானது என்று கூறுகிறான்.

இங்கே அர்ஜுனன் பயன்படுத்தும் சொல்லைக் குறிப்பாக நாம் கவனிக்க வேண்டும். அவனது கருத்திற்கு ஏற்றவாறு இச்சொல் தானே இயல்பாக அமைகிறது. 'க்ஷேமம்' என்பது தேக நல, பொருள் துறைகளில் வெற்றியைக் குறிப்பதாகும். 'மோக்ஷம்' என்பது ஆன்மிக நிலையில் தன்னைத் தானே வெற்றி கொள்வது— அந்தப் போரை நடத்துவது, நாட்டின் ஆன்மிகக் கலாச்சாரத்திற்கு மாறானதென்று வாதித்து வந்த அர்ஜுனன், தன் பேச்சை முடிக்கும்போது, 'இப்போரைக் கைவிடுவது க்ஷேமமாகும்' என்று சொல்லிவிடுகிறான். போர் செய்யாமலிருந்தால் தனது உடல் ஆபத்திலிருந்து தப்பும் என்று கூறுவதைப் போல் வார்த்தைகள் அமைந்து விடுகின்றன.

சுருக்கமாகச் சொன்னால், செயலின் பலனைப் (போரில் வெற்றியை) பற்றிய ஆவலே அர்ஜுனனின் மன நிலையைக் குலைத்து, அவனை மனநோய் பிடித்த ஒருவனுடைய நிலைக்குக் கொண்டு செல்கிறது.

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்த்வார்ஜுன: ஸங்க்யே ரதோபஸ்த்த உபாவிசத்
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோக ஸம்விக்னமானஸ:
**1:47**

சஞ்சயன் கூறுகிறான்:

போர்க்களத்தின் நடுவே இவ்வாறு பேசியபின், துன்பத்தால் பாதிக்கப்பட்ட மனத்தோடு, தன் வில்லையும் அம்பையும் கீழே போட்டுவிட்டு, தேரில் அர்ஜுனன் அப்படியே உட்கார்ந்து விட்டான்.

போர்க்கள நிலவரம் பற்றிய நேர்முக வர்ணனை தரும் சஞ்சயனின் வார்த்தைகளுடன் இந்த அத்தியாயம் முடிவடைகிறது.

மனச்சோர்வு மிக்க வாதங்களெல்லாம் ஆளுமையை உயர்த்திக் கொள்வதற்கும், இலட்சிய மட்டத்திற்கு நம்மை இட்டுச் செல்லும் முயற்சிக்கும் நமக்கு உதவுகிறது. அதை விளக்கும் விஞ்ஞானத்திற்குப் பெயர் யோக சாத்திரம். கீதை ஒரு யோக சாத்திரமென்று முடிவுரையில் கூறப்படுகிறது. எனவே சாதாரண மனிதனுக்குப் புலப்படாத மிக நுணுக்கமான உண்மையைத் தத்துவ ரீதியாக விளக்குவது மட்டுமல்ல. நம்மைப் போன்று குறைபாடுகள் நிறைந்த ஒவ்வொருவரும் மகோன்னத இறையனுபவ நிலையை அடையும் வழியையும் பகவானுடைய கீதம் காட்டுமென்று எதிர்பார்க்க வேண்டும்.

சாதாரண மக்களுக்கு, யோகம், தத்துவம் என்றால் அவ்வளவு கவர்ச்சியாக இருக்காது. அது விஞ்ஞான அடிப்படையிலிருப்பதுடன், புலனறிவுக்கு எட்டாத கருத்துக்களையும் கையாளுகிறது. கணக்கில் கரை கண்டவர்களைத் தவிர, மற்றவர்களுக்குக் கணக்கு கவர்ச்சியாகவா இருக்கிறது? தமக்கு அது வேண்டாமென்று நினைப்பவர்களைப் பற்றிக் கணக்குக் கவலைப் படுவதில்லை. ஆனால் மதம் அப்படியில்லை. எல்லோருக்கும் பயன் படவேண்டும் என்பது அதன் நோக்கம். எல்லா தீர்க்கதரிசிகளும், எல்லோருக்கும் பயனுள்ள முறையில் பணி புரியவேண்டுமென்று எல்லாத் தலைமுறைகளிலும் முயற்சித்து வந்திருக்கிறார்கள். எனவே கடினமான கருத்துக்களைச் சுலப மாக்குவதற்கும், அதை எல்லோரும் ஒப்புக்கொள்ளும் வகையில் ஒரு நூல் அளவில் அடக்கி விட வேண்டும் என்றும் பண்டைக் கால குரு தமது அக உணர்வு அனுபவங்களைப் புற நிகழ்ச்சித் தோற்றமளித்து கவர்ச்சியூட்ட வேண்டியதாயிற்று. நமது புராதன நூல்களில் குருவை விவரித்திருப்பது அம்முயற்சியில் ஒரு பகுதி. அவர் நம்முடன் நெருங்கிப் பழகியவரைப் போல் ஆகி விட்டால், அவர் கூறும் சொற்களும் கூட நமக்குப் பழக்க மானவை போன்ற உணர்ச்சி தோன்றும்.

ஒப்புயர்விலாப் பேருண்மை பொதிந்த, நுணுக்கமான கருத்துக்களை நமது மாமுனிவர்கள் உருவாக்கினார்கள். சுலபமாக விழுங்கி ஜீரணிப்பதற்கேற்ற முறையில் இப்போது டாக்டர்கள் ‘குழாய் மாத்திரை’ கொடுக்கிறார்கள் அல்லவா? அவ்வாறே நமது பழம்பெரும் முனிவர்கள் தர்மம் என்ற குழாய் மாத்திரைகளைத் தயாரித்து, அவற்றில் தம் கருத்துக்களைப் புகுத்திக் கொடுத்தனர். உபநிடதங்கள் குருவையும் மாணவரையும் முழுமையாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. ஆனால் அவை அவசரமாகப் போட்ட கோலங்களைப் போல் அமைந்திருக்கின்றன. கீதை

அப்படி இல்லை. இது நமது நாட்டுப் புனைமெய்க் கோவையின் வரலாற்றில் பொதிந்த தத்துவப் பேருரையாக இருப்பதால், இச் சித்திரம் உயிர்த்துடிப்புடன் பரபரப்பூட்டுவதாக இருக்கிறது. புராதன உண்மைகளே மீண்டும் அதில் வலியுறுத்தப் படுகின்றன.

உபநிடத உண்மைகளை இதில் மீண்டும் எடுத்துரைப்பவர் கிருஷ்ண பகவான்: தமது நீண்டகால நண்பனுகிய அர்ஜுனனுக்குப் போர்க் களத்தில் இதை உபதேசிக்கின்றார். அர்ஜுனனே முற்றிலும் மனமுடைந்த நிலையில் இருக்கிறான். உணர்வு வேகத்தில் பண்டைய முனிவர்கள் பேசியபோது சாதாரண மக்களாகிய நம்முடைய குறைபாடுகளையும், பல வீனங்களையும் தெரிந்துகொண்டு பேசியிருக்க முடியாது. கீதை இரு நண்பர்களிடையே நடக்கும் விவாதமாக அமைந்திருப்ப தால் நண்பனுக்கு அனுதாபத்துடன் பிரச்சினைகளை விளக்குவ தாகவும், சிறப்பான வழி காட்டுவதாகவும் இருக்குமென்றும் நாம் எதிர் பார்க்கலாம். கீதையின் இந்த உயர்வு சங்கல்ப வாக்கியத்திலேயே தெரிகிறது. பகவானுக்கும் ஒரு மனிதனுக்கும் நடக்கும் பேச்சு இது என்று சங்கல்பம் கூறுகிறது.

முதலாவது அத்தியாயத்திற்கு அர்ஜுனனின் 'துயர யோகம்' என்று முரணான ஒரு தலைப்புக் கொடுக்கப்பட்டிருக் கிறது. மனக்கலக்கம் அல்லது துயரம் ஒரு யோகமானல் நாம் எல்லோருமே யோகிகள் என்பதில் சந்தேகமில்லை. இந்த அத்தியாத்திற்கு விளக்கம் கொடுக்கும்போது, 'கீதை—விதைகளை விதைப்பதற்குப் பண்பட்ட நிலமாக அர்ஜுனனின் சுக்கலாய்ச் சிதறிய உள்ளம் இருக்கிற'தென்று கூறினேன். தனி மனிதனுக இருந்தாலும் சரி, சமுதாயமாக இருந்தாலும் சரி, அர்ஜுனனுக்கு வந்ததைப்போன்ற திகைப்பையும் துயரத்தையும் உள்ளத்தில் அனுபவிக்கும்போதுதான், மதம், தத்துவம் ஆகிய வற்றின் அருமை தெரிகிறது.

இந்த நிலை இன்றைக்கு உலகத்தில் ஏற்பட்டிருக்கிறது. பொருளாதாரக் காரணங்களுக்காக நடக்கும் பூசல்களும், தொழிற் பெருக்கத்தினல் வரும் தொந்தரவுகளும் உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் நிலவி வருகின்றன. வாழ்க்கைப் போரில் நிமிர்ந்து நின்று சமாளிக்கும் திறமை தனக்கு இல்லை என்பதை இன்றைய உலகம் தெளிவாகக் காட்டுகிறது. இந்த நிலையில் தான் கீதையின் அறிவுரை நமக்கு அமுதமாக உதவ முன் வரு கிறது. புனித நூல்கள் நம்மிடம் எத்தனையோ இருக்கின்றன என்று பெருமை பேசிப் பயனில்லை. உயர்ந்த பொருட்கள் எல்லாம் இருந்தும், வாழ்க்கை நிறைவு பெறுதது போன்ற ஒரு உணர்ச்சியும், அதிருப்தியும் கூடஇருந்து வருகிறது. உலகத்தைப் பற்றிய உண்மையை அறிந்துகொள்ள வேண்டும்,

வாழ்க்கை சிறப்புற வேண்டும் என்ற அவா, பசியைப் போல் நம்மை அரித்துக்கொண்டிருக்கிறது. சமையலின் தரம் சாப்பிட்ட பிறகுதான் தெரியும். அவ்வாறு நம் புனித நூல்களின் உயர்வு, அவற்றை ஆராய்ந்தறிந்து நடைமுறையில் கடைப்பிடிக்கும் போதுதான் தெரியும். யோக முறையைக் கடைப்பிடிக்கத் தொடங்கும் வரையில், நமது உள்ளத்தை ஊளைச்சலுக்கு உள்ளாக்கிக்கொண்டிருக்கும் பசி தீராது. இதை விட உயர்ந்த வாழ்க்கையை எட்டுவது எப்படி என்ற துடிதுடிப்பும் நம்மிடம் இருந்துகொண்டே இருக்கும். உண்மையை நாடுவதற்கு இந்தத் துடிப்பும், தவிப்பும் கூடத் தவிர்க்க முடியாத தேவைகளாதலால், இதையும் ஒரு யோகம் என்று குறிப்பிடப்படுகிறது. கீதையைப் புரிந்து கொள்வதற்கும், வாழ்க்கையில் அதைக் கடைப்பிடிப்பதற்கும் 'அர்ஜுன நிலை' அவசியம். அதுவே சாதனையின் முதலாவது படி.

# சாங்கிய யோகம்

## 2

சாங்கிய யோகமென்ற இந்த அத்தியாயத்தில் கீதைத் தத்துவம் முழுவதுமே அடங்கியிருப்பதாகக் கருதலாம். எந்த நிலையில் அர்ச்சுனன் கிருஷ்ண செல்வாக்குக்கு உட்பட்டு அடிபணிகிறான் என்பது தொடக்கத்தில் 10 செய்யுட்களில் காணப்படுகிறது. செய்யுள் 11 முதல் 46 வரை சாங்கியத்தின் சாராம்சம் தெளிவாக விவரிக்கப்படுகிறது. 'சாங்கிய தத்துவம்' என்று இந்திய தத்துவ சாஸ்திரத்தில் ஒரு பிரிவு இருக்கிறது. அப் படியே அதை இங்கு திரும்பவும் சொல்லியிருப்பதாக யாரும் நினைத்துவிடக் கூடாது. 'ஒரு தத்துவத்திலுள்ள தர்க்க பூர்வ மான சிந்தனை' என்ற பொருளில் தான் சாங்கியமென்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. கீதை முழுவதுமே விரவி இருக்கும் 'செயல் யோகம்' 47 முதல் 60 வரை தெளி வாகவும் விரைவாகவும் சொல்லப்பட்டு இருக்கிறது. பிறகு 61 முதல் 70 வரை 'அன்புப் பாதை'— பக்தி யோகம்— சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. கடைசி இரண்டு செய்யுட்களும் துறவு மார்க்கம் பற்றிச் சுருக்கிக் கூறுவதுடன் அத்தியாயம் முடிவடை கிறது.

மனிதன் பரிபூரண நிலையை எய்துவதற்கு வேதங்கள் கூறும் ஞான, பக்தி, தர்ம மார்க்கங்கள் கீதையிலும் இருப்பதைக் காண்கிறோம். கர்ம காண்டத்தில் கூறியுள்ள சடங்குகளைச் சரி வரச் செய்தும், உபாசன காண்டத்தில் வகுத்துள்ள வாழ்வு முறையில் குறிப்பிட்ட காலம் வாழ்ந்தும், ஒருவர் தம்மை முற்றிலும் தூய்மைப் படுத்திக்கொண்ட பிறகு உபநிடதங்கள் சொல்லும் ஆன்மிக உணர்வை கீதை மூலமாகவும் பெறலாமென் பதில் ஐயமில்லை.

மேலே கூறியுள்ள மூன்று மார்க்கங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தாதவை என்று மக்கள் அக்காலத்தில் நினைத்தனர். அதனால் பல்வேறு பிரிவினைகள் ஏற்பட்டு, அவர்களிடையில் பூசல்கள் உண்டாகத் தொடங்கின. புராணகால இந்து மதம் இவ்வாறு குழப்பத்திலிருந்ததைக் கண்ட வியாச மா முனிவர் இம் மூன்றும் பொருந்தா மார்க்கங்களல்ல என்று வேதப் புதல்வர்களாகிய ஆரிய மக்களுக்கு சௌஜன்யத்துடன் ஒன்றி வாழும் முறையை விளக்கிக் காட்டுகிறார்.

ஸஞ்சய உவாச—

தம் ததா க்ருபயா விஷ்ட— மஸ்ருபூர்ண குலேக்ஷணம்
விஷீதந்த மிதம் வாக்ய—முவாச மதுஸூதன:

2:1

சஞ்சயர் கூறினர்:

இவ்வாறு இரக்கம் மேலிட்டு, மனமுடைந்து கண்கலங்கி நின்ற அவனிடம் மதுசூதனர் பின்வருமாறு கூறினர்.

ஆணித்தரமான சில சொற்களில் அர்ச்சுனனின் மனச்சோர் வையும் துயரநிலையையும் படம் பிடித்துக்காட்டும் சஞ்சயரின் அறிவிப்புடன் இரண்டாவது அத்தியாயம் தொடங்குகிறது. இரக்கத்தினாலும், துக்கத்தினாலும் அவனுடைய மனம் தத்தளித்துக்கொண்டிருக்கிறது. சூழ்நிலையை சமாளித்து வெற்றி கொள்ளும் வீரனாக இல்லாமல், அர்ச்சுனன் அதற்கு இரையாகிவிட்டான் என்பதை சஞ்சயன் வார்த்தைகள் தெளி வாக்குகின்றன. சூழ்நிலை நம்மை ஆட்கொள்ளும்படி விட்டு விட்டால் வாழ்க்கையில் படுதோல்வியை ஆசி கூறி அழைத்த மாதிரி ஆகிவிடும். சந்தர்ப்ப சக்திகளின் ஆதிக்கத்தை மேலோங்க விட்டுவிடும் கையாலாகாதவன், அச்சக்திகளுக்கு இரையாகி விடுகிறான். மனநோய் பிடித்தவனைப் போன்ற குழப்ப நிலையிலுள்ள அர்ச்சுனன் இப்போது சந்தர்ப்ப சூழ்நிலைக்கு அடிமையாகி இருக்கிறான்.

சஞ்சயருடைய மதிப்பீடு அர்ச்சுனனுடைய மனநிலையை

விவரிப்பதுடன் நிற்கவில்லை. அவனுடைய அக இயல்பே உடைந்து அம் மகாவீரனின் தன்மைக்கு ஆபத்து வந்துவிடுமோ என்றும் சூசகமாகத் தெரிவிக்கிறது. விற்கலையில் நிகரற்ற அர்ச்சுனன், ஏது மறியாப் பெண்ணைப் போல் கண்கலங்கி நிற்பது அவனுடைய மனம் மிக மோசமான நிலையிலிருப்பதைத் தெளி வாக்குகிறது.

தவருன ஒன்றுக்கு இரக்கம் காட்டிக் கண் கலங்கி நிற்பவனுடன் மதுசூதனன், (மது என்ற பெயருடைய் அரக்கனைக் கொன்றவர்) பேசுகிருர். கண்கலங்கி, சிந்தாத் கண்ணீருடன் அழுது நிற்றல் ஹிஸ்டீரியா என்ற மனநோயின் உச்சக்கட்ட அறிகுறியாகுமென்று தற்கால உளவியல் நூலாசிரி யர்கள் ஆராய்ந்து எழுதியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீபகவானுவாச—

குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்த்திதம்
அனுர்யஜுஷ்ட—மஸ்வர்க்ய— மகீர்த்திகர— மர்ஜுன்

2:2

பகவான் கூறினுர்:

ஆரியனுக்குத் தகுதியற்ற, விண்ணுலகுக்கு—சுவர்க்கத்திற்கு—வழிகாட்டாத புகழ்மங்கிய நிலைக்கு ஆளாக்கும் இந்த ஆபத்தான மனச் சோர்வு, உனக்கு எங்கிருந்து வந்தது, அர்ச்சுனு?

ஆரியனென்று சொல்லிக்கொள்ளும் ஒரு மன்னன் போர் களத்தில் இவ்வாறு திகைத்து நிற்பது, இந்துக்கள் கொண்டாடும் ஒப்பற்ற கிருஷ்ணருக்கு வியப்பளிக்கிறது. எந்த நிலையிலும் தடு மாருது, ஊக்கத்துடன் செயல்பட்டு அவற்றைத் தனக்குச் சாதக மாகவும் மாற்றிக்கொள்வது ஆரியனின் மனப்பாங்கு. வாழ்க்கையைச் சரியானபடி அணுகினுல் மிக மோசமான நிலையைக்கூட இன்பப் புன்னகை தவழும் வெற்றியாக மாற்றி விட முடியும். கரடு முரடான வாழ்க்கைப் பாதையில் எவ்வளவு திறனுடன் நாம் நமது வாழ்க்கைத் தேரைச் செலுத்திச் செல்லு கிருேம் என்பதைப் பொறுத்திருக்கிறது அது. எனவே ஆரிய னென்ற பெயருக்கு பொருந்தாத வகையில் அர்ச்சுனன் நடந்து கொள்வதாக கிருஷ்ண பகவான் குறிப்பிடுகிருர். நேர்மை, கண்ணியம், தைரியம் முதலிய உயர்ந்த பண்புகளைச் சிந்தனையிலும், நடைமுறையிலும் கடைப்பிடிப்பதில் ஆரியர்கள் தலைசிறந்தவர்கள்.

நண்பனின் நடவடிக்கை அவனுடைய தெய்வீக சாரதிக்கு ஆச்சரியமளிக்கிறது. பல ஆண்டுகளாக ஒருவரையொருவர்,

நன்கறிந்தவர்கள். இன்ப துன்பங்களைப் பகிர்ந்துகொண்டவர்கள். சிறந்த அறிவாளியான அர்ச்சுனனுடைய சுபாவத்திற்கு மனச் சோர்வு முற்றிலும் மாறுபட்டது. இது கண்ணனுக்குத் தெரியும், அதனால்தான் 'இந்த மனச் சோர்வு உனக்கு எங்கிருந்து வந்தது...' என்று வியப்புடன் வினவுகிறார்.

நியாயத்திற்காகவும், அற நெறியை நிலைநாட்டவும் போரிட்டு உயிரிழப்பது அரச குடும்பத்தில் பிறந்தவர்களுடைய கடமை என்றும், அப்படிப்பட்ட உயர்ந்த லட்சியங்களுக்காகப் போர்க்களத்தில் உயிரைத் தியாகம் செய்பவர்கள் வீர சுவர்க்கமடைந்து இன்புறுகிறார்கள் என்றும் இந்துக்கள் கருதுகிறார்கள்.

க்லைப்யம் மாஸ்மகம: பார்த்த
நைதத் த்வய்யுப பத்யதே
க்ஷுத்ரம் ஹ்ருதய தௌர்பல்யந்
த்யக்த்வோத்திஷ்ட பரந்தப 2:3

இயலாமைக்கு இடமளிக்காதே, பார்த்தா! உனக்கு அது தகாது. கீழ்த்தரமான இப் பேடித்தனத்தை உதறித்தள்ளு. எழுந்து நில், பரந்தபா. (எதிரிகளைச் சுட்டெரிப்பவனே)!

ஆண்மையின் துடிப்போ, துணிச்சலோ அல்லது பெண்மையின் மென்மையோ, தயக்கமோ— இந்த இரண்டுமே இல்லாத மனப்பான்மைதான் 'க்லைப்யம்'. இப்போதுகூட எதுவும் கையாலாகாத ஒருவனைப் பார்த்து 'அவன் என்ன ஆணா, பெண்ணா,' என்று நண்பர்கள் பரிகசிக்கிறார்கள். அதாவது அவனுடைய நடத்தையிலிருந்து இவ்விரு தன்மைகளில் எது மேலோங்கியிருக்கிறதென்று சொல்ல முடியவில்லை என்பது அவர்களுடைய கருத்து. அர்ச்சுனனிடம் இப்போது நேர்மாறான இரு தன்மைகள் காணப்படுகின்றன— ஆண் போன்ற பெண்ணாகவும், பெண் போன்ற ஆண் மகனாகவும் நடந்து கொள்ளுகிறான். புராதன மன்னர்களிடம் பணிபுரிந்த அலிகளும் இப்படித்தான்— ஆண் தோற்றம், பெண் உடை; பேச்சில் ஆண்; உணர்ச்சியில் பெண், உறுதியான உடல்; உறுதியற்ற உள்ளம்!

இதுவரை கிருஷ்ணர் மௌனமாகவே இருந்தார். அந்த மௌனத்திற்கும் ஆழமான பொருள் இருக்கிறது. இரக்க வெள்ளத்தில் மூழ்கிய அர்ச்சுனன் போர்புரியப் போவதில்லை என்ற முடிவுக்கு வந்து, அதற்கு ஆதரவான காரணங்களை எல்லாம் திரட்டிக்கொண்டிருந்தான். அவன் கூறுவதை அப்போதே மறுத்துப் பேசுவதால் எவ்விதப் பயனுமில்லை என்று சிறந்த ராஜதந்திரியாகிய கிருஷ்ணருக்குத் தெரியும். மறுத்தாலும்கூட, தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்றுதான் ஆவேசத்துடன் சாதிப்பான். ஆகையால் பகவான் எதையும் மறுத்துப் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தார். ஆனால்

அர்ச்சுனன் கண்களில் ததும்பி நின்ற நீர், அவனுடைய உள்ளம் குழப்பத்தின் உச்சியை எட்டி விட்டதைக்காட்டிற்று.

மனோ பலத்தினால் எதையும் சாதித்துவிடலாம் என்றும், நாமெல்லாம் மனமுதிர்ச்சி பெற்றவர்கள் என்றும் பேசிப்பேசிக் காலம் கழித்துக்கொண்டிருக்கும் வரையில், பகவான் வாய்மூடி, செவிடராகி வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறார். நமது மனோ எல்லைகளைத் தாண்டிச் சென்றுவொழிய பேரொளிபெற முடியாதென்று கண்டு, நொந்துபோய்க் கடைசியில் உணர்ச்சி ஜீவிகளாய், கண்ணீரும் கம்பலையுமாக நாம் நிற்கும்போது கருணையே உருவான பகவான் நாம் அழைக்காமலே ஓடோடி வந்து உள்ளிருள் போக்கி, மெய்யொளி அளித்து அருள்கிறார். பக்தி மரபில் வரும் இவ்வுண்மையை உலகிலுள்ள எல்லோரும் நம்புகிறார்கள்; ஏற்றுக்கொள்ளுகிறார்கள். புத்தியில் லயித்து உட்பொருளை நாடும் ஆன்மா தன்னியல்பைக்கண்டு கொள்ளுகிறது. ஆனால் தானும் மனமும் ஒன்று என்று கருதி ஆன்மா தடுமாறும் போது, அதற்கு வழி காட்டி உதவ இறைவன் அருள் தேவையாக இருக்கிறது.

கடவுளின் கருணை, மழைத் தூற்றலைப் போல லேசாக, சுகமாக பக்தர் மீது பொழிவதில்லை. பெரும் பனிமலையே சருக்கி, உருண்டோடி வந்து விழுவதுபோல் அவர்களுக்குத் தோன்றுகிறது. இதயத்தை மாற்றி, அவர்களிடமுள்ள எதிர் மறைகளைச் சுட்டெரித்த பிறகே, பரமனின் பேரொளி ஜடப் பொருள்மீது விழுந்து படர இயலும். உலகம் முழுவதிலும், உண்மையான இறை நாட்டம் கொண்ட யாவரும் இதை அனுபவித்து உணர்ந்திருக்கின்றனர். இவ்வுண்மையை ஒட்டி, கீதையிலும் பகவான் மௌனமாகத் தேரோட்டியின் இடத்தில் அமர்ந்திருக்கிறார். அர்ச்சுனன் கூறியதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்து விட்டு பிறகு தொடங்குகிறார். அவருடைய வார்த்தைகள் மின்னலைப் போல் அர்ச்சுனனைத் தாக்குகின்றன. அவனுடைய தவறான மனப்போக்கை வெட்கத்தீயில் போட்டுச் சாம்பலாக்கும் வண்ணம் அமைந்திருக்கிறது கண்ணன் பேச்சு.

அர்ச்சுனனுடைய சோர்வுள்ளத்தை மிருதுவான வார்த்தைகளால் திருத்தி, சரி வழிப்படுத்தி, விறு விறுப்புள்ளதாகச் செய்ய முடியாது. எனவே தீட்டிய ஈட்டியைப் போன்ற வார்த்தைப் பிரயோகத்தினால் குத்திக்காட்டி, பரிகாச வார்த்தைகளால் விளாசுகிறார். இவ்வாறு 'சொல்—மருத்துவம்' செய்த பிறகு சற்றுத் தட்டிக்கொடுத்து, 'எழுந்திரு, வேலையைப் பார்' என்று கூறுகிறார்:

அர்ஜுன உவாச:

கதம் பீஷ்ம—மஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுசூதன
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹா—வரிஸூதன
2:4

மதுசூதனு, பீஷ்மரும், துரோணரும் என் வணக்கத்திற்கு உரியவர்கள், எதிரிகளை அழித்தொழிப்பவனே, அவர்கள் மீது நான் எப்படிப் போர்க் கணை தொடுப்பேன்?

அர்ச்சுனனிடமுள்ள கோழைத்தனம் இப்போது பெரும் காரணமொன்றைத் தேடிப் பிடிக்கிறது. சரியா, தவரு என்று சிந்தித்து முடிவு செய்ய முடியாதவர்களுக்கு அவன் கூறுவது நியாயமாகத் தோன்றக்கூடும். எதையும் சரியானபடி மதிப்பிடும் சக்தியுள்ள, தடுமாற்றமில்லா ஒருவருக்கு அதில் பிரசினையே இல்லை. அது வெறும் போலிக் காரணம் என்று தெரியவரும். தொடங்கப் போகும் போர், தனி நபர் தகராறுகளிலிருந்து ஏற்பட்டது அல்ல. பாண்டவப்படைகளென்ற மொத்தத்திலிருந்து பிரித்து, அர்ச்சுனனுக்கு என்று தனியான ஆளுமை ஏதுவுமில்லை. அதே மாதிரி துரோணர், பீஷ்மர் என்ற இருவரும் தனிச் சக்திகள் என்று கருதுவது தவறு. அவ்விருவரும் கௌரவப்படைகளுடன் இரண்டற கலந்துவிட்டவர்கள். போரில் இரு தரப்பினரும் திட்டவட்டமான இரு மாறுபட்ட கொள்கைகளுக்காக எதிரெதிராய் அணி வகுத்து நிற்கிருர்கள். அதர்மக் கொள்கைகளுக்காக கௌரவரும், இந்து சாஸ்திரங்கள் வரையறுத்துக் கூறும் தர்மக் கொள்கைகளுக்காக பாண்டவரும் போரிட முன் வந்திருக்கிருர்கள்.

இது மகத்தான இலட்சியம். இரு படைகளும் அந்தந்த மக்களின் உள்ளங்களில் பிரதிபலிக்கும் கொள்கைகளுக்காக இரு கூறுகளாகப் பிரித்து நிற்கும்போது, கௌரவத்தையோ, அகௌரவத்தையோ ஏற்கும் தனி உரிமை அர்ச்சுனனுக்கு இல்லை. தவருன பக்கத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருப்பவர்களுக்கு மரியாதையோ, அவமரியாதையோ செய்வதால் ஏற்படும் பொறுப்பும் அவனுக்குக் கிடையாது. நிலைமையை இவ்வாறு முழுமையாகப் பார்க்காமல், தானே எல்லாவற்றையும் செய்வதாக அவனை ஒரு தனிப்பட்ட அகந்தை ஆட்கொள்ளுகிறது. அகந்தைக் கண்ணுடி மூலம் அவன் எல்லாவற்றையும் பார்க்கிருன். அதனுல், தான் துரோணரின் சீடன், பீஷ்மரின் பேரன் என்பவை மட்டுமே அவனுக்குத் தெரிகின்றன. அர்ச்சுனன் எதிர்ப்புறத்திலிருக்கிருன் என்பதை அதே ஆசானும், பாட்டனுரும் பார்க்கிருர்கள். ஆனுல் அவர்களை மனச்சாட்சி உறுத்தவில்லை. ஏனெனில் அகந்தை நோக்கு அவர்களுக்கு இல்லை. தங்களுடைய ஆதரவு பெற்றுவிட்ட பக்கத்தின்

இலட்சியங்களுடன் அவர்கள், தனித் தன்மையைக் கைவிட்டு, இரண்டறக் கலந்துவிட்டனர். சுருங்கக் கூறுமிடத்து, 'நான்' என்கிற அகந்தையுணர்வுதான் ஒழுக்க முறைக் குழப்பத்திற்கும், சிந்தனைத் தடுமாற்றத்திற்கும் காரணம்.

சிறப்பு மிக்க பெரியோர் பலருடன் இப்பகுதியைப் பல தடவைகளில் விவாதித்திருக்கிறேன். அர்ச்சுனன் கூறுவதில் நியாயமிருக்கிறது என்பது அவர்களது கருத்து. அதாவது, ஆலோசித்துத் தீர்க்க வேண்டிய நுணுக்கமான பிரசனை இதில் அடங்கியிருக்கிறது என்று நினைக்கிறார்கள். இந்துமதக் கொள்கைகளின் அடிப்படையில் இப்புதிருக்கு விடைகாண வேண்டுமென்றும், வருங்கால சந்ததிகளுக்கு அது பயனுள்ளதாக இருக்கும் என்றும் வியாசரே நினைத்திருப்பார் போலும்! நம்முள்ளிருக்கும் இந்தச் சிறு 'நான்' என்பதில் எவ்வளவுக்கெவ்வளவு ஒன்றி விடுகிறோமோ அந்த அளவுக்கு வாழ்க்கையில் நமது பிரசனைகளும், குழப்பங்களும் அதிகரித்துக்கொண்டு தான் வரும். ஒரு சேனை, லட்சியம், கொள்கை, நாடு அல்லது சகாப்தம் போன்ற பெரும் விஷயங்களுடன் ஒன்றுபட்டுக் கலந்து விட்டால், நீதி அல்லது கருத்துக் குழப்பங்கள் மறைந்துவிடும். முழு முதற்பொருள், எங்குமிருப்பது, எல்லா உயிரினங்களிலும், உருவங்களிலும் திகழ்வது, ஆன்மா ஒன்றுதான். தன்னிடத்திலுள்ள இதை உணர்ந்து அதனுடன் உண்மையில் ஒன்றிவிடும். ஒருவரே பூரண ஒழுக்க முறை பற்றி எடுத்துரைக்கவோ, அம்முறையை முழுமையாகப் பின்பற்றவோ முடியும். பகவானே இந்நூலின் மற்றொரு பகுதியில் இப்பேருண்மையை விளக்கி அர்ச்சுனனுடைய சீர்குலைந்த உள்ளத்திற்கு தத்துவ மருத்துவம் செய்கிறார்.

குரூ—னஹத்வா ஹி மஹானுபாவான்
ச்ரேயோபோக்தும் பைக்ஷ்ய—மபீஹ லோகே
ஹத்வார்த்த காமாம்ஸ்து குரூ—னிஹைவ
புஞ்சீய போகான் ருதிர—ப்ரதிக்தான் 2:5

இவ்வுலகில் மகானுபாவர்களாகிய ஆசான்களைக் கொள்வதைவிட, உண்மையில் பிச்சையெடுத்து உண்பது உயர்ந்தது. அவர்களை நான் கொன்றாலும் இவ்வுலகிலேயே பிறகு நான் அனுபவிக்கும் செல்வமும், இன்பங்களும்கூட இரத்தக் கறை படிந்தவையாகவே இருக்கும்.

தன்னையும், தன்னிலுள்ள பிரசினையையும் தவறாக மதிப்பிட்ட காரணமாக, நெறி முறைக்காகவும், ஒழுக்க உயர்வுக்காகவும் தன்னைத்தானே பலியிட்டுக்கொள்ளும் தியாகியைப்

போல் பெரும் வார்த்தைகளைக் கொட்டி வீண் வாதத்தை எழுப்புகிறான் அர்ச்சுனன்.

அவனுடைய குருமார்களை— துரோணர், பீஷ்மர் ஆகிய இருவரையும்— மகானுபாவர்கள் என்று இங்கு குறிப்பிடுகிறான். அவர்கள் அக்காலத்து இலட்சிய புருஷர்கள், நமது கலாச்சாரக் கோயிலின் கோபுர சிகரங்கள். பரந்த உள்ளம் படைத்தவர்கள். கொள்கைப் பிடிப்பில் தீரர்கள். சநாதன தர்மத்தை, (அப்பழுக் கற்று வாழுதல் பற்றிய இந்து விஞ்ஞான இயலை) பாது காக்க எத்தனையோ தியாகங்களைச் செய்திருக்கிறார்கள். அக் காலத்திலிருந்த நமது கலாச்சாரத்தின் உரைகல்லாக விளங்கிய அவ்வுன்னத மனிதர்களை, ஒருவருடைய அதிகார, பதவி ஆசை களுக்காக பலி கொடுத்துவிடக் கூடாது. அக்காலத்தில் மட்டு மின்றி, எக்காலத்திலும் அவர்களைப் போன்ற இலட்சிய மாந்தரை ஈவிரக்கமின்றி ஒழித்துக் கட்டுவதால் உலகத்திற்கே பெரு நஷ்டமேற்படுகிறது.

இவ்வாறு கலாசார நந்தவனத்தில் பூத்த அற்புத மலர்களை அழித்துவிட்டு அரியணை ஏறுவதைவிட, தானும் மற்றப் பாண்டவ சகோதரர்களும் பிச்சையெடுத்து வாழ்வதே மேல் என்று அர்ச்சுனன் கூறுகிறான். மூத்தோர், ஆசிரியர்கள் முதலியு எல்லோரும் பூண்டற்றுப் போகச் செய்த பிறகு, பாண்டவர் களுக்கு மீண்டும் நாடு கிடைப்பதாக வைத்துக்கொண்டாலும், அந்த வெற்றியினாலோ, செல்வத்தினாலோ இன்பம் அடைய முடியாது என்று அர்ச்சுனனின் ஆரிய உள்ளம் சுட்டிக் காட்டு கிறது. ஏனெனில் மாந்தருள் மாணிக்கங்களை அழித்து, அவர்களு டைய இரத்தக்கறை படிந்த சுகங்கள் இவை என்ற கசப்பு நினைவுகள் ஒவ்வொன்றிலும் மே[illegible]ங்கி நிற்கும்.

நிலைமையொன்றைச் சரியாக எடைபோட்டுத் தெரிந்து கொள்ளவில்லையானால், நமது உணர்ச்சிகள் அறிவுக்குத் திரை போட்டு விடுகின்றன. பிறகு அர்ச்சுனனைப் போல நாமும் வாழ்க் கையில் தடுமாற்றத்திற்கு உள்ளாக நேரிடுமென்று வியாசர் இங்கு நமக்கு அறிவுறுத்துவதாக தோன்றுகிறது.

நசை தத் வித்ம: கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதிவா நோ ஜயேயு:
யாநேவ ஹத்வா ந ஜி ஜீ விஷாமஸ்
தேவஸ்திதா ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா: 2:6

நாம் அவர்களை வெல்லுவது, அவர்கள் நம்மை வெல்லுவது— இவ்விரண்டில் எது உகந்ததென்று என்னால்

தெரிந்துகொள்ள முடியவில்லை. எந்த திருதராஷ்டிரருடைய புதல்வர்களைக் கொன்றுவிட்டு நாம் வாழ வேண்டுமென்று விரும்பியதில்லையோ, அவர்கள்கூட நம் எதிரிலிருக்கிறார்கள்.

இதற்கு முன்னுள்ள இரண்டு பாட்டுக்கள் அர்ச்சுனனுடைய புற மனத்திலிலுள்ள குழப்ப அலங்கோலத்தை விளக்கின. இப்போது அவனது அறிவையும் இந் நோய் பாதித்து, நிதான மிழக்குமாறு செய்யத் தொடங்கியிருக்கிறது என்பதை இந்தச் செய்யுள் காட்டுகிறது.

எதிரில் படைகளின் அணிவகுப்பைக் கண்டவுடன் அர்ச்சுனனுடைய புற மனத்தில் எழுந்த பிரசினைக்கு அக மனத்தின், (அறிவின்) உதவி தேவை. அவனுடைய மனமும் அறிவும் இணைந்து நிற்கவில்லை. பிரிந்து நின்று இயங்குகின்றன. எனவே அவன் எவ்வித முடிவுக்கும் வரமுடியாமல் தவிக்கிறான். தன்னைப் பற்றித் தானே செய்துகொண்டிருந்த மதிப்பீடு, போரினால் பலன் பெற வேண்டும் என்று அவனுக்கு இருந்த ஆவல்—இவ்விரண்டுமே அகந்தையிலிருந்து எழுந்தவை. அவை அவனுடைய மனம், அறிவு ஆகிய இரண்டிற்குமிடையில் ஒரு பெரிய அகலத்தை தோற்றுவிக்கின்றன. அவற்றின் காரணமாகத்தான் அர்ச்சுனனுக்கு இவ்வளவு குழப்பம்.

சாதாரணமாக வருவதைப் பெற்றுக்கொள்வதற்கும், அனுப்ப வேண்டியதை அனுப்புவதற்கும் அலுவலங்களில் இருக்கும் குமாஸ்தாக்களைப் போல மனம் இயங்குகிறது. புலன்கள் மூலம் வரும் செய்திகளை மனம் ஏற்றுக்கொண்டு அவற்றை ஒழுங்குபடுத்தி அறிவின் தீர்ப்புக்கு அனுப்புகிறது. கடந்த கால நிகழ்ச்சிக் குவியல்கள் நினைவுகளாக அறிவில் சேமித்து வைக்கப்பட்டிருப்பதால், அவற்றின் உதவிகொண்டு, இப்போது புலன்கள் அனுப்பியுள்ளவற்றைப் பற்றி அறிவு ஒரு முடிவுக்கு வருகிறது. அம் முடிவு செயலாக்கத்திற்காக மனத்திற்குத் திருப்பியனுப்பப் படுகிறது. மனம் உடனே சம்பந்தப்பட்ட அவயவங்களுக்கு உத்தரவிடுகிறது. நாம் விழித்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு கணமும் இத்தொடர் நிகழ்ச்சிகள் நடந்துகொண்டே இருக்கின்றன.

ஒருவருடைய மனமும், அறிவும் இசைந்து இயங்கவில்லை என்றால், அவருடைய ஆளுமையே சிதறி விடுகிறது. சிறப்பாக அவர் எவ்வித வேலையும் செய்ய முடிவதில்லை. வெற்றி வாய்ப்புகளை இழக்க நேரிடுகிறது. மீண்டும் அவர் சரியானபடி வாழ்வதற்கு வகை செய்ய வேண்டுமென்றால் அவருடைய அறிவும், மனமும் இசைந்து இயங்க வேண்டியதன் அவசியத்தை எடுத்துரைத்து புனரமைப்புச் செய்ய வேண்டும். பிறகு அவர் புது மனிதராகி, உலகில் திறனுடன் வாழும் வாய்ப்புப் பெறுகிறார்.

அர்ச்சுனனை இப்பரிதாப நிலைக்குக்கொண்டு வந்தது வெளியுலகமல்ல. அவனுடைய மனந்தான், பாவம், அவனை இந்த நிலைக்குக்கொண்டு வந்திருந்தது. போர் செய்து எதிரிகளை வெல்லுவதா அல்லது, வெட்கக் கேடான முறையில் பின்வாங்கி, அவர்களே வெற்றி பெறட்டும் என்று விட்டுவிடுவதா என்று அவனால் தீர்மானிக்க முடியவில்லை. அவனுடைய உளநோய் மனத்தைமட்டுமின்றி, அறிவையும் பாதிக்கும் அளவுக்குப் போய் விட்டதென்று வியாசர் இதன்மூலம் தெளிவாக்குகிறார்.

கார்ப்பண்ய— தோஷோப ஹத— ஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா:
யச் சரேயஸ்யாந் நிஸ்சிதம் ப்ருஹி தன்மே
சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம்
2:7

தாங்க முடியாத இரக்க வெள்ளத்தில் மூழ்கி என் இதயம் தத்தளிக்கிறது. என் கடமை என்னவென்று தெரியவில்லை; ஒரே குழப்பமாயிருக்கிறது. நான் வேண்டிக்கொள்ளுகிறேன்— எது எனக்கு நல்லது என்பதைத் திட்டவட்டமாகச் சொல்லு. நான் உனது சீடன். உன்னைத் தஞ்சமடைந்துள்ள எனக்கு நீதான் அறிவுரை கூற வேண்டும்.

இப்பிரச்னையில் எவ்வித முடிவுக்கும் தன்னால் வர முடியாது என்பதைத் தெரிந்தகொண்ட அருச்சுனன், கிருஷ்ணனிடம் முற்றிலும் சரணடைகிறான். உள்ளம் சிதறி, தான் குழப்பத்தி லிருப்பதை அவனே வெளிப்படையாக ஒப்புக்கொள்ளுகிறான். நோயின் காரணம்கூட அவனுக்குத் தெரிகிறது. ‘தாங்க முடியாத இரக்க வெள்ளத்தில் மூழ்கிக் கிடக்கிறேன்’ என்று அவனே கூறுகிறான். தவறான ஒன்றுக்கு தான் இரக்கம் காட்டுவதாக அவனுக்கு இன்னும் விளங்கவில்லை என்பது உண்மையே. அது எப்படியாயினும், அப்பெரும் குழப்பம் தனது உள்ளத்தைக் கசக்கிப் பிழிந்துகொண்டிருக்கிறதென்று நோயாளி உணருகிறான். தனது தருமம் என்ன, எது அதருமம் என்ற குழப்பங்கள், மேக மூட்டம்போல் கவிந்துகொண்டு, தனது அறிவை (சேதஸ்) மறைப்பதாகச் சொல்லுகிறான். போர் செய்வதா, வேண்டாமா என்பது உடனடியாகத் தீர்க்க வேண்டிய அவசரப் பிரச்னை. ஆனால் தன் உள்ளம் இருந்த பலவீன நிலையில் அதைத் தீர்க்க முடியாது என்று அவனுக்கே தெரிகிறது.

முதலாவது அத்தியாய முடிவுரையின் இறுதிப் பகுதியில் ‘தருமம்’ பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது. இயல்பின் நியதிக்குப் பெயர் தர்மம். தனது இயல்பை ஏதோ ஒன்று கைவிட்டு விடுகிறது என்று வைத்துக்கொள்வோம். பிறகு அது

அதுவாக இருக்காது. ஒரு பொருளுக்கு அது அந்தப் பொருளாக இருக்கும் தன்மை அளிக்கும் இயல்பு எதுவோ அது தான் தருமம். இந்து மதத்தில் மானவ தர்மம் பற்றி அழுத்தமாக எடுத்துரைக்கப் பட்டிருக்கிறது. அதாவது மனிதர், தமது அடிப் படை தெய்வீக இயல்புக்கு ஏற்றவாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது அதன் பொருள். ஆன்மாவின் உயர்வில் நம்மை நிலைநாட்டிக்கொள்வதற்கு ஏற்றவாறு நமது வாழ்க் கையின் எல்லா முயற்சிகளுமே அமைய வேண்டும். செய்வ தறியா மிருகங்களைப் போல வீணில் உழன்று கொண்டிருக்கக் கூடாது.

பகவானின் அறிவுரைகளைப் பின்பற்றவும், தனது தெய்வீக சாரதியின் பேரறிவில் முழு நம்பிக்கை வைக்கவும் தயாராக இருப்பதாக இங்கு அர்ச்சுனனுடைய வார்த்தைகள் காட்டு கின்றன. தனது முட்டாள்தனத்தினுல் ஆயிரம் தடவை சந்தேகங் கேட்டாலும், பரந்த உள்ளமும் பரிவும், அன்பும் காட்டி மீண்டும் மீண்டும் சீடனுகிய தனக்கு அவற்றை விளக்கியருள வேண்டு மென்று அவன் பகவானிடம் கோரிக்கை சமர்ப்பிப்பதாகப் பொருள் கொள்ளும் முறையிலும் இப் பாடல் அமைந்திருக் கிறது. கிருஷ்ணர் அறிவுரை கூறிக்கொண்டே வரும்போது நடு நடுவில் அர்ச்சுனன் சந்தேகங்களை எழுப்புவதைக் கீதையின் தொடக்கத்திலிருந்து முடிவுவரை காண்கிறோம். எந்த இடத்திலும் ஒரு தடவைகூடச் சீடனிடம் அவர் பொறுமை யிழந்து அலுத்துக் கொள்ளவில்லை. மாறுக, ஒவ்வொரு கேள்வியும் அவருக்கு மேலும் உற்சாகமூட்டி, அதிக சுவார சியத்துடன் போர்க் களத்தில் உரை நிகழ்த்தச் செய்கிறது.

நஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்
யச்சோக—முச்சோஷண மிந்த்ரியாணும்
அவாப்ய பூமா வஸபத்னம்ருத்தம்
ராஜ்யம் ஸுராணு—மபி—சாதிபத்யம்: 2:8

இவ்வுலகத்தில் எல்லையில்லாச் செல்வமும், இணையற்ற ஆட்சிப் பொறுப்பும் பெறுவதானுலும் அல்லது தேவர்களுக்கே அதிபதியாகும் பெரும் பேறு பெற்றுலும்கூட, அது இப்போது என் புலன்களை எரித்துக்கொண்டிருக்கும் துக்கத்தைப் போக்கு மென்று தோன்றவில்லை.

அர்ச்சுனனுடைய அவசரத் தேவை இங்கு காட்டப்படு கிறது. தன் முன்னுள்ள பிரசினைக்கு உடனே கிருஷ்ண பர மாத்மா ஒரு வழிகாட்ட வேண்டும். இல்லையேல் உள்ளிருந்து அரித்துக்கொண்டிருக்கும் துன்பத்தினுல் அவன் நீடித்துத் துடித்துக்கொண்டே இருக்க வேண்டியதாகும். அத்துன்பம் எங்

கிருந்து வருகிறதென்று நோயாளியினுல் விளக்க முடியவில்லை; சுமாராகக்கூடச் சொல்ல முடியவில்லை.

அர்ச்சுனனின் மனத்துயர் அவனுடைய புலனுறுப்புக்களை 'எரிக்கிறது'. துயரத்தின் பெரும் சுமையினுல் அவன் எதையும் சரியாகப் பார்க்கவோ, கேட்கவோகூட முடியவில்லை. உள்ளிருக்கும் துயரக் கனல் அவனுடைய இந்திரியங்களையும் (புலன் உறுப்புக்களையும்) சுட்டெரிக்கும் அளவுக்கு இருக்கிறது.

சிந்திக்கும் ஆற்றல் பெற்ற யாருக்குமே, மனத்தில் ஒரு பிரச்னை எழுந்தால் அது தீரும் வரையில் அறிவு அவனை நிம்மதியாக இருக்கவிடாது, குறுகுறுத்துக்கொண்டே இருக்கும். இது இயற்கை. பிரச்னை தீர்ந்த பிறகுதான் மனம் அமைதியடையும். அர்ச்சுனன் தன்னுடைய சொந்த, அறிவாற்றல் மூலம் நிம்மதி தேடிக்கொள்ள இயன்ற அளவு முயற்சித்துப் பார்த்தான். உல்கத்தில் உள்ள ஏதோ ஒரு பொருளை அடைய நினைத்து, அது கிடைக்காமல் போனதால் அவனுக்கு ஏற்பட்ட துயரம் அல்ல இது. அவனுடைய வார்த்தைகளே இதைத் தெளிவாக்குகின்றன. உலகம் முழுவதுமே அவனுடைய ஆதிக்கத்தில் வருவதானுலும்—ஏன், தேவலோக ஆட்சியே பெறுவதானுலும்கூட—அது அவனுடைய துயர் துடைக்காது என்ற முடிவுக்கு வந்திருக்கிருன்.

பிரச்னைக்கு விடை காண்பது மிக அவசரத் தேவை என்பதும்கூட அவனுடைய வார்த்தைகளில் வெளியாகிறது. மனிதனின் குறைபாடுகளைக் கடந்து விடுதலை பெற— ஆன்மீக விடுதலை வேண்டுமென்ற— அடக்க முடியாத ஆவல் அவனுடைய படபடப்பில் பிரதிபலிப்பதாகக் கொள்ளலாம். அவன் முழுமை பெறுவதற்குத் தேவையாக இருப்பதெல்லாம் விவேகம். புலன்களின் அதிபதியாகிய ஹ்ருஷீகேசர் தமது திவ்ய கீதத்தின் மூலம் இவ்விவேகத்தை அவனுக்கு அளித்தருளுகிருர்.

ஸஞ்சய உவாச—

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேஸம் குடாகேச: பரந்தப:
ந யோத்ஸ்ய இதி கோவிந்த—முக்த்வா தூஷ்ணீம் பபூவஹ. 2:9

சஞ்சயர் வாக்கு:

ஹ்ருஷீகேசரிடம் இவ்வாறு கூறி, எதிரிகளை அழித்தொழிக்கும் குடாகேசன், 'நான் போர் புரியப் போவதில்லை' என்று கோவிந்தனுக்குச் சொல்லிவிட்டு மௌனமாளுன்.

இதுவும், இதற்கடுத்த பாட்டும் கீதை நிருபராகிய சஞ்சயரின் நேர்முக வர்ணனையாக அமைந்திருக்கின்றன. பகவானே

தனக்கு வழிகாட்ட வேண்டுமென்று அவரிடம் தஞ்சமடைந்த பிறகு, தூக்கத்தைக் கூடக் களைந்தெறிந்த, எதிரிகளை சாம் பலாக்கும் திறன்பெற்ற, மகா வீரனாகிய அர்ச்சுனன், தான் போர் புரியப் போவதில்லை என்று புலன்களுக்கு அதிபதியான கிருஷ்ணனிடம் சொல்லி மௌனமாக உட்கார்ந்துவிட்டான்.

குருக்ஷேத்ரப் போர்க் களத்திலிருந்து படைகளைக் கலைந்து போகுமாறு உத்தரவிடும் அதிகாரம் பாண்டவர்களுடைய பெரியப்பனாகிய இந்தக் குருட்டுக் கிழவனைத் தவிர, வேறு யாருக்கும் இல்லை. காலந் தாழ்ந்துவிட்ட இந்நிலையிலும் போரை நிறுத்தச் சொல்லும் அதிகாரமும், மதிப்பும் அவருக்குமட்டுமே உண்டு. சாதாரணமாகவே அர்ச்சுனனை எதிர்த்து வெற்றிபெற நினைப்பது அசட்டுத்தனம். மேலும் புலனதிபதியும், உலகத்தை வெற்றிகொண்டவருமான கிருஷ்ணரிடம் அவன் தஞ்சமு மடைந்துவிட்டதால், அவன் கௌரவ சேனைகளைத் தோற்கடிப் பதில் சந்தேகமில்லை. இதெல்லாம் தெரிந்துகொண்டு திருத ராஷ்டிரர் தகுந்த நடவடிக்கை எடுப்பார் என்று சஞ்சயர் எதிர் பார்த்தார். ஆனால் திருதராஷ்டிரர் பிறவிக் குருடர். பிள்ளை களிடமிருந்த எல்லையற்ற பாசத்தினால் நல்லவருடைய சொல் காதில் ஏறாத செவிடராகவும் ஆகியிருந்தார்.

தமுவாச ஹ்ருஷீகேஸ: ப்ரஹஸந்நிவ பாரத
ஸேனயோ—ருபயோர்—மத்யே விஷீதந்த—மிதம் வச:

2:10

கிருஷ்ணரின் முகத்தில் புன்னகை நிழலாடியதைப் போலிருந்தது. கலக்கம் மிகுந்து இரு படைகளுக்கும் நடுவி லிருந்த அருச்சுனனைப் பார்த்து அவர் இவ்வாறு பேசினார்.

நல்லவை, தீயவை என்ற இரு சக்திகளும் இரு படை களாகப் பிரிந்து, போரிட்டு மடிவதற்குத் தயாராக நிற்க, அவற்றிற்கு இடையில் நின்ற அர்ச்சுனன் (ஜீவன்) பிரபஞ்சாதி பதி (சூக்குமமான விவேகம்)யிடம் முற்றிலும் சரணடைகிறான். இரதத்தில் (உடலில்) பூட்டியிருந்த ஐந்து குதிரைகளும் (ஐம்புலன்கள்) அவருடைய கையில் அடங்கி நிற்கின்றன. குழப்பமும், திகைப்பும் நிறைந்த அகந்தை— அர்ச்சுனன் கிருஷ்ணரிடம் முற்றிலும் சரண் அடைந்தவுடன், அவர் புன்னகை மூலம் ஜீவனின் வெற்றியை உறுதிப் படுத்துவதுடன் ஆன்மிக விமோசனத்திற்கு வழிகாட்டும் கீதையையும் உபதேசிக் கிறார். சஞ்சயருடைய வார்த்தைகளுக்கு நாம் இவ்வாறு பொருள்கொள்ள வேண்டும். உபநிடதங்கள் ஆதாரமாக இருக் கின்றன.

சஞ்சயர் கூறுவதை உபநிடதப் பொருளில் ஏற்க இசைந்தால், அழியாப் பேருண்மையொன்றை நாம் அதில் காணலாம். எல்லாவற்றிலும் வெறுப்புத் தட்டிப் போன அகந்தை (அர்ச்சுனன்) உடலில் (இரதத்தில்) இடிந்துபோய் உட்கார்ந்து விடுகிறது. அகந்தை மைய நடவடிக்கைகளுக்கு உகந்த கருவிகளை (காண்டீபம்) கீழே போட்டு விடுகிறது. ஆனால் புலன் உறுப்புக்களை (வெண் குதிரைகளை) இழுத்துப்பிடித்த கடிவாளம் (மனம்) மூலமாக அடக்கி, கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரும்போது, தேரோட்டும் சாரதி (அப்பழுக்கற்ற அறிவு) அந்த அகந்தைக்கு ஒரு தெய்வீகப் பலத்தைக் கொடுக்கிறார். தர்ம வேகத்தினால் அதர்ம சக்திகளை முறியடித்து, இறுதி வெற்றிக்கு வழி காட்டுகிறார். அதர்ம சக்திகள் மிக வலுவுள்ளவையாகத் தோன்றலாம். அவற்றின்முன் தர்ம சக்திகள் வலிவற்றவையாகவும், எளியனவாகவும் தோன்றலாம். ஆனால் அகந்தையைப் பரம் பொருளிடம் ஒப்படைத்துவிட்ட கணமே தருமம் வெல்லும் என்பதில் ஐயமில்லை.

ஸ்ரீ பகவானுவாச—

அஸோச்யா—னன்வ ஸோசஸ்தவம்
ப்ரக்ஞா வாதாம்ஸ்ச பாஷஸே
கதாஸூ—நகதாஸூம்ச்ச
நானுசோசந்தி பண்டிதா: 2:11

பகவான் கூறினார்:

துக்கப்படத் தகாதவைகளுக்காக நீ துக்கப்படுகிறாய். ஆனால் எல்லாவற்றையும் கரை கண்டவனைப் போல் பேசுகிறாய். முற்றுமுணர்ந்தவர்கள், இறந்தவர்களைப் பற்றியோ, இருப்பவர்களுக்காகவோ துயரப்படுவதில்லை.

போர்க்கள நிலவரம் அர்ச்சுனனை நிலைகுலையச் செய்தது உண்மைதான். ஆனால் மனக் கலகத்தினால் அவன் அனுபவிக்கும் சித்திரவதை, அவனுள் ஆழப்புதைந்திருந்த ஒரு நோயின் அறிகுறி என்று கண்டு கொள்வது கஷ்டமல்ல. ஒரு நல்ல மருத்துவர் வெளி அறிகுறிகளைப் போக்க மருந்து கொடுப்பதில்லை. நோயின் அடிப்படைக் காரணத்தை அகற்றுவதன் மூலம் குணப்படுத்த முயற்சிப்பார். இங்கு கிருஷ்ணர் செய்வதும் அதுதான். அர்ஜுனனுடைய மருட்சி மயக்கத்தின் மூலகாரணத்தை அகற்ற முயற்சிக்கிறார்.

தான் அப்பழுக்கற்ற ஆன்மா என்பதை ஒருவன் கண்டு கொள்ளாத நிலையில், அகந்தை அவனுள் தலையெடுக்கிறது. மனிதனுடைய உண்மையான இயல்பை அது திரை போட்டு

மறைத்து விடுகிறது. அதுமட்டுமல்ல, தான் வேறென்று என்ற தவறான கருத்தையும் அவனிடம் தோற்றுவிக்கிறது. 'உடல்—மன—அறிவுத் தொகுப்பே நான்' என்ற அகந்தை—மையக் கருத்து இப்போது அர்ஜுனன் தடுமாறக் காரணமாக இருக்கிறது.

உறவினரிடம் பாசம், அதிலிருந்து மனதில் எழுந்த பரிவு ஆகிய இரண்டும் அவனுடைய அகந்தை மையத்திலிருந்து தோன்றியவை. அவை எதுவும் செய்ய இயலா பரிதாப நிலைக்கு அர்ஜுனனைக் கொண்டு வந்து விடுகின்றன. மருட்சி மயக்கத்திற்கு இரையானால் துயரமும், நிலைகுலைவும் ஏற்படுகின்றன. அகந்தைக்கு மேற்பட்ட ஒன்று தன்னிடம் இருப்பதை ஒருவன் உணர்ந்தவுடனே பொய்யுறவுப் பிணைப்புகள் அறுந்து, அவற்றால் ஏற்பட்ட துயரங்கள் மறைகின்றன.

மனிதனுள் இருக்கும் அழிவிலா ஆன்மா, தன்னை உடலாகக் கருதும்வரை, உலகத்தின் ஆயிரமாயிரம் பொய்யுறவுகளால் கட்டுண்டிருப்பதாகக் கருதுகிறது. அதே நிறை பொருள், மன வெளியில் உலவும்போது, உணர்ச்சியுலக இன்ப துன்பங்களை அனுபவிக்க நேரிடுகிறது. எங்கும் நிறைந்த அத்தெய்வீகச் சுடரொளி தன்னை அறிவுடன் தவறாக ஒன்றுபடுத்திக் கொள்ளும் நிலையில் அறிவிலிருந்து எழும் நம்பிக்கை, பேராசை, கோரிக்கை, கொள்கைகள் போன்றவற்றில் சிக்கித் தவிக்கிறது.

ஆன்மிக அகப்பொருள் இவ்வாறு அறிவிலோ, உடலிலோ, புலன்களிலோ பிரதிபலிக்கும்போது அகந்தையாகி, உணர்ச்சி, பொருள் கருத்துக்களாகிய உலகத்திற்கு இரையாகிறது. நிலையில்லாத இன்ப துன்பங்கள் எல்லாம் இந்த அகந்தையைச் சார்ந்தவை. மருட்சியினாலும், அதிலிருந்து வரும் தவறான எண்ணங்களினாலும் அர்ஜுனனுடைய நோயுற்ற அகந்தை இப்போது தத்தளிக்கிறது. பேருண்மையை உணராத நிலையில், வேறு ஒன்றை உண்மை என நினைக்கும் தவறு நேரிடுகிறது. மெய்யறிவுக் கடலாகிய கிருஷ்ணர் இதைத் தெரிந்துகொண்டு, அர்ஜுனனுடைய மருட்சியைப் போக்க, அழிவிலா உபநிடதங்களின் உட்பொருளைப் புகட்டுகிறார்.

மனநோய் மருத்துவத்தில் கீழை நாடுகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னிருந்தே உலகத்துக்கு வழி காட்டியாக இருந்திருக்கின்றன, உளவியல் முறைகளைக் கையாண்டு, மனதிலுள்ள பழைய மாசுகளைத் துடைத்து அகற்றி, அதில் நற்கருத்துக்களை பதியவைப்பது இன்றும் நடந்து வருகிறது. அர்ஜுனனுடைய உள்ளத்தைத் திருத்தி அமைக்கும் புதுக்கல்வித் திட்டமாக கீதை அமைந்திருக்கிறது. மரபு வழியை ஒட்டி, ஒப்பற்ற ஆசானாகிய கிருஷ்ணரின் விரிவுரை, அழிவிலா ஆன்மா பற்றி அர்ஜுனனுக் [illegible]நரடி விளக்கம் தருவதுடன் தொடங்குகிறது.

பீஷ்மர், துரோணர் ஆகிய இருவருடைய ஆன்மீக உயர்வு, அவர்களுடைய உள்ளப் பண்பாடு மூலம் வெளியாகிறது. அவர்களிடமிருந்து வீசும் தெய்வீக ஒளி அவர்கள் ஒப்பற்ற மகான்கள் என்பதைக் காட்டுகிறது. பண்பட்ட பீஷ்மரின் ஆன்மாவை ஆயுதங்கள் வெட்டிவிடும் என்றோ, மகத்தான ராணுவ மேதை துரோணர் இறந்துவிடுவார் என்றோ நினைப்பது வெறும் மருட்சி, அறியாதவர்கள் செய்யும் தவறு. அகந்தைக்கு மேற்பட்ட அகப் பொருள் நம்முள் இருக்கிறது என்பதை கிருஷ்ணர் இத் தொடக்க உரை மூலம் அர்ஜுனனுக்கு உணர்த்துகிறார்.

வாழ்க்கையை எந்த மட்டத்திலிருந்து நோக்குகிறோமோ, அதைப் பொறுத்து நமது கருத்துக்களும் அமைகின்றன. உலகம் பற்றிய தோற்ற மதிப்பீடு உடல் மட்டத்திலிருந்து எழுகிறது. அதையே மனத்தைக் கொண்டு மதிப்பிடும் போது, வாழ்க்கைப் பற்றிய உணர்ச்சிச் சித்திரம் தோன்றுகிறது. அறிவுமட்டத் திலிருந்து மதிப்பிடும்போது கருத்துலகு தென்படுகிறது. ஒரே பொருள், நமது நோக்கின் மட்டத்தைப் பொறுத்து, வெவ்வேறாகத் தெரிகிறது.

ஒரு பெண் உருவத்தை உடல் மட்டத்திலிருந்து பார்த்து அவள் எனது தாய் என்று நினைக்கிறேன். அதே புனித உருவம் உயிரணுக்களின் தொகுப்பு என்று என் அறிவு கூறுகிறது. ஒரு பொருள் குறைபாடுள்ளதாக இருந்தாலும், அதற்கு உணர்ச்சி முலாம் பூசிவிட்டால் பிறகு அதை வாங்கியது பற்றி நாம் வருத்தப்படுவதில்லை. அதிருப்தி அடைவதில்லை. அதே மாதிரி பார்வைக்கு வெறுப்பாகவும், மனதிற்கு வெட்கமாகவும் இருக்கும் ஒன்று, அறிவு மட்டத்திலிருந்து நோக்கினால், வருத்தப் படுவதற்கு இடமில்லாததாகத் தோன்றலாம்.

உடல், மனம், அறிவு ஆகிய மட்டங்களில் எனக்குத் திகைப்பும், வெறுப்பும் அளிக்கும் ஒன்றை ஆன்மீக மட்டத்தி லிருந்து நான் பார்க்கிறேன் என்று வைத்துக் கொள்ளலாம். அப்போது அது எனக்கு மகிழ்ச்சியளிக்கும் சிறப்பு நிகழ்ச்சியாக இருக்கக்கூடும். ஆசானையும், பாட்டனாரையும் போர்க்களப் பிரச்சினைகளையும் உடல், மன அறிவு மட்டங்களிலிருந்து மதிப்பிடுவதைக் கைவிட வேண்டும் என்பதே கிருஷ்ணர் அர்ஜுனனுக்குக் கூறும் புத்திமதி. ஆன்மீக நோக்கில் நிலையை மீண்டும் பரிசீலனை செய்யுமாறு அவர் கூறுகிறார்.

அறிவு நிலையைவிட உயர்ந்து நிற்கும் இப் பேருண்மையை திடீரென்று அவர் சொன்னவுடன், காலடியில் வெடி வெடித் ததைப் போன்ற உணர்ச்சி அர்ஜுனனுக்கு வருகிறது. திடுக் கிட்டுக் கல்லாய்ச் சமைந்து நிற்கிறான். பதற்ற நிலையிலிருந்த அவனுக்கு நுணுக்கமான இந்த அதிர்ச்சி வைத்தியம் நன்றாக வேலை செய்கிறது. இதை நாம் பிறகு காணப் போகிறோம்.

நத்—வே—வாஹம் ஜாது நாஸம்
நத்வம் நேமே ஜனுதிபா:
ந சைவ நபவிஷ்யாம:
ஸர்வே வய—மத: பரம். 2:12

(கடந்த) எக்காலத்திலும் நானே, நீயோ இங்குள்ள மன்னர்களோ இல்லாமலிருந்ததில்லை. வருங்காலத்தில் நாம் எல்லோரும் மறைந்துவிடப் போவதும் இல்லை.

இறைபொருள் நமது உடலை ஏற்று சில தாற்காலிக அனுபவங்கள் பெறும் நோக்கத்துடன் யாத்திரை ஒன்றை மேற்கொள்ளுவதாக கிருஷ்ணர் உறுதியாகக் கூறுகிறுர். அவரும், அர்ஜுனனும், போர்க்களத்தில் இரு தரப்பிலுள்ள மன்னர்களும் ஏதோ தற்செயலாக அங்கு வந்து நிற்கவில்லை. இல்லாத இடத்திலிருந்து அவர்கள் வந்துவிடவில்லை. இறந்த பிறகு ஒன்றுமில்லா சூனியமாகி விடப் போவது மில்லை. ஆழ்ந்து ஆராய்பவர்களுக்கு, கடந்த காலமும் முடிவற்ற எதிர்காலமும் நிகழ்காலத்துடன் தொடர் சங்கிலி போல இணைக்கப்பட்டிருப்பது தெளிவாகும். ஆன்மா மாருதது. மாறுபடும் தன்மையுள்ள உடலின் நிர்ப்பந்தங்களுக்கு உள்ளாவது போல் தோன்றினுலும், சூழ்நிலையைத் தானே படைத்துக் கொண்டு அதற்கு ஏற்ப இருந்து வருகிறது.

இந்து தத்துவ ஞானிகளின் இந்த முடிவிலிருந்துதான் தவறுக்கு இடமில்லாத மறு பிறவிக் கருத்து தோன்றியிருக்கிறது. அதைக் கடுமையாக எதிர்க்கும் சிலர், தங்களுடைய புனித நூல்களையே சரியாகப் படிக்கவில்லை என்று தோன்றுகிறது. ஏசுநாதர் அதை நேரடியாகச் சொல்லவில்லை என்பது உண்மைதான். ஆயினும் மறுபிறவியில் அவருக்கு இருந்த நம்பிக்கை பல இடங்களில் வெளியாகிறது. இலைஜா (*Alijah*) தான் இப்போது பாப்டிஸ்டு ஜான் (*John*) என்று தமது சீடர்களிடம் ஏசு கூறுவதிலிருந்து, அவருக்கு மறுபிறவியிலிருந்த நம்பிக்கை தெரிகிறது அல்லவா? கிறிஸ்தவ நூல்களை ஆழ்ந்து கற்றறிந்த ஆரிகன் என்னும் பாதிரியார் 'முந்திய பிறவியில் செய்த செயல்களுக்கு ஏற்ப ஒருவர் தமது உடலைப் பெறுகிறுர்' என்று கூறுகிறுர்.

தர்க்க பூர்வமான இந்த மறுபிறவிக் கருத்தை சிலர் வெளிப்படையாக ஏற்றுக் கொண்டிருக்கிறுர்கள். மற்றவர்கள் அக்கருத்தின் அடிப்படையில் பேசியிருக்கிறுர்கள். அதை ஏற்காத சிந்தனையாளர் முற்காலத்திலும் இல்லை. இப்போதும் இல்லை. புத்தர் தமது முந்திய பிறவிகளைப் பற்றி அடிக்கடி குறிப்பிடுகிறுர். நிரூபிக்க வேண்டிய அவசியமில்லாத கருத்து என்று வர்ஜில், 'ஒவிடு' என்ற இரு கவிஞர்களும் கூறுகிறுர்கள். தமது காலத்திய யூதர்கள் மறுபிறவிக் கொள்கையில் நம்பிக்கை வைத்திருந்ததாக ஜோசப்ஸ் எழுதியிருக்கிறுர். சாலமன் தமது அறிவுரை நூலில், ''ஆரோக்கியமான உடலுடனும், உறுதியான கை, கால்களு

டனும் பிறப்பது, முற்பிறவியில் செய்த செயல்களுக்கு அளிக்கப் பட்டிருக்கும் பரிசு'' என்று எழுதுகிறார்.

''கல்லாகியிருந்து நான் மடிந்து செடியானேன். செடியாகி யிருந்து இறந்து விலங்கானேன். விலங்கிலிருந்து இறந்து இப்போது மனிதனாக ஆகியிருக்கிறேன். எனவே மரணத்திற்கு ஏன் அஞ்ச வேண்டும்? மரணம் என் வளர்ச்சியை எப்போது குறைத்தது? மனிதனாக இருந்து இறந்த பிறகு தேவனாவேன்,'' என்று இஸ்லாமிய தவப் புதல்வன் கூறியிருப்பதை யார் மறக்க முடியும்?

அறிவுச் செறிவுள்ள, தத்துவபூர்வமான இந்த மறுபிறவிக் கருத்தை பிற்காலத்தில் வந்த கதே, பிஷ்டே, ஷெல்லிங் போன்ற ஜெர்மன் அறிஞர்களும், சமீபகால தத்துவ வல்லுநர்கள் ஹியூம், ஸ்பென்சர், மாக்ஸ்மியூலர் போன்றவர்களும் ஏற்றுக் கொள்ளு கிறார்கள். இக்கொள்கை மறுக்க முடியாதது என்பதை பிரௌனிங், ராஸெட்டி, டென்னிசன், வேட்ஸ்வொர்த் முதலிய கவிஞர்கள் தங்களுடைய சிறப்பு மிக்க கற்பனை மூலம் உணர்ந் திருக்கின்றனர்.

மறுபிறவிக் கொள்கை, தத்துவ வல்லுநர்களின் பகற்கன வல்ல. விரைவாக முன்னேறிவரும் உளவியல் விஞ்ஞானம் கண்டு பிடித்து வரும் நிதர்சனமான உண்மைகளுக்கு ஏற்ப, மேலைநாடு கள் தங்களுடைய மத நூல்கள் திருத்தி எழுதவேண்டிய காலம் வெகுதொலைவில் இல்லை. வாழ்வின் ஊற்றுக்களைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற அறிவு வேட்கை, ஒவ்வொரு இடத்திலும் தோன்றும் முரண்பாடுகளைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்காது. 'அது சும்மாத் தற்செயலாக நடந்தது' என்று மழுப்பிக் கொண்டே காலந்தள்ளிவிட முடியாது. மொஸார்ட் என்ற இசைக்கலை மேதையின் வாழ்க்கை இதற்குச் சிறந்த உதாரணம். ஆன்மா தொடர்ந்து வெவ்வேறு உடலுருவம் பெறு கிறது என்பதை ஒப்புக்கொண்டால்தான் தர்க்க முறைக்கு முரண்படாமல் அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை நாம் விளக்க முடியும். மொஸார்ட் நாலாவது வயதில் கீதங்கள் இயற்றினார். ஐந்தாவது வயது முதல் கச்சேரிகள் செய்யத் தொடங்கினார். ஏழாவது வயதில் ஒரு இசை நாடகமே எழுதி முடித்தார். மறுபிறவிக் கொள்கையை ஒப்புக் கொள்ளவில்லை யென்றால், இவர் தப்பிப் பிறந்த ஒரு அதிசயப் பிறவி என்று நினைத்து, தற்செயல் குப்பைக் கூடையில் இவருடைய வாழ்க்கையையும் போட்டு மூடுவதைத் தவிர வேறு வழியில்லை.

இம் மகத்தான கொள்கையை நிரூபிக்க எத்தனையோ ஆதாரங்கள் கிடைத்திருந்த போதிலும், அவற்றை யாரும் பதிவு செய்து வைக்கவில்லை. எனவே சிறப்புமிக்க, நிரூபிக்க வேண்டிய

அவசியமில்லாத இவ்வுயிர் இயக்க விதியை இன்றைய உலகில் மீண்டும் நிரூபிக்கும் அவசியம் ஏற்பட்டிருக்கிறது. இதைப்பற்றி நுணுக்கமாகச் சிந்திக்காத அர்ஜுனனை இக் கொள்கை திடுக்கிட வைத்ததில் வியப்பில்லை. அவனும், தாமும், போர்க்களத்திலிருந்தவர்களும்—உலகத்திலிருந்த எல்லோருமே—இறந்த பிறகும் கூட இல்லாமற் போகமாட்டார்கள் என்று கிருஷ்ணர் அழுத்தமாகக் கூறுகிறார். உலக விவகாரங்கள் தெரிந்தவனாயினும், அவற்றிற்கு அப்பாற்பட்ட இவ்வுண்மை அர்ஜுனனுக்கு எட்டவில்லை. கேள்விக் குறி எழுப்பும் அவனுடைய கண்களைப் பார்த்துவிட்டு, கிருஷ்ணர் அடுத்த உதாரணத்தின் மூலம் அதை விளக்குகிறார்.

அவர்கள் இறந்து விடுவார்கள் என்பது பற்றித் துயரம் வேண்டியதில்லையா—ஏன்? ஏனெனில் அவர்கள் அழிவிலாப் பொருள்களால் ஆனவர்கள். அது எப்படி? கிருஷ்ணர் அளித்திடும் பதில் பின்வருமாறு:

தேஹினோஸ் மின் யதா தேஹே
கௌமாரம் யௌவனம் ஜரா
ததா தேஹாந்தர ப்ராப்திர்—
தீரஸ்—தத்ர ந—முஹ்யதி 2:13

உடல் பெற்ற ஆன்மா இளமையையும், வாலிபத்தையும் கடந்து முதுமை பெறுவதுபோல, அவற்றிற்குப் பிறகு மற்றொரு உடலையும் பெறுகிறது. இதற்காக உறுதியுள்ளோர் எவரும் வருந்துவதில்லை.

ஒரு நிகழ்ச்சியை அனுபவிப்பவனுக்குத்தான் அதன் நினைவு இருக்கும். அனுவிப்பவனும், நினைவு வைத்துக் கொள்பவனும் ஒருவனே. இது நினைவு இயல். விதி. உங்கள் அனுபவத்தை நானோ, என் அனுபவத்தை நீங்களோ நினைவுபடுத்திக் கொள்ள முடியாது. உங்கள் அனுபவத்தை நீங்கள் சுலபமாக ஞாபகப் படுத்திக் கொள்வது போல், என் அனுபவத்தை நான் உடனடியாக நினைவு படுத்திக் கொள்கிறேன்.

குழந்தைப் பருவத்திலும், வாலிபத்திலும் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள் முதுமையில் கூட எனக்கு நினைவிருக்கிறது. குழந்தைப் பருவம் இறந்து வாலிபம் வருகிறது; வாலிபம் இறந்த பிறகு முதுமை வருகிறது. இளமை, வாலிபம் ஆகிய இரண்டும் இப்போது முதியவரிடம் இல்லை. அது கண்கூடாகத் தெரிகிறது. ஆனால் நினைவிலிருந்து அவர் கடந்த பருவத்திய நிகழ்ச்சிகளைக் கூறலாம். இதிலிருந்து வளர்ச்சியின் பல்வேறு பருவங்களுக்கும் பொதுவான 'ஏதோ ஒன்று' நம்மிடம் தொடர்ந்து இருந்து

வருவது தெரிகிறது. அப்படி இருப்பதால்தான். இளமை, வாலிப கால நிகழ்ச்சிகளை. ஒருவர் நினைவிலிருந்து எடுத்துரைக்கிறார்.

வாலிபத்தை பிறப்பு என்று வைத்துக்கொள்வோம். இளமை இறந்துதான் வாலிபம் பிறந்திருக்கிறது. வாலிபம் இறந்து முதுமை பிறக்கிறது. இப்படி ஒன்று இறந்து மற்றொன்று பிறக்கிறதேயென்பதற்காக யாரும் அழுவதில்லை. பார்க்கப் போனால், ஏதுமறியா இளமையைக் கடந்து முதுநிலை எய்தும்போது, நமக்குக் கிடைத்துள்ள அனுபவச் செல்வம் பற்றி மகிழ்ச்சியும். பெருமிதமும் அடைகிறோம். மற்றொரு உடலைப் பெறும் பொருட்டு இப்போதுள்ள உடலை ஒருவர் கைவிடுவதில் துயரத்திற்கு இடமில்லை என்பதை, நம் ஒவ்வொருவருக்கும் தெரிந்த உலக நிகழ்ச்சியுடன் ஒப்பிட்டு, கிருஷ்ணர் தெளிவு படுத்துகிறார்.

மறுபிறவிக் கொள்கையில் உள்ள உண்மை இங்கு மீண்டும் அழுத்தந்திருத்தமாக, ஐயப்பாட்டுக்கு இடமின்றி, வலியுறுத்தப் பட்டிருக்கிறது. இந்த நோக்கில் பார்த்தால், சாவு என்பது பயந்து நடுங்க வேண்டிய ஒன்று அல்ல, வெறும் பயமுறுத்தல் தவிர வேறொன்றுமில்லை என்று புத்திசாலிகள் தெரிந்து கொள்ளு வார்கள். இளமை போனால்தான் வாலிபத்தை அனுபவிக்க முடி யும். இதில் வருத்தத்திற்கு என்ன இடமிருக்கிறது? ஒரு பருவம் முடிந்து மற்றொன்று வந்துவிட்ட போதிலும் அதே வாழ்க்கை தான் தொடருகிறது என்ற நிச்சயம் நமக்கு இருக்கிறது. இளங் குழந்தையே இப்போது வாலிபனாகி இருக்கிறான், இறவாத ஒன்று தொடருகிறது. அதே போல மரணத்திற்குப் பிறகு ஒருவனு டைய ஆளுமை உடலுடன் மறைந்துவிடுவதில்லை. உடல் சடல மானதும், அதில் குடி கொண்டிருந்த அகந்தை வெளியேறுகிறது. வாழ்நாளில் தான் திரட்டிய வாசனைகளுக்கு (பதித்துக்கொண்ட இயல்புகளுக்கு) ஏற்பவும் அவை இயக்கம் முழுமை பெறுவதற் காகவும் வேறு வகை உடலை அது தேர்ந்தெடுத்து அடைகிறது.

மாத்ரா—ஸ்பர்ஸாஸ்து கௌந்தேய
சீதோஷ்ண ஸுக்து:க்கதா:
ஆகமாபாயினோ நித்யாஸ்
தாம்ஸ் திதிக்ஷஸ்வ பாரத. 2:14

குந்தியின் மைந்தனே, பொருள்களுடன் புலன்கள் சேரும் போது, சீத—வெப்பங்களும், இன்ப—துன்பங்களும் ஏற்படு கின்றன. அவற்றிற்குத் தொடக்கமும் முடிவு உண்டு. அவை நிலையற்றவை. தைரியமாக இருந்து அவற்றைச் சமாளித்துக் கொள், பாரதா—(பரத வம்சத்தில் வந்தவனே!)

ஒருபொருளை உணருவது புலன்களல்ல. புலன்கள் மூலமாக உணருகிறோம். வேதாந்தம் கூறும் உணர்வுக் கொள்கை இது. உலகிலுள்ள பல்வேறு பொருள்களை, நமது உணரும் அகந்தை புலனுறுப்புகள் (இந்திரியங்கள்) என்ற கருவிகளைக் கொண்டு அறிவைத் திரட்டிப் பெறுகிறது. அது புலன்கள் மூலமாகப் பொருள்களுடன் தொடர்பு கொள்ளவில்லையானால் நமக்கு எவ்விதமான உணர்ச்சியும் ஏற்பட முடியாது.

ஒரு பொருள் இருவருக்கு இருவகை உணர்ச்சிகளை ஏற்படுத்தக் கூடும். இது எல்லோருக்கும் தெரிந்ததுதான். பொருள் ஒன்றாக இருக்க, அனுபவங்கள் மாறுபடுமானால் ஒவ்வொருவருடைய மனமும் ஒவ்வொரு விதமாக அமைந்திருக்கிறது என்பதையே அது காட்டுகிறது. மேலும், நாம் மிகவும் விரும்பி வாங்கும் ஒரு பொருள் சில நாட்களுக்குப் பிறகு நமக்கே வெறுப்பளிக்கிறது. காலம் செல்லச் செல்ல மனத்தின் அமைப்பு மாறுகிறது. சுருங்கச் சொல்ல வேண்டுமென்றால் நமது உள்ளங்கள் ஐம்பொறிகளின் வழியாக பொருள்களுடன் உறவு கொள்ளும் போது, அப்பொருள்கள் நமது உணர்வைத் தூண்டி அனுபவத்தை அளிக்கின்றன.

உலகத்திலுள்ள பொருள்கள் மாறிக் கொண்டே இருக்கின்றன. தோற்றமும், அழிவும் அவற்றின் இயல்பு. இதைத் தெரிந்து கொண்டவர்கள் அந்தப் பொருள்கள் இருப்பதைப் பற்றியோ, இல்லாதது பற்றியோ துயரமடைய மாட்டார்கள். கால வெள்ளத்தில் பொருள்கள், நிகழ்ச்சிகள், சந்தர்ப்பங்கள், சூழ்நிலைகள்—இவை எல்லாம் மிதந்து வருகின்றன, எங்கிருந்தோ வரும் எதிர்காலத்திலிருந்து வந்து, நமது கண் முன்னால் இருக்கும் வரை பலவித அனுபவங்களை நமக்கு அளிக்கின்றன. அவை அப்படியே நிரந்தரமாக இருக்க முடியாது. அவற்றின் இயற்கை அது. பிறகு அவை வெள்ளத்தோடு வெள்ளமாகப் போய், கடந்த காலத்துடன் கலந்துவிடுகின்றன. எதுவும் கொஞ்ச நாட்களுக்குக்கூட இருந்தபடியே இருப்பதில்லை. பொருள் உலகில் மாற்றம் என்று ஒன்றுதான் மாற்றமில்லாத விதி.

தொடக்கம்—முடிவு என்ற எல்லைகளுக்கு உடபட்ட பொருளுலக நிலவரத்தை அறிந்து கொண்ட பிறகு, இருக்கும் பொருள்களைப் பற்றியோ, இல்லாதவைப் பற்றியோ விவேகமுள்ளவர்கள் மனச் சோர்வடைய மாட்டார்கள். வெப்பம்—குளிர்ச்சி, வெற்றி, தோல்வி, துன்பம், இன்பம் முதலியவற்றில் எதுவுமே நிலையானது அல்ல.

ஒவ்வொரு நிலையும் மாறுவது இயற்கையாதலால், அம்மாறுதல்களைக் கண்டு தடுமாறித் தத்தளிப்பது முட்டாள் தனம். இயற்கையின் நியதியறிந்து, அதை பொறுமையுடன்

சகித்துக்கொண்டு ஆறுதல் பெறுவதே புத்திசாலித்தனம். மகிழ்ச்சி, துயரம், வெற்றி—தோல்வி, இன்ப —துன்பம் முதலிய வற்றில் எது வந்தபோதிலும், இதுவும் போய்விடும்' என்று தெரிந்து ஆழ்ந்த அறிவுள்ளவர்கள் கலங்காமல், உறுதியுடன் இருப்பார்கள்.

வெளியுலகம் தொடக்கம், முடிவு என்ற வரையறைகளுக்கு உட்பட்டது. அது மட்டுமல்ல. தங்கள் முன்னுள்ள பிரச்சினைகளும் இயல்பாகவே நிலையற்றவை என்று கண்ண பிரான் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். இன்று ஒருவனுக்கு இன்ப மாக இருப்பது நாளை அதே மனிதனுக்குத் துன்பமூட்டுகிறது என்ற பொருளில் 'நிலையற்றது' என்ற வார்த்தையை அவர் உபயோகிக்கிறார். முன்னுக்குப் பின் முரணான அனுபவங்களை அளிக்கும் தன்மையை 'அநித்யம்' என்று இங்கு குறிக்கப் பட்டிருக்கிறது.

வெய்யிலுமில்லை, மழையுமில்லை என்று எதற்கும் கவலைப் படாமல் இருப்பதால் பயன் என்ன? பின்வருவதைக் கேளுங்கள்:

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப
ஸமதுக்: க ஸுகந்தீரம் ஸோம்ருதத்வாய கல்பதே
2:15

• மாந்தரில் தலையாயவனே, (நிலையில்லா) இவற்றால் பாதிக்கப்படாமல், இன்ப—துன்பங்களைச் சமமாகக் கருதி ஏற்கும் உறுதியுள்ளவர்களே அழியா ஆன்மநிலையடையத் தகுந் தவர்கள்.

இன்ப துன்பங்களை அமைதியாக சகிக்கும் தன்மை இருந் தால்தான் ஆன்மாவை சரிவரத் தெரிந்துகொள்ள முடியும். 'அழிவிலாத்தன்மைக்குத் தகுதி' பெற இன்பம்—துன்பம் ஆகிய இரண்டினாலும் பாதிக்கப்படாத உள்ளச் சமநிலை எய்த வேண்டு மென்று உபநிடதங்கள் கூறுகின்றன. அந்த ஆதாரத்தில் கிருஷ்ணரும் அவ்வாறு கூறுகிறார்.

அழிவில்லாத் தன்மை என்றால் இந்த உடலுக்குச் சாவு இல்லை என்று பொருளல்ல. பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டு நிற்கும் பேருண்மையை அறிந்து, முழுமை பெறுதலே 'அழிவிலாத்தன்மை'. உடல் அழிவது மட்டுமின்றி, தோற்றம்—மறைவு என்ற எல்லைகளை உள்ளிட்ட எல்லா அனுபவங்களையும் இங்கு மரணத்தைப் பற்றிய குறிப்பு சுட்டிக் காட்டுகிறது. அவை ஒவ்வொன்றிலும் அழிவு அனுபவம் இருக்கிறது. உடல், மனம், அறிவு மூலம் பெறும் எந்த அனுபவமும் நிரந்தரமானதல்ல.

அதாவது ஒவ்வொரு அனுபவமும் ஒரு குறிப்பிட்ட காலம் வரை இருந்து, பிறகு நம்மில் இறந்து போவதற்காகத் தோன்றியவைதான். இந்த அனுபவத்தொடர் துன்பப் பாதைகளாக, துயரத் தடங்களாக, நமக்குள் நீண்டுகொண்டே செல்கின்றன. அறிவின்மை என்ற வார்த்தையை அதி மனித நிலை என்ற பொருளில் முனிவர் இங்கு உபயோகிக்கிறார். தனி மனிதனின் அகந்தை, அளவிடமுடியாத துயரப் பாதையில் நடந்து நடந்து கடைசியில் சாசுவதமான ஒன்றில் நிலைக்கும் அனுபவத்தைப் பெறுகிறது.

முழுமை பெறுவதே வாழ்க்கையின் இலட்சியம் என்று கீதை மூலமாக, கிருஷ்ணரைப் பறைசாற்றச் செய்கிறார் வியாசமா முனிவர். இவ்வளர்ச்சி பெறுவதற்கான ஒவ்வொரு வாய்ப்பையும் வாழ் நாளில் நாம் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். வெப்பம்—குளிர், வெற்றி—தோல்வி, இன்பம்—துன்பம் முதலியவற்றைப் பெரு மகிழ்ச்சியுடன் தாங்கிக் கொள்வதற்கான பயிற்சியை வாழ்க்கை நமக்கு அளிக்கிறது. வடிக்கட்டின சோம்பேறிகள்கூட தங்களுடைய உதவாக்கரை வாழ்வில், எல்லாவற்றையும் சகித்துக் காலந்தள்ளி வருகிறார்கள். ஆனால் இங்கு சொல்லப் படுவது அது அல்ல. இந்த இடத்தில் 'தீரன்' ஏன்று கூறப் பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். இன்ப துன்பங்களை வேறு பாடின்றி நோக்கும் உள்ளச் சமநிலை பெற்றவன் 'தீரன்'. அவன் சிறப்பான பண்பாடு பெற்று உயர்வான் என்று விளக்கப்படு கிறது. ஒரு அசட்டு மந்த நிலையிலிருந்துவரும் சோம்பேறித் தனமும், விவேகத்திலிருந்து சலசலவென்று பாயும் ஆனந்தச் சமநிலை அருவியும் ஒன்றல்ல. உலகத்திலுள்ள பொருள்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் உண்மை இயல்பு தெரிந்ததும், இவையெல்லாமே முடிவுள்ளவை என்ற உணர்வு தோன்றிவிடுகிறது. எதையும் தாங்கும் சமநோக்கு வருகிறது. அதைப் போன்ற சம நிலை பெற்றவன் சந்தோஷம் வரும்போது துள்ளிக்குதிக்க மாட்டான், துக்கம் வரும்போது இடிந்துபோய் உட்கார்ந்து விடவும் மாட்டான்.

'இந்த உடலே நான்' என்று வாழும்வரை, உடலுக்கு வரும் துன்பங்களை ஒருவன் அமைதியாக தாங்கிக்கொள்ள முடிவதில்லை. ஆனால் அன்போ, வெறுப்போ தூண்டும்போது உடல் நினைவே அவனுக்கு இருப்பதில்லை. மகன் மீதுள்ள பாசத்தினால் எனது உடற்தேவைகளையும் புறக்கணித்துவிட்டு அவன் சிறந்த கல்வி கற்க வேண்டுமென்று நான் பாடுபடுகிறேன். ஒரு கருத்தோ, கொள்கையோ நம்மிடம் கொழுந்துவிட்டு எரியும் போது, உடலைப் பற்றியோ மனதைப் பற்றியோ கவலைப்படாமல் எவ்விதத் தியாகமும் செய்கிறோம். புனித இலட்சியங்களுக்காக உயிர் துறந்தோர் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். தங்கள்

அறிவுக்குகந்த இலட்சியங்களுக்காகவும், கொள்கைகளுக்காகவும் எத்தனையோ உடற்கொடுமைகளையும், மனத் தத்தளிப்பையும் பொருட்படுத்தாது புரட்சி வீரர்கள் பணிபுரிகிறார்கள்.

அதுமட்டுமல்ல. இன்னும் பல காரணங்களுக்காகவும் துயரத்தைக் கைவிட்டு, தொல்லை கொடுக்கும் இம் மருட்சியிலிருந்து மீள வேண்டுமென்று, கிருஷ்ணர் கூறுகிறார்.

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:
உபயோரபி த்ருஷ்டோந்தஸ்—த்வநயோஸ்தத்வதர்சிபி:
**2:16**

உண்மையற்றது இருக்க முடியாது: உண்மையானது இல்லாமற் போகாது. உணர்வுக்கண் பெற்றோர் (மெய்நிலை காண வல்லோர்) இந்த இரண்டையும் கண்டறிந்திருக்கிறார்கள்.

உண்மையானது, உண்மையற்றது என்ற இரண்டையும் வேதாந்த நூல்கள் மிகத் தெளிவாக விஞ்ஞான ரீதியில் பாகுபாடு செய்து வைத்திருக்கின்றன. நமது பழம் பெரும் புனித நூல்கள் அவற்றை விளக்க முடியாதவையாகக் கருதவில்லை. 'எது கடந்த காலத்தில் இல்லையோ, எதிர் காலத்தில் இருக்கப் போவதில்லையோ, ஆனால் நிகழ்காலத்தில் மட்டும் இருக்கும் தோற்றமளிக்கிறதோ— அது உண்மையற்றது' என்று மாமுனிவோர் விளக்குகிறார்கள். காரிகை கூறுவதுபோல, ''முதலிலும் முடிவிலும் இல்லாதது, நடுவிலும் இல்லாதது என்பதில் சந்தேகமில்லை. நாம் பார்ப்பவை எல்லாம் தோற்றமாயைகளே. அப்படியிருந்தும் அவற்றை நாம் உண்மை என்று நம்புகிறோம்.''*

எனவே உண்மையான ஒன்று கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய எல்லாக் காலங்களிலும், எவ்வித மாறுதலுமின்றி இருந்தபடியே இருக்கிறது. இதற்கு ஒரு சாதாரண உதாரணத்தை எடுத்துக்கொண்டாலே போதும். இருளில் ஒரு தூணைப் பார்த்து ஒருவன் பிசாசு என்று நினைக்கிறான். தூணுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் பிசாசுக் காட்சி உண்மையற்றது. ஏனென்றால் கற்பனைத் தோற்றம் நிலைத்திருக்க முடியாது. உண்மையில் அது தூண் என்று தெரிந்த பிறகு, அதைப்பற்றி ஏற்பட்ட தோற்றம் மறைந்து விடுகிறது. இன்னொரு உதாரணம். நமக்குப் பல குழந்தைகள் இருப்பதைப் போல் கனவு வருகிறது, விழித்து எழுந்தபிறகு, அக்குழந்தைகளை எல்லாம் பராமரிப்பது எப்படி என்ற கவலை நமக்குத் தோன்றுவதில்லை. நாம் கண்ட கனவில் உண்மை இல்லை என்பது நமக்குத்

* சுவாமி சின்மயானந்தரின் மாண்டுக்கிய, காரிகை விளக்கவுரை காண்க. 2–6.

தெரிகிறது. நாம் படுக்கைக்குச் செல்லும்போது கனவுக் குழந்தைகள் நம்முடன் இல்லை. விழித்து எழுந்த பிறகும் அவை இல்லை. கனவில் நாம் அன்பைப் பொழிந்து ஆசையுடன் சீராட்டிய குழந்தைகள் எல்லாம் உண்மையற்றவை என்று விழித்தெழுந்தவுடன் விளங்குகிறது. எக்காலத்திலும் நிலைத்திருப்பதே உண்மையானது என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். ஒப்பிட்டுப் பார்க்கும் அளவுக்கு, மேலே கூறிய தூண் சற்று உண்மையானது. நேற்று இருந்தது, இப்பொழுது இருக்கிறது, நாளை இருக்கும்.

இவ்வாறே பொருள் பெட்டகத்தில் அடங்கிய நம் வாழ்வு, தோற்ற—முடிவுகளுக்கு உட்பட்டது. உடல், மனம், அறிவு மட்டங்களில் நமக்கு ஏற்படும் எல்லா அனுபவங்களுமே அப்படித்தான். ஒவ்வொரு கணமும் இவ்வுடலில் மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. மனம் வளருகிறது. அறிவு பெருகுகிறது. முந்தியநிலை இறந்தாலொழிய, அடுத்துவரும் மாற்றங்களும், வளர்ச்சியும் எப்படி ஏற்பட முடியும்? நமது உடல், மனம், அறிவு ஆகியவை மாறிக்கொண்டே இருப்பதால், நாம் ஏற்கனவே பார்த்த உதாரணத்தின்படி அவை உண்மை யற்றவை என்பது விளங்குகிறது.

அப்படியானால் அவற்றிக்குப் பின்னால் உண்மையான ஏதோ ஒன்று இருக்கிறதா, இல்லையா? மாறுதல் தோன்றுவதற்கு மாறாத ஒன்று அடிப்படையாக இருக்க வேண்டும். ஆறு என்று ஒன்று இருந்தால்தான் அதில் வெள்ளம் வருவதும், வடிவதும் நமக்குத் தெரியும். உடல், மனம், அறிவு நிலைகளில் ஏற்படும் லட்சக்கணக்கான அனுபவங்களை எல்லாம் ஒருங்கிணைந்து அதை நாம் வாழ்க்கை என்று சொல்லுகிறோம். வெள்ளம் பெருகவும், வடியவும் மாறி மாறி வசதியளிக்கும் ஆற்றுப்படுகை போல, உடல், மன, அறிவு நிலைகளில் நடக்கும் மாற்றங்களுக்குப் பொதுவான, மாறுதலற்ற உண்மையான ஆற்றுப்படுகையொன்று நமக்குள் இருக்கத்தான் வேண்டும் என்று தெளிவாகிறது.

நம்மிடம் ஏற்படும் பல்வேறு மாறுதல்களுக்கிடையில் மாறாத ஒன்று நம்முள் இருக்கிறது. முத்துச் சரத்திலுள்ள சரடு போல, அது நம் அனுபவங்களை இணைத்து நிற்கிறது. ஊன்றிப் பார்த்தால் அது நம்மிடமுள்ள ஆன்மிக அகப்பொருளே என்று தெரியவரும். இறைப் பொருளாக நம்முள் விளங்கும் பேருணர்வு எவ்வித மாற்றத்திற்கும் உள்ளாவதில்லை. அதற்கும், அதில் தோன்றும் அனுபவங்களுக்கும் சம்பந்தமில்லை. ஒளி பரப்பும் உள்ளுணர்வு காரணமாகத்தான் அனுபவங்கள் நமக்குத் தெரிகின்றன. அந்த அனுபவங்களுக்கு மொத்தமாக நாம் கொடுக்கும் பெயர் வாழ்க்கை. சின்னஞ்சிறு வயதில் எனக்கு இளம் பருவ உணர்வு இருந்தது. வாலிபனான பிறகு வாலிப

உணர்வு இருந்தது. இப்போது நான் முதுமை அடைந்திருக்கும் போது, முதுமை அனுபவ உணர்வு இருந்து வருகிறது. உணர்வு எப்பொழுதும்போல் அப்படியேதான் இருக்கிறது. அதில் மிதந்து வரும் அனுபவங்கள் எனது உள் ஒளிப்பட்டுப் பிரகாசித்து, பிறகு மறைந்து விடுகின்றன. பிறவற்றை இவ்வாறு எனக்கே எடுத்துக் காட்டுவது என்னிடமிருக்கும் உள் ஒளிதான். அவ்வொளி இருக்கும்வரை நான் உயிருடன் இருப்பதாகக் கருதப்படுகி றேன். அது இல்லை என்ருல் இப்போதுள்ள உருவில் நான் இருக்க மாட்டேன். ஆன்மிக சத்தாகிய 'அது' என்பது எங்கும் நிறைந்தது பிறவி இல்லாதது; இறவாதது. இவ்வாறு என்னுள் எல்லையற்று விரவி இருக்கும் ஆன்மாவே பேருண்மை.

ஆன்மிகப் பொருள், அது அல்லாதது என்ற இரண்டையும், 'உண்மையானது', 'உண்மை அல்லாதது' என்ற சொற்களால் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த இரண்டினுடைய உட்பொருளை யும், முக்கியத்துவத்தையும் சிந்தனைச் செறிவுமிக்கோர் அறிந் திருக்கிருர்கள். இவ்விரண்டின் அதிசயக் கூட்டுத்தான் உலகம்.

என்றென்றும் நிலையாக உள்ள பேருண்மை எது என்பதை விளக்கமாக பகவான் பின்வருமாறு கூறுகிருர்.

அவிநாசி து தத்வித்தி யேந ஸர்வமிதம் ததம்
விநாச—மவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித் கர்த்து மர்ஹதி

*2:17*

இவை எல்லாவற்றிலும் நிறைந்திருப்பது அழிக்க முடியாத தென்று தெரிந்துகொள். அழிவற்ற அதை அழிக்க யாராலும் முடியாது.

உலகத்திலுள்ள எல்லாவற்றையும் உள்ளடக்கியது பேருண் மையாகிய இறைப்பொருள் ஒன்றே, நம் அனுபவத்தில் வரும் எல்லா உலகங்களும் இவ்வுண்மைப் பொருளால் உரு வானவை. பற்பல நிறங்களையும், உருவங்களையும்கொண்ட எத்தனையோ பானைகளை நாம் பார்க்கிருேம். அவற்றில் வைக்கும் பொருள்களைக்கொண்டு, அவற்றின் உபயோகத்தைக்கொண்டு, அந்தந்தப் பானைகளின் பெயர்களும் மாறுகின்றன. ஆனுல் எல் லாப் பானைகளிலும் விரவி இருக்கும் பொருள் ஒன்றுதான்—களிமண். களிமண் இல்லாமல் பானை இல்லை. மண்ணிலிருந்து உற்பத்தியாகி, மண்ணில் இருந்துவிட்டு, உடைந்த பிறகு அதன் பெயரும், உருவமும் மாறி, மண்ணோடு மண்ணுகிறது. மண் என்ற உண்மைப் பொருளில் மண் குட உலகம் அடங்குகிறது.

அதைப்போல மாருு இறைப்பொருள் மாறுதல்களுக்கு உள்ளாகும் இவ்வுலகில் அணு அணுவாக ஊடுருவி நிற்கிறது. அப் பேருண்மையின் ஒரு சிறு பகுதியைக்கூட யாரும் அழிக்க

முடியாது. அது அழிவில்லாதது என்று பகவான் கூறுகிறார். பிறகு நிலையிலா 'அசத்து' (உண்மை அல்லாதது) என்று கூறுகிறோமே அது எது? இப்பிரச்சினைக்கு பதில் கீழே வருகிறது.

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: சரீரிண:
அநாசிநோ ப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்த்யஸ்வ பாரத

2:18

இறைபொருள் குடிபுகுந்துள்ள இவ்வூனுடலுக்குத்தான் முடிவுண்டு என்று சொல்லப்படுகிறது. இறைப்பொருள் நிரந்தரமானது; அழிக்க முடியாதது; அறிய முடியாதது. ஆகையால் போர் செய். பாரதா.

ஜடப் பொருளாலான நமது உருவங்கள் அழியும் தன்மை பெற்றவை. அவ்வுடல்களை இறைப் பொருள் பயன்படுத்திக் கொள்ளுகிறது. இறைப் பொருள் மாறாதது, அழியாதது. அறிவுக்கு எட்டாதது. மாற்றத்திற்கு உள்ளாகின்ற எதுவும் நிரந்தரமில்லாதது. எனவே நிரந்தரமான பரம் பொருள் 'என்றும் மாறாதது' என்று குறிப்பிடப்படுகிறது. நித்தியமானது. அழிக்க முடியாதது என்று மீண்டும் மீண்டும் கூறுவதன் நோக்கம் பரம்பொருளை முற்றிலுமோ அல்லது அதன் ஒரு பகுதியையோ கூட அழிக்க முடியாது என்று வற்புறுத்துவதற்காகத்தான்.

அறிந்துகொள்ள முடியாதது என்பதற்கு 'கடவுளைப் பற்றி யாருக்கும் ஒன்றும் தெரியாது; தெரிந்து கொள்ளும் சக்தியும் நமக்கு இல்லை' என்று பொருள் கொள்வது தவறு. சாதாரணமாக ஒரு பொருளை அறிந்துகொள்வதற்கு ஐம்பொறிகளை நாம் பயன்படுத்துகிறோம். அந்த முறையில் 'அறிந்துகொள்ள முடியாதது இது' என்பதே பகவான் கூறுவதன் கருத்து. நமது உள்ளுணர்வு ஐம்பொறிகளின் வழியாக வெளியாகி, புறப் பொருள்கள் மீது விழுந்து ஒளிபெறச் செய்கிறது. அறிய உதவும் கருவிகளாகிய ஐம்புலன்கள், மனம், அறிவு முதலிய எல்லாமே ஜடப் பொருள்கள். உள்ளுணர்விலிருந்து வீசும் ஒளியினால்தான் அக்கருவிகள் அறியும் சக்தியைப் பெறுகின்றன. எனவே அந்தக் கருவிகளினால்—ஐம்புலன்களினால்—உள்ளுணர்வை அறிய முடியாது. பொதுவாக அறிவு பெறுவதற்கு நாம் உபயோகிக்கும் கருவிகளால் 'அறிய முடியாதது' இந்த மெய்ப் பொருள் என்று சாத்திரம் இங்கே கூறுகிறது. சுயமாகத் தோன்றி இருந்துவரும் (ஸ்வத சித்தமான) ஒன்றை, புலன் நிலையிலிருந்து அறிந்து நிர்ணயிக்க முடியாது.

'ஆகையால் போர் செய், பரத குலத்தில் உதித்தவனே' என்று கூறுவதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். போர் செய்யும்படி பகவான் கட்டளையிடுவதாக நினைக்கக்கூடாது.

தவறு செய்தவர்களை மன்னிப்பது, அகிம்சை போன்ற மகத்தான கொள்கைகளை அடிப்படையாகக்கொண்ட ஒரு மதம், தனது புனித நூல்களில் குழப்பத்தைத் தூண்டிவிட்டு, இரத்தக் களரிக்கு, வழி வகுக்குமென்று கனவிலும் கருத முடியாது. ஆனால் அவ்வாறு தூண்டுவதாகப் பொருள் கொள்ளும் வகையில், சிலர் தங்களையும் அறியாமலே, விளக்க உரை எழுதி யிருக்கிறார்கள். மகாபாரதப் பின்னணியில் கீதையைப் படிக்காத தால் ஏற்படும் தவறு அது.

தோல்வி மனப்பான்மையைக் கைவிட்டு, எந்த நிலைமை யையும் தைரியத்துடன் எதிர் நோக்கிச் சமாளிக்க வேண்டும் என்று இந்து மதம் குரல் கொடுப்பதாக இங்கு நாம் பொருள் கொள்ளவேண்டும். ''இந்தியாவின் மைந்தனே, போர் செய்'' என்பதற்கு அர்த்தம் அதுதான். எந்த நேரத்திலும், எத் துறையிலும், மனச் சோர்வின்றித் தீமைகளைத் தீவிரமாக எதிர்த்துப் போராடுமாறு சொல்லுவதுதான் கீதையிலுள்ள கிருஷ்ண தத்துவம்.

சம்சாரத்திற்குக் காரணமான துக்கம், மருட்சி போன்ற வற்றை அகற்றுவது கீதா சாத்திரத்தின் நோக்கம். இதை உறுதிப் படுத்தும் வகையில் இரண்டு வேத மந்திரங்களை கிருஷ்ணர் பின் வரும் செய்யுளில் எடுத்தருளுகிறார். 'பீஷ்மரும், மற்றவர்களும் போரில் என்னால் கொல்லப்படுவார்கள். அவர்களைக் கொல்லப் போவது நான்தான்' என்று அர்ச்சுனன் நினைப்பது தவறு என்பதை அவர் சுட்டிக் காட்டுகிறார்.

எப்படி அது தவறு? விளக்கம் வருகிறது, பாருங்கள்.

ய ஏனம் வேத்தி ஹந்தாரம்
யஸ்சைனம் மன்யதே ஹதம்
உபௌ தௌ ந விஜாநீதோ
நாயம் ஹந்தி ந ஹந்யதே 2:19

நமது அகப் பொருளாக விளங்குபவர் கொல்லுகிறார் என்று நினைப்பவனும், அவர் கொல்லப்படுகிறார் என்று நினைப்பவனும்— இருவருமே அறியாமையில் உழல்பவர்கள். அவர் கொல்வது மில்லை, கொல்லப்படுவதுமில்லை.

நமது அகப் பொருளாகிய ஆன்மா மாறுதல்களுக்கு உட் படாதது. அது கொல்வதும் இல்லை, கொல்லப்படுவதும் இல்லை. தன்னுடைய உடல் மடியும்போது தானே மடிந்துகொண்டிருப்ப தாக நினைப்பவனும், தான் மற்றவர்களை கொல்லுவதாக நினைப்பவனும்—இந்த இருவருமே ஆன்மாவின் உண்மை இயல்பு பற்றி அறியாதவர்கள். அதனால் உளறுகிறார்கள். உடல் அழியும்

தன்மையுள்ளது. கொல்லப்படுவது அதுதான். 'நான் கொல்லப் படுகிறேன்'' என்ற மருட்சி கொள்வது ஒருவனிடமுள்ள அகந்தை. உடல், அகந்தை ஆகிய இரண்டுக்கும் அப்பாற்பட்டது ஆன்மா. அவை இரண்டுக்கும் ஒளியூட்டுவதும் அதுவே. சுருங்கக் கூறுமிடத்து, மாறு இயல்புடையதாகையால் ஆன்மா கொல்லுதல், கொல்லப்படுதல் ஆகிய இரண்டிற்கும் அப்பாற் பட்டது.

ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்
நாயம் பூத்வா பவிதா வா ந பூய:
அஜோ நித்ய: சாச்வதோயம் புராணோ
ந ஹன்யதே ஹன்யமானே சரீரே 2:20

ஆன்மாவுக்குப் பிறப்புமில்லை, இறப்புமில்லை. தொடர்ந்து இருந்துகொண்டிருப்பதைத் தவிர, இல்லாமற்போவது அதற்குக் கிடையாது. உடல் கொல்லப்பட்டு அழியும்போது, பிறவாத, நிரந்தரமான, மாற்றமில்லாத, புராதனமான ஆன்மா அழிவ தில்லை.

மாற்றத்தின் அறிகுறிகள் நமது உடலில் தோன்றுகின்றன. அவற்றின் விளைவை அனுபவிப்பது நமது உடல்தான். இதெல் லாம் ஆன்மாவுக்கு இல்லை. இது இங்கு மீண்டும் வலியுறுத்தப் பட்டிருக்கிறது. உடலில் தோன்றும் மாறுதல்களினால் துயரங்கள் உண்டாகின்றன. பிறப்பு, வாழ்வு, வளர்ச்சி, சிதைவு, நோய், மரணம் ஆகிய ஆறு மாற்றங்களும் எல்லோருக்கும் பொது வானவை. ஒருவருக்கு இவற்றினாலேயே துன்பங்கள் எல்லாம் வருகின்றன. நம்முள்ளிருக்கும் இறைப் பொருளான ஆன் மாவுக்கு இவை இல்லை. அது மாற்றங்களுக்கு அப்பாற்பட்டது என்று நிரூபிப்பதற்காகவே பகவான் இதை மீண்டும் எடுத்து ரைக்கிறார்.

நமது சாதாரண ஊனுடலைப்போல் அல்லாமல், அகப் பொருளாகிய ஆன்மா பிறந்த ஒன்று அல்ல. எப்போதுமே இருந்து வருவது; நிரந்தரமானது. அலைகள் பிறக்கின்றன. பிறகு மடிந்து கடலோடு கடலாக நீராகி விடுகின்றன. இதைக் கொண்டு அலைகளோடு கடலும் பிறந்ததென்று சொல்லமுடி யாது. அலைகள் மறைந்தவுடன் கடலும் மறைந்து விடுவதில்லை. அது பிறக்கவில்லை யாகையால் இறக்கவும் இல்லை. தொடக்கம் உள்ளவற்றிற்கு மட்டுமே முடிவு உண்டு. கடலிலிருந்து பிறந்த வுடனேயே தாங்கள் மறையப்போவதை நினைத்து அலைகள் ஓல மிடுகின்றன. உடல் உறவினால் குழந்தை பிறக்கிறது. ஆன்மா அப்படிப்பட்ட உறவுகளினால் பிறந்ததல்ல. அது நிரந்தரமானது (அஜம் நித்தியம்) என்று விளக்கப்படுகிறது.

வேதாவிநாசினம் நித்யம் ய ஏனமஜ—மவ்யயம்
கதம் ஸ புருஷ: பார்த்த கம்காதயதி ஹந்திகம். 2:21

ஆன்மா அழிக்கமுடியாதது, நிரந்தரமானது. பிறவாதது, முழுமை குறையாதது என்று அறிந்த ஒருவன் கொல்லுவதோ, கொல்லுவிப்பதோ எப்படி முடியும், பார்த்தா?

ஆன்மாவைப் பற்றி இதுவரை கூறியவற்றை ஒன்று திரட்டி சுருக்கமாக இங்கு அளிக்கப்படுகிறது. நேரடியாகச் சொல்லமுடியாத ஒரு பொருளை விளக்குவதற்கு, அப்பொருளின் தன்மையை எடுத்துரைத்துக் குறிப்புணர்த்தப்படுகிறது. ஆன்ம உணர்வு பெற்றவர்கள், வாழ்க்கைப் பிரச்னைகளை சந்திக்கும்போது மனச் சோர்வோ, துயரமோ அடைய மாட்டார்கள் என்பதை வினு விடையாகக் கிருஷ்ணர் கூறுகிருர்.

நம்மிலிருக்கும் ஆன்மாவின் அழியாத, நிரந்தரமான, பிறவாத, முழுமை குன்ருத் தன்மையை யறிந்தவர்கள், கொல்லும் கர்த்தாவாகத் தங்களை நினைத்துக்கொள்ளும் முட்டாள்தனத்திற்கு ஆளாவார்களா என்று கிருஷ்ணர் கேட்கிருர். தானும் கொல்ல முடியாது, மற்றவர்கள் மூலம் கொல்லுவிக்கவும் முடியாது, மற்றவர்கள்மூலம் கொல்லுவிக்கவும் முடியாது, என்று குறிப்பிட்ட ஒரு சூழ்நிலையில் கூறுகிருர், என்பது உண்மை தான். ஆயினும் இறைவனே அவ்வாறு கூறுகிருர் என்பதையும், அர்ச்சுனனுடன் தம்மையும் சேர்த்தே சொல்லிக்கொள்ளுகிருர் என்பதையும் நினைத்துப் பார்க்கும்போது நமக்குப் புல்லரிக்கிறது. பேருண்மைப் பொருளின் இவ்வியல்பை அறிவு பூர்வமாக உணர்ந்து ஏற்றுக்கொண்டால், பிறகு பிறவியில்லாத ஒன்றைக் கொல்லப் போவதாக அர்ச்சுனன் நினைப்பதற்குக் கொஞ்சம்கூட நியாயமில்லை.

ஆன்மா அழிவில்லாதது என்ருல் அதன் பொருள் என்ன? அதற்கு பின்வருமாறு உதாரணம் தரப்படுகிறது.

வாஸாம்ஸி ஜீர்ணுனி யதா விஹாய
நவானி க்ருஹ்ணுதி நரோ பராணி
ததா் சரீராணி விஹாய ஜீர்ணுனி
அன்யானி ஸம்யாதி நவானி தேஹீ 2:22

நைந்து கிழிந்த ஆடைகளை அகற்றிவிட்டு ஒருவன் புது ஆடைகள் அணிவது போல் உடல் புகுந்த ஆன்மா, நைந்து பயனற்றுப் போன உடலைப் புறக்கணித்துப் புதியவற்றை அடைகிறது.

கீதையிலிருந்து எடுத்துத் தரப்படும் பிரபல செய்யுட்களில்

இது ஒன்று. ஒருவரிடமுள்ள அகந்தை மைய உயிரியக்கம் (ஜீவாத்மா) அவ்வுடலைக் கைவிட்டுப் புதிய அனுபவங்கள் பெறுவதற்குத் தேவையான வேறு ஒரு உருவாக்கத்தைப் பெறுகிறது. இது மிகச் சிறந்த ஒரு உதாரணத்தின் மூலம் தெளிவாக்கப்படுகிறது. எல்லோருக்கும் விளங்கக்கூடிய உதாரணத்தை பகவான் வாயிலாக வியாசர் கூறும்போது, மறக்க முடியாதவாறு அது நமது உள்ளத்தில் பதிகிறது.

தன் தேவைக்கு ஏற்றவாறு ஒருவன் ஆடைகளை மாற்றிக் கொள்வது போல, அகந்தை மைய உயிரியக்கமும் (ஜீவாத்மாவும்) ஒரு உடலைக் கைவிட்டு தான் அடுத்து அனுபவிக்க விரும்பும் வேறு அனுபவங்களுக்கு ஏற்ப மற்றொரு உடலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறது. துண்டு ஒன்றைக் கட்டிக் கொண்டு யாரும் ஆபீசுக்குப் போக மாட்டார்கள். கழுத்துப் பட்டையும், டையும் கழுத்தை இறுக்க, யாரும் டென்னிஸ் விளையாடப் போக மாட்டார்கள். செய்யப் போகும் வேலைக்குத் தகுந்தவாறு ஒவ்வொருவரும் உடை மாற்றிக் கொள்வார்கள். மரணம் வருவதற்குக் காரணமே, அதற்குப் பின் நடப்பதும்கூட இது தான். எல்லோருக்கும் விளங்கக்கூடிய இந்த அற்புதமான உதாரணத்தை கிருஷ்ணர் சொல்லும்போது, அர்ச்சுனன் மட்டுமின்றி, பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் அடுத்திருந்து கேட்கும் நாமும் கூட இந்நூலில் வரும் 18 விரிவுரைகளை மிகத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

கிழிந்து கந்தலாகிவிட்ட ஆடைகளை மாற்றிக் கொள்ளும் போது, அதிலும், புதிய உடை அணிவதற்காக மாற்றும்போது — நமக்கு வருத்தமாகவா இருக்கிறது? இல்லை. அதைப்போல, குறிப்பிட்ட ஒரு உருவாக்கத்தில் இருக்கும்போது, 'என் வளர்ச்சி யாத்திரையில் முன்னேறுவதற்கு இந்த உடல் இனி பயன்படாது!' என்று மன அறிவு அமைப்பு முடிவு செய்கிறது. 'நைந்து தேய்ந்த' உடல் நிலைக்கும் ஒருவருடைய வயதுக்கும் சம்பந்தமில்லை. இது அவருடைய திடகாத்திரத்தைப் பற்றிய பிரச்சனையே அல்ல. குறிப்பிட்ட ஓர் உடல் தனக்குத் தகுந்ததா அல்லது கைவிடத் தகுந்ததா என்று அதிலுள்ள ஜீவாத்மாவாகிய அகந்தையைத் தவிர வேறு யாரும் முடிவு செய்ய முடியாது.

ஆயினும் இதில் உள்ள உண்மையைச் சிலர் ஏற்கத் தயங்குவதாகத் தோன்றுகிறது. தாங்கள் பார்த்தவற்றைக் கொண்டு அவர்கள் மேலெழுத்தவாரியாகக் குறை கூறுகிறார்கள். நல்ல வாலிபப் பருவத்தில் பலர் இறந்துவிடுகிறார்களே அவர்களுடைய உடற்கட்டு, 'நைந்து தேய்ந்தது' என்று எப்படிச் சொல்ல முடியும்? இப்படிப்பட்ட சந்தேகங்கள் அவர்களுக்கு உண்டாகின்றன. ஆனால் அகந்தைக்கு அப்படிப்பட்ட ஐயம் ஏதுமில்லை. 'என் வளர்ச்சித் தேவைகளுக்கு இந்த உடலால் இனிப்

பயனில்லை' என்று அது முடிவு செய்கிறது. பணக்காரர் ஒவ்வொரு வருடமும் தனது வீட்டை விற்றுவிட்டு புது வீடு வாங்குகிறார். பழைய காரை விற்று விட்டு ஒரு புது மோட்டார் கார் ஆண்டுதோறும் வாங்குகிறார். வாங்குகிறவரைப் பொறுத்த வரை 'ஏறக்குறைய இது புது வீடுதான், அல்லது புதுக் கார் தான்' என்று நினைக்கிறார்கள். ஆனால் விற்பவருக்கு அது பயனற்றதாகத் தோன்றுகிறது. அவ்வாறே ஒரு உடல் தனக்குப் பயனற்றதா இல்லையா என்பதை அந்த 'உடல் அணிவோன்' ஆகிய ஜீவாத்மாவை தவிர வேறு யாரும் முடிவு செய்வதற் கில்லை.

சுருங்கச் சொன்னால், இதற்கு முன் 12'வது செய்யுளில் எடுத்துரைத்த மறுபிறவிக் கொள்கை இங்கு வேறு முறையில் அழுத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது.

மொத்தத்தில் ஆன்மிக உணர்வு இல்லாதவர்கள் மரணத் திற்கு அஞ்சுவார்கள் என்ற கருத்து நிச்சயமாக இதன் மூலம் அர்ச்சுனனுக்கு விளங்கியிருக்கும். மரணம் என்றால் என்ன நடக் கிறது என்று தெரிந்து கொண்டவர்கள் அதுபற்றிக் கவலையோ, வருத்தமோ அடைய மாட்டார்கள். பழைய உடையை அகற்றி விட்டு, புத்தாடை அணியும்போது எவ்வாறு நமக்கு எவ்விதக் கஷ்டமும் தோன்றுவதில்லையோ, அதைப் போல ஓர் உடலில் உள்ள அகப்பொருள் (ஆன்மா) அதைத் துறந்து போவதில் துன்பத்திற்கோ வருத்தத்திற்கோ இடமில்லை. ஆடைகளைக் களைந்த பிறகு நாம் நிர்வாணமாக நிற்பதில்லை. உடல்புகுந்த ஆன்மாவாகிய உட்பொருளும் அவ்வாறே, புது அனுபவங்களைப் பெறுவதற்கு விரைவில், தனது அடுத்த இயக்கத்திற்கு ஏற்ப ஓர் உருவைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறது. வளர்ச்சி, மாற்றம் முதலியவையெல்லாம் மன அறிவு, கட்டுக்கோப்பு பெற்ற இயந்திரத்திற்குத்தான் உண்டே தவிர, உட்பொருளுக்கு அல்ல. ஆன்மா மாற்றமில்லாத முழுமை பெற்றுத் திகழ்கிறது. அதற்கு வளர்ச்சித் தேவைகள் எதுவும் இல்லை.

அகப்பொருளிக்கு ஏன் மாறுதல் இல்லை? பகவான் இதை விளக்கிப் பேசுகிறார்:

நைநஞ் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக:
நசைனங் க்லேதயந்தயாபோ ந ஸோஷயதி மாருத: 2:23

ஆயுதங்கள் அதை வெட்டி வீழ்த்துவதில்லை. தீ அதை எரிப்ப தில்லை, நீர் நனைப்பதில்லை; காற்று அதை உலர்த்துவதுமில்லை.

சாதாரணமாக காண்பதைக் கொண்டு காண முடியாததை விளக்குகிறோம். இந்த முறையில் தெரியாததை முழுமையாக விளக்கிவிட முடியாது என்றாலும், ஓரளவு கோடி காட்ட

முடியும். அறிவுக்கு எட்டாத ஒன்று விளக்கத்திற்குப் பிறகும் அப்படியேதான் இருக்கும். அதைப் போலவே, மாற்றமில்லாத ஆன்மாவை விவரிப்பதற்கு, அர்ச்சுனனுக்கு மட்டுமின்றி நம் எல்லோருக்கும் நன்ருகத் தெரிந்ததும், மாறிக் கொண்டே இருப்பதுமான உலக உதாரணங்களைக் கொண்டு கிருஷ்ணர் முயற்சிக்கிருர். மாறும் தன்மையுள்ள இந்த உலகத்தில் எல்லாப் பொருள்களும் ஆயுதங்களினுலோ, தீக்கு இரையாகியோ, நீரில் மூழ்கியோ, காற்றில் உலர்ந்தோ மடிகின்றன. பொருள்களின் அழிவுக்குப் பிரபஞ்சத்தில் காரணமாக இருப்பவை இவையே. ஆனால் ஆன்மாவை அழிக்க இவை பயன்படுவதில்லை என்று கிருஷ்ணர் கூறுகிருர்.

ஆயுதங்கள் அதை வெட்டி வீழ்த்துவதில்லை: பொருளாக இருந்தால் அதைக் கோடாரி கொண்டு பிளந்து விடலாமென்று நமக்குத் தெரியும். துப்பாக்கியால் ஒருவனைச் சுட்டுக் கொன்று விடலாம். ஆனுல் நீரையோ, நெருப்பையோ, காற்றையோ வெட்டவெளியான ஆகாயத்தையோ அந்த ஆயுதங்களினுல் அவை எவ்வளவு கூரியவையாக இருந்த போதிலும்—வெட்டி அழிக்க முடியாது. எந்த ஆயுதமும் அதைவிடச் சூக்குமமாக இருக்கும் பொருளைச்சிதைக்க இயலாது. இது அடிப்படையான ஓர் உண்மை. மிகச் சூக்குமமான ஆன்மா வெட்டவெளிக்குக் காரணமானது. எனவே அதைவிடச் சூக்குமமானது. ஸ்தூல ஆயுதங்கள், சூக்கும ஆன்மாவை வெட்டி வீழ்த்த முடியாது என்பது தெளிவு.

தீ அதை எரிப்பதில்லை: பொதுவாக நெருப்பைத் தவிர மற்ற எல்லாவற்றையுமே அழிக்கக் கூடியது நெருப்பு. ஆனுல் அது தன்னைத்தானே எரித்துக் கொள்ள முடியாது. எரிக்கும் சக்தி தான் அதன் சாராம்சமான இயல்பு.—அதன் உண்மை. தனது சாராம்ச உண்மையாகிய எரிசுபாவத்தை அது எரித்துக் கொள்ள முடியாது. ஓரிடத்தில் தீப் பற்றிக் கொண்டால் அந்த இடப் பரப்பில் உள்ள பொருள்கள் எரிந்து போகுமே தவிர, பரப்பே எரிந்து போவதில்லை. பரப்பு என்பது வெட்டவெளி. அதையே நெருப்பினுல் ஒன்றும் செய்ய முடியவில்லை என்ருல், பரப்புக்குக் காரணமான ஆன்மீகப் பொருளை அழிக்க நெருப்பினுல் முடியாது என்று தெளிவாகிறது அல்லவா?

நீர் அதை நனைப்பதில்லை: ஒரு பொருளில் இடைவெளியிருந்தால் அதன் வழியாக நீர் உள்ளே இறங்கும். பாலிலோ நீரிலோ ரொட்டித் துண்டைப் போட்டால் அதிலுள்ள இடைவெளிகளில் திரவப் பொருள் புகுந்து நனைத்து விடுகிறது. ரொட்டியில் உள்ளதைப் போன்ற இடைவெளிகள் இரும்பில் இல்லை. ஒரே மூலத்தினுலான திடப் பொருளுக்குள் நீர் இறங்காது. எனவே அது நனைந்து போவதில்லை. எத்தனையோ பேர் நீரில் மூழ்கி இறந்

திருக்கிறார்கள். நீரின் அழிக்கும் சக்திக்கு அது மற்றொரு உதாரணம்.

விரைவாக அழிக்கும் முறை அது. ஈரப் பதம்பட்டு, துருப் பிடித்த இரும்பு கூடக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்னப்பட்டு வருகிறது. மெதுவாக அழிக்கும் தன்மையும் நீருக்கு உண்டு என்பதை இது காட்டுகிறது. இந்த முறைகளில் எல்லாம் அழியாதது ஆன்மா.

காற்று அதை உலர்த்துவதில்லை: ஒரு பொருளில் ஈரப்பதம் கொஞ்சமாவது இருந்தால்தான் ஈரத்தை அகற்றும் பிரச்னை எழுகிறது. ஒவ்வொரு பொருளிலுமுள்ள படிகமணியிலும் நீர் இருக்கிறது. அந்த நீரை அகற்றி விட்டால் மணியின் திட்டவட்டமான வடிவமே மாறித் தூளாகிவிடும். காய்கறி, உணவுப் பண்டங்கள் முதலியவற்றில் நீரை அகற்றிப் பல நாட்களுக்குப் பக்குவப் படுத்தி வைக்கப்படுகிறது. ஈர நுண்ணணுக்கள் அவற்றிலிருப்பதால் அவற்றை உலர்த்தி உருமாற்றி வைக்க முடிகிறது. ஆனால் ஆன்மாவில் ஆன்மீகப் பொருள் மட்டுமே இருக்கிறது. எனவே அதை உலர்த்தி உருக்குலைத்து அழிக்க முடியாது.

இது வெறும் பதவுரை. இதைத் தவிர இதிலுள்ள ஆழ்ந்த கருத்தை கீழ்கண்ட செய்யுள் விளக்குகிறது. ஆன்மீகப் பொருள் எப்படி நிரந்தரமானது, ஏன் அழிவில்லாதது என்பதை கிருஷ்ணர் விளக்குகிறார். எப்படி, எந்த காரணத்தைக் கொண்டு ஆன்மா அழிவில்லாதது என்று நாம் தெரிந்து கொள்ள முடியும்?

அச்சேத்யோய மதாஹ்யோயம்
அக்லேத்யோ சோஷ்ய ஏவ ச
நித்ய: ஸர்வகத: ஸத்தாணூர்
அசலோயம் ஸநாதன 2:24

இம்மெய்ப் பொருளை வெட்டவோ, எரிக்கவோ, நனைக்கவோ, உலர்த்தவோ இயலாது. அது நிரந்தரமானது, எங்கும் விரவி நிற்பது, நிலையானது, அசைவில்லாதது, புராதன மானது.

இயற்கையும் மனிதனும் வகுத்துள்ள எந்த நாச முறைகளிலும் ஒரு பொருளை அழிக்க முடியாது என்றால் அது நிரந்தரமானதாகத்தான் இருக்க வேண்டும்.

இரண்டாவது வாக்கியத்தில் இறைப் பொருளின் சில தன்மைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவை ஏதோ கிடைத்ததை மனம் போனவாறு திரட்டிக் கொடுத்த பட்டியல் அல்ல. ஒவ்வொரு சொல்லும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள கருத்தை, அக் கருத்துகளுக்கு ஏற்ற வரிசையில் தொகுத்தளிக்கப்

பட்டிருக்கிறது.

முதலாவது வரியில் ஆன்மா அழிவில்லாதது என்று விளக்கப்படுகிறது. அப்படிப்பட்ட ஒன்று நித்தியமானதாகத் தான் இருக்க வேண்டும். அப்படி நிரந்தரமாக இருப்பது எங்கும் விரவியதாக (சர்வ கதமாக) இருக்கும்.

எங்கும் விரவியது என்று சுருக்கமாகக் கூறிய போதிலும், ..பமாகப் புரிந்து கொள்ள முடியாத ஆழ்ந்த பொருட் செறிவு கொண்டது அது. எல்லா இடங்ளிலும் நிறைந்து நிற்கும் ஒன்று 'எங்கும் விரவியது'. மெய்ப்பொருள் இல்லாத இடமே இல்லை. எதிலும் இருப்பதால் அதற்கு உருவமில்லை. ஒரு பொருளைச் சுற்றி வேறொன்று அணைத்திருந்தாலொழிய, அப்பொருளுக்கு உருவம் வராது. மெய்ப்பொருள் எல்லாவற்றையும் சுற்றி அணைத்திருப்ப தால் அவற்றிற்கெல்லாம் உருவம் ஏற்படுகிறது. மெய்ப்பொருளுக்கு உருவமில்லை.

வெளிப்பரப்பு மனிதனை அணைத்து நின்று, அவனைச் சுற்றி உருவக் கோடு வரைகிறது. அதனால் தலை, உடல், கை கால்களு டன் கூடிய உருவமாக அவன் தோற்றமளிக்கிறான்.. மற்றொன்றி னால் சூழப்பட்டு வரையறுக்கப்பட்டால்தான் உருவம் தோன்று கிறது. எங்கும் நிறைந்ததை எங்கும் நிறைந்ததே அணைத்து நிற் கிறது. அதன் வரையறைகளைக் காட்டுவதற்கு வேறெதுவும் இல்லை. எனவே அதற்கு உருவம் இல்லை.

நித்தியமான, வேறு பொருட் கலப்பில்லாத, எங்கும் விரிந்து பரவிய ஒன்று, நிலையாக இல்லாமல் வேறு எப்படி இருக்கும்? மாறுதல் ஏற்படுவதற்கு வழியில்லையாகையால் அது நிலையானது. (ஸ்தாணு) நிலையாக உள்ள எதற்கும் சலனம் இருக்காது. அசைவற்றதாக இருக்கும். அசைந்தாலோ, நகர்ந்தாலோ இடமும், காலமும் மாறுபடுவதால், கால, இட வேறுபாடுகள் இல்லாத அதற்கு சலனமில்லை. அது எப்போதும், எல்லாவற்றி லும் நிறைந்திருப்பதால், ஏற்கெனவே அது இல்லாத இட மும் இல்லை; காலமும் இல்லை. எனக்குள் நானே நடமாட முடி யாது. அவ்வாறே நம் எல்லோருக்குள்ளும் இருப்பது எங்கும் நகர முடியாது. இயக்கமில்லாத ஒன்றை 'சலனமற்றது', 'அசைவு இல்லாதது' என்று கூறுகிறோம்.

நிலையானது என்று முதலில் கூறிய பிறகு, சலனமற்றது என்றும் கூறுவது, ஒன்றையே திருப்பித் திருப்பிச் சொல்லுவது போலத் தோன்றக் கூடும். இரண்டுக்கும் ஏறக்குறைய ஒரே அர்த்தம்தான். நிலையானது என்றால், ஆல மரம் போல் அடி மட்டத்தில் அசைவற்றிருப்பது. வேரோடிய இடத்தில் மரம் அசையவில்லை என்றாலும், கிளைகள் ஆடுகின்றன. இறைப் பொரு ளுக்கு அதுவுமில்லை என்று காட்டுவதற்காக 'சலனமில்லை'

என்றும் கூறப்படுகிறது. இறைப் பொருள் 'அடி' மட்டத்தில் நிலை யானது. 'மேற்' பகுதியிலும் அசைவில்லாதது. எந்த இடத்திலும் அசைவு இல்லை என்பதே அதனுடைய அற்புதச் சிறப்பு.

சநானமானது: புராதனமாக உள்ளது. இதற்கு இரண்டு மட்டங்களில் பொருள் கொள்ளலாம். ஆன்மீகப் பொருள் புதிதாகத் தோன்றியதல்ல. மிகப் புராதனமானது. ஆகையால் பிரம்ம வித்தை பயிலும் நாம் அதை அப்படியே உண்மை என்று ஏற்கத் தயங்க வேண்டியதில்லை. புதிதாக ஒரு கோட்பாடு அல்லது கொள்கையை ஒருவர் வெளியிட்டால், அதைப் பற்றி மேலும் சோதனைகள் நடத்தி, அது சரி என்ற உறுதி நமக்கு ஏற்பட்டால், பிறகு அதை ஏற்றுக் கொள்ளுகிறோம். ஆன்மாவைப் பற்றிய பிரச்னை அப்படியல்ல. ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே புராதனமானதென்று ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று அது. சாதாரணமாக 'புராதனம்' என்ற சொல்லை இந்த மட்டத்தில் நாம் உபயோகித்து வருகிறோம்.

அத்துடன் சநாதனம் என்று கூறியவுடன் நம் உள்ளத்தில் வேறு ஒரு கருத்தும் தோன்றுகிறது. இடம், காலம் என்ற வரையறைகளுக்கு அப்பாற்பட்டது என்ற எண்ணமும் உண்டாகிறது. உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும், எல்லாக் காலங்களிலும், எல்லா மதங்களிலும் இறையுணர்வு பெற்று முழுமை அடைந்தவர்களுடைய ஆன்மானுபவம் ஒன்றாகவே இருந்திருக்கிறதென்ற உணர்ச்சியும் தோன்றுகிறது. இம்மாதிரி பொருள் கொள்வதும் பொருத்தமாகவே இருக்கிறது. பகவான் மேலும் விவரிக்கிறார்:

அவ்யக்தோய—மசிந்தயோய —மவிகார்யோய—முச்யதே
தஸ்மா தேவம் விதித்வைநம் நானுசோசிதுமர்ஹஸி 2:25

இது (ஆன்மா) வெளிப்படையாகத் தெரியாதது. சிந்தனைக்கு எட்டாதது; மாற்ற முடியாதது. எனவே, இதன் தன்மையைத் தெரிந்து கொண்ட பிறகும்கூட, நீ வருந்தக் கூடாது.

நிரந்தரமான, எங்கும் நிறைந்த ஆன்மா கண்ணுக்குப் புலப்படாதது, சிந்தனையில் அடங்காதது, மாறாதது. அதனுடைய தன்மையை அறிந்தவர்கள், தாங்கள் கொல்லுவதுமில்லை, இறப்பதுமில்லை என்று உணர்ந்து கொள்வார்கள். இக் கவிதையிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் தர்க்க ரீதியான உண்மையொன்றை எடுத்துரைக்கிறது.

வெளிப்படையாகத் தெரியாதது: நெருப்பு, நீர், மண் போன்று நமக்குத் தெரிந்த ஐம் பெரும் தனிமங்கள் மேலும் மேலும் சூக்குமமாகி வரும்போது நமது புலனறிவுக்கு எட்டாத

அளவுக்கு சக்தியிழந்து விடுகின்றன. மண் முதல் காற்று வரை எடுத்துக் கொண்டால், அவை நுணுக்கமுற்று, நுண்ணியதாகி கடைசியில் புலனறிவுக்கு எட்டாத நிலைக்குப் போய் விடுகின்றன. ஈதர் நிலை என்பது வெட்ட வெளியுடன் வெளியாகக் கலந்து விடும் நிலை. அவை ஐந்தும் இந்த நிலை அடையும்போது நமது ஐம்பொறிகளில் எதனாலும் அதைத் தெரிந்து கொள்ள முடிவதில்லை. தனிமங்களை ஓரளவுக்கு நமது புலன்கள் உணருகின்றன. ஆனால் இந்த ஐந்து ஆதாரப் பொருள்களையும் விட சூக்குமமானது ஈதர். அதை உணர்ந்தறிய முடியாது. எனவே வெளிப்படையாகத் தெரியாமல் இருக்கிறது என்று நாம் வைத்துக் கொள்ள வேண்டும்.

நமது ஐம்பொறிகளில் ஏதோ ஒன்றிற்குப் புலனாவதை 'தெரிவது' அல்லது 'தோன்றுகிறது' என்கிறோம். அவற்றிற்கு அப்பாற்பட்டதை 'தெரியாதது' என்று சொல்லுகிறோம். ஒரு மாங் கொட்டையைப் பார்த்தோ, முகர்ந்தோ, கேட்டோ, சுவைத்தோ அல்லது தொட்டோ அதற்குள் ஒரு மரம் இருக்கிறது என்று தெரிந்து கொள்ள முடியாது. ஆயினும் கொட்டையிலிருந்துதான் மரம் வருகிறது என்று எல்லோருக்கும் தெரியும். அதாவது விதையின் உள்ளே மரம் தோன்றா நிலையில் இருக்கிறது. அதைப் போலவே இறைப் பொருள் 'வெளிப்படையாகத் தெரியாத நிலையில் இருக்கிறது' என்றால், நமது புலன்களினால் அறிந்து கொள்ள முடியாதவாறு இருக்கிறது என்பது கருத்து. மற்ற பொருள்களை அறிவதுபோல் அதை ஏன் புலன்களினால் அறிய முடியவில்லை? இந்தப் பிரச்னை உபநிடதங்களில் விளக்கப்பட்டிருக்கிறது. புலன்கள் இயங்குவதே அந்த மெய்ப்பொருளினால்தான்.

சிந்தனைக்கு எட்டாதது: மெய்ப்பொருளைக் கண்டு கொள்ள முடியாது என்று கூறியதோடு மனமும், அறிவும்கூட அதைக் கண்டு கொள்ளும் சக்தியற்றவை என்று இதன் மூலம் தெரிவிக்கப்படுகிறது. மனமும், அறிவும் தாமாக இயங்கும் சக்தி பெற்றவை அல்ல. அவற்றை இயங்கச் செய்வதும் நம்முள் இருக்கும் மெய்ப்பொருளே. தானே இயங்க சக்தியில்லாத ஒன்று, தனது இயக்கத்திற்குக் காரணமான மெய்ப்பொருளைக் கண்டுகொள்ள இயலாது என்று சொல்லத் தேவையில்லை.

தொலைநோக்கியை வைத்துக் கொண்டு ஒருவர் நட்சத்திரத்தைப் பார்க்கலாம்; தன்னைத்தானே பார்த்துக் கொள்ள முடியுமா? பார்ப்பவர், பார்க்கப்படுவது ஆகிய இரண்டும் ஒன்றாகவே இருக்க முடியாது. ஆகவே இறைப் பொருள் ஒருவருடைய மனத்திற்கும், அறிவுக்கும் எட்டாதது. இக் கருத்தைத் தான் கிருஷ்ணர் இங்கு, 'சிந்தனைக்கு எட்டாதது' என்று குறிப்பிடுகிறார்.

மாற்ற முடியாதது பல பகுதிகளால் ஆனதல்ல. அதற்குப் பகுதிகள் இல்லை. ஏனெனில் பகுதி என்றவுடன் அதற்கு உருவமும் உண்டு என்று ஆகிவிடுகிறது. உருவம் பெற்றவை எல்லாம் ஒரு வரையறைக்குள் அடங்குபவை; மாற்றங்களுக்கும் மாறுதல்களுக்கும் உள்ளாகும் தன்மையுள்ளவை. பரம் பொருளுக்கு இவை இல்லை.

எனவே பரம் பொருள் மாறுத, வெளிப்படையாகத் தோன்றுத, சிந்தனைக்கு அப்பாற்பட்ட, மாற்றப்பட முடியாத ஒன்று என்று பறைசாற்றப்படுகிறது.

துயரத்தைக் கைவிடுமாறு அர்ச்சுனனுக்கு கிருஷ்ணர் இவ்வாறு புத்திமதி கூறுகிருர். ஆன்மாவின் அழிவின்மையைப் பற்றித் தெரிந்தவன் 'கொல்லப் போகிறேனே' என்றோ, 'கொல்லப்படப் போகிருர்களே' என்றோ வருத்தப்பட இடமில்லை.

ஆன்மா நிரந்தரமானதல்ல என்று வைத்துக் கொண்டாலும், சாதாரணமான, உலக நோக்கில்கூட, துயரம் கூடாது என்று அடுத்து தெரிவிக்கப்படுகிறது.

அத சைனம் நித்யஜாதம்
நித்யம் வா மன்யஸே ம்ருதம்
ததாபித்வம் மஹாபாஹோ
நைநம் சோசிதுமர்ஹஸி 2:26

இந்த ஆன்மா மீண்டும் மீண்டும் பிறப்பதும், இறப்பதுமான தன்மை பெற்றதென்று வைத்துக் கொண்ட போதிலும், ஒப்பற்ற கைவன்மை மிக்கவனே, அதற்காக நீ துயரப்படுவது தகாது.

வேண்டுமென்றே, வாதத்திற்காக, லோகாயதவாதிகளின் நோக்கை இங்கும், இதற்கு அடுத்த சில செய்யுட்களிலும் எடுத்துக் கொண்டு, பகவான் அதை அலசிக் காட்டுகிருர். புலனறிவுக்கு எட்டுவது மட்டுமே உண்மை என்பது லோகாயதவாதிகளின் கருத்து. இதன் அடிப்படையில் பார்க்கும் போது எண்ணற்ற பிறப்பும் இறப்பும் மாறி மாறி நடந்து கொண்டிருப்பதுதான் அவர்களுக்குத் தெரிகிறது. இடைவிடாது நடந்து கொண்டிருக்கும் இந்த இம்மாறுதல்தான், அவர்களைப் பொறுத்தவரை, 'வாழ்வு'. இந்த பிறப்பு—இறப்புச் சூழலே வாழ்வு என்று வைத்துக் கொண்டாலும், 'உன்னைப் போன்ற கைவன்மை மிக்க வீரன், போர்க்களத்தில் நின்றுகொண்டு, மழை கால நீரில் தோன்றி மறையும் நீர்க் குமிழிகள் போன்ற இந்த வாழ்வுக்காக வருந்தி, வருத்தத்தால் நிலைகுலைந்து உட்கார்ந்திருப்பது சரியா?' என்று கேட்கிருர் கிருஷ்ணர். சரியில்லை; ஏன் தெரியுமா?

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்
த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச
தஸ்மாதபரிஹார்யேந்த்தே
ந த்வம் சோசிது—மர்ஹஸி 2:27

பிறவி பெற்ற யாவும் இறப்பது உறுதி, இறந்தன யாவும் பிறப்பதும் உறுதி. ஆகையால் தவிர்க்க முடியாத முறையில் நடந்து கொண்டிருக்கும் ஒரு நிகழ்ச்சி பற்றி நீ துக்கப்படுவது தவறு.

பிறவிபெற்ற ஒவ்வொன்றும் நிச்சயமாக இறந்தேயாக வேண்டும். இறந்த பிறகு மீண்டும் அவை இவ்வுலகில் பிறக்கின்றன. எங்கிருந்தோ உருவங்கள் வெள்ளம்போல் தோன்றி, எங்கேயோ போய் மறைகின்றன என்று லோகாயத மத வாதிகள் கூறும் அடிப்படையை வாதத்திற்காக ஏற்றுக் கொண்டு கிருஷ்ணர் பேசுகிறார். இறை நம்பிக்கை கொண்டவர்கள் தனி அகந்தைதான் உருவெடுக்கிறது என்று நிச்சயமாக நம்புகிறார்கள். மேலும் சில அனுபவங்களைப் பெறுவதன் மூலம், வாழ்வைச் சரியானபடி அறிந்து, வளர்ச்சி பெற்று, கடைசியில் மெய்நிலை பெறலாமென்று அகந்தை உருவாக்கம் கொள்ளுகிறது. கடவுள் உண்டு என்பவர்களும், இல்லை என்பவர்களும் பொதுவாக ஒரு நிலவரத்தை ஒப்புக் கொள்ளுகிறார்கள். பிறப்பும், இறப்பும் அடுத்தடுத்து வந்து கொண்டிருப்பதே வாழ்வு என்பதை இவ்விருவருமே மறுக்கவில்லை.

பிறப்பும், இறப்பும் வாழ்வின் தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகள் என்றால், தவிர்க்க முடியாத அந்நிகழ்ச்சித் தொடர்பற்றி அறிவுள்ளவர்கள் வருந்துவார்களா? கொளுத்தும் வெய்யிலில் நின்று கொண்டு, ''ஐயோ, காலெல்லாம் சுடுகிறதே, கண் கூசுகிறதே'' என்று ஓலமிடுபவன் மகா முட்டாளாக இருக்க வேண்டும். இவ்வுலகத்தில் பிறந்த பிறகு 'மரணம் வரப் போகிறதே' என்று வாழ்வின் இயல்புபற்றி வருந்துவதைப் போன்ற முட்டாள்தனம் வேறு இல்லை.

இந்த நோக்கில் பார்த்தாலும், எதிரில் உள்ளவர்களைக் கொல்ல நேரிடுவதற்காக கண்ணீர் சிந்தி நிற்பவன் தனது அறியாமையை உலகுக்குப் பிரகடனம் செய்து கொள்ளுகிறான். கிருஷ்ணருடைய வாழ்க்கை முழுவதுமே மகிழ்ச்சிக்கும், ஆனந்தத்திற்கும் எடுத்துக்காட்டாக இருக்கிறது. ''புன்முறுவலுடன் இருப்பவனே புத்திசாலி'' என்று சொல்லி, அவருடைய வாழ்க்கைத் தத்துவத்தை இரத்தினச் சுருக்கமாக விளக்கிவிடலாம். எனவே தமது அருமை நண்பன் அழுது வடிந்து கொண்டு, சோர்வடைந்து உட்கார்ந்துவிட்டதைக் கண்டதும், அவனை இந்த மருட்சியிலிருந்து விடுவித்து, வாழ்வின்

உண்மையான நோக்கத்தை உணரச் செய்ய வேண்டுமென்ற உற்சாகம் கிருஷ்ணருக்கு உண்டாகிறது.

அடுத்த பத்துப் பாட்டுக்கள் வாழ்வு பற்றி, பொதுவாக சாதாரண மக்களிடையில் நிலவும் கருத்தை ஆராயும் முறையில் அமைந்திருக்கின்றன. இந்த முறையில், ''காரிய—காரண சேர்க்கையினுல் தோன்றியவைகளுக்காக நாம் வருந்துவது முறையாகாது'' என்று சங்கரரும் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

அவ்யக்தா தீனி பூதானி வ்யக்த—மத்யானி பாரத
அவ்யக்த—நிதனுன்யேவ தத்ர கா பரிதேவனு

2:28

ஆரம்பம் புலனுகாத, முடிவிலும் புலனுகாது இருக்கும் உயிரினங்கள், இடையில் மட்டும் புலனுவதாகத் தோன்றுகின்றன. இதைப் பற்றி துயரப்படுவதற்கு என்ன இருக்கிறது பாரதா?

ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் நிச்சயமான காரணம் உண்டு என்பது லோகாயதவாதிகளின் முடிவு. 'காரண' உலகத்திலிருந்து 'விளேவு' உலகம் பிறக்கிறது. பெரும்பாலும் விளேவுகள் நமக்கு புலனுகின்றன, காரணங்கள் புலனுவதில்லே. புலனுகாத நிலேயிலிருந்து புலனுகும் நிலேக்குக் கொண்டு வருவதே பொருள் படைப்புத் திட்டம். இதுதான் லோகாயத நோக்கு.

இன்று புலன்களுக்குத் தென்படும் உலகம், படைப்புக்கு முன் நமக்குத் தென்படாத நிலேயிலிருந்தது. இப்போது நம் அறிவுக்கு எட்டுகிறது. நாளடைவில் மறுபடியும் அது புலனுகாமற் போய்விடும். இங்குள்ளவை எல்லாம் எங்கிருந்தோ வருகின்றன, எங்கோ போகின்றன—லோகாயதவாதிகள் கூறுவது ஏறக்குறைய இதுதான். இந்த நோக்கிலிருந்து பார்த்தாலும், துக்கப்படுவதற்கு இதில் ஒன்றுமில்லேயே. வண்டிச் சக்கரம் சுழலும்போது அதன் ஆரக்கால்களில் சில மேலே வருகின்றன, சில கீழே போகின்றன. அடுத்த கணம் கீழே உள்ளவை மேலே வருகின்றன, மேல்வந்தவை கீழே போகின்றன. இது ஓயாமல் நடந்து கொண்டிருக்கிறது. இதற்காகத் துக்கப்படுவானேன்?

முன்னுல் சொன்ன கனவுக் குழந்தைகளின் உதாரணத்தையே எடுத்துக் கொள்ளலாம். நாம் விழித்துக் கொண்டிருந்த போது அவை இல்லே. கனவில் தோன்றின. விழித்தெழுந்தவுடன் மீண்டும் அவை புலனுகவில்லே. இல்லாத ஒரு மனேவி கனவில் வந்துவிட்டு போய்விட்டாளே என்று ஒரு பிரம்மச்சாரி அழுத கதையாகத்தான் இருக்கிறது இதுவும். இல்லாத மனேவியும்,

பிறக்காத குழந்தைகளும் இப்படி கனவில் தோன்றி மறைந்து விட்டார்களே என்று யார் அழுவார்கள்?

கிருஷ்ணர் கூறுவதைப் போல எங்கும் பரந்த, நிரந்தர மான, மாறுதலோ, மறைதலோ இல்லாத இறைப் பொருள் ஒன்று இருப்பதும், அதனுல்தான் பிறப்பு—இறப்பு என்ற ராட்டினம் சுழன்று கொண்டிருப்பதும் உண்மையாஞல், பல்லாயிரம் தடவை விளக்கியும் கூட நாம் ஏன் அறிய முடியவில்லை? அகப்பொருளினை அறிய முடியாததற்காக, தாம் அர்ச்சுனனைக் குறை கூறவில்லை என்று கிருஷ்ணர் சொல்லுவதாக, சங்கரர் இச்செய்யுளுக்குப் பொருள் கூறுகிருர்.

''இப்போது எடுத்துரைக்கப்பட்ட அகப்பொருளை உணருவது மிகக் கஷ்டம். உன்னை மட்டும் குறை கூறிப் பயன் என்ன? இதற்குக் காரணமான அறியாமை எல்லோருக்கும் பொதுவானதாக இருக்கிறது'' என்று சங்கரர் இதற்கு விளக்கவுரை அளிக்கிருர். அகப்பொருளை உணர்ந்து கொள்ளுவது ஏன் இவ்வளவு கடினமாக இருக்கிறதென்று சிலர் கேட்கலாம். அதற்கு கிருஷ்ணர் கூறும் பதில் பின்வருமாறு:

ஆஸ்சர்யவத் பச்யதி கஸ்சிதேனம்
ஆஸ்சர்யவத்வததி ததைவ சான்ய:
ஆஸ்சர்யவச்சைனமன்யஸ்ருஞேதி
ஸ்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித்: 2:29

அதை ஆச்சரியமெனப் பார்ப்பவர் சிலர், ஆச்சரியமெனப் பேசுபவர் சிலர், ஆச்சரியமென கேள்விப்படுபவர் சிலர். இவ்வளவுக்கும் பிறகு கூட அவர்களுக்குத் தெரிவது ஒன்று மில்லை.

அழியா மெய்ப்பொருள் எல்லையற்றது, எல்லாமறிந்தது, ஆனந்தமயமானது என்று விளக்கப்படுகிறது. அனுபவத்தில் நமக்குத் தெரிவது என்னவென்ருல், நாம் தோன்றி மறைபவர்கள், அறியாமையில் உழல்பவர்கள், துன்பத்திற்கு உள்ளாகுபவர்கள் என்பதுதான். இறைப் பொருள் உண்மையில் நம்மிடமேயிருக்க, நம் அனுபவம் முற்றிலும் மாறுபட்டிருப்பதற்குக் காரணம் என்ன? உண்மைக்கும், அனுபவத்திற்கும் இடையிலுள்ள வேறுபாடு. நீருக்கும் நெருப்புக்கும், இருளுக்கும் ஒளிக்கும் இருப்பதைப்போல் அல்லவா இருக்கிறது? நமது உண்மை இயல்பாகிய ஆன்மாவை ஏன் அறிந்துகொள்ள முடிவதில்லை?

காரணம் நமது அறியாமையே. பேருண்மைப் பொருள் நம்மிடமே இருக்க, அது எங்கோ தொலை தூரத்திலிருக்குப்

இலட்சியமென்று நினைத்துத் தேடுகிறோம். எப்பொழுதுமே அது நம்முள் இருக்க, என்றைக்கோ ஒரு நாள் அதைத் தேடிப்பிடித்து விடப்போவதாக நினைக்கிறோம். நாமும் அதுவும் ஒன்றே, எந்த நிலையிலும் நாம் அதனிடமிருந்து விலகி நிற்கவில்லை என்று கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார். அழியும் பொருளுக்கும் அமர நிலைக்கும் இடையில் வெகு தூரம் இருக்கிறது—மாமுனிவருக்கும் மகாபாதகருக்கும் உள்ள வேறுபாடு போல, கனவிலிருப்பவனுக்கும் கண்விழித்திருப்போனுக்கும் உள்ள மாறுபாடுபோல.

ஆனால் மகோன்னத ஆன்மா தன்னிடமே இருக்கிறதென்ற உண்மையை அறிந்து விழித்தெழுந்த மனிதனே கடவுள். தமது மகோன்னத இயல்பை மறந்துவிட்ட கடவுளே மருட்சியுற்ற மனிதன்.

உடல், மனம், அறிவு ஆகிய மூன்றுக்கும் அப்பாற்பட்டு நம்முள் இருக்கும் சூக்கும இறைப் பொருளை அகந்தையினால் கற்பனை செய்துகூடக் காணமுடியாது. தன்னைத்தானே பரிபூரண மானிடனாகச் செய்து கொள்ளும் வழிமுறைகளைக் கையாண்டு 'நானே இறைப் பொருள்' என்ற உணர்வு பெற்றவுடன், தன்னை மீறிய பேரானந்தத்தில் ஒருவன் மூழ்கி விடுகிறான்.

உள்ளத்தில் தோன்றும் ஆச்சரிய உணர்ச்சி ஒருவனுடைய அறிவை அந்த நேரத்திற்கு இருட்டடிப்புச் செய்யும் சக்தி உள்ளதாக இருக்கிறது. அந்நிலையில் அவன் தன்னைத்தானே மறந்து, உணர்ச்சியுடன் இரண்டறக் கலந்து விடுகிறான். ஆச்சரியச் செய்தியொன்றை ஒருவனிடம் சொல்லிவிட்டு அவனைக் கூர்ந்து கவனியுங்கள். அவனுடைய திறந்த வாய் திறந்தபடியே இருக்கும். கண்கள் அகல விரிந்திருக்குமே தவிர அவற்றில் பார்வை இருக்காது. வில்லின் நாண் போல ஒவ்வொரு நரம்பும் முறுக்கேறியிருந்த போதிலும் இருந்த இடத்தை விட்டு அசைய அவனால் முடியாது. ஊன் பெற்ற சிலையாக இருப்பான். வெறும் ஆன்மாவாக, அனுபவக் கோயிலில் ஆன்மானுபவம் பெற்று, திகழும்போது நமக்கு ஏற்படும் பேரானந்தமும் அப்படிப் பட்டதே. பேச இயலா இன்பத் திகைப்பில் அது நம்மை தத்தளிக்க வைத்துவிடும். இந்த அனுபவத்தை 'ஆச்சரிய பரவசம்' என்று நமது பண்டைகால மாமுனிவர்கள் கூறுகிறார்கள். மனிதனுடைய இறைநிலை இயல்பை மறைத்து நிற்கும் அகந்தைத் திரை அறுந்து விழுந்தவுடன், ஒருவனுடைய ஆளுமைக் கவசங்களும் தூள் தூளாக உதிர்ந்துவிடுகின்றன. பிறகு அவனுடைய நிலையை விளக்க, 'ஆச்சரிய பரவசம்' என்பதைத் தவிர வேறு எந்த சொல்லும் பொருந்தாது.

தான் உடலுடன் கூடிய ஆன்மா என்று மெய்யறிவு

பெற்றவன் தெரிந்து கொள்கிறான். அவ்வறிவு பெறாதவன் 'நான் ஆன்மாவுடன் கூடிய ஒரு உடல்' என்று கருதுகிறான். கூர்ந்து கேட்டவர்கள், அப்படிக் கேட்ட பேருண்மைபற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டுமென்றும், சிந்தித்துச் சிந்தித்து, மெய்யுணர்வு பெறும்வரை அதே தியானமாக இருக்க வேண்டுமென்றும் ஊக்கமளிக்கப்படுகிறார்கள். பேரறிவு பெற்றவர்களுடைய அனுபவமும் அதைப்பற்றி அவர்கள் கூறும் சொற்களும், சரியாகக் கேட்டறியத் தெரியாதவர்களை பன்முறை காது கொடுத்துக் கேட்க (சிரவணம்) தூண்டுகின்றன; கேட்டதைப் பற்றி சிந்திக்க (மனனம் செய்ய) தூண்டுகின்றன; சிந்தித்துப் பெற்றதை மனதில் தொடர்ந்து நிலைநிறுத்த (நிதித்யாசனம் செய்ய) தூண்டுகின்றன.

தாம் விளக்க நினைத்ததைக் கூறிய கிருஷ்ணர் பின்வருமாறு முடிக்கிறார்.

தேஹீ நித்ய–மவத்யோயம் தேஹே ஸர்வஸ்ய பாரத
தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிது மர்ஹஸி
2:30

ஒவ்வொருவரின் உடலிலும் குடியிருக்கும், அகப்பொருளாக விளங்கும் இந்த ஆன்மாவை–யாராலும், எக்காலத்திலும் அழிக்க முடியாது, பாரதா, ஆகையால் படைப்பிலுள்ள எந்த உயிருக்காகவும் நீ வருந்துவது தவறு.

படைப்பிலுள்ள உயிரினங்கள் ஒவ்வொன்றின் உடலிலும் சூக்குமமாக உள்ளுறையும் ஆன்மா நிரந்தரமானது. அழிக்க முடியாதது. அழிவதெல்லாம் அதைத் தாங்கியிருக்கும் பாண்ட மாகிய உடலே. அழியும் பொருளாகிய மேல் உறை மட்டுமே அழிகிறது. இம்மாபெரும் போரில் அர்ச்சுனன் தனது எதிரிகளை எதிர்த்து போர் புரியும்போது, அவர்களை கொல்ல வேண்டியது நேரிட்டாலும்கூட வருந்த வேண்டிய அவசியமில்லை என்று சொல்லுகிறார் கிருஷ்ணர். இக்கருத்தை வலியுறுத்துவதற்காகவே, ஆன்மா நிரந்தரமானது; உடல்தான் தோன்றி மறையும் தன்மையுள்ளது என்ற அறிவுரைகளை எல்லாம் இப்பகுதியில் எடுத்துரைத்தார். 11–வது செய்யுளிலிருந்து தொடங்கும் இப்பகுதியிலுள்ள கருத்து முழுவதையும் இப்பாடல் திரட்டித் தருகிறது என்று சங்கரர் மிக அழகாக கூறுகிறார்.

மெய்யறிவு நிலையிலிருந்து நோக்கினால், துயரத்திற்கோ, பற்றுதல்களுக்கோ கொஞ்சமும் இடமில்லை என்று இக்கவிதையிலிருந்து தெரிகிறது. ஆனால் அது மெய்யறிவு நிலையிலிருந்து நோக்குபவர்களுக்கு மட்டுமே என்று யாரும் நினைத்து விடக் கூடாது. எனவே கிருஷ்ணர் பின்வருமாறு கூறுகிறார்:

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய
நவிகம்பிது—மர்ஹஸி
தர்ம்யாத்தி யுத்தாச் ச்ரேயோன்யத்
க்ஷத்ரியஸ்ய ந வித்யதே 2:31

மேலும், உன் கடமையை நினைத்துப் பார்த்து தடுமாற்றத்தைக் கைவிடு. ஏனெனில் ஒரு க்ஷத்திரியனுக்கு நியாயமான போரைவிட உயர்ந்தது வேறில்லை.

தனது நாட்டையும், மக்களையும், பண்பாட்டையும் ஓர் இந்து இளவரசன் (க்ஷத்திரியன்) என்ற நிலையில் பாதுகாக்க வேண்டியது அவனுடைய கடமை. தனது தலைமுறையின் தலைவனாக (க்ஷத்திரியனாக) இருந்து மற்றவர்களுக்கு வழிகாட்டுவது அர்ச்சுனனுடைய சுயதர்மம்—அவனுடைய இயல்புக்கேற்ற கடமை. ஆரியருக்குத் தகாத (அதர்ம) முறையில் நடந்துகொள்ள முற்பட்டிருக்கும் ஒரு கும்பலின் சவாலை ஏற்றே தீர வேண்டும் என்று அவனுடைய குல தர்மம் கூறுகிறது. எனவே தடுமாற்றத்திற்கு உள்ளாகாமல் தனது புனிதமான தேசியப் பண்பாட்டைக் காக்கப் போராடுவது அர்ச்சுனனுடைய கடமை.

ஒரு நேர்மையான இலட்சியத்திற்குப் போராடும் பெரும்பேறு கிடைக்கும்போது அதை ஏற்றுக் கொள்வதைவிட உயர்ந்த பணி மக்களுடைய தலைவர்களுக்கு இருக்க முடியாது. அர்ச்சுனனுக்கு அந்த வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. எதிரிகள் ஆக்கிரமிப்பைத் தொடங்கியிருந்தனர். அநீதியை எதிர்த்துத் தர்மயுத்தம் புரியும் சந்தர்ப்பம் அதிருஷ்டமுள்ள சிலருக்குத்தான் கிடைக்கும். இந் நிலையில் மன்னர்கள் போரிட்டே ஆக வேண்டும் என்பதை வேறு இடங்களில்கூட மகாபாரதம்* அறிவுறுத்துகிறது.

போரை நடத்தும் அவசியம் பற்றி கிருஷ்ணர் கூறும் மற்ற காரணங்கள் பின் வருமாறு:

யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க்கத்வார மபாவ்ருதம்
ஸுகின: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்த—மீத்ருசம்
2:32

சுவர்க்கத்திற்கு செல்லும் வாயில் திறந்திருப்பதைப்போல,

---

* மகாபாரதம்—உத்தியோக பர்வம் 72—18 கூறுவதாவது: கொல்லத் தகாதவர்களைக் கொல்லுவதால் ஏற்படும் பாவம் கொல்ல வேண்டியவர்களைக் கொல்லாமல் விடும்போது ஏற்கப்படுவதற்கு ஒப்பானது.

இவ்வாறு தானுக வரும் போர் ஒன்றில் ஈடுபடும் க்ஷத்திரியர்கள் உண்மையில் அதிருஷ்டசாலிகளே, பார்த்தா.

இங்கு க்ஷத்திரியர் என்று குறிப்பிடுவது ஜாதியை அல்ல. ஒருவனுடைய உள்ளத்தில் பதித்துள்ள வாசனைகளின் தன்மையைக் குறிப்பிடும் சொல் அது. ஏழை எளியோரின் துயர் போக்கவும், வெளியாரின் ஆக்கிரமிப்பிலிருந்து தன் நாட்டுப் பண்பாட்டைக் காக்கவும் ஒவ்வொரு கணமும் தயாராக இருக்கும் மனப்பாங்கு பெற்றவருக்கு க்ஷத்திரியர் என்று பெயர். இதைப் போன்ற தலைவர்கள் ஆக்கிரமிப்பாளர்களாகவோ, கொடுங்கோலர்களாகவோ இருக்கக்கூடாதென்றும், அதே நேரத்தில் தீங்கை எதிர்த்துப் போராடாத பேடிகளாகவும் இருக்கக்கூடாது என்றும் இந்து ஒழுக்கமுறை கூறுகிறது. நேர்மையான (உப பன்ன) கொள்கைகளுக்காகவும், தமது கலாச்சார பாதுகாப்புக்காகவும் போராட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால், அப்போரை தயங்காது இந்தியத் தலைவர்கள் நடத்துமாறு அக்கோட்பாடு கட்டளையிடுகிறது. அவ்வாறு நாட்டுக்குப் பணிபுரியும் வாய்ப்புக் கிடைப்பதை தங்களுடைய அதிருஷ்டமாக அவர்கள் கருத வேண்டும். தருமத்திற்குப் போர் செய்யும் மாவீரர்களுக்கு போர்க்களங்களே சுவர்க்கத்தின் திறந்த வாயில்கள்.

அர்ச்சுனனின் ஐயப்பாடுகளுக்கு வேதாந்தக் கொள்கைகளின் உன்னத சிகரங்களிலிருந்து கிருஷ்ணர் பதிலளித்தார். பிறகு லோகாயத தத்துவ நோக்கிலிருந்து பிரச்னையை ஆராய்ந்து காட்டினர். அதிலிருந்தும் இறங்கி வந்து, பொதுவாக சாதாரண மக்கள் கூறும் வாதங்களை வைத்து, அந்த அடிப்படையிலும் அர்ச்சுனனுடைய சந்தேகங்களைப் போக்க முயன்றார். இவ்வாறு படிப்படியாக ஒவ்வொரு நிலையிலிருந்தும் கிருஷ்ணர் வாதிப்பது உள்ளத்தை திருப்திப் படுத்துவதாக இருக்கிறது. எந்த முறையில் பார்த்தாலும், நமது நாட்டையும், பண்பாட்டையும் காப்பதற்கு இப்போரை நடத்துவது அவசியந்தான் என்ற சரியான முடிவை அர்ச்சுனன் ஏற்குமாறு செய்ய முயற்சிக்கிறார்.

"போர் செய்வது இப்போது உன் கடமை. அதிலிருந்து தவறி, நீ பின் வாங்கினல் என்ன ஆகும் தெரியுமா?"

*அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி*
*தத: ஸ்வதர்மம் கீர்த்திஞ் ச ஹித்வா பாப—மவாப்ஸ்யஸி*

**2:33**

நியாயமான இப்போரில் நீ இறங்கவில்லை என்றால், உனது கடமையையும், புகழையும் கைவிட்டவனாகி, பாவத்திற்கும் உள்ளாகிறாய்.

இம்மாபெரும் தரும யுத்தத்தில் ஈடுபட மறுத்து ஒதுங்கினுல், உனது சுய தர்மத்தையும், கௌரவத்தையும் இழந்து விடுவாய். செய்ய வேண்டிய கடமையைப் புறக்கணித்ததால் வரும் விளைவு பாவமே. ஆரியருக்கு மாறுபட்ட இயல்பு கொண்ட இப்படைகளை எதிர்த்து அழிக்காமலிருப்பது கொல்லத் தகாதவர்களைக் கொன்றதற்கு ஒப்பான பாவம். அதையும் நீ செய்தவனுவாய்!

தருமம் என்ருல் சொந்த இயல்பின், தூண்டுதலுக்கு ஏற்ப நடந்து கொள்ளுதல் என்பது ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது. உயிரினம் ஒவ்வொன்றும் குறிப்பிட்ட உருவாக்கம் பெற்று ஒரு பெரும் இலட்சியத்தை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக இவ்வுலகில் பிறந்திருக்கின்றது. அதனதன் மனதில் பதிந்துள்ள 'வாசனை'களை, வாழ்ந்து, கழித்து, விடுதலை பெறுவதே அப்பெரும் இலட்சியம்.

ஒருவனுக்கு பிறவியுடன் வரும் 'வாசனை' மூட்டைகளைத் தான் அவனுடைய 'சொந்த இயல்பின் தூண்டுதல்' (சுய தருமம்) என்று கூறுகிருேம். இந்த அடிப்படையில் பார்த்தால் அர்ச்சுனனுடைய சுயதருமம் செங்கோல் செலுத்தி அரசாளுவதும், வீர தீரச் செயல்கள் புரிதலும், தனது கௌரவம், புகழ் ஆகியவற்றை நிலைநாட்ட எல்லையற்ற ஆவல் கொள்ளுதலும்தான்.

மேலும் உயருவதற்கு வாழ்க்கை ஒரு வாய்ப்பளிக்கும்போது, அதைக் கை நழுவ விடுபவன், தன் 'வாசனை'களைப் போக்கிக் கொள்வதற்கான சந்தர்ப்பத்தை உதறித் தள்ளியவன் ஆகிருன். பழைய வாசனைகள் போக வழியில்லை. அத்துடன் புதிய வாசனைகளும் வந்து குவிகின்றன. இவை இரண்டும் சேர்ந்து பெரும் சுமையாகி விடுகிறது. அதன் பளுவினுல் அவன் வாழ்க்கையில் திணறிக் கொண்டிருப்பான். போர் செய்ய மறுத்து அர்ச்சுனன் போர்க்களத்தை விட்டு இப்பொழுது போய்விடலாம். பிறகு வந்த வாய்ப்பை நழுவ விட்டது குறித்து வாழ்நாள் முழுவதும் அவன் வேதனைப்பட்டு வருந்திக் கொண்டிருக்க நேரிடும். போர்க்களப் பேராபத்துக்களிடையில் வாழ்வது அவனுக்குப் பிறவியுடன் வந்த சுபாவம். அவனுக்கு உற்சாகம் அளிப்பது அதுவே. ஓவியக் கலையில் ஆர்வமுள்ள ஒருவனை வியாபாரத்தில் ஈடுபடுத்தினுல் அது நடக்காது. அவன் சுபாவத்திற்கு மாறுபட்ட வேலை அது. பாசத்தினுல் சில பெற்ருேர்கள் தங்களுடைய திட்டங்களைக் குழந்தைகள் மீது திணிக்கிருர்கள். இதனுல் குழந்தைகளின் இயற்கையான வளர்ச்சி கெடுகிறது. அவர்களுடைய தனித்தன்மை போய்விடுகிறது.

இதற்கு உலகில் பல உதாரணங்களைப் பார்க்கலாம். குறிப்பாக ஆன்மிகத் துறையில் ஆர்வமுள்ள சிலர், ஏதாவது கஷ்ட நஷ்டங்கள் வந்தவுடன் வீட்டைத் துறந்துவிட்டு காட்டுக்குப் போய், 'கடவுளை நாடுவதற்கு' உட்கார்ந்து விடுகிறார்கள். இதனால் தங்கள் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளுவதைத் தவிர அவர்கள் பெறும் பலன் வேறு ஒன்றுமில்லை. குடும்ப அரவணைப்பில் இருக்கத் தூண்டும் 'வாசனை' அகலுமுன்னரே அவர்கள் இமயமலை குகைக்கு வந்து சேருகிறார்கள். நாள் முழுதும் அவர்களுடைய உள்ளம் அலை பாய்ந்து கொண்டே இருக்கும். அவர்கள் தியானம் செய்யவும் முடிவதில்லை. புலன்களுக்கு இன்பமூட்டும் பொருள்களும் அங்கு கிடைப்பதில்லை. குழப்பமும் கொந்தளிப்புமே அவர்கள் மனதில் நிறைந்திருக்கும். இப்படி இயல்புக்கு மாறாகச் செய்யும் வேலையே பாவம் என்பது.

தன்னியல்பாகிய ஆன்மிகத் தன்மைக்கு மாறுபட்ட வகையில் மனம் செய்யும் தவறுதான் ''பாவம்'' என்று இந்து நூல்கள் குறிப்பிடுகின்றன. புலனின்பம் பெற உலகப் பொருள்களை நாடி, ஒருவனுடைய மனம் துடிக்கிறது. அதை அடைந்தால் மகிழ்ச்சியும், திருப்தியும் உண்டாகுமென்று நினைக்கிறது. இந்த நிலையில் உள்ளக் கொந்தளிப்பு அதிகரிப்பதில் வியப்பு ஒன்றுமில்லை. மனம் இவ்வாறு செய்யும் தவறுகளுக்குப் பெயர் பாவம்.

குழப்பம் தொடர்ந்தால், கடமையைச் செய்யத் தவறிய அர்ச்சுனனுடைய புகழ் மங்குவது மட்டுமல்ல—

அகீர்த்திஞ்சாபி பூதானி கதயிஷ்யந்தி தேவ்யயாம்
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்—மரணா ததிரிச்யதே

2:34

பொதுமக்களும் கூட நிரந்தரமாக உனக்கு வரும் அவமானம் பற்றி எந்நாளும் பேசிக் கொண்டிருப்பார்கள். கௌரவம் பெற்ற மானியான ஒருவனுக்கு அவமானமென்பது சாவை விட மோசமானது.

அவமானமடைவதைவிட இறப்பது மேல் என்று எந்த மாவீரனும் நினைப்பான். இந்த நிலையில் தயக்கமின்றி போரில் குதிக்க வேண்டுமென்ற கருத்தை நண்பன் உள்ளத்தில் பதியச் செய்வதற்காக கிருஷ்ணர் இதைக் கூறுகிறார். அர்ச்சுனன் இப்போது போர் செய்வதைக் கைவிட்டால், அது அவனுடைய கோழைத்தனத்தின் விளைவாகவே இருக்கும் என்று உலகம் பழிக்கும். ஏனெனில் இது நேர்மையை நிலைநாட்ட நடக்கும் போர். அர்ச்சுனன் எவ்வளவு மாவீரனாக இருந்த போதிலும்,

தவருன உணர்ச்சி வசப்பட்டு பலவீனமடைந்து விடலாம். அதைத் தடுக்க வேண்டுமென்ற அனுதாபமும் கிருஷ்ணருடைய வார்த்தைகளில் வெளியாகிறது. மேலும்—

பயாத்—ரணு—துபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா:
யேஷாஞ் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம்
2:35

இங்குள்ள ஒப்பற்ற படைத் தலேவர்கள் எல்லோரும், நீ பயந்து போய் போரிலிருந்து பின்வாங்கி விட்டதாகக் கருதுவார்கள். முன்பு உன்னேயும், உன் வீரத்தையும் உயர்வாகக் கருதிய அவர்கள் உன்னே மிக இழிவாக நினேப்பார்கள்.

பொது மக்களுடைய நோக்கிலிருந்து கிருஷ்ணர் மேலும் பல காரணங்கள் கூறுகிருர். இப்போது பின்வாங்கினுல் உலகமே அர்ச்சுனனேக் குறை கூறும். வரலாற்றில் இது ஒரு அவமானச் செயலாக நிலேத்து விடும். இது தவிர உடனடியாக எதிரித் தரப்பிலுள்ள போர்வீரர்களும், தளபதிகளும் (மகாரதர்கள்) அவனேக் கேலி செய்யத் தொடங்கி விடுவார்கள். மகா வில்லாளி என்று போற்றப்பட்டு வந்த அர்ச்சுனன் வில்லேக் கீழே போட்டு விட்டு போர்க் களத்திலிருந்தே ஒரு கோழையைப் போல ஓடி விட்டான் என்று எள்ளி நகையாடுவார்கள். சகோதரர்கள் ஒருவரையொருவர் கொல்லக் கூடாது என்று அவன் மனச்சாட்சிக்குத் தோன்றிய ஆட்சேபணே, அவர்களுக்குத் தெரியாது. ஆகையால் அவர்கள் கோழைத்தனமாகவே நினேப்பார்கள். வீரன் ஒருவன் மனந்தளர்ந்த நிலேயில் பின்னடைந்து விட்டதாக அவர்களுக்குத் தோன்றும். எதிராளிகளில், குறிப்பாக தனக்கு சமமான வீரர்கள் அவ்வாறு நினேப்பதையும் பேசிக்கொள்வதையும் எந்த வீரனும் சகிக்க மாட்டான்.

அது மட்டுமென்று நினேக்கிருயா?

அவாச்ய—வாதாம்ஸ்ச பஹூன் வதிஷ்யந்தி தவா ஹிதா:
நிந்தந்தஸ்—தவ ஸாமர்த்யம் ததோ துக்கதரம் நுகிம்.
2:36

மேலும் உனது சாமர்த்தியம்பற்றி எதிரிகள் பேசத் தகாத வார்த்தைகளேயெல்லாம் பேசுவார்கள். அதைவிட மனதைப் புண்படுத்துவது வேறு என்ன இருக்க முடியும்?

அர்ச்சுனன் உள்ளத்தில் தாம் எதிர்பார்க்கும் மாறுதல் ஏற்பட்டு வருகிறது என்பதைக் கண்ட கிருஷ்ணர், அவன் போர்க்களத்திலிருந்து பின்வாங்கி ஓடினுல் ஏற்படும் முட்டாள் தனத்தையும் மானக்கேட்டையும் மேலும் வலியுறுத்துகிருர்

அவனுடைய வீரத்தையும், திறமையையும் புகழ்ந்தவர்கள் இனி இகழ்ந்து பேசத் தொடங்குவார்கள். அதுவும் மிக இழிவான வார்த்தைகளை உபயோகித்துத் தூற்றுவார்கள்; அவை கேட்க சகிக்காத வார்த்தைகளாக இருக்கும். அவன் போர்க் களத்திலிருந்து கோழைபோல பின்வாங்கி ஓடுவது, ஒரு கீழான செயல் என்று வரலாற்றில் பொறிக்கப்படுவதோடு அல்லாமல், அவனுடைய வாழ்நாளிலேயே அவனை, சுட்டிக்காட்டி, 'போர்க்களத்திலிருந்து ஓட்டம் பிடித்த சூரப்புலி யார் தெரியுமா? அதோ அந்த அர்ச்சுனன்தான்' என்று ஊர் எல்லாம் சிரிக்கும்.

ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம்
ஜித்வா வா போக்ஷ்யஸேமஹீம்
தஸ்மா—துத்திஷ்ட்ட கௌந்தேய
யுத்தாய க்ருத நிஸ்சய: 2:37

மடிந்தால் சுவர்க்கத்திற்குச் செல்வாய்; வென்றால் புவியாள்வாய். எனவே, குந்தியின் மைந்தனே—போர் செய்யும் முடிவுடன் எழுந்திரு.

போர்க்களத்தில் அவன் உயிரிழந்தால், மாபெரும் இலட்சியங்களுக்குப் போரா்டி இறப்பவர்கள் பெறுகின்ற வீர சுவர்க்கம் கிடைக்கும். அங்கு கோடானு கோடி ஆண்டுகள் இன்பம் அனுபவிக்கலாம். போரில் வெற்றி பெற்றால் நாட்டுக்கு மன்னனாகி உலக இன்பங்கள் பெறுவதுடன், தருமயுத்தம் செய்த ஒப்பற்ற மாவீரன் என்ற முறையில் பிறகு சுவர்க்கத்தை அடைந்து இன்பம் பெறலாம். இந்த இரண்டில் எதைப் பெறுவதாயினும் அவனுக்கு நன்மையே உண்டாகும். பாண்டவர்களின் போர் நோக்கங்கள் நேர்மையானவை. அவன் நேர்மையின் பக்கம் இருப்பதால் அவன் நன்மையே பெறுவான் என்பதில் சந்தேகமில்லை.

அர்ச்சுனன் கையில் வில்லுடன் எழுந்து நின்று போர் தொடங்க வேண்டும் என்பதற்காக இவ்வளவு காரணங்களையும் கிருஷ்ணர் கூறுகிறார். சற்று முன்தான் துயரத்தினால் மனம் சோர்ந்து, காண்டீபத்தைக் கீழே போட்டுவிட்டு அர்ச்சுனன் கற்சிலை போல் உட்கார்ந்துவிட்டான். அப்படி இருப்பது தகாது என்றும், மனத்தளர்ச்சியை கைவிட்டு உன்னத இலட்சியத்திற்காக உறுதியுடன் போராட வேண்டுமென்றும் கூறுகிறார் பார்த்தசாரதி.

மகாபாரதத்தில் கீதோபதேசம் நடக்கும் அக்குறிப்பிட்ட சூழ்நிலையில், போர் செய்யுமாறு தூண்டும், கிருஷ்ண பகவானின் ஆலோசனை நியாயமானதே. பொதுவாக மனித வாழ்க்கைக்கே

அவ்வாலோசனை மிகப் பொருத்தமானது. வாழ்க்கையில் வரும் சவால்களைக் கண்டு யாரும் சோர்ந்து போய்விடக் கூடாது. விளையாட்டுப் போட்டிக்கு, மைதானத்தில் இறங்கிய பிறகு, முடிந்த வரையில் முயற்சித்து வெற்றி அடையப் பார்க்க வேண்டுமே தவிர, 'நானாவது—வெற்றி பெறவாவது! அதெல்லாம் நடக்கக் கூடியதல்ல' என்று அழுது வடிந்து கொண்டே ஆடக் கூடாது. வாழ்க்கைப் பந்தயத்திலும் அதுதான் முறை. கீதை எல்லாக் காலத்திற்கும், எல்லா நிலைகளுக்கும் பயன்படும் ஒரு அற்புத நூல் என்பதை அதை சரியாகப் படிப்பவர்கள் தெரிந்து கொள்ளுவார்கள். கீதோபதேசம் மனித குலம் முழுவதற்கும் பயன்படக் கூடியது.

போர் செய்யும்போது—நீ எந்த மனப்பான்மையுடன் செயல்பட வேண்டுமென்றும் கூறுகிறேன், கவனித்துக் கேள்:

ஸுக து:க்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாப—மவாப்ஸ்யஸி

2:38

சுகமும், துக்கமும், லாபமும், நஷ்டமும் வெற்றியும் தோல்வியும் சமமென்று நினைத்து, போருக்காகவே போர் செய். அப்படிச் செய்வதனால் பாவம் உன்னை வந்தடையாது.

இந்தச் செய்யுளிலிருந்து அடுத்த சில பாடல்களில் கர்மயோக முறையை பகவான் சுருக்கமாக எடுத்துரைக்கிறார். அதற்குப் பிறகு பக்தி மார்க்கம் பற்றியும் இந்த அத்தியாயத்தில் சொல்லப் போகிறார். கீதையின் சாராம்சம் முழுவதும் இரண்டாவது அத்தியாயத்தில் அடங்கியிருப்பது பற்றி முன்னுரையிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆன்மிகத் துறையில் வெற்றி பெறும் வழிமுறைபற்றி முதன் முதலாக கிருஷ்ண பரமாத்மா நேரடியாகச் சொல்லும் விவரம் இது. ஆகையால் கீதை படிப்பவர்கள் இச் செய்யுளை ஆழ்ந்து நோக்குவது மிகப் பயனுள்ளதாக இருக்கும்.

வாழ்க்கையில் மூன்று மட்டங்களில் ஏற்படும் அனுபவங்களுக்கு மூன்று உதாரணங்கள் காட்டப்படுகின்றன. இவை ஒன்றுக்கொன்று முரண்பட்ட அனுபவங்கள். சில நிகழ்ச்சிகள் மகிழ்ச்சிகரமானவை என்று நினைத்து வரவேற்கிறோம். வேறு சில துக்கமளிப்பவை, துன்பகரமானவை என்று ஒதுக்குகிறோம். இந்த சுக துக்கங்களை அறிவு மட்டத்தில் மதிப்பிட்டு நாம் இவ்வாறு செய்கிறோம்.

லாபம் நஷ்டம் என்பவை மன மட்டத்தில் நாம் செய்யும் மதிப்பீடு. நண்பர்களை சந்திக்கும்போது சந்தோஷமும், பிரியும் போது வருத்தமும் உண்டாகிறது அல்லவா? அந்த இனத்தைச்

சேர்ந்தவை இந்த லாப நஷ்டக் கருத்துக்கள்.

உடல் மட்டத்தில் தோன்றும் அனுபவங்களைக் குறிப்பிடுவது வெற்றியும் தோல்வியும். சில சமயங்களில் நாம் வெற்றி அடைகிறோம். சில சமயங்களில் வெற்றியை மற்றவர்களுக்கு அளித்துவிட்டு, நாம் தோல்வியை ஏற்றுக் கொள்கிறோம்.

இந்த மூன்று (அறிவு, மனம், உடல்) மட்டங்களில் எப்படிப்பட்ட மாறுதல்கள் வந்தாலும் ஒருவன் சமநிலை தவறாது இருக்க வேண்டுமென்பது கிருஷ்ணர் கூறும் புத்திமதி.

கடலில் குளிக்கும்முன், எப்படிக் குளிக்க வேண்டுமென்று ஒருவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லையேல் அலைகளில் சிக்கி அவன் திண்டாட நேரிடும். அவை ஆளையே கடலில் இழுத்துக்கொண்டு போய் சாக அடித்து விடலாம். பேரலைகள் வரும்போது நீருக்குள் முழுகி சமாளிக்க வேண்டும். சிறு அலைகள் வரும்போது அவற்றுடன் சவாரி செய்வது போல் எழும்பிக் குதித்து தவிர்க்க வேண்டும். இவை எல்லாம் தெரிந்தவனுக்குத் தான் கடலில் குளிப்பது சந்தோஷமாக இருக்கும். அலைகள் நின்றபிறகு குளிக்கலாமென்று காத்திருப்பவனும், தன்னை அலைகள் எதுவும் செய்யாவென்று நினைத்துக் கடலில் இறங்குபவனும் இருவருமே முட்டாள்கள். கடல் கடல் மாதிரி இருக்கக் கூடாது தன் விருப்பத்திற்கேற்றவாறு இருக்க வேண்டும் என்று நினைப்பவனைப்பற்றி வேறென்ன சொல்வது? மனிதனின் முட்டாள்தனங்கள் வாழ்க்கையில் இப்படித்தான் நடந்து வருகிறது. அதில் மேடு பள்ளங்களே இருக்காது என்று எண்ணுகிறார்கள். வாழ்க்கைக் கடலில் இன்ப துன்பங்கள், லாப நஷ்டங்கள், வெற்றி தோல்விகள் அலை அலையாக வந்து மோதிய வண்ணம்தான் இருக்கும். இல்லையேல் அது வாழ்க்கையாகாது—வெறும் தேங்கிய நீர்க்குட்டை. அதை ஏறக்குறைய சாவு என்றே சொல்லலாம்.

கடும் புயல்களும் பேரலைகளும் இடைவிடாது வந்து மோதிக் கொண்டிருக்கும் கடல் போன்றதுதான் வாழ்க்கை என்றால்—வேறு மாதிரியாக அது இருக்க முடியாது—பிறவி எடுத்துள்ள நாம், வாழும் கலையைக் கற்றுக்கொள்ள வேண்டும். அலைகள் மலைபோல் உயர்ந்து வரும்போதும், மடுவைப் போல் தாழும்போதும் அவற்றினால் நாம் பாதிக்கப்படக் கூடாது. அவற்றுடன் தன்னைப் பிணைத்துக் கொள்ளுபவன் மேலும் கீழும் தூக்கி எறியப்படுவான். கடல் நடுவில் ஒரு பாறைமீது கலங்கரை விளக்கம் நிறுவப் பட்டிருக்கும். எவ்வளவு புயலடித்தாலும் அது அசைந்து கொடுப்பதில்லை. அதுபோல் நாமும் வாழ்க்கை புயலில் சிக்காமல் உறுதியாக அப்படி இருக்க வேண்டும். போர் செய்ய

எழுந்திருக்கும்படி அர்ச்சுனனுக்குக் கூறும் கிருஷ்ணர், எவ்வித மனப்பான்மையுடன் போர் புரிய வேண்டுமென்றும் சொல்லுகிறார். போர்க்களத்தில் சாதாரணமாக எல்லோருக்கும் வரும் வெறுப்பு விருப்புகளைப் போன்ற வீண் எண்ணங்களால் போர் முயற்சி பாதிக்கப்படக் கூடாது என்றும், அவ்வாறு அமைதியுடன் செயல்படும்போது ஒருவகைத் தெய்விக உற்சாக வேகம் பிறக்கிறது என்றும் கூறுகிறார். அப்படிப்பட்ட மனோபாவத்துடன் செயல்படுவோரின் சாதனைகள் ஒப்பற்ற அழகுடன் திகழ்கின்றன. அதுதான் உண்மையான வெற்றி.

எந்தத் துறையிலும் தனக்கே விளங்கா ஆவேசத்துடன் செய்யப்படும் ஒரு வேலை தெய்விகப் படைப்பாக அமைந்து, அப்பழுக்கற்ற முழுமையுடன் விளங்குகிறது. இது எல்லோருக்கும் தெரியும். அதைச் செய்தவரே மீண்டும் ஒருமுறை அப்படிச் செய்ய முடியாது என்றால் மற்றவர்கள் அதை காப்பியடிக்க இயலாது என்று சொல்ல வேண்டியதில்லை. அவர் ஒரு கவிஞராகவோ, கலைஞராகவோ, மருத்துவராகவோ பேச்சாளராகவோ இருக்கலாம். மிக அற்புதமாக ஒருவருடைய வேலைப்பாடு அமைந்திருந்தால், ''ஏதோ தெய்வீக ஆவேசத்தில் செய்ததுபோல் அல்லவா செய்து முடித்திருக்கிறார்'' என்று கூறி வியப்புத் தெரிவிக்கிறார்கள். இவ்வுற்சாக ஆவேசத்தின் ஆனந்த நிலையில் நமக்கு வரும் கருத்துக்களும், சிந்தனை வேகமும், வேலைப்பாடும் அழகுக்கு இலக்கணமாக அமைகின்றன. இயந்திரம்போல் அவ்வுற்சாகமின்றி வேலை செய்யும்பொழுது அது அவ்வளவு கவர்ச்சிகரமாக அமைவதில்லை. டவின்சி *(Da Vinci)* என்ற ஓவியன் வரைந்துள்ள மோனா லிசா *(Mona Lisa)* முகத்தில் ஒருவித விளங்காப் புன்னகை தவழுகிறது. அது அப்படி அமைந்துவிட்டது. மறுபடியும் அவனே அதைப்போல் மற்றொன்று வரைய முடியவில்லை. பறந்து கொண்டே வானம்பாடி எழுப்பிய கீதத்தை கீட்ஸ் *(Keats)* ஒரு கவிதையில் அருமையாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறான். ஆனால் அதே மாதிரி மற்றொரு முறை அவனால் எழுத முடியவில்லை. பித்தோவன் *(Beethovan)* தனது ''நிலவொளி கீதம்'' போன்ற மற்றொன்றை படைக்க முடியவில்லை. பாரதப் போருக்குப் பிறகு கீதையை மீண்டும் ஒருமுறை கேட்க விரும்பிய அர்ச்சுனன் கிருஷ்ணரை அணுகி வேண்டிக் கொண்டபொழுது, அவரே தமது இயலாமையை ஒப்புக் கொண்டிருக்கிறார்.

மேலை நாட்டினர் இதை 'இன்ஸ்பிரேஷன்' என்று சொல்லுகிறார்கள். அது விளங்காத ஒரு தற்செயல் நிகழ்ச்சியாகவும், நமது கட்டுப்பாட்டில் இல்லாதது போலவும் அவர்களுக்குத் தோன்றுகிறது. ஆனால் நமது முனிவர்களுக்கு அப்படியில்லை. வாழ்வு முழுவதுமே தெய்வீக ஆவேசம் ததும்பிக்

கொண்டிருந்தது. அது மனிதனின் இயல்பான தெய்விக நிலையாக அம் முனிவர்களுக்குத் தோன்றியது. ஒருவர் தமக்குள்ளிருக்கும் இறைப் பொருளுடன் ஒருங்கிணைந்து வாழத் தெரிந்து கொண்டால், வாழ்வு முழுவதுமே மகிழ்ச்சி மிக்க தெய்விக உற்சாக வேகத்துடன் திகழும். நமது மனமும், அறிவும் இயங்கும்போது, நாம் அவற்றிலிருந்து விலகி நின்று நோக்கினுல் இது நன்கு விளங்குகிறது. சமநிலை பெற்ற நேரங்களில் நம்மையே மறந்து நாம் வேலை செய்கிறோம். தன் நினைவு இல்லாததால் நமது திறன் குறைந்து விடுவதில்லை. புத்தொளி வீசி எழும்பி வரும் கதிரவனின் எல்லையற்ற அழகுடன் விளங்குகிறது நாம் செய்யும் வேலை. சாதாரண வேலையுடன் சேரும் இந்த அதிகப்படி சிறப்புத்தான் அந்த வேலையை 'உற்சாக ஆவேசமிக்க பணி'யாக மாற்றுகிறது.

புராதன இந்து நூல்களில் கூறப்படும் யோகிகள், மனமும், அறிவும் தாமாகவே ஒரு உறுதிச் சமநிலை பெறும் வழி முறையை நமக்கு வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். அதற்கு யோகம் என்று பெயர். வேதகால இந்துக்களுக்கு இது தெரியும். தங்களுடைய வாழ்க்கையில் இதை அவர்கள் கடைப்பிடித்து வந்தார்கள். அதனுல்தான் அவர்கள் வாழ்ந்த காலமே இந்துக்களின் பொற்காலம் என்று கூறும் அளவுக்குச் சாதனைகள் நடந்து, இந்நாட்டுக்குப் பெருமை தேடித் தந்திருக்கிறது.

வேத காலத்தில் இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டின் தத்துவ இயல் தெய்வ சம்பந்தமுள்ளதாகத்தான் இருந்திருக்க முடியும். ஆனுலும் அத்தத்துவம் வாழ்க்கையின் எல்லாத் துறைகளுக்கும் பயன்படுவதாக இருக்கிறது. அப்படி இல்லை என்றால் அதை ஒரு தத்துவமென்றே சொல்ல முடியாது; குறிப்பிட்ட சில துறைகளுக்குப் பொருத்தமான ஒரு நல்ல கொள்கை என்று வேண்டுமானுல் கௌரவிக்கலாம் அவ்வளவுதான்.

நல்லறிவு படைத்த ஒருவன் வெளியுலக நிலவரம் பற்றி முடிவு செய்யுமுன் தானுகவே பல விஷயங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்திப்பான். அவற்றையே இதுவரை கிருஷ்ணர் தமது அறிவுரைகளில் எடுத்துரைத்து வந்தார். வெறும் ஆன்ம தத்துவங்களை வைத்து மட்டும் உலக விவகாரங்களை முடிவு கட்டிவிட முடியாது. எந்தப் பிரச்னையையும் ஆன்மிக நோக்கிலிருந்து, அறிவு நோக்கிலிருந்தும் அலசிப் பார்க்க வேண்டும். உணர்ச்சி நிலையிலிருந்து ஒழுக்கமும், உடல் மட்டத்தில் மரபு, வழக்கம் முதலியவையும் தோன்றுகின்றன. இம் மூன்றும் ஒன்றுக்கொன்று முரண் இல்லாமல், ஒரே உண்மையை சுட்டிக் காட்டுமானுல், அதுவே எந்த நிலையிலும் ஒருவர் பின்பற்ற வேண்டிய தெய்விக நெறி என்பதில்

சந்தேகமில்லை.

அர்ச்சுனன் தன் முன்னுள்ள நிலையை தவருக மதிப்பிட்டதன் காரணம், உணர்ச்சி மட்டத்திலிருந்து மட்டும் அவன் போரைப் பற்றி சிந்தித்தது தான். எதிரிப் படைகளில் உற்ரூர், உறவினர்களே அவனுக்குக் காணப்பட்டனர். அவர்களைக் கொல்லுதல் நெறிமுறையல்ல என்ற கருத்து மேலிட்டதால் அவனுக்கு எல்லையற்ற குழப்பம் உண்டாயிற்று. சமநிலை பெற உதவும் மற்றவைகளை எல்லாம் அது மறக்கச் செய்துவிட்டது. கடைசியில் தனது சிந்தனையைக் கிருஷ்ணரிடம் ஒப்படைத்து, சரண் அடைந்து விடுகிருன். மனம், புத்தியை சரணடைந்து அதன்படி நடக்க முற்படுவது போல். அவனைப் போன்ற மனநிலையில் உள்ளவர்கள் அப்படித்தான் செய்ய வேண்டும். அவனுக்கு வழிகாட்ட முன்வரும் கிருஷ்ணர், அவனுடைய பிரச்னையை பல கோணங்களிலிருந்தும் அலசிக் காட்டுகிருர். ஒவ்வொருவருக்கும் விவேகம் அல்லது புத்தி வழிகாட்டுவதுபோல, பகவான் கிருஷ்ணன், கீதையை வழிநடத்தும் விவேக சக்தியாக விளங்குகிருர். பொறிகளின் வழியே இழுத்துச் செல்லப்படும் மனத்தை, புத்தி கட்டுப்படுத்தி நேர் வழியில் திருப்புவதுபோல, தறிகெட்டு ஓடும் குதிரைகளின் லகானை பிடித்து உரிய வழியில் செலுத்தும் சாரதி பற்றி உபநிடதங்கள் கூறும் பொருளுக்கு அவர் இலக்கணமாக விளங்குகிருர். (பொது முன்னுரை பார்க்கவும்).

உண்மை நிலையை ஆன்மிகம், அறிவு, ஒழுக்க நெறி, மரபு ஆகிய எல்லாக் கோணங்களிலிருந்தும் அர்ச்சுனனுக்கு விளக்கிய பிறகு போர்புரிவது அவன் கடமை என்று முந்திய செய்யுளில் கிருஷ்ணர் முடிவு கூறியிருக்கிருர். அக் கடமையை எந்த நோக்குடன் செய்ய வேண்டும் என்பதை இப்போது கூறுகிருர். தன்னை ஆன்மாவாகக் கருதாமல், ஆன்மா அல்லாத ஒன்றுடன் இணைத்துக் கொள்ளும்பொழுது ஒருவனுக்கு ஏற்படும் தடுமாற்றங்களிலிருந்து முற்றிலும் விடுபட்டு, தெளிவான உள்ளத்துடன் போரில் ஈடுபடுமாறு போதனை செய்கிருர். அறிவு மட்டத்தில் தோன்றும் இன்பம், துன்பம் மன மட்டத்தில் தோன்றும் லாபம் நஷ்டம், உடல் மட்டத்தில் தோன்றும் வெற்றி தோல்வி போன்றவைகளால் பாதிக்கப்படக்கூடாது என்பது கருத்து.

இவற்றைப் போன்ற சவால்களை எல்லாம் அமைதியுடன்—சமநிலை பெற்ற உள்ளத்துடன்—ஏற்பது வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கு நிச்சயமான வழி. எந்தத் துறையில் பணிபுரிந்த பொழுதிலும், திறந்த மனதுடன் அவரவர்கள் தமது கடமையைச் செய்ய வேண்டும் என்றும், அப்படிச் செய்வதால் வாழ்க்கைப் போராட்டங்களுக்கு இடையில் கூட 'பழைய

வாசனைகள்' கரைந்து மறைந்து விடக் கூடும் என்று முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஆன்மா தன் மீது படிந்துள்ள கறையைப் போக்கித் தூய்மை ஆக்கிக் கொள்ளவே இவ்வுலகில் பல்வேறு உருவாக்கங்கள் பெற்ற உயிரினங்களாக வந்திருக்கிறது. செடி, விலங்கு, மனிதன் போன்ற எதுவாக இருந்த போதிலும் அது ஒரு 'வாசனை' மூட்டைதான்.

என்ன நேர்ந்த போதிலும் உள்ளச் சமநிலை தவறக் கூடாது என்று இங்கு வற்புறுத்தப்படுகிறது. அவனுடைய திறந்த உள்ளத்தின் வழியாக 'வாசனை'கள் வெளியேறுகின்றன என்ற இரகசியமும் இங்கு வெளியாகிறது. அகந்தையினாலும், அதிலிருந்து வரும் விருப்பு வெறுப்புக்களாலும் குழப்பமுற்ற மனத்திலிருந்து 'வாசனை' வெளியேற்றம் தடைபடுகிறது. புது 'வாசனை'கள் உள்ளே புகுகின்றன. சுகம்—துக்கம்போல் இரட்டை உணர்ச்சிகள் (துவந்தங்கள்) காரணமாக ஒருவனுக்குத் தடுமாற்றம் ஏற்படும்பொழுது அகந்தை உருவாகிறது. அகந்தையிலிருந்து செயலியக்கத்தைப் பிரித்தாலொழிய சமநிலை பெறும் முயற்சியில் நாம் வெற்றி பெற முடியாது. உண்மையான வாழ்வு நெறியைப் பின்பற்றுவதாலும், சரியான செயல்முறைகளின் மூலமாகவுமே மனம் அப்பழுக்கற்றதாகிறது. வாசனைகள் அகலுகின்றன. யோகம் என்பது இதுதான். இது இன்னும் விரிவாக கர்மயோகம் பற்றிக் கூறும் அடுத்த அத்தியாயத்தில் விவரிக்கப்படுகிறது.

பேருண்மை பற்றிய தத்துவத்தை கிருஷ்ணர் துவக்கத்திலேயே கூறினார். செயல் வீரனாகிய அர்ச்சுனன் உள்ளத்தில் அதைப் பதிய வைப்பதற்காக, சாதாரண மக்களுடைய நிலையிலிருந்து அவர் எல்லாக் கருத்துக்களையும் எடுத்துரைத்தார். அர்ச்சுனன் போர் புரிய வேண்டுமென்று கூறியதுடன், எந்த மனப்பான்மையுடன் போர் செய்ய வேண்டும் என்பதையும் விளக்கி முடிக்கிறார். கற்ற தத்துவத்தை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதே நடைமுறைக்கு ஏற்ற மதம் ஆகிறது.

வேதாந்த தத்துவத்தை வாழ்க்கையில் கர்ம யோகமாக கடைப்பிடிப்பது எப்படி? இதுபற்றி பகவான் கூறுவதாவது:

ஏஷா தேபிஹிதா ஸாங்க்யே
புத்திர்யோகே த்விமாம் ச்ருணு
புத்த்யா யுக்தோ யயா பார்த்த
கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி 2:39

ப்ரஹாஸ்யஸி.

இதை 'புத்தியோகம்' என்றும் சொல்கிறார்கள். செயல் முறை மூலம் இறைவனை உணரும் மார்க்கம் இது.

இதுவரை பகவான் ''சாங்கியம்'' பற்றிக் கூறினார். சாங்கியம் என்றால் 'பகுத்தறிவைத் தர்க்க ரீதியாகப் பயன்படுத்தி 'இறைவனைப் பற்றிய பேருண்மையை அறிதல்' என்று பொருள். பற்றுதல்களினாலும் மற்றும் அதைப் போன்ற துயரங்களினாலும் வரும் கஷ்டங்களை அது போக்கிவிடும். அதை உபதேசித்த பிறகு அந்தப் புத்தியை அடையும் முறையை விளக்கப் போவதாக கிருஷ்ணர் கூறுகிறார்.

செயலின் விளைவு (கர்ம பலன்): விளைவும் விதியும் ஒன்றெ‌ன நினைத்து சிலர் குழப்பிக் கொள்ளுகிறார்கள். ''செய்வினை விளைவு'' என்ற கருத்து இந்துமதக் கோட்பாடுகளுக்கு ஆணிவேர் போன்றது இந்துக்களின் வாழ்க்கை முறையைத் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் முதலில் இதைத் தெளிவாக அறிந்து கொள்ளவேண்டும். இப்போது நான் டில்லியில் இருக்கிறேன். கடந்த ஆண்டு சென்னையில் ரமணராவ் என்பவர் செய்த குற்றத்திற்காக டில்லியிலுள்ள எனக்கு நியாயமான தண்டனை கிடைக்கிறதென்றால், ரமணராவ் என்ற பெயருடன் இருந்த குற்றவாளிக்கும் இப்பொழுது சின்மயா என்ற பெயருள்ள சன்னியாசிக்கும் தொடர்பு இருக்கிறது என்று தெரிகிறது அல்லவா? சின்மயாவில் மறைந்துள்ள ரமணராவை, அரசாங்கத்தின் காவல் துறை எப்படியோ தேடித் துளாவிக் கண்டு பிடித்துவிட்டது, சட்டம் அவரை விடவில்லை. ராவ் சென்னையில் செய்த குற்றத்திற்காக இந்த 'சுவாமி' டில்லியில் தண்டனை பெறுகிறார். அதே ராவ்தான் இந்த சுவாமி என்று தெரிகிறது.

இயற்கையின் நீதியும் அப்படித்தான். அது கொஞ்சம் கூடத் தவறுவதில்லை. மற்றொரு உருவத்தில், வேறு ஒரு இடத்தில், கடந்த காலத்தில் பாவமிழைத்தவனுக்கும் இப்போது துன்பப் படுபவனுக்கும் ஒருமைப்பாடு இருக்க வேண்டும் என்ற உறுதியான கருத்து இந்து தத்துவ ஞானிகளுக்கு இருக்கிறது. மன—அறிவு இயந்திரத்தினால்தான் இந்த ஒருமைப்பாடு ஏற்படுகிறது என்று சாத்திரம் கூறுகிறது.

நாம் அறிந்து செய்யும் ஒவ்வொரு செயலும் நமது உள்ளத்தில் ஒரு தடம் பதித்துவிட்டுச் செல்லுகிறது. இத்தடங்களை வாழ்ந்து தீர்த்துத்தான் அகற்ற வேண்டும் 'வாசனை'களைப் போக்கிக் கொள்ளுதல் என்பது இதுதான். இதற்காக வாழ்க்கையில் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட செயல் துறைக்கு வருகிறார்கள். நாம் விம்மி அழுது, பெரு மூச்சுவிட்டு, சிந்துகிற கண்ணீர், நம் உள்ளத்தைக் கழுவி அதிலுள்ள பாவத் தடங்களைப் போக்குகிறது. எல்லோருக்கும் இந்த நிலை வருகிறது.

அதை அனுபவிக்கும்போது நமக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் வருத்தத்திற்கு பதிலாக நாம் அதைப்பற்றி சந்தோஷப்பட வேண்டுமென்று பிறகு தெரிகிறது. ஏனெனில் நாம் அவ்வாறு துயரம் அனுபவித்த பிறகு பாவத் தடங்கள் எல்லாம் அழிந்து உள்ளம் பரிசுத்தமான பளிங்கு போல் ஆகிறது. அப்புறம் வருந்திக் கண்ணீர் சிந்துவதற்கு அவசியமில்லாத நிலை ஏற்படுகிறது. துக்கம் பொங்கி, கண்ணீராக வருவதற்குக் காரணம் புறச் சூழ்நிலை அல்ல. ஒருவருடைய உள்ளத்திலுள்ள பாவ இயல்புகளே அவ்வாறு கண்ணீர் சிந்தச் செய்கின்றன.

கிராமபோனில் இசைத்தட்டு வைத்ததும் பாட்டு வந்து விடுவதில்லை. தட்டு சரியான வேகத்தில் சுழன்று கொண்டிருந்தாலும்கூட பாட்டு வராது. இயந்திரத்திலுள்ள ஊசியை தட்டின்மேல் சரியாகப் பொருத்தி வைக்க வேண்டும். உடனே நமது கண்ணுக்குப் புலப்படாமல் அங்கு பதிந்திருக்கும் சங்கீதம், ஒலிப் பெட்டியின் மூலமாக வெளிவருகிறது. அதைப் போல, ஒருவருடைய உள்ளத்தில் பதிந்துள்ள மனத் தடங்களினால் மட்டும் தீமையோ, நன்மையோ உண்டாவதில்லை. வெளி உலகம் என்ற ஊசி அதனுடன் சேரும்போது நமது அகந்தையின் தன்னுணர்ச்சி எழுகிறது.

எந்த நிலையிலும் அமைதி குலையாமல் இருக்கும். ஒருவன் ஒரு தனி உலகத்திலிருப்பது போல் சஞ்சரித்து வருகிறான். அறிவு மட்டத்திலிருந்து எழும் இன்ப துன்ப உணர்ச்சிகள், மன மட்டத்தில் தோன்றும் வெற்றி—தோல்வி எண்ணங்கள், உடல் மட்டத்தில் அனுபவிக்கும் லாப—நஷ்டங்கள் முதலியவற்றினால் அவன் பாதிக்கப்படுவதில்லை. இதை நாம் முந்திய செய்யுளில் கண்டோம். உடல், மனம், அறிவு ஆகியவற்றிலிருந்து எந்த அளவுக்கு ஒருவன் அப்பாற்பட்டு நிற்கிறானோ, அந்த அளவுக்கு அவனுடைய அகந்தை மடிகிறது. 'துக்கப்படுவோன்' (அகந்தை) அதற்குப் பிறகு இல்லையாதலால் ''செயலின் பலன்''களை அது அனுபவிக்கும் பிரச்னையும் இல்லை.

இதை சரியாகப் புரிந்து கொண்டால், கிருஷ்ணர் புதிதாக ஒன்றும் சொல்லவில்லை என்பது இந்த அத்தியாயங்களிலுள்ள விவாதங்களினால் தெளிவாகும். புராதனக் கருத்தைப் புதிய முறையில் எடுத்துரைக்கிறார் என்பது விளங்கும். இந்து மதத்தின் புராதனமான அடிப்படை உண்மையொன்றைக் கீதையில் புதிய உருவத்தில் அளித்ததன் மூலம், அப்பொழுது நசித்து வந்த இந்து மதம் புத்துயிர் பெற்றது. ஏசுநாதர் பிறப்பதற்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் கூறப்பட்ட இச் செய்யுட்களின் உட்கருத்து, நாஜரின் (*Nazarene*) இறந்து இரண்டாயிரம் ஆண்டுகளாகி விட்ட இப்போதும்கூட நம் வாழ்க்கையில் நல் வழி காட்டும் கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறது அத்துடன்:

நேஹாபிக்ரம—நா சோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்
2:40

முயற்சித்து வீணுவதென்பது இதிலொன்றுமில்லே. தீங்கு (எதிர் மாறுன விளேவுகள்) ஏற்படுவதுமில்லே. இதைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொண்டபோதிலும், இந்த யோகத்தை கொஞ்சமே கடைப்பிடித்த போதிலும், மாபெரும் பயத்திலிருந்து அது நம்மைப் பாதுகாக்கிறது.

சடங்குகளே அரை குறையாகச் செய்தால் எவ்வித பலனும் கிடைக்காது. நிலத்தை உழுது, விதை விதைந்து நீர் பாய்ச்சி, களே எடுத்து, பயிரைப் பாதுகாத்து—இவ்வளவையும் அந்தந்த முறையில் செய்யாவிட்டால் அறுவடை செய்வதற்கு எதுவுமிருக்காது, சடங்குகளும் அப்படியே. சொல்லப்பட்டிருக்கும் முறைப்படி அவற்றைச் செய்யா விட்டாலோ, அரைகுறையாகச் செய்தாலோ, அந்த நல்ல காரியங்களிஞல் பாவமே வரலாம். இப்படி நினைப்பதற்கு நேர் மாருக வரும் விளேவுகளே 'பிரத்யவாயம்' என்று சடங்கு முறை சாத்திரங்கள் கூறுகின்றன. ஒரு மருந்தை மருத்துவர் கூறியவாறு உபயோகிக்காமல், விருப்பப்படி உட்கொண்டால் நோய் போவதற்குத் பதிலாக, நோயாளியே போய் விடுவான் அல்லவா?

எதுவாக இருந்தாலுல் எதிர்பார்க்கும் பலன் கிட்டாமற் போவதற்கு இந்த இரண்டு ஆபத்துகளே காரணம். கொள்கையை விளம்பரம் செய்வதில் கை தேர்ந்த பேர்வழி கிருஷ்ண பரமாத்மா! தாம் கூறும் கர்ம யோகத்தில் இவ்விரண்டு ஆபத்துகளும் இல்லே என்று ஆணித்தரமாகக் கூறுகிருர்.

இச் சாங்கியமும், யோகமும் பற்றிய விவரம் பின்வருமாறு:

வ்யவஸாயாத்மிகா புத்தி—ரேகேஹ குருநந்தன
பஹு சாகா ஹ்யனந்தாஸ்ச புத்த யோவ்யவஸாயினும்
2:41

ஒரே குறியாக இயங்கும் மனஉறுதியொன்றே இதில் தேவை, குரு நந்தன (குருவமிசத்தை மகிழ்விக்கும் செல்வனே). அவ்வுறுதியில்லாதவர்களின் சிந்தனேகள் ஒரு மரத்தின் எண்ணற்ற கிளேகளேப் போல் பிரிந்து நிற்கும்.

இப்போது கிருஷ்ணர் கர்ம யோகத்தை விளக்குகிருர். ஆன்ம உணர்வு பெறும் தலே சிறந்த சாதனேயில், இலட்சியமே குறி என்ற உறுதியுடன், தனது சிந்தனேகளே அங்குமிங்கும் சிதற விடாது முயற்சிப்பவனே வெற்றியடைகிருன். பல வித முடிவுகளேக் கோரி வேலே செய்பவர்களுடைய மனம் பற்பல வழி

களில் போய்க்கொண்டிருக்கும், 'மனம் குவிதல்' ஏற்படாது. எந்த வேலையையும் அவர்கள் ஒரு மனதுடன் முரண்பாடின்றி செய்ய முடியாது. எனவே அவர்களுடைய முயற்சிகள் பெரும் பாலும் தோல்வி பெறுகின்றன.

வாழ்வில் வெற்றி பெறுவதன் இரகசியம் பற்றி இந்துக்களின் கருத்தைத் தொட்டுக்காட்டிவிட்டு மேலே தொடருகிறார் கிருஷ்ணர். ஒரே நோக்கத்துடன் குவிந்த மன தோடு வேலையில் ஈடுபட வேண்டும் என்பதே அந்த இரகசியம். ஒருவன் இலட்சிய உறுதிகொண்டு, அதில் வெற்றி பெற்றே தீருவது என்ற ஒரே மதியுடன், தளராது முயற்சித்தால் நிச்சய மாக அவனுக்கு வெற்றி கிடைக்கும். ஆனால் மனிதன் தன் அகந் தைக்கு இரையாகி, நூற்றுக் கணக்கான கோரிக்கைகளை மனத் தில் கொண்டு செயல் படுகிறான்: அந்த கோரிக்கைகள்கூட ஒன்றுக்கொன்று பொருந்தாத, முரண்பட்ட கோரிக்கைகள். எனவே உள்ளம் வலிவிழந்து, எதையும் சரியாகச் செய்ய முடி யாத நிலையில் தடுமாறுகிறது. 'சிந்தனைகள் முரண்பட்டு ஒன்றை யொன்று அழித்துக் கொள்ளுதல்' என்பது இதுதான். மனதில் இந்த நோய் நிலை தோன்றுவதால், எதையும் செய்ய சக்தியற்று, மனிதன் வெற்றி வாய்ப்புகளை இழக்க நேரிடுகிறது.

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்—பவிபஸ்சித:
வேத வாதரதா: பார்த்த நான்ய—தஸ்தீதி வாதின:

2:42

பார்த்தா, அறியாதவர்சள் வேத வாதங்களில் இன்புற்றவர்களாய் 'இதைத் தவிர வேறு ஒன்றுமில்லை' என்று சொல் மலர் கோவைகளை எடுத்து வீசுவார்கள்.

காமாத்மான: ஸ்வர்க்கபரா ஜன்மகர்ம—பல ப்ரதாம்
க்ரியாவிசேஷ பஹுலாம் போகைச்வர்ய கதிம் ப்ரதி

2:43

கோரிக்கைகள் நிறைந்த அவர்களுடைய உள்ளங்களில் சுவர்க்க பதம் பெறுவதே இலட்சியமாக இருக்கும். தங்களுடைய செயல் முறையின் பயனாக புதுப்பிறவி கிட்டுமென்றும், இன்பமும் ஆதிக்கமும் பெறுவதற்குச் செய்ய வேண்டிய சடங்குகள் இவை யிவை என்றும் அவர்கள் அழகாகப் பேசுவார்கள்.

போகைச் வர்ய—ப்ரஸக்தானும் தயாபஹ்ருத—சேதஸாம்
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே

2:44

இதைப் போன்ற போதனைகளில் மனதைப் பறிகொடுத்து,

இன்பம், ஆதிக்கம் என்று ஊசலாடுபவர்களுக்கு மன உறுதி இருக்காது. ஆழ்ந்த தியானத்திற்கும், சமாதி நிலைக்கும் அவர்கள் தகுதியற்றவர்கள் ஆகிறார்கள்.

முதன் முதலில் இந்துமதக் கொள்கைகளை தைரியத்துடன் புரட்சிகரமாக மாற்றி அமைத்தவர்களில் வியாசரும் ஒருவர். அவருடைய காலத்தில் இந்து கலாச்சாரம் நலிவுறத் தொடங்கியது. அந்த ஆபத்திலிருந்து காப்பாற்றி, மீண்டும் அதை பொலிவுறச் செய்தார் வியாசர். அப் புரட்சிக்கு வழி வகுத்த புனித நூல் கீதை. வேதங்களில் கூறப்படும் சடங்குப் பகுதிகளை 'கல்வி கேள்விகளிலும், சொல் வன்மையிலும் சிறந்தும், சிற்றின்ப நோக்கமுடையது அந்த ''அறியாதவர்களின் சொல் மலர்க் கோவை'' என்று கிருஷ்ணர் வாயிலாக, வியாசர் கண்டிக்கிறார். அக்காலத்திய வைதிகச் சூழ்நிலையை நினைவிற்கொண்டு இதைப் படிக்கும்போது வியாசருடைய தைரியமும், கண்டனத்திலுள்ள ஆணித்தரமான பொருளும் நம்மைப் பிரமிக்க வைக்கின்றன.

இன்பம், ஆதிக்க ஆவல் முதலியவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்குப் பயன்படும் வகையில் வேதங்களின் சடங்குப் பகுதிகள் அமைந்திருக்கின்றன. உண்மையையும், உண்மையல்லாததையும், பாகுபடுத்தித் தெரிந்து கொள்ள முடியாதவர்கள் அவர்கள். தாங்கள் செய்வதன் விளைவு, பலன் ஆகியவற்றையே பார்த்துக் கொண்டிருப்பவர்கள். அவர்கள் சடங்குகளுடன் நின்று விடுவார்களேயொழிய, அவ் வழியில் சென்று உயர்ந்த ஒன்றை அடைய வேண்டுமென்ற கருத்து அவர்களுக்கு இருப்பதில்லை.

வேதங்களின் கர்ம காண்டங்களில் கூறியுள்ள சடங்குகளைச் செய்பவர்கள் மரணத்திற்குப் பிறகு சுவர்க்க வாழ்வு பெறுவார்கள் என்றும் புலனின்பங்களுக்கும் மேற்பட்ட சுகங்கள் அங்கு இருப்பதாகவும் அப்பகுதிகள் கூறுகின்றன. இந்தச் சடங்குகளைச் செய்ய வேண்டியது அவசியமே. ஆனால் அவற்றைச் செய்பவர்களுக்கு மனதை ஒருமைப்படுத்தவோ, உயர்நிலைக்கு வளர்த்துக் கொள்ளவோ நேரமிருப்பதில்லை; வாய்ப்பும் இல்லை. எனவே ஆன்மிக நோக்கிலிருந்து, அவை எல்லாம் வலுவிழந்த மதத்தின் வழி முறைகளாக வியாசர் கருதுகிறார். சடங்குகளில் ஈடுபட்டவர்கள் அவற்றையே ஒரு முடிவாகக் கருதி உண்மை இலட்சியத்தை கைவிட்டு விடுகிறார்கள்.

எல்லாவற்றையும் கடந்து நிற்பதும், அளவிட முடியாததுமான இறைப் பொருளை விளக்கும் கிருஷ்ணர், ''நோக்கமும் அதை அடையும் வழியும் ஒன்றுதான்'' என்று நினைப்பவர்களைக் கேலி செய்கிறார். தியானத்தின் மூலம் இலட்சியத்தை அடைவது பற்றி வேதாந்தப் பகுதிகள் கூறுகின்றன. தியானத்திற்குத் தேவையான மனநிலையை உருவாக்குவது பற்றி சடங்குப்

பகுதிகள் கூறுகின்றன. சடங்குகளின் நோக்கம் மனதை ஒரு நிலைப்படுத்துதல். எவ்வித கோரிக்கைகளுமின்றி, நிஷ் காமமாக, அவற்றைச் செய்யவேண்டும்: அவ்வாறு பண்பட்ட உள்ளமே உபநிடதங்களில் கூறப்படும் பேருண்மையை உணரவும் சலனமற்ற தியானத்தை மேற்கொள்ளவும் தகுதி பெற்றது. சடங்குகளை செய்யத் தொடங்குபவர்கள் இதற்கு நேர்மாறாக, கோரிக்கைகளை மனதிற்கொண்டு அவற்றை மேற்கொள்ளுகிறார்கள்.

விவேகமின்றி இப்படி கோரிக்கைகளில் மூழ்கியவர்களுக்குக் கிடைக்கும் பலன்களை பகவான் இனி விவரிக்கப் போகிறார்.

த்ரைகுண்ய விஷயா வேதா
நிஸ்த்ரை குண்யோ பவார்ஜுன
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்த்தோ
நிர்யோக க்ஷேம ஆத்மவான் 2:45

வேதங்களில் கூறப்படும் மூன்று வகை குணங்களுக்கும் நீ அப்பாற்பட்டு இருக்க வேண்டும் அர்ச்சுனா. எதிர்மாறான இரட்டை உணர்ச்சிகளிலிருந்து விடுபட்டு, சாத்விகத்தில் (நல்லதில்) நிலைபெறு. (பொருள்) சேர்த்தல், சேர்த்ததைப் பாதுகாத்தல் போன்ற எல்லா சிந்தனைகளையும் கைவிட்டு, ஆன்மாவுடன் வயித்துவிடு.

மனித அமைப்பில் மூன்று வகை குணங்கள் ஒவ்வொருவருடைய மனதிலும் வெவ்வேறு அளவில் கலந்து நிற்கின்றன. இம் மூன்றுக்கும் அப்பாற்பட்டிருந்தலென்றால் மன இயக்கத்தைக் கடந்து இருத்தல் என்றுதான் பொருள். செப்பு, துத்தநாகம், தகரம் ஆகியவற்றை கொண்ட உலோகத்தினால் ஒரு பாத்திரம் செய்யப்பட்டிருக்கிறது. அப்பாத்திரத்திலிருந்து அந்த மூன்று உலோகங்களையும் முற்றிலும் அகற்றிவிடு என்றால், அந்தப் பாத்திரத்தையே போட்டு உடைத்து அழித்துவிடு' என்று அர்த்தம். வெந்நீர், தேயிலை, பால் சர்க்கரை இதெல்லாம் சேர்ந்து டீ ஆகிறது. இந்த நாலையும் அகற்றிவிட்டு டீ கொடு என்றால், அதைக் கீழே கொட்டிவிட்டு வெறும் பாத்திரத்தைத் தான் கொடுப்பார்கள். உபநிடத மொழியில், நேரடியாகச் சொல்லுவதென்றால், மனதிற்கும், அறிவுக்கும் அப்பாற்பட்டிருக்க வேண்டும் என்றும், அப்படி ஒருவர் செய்தால் தாமே கடவுள் என்ற நிலையை அறிந்து கொள்ளுவார் என்றும் இங்கு குறிப்புணர்த்தப்படுகிறது, பேருண்மையை இவ்வளவு அப்பட்டமாகச் சொன்னால் இந்துக்கள் பயந்து, ஆரிய இனத்தை விட்டு அகன்று ஓடி விடுவார்கள் என்று நினைத்து, புத்துயிர் பெற்ற இந்துமதம் இவ்வாறு குரல் கொடுக்கிறது. எப்படிச்

சொன்னாலும் அர்த்தம் ஒன்றுதான். எனவே வார்த்தைகளைச் சற்று மாற்றி, ''அர்ச்சுனா, குணங்களைக் கடந்து நில்'' என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

ஒரு டாக்டரிடம் போவதாக நினைத்துக்கொள்ளுங்கள். அவர் மருந்துச் சீட்டு எழுதிக் கொடுக்கிறார். மருந்து கடைகளில் அந்த மருந்து கிடைக்கவில்லை. உலகத்தில் எந்தக் கம்பெனியின் உற்பத்திப் பட்டியலிலும் அது இல்லை. அதனால் டாக்டர் கொடுத்த சீட்டு நிச்சயமாகப் பயனற்றதாகி விடுகிறது. அதைப் போலவே பகவான் தரும் மருந்துச் சீட்டில், ''மூன்று குணங்களையும் கடந்து நில்'' என்று எழுதியிருக்கிறது. ஆன்ம நிறைவு பெற அது மகத்தான நெறியாக இருக்கலாம். ஆனால் அதைப் பின்பற்றத் தொடங்கும் தீரமிக்க மாணவனுக்கு அது நடக்கக் கூடியதாக இருக்க வேண்டும். மனிதனிடமுள்ள சத்துவ, ராஜச, தாமச (செயல் கடந்த தூயநிலை, செயற் துடிப்புநிலை, செயல் மந்தநிலை குணங்களை) கடப்பதற்கு என்ன வழி? இதைத் தெளிவு படுத்தா விட்டால் இந்த மாபெரும் டாக்டரின் சீட்டும் உபயோக மற்றதாகிவிடும்.

குறைபாடுகள் மிக்க நமது சூழ்நிலையைக் கடந்து ஆனந்த பரவச உலகிற்குச் செல்வதற்கு, நாம் பின்பற்றக் கூடிய நேரடி வழி இச் செய்யுளின் இரண்டாவது வரியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்த மனநிலை கொண்டு போர் புரிய வேண்டுமென்பதை இதற்கு முன் கூறினார் அல்லவா? அதே உள்ளச் சமநிலைதான் இந்த இடத்தில் வேறு சொற்களில் வற்புறுத்தப்படுகிறது.

இன்பம், துன்பம், வெற்றி—தோல்வி, வெப்பம்—குளிர்ச்சி போன்றவை நம் வாழ்க்கையில் வரும் அனுபவங்கள், எதிர் மாறான இரட்டை உணர்ச்சிகள் என்று எடுத்துரைக்கப்பட்டது. ஒன்றை அடிப்படையாகக்கொண்டுதான் நாம் மற்றொன்றை உணர முடிகிறது. எதிரெதிரான இரட்டைகள் (துவந்தங்கள்) என்ற சொல்லில் வாழ்க்கையின் எல்லா அனுபவங்களுமே அடங்கி விடுகின்றன. எல்லா 'துவந்தங்' களிலிருந்தும் விடுபட வேண்டும் என்று அர்ச்சுனனுக்கு பகவான் கூறுகிறார்.

நித்திய சத்வஸ்த: (''தூய்மையில் நிரந்தரமாக நிலை பெற்று''—) மூன்று குணங்களிலும் மிக நுணுக்கமானது சத்துவ (தூய்மை) குணம். உலகப்பற்றுதல்களினாலும் அவற்றின் விளைவாக நமது அறிவு, வீண் பரபரப்புடன் மருட்சி, துயரம் போன்றவற்றிற்கு இரையாவதாலும் ஏற்படுவது ரஜோ (செயற்துடிப்பு நிலை) குணம். உண்மை நிலையை அறிந்துகொள்ள முடியாத மந்தத் தேக்கத்தை தாமச (செயல் மந்தநிலை) குணம் என்று கூறுகிறார்கள். எனவே தூய்மையிலேயே நிலையாக இருத்தல் என்றால், பரபரப்பு, குழப்பம், தடுமாற்றம் ஆகியவற்றையெல்

லாம் குறைத்துக் கொள்ளுதல். அப்படியிருந்தால் மருட்சியில் உழலாமல் எதையும் தெளிவாக அறிந்து அதனுடைய உண்மைப் பொருளை அறிந்து கொள்ளும் முயற்சியில் முதல்படியாக அது அமைகிறது.

பிரபஞ்சத்திலுள்ள உயிரினங்களின் எல்லா வேலைகளையும் யோக, க்ஷேமம் என்ற இரு சொற்களில் அடக்கிவிடலாம். எல்லா வேலைகளுக்கும் தூண்டுதல் சக்தியாக இருப்பது இந்த இரண்டும்தான். 'யோகம்' என்பது பொருள் திரட்டுதல். அப்படிப் பெற்ற பொருளைப் பாதுகாத்து வைத்துக்கொள்ளும் முயற்சி 'க்ஷேமம்'. அகந்தை மையத்திலிருந்து எழும் எல்லாச் சுயநலக் கோரிக்கைகளும் யோகம், க்ஷேமம் என்ற வார்த்தைகளுக்குள் வருகின்றன. இந்த இரண்டு இயல்புகளையும் கைவிட்டால் விஷப் பூண்டுகளாகிய பரபரப்பும், துக்கமும் வாழ்க்கையிலிருந்து நீங்கிவிடலாம். இந்துக்களாகிய நாம் நமது நிலையை உயர்த்திக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடக்கூடாது என்றோ; பொருள், ஆன்மிக துறைகளில் நமது தேசியச் செல்வத்தைப் பாதுகாத்துக் கொள்ளும் தீவிர நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளக்கூடாது என்றோ இதற்கு அர்த்தமில்லை.

நமது மதத்தைத் தப்பும், தவறுமாகப் புரிந்துகொண்டு, நாட்டுக்கு நாம் செய்ய வேண்டிய பொறுப்புகளிலும், சமூகத்தில் நமக்கு உள்ள கடமைகளிலும் படுமோசமான பல தவறுகள் செய்திருக்கிறோம். இந்த செய்யுளை சரிவர புரிந்து கொள்ள முடியாதவர்கள், ''இந்து மதமென்பது கோழைகளுக்காக ஒரு கோழை வகுத்துக் கொடுத்த கோழை மதம்'' என்று சரடு விட்டுக் கொண்டு திரிகிறார்கள். இது எவ்வளவு பெரிய பொய் என்பதை வரலாறு நிரூபிக்கிறது.

முதலாவது அத்தியாயத்தை மனதிற் கொண்டே கீதையைப் புரிந்துகொள்ள வேண்டுமென்று நான், ஏற்கனவே விளக்கியிருக்கிறேன். 'சாங்கிய யோகம்' என்ற இந்த அத்தியாயத்திலுள்ள சொற்களை சரியானபடி புரிந்து கொள்வதற்கு ஒரு விஷயத்தை மறந்து விடக்கூடாது. ஒரு போர்க்களத்தில் ஒப்பற்ற மா வீரனாகிய அர்ச்சுனன் மனச் சோர்வுற்று உற்சாகமிழந்த வெறுப்பு நிலையில் ஆழ்ந்துவிட்டான். அதிலிருந்து அவனை காப்பாற்றுவதற்காக அருளப்பட்ட புத்திமதி கீதை. இதை மறுப்பவர்கள் தடுமாற்றத்தில் சிக்கிக் கொள்ளுவார்கள். வாழ்க்கையில் துயரமும் அமைதியின்மையும் நம்மை அணுக இடமில்லை. நச்சுப் பயிர் விளையும் நிலங்களைப் போன்றவை இவை. எனவே இவற்றிலிருந்து விடுபட வேண்டுமென்று கிருஷ்ணர் கூறுகிறார்.

''எதிர் மாறுன இரட்டை இயல்புகளிலிருந்து விடுபடு'' ''பொருள் சேர்த்தல், அவற்றைப் பாதுகாத்து வைத்துக்கொள்ள முயலுதல் போன்ற இயற்கையான உணர்ச்சிகளுக்கு இரையாகி விடாமல், தூய்மை நெறியில் செல்'' என்று ஆன்மிகத் துறையில் பண்பட்ட மகான்கள் சுலபமாகச் சொல்லிவிடலாம். ஆனுல் அதை நடைமுறையில் கொண்டுவருவது எப்படி என்பதைக் கற்பித்தால்தான் ஒரு மாணவனுக்கு, சாதகனுக்கு, அது பயனுள்ளதாக இருக்கும். இந்த 'எப்படி' என்ற கேள்விக்குச் செய்யுளின் கடைசிச் சொல்லாகிய ''ஆத்மவான்'' (ஆன்மாவில் லயித்திருப்பவனுக) என்பது விடையாக அமைந்திருக்கிறது. முற் கூறிய இரட்டைகளின் பாதிப்பு, தூய்மையைப் பற்றி 'கவலைப் படாதிருத்தல், செல்வம் திரட்டிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆவல்—இவை எல்லாம் அகந்தை மையத்தி லிருந்து எழுகின்றன. தன்னை உடல், மனம், அறிவு, ஆகிய வற்றுடன் ஆன்மா இணைத்துக்கொள்ளும்போதுதான் இந்த அகந்தை பிறக்கிறது. பிறகு அகந்தைக்கு வரும் கவலையையும் துயரத்தையும் தானே அனுபவிப்பதாக ஆன்மா நினைக்கிறது.

அவற்றிலிருந்து நாம் விடுபட வேண்டுமானுல், நமது ஆன்மிக இயல்பு பற்றிய நினைவு உள்ளத்தில் பிரகாசித்துக் கொண்டு இருக்க வேண்டும். அதில் நிலைபெற்றுவிட்டால் ஒருவருடைய தூய, கவலைகளற்ற அகத்தை, உலக அனுபவங் களுக்கு அப்பாற்பட்டிருக்கும் தனது உண்மை நிலையைத் தெரிந்து கொள்கிறது. இந்த உண்மை நிலையை அறிந்தவன் குணங்களைக் கடந்தவனுகவே இருப்பான். அவனுக்கு வேதநூல்கள் தேவையில்லை. வேதங்களைத் திருத்தவும், அவற்றிற்கு மேலும் பல பகுதிகளைச் சேர்க்கவும் அவனுக்குத் தகுதி உண்டாகிறது. அவன் வேத உண்மைகளை நிரூபிக்கும் தெய்வீகச் சக்தி பெற்றவனுகிறுன்.

வேதங்களில் கூறியுள்ள சடங்குகளைச் செய்வதால் சில பயன்கள் கிட்டுகின்றன. அந்தப் பலன்களை நாடக்கூடாது என்றுல், சடங்குகளை ஏன் செய்ய வேண்டும்? சடங்குகளின் மூல மாக வரும் பயனைப் பெற்று பிறகு இறைவனுக்கு அர்ப்பணம் செய்வது எதற்காக? இக் கேள்விகளுக்கு கீழே பதில் தரப்படு கிறது.

யாவாநர்த்த உதபானே சர்வத: ஸம்ப்லுதோதகே
தாவான் சர்வேஷுவேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானத:
2:46

எங்கும் வெள்ளக் காடாக இருக்கும்போது, ஒரு நீர்த் தேக்கத்திலிருந்து கிடைக்கும் பயனே ஆன்ம ஞானம் பெற்ற பிராம்மணனுக்கு வேதங்களிலிருந்து கிடைக்கிறது.

இந்த உபமானம் மிக அற்புதமாகவும், இந்த இடத்திற்கு மிகவும் பொருத்தமாகவும் அமைந்திருக்கிறது. பூமிக்கு அடியில் தண்ணீர் எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கிறது. வெள்ளம் இல்லாதவரை ஒரு கிணறு வெட்டி எல்லோரும் அதிலிருந்துதான் குடிநீர் எடுத்துக்கொள்ளுகிறார்கள். வேதங்கள் உண்மையான மெய்யறிவின் ஊற்றுக்கால். அவ்வறிவு வேண்டுமென்று நினைப்பவர்கள் அந்தப் புனித ஊற்றுக்குத்தான் வருவார்கள். ஆனால் திரும்பிய இடமெல்லாம் வெள்ளம் பரவி, குளங்களும், கிணறுகளும் மூழ்கிக் கிடக்கும்போது, நீர்த் தேக்கமும் அதில் மூழ்கி விடுகிறது. மிகப் பயனுள்ளதாக இருந்த கிணறுகளும், நீர்த் தேக்கமும் இப்போது பயனற்றதாகின்றன.

அவ்வாறே முற்று முணர்ந்தவர்களுக்கு வேதங்களில் பயனில்லை. இங்கு 'வேதங்கள்' என்ற சொல் வேதங்களின் சடங்குப் பகுதிகளைக் குறிப்பிடுகிறது. பல்வேறு கோரிக்கைகள் நிறைவேறுவதற்கு அந்தந்த சடங்குகளைச் செய்ய வேண்டுமென்று அப் பகுதிகளில் பணிக்கப்பட்டிருக்கிறது. புலன் மருட்சிக் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ளும் ஆவலுள்ளவர்களுக்கு இவற்றினால் பயன் கிடைக்கிறது. ஆன்மானுபவம் பற்றி உணர்ந்த (விஜாநாத) உண்மையான ஞான வேட்பாளனுக்கு (பிராம்மணன்) இந்தச் சடங்குப் பகுதிகள் பயனற்றவையாகிவிடுகின்றன. பரிபூரண நிலையாகிய அவனுடைய ஆனந்த வெள்ளத்தில் புலனின்பங்கள் மூழ்கி அடங்கி விடுகின்றன.

இப்போதோ அல்லது வரும் பிறவியிலோ, சில குறிப்பிட்ட கோரிக்கைகள் நிறைவேற வேண்டுமென்றால் வேதத்தில் கூறியுள்ள சடங்குகளைச் செய்ய வேண்டும். இக் கோரிக்கைப் பூர்த்தியினால் வரும் இன்பம் ஒருவரையறைக்கு உட்பட்டது. அதற்கு தொடக்கமும் முடிவும் உண்டு. தானே ஆன்மா என்று கண்டு கொண்ட பிறகு ஒருவனுக்கு தெய்வானுபவத்தின் எல்லையற்ற ஆனந்தமே கிடைத்துவிடுகிறது. கர்ம காண்டங்கள் கூறும் இன்பங்களும் இந்த ஆனந்தத்தில் அடங்கி விடுகின்றன அல்லவா? எல்லாக் கோரிக்கைகளையுமே உள்ளடக்கிய பெரும் பேறு கிட்டிய பிறகு, சிறு கோரிக்கைகள் இன்னும் கிடைக்கவில்லையே என்று யாரேனும் ஏங்குவார்களா?

இப்படிச் சொல்வதிலிருந்து வேதங்களிலுள்ள கர்ம காண்டப் பகுதிகளை வியாசர் புறக்கணிக்கிறார் என்றோ, கேலி செய்கிறார் என்றோ நினைத்துவிடக் கூடாது. இலட்சியத்தை அடையும் வழியும் இலட்சியமும் ஒன்றுதான் என்று தவறான நினைப்பவர்களுக்குத்தான் கிருஷ்ணர் இங்கே சவுக்கடி கொடுக்கிறார். சடங்குகளினாலும், அவற்றிலிருந்து பெறும் இன்பங்களின் மூலமாகவும் எல்லையற்ற பரம் பொருளை எட்டி விடலாமென்று

நினைப்பது தவறு. பலனைப் பற்றி கவலைப்படாமல் மேற் கொள்ளப்படும் எந்தவேலையும் மனித ஆளுமைக்கு ஒருமைப்பாடு அளிக்கிறது. இதயம் இவ்வாறு துப்பரவு செய்யப்பட்ட பிறகு, விவேகம் தானாக வருகிறது. அவ்விவேகத்தின் ஒளியில் மெய்ப் பொருளுணர்வு தானே வருகிறது. எல்லையற்று எங்கும் பரந்திருக்கும் ஆன்மாவைத் தன்னுள்ளும் உணர்ந்த பிறகு, சடங்குகளிலிருந்து வரும் சிறு இன்பங்களை ஞானிகள் நாடுவ தில்லை.

ஆன்ம ஞானமே பேரறிவு. வேதங்கள் கூறும் அறிவும் அதில் அடங்கியிருக்கிறது. அகந்தை ஒருவரிடம் இருக்கும்வரை, அது வேதங்களின் ஆசி தனக்கு வேண்டுமென்று கருதுகிறது. அகந்தை அகன்று, எல்லையற்ற இறைப் பொருள் மட்டும் நிலவும்போது, அப்படிப்பட்ட ஆன்மா வேதங்களுக்கே ஆசி கூறும் அந்தஸ்து பெற்று விடுகிறது. பட்ட மேற்படிப்பில் தேர்ந்த கணித இயல் மாணவனுக்குப் பெருக்கல் வாய்ப்பாடுப் புத்தகம் எதற்கு?

கர்மண்யே வாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன
மா கர்மபல ஹேதுர்ப்பூர்—மா தே ஸங்கோஸ்த்வகர்மணி
2:47

உனக்குள்ள உரிமை பணிபுரிதல் மட்டுமே; அதன் பயனில் ஒருபோதும் இல்லை. பணியின் பயன் உனது நோக்கமாக இருக்க லாகாது; அதற்காக, எதுவுமே செய்யாமலும் இருந்துவிடக் கூடாது.

ஒரே குறியாக, தெய்வார்ப்பணமான பணியை, அதன் பலனைக் கருதாது செய்தால் உள்ளம் பரிசுத்தமடையும். ஆன்மிக உணர்வு பெற இது முதலாவது படி என்று கீதை கூறுகிறது. இந்து மரபுக்கு இது எதிரான கொள்கையல்ல. சமூகத்திலும், தனி வாழ்விலும் நாம் மேற்கொள்ளும் எல்லா நடவடிக்கை களையும் உள்ளடக்கி விரிவான விளக்கம் கொடுக்கிறது கீதை. ஆனால் வேதங்களிலோ 'கர்மா' என்று குறிப்பிடப்பட்டிருப்பது மதத்திலும், சடங்குப் பகுதிகளிலும் நாம் பின்பற்ற வேண்டிய முறை பற்றித்தான். இங்கு 'கர்மா' என்று குறிப்பிடப் பட்டிருப்பது வாழ்க்கையில் நாம் செய்யும் எல்லா வேலைகளையும் உள்ளிட்டது.

ஏதோ அவசரமாகப் பக்கங்களைப் புரட்டிவிட்டுப் போகும் மாணவர்களுக்கு தத்துவ இயல் ஏற்றதில்லை. இப்பொழுது நாம் படிக்கும் செய்யுளை சரிவரப் புரிந்து கொள்ளாவிட்டால் நடை முறைக்கு ஒத்துவர முடியாததாகத் தோன்றலாம். ஏழைகள் தமது வேலைகளைச் செய்துவிட்டு, பலனை எதிர்பார்க்காமல், ஏழை களாகவே இருக்க வேண்டுமென்றும், பணக்காரர்கள்

ஏழைகள்மீது ஆதிக்கம் செலுத்திக்கொண்டே இருக்கலா மென்றும் கீதை கூறுவதாக விபரீதப் பொருள் கொள்ளும் வீணர் களும் இருக்கலாம். பலனை எதிர்பாராமல் வேலை செய்யவே முடியாது என்று, வெறும் மனதின் மட்டத்தில் அதைப் புரிந்து கொள்ள முயற்சிப்பவர்கள் கருதுகிறார்கள். ஆனால் அவர்களே இது பற்றி ஆழ்ந்து சிந்தித்த பிறகு, பரந்த வாழ்க்கைத் துறையில் இக் கொள்கையை கடைபிடித்துப் பார்க்கும்போது, உண்மை யான எல்லா மாபெரும் சாதனைகளுக்கும் இதுவே அடிப்படை யாக இருப்பதைக் காண்பார்கள்.

தெய்விக உட்தூண்டுதலின் வேகம் மனதில் எப்போதும் இருக்கவேண்டுமென்றும், அந்த முறையில் 'வாழ்ந்து செயல்படும் கலையை கிருஷ்ணர் 'கர்ம யோகம்' என்று விளக்கியது ஏற்கனவே எடுத்துரைக்கப்பட்டது. இப்போது கூறப்படும் கருத்தையும் ஆழ்ந்து ஆராய்ந்தால், இதிலும் தெய்விக உட்தூண்டுதலுடன் வாழ்க்கையில் இயங்கும் முறை பற்றி கிருஷ்ணர் அர்ச்சுனனுக்கு அறிவுறுத்துகிறார் என்பது விளங்கும்.

தவறான கற்பனைக் கொந்தளிப்புகள் வாழ்வைப் பாழாக்கு கின்றன. மனதில் அமைதியில்லாமல் செயல்படும்போது தோல்வியைத் தவிர வேறு என்ன வரும்? தோல்வி வந்து விடுமோ என்ற அசட்டு பயத்திலேயே ஒரு வேலையை தொடங்கினால் அந்தப் பயமே தோல்விக்குக் காரணமாகிறது. இதனால் பலர் மேலான பணிகளை மேற்கொள்ளவும் தயங்கு கிறார்கள். எப்படியோ துணிந்து அவற்றைத் தொடங்கி விட்டாலும் கூட, அவை முடியு முன்னரே அவர்களுக்குக் குலைநடுக்கம் எடுத்து விடுகிறது. மனத்தில் அவ்வளவு பயம். மனோசக்தி இவ்வாறு சிதறி பாழாவதைத் தடுக்கவும், நம்மால் முடிந்த அளவுக்குச் சிறந்த முறையில் வேலை செய்யவும் இங்கு கூறப்படும் இரகசியம் என்னவென்றால், நாம் ஆக்கப் பூர்வமான உற்சாகத்துடன் செயல்முறையில் ஈடுபடவேண்டும் என்பது தான். அப்படிச் செய்யப்படும் எந்த வேலையும் ஒப்புயர்வற்ற வெற்றியாகவே முடியும். வெற்றிக்கு வழிவகுக்கும் செயல்முறை, விதி என்றைக்கும் இதுதான்.

நிகழ்காலத்தைச் செதுக்கிச் செய்த வெற்றிச் சிலையே எதிர் காலம். இப்போது உழுது, விதை விதைத்து ஆவன செய்தால் நாளைக்கு நல்ல அறுவடை நடக்கும் வாய்ப்பு வருகிறது. பருவ மழை வருமா, பயிர்கள் விளையுமா என்று தயங்கித் தயங்கி ஒருவன் உழவு செய்யாமலும் விதை விதைக்காமலும் சும்மா காலங் கடத்திக் கொண்டிருந்தால், அவனுடைய சாகுபடி எப்படி இருக்குமென்று விளக்க வேண்டியதில்லை. நிகழ் காலத்தைத் திறமையுடன் பயன்படுத்திக் கொண்டால்,

வருங்காலம் வளமையும், சிறப்பும் பெற்றுத் திகழும். கடந்த காலம் போய்விட்டது, எதிர்காலம் இனிமேல் தான் தோன்றப் போகிறது. நிகழ் காலமே சிறப்பாகப் பணியாற்றுவதற்கேற்ற நேரம். அதைக் கைவிட்டு நிற்கும் ஒருவன், எதிர்காலத்தில் தனக்கு ஏதோ நன்மை வரப் போகிறதென்று எதிர்பார்ப்பதில் அர்த்தமில்லை.

இது எல்லோருக்கும் தெரியும். எளிதில் விளங்கக் கூடிய உண்மை இது. கீதையும் இங்கு இதைத்தான் சொல்லுகிறது. ''வெற்றி பெற விரும்புகிறாயா? அப்படியானால் விளைவுகளைப்பற்றி அச்சமோ, கவலையோ இல்லாமல் வேலையைப் பார். மனக் குழப்பத்துடன் செயலில் இறங்காதே'' என்று கூறுகிறது. தவிர, 'செயலின் பயன்' என்று இங்கு கூறியிருப்பதை சிந்தித்தால், அதன் கருத்தாழம் நமக்கு அளவிலா இன்பமூட்டுகிறது. ஒரு வேலையின் பரிசு அவ்வேலையே தவிர வேறில்லை. சரியாக ஆலோசித்துப் பார்ப்பவர்களுக்கு இது நன்கு விளங்கும். இப்போது செய்யும் வேலையே பிறகு காலத்தினால் சீர் செய்யப்பட்டு பலனாகப் பரிணமிக்கிறது. எந்தப் பணியும் ஒரு விளைவுடனேயே முற்றுப் பெறுகிறது. தன்னைத்தானே அது பூர்த்தி செய்து கொள்ளுகிறது என்றுகூட சொல்லலாம். செயலும் விளைவும் வெவ்வேறு அல்ல. இன்றைய செயல்களை எதிர்காலச் சூழ்நிலையில் வைத்துக் கூறுவதுதான் செயலின் விளைவு அல்லது பயன். ஆகையினால் பலனைப் பற்றியே நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டு பொழுது போக்கும் ஒருவன், நிகழ்காலத்தை நழுவ விட்டு விடுகிறான். இனிமேல் வரப்போகும் எதிர்காலத்திற்காக இப்போது வாழ்ந்து வருகிறான்! கிருஷ்ணர் இங்கு கூறும் அறிவுரையை சுருக்கிச் சொல்லப் போனால், தற்காலத்தை உபயோகமில்லாத கற்பனைக் கனவுகளிலும் அச்சத்திலும் வீணாக்காமல் நமது முழுத் திறனையும் நிகழ்காலத்திலேயே நன்றாகப் பயன்படுத்தி, செய்து கொண்டிருக்கும் வேலையுடன் நாம் ஒன்றிவிடவேண்டும் என்பதுதான். அப்படிச் செய்தால் தானாகவே எதிர்காலம் நல்ல பலனைக் கொடுக்கும். நிகரற்ற சாதனைகளை கர்மயோகிக்கு எதிர்காலம் தானாகவே கொண்டுவரும் என்று இங்கு வாக்குறுதியளிக்கப்படுகிறது.

ஆக அர்ச்சுனனுக்குக் கூறும் ஆலோசனை இதுதான்! ''நீ இப்போது செய்யக்கூடியதெல்லாம் உனக்கு கொடுக்கப்பட்ட பணியை நிறைவேற்றுவதுதான். நீ உயர்ந்த நோக்கமுள்ள செயலில் இறங்கியிருக்கிறாய் என்பதை அறிவாய். அதை மனதிற் கொண்டு உன் முழுத்திறனையும் ஈடுபடுத்தி, செய்யும் பணியில் உன்னையே மறந்துவிடு. அவ்வாறு உன் உள்ளின்று உறையும் தெய்விகத் தூண்டுதலில், செய்யும் காரியம் உரிய வெற்றி

அளித்தே தீரும். மேலும் அவ்வெற்றி, நீ உயர்ந்த நோக்கத்துடன் செயலாற்றியதின் பரிசாக கிடைத்த ஒன்ருக இருக்கும்.''

உண்மையான செயலியக்க வீரர்களுக்கு வழிகாட்டும் நான்கு அறிவுரைகள் இச் செய்யுளில் பொதிந்திருக்கின்றன 1. செய்யும் வேலையே ஒருவனுடைய குறியாக இருக்க வேண்டும். 2. விளைவுகளுக்கும், அவனுக்கும் சம்பந்தமில்லை. 3. ஒரு வேலைக்குக் குறிப்பிட்ட பலன் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் எவரும் பணி இயற்றுதல் கூடாது. 4. இப்படிக் கூறுவதற்கு ''கையைக் கட்டிக்கொண்டு எதுவும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திரு'' என்று பொருள் அல்ல. இந்நான்கையும் மனதில் வைத்துக்கொண்டு செயல்படுபவன் கர்மயோகி. ஒரு வேலையைத் தொடங்குபவனுடைய உள்ளத்தில் எவ்வித கவலையும் ஆவலுமில்லாமல், தான் செய்யும் பணியே பேரானந்தம் என்ற மனப்பாங்குடன், தன்னை மறந்து கண்ணும் கருத்துமாக செயலாக்கத்தில் ஈடுபட வேண்டுமென்பதே இதன் நோக்கம்.

செய்யும் வேலையே பரிசு. தான் மிகச் சிறந்த நோக்கத்திற்காக வேலை செய்யும் உணர்வு ஒன்றே ஒருவனுக்கு மட்டற்ற மகிழ்ச்சியையும், திருப்தியையும், அளிக்கிறது. வேலையை ஒரு வழி என்று வைத்துக்கொண்டால், அவ்வேலையில் ஒருவர் பெறும் ஆன்மானுபவமே அவர் அவ்வழியில் சென்றடையும் தெய்வீக இலட்சியம்.

இறைவனை உள்ளத்திலிருத்தி, வெளியுலகச் சவால்களை எல்லாம் இவ்வாறு ஏற்ருல், மிகச் சுலபமாக அமைதியுடன் செயல்பட முடியும். அந்த அளவுக்கு அவருடைய ''வாசனை''த்தளைகள் தகர்ந்து, தியானத்தில் ஈடுபடுவதற்குத் தம்மை தகுதியாக்கிக் கொள்ளுகிருர். இறுதியில் வேதங்கள் உணர்த்தும், தம்மிடமுள்ள எல்லையற்ற இறைப் பொருளாகிய ஆன்ம பேரானந்தத்தை பெறும் பேறு வாய்க்கிறது.

கோரிக்கைகளினுல் உந்தப்பட்டு ஒருவன் பணிபுரியக் கூடாது என்ருல், அவன் எப்படி பணி புரிய வேண்டும்? அப் பிரச்னைக்கு பதில் கீழ்கண்டவாறு அளிக்கப்படுகிறது.

யோகஸ்த்த:குரு கர்மாணி
ஸங்கம் த்யக்த்வா தனஞ்சய
ஸித்த்ய ஸித்த்யோ: ஸமோ பூத்வா
ஸமத்வம் யோக உச்யதே 2:48

யோகத்தில் வேருன்றியவனுகி, பற்றுதல்களைத் துறந்து பணிபுரிந்திடு, தனஞ்சயா; வெற்றியிலும், தோல்வியிலும்

சமநிலை தவருதிரு. உட்தூண்டுதலின் சமநிலையே யோகம்.

கர்மயோகத்தைக் கடைப்பிடிக்கும் முறையை பகவான் இப்போது சொல்லத் தொடங்குகிருர். உட்தூண்டுதலின் வேகத்தோடு செயல் வீரன் இடையருது வாழ்வது எப்படியென் பதை கிருஷ்ணர் வாயிலாக வியாசர் வெளியிடுகிருர். அகந்தையையும், அதிலிருந்து தோன்றும் தற்பெருமை போன்றவற்றையும் அறவே ஒழித்துவிட்டால் இந்த பாதையில் வெற்றி. அப்படி ஒழிப்பதற்கு, முந்திய செய்யுளில் கூறியபடி மனச் சமநிலையில் நடந்துகொண்டு அமைதி பெற வேண்டும். உட்கருத்துள்ள வார்த்தைகளை கீதை கையாளும் முறையை அறிந்தவர்களுக்கு கிருஷ்ணர் கூறுவதன் கருத்து எளிதில் நன்கு புலனுகும்.

வேலை மூலம் ''உள்ளச் சமநிலை'' பெறுவது என்ற பொருளில் 'யோகம்' என்ற சொல்லை இங்குதான் வியாசர் முதன் முதலாக உபயோகப்படுத்துகிருர். அடுத்த வாக்கியத்தில் அதற்கு விளக்கமும் அளிக்கிருர்.

எதிர்மாருன எல்லா அனுபவ இரட்டைகளைச் (செய்யுள் 38ல் குறித்தபடி) சந்திக்கும்போது உள்ளச் சமநிலையுடன்—கலங்கா மன அமைதியுடன்—இருப்பதே யோகம் என்று குறிப்பிடப்படுகிறது. வாழ்க்கைப் புயலின் அலைகள் பயங்கரமாகத் தாக்கியபோதிலும் அசைந்து கொடுக்காத கலங்கரை விளக்கம் போன்ற சிறப்பான மனநிலையே யோகமென்று இதிலிருந்து தெரிகிறது. யோகத்தில் முழுமையாக லயித்திருந்தால்தான் கோரிக்கைகள் எதுவுமின்றி செயலாற்ற முடியும் என்றும் இச் செய்யுள் தெளிவாக்குகிறது. யோகமென்பதற்கு வியாசர் கூற விரும்பும் கருத்தை இச் சொற்கள் நன்ருகப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

· உண்மையாகப் பணிபுரிவோர் சமநிலை தவருது நடந்து கொள்வதுமட்டுமல்ல. பலவித மாறுதல்களுக்கிடையில் தமது செயல்களின் விளைவாகக் கிடைக்கும் பலனில் உள்ள பற்றுதலையும் (சங்கம்) துறந்து, உள்ளச் சமநிலையை உறுதிப்படுத்திக் கொள்வார்கள்:

பற்றுதலைத் துறந்தால் இடையரு உட்தூண்டுதலின் வேகத்துடன் எந்தப் பணியையும் சிறப்பாகச் செய்யலாம் எனும்போது, 'பற்றுதல்' என்ற சொல் எதைக் குறிப்பிடுகிறது? எதையெல்லாம் தவிர்க்க வேண்டுமென்று பகவான் இதற்கு முன் கூறினுரோ, அவையெல்லாம் இச் சொல்லில் அடங்கியிருக்கின்றன. வீண் கற்பனை, தவருனவற்றை எதிர்பார்ப்பது, செயலின் விளைவு பற்றிய பகற் கனவுகள், பலனை அனுபவிக்க வேண்டுமென்ற ஆவல், இப்போது இல்லாத ஆபத்துக்கள் இனி வந்து விடுமோ என்ற அசட்டுக் கவலை, இவை

எல்லாவற்றையுமே கைவிடுமாறு இந்த ஒரு சொல் மூலம் கிருஷ்ணர் கூறுகிறார். கர்மயோக முறையை பின்பற்ற நினைப்ப வர்களுக்கு இது கையாள முடியாத, மிக நீண்ட பட்டியலாகத் தோன்றலாம். சற்று நிதானித்து, ஆழ்ந்து சிந்தித்தால் அது அவ் வளவு பெரிய பிரச்னையாக இருக்காது.

மிகப் பெரிதாகத் தோன்றும் அந்தப் பட்டியலில் இருப்பவை எல்லாம் அகந்தை மையத்திலிருந்து எழும் மருட்சி கள். பழைய நினைவுகளும், வருங்கால எதிர் பார்ப்புக்களும் சேர்ந்து உருவாவது அகந்தை. பழைமை இறந்துவிட்ட ஒன்று. இறந்த காலத்தைப் புதைத்த சுடுகாட்டிலோ, அல்லது அன்னை யின் கருப்பையிலிருந்து இன்னும் வெளிவராத எதிர்காலச் சிசுவையோ சார்ந்து நிற்கிறது அகந்தை. அதன் மருட்சியில் சிக்கிக் கொள்பவர்கள், செயல்புரிவதற்கு ஏற்ற நிகழ்காலத்தில், உழைத்து பொருள் ஈட்டி முன்னேறும் வாய்ப்பை நழுவவிட்டு விடுவார்கள். பிறகு அவர்கள் எவ்வித முயற்சியும் செய்வது இல்லை. அவர்களால் எதையும் சாதிக்க முடியாது. வாழ்க்கை பயனற்றதாகிவிடும். நமக்குக் கிடைக்கும் பொன்னான நிகழ்கால வாய்ப்புகளை எல்லாம் வீண் கற்பனைகளிலும், பயனில்லா நினைவு களிலும் பாழாக்கிவிடாமல், 'சமநிலை பெற்று மன அமைதி யுடன், பற்றுதல்களின்றி, கிடைத்திருக்கும் சந்தர்ப்பத்தை வீணாக்காமல் இப்போதைய வேலையைச் செய்' என்று மாமேதை வியாசர் கூறுகிறார்.

இவ்வாறு தன்னைமறந்து, தற்போது செய்துகொண் டிருக்கும் வேலையில் லயித்து, ஆர்வத்தோடு முழுத்திறமையுடன் இயங்குவதே நல்வாழ்வின் இரகசியம்! கடந்தவற்றையும், இனி வரப்போவதையும் பற்றிய எண்ணங்களை, கரைபுண்டு ஓடும் நிகழ்கால வெள்ளத்தில் கரைத்துவிட்டு நாமும் அதில் குதித்து எதிர்நீச்சல் போடுவதே உணர்வு வேகத்துடன் இயங்குதலாகும். அவ்வாறு செய்யப்படும் எந்த வேலையும் தானாகவே பயனுள்ள தாக அமையும்.

சுயநினைவற்று ஓவியம் வரைந்துகொண்டிருக்கும் ஒரு கலைஞனை இதற்கு உதாரணமாகக் கூறலாம். அவன் மிகவும் உயர்தரக் கலைஞனாகக்கூட இருக்க வேண்டியதில்லை. அறிவும், மனமும் ஒரு மித்து வேலையில் லயித்திருக்கும் ஒருவனுக்கு, வரு வோர், போவோர்கூடத் தெரியாது. அந்த அதீத நிலையிலிருந்து இறங்கி, அகந்தை நிலைக்கு வந்த பிறகுதான், அருகில் மற் றொருவர் உட்கார்ந்திருப்பது தெரிகிறது. அவர் கேட்கும் கேள்விக்கு சரியாக பதிலளிக்கத் தெரிகிறது. உணர்வு ஆவே சத்தில் வேலை செய்பவர்கள், தான் செய்யும் வேலையில் உள்ள ஈடு பாட்டினால் தன்னையே மறந்து விடுகிறார்கள். அதன் வெற்றி தோல்விகளைப் பற்றிய எண்ணங்கள் அந்த நிலையில் அவர்கள்

மனதில் தோன்றுவதில்லை. விளைவைப் பற்றி சிந்திப்பது என்றால் அது எதிர்காலத்தைப் பற்றிய கவலையாகும். அதாவது நிகழ் காலத்தைக் கைநழுவவிட்ட நிலையாகும். நிகழ் காலத்தின் ஒவ் வொரு கணத்திலும் அடங்கியிருக்கும் ஒப்பிலா மகிழ்ச்சியை அனு பவிப்பதே உணர்வு வேகத்தில் மூழ்கியிருத்தலின் உயர்வு. எல்லையற்ற பேரின்பம் என்பது இதுதான்.

'இவ்வாறு சமநிலை குலையா உறுதியுடன், அகந்தை மையப் பற்றுதல்களைத் துறந்து, எதிர்கால வெற்றி தோல்விகளைப் பற்றி கவலைப்படாமல், உன் வேலையைச் செய்துகொண்டு போ' என்று கிருஷ்ணர் கூறுகிறார். மேலும், எந்த சந்தர்ப்பத்திலும் மனச் சம நிலை தவறாது இருக்கும் மாபெரும் சாதனையின் பெயர் 'யோகம்' என்றும் அவர் அர்ஜுனனுக்குத் தெரிவிக்கிறார்.

மனச் சமநிலையுடன் செய்யும் வேலை பற்றி கிருஷ்ணர் மேலும் கூறுவதாவது:

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்சய
புத்தௌ சரண—மன்விச்ச க்ருபணா: பலஹேதவ:

2:49

புத்தியோகத்தை விட மிகத் தாழ்ந்த நிலையிலிருப்பது செயல்முறை. எனவே புத்தியைத் தஞ்சமாகக் கொள், தனஞ்சயா. பயனை எதிர் பார்த்துப் பணிபுரிவோர் கடையர்.

விளைவு பற்றிய கவலைகளால் நொய்ந்த உள்ளத்துடன் செய் கிற வேலையைவிட, விளைவு பற்றி கவலைப்படாமல் செய்யும் வேலை மிக உயர்ந்தது. இந்தச் செய்யுளைப் படிக்கும் சிலர் 'புத்தி யோகம்' என்ற புதுவகை யோகத்தை கீதை கண்டுபிடித்திருக் கிறதென்று நினைக்கிறார்கள். இல்லாத அர்த்தத்தை புகுத்தப் பார்க்கும் முயற்சியாக அது எனக்குத் தோன்றுகிறது. உள் இயக்கக் கருவிகளில் முடிவெடுக்கும் பொறுப்பு வகிக்கும் கருவிக்குப் பெயர் புத்தி. இது உபநிடதங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. அவற்றில் அறிவை 'நிச்சயாத்மிகம்' என்றும், மனதை 'சம்சயாத்மிகம்' என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சிந்தனை ஒரு முடிவுக்கு வராமல் அலைபாய்ந்து கொண்டிருக்கும் நிலையில் அதை 'மனம்' என்றும், அது ஒரு முடிவுக்கு வந்து, அமைதிபெற்று இலட்சிய உறுதியுடன் நிற்கும்போது 'அறிவு' என்றும் கூறுகிறோம். எனவே புத்தியோகமென்றால் ''அறிவு ஈடு படும் செயலில், வேரூன்றி நிற்றல்' என்று பொருள்படுகிறது. நமது தீர்மானத்தில் உறுதியாக இருந்து, மனதை அறிவின் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தி வைத்து வாழ்வது புத்தியோகம். அப்போது உள் உலகும், வெளி உலகும் நம்மிடம் அடங்கி நடக்கும். புத்தி யோகத்தில், நாம் வாழ்க்கையின்

இலட்சியத்தைக் கைவிடாமல் நமது கடமைகளைச் செய்து கொண்டிருப்போம்.

அறிவும், மனமும் வேறுபடுவதன் காரணங்களையும், 'வாசனை'களை அகற்றுவதன் மூலம் அவ்வேறுபாட்டை நீக்கி, ஒருமைப்பாடு பெறலாம் என்பதையும் ஏற்கனவே பார்த்தோம். (பொது முன்னுரை—படங்கள் 1,2 பார்க்க). அந்த அடிப் படையில் இச் செய்யுளின் பொருளை ஆராயலாம். அறிவு வட்டத் திற்குள் இருந்து: ஒருவர் வாழ்வதும், செயல் புரிவதும் புத்தி யோகம். அறிவும் மனமும் அதில் ஒத்து இயங்குகின்றன. அறிவுக்கு உட்பட்டு மனம் நடந்து கொள்ளுகிறது. சாதாரண மாக நாம் 'மனம்' என்று குறிப்பிடுவது வெளி மனம் என்றால், அறிவை 'உள் மனம்' என்று கூறலாம். அப்படிச் சொல்லுவ தானல், உள் மனதின் நிர்ணயப்படி வெளி மனம் நடந்து கொள்வதுதான் 'புத்தியோகம்' அவ்வாறு நடந்துகொண்டால் வாசனைச் சுமை அதிகரிக்காது. இப்போதுள்ள வாசனைகளும் குறையும். அகந்தையை அழித்தவர் புத்தி யோகத்தில், வேரூன்றி யவர். அதனுல்தான் 'புத்தியில் தஞ்சமடை' என்று கிருஷ்ணர் கூறுகிறார். 'மனதை முற்றிலும் அறிவின் கட்டுப்பாட்டில் வை' என்று பொருள்படப் பேசுகிறார்.

ஏன் அப்படி வைத்துக்கொள்ள வேண்டும்? அதற்கு பலத்த காரணங்கள் உண்டு. மன வட்டத்திலிருந்து கொண்டு வாழ்க்கை நடத்துகிறவர்கள் செயலின் பயனை அனுபவிக்கும் ஆவல் பெற்று, பற்பல சஞ்சலங்களுக்கு உள்ளாகிறார்கள். அப்படிப்பட்ட முட்டாள்களை 'கடையர்' என்று வியாசர் கடுமையாகக் கண்டிக் கிறார். 'பலனை எதிர்பார்த்து பணிகளில் இறங்குவோர் கடையர்', என்று சாடுகிறார். அவர் கூறுவதை சரியாகப் புரிந்துகொண்டு, வாழ்க்கையில் அதைக் கடை பிடித்தால், வாழ்வில் தோல்வியே இல்லாமல் செய்துகொள்ளலாம். நிகழ் காலத்தில் செய்யும் ஒன்றையே மனதிற்கொண்டு, தீவிரமாகச் செயலாற்றி வந்தால் விளைவுகள் தாமாகவே சிறப்பாக அமையும்.

வேட்கைகளின் உந்துதலால் வேலை செய்வோர், வாசனை களை மேன் மேலும் திரட்டிக் கொள்ளுகிறார்கள். எனவே அவர் கள் 'கடையர்' என்று இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் தம்முள் இருக்கும் இறைவனைக் கண்டுகொள்ள முடியாதபடி திரைகளைப் போட்டு மூடிக்கொள்ளுகிறார்கள். அகந் தையைத் துறந்து, தெய்வார்ப்பணமாக, சுயநலமற்று வேலை செய்வதன் மூலம் ஒருவர் தமது வாசனை மூட்டைகள் அவ்வள வையும் அகற்றி விடலாம். அவை அகன்ற தூய உள்ளத்தில் இறைவன் பிரதிபலிப்பதைக் காணலாம். இவ்வாறான பரிசுத்த உள்ளமே இறைவனின் உறைவிடம் என்று கண்டுகொள்ளுவது சாத்தியமாகிறது.

ஒருவர் மனச் சமநிலையுடன் தமது கடமையைச் செய்வதனால் வரும் நன்மைகளை இப்பொழுது பார்க்கலாம்:

புத்தி யுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருத துஷ்க்ருதே
தஸ் மாத்—யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌசலம்.
2:50

புத்திச் சமநிலை பெற்ற ஒருவர் இவ்வாழ்வில் தாம் செய்யும் நன்மைகளையும், தீமைகளையும் துறந்து விடுகிறார். ஆகையால் நீ யோகத்தைப் பின்பற்று. செய்வதைத் திருந்தச் செய்வதே யோகம்.

உணர்ச்சிகளின் உலகிலிருந்து முற்றிலும் விடுபட்டு, புத்தியில் வேரூன்றிச் சமநிலை பெற்றவர், நல்லது—கெட்டது என்று பாகுபாடுகளுக்கு அப்பாற்பட்டவர் ஆகிறார். அப்பாகுபாடுகள் மனத்தைச் சார்ந்தவை. அவற்றினால் உயர்வு தாழ்வு முதலிய எண்ணங்கள் வருகின்றன. இவை வாசனை (சம்ஸ்காரம்)களாக மன அமைப்பில் பதிந்து விடுகின்றன. ஓயாப் புயல், வீசும் மனக் கடலுக்கும் தமக்கும் சம்பந்தமில்லை என்று ஒருவர் ஒதுங்கி விட்டால் அவரை வாசனை அலைகள் உயரத் தூக்கிச் செல்லவோ அல்லது கீழே வீழ்த்தவோ முடியாது. இக் கருத்து ''புத்தியுக்தன்'' என்ற சொல் மூலம் குறிப்பிடப்படுகிறது. தனது தெய்வீக இலட்சியத்தைப் பற்றி தெளிவான நோக்குடன் செயல் படுபவன் புத்தியுக்தன்.

புலனறிவுக்கு எட்டும் வெளியுலக வாழ்வு முழுமையானதல்ல. அதுவே முழுமை என்று நினைத்து மேலேழுந்த வாரியாகக் காலந்தள்ளிவிட்டுப் போகாமல், உடல், மன மட்டங்களிலிருந்து உயர்ந்து, அறிவுலகை அடைந்து மனிதன் தனக்குரிய மேன்மை பெற வேண்டுமென்று கீதை கூறுகிறது. உயிரினங்களில் தலை சிறந்தவன் மனிதன். ஏனெனில் பகுத்தறிவு மனிதனுக்குத்தான் உண்டு. சிறப்பான இதை ஒருவன் பயன்படுத்திக் கொள்ளா விட்டால், அவனை மனித பாரம்பரியத்திற்கு உரியவனாகக் கருதுவதற்கில்லை.

தற்பெருமையையும், மனநோய் போக்கையும் கைவிட்டு மாந்தரில் காளை என விளங்குமாறு அர்ச்சுனனுக்கு அறிவுரை கூறுகிறார் கிருஷ்ணர். வெளியுலகத்தைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் வீரனாக இருக்க வேண்டுமென்பது அவருடைய கருத்து. தற்காப்பு, உறவினரிடம் உணர்ச்சி வசப்பட்ட பற்றுதல் போன்ற மருட்சிகளினால் அப் பாண்டவ மாவீரன் பலவீனனாகி இருந்தான். இந்த மருட்சி தவறானது. இம் மாதிரி மனிதர்களால் பெரிதாக ஒன்றும் சாதித்துவிட முடியாது என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

பல்வேறு பிறவிகள் எடுத்து, பரிணாம வளர்ச்சியின் காரண

மாக ஒருவன் மனிதஉரு பெறுகிறுன். இந்நீண்ட நெடுந் தூரப் பயணத்தில் எத்தனையோ தடங்கள் (வாசனைகள்) அவன் மனத்தில் பதிந்திருக்கின்றன. தான் முழு வளர்ச்சி பெற்ற மனிதன் என்ற இடையருத உணர்வில் வாழ்ந்து வருபவன் தனது கடந்த கால வாசனைத் தளைகளிலிருந்து விடுபடுகிறுன்.

'ஆகையால் செயலீடுபாடு யோகத்தை மேற்கொள்' என்று கிருஷ்ணர் ஆலோசனை கூறுகிறுர். இதற்கு முன் 'உள்ளச் சம நிலையே யோகம்.' என்று பகர்ந்தார். ஆனுல் அதை இப்போது 'அற்புதத்திறன் காட்டுவதே யோகம்' என்று வற்புறுத்தி அச் சொல்லின் பொருளை மேலும் விரிவுபடுத்துகிறுர்.

ஒரு விஞ்ஞான நூலில் ஒரே வார்த்தைக்கு ஓரிடத்தில் ஒரு அர்த்தமும், மற்ருெரு இடத்தில் மற்ருெரு அர்த்தமும் தோன்ற உபயோகிக்கப்பட்டிருந்தால், படிப்பவர்களுக்கு குழப்பம் ஏற் படும். அப்படியிருக்க, மத விஞ்ஞுனமாகிய இந்த நூலில் 'யோகம்' என்ற சொல்லுக்கு வெவ்வேறு பொருள் கொடுத் திருப்பது ஏன்? ஆழ்ந்து சிந்தித்தால் இதில் திகைப்புக்கு இடம் ஏதுவும் இல்லை. இப்போது கூறும் பொருளில் முந்திய கருத்தும் அடங்கியிருக்கிறது. மனச் சமநிலையே யோகம் என்று மட்டும் சொல்லி நிறுத்திவிட்டால், சோம்பேறித் தனத்திஞலும், செயலின்மையாலும் ஏற்படும் 'மனச் சமநிலை' தான் யோகம் என்று சிலர் தவருக நினைத்துவிடுவார்கள். இரண்டாவதாகக் கூறியதில் அக் குழப்பத்திற்கு இடமில்லை. 'எதிர்மாருன இரட்டை' (துவந்தங்கள்) நிலைகளிலெல்லாம் உறுதியாகவும், மன அமைதியுடனும் வேலை செய்யும் கலையைப் பிற்கூறிய விளக்கம் சுட்டிக் காட்டுகிறது.

இந்த அளவுக்கு ஆராய்ந்த பிறகு, கிருஷ்ணர் சொல்லுகிற கருத்து முழுமையாக நமக்கு விளங்குகிறது. யோகத்தை (வேட்கைகளின்றி செயல் புரியும் கலையை) ஒருவர் கடைப் பிடித்தால், அவரிடமுள்ள முந்தைய் நல்ல வாசனைகளும், கெட்ட வாசனைகளும் அகலுகின்றன. மனம் அமைதியற்று அலை பாய்வதற்குக் காரணம் இந்த வாசனைச் சுமையே. வாசனைகள் இல்லாமல் அமைதியுற்று நிம்மதியாக இருக்கும் இந்த மனம் என்ற உட்கருவியைத்தான் தூய 'அந்தக் கரணம்' என்று கூறு கிறுர்கள். இதை நன்ருகப் பயிற்சித்து வெற்றி பெற்ருலொழிய, தியானத்திற்குத் தேவையான மனநிலையை அடைய முடியாது. அந்தக்கரண சுத்தி இருந்தால்தான் ஒருவர் தியானத்தில் ஈடுபட முடியும்.

கிருஷ்ணர் கூறுகிறபடி இயங்கத் தொடங்கினுல் எல்லா வேலைகளுமே கடைசியில் தியானநிலை அடைகின்றன; தியானத் தின் மூலம் ஆனந்தமான ஆன்ம உணர்வு பெறுவதற்கான வழிகளாகின்றன.

யோகமென்ருல் பயங்கரமான ஏதோ ஒன்று என்று நினைக்கத் தொடங்கியிருந்த சமூகத்திற்கு, அப்படி பயங்கர மானது. அதில் ஒன்றுமில்லை என்றும், சாதாரண வேலைகளைக் கூட ஒரு இலட்சிய நோக்குடன் செய்தால் அதுவே யோகமா கிறது என்றும் வியாசர் இங்கு தெளிவாக்குகிருர். சமூகம் ஏற்கத் தகுந்த முறையில் அவர் பிரச்னைகளை எளிமைப்படுத்தி விளக்க மளிப்பதற்கு இது மற்றெரு உதாரணம்.

பயிற்சியின் மூலம் நாம் (அத்தியாயம் 2, செய்யுள் 38 பார்க்க) மனச்சம நிலையையும், அதனுல் வரும் திறன் சிறப்பையும் ஏன் பெறவேண்டும் தெரியுமா?

கர்மஜம் புத்தியுக்தாஹி பலம் த்யக்த்வா மனீஷிண:
ஜன்மபந்த—விநிர்முக்தா: பதம் கச்சந்த்—யனுமயம்

2:51

புத்தியிற் சிறந்தோர், தங்களது செயற்பயனைத் துறந்து, பிறவித் தளைகளிலிருந்து விடுபட்டு, எல்லாத் தீமைகளையும் கடந்த நிலையை அடைகிருர்கள்.

அர்ஜுனன் ஒரு செயல் வீரன். சிறந்த அறிவாளி. கிருஷ்ணருடைய தெய்வீக இயல்பு அவனுக்கு இன்னும் தெரியாது. எனவே அவர் கூறுவதை மறுத்துப் பேசாமல் அப்படியே பின்பற்றலாம் என்ற நம்பிக்கை இன்னும் அவனுக்கு வரவில்லை. அவன் மனதில் சந்தேகம் தோன்றுகிறது. ஆயினும் அதை அவன் வெளியிடுவதற்கு முன்பே கிருஷ்ணரிடமிருந்து பதில் வந்து விடுகிறது. பலனை எதிர்பார்க்கக் கூடாதென்ருல், பிறகு செயலீடுபாடு எதற்கு? உள்ளச் சமநிலையுடன் சாதனை புரிவது எதற்காக? அர்ஜுனன் கேட்காமலே இப்பிரச்னைகளுக்கு கிருஷ்ணர் பதிலளிக்கிருர்.

உண்மையான வாழ்வுக் கலையை நன்கறிந்தோர் 'புத்தியில் சிறந்தவர்'. உறுதியான உள்ளச் சமநிலையுடன் அவர்கள் எவ்வேலையையும் மேற்கொள்ளுகிருர்கள். பலா பலன்களைப் பற்றி அவர்களுக்கு அக்கறையில்லை. இந்த இரண்டு சிறப்புகளையும் பற்றிக் கூறியவுடன் அகந்தையையும், அகந்தை மையக் கோரிக்கைகளையும் கைவிட்டு செயல்புரியும் ஒருவருடைய நினைவு நம் உள்ளத்தில் உடனே எழுகிறது அல்லவா?

ஒருவர் தமது உள்ளக் கிளர்ச்சிகளுடன் உறவு கொள்ளும் போது அகந்தை பிறக்கிறது. இவ்வாறு பிறந்த அகந்தை ஆசைகளால் அலைக்கழிக்கப் பெற்று செயலின் பலனை அனுபவிக்க வேண்டுமென்ற ஆவல் ஏற்படுகிறது. பிறகு எண்ணிலா வேட்கைகள் தோன்றுகின்றன. அகந்தையோ,

வேட்கையோ இல்லாது வேலை செய்பவரின் 'வாசனை'கள் கொஞ்சங் கொஞ்சமாக மறைகின்றன. எந்த நிலையிலும் வாழ்க்கையில் தமது இலட்சிய நோக்கைக் கைவிடாமலே ஒருவர் இவ்வாறு செயல்பட முடியும்.

யதா தே மோஹகலிலம் புத்திர்—வ்யதிதரிஷ்யதி
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச

2:52

சகதியைப் போன்ற மருட்சியை உன் அறிவு கடந்து விட்டால், இதுவரை கேள்விப்பட்டவற்றையோ, இனி கேள்விப்படப் போவதையோ பற்றி பொருட்படுத்தா நிலையை நீ அடைவாய்.

மருட்சிச் சகதியிலிருந்து விடுபட்டுவிட்டால், பிறகு கேள்விப்பட்டது கேள்விப்படப் போவது ஆகிய இரண்டையுமே நமது அறிவு பொருட்படுத்தாது. இனி பெறவிருக்கும் அனுபவங்கள் 'கேள்விப்படப்போவது' என்ற சொல் மூலம் குறிப்பிடப்படுகின்றன. அறிவு தூய்மை அடையும்போது புலன் அனுபவங்களில் ஆர்வம் மறைந்து விடுகிறது. இதுவரை பெற்ற அனுபவங்களிலும், இனி பெறக்கூடிய அனுபவங்களிலும் உள்ள கவர்ச்சி நீங்கி அறிவுக்கு ஒருவகை வெறுப்புத் தட்டி விடுகிறது என்று இச்செய்யுள் தெரிவிக்கிறது.

ஒருவருடைய தன்னுணர்வு இறையியல்பு கொண்டது தான். ஆயினும் அந்தத் தன்னுணர்வும் ஒரு மருட்சியில்' ஆழ்ந்து விடுவதாகத் தோன்றுகிறது. சிந்தித்துப் பார்க்கும்போது அதன் விளைவுகள் நமக்குத் தெரிகின்றன. விவரிக்க இயலா ஒரு சக்தியே இந்த மருட்சிக்குக் காரணமென்று கருதப்படுகிறது. அந்தச் சக்தியை மாயை என்று கூறுகிறார்கள். கண்ணுக்குத் தோன்றாமல் கம்பிகளில் பாய்ந்து கொண்டிருக்கும் மின்சாரத்தைப்போல, மாயையும் நமக்குப் புலனாவதில்லை. மின் விளக்கு எரிவதாலோ, விசிறி சுழல்வதாலோ மின்சாரம் கம்பியில் பாய்ந்து கொண்டிருப்பதை நாம் கண்டு கொள்கிறோம். அவ்வாறே மாயையையும் அதன் விளைவுகளிலிருந்தே மதிப்பிட முடிகிறது.

மாயையினால் ஒருவர் அடையும் நிலையை, வேதாந்தத்தில் சிறந்த பெரியோர், மிக அழகாக விளக்கியிருக்கிறார்கள். மனித சுபாவங்களில் மாயை இரண்டு மட்டங்களில், இருவகைகளில் வெளியாகிறது. அது அறிவு மட்டத்தில் ஆன்மிக உண்மையை அறிந்து அனுபவிப்பதில் தயக்கமும், ஐயப்பாடும் ஏற்படுமாறு செய்கிறது. அதாவது நம்மில் இருக்கும் இறைப் பொருளை நமது அறியாமை ஒரு மூடுபனியைப் போல் மறைக்கிறது. இதை மாயையின் ஆவரண சக்தி (மறைக்கும் திறன்) என்று குறிப்பிடு

கிருர்கள்.

இவ்வாறு மறைக்கப்படுவதால் அறிவு, தனது இயக்கத்திற்குக் காரணமாயிருக்கும் அப்பேருண்மைப் பொருளை உணருவதில்லை. அப்போது மனம் உண்மைக்குப் புறம்பான, தோற்ற உலகு ஒன்றைப் படைத்து, அதில் இரு கருத்துக்களைப் புகுத்திவிடுகிறது. (1) இதுதான் உண்மை (சத்தியத்துவம்) (2) வெளித் தோற்ற உலகமே நான் (ஆத்மபுத்தி) என்பவை முற் கூறிய இரு கருத்துக்கள். இதை மாயையின் 'தோற்ற மூட்டும் சக்தி' (விக்ஷேப சக்தி) என்று கூறுகிருர்கள். இவ்வாறு மறைக்கும் சக்தி, தோற்றமூட்டும் சக்தி ஆகிய இருவகை விளைவுகளை, அறிவு மனம் என்ற இரு மட்டங்களில் மாயை ஏற்படுத்துகிறது.

ஒருவர் பயனைக் கருதாது செயல்படும்போது அறிவின்மீது படிந்த மாசு அகன்று தெளிவடைகிறது. அதன் விளைவாக, ''தான் வேறு ஆன்மா வேறு'' என்று பிரித்து வைக்கும் திரையை விலக்கி, பேருண்மையைச் சற்று எட்டிப் பார்க்க அறிவினல் முடிகிறது. இதை இச் செய்யுள் விளக்குகிறது. மாயையின் விளைவுகளிலிருந்து விடுபட்ட அறிவு வெளியுலகக் கவர்ச்சிகளுக்கு இரையாவதில்லை. ஆனுல் அறியாமையிலிருந்து அது விடுபடுமுன், தன் ஆன்மிக இயல்பை உணராமல், அழியும் தன்மையுள்ள உலகப் பொருள்களில் உண்டாகும் விஷய சுகங்களில் தன்னிறைவு காண விழைகிறது.

அறியாமைத் திரையை விலக்கி, தன்னையே பேருண்மையாகக் காணமுடியுமென்று தெரிந்துகொள்ளும் அறிவு, நிலையற்ற உலக இன்பங்களைத் துறந்து, நிரந்தரப் பேரின்பம் பெற விரும்புகிறது. மழை காலத்தில் அடுப்பங்கரையில் குளிர் காய்ந்து கொண்டிருப்பவன், மேக மூட்டம் விலகி, சிறிது வெய்யில் காயத் தொடங்கியதும் வெளியில் போய் உட்கார்ந்து விடுகிருன் அல்லவா? அவ்வாறே, அறியாமை என்ற மயக்கம் விலகுகிற அளவுக்கு முழுமை பெறும் அறிவு, புலனுலக அனுபவத்தைக் குறைத்துக் கொள்ளுகிறது.

'இதுவரை கேள்விப்பட்டவை (சுருதம்), 'இனி கேள்விப்பட இருப்பவை' (சுரோதவ்யம்) என்ற இரு சொற் களும் நமது இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் புலனுலகை சுட்டிக் காட்டுகின்றன. பார்த்தவை—இன்னும் பார்க்கப் படாதிருப்பவை, முகர்ந்தவை—இன்னும் முகரப்படா திருப்பவை, தொட்டவை—இன்னும் தொடப்படாதிருப்பவை முதலிய புலன் அனுபவங்கள் எல்லாவற்றையும்கூட நாம் அவற்றுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். தூய்மை நிலை பெற்ற கர்ம யோகியின் அறிவு, கடந்த காலத்தில் பெற்ற

புலனின்பங்களை நினைவூட்டிக்கொண்டு மகிழாது; இனி அனுபவிக்கவிருக்கும் இன்பங்களை எண்ணிப் பார்க்காது.

சில உரையாசிரியர்களைப்போல் வெறும் பதவுரை மட்டும் சொல்லுவதானால், 'பல தத்துவ ஞானிகள் 'பேருண்மையை'ப்பற்றி மாறுபட்ட கருத்துக்கள் கூறுவார்கள். அவை முரண்பட்டவையாகக்கூடத் தோன்றும். ஆனால் அந்தக் கருத்துக்களினால் தடுமாறாதவர்கள், தூய உள்ள நிலையில் உறுதியாக நிற்பவர்கள் என்று பொருள் கூறிவிடலாம்.

சங்கரர் இச்செய்யுளையும் அடுத்ததையும் இணைத்துப் பின்வருமாறு கூறுகிறார்: 'அறியாமையைக் கடந்தபிறகு ஆன்மாவைப் பற்றிய கருத்துறுதி எனக்கு எப்போது வரும்? ஆன்மிக அகப் பொருளுக்கும், அது அல்லாததற்கும் பாகுபாடு செய்யும் விவேகம் எப்போது பெறுவேன்?' என்று அர்ஜுனன் நினைப்பதற்கு பகவான் பதிலளிக்கிறார். கிருஷ்ணருடைய அடுத்த விளக்கத்தையும் கேளுங்கள்:

ச்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்த்தாஸ்யதி நிஸ்சலா
ஸமாதாவசலா புத்திஸ்—ததா யோக—மவாப்ஸ்யஸி

2:53

கேள்வியுற்றவைகளினால் உன் அறிவு கலக்கமுற்றிருந்த போதிலும், நீ அசைக்க முடியாத ஆன்மிக உறுதியுடனிருந்தால் இறையுணர்வு பெறுவாய்.

நமது ஐம்பொறிகளும் ஐந்து வாயில்களைப் போன்றவை. அவற்றின் மூலம் பெறும் விஷய அனுபவங்களினால் தளர்ந்து விடாமல், ஒருவருடைய அறிவு உறுதியான சமநிலையிலிருந்தால், அவர் யோகநிலை (த்வந்தங்களை கடந்த மன நிலை) அடைந்தவராகக் கருதப்படுகிறார்.

வெளியுலகத் தூண்டுதல்கள் எப்போதும் நம்முள் புகுந்த வண்ணமிருப்பதால், அமைதி குலைந்து நமது மனம் பரபரப்புக்கு உள்ளாகிறது. காற்றிலுள்ள ஒலி அலைகள் ரேடியோவுக்கு வருவதற்காக, திறந்த வெளியில் நாம் நட்டு வைத்திருக்கும் கம்பத்தைப் போல, சலனமுண்டாக்கும் வெளியுலக நிகழ்ச்சிகளை நமது உள்ளத்தில் பாய வைப்பவை புலன்களே. அவ்வாறு உள்ளத்தை எட்டும் நிகழ்ச்சிகள் மன அமைதியைக் குலைக்கின்றன. ஆனால் விஷய சுகத்தை தூண்டும் சூழ்நிலையிலும், புலன்கள் கொண்டு வரும் நிகழ்ச்சி வெள்ளங்கள் உள்ளத்தில் பாய்ந்து கொண்டிருந்தபோதிலும், மன அமைதி எவ்வகையிலும் சீர்குலையாமல் சமநிலையில் இருந்தால், அவ்வாறு இருப்பவரை யோகி என்று சொல்லுகிறோம். இக்கருத்து மேலும் விரிவாக பின்னால்

விளக்கப்படுகிறது. அறிவை இறைப் பொருளில் முற்றிலும் ஈடுபடுத்திய ஒருவருடைய (ஸ்திதப் பிரக்ஞருடைய) தோற்றம் எப்படி இருக்கும் என்பதைச் சொல்லும்போது அதையும் கிருஷ்ணர் விளக்குகிறார்.

விவாதம் சூடு இப்போது பிடித்திருப்பதால், அர்ஜுனனுடைய பதட்டமும், மனநோய் நிலையும் தணிந்திருக்கின்றன. துயரத்தில் ஆழ்ந்திருந்ததைவிட்டு, கிருஷ்ணருடன் அவன் உற்சாகமாக வாதிக்கிறான். புலனின்பப் புயலுக்கு அப்பாற்பட்டு நிறைவுற்ற யோகியின் தோற்றம் எப்படி இருக்குமென்பதைத் தெரிந்துகொள்ளும் ஆவல் தோன்றுகிறது. கிருஷ்ணர் கூறுவது சரிதான் என்று அவனுடைய அறிவுக்கு நிச்சயமாகப்பட்ட போதிலும், அதை அப்படியே ஏற்பதற்கு அவனில் ஏதோ ஒன்று குறுக்கிடுகிறது.

தொடரும் செய்யுளையும் இதையும் இணைத்து சங்கரர் பின்வருமாறு கூறுகிறார்: ''அறிவுச் சமநிலை பெற்றவருடைய குறிப்பான அம்சங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் அர்ஜுனனுக்குத் தோன்றுகிறது. கேள்வி கேட்க ஒரு வாய்ப்புக் கிடைத்தவுடன் அர்ஜுனன் கேட்கிறான்''.

அர்ஜுன உவாச—
ஸ்தித ப்ரஜ்ஞஸ்ய கா பாஷா
ஸமாதிஸ்த்தஸ்ய கேசவ
ஸ்திததீ:கிம் ப்ரபாஷேத
கிமாஸீத வ்ரஜேதகிம்

2:54

அர்ஜுனன் கூறினான்:

இறைவனிடம் அறிவை முற்றிலும் ஈடுபடுத்தி, பேருணர்வில் நிலைத்திருப்பவரை எப்படித் தெரிந்துகொள்வது, கேசவா? அவருடைய பேச்சு எப்படி இருக்கும்? எப்படி உட்காருவார்? அவர் நடப்பது எப்படி இருக்கும்?

மனச் சமநிலை பெற்ற கர்ம யோகி எந்த நிலை எய்துகிறார் என்று கடந்த இரு செய்யுட்களில் எடுத்துரைக்கப்பட்டது.

கிருஷ்ணர் கூறுவது ஒப்புக்கொள்ளக் கூடியதாகவும், தர்க்க அடிப்படையில் மறுக்க முடியாததாகவும் அர்ஜுனனுக்குத் தோன்றுகிறது. பேசுவது கிருஷ்ணராகையால், அவருடைய பேச்சில் முழு நம்பிக்கை ஏற்படுகிறது. மேலும் கர்மயோகம் அவனுடைய தன்மைக்கு ஏற்றதாகவும் இருந்தது. எனவே அவர் கூறுவதில் ஊக்கம் பெற்று பல கேள்விகளை கேட்கிறான்.

முதலாவது அத்தியாயத்தில் துயரமே உருவெடுத்தவனுகக் காட்சியளித்த அர்ஜுனன் இப்போது தன் மனக் கலக்க நோயை மறந்து, பிரச்னையை விவாதிப்பதில் ஆழ்ந்த அக்கறை காட்டுகிறுன். அரும் செயல்கள் செய்வது அவனுடைய இயல்பு. மகத்தான புத்தி யோகத்தை மேற்கொண்டால் இதே வேகத்துடன் மேலும் இவ்வுலகில் செயல்பட முடியுமா என்ற கேள்வி அவன் மனதில் தலைதூக்குகிறது.

'நிறைவு பெற்ற யோகி' என்ற வேத வழக்குக்கு, சிலர் தவருகப் பொருள் கொள்ளுகிறுர்கள். அப்படிப்பட்டவர் இந்த உலகில் இருக்கத் தகுதியில்லாதவரென்றும், ஏதோ தானே ஏற்படுத்திக்கொண்ட ஒரு தனி உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருப்பவர் என்றும் நினைக்கிறுர்கள். விருப்பு வெறுப்புக்களும், ராஜ தந்திர நடவடிக்கைகளும் மேலோங்கியிருந்த காலத்தில் வாழ்ந்த அர்ஜுனனுக்கே கிருஷ்ணர் கூறிய கொள்கை கடைப்பிடிக்கக் கூடியதுதான் என்று தோன்றுகிறது. எனவே யோகிகள் ஏதோ தனி உலகத்தில் காலங் கடத்திக் கொண்டிருப்பவர்களென்று நினைப்பது தவறு. அவர்களைப் போன்று நிறை நிலை அடைந்து வாழ்க்கை நடத்த நினைக்கும் முன் அவர்கள் எப்படி இருப்பார்கள் என்று தெரிந்து கொள்வதற்கு அர்ஜுனன் விரும்புகிறுன்.

அதனுல் அவனுடைய ஆர்வத்தில், இறையுணர்வு பெற்ற யோகி பேசுவது, உட்காருவது, நடப்பது முதலிய சிறுசிறு விவரங்களைக் கூட அவன் கேட்டறிய விரும்புகிறுன். மனக் குழப்பத்திலிருந்து மீண்ட அவன் அப்படிக் கேட்பது இந்த இடத்தில் மிகப் பொருத்தமாக இருக்கிறது. கீதையின் விறுவிறுப்பை அது மேலும் அதிகரிக்கிறது. ஒரு யோகி சமாதி (ஆன்மிக உணர்வில் ஒன்றியிருத்தல்) நிலையில் பார்ப்பதற்கு எப்படி இருப்பார்? இது செய்யுளின் முதற் பகுதியின் பொருள். அவருடைய உலக நடவடிக்கைகள் எவ்வாறு இருக்குமென்று கேட்பது இரண்டாவது பகுதியின் கருத்து.

அது இருமுனைக் கேள்வி. (1) யோக நிலை பெற்ற ஞானி தன்னுடைய உணர்வில் மூழ்கியிருக்கும்போது அவருடைய மனநிலை எப்படி இருக்கும்? (2) அதிலிருந்து சாதாரண நிலைக்கு வந்தபிறகு, வெளி உலகத்தில் அவர் எப்படி நடந்து கொள்ளுவார்? இந்த இரண்டையும் விளக்கிச் சொல்லும்படி அர்ஜுனன் கேட்கிறுன்.

இதிலும், இதற்கு அடுத்த செய்யுளிலும் 'ஸ்தித ப்ரக்ஞன்' (நிலைத்த ஞானமுடையவன்) என்ற சொல் வருகிறது. நேரடி அனுபவத்தின் மூலம், தன்னுள் இறைவனைக் கண்டு அனுபவித்து, அதில் வேரூன்றியவாறே தெய்வீக வாழ்க்கை

நடத்திக் கொண்டிருப்பவன் 'ஸ்திதப்ரக்ஞன்'

பிரம்ம ஞானியின் தன்மைகளை இப்போது கிருஷ்ணர் கூறுகிறார். சரியான முயற்சியின் மூலமாக எல்லாரும் ஞானநிலை பெறலாமாகையால் இதை ஒரு மார்க்கமாகவே கொள்ளலாம்.

ஸ்ரீ பகவானுவாச—
ப்ரஜஹாதி யதா காமான்
ஸர்வான் பார்த்த மனோகதான்
ஆத்மன்யே வாத்மனா துஷ்ட:
ஸ்த்திதப்ரஜ்ஞஸ் ததோச்யதே 2:55

பகவான் கூறினார்:
மனதில் எழும் வேட்கைகளை முற்றிலும் துறந்து, ஆன்மானுபவ இன்பத்தில் திளைத்து, முழு திருப்தி அடைந்து, தன்னில் தானாக இருப்பவனை, நிலைத்த ஞானமுடையவன், (ஸ்தித ப்ரக்ஞன்) என்று சொல்லுகிறார்கள்.

இறையுணர்வு பெற்ற ஒருவனுடைய உள்ளுணர்வாகிய மனநிலை, வெளியுலக நடவடிக்கை ஆகிய இரண்டையும் இந்த செய்யுள் முதல் இந்த அத்தியாய முடிவு வரை கீதை விவரிக்கிறது. அர்ஜுனன் கேள்விக்கு இது பதில் என்பது ஒருபுறமிருக்க, இதிலிருந்து மற்றொரு பயனும் கிடைக்கிறது. உண்மையான குரு யார்; ஆட்டுத் தோல் போர்த்த புலியாக குருவேடம் அணிந்து சீடர்களைக் கெடுப்பவர்கள் யார் என்று தெரிந்து கொள்ளவும் கீதை உதவுகிறது. மேலும் உண்மையான சாதகத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் இப்பகுதி மிக உதவியாக இருக்கிறது. எவ்வகை மதிப்புக்களையும் கருத்துக்களையும் அவர்கள் அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டும் என்று இங்கு தெளிவாக கூறப்படுகிறது. சாதகம் செய்யும்போது இவற்றைப் பின்பற்றினால் என்றும் பிரகாசமான இறைப் பொருளை—தெய்வீகப் பேருணர்வை—தங்களிடமே அவர்கள் காணலாம்.

நிறை ஞானியின் மனநிலையை இப்பகுதியின் முதலாவது செய்யுளாகிய இதிலேயே, ரத்தினச் சுருக்கமாக பகவான் சொல்லிவிடுகிறார். இங்கு உபயோகித்திருக்கும் சொற்களின் அருமையை அறிந்து அனுபவிப்பதற்கு உபநிடதப் பூங்காவில் இச்சொல் மலர்கள் எவ்வாறு மணம் வீசுகின்றன என்பதை நினைவு படுத்திப் பார்க்க வேண்டும். 'எல்லாவிதமான கோரிக்கைகளையும் மனதிலிருந்து அறவே அகற்றியவன் ஞானி. பகவான் இதுவரை கூறியதுடன் இச்செய்யுளையும் சேர்த்துப் பார்த்தால், வியாசரின் அற்புதச் சொற்களில் உபநிடதக் கருத்துக்கள் பொதிந்திருப்பது தெரியும்.

அறியாமையென்ற மாசு நமது அறிவின்மேல் படியும்

போது, அந்த அறிவே பலவிதமான ஆசைகளை உண்டு பண்ணி கோரிக்கைகளுக்குப் பிறப்பிடம் ஆகிறது. உண்மை அறிவு பெற்று 'அறியாமை'யை நீக்கிவிட்டால், நமது ஆசைகளும், கோரிக்கைகளும் தாமாகவே போய்விடுகின்றன. அறியாமையின் விளைவுகளான கோரிக்கைகள் அற்றவர்களாக ஆகிவிடுகிறோம். விளைவுகள் இல்லை என்பதைக் குறிப்பிடும் கிருஷ்ணர், அதற்குக் காரணமும் இல்லை என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். எங்கு வேட்கைகள் இல்லையோ அங்கு 'அறியாமை'யும் இல்லை என்ற பொருள் இதில் அடங்கியிருக்கிறது. வேட்கைகள் இல்லாத உள்ளத்தில் அறிவுதானே சுடர்வீசித் திகழ்கிறது.

இறையுணர்வில் நிலைபெற்றவனுடைய தன்மை இவ்வளவு தான் என்றால், அவனைத் தற்கால உலகில் வெறும் பைத்தியக் காரன் என்று கூறி விடுவார்கள். ஏதோ ஒன்றை ஆசையாகக் கோருவதற்குக் கூடத் திறனில்லாதவன் என்று பேசுவார்கள். எதிர்காலத்தில் இன்னும் மகிழ்ச்சியுடன் இருக்கலாம் என்று நினைத்து மனத்தில் திட்டமோ, செயல் முறையோ வகுத்துக் கொள்வதே கோரிக்கை. ''இதைப் போல் முயற்சித் திட்டம் போடக்கூட இந்துமதப் புத்திசாலிகளுக்குத் திறமை இல்லையே. அறிவுக்கு அப்பாற்பட்ட ஆன்மா ஒன்று இருக்கிறதாம், அதில் போய் நிலைத்து விடுகிறார்களாம்!' என்று பொதுவாகப் பொருள் முதல்வாதிகள் கண்டிக்கிறார்கள்.

அதற்கு இந்தச் செய்யுள் இந்த மாதிரி கண்டிப்பதற்கு இடமில்லாமற் செய்து விடுகிறது. இறையுணர்வில் நிறைவு பெற்றவர், ஆன்மானுபவ ஆனந்தத்தில் முழுகித் திளைப்பவர் என்று இரண்டாவது வரியில் கூறப்படுகிறது; வேட்கைகள் இல்லாதவர் என்று மட்டும் சொல்லி நிறுத்திவிடவில்லை. அவர் ஆன்மிகப் பேரானந்தத்தை அனுபவிப்பவர் என்றும் விளக்கப் பட்டிருக்கிறது.

பொம்மைகளை வைத்துக் கொண்டிருந்த குழந்தைகள் சற்று வளர்ந்து சிறுவர்களானவுடன், அவற்றைக் கைவிட்டு வேறு வகைப் பொருள்களை நாடுகிறார்கள். பிறகு வாலிபர்களாகும் போது வேறுவிதமான பொருள்களில் அவர்களுடைய கவனம் செல்லுகிறது. முன்பு மகிழ்ச்சியளித்தவை இப்போது அவர்களுக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. முதுமையில் அவர்களுக்கு மகிழ்ச்சியளிப்பவை முற்றிலும் வேறானவை. இதை நாம் கண் கூடாகப் பார்க்கிறோம். வளர, வளர நமது தேவைகள் மாறுகின்றன; அதிகரிக்கின்றன. புதிய நிலையின் தேவைகளில் பழைய கருத்துக்கள் பயனற்றவையாகின்றன.

ஒருவன் தன்னை அகந்தையுடன் ஒருங்கிணைத்துக் கொள்ளும் அறியாமையினால், புலன் பொருள்களில் ஆவல் தோன்றுகிறது. உணர்ச்சித் தளைகள் அதிகரிக்கின்றன;

அவரவர்களுடைய அபிப்பிராயங்கள் அவரவர்களுக்கு முக்கிய மாகத் தோன்றுகின்றன. அறியாமைத் திரை விலகியபிறகு அகந்தையும், இறைப் பொருளும் நேருக்கு நேர் நிற்கும்போது, அகந்தை உருகி பரம் பொருட்பிரவாகத்தில் கலந்துவிடுகிறது. ஒரு பிரம்ம ஞானி ஆன்மானுபவத்தில் மன நிறைவு பெறுகிறார். பிறகு உடலுக்கும், மனதிற்கும், அறிவுக்கும் உவகையூட்டும் வெளியுலகப் பொருள்களில் அவருக்கு நாட்டம் செல்வதில்லை. ஆனந்தத்தின் பிறப்பிடமாக அவரே ஆகிவிடுகிறார். அப்படிப்பட்டவரை நிலைத்த ஞானமுடையவன்—'ஸ்திதப்ரக்ஞர்'—என்று வியாசர் குறிப்பிடுகிறார். கிருஷ்ணர் வாயிலாக இச் சொற்கள் வருவதால், அவை உண்மையின் பொலிவு பெற்று நம் உள்ளத்தில் பதிகின்றன.

து: கேஷ்வனுத்விக்னமனா: ஸுகேஷு விகத—ஸ்ப்ருஹ:
வீத—ராக—பயக்ரோத: ஸ்திததீர் முனிருச்யதே

2:56

துயரங்கள் வரும்போது மனச்சோர்வும், செழுமை நாட்களில் புலனின்பங்களை தேடித் திரிவதும் இவ்விரண்டுமே இல்லாத சமநிலை பெற்று, பற்றுதல், பயம், கோபங்களைத் துறந்தவரை, இறையறிவில் வேரூன்றிய முனிவரெனக் கருதுகிறார்கள்.

முழுமை பெற்ற முனிவருடைய தன்மை இங்கு விளக்கப் படுகிறது. அவர் ஆன்மானுபவத்தில் தன்னிறைவு பெற்று அதில் நிலையாக இருப்பவர் என்றும் துன்பத்திலும், இன்பத்திலும் அசைந்து கொடுக்காத சமநிலை பெற்றவர் என்றும் கிருஷ்ணர் கூறுகிறார். எதையெல்லாம் செய்வான் என்று முந்திய செய்யுளில் கூறிவிட்டு, எதைப் பொறுத்துக் கொள்ளுவான் என்று இப்பொழுது கூறுகிறார்.

இன்பம் துன்பம் போன்றவைகளினால் அமைதி குலையாமல், பற்றுதல்களைத் துறந்து, பயம், கோபம் ஆகிய உணர்ச்சிகள் இல்லாமல், உறுதியாக ஆன்ம நிலையில் இருப்பவர் முனிவர். அவர் பேசுவதில்லை. எல்லா நிலைகளையும் கடந்து அவ்வாறுள்ள முனிவனிடம் என்னென்ன உணர்ச்சிகள் இருக்காது? 1. பற்றுதல் (ராகம்) இருக்காது; 2. அச்சம் (பயம்) இருக்காது; 3. கோபம் (குரோதம்) இருக்காது.

மனித இனத்தின் சரித்திரத்தில் ஆன்ம உணர்வு பெற்றுத் திகழ்ந்த பெரியோரின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்தால் இது நன்கு புலனாகும். சாதாரண மனிதர்களுக்கு உள்ள

நூற்றுக்கணக்கான உணர்ச்சிகளை அவர்களிடம் காணமுடியாது. ஆனால் அவற்றை எல்லாம் விட்டுவிட்டு முனிவர்கள் மூன்று உணர்ச்சிகளை மட்டுமே துறந்தவர்களென்று வியாசர் கூறுவதன் காரணமென்ன? கீதையை ஊன்றிப் படித்து வருபவர்களுக்கு இந்த சந்தேகம் வரலாம். நூற்றுக்கணக்கான மற்ற உணர்ச்சிகள் நமக்கெல்லாம் வருவதை மறந்துவிட்டு வியாசர் எழுதுகிறாரோ என்று தோன்றும். இது முழுப் பட்டியல்தானா என்ற ஐயப்பாடு நமக்கு ஏற்பட இடமிருக்கிறது. சற்று ஆழ்ந்து சிந்தித்தால் சிலர் கண்டிப்பது போல ''முக்கியமில்லாதவைகளுக்கு வியாசர் தகுதியற்ற முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்'' என்று நாமும் நினைத்துத் தடுமாற மாட்டோம்.

முந்திய செய்யுளில் மனதில் பொங்கி எழும் கோரிக்கைகளையும், ஆவல்களையும் அறவே துறந்தவர் ஆன்மிக நிறைவு பெற்றவர்' என்று கூறியாயிற்று. அப்படி வேட்கைகளைத் துறந்தவர் எவ்வளவு மன உறுதியுடன் இருப்பார் என்பது இச் செய்யுளில் அறிவிக்கப்படுகிறது. நம் புலன்கள் வெளி உலகப் பொருள்களை நுகரும்போது தோன்றும் பற்றுதல்களுடன் இனம் விளங்கா ஒருவகை பயமும்கூட உண்டாகிறது. ஆசைகளால் பற்றுதல் வருகிறது. நாம் பற்றுதல் கொண்ட 'பொருள் கிடைக்குமோ, கிடைக்காதோ என்ற பயம் அதிலிருந்து வருகிறது. அப்படிக் கிடைத்தாலும் அதை மற்றவர்கள் கொண்டுபோய் விடாமல் பாதுகாத்து வைத்துக்கொள்ள வேண்டுமென்ற கவலையும், தொடர்ந்து வருகிறது.

ஒரு பொருள் நமது உள்ளத்தைக் கவர்ந்து, பற்றுதலையும் ஏற்படுத்திவிட்டால், பயம் அலைஅலையாக வரத் தொடங்கி விடுகிறது. அப்பொருளை அடைவதற்கு இடையூறாக யாராவது குறுக்கே வந்தால் நம் கோபமெல்லாம் அவன் மீது திரும்புகிறது. நாம் கோரும் பொருளை அடைவதற்குத் தடையாக இருப்பவை மீது நமக்கு ஏற்படும் உணர்ச்சியே கோபம். அப்பொருள் மீது அதிகப் பற்றுதல் (ராகம்) இருந்தால், அதை அடைவதற்கு உள்ள தடைமீது அதிகக் கோபம் உண்டாகிறது. பற்றுதல் சற்று குறைவாக இருந்தால் நமது கோபத்தின் அளவும் சற்றுக் குறைந்ததாக இருக்கிறது.

பெரும் ஆபத்துக்கள் ஏற்படும் பொழுதுகூட ஆன்மிக உணர்வில் உறுதி பெற்றோர் உள்ளங் கலங்குவதில்லை என்று சங்கரர் கூறுகிறார். அதற்கு அவர் கூறும் உதாரணங்கள் 1. உடற்கோளாறுகளிலிருந்து வருபவை (அத்யாத்மிகம்) (2) புலி, சிங்கம் போன்ற வெளியுலக இனங்களினால் வருபவை (அதிபௌதிகம்), (3) பிரபஞ்சத்தில் கண்காணாத சக்திகளினால் தோன்றும் மழை, புயல் போன்றவை (அதிதெய்விகம்) முதலியன.

எண்ணெயை ஊற்ற, ஊற்ற, தீ மேலும் கொழுந்துவிட்டு எரிவது போல, புலனின்ப நாட்டம் அதிகரிக்க, அதிகரிக்க சாதாரண மக்கள் மனதில் கோரிக்கைத் தீ கொழுந்து விட்டெரியத் தொடங்குகிறது. ஆனால் முழுமை பெற்ற ஒருவருடைய உள்ளத்தில் இவ்வுலக இன்ப துன்பங்கள் எவ்வித பாதிப்பையும் ஏற்படுத்துவதில்லை. மௌனமும், அமைதியுமே அவரிடம் நிலவுகின்றன. அவ்வாறு இருப்பவர் பிரம்மஞானி.

அவரைப் பற்றி மேலும் சில விவரங்கள் கீழே கொடுக்கப்படுகின்றன:

ய: ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்
தத்தத் ப்ராப்ய சுபாசுபம்
நாபி நந்ததி ந த்வேஷ்டி
தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா 2:57

யாரொருவர் எந்த இடத்திலும் பற்றுதலின்றி இருக்கிறாரோ, நன்மையோ தீமையோ வரும்போது களியாட்டமோ, துவேஷமோ இல்லாமலிருக்கிறாரோ, அவருடைய ஞானம் உறுதியானது.

வண்ணக் கலவைகளின் மூலம் தனது உணர்ச்சிகளைப் பேச வைக்க விரும்பும் ஓவியன், தான் வரையும் சித்திரத்திலிருந்து சற்று விலகி நின்று அதைக் கலை ஆர்வத்துடன் உற்றுப் பார்ப்பான். பிறகு உள்ளம் நெகிழ்ந்து சித்திரத்தின் அருகில் வருவான். தூரிகையைக் கையிலெடுத்துக் கொண்டு சித்திரத்தின் அழகை மேலும் கூட்ட லேசாக இங்குமங்குமாக இரண்டொரு இடங்களில் வண்ணக் கலவையைத் தடவுவான். இங்கு கிருஷ்ணரும் அவ்வாறே தாம் வரையும் சொற் சித்திரத்திற்கு ஒளியும் நிழலும் சரிவர அளிக்கும் வார்த்தைகளால் நிறைவு பெற்ற ஞானியின் தோற்றத்தை அர்ஜுனன் இதயத்தில் பதிக்கிறார்.

பற்றற்றவர் அமைதியாக, உள்ளச் சமநிலையுடன், வாழ்க்கையை நேருக்கு நேர் சந்திக்கிறார். அப்படி உள்ள ஒருவரை ஞானத்தில் நிலையாக நிற்பவர் என்று கூறுகிறோம். இச்செய்யுளை முழுமையாக எடுத்துக்கொண்டு பார்த்தாலொழிய, கூறப்படும் கருத்தை தவறாகப் புரிந்து கொள்ளுவோம். வாழ்க்கையில் பற்றுதல் இல்லாதது ஒன்றே ஆன்ம நிறைவுக்கு அடையாளமுமல்ல, விவேகத்தின் அறிகுறியுமல்ல; இதைத் தெரிந்துகொள்ளாத சிலர் தங்களுடைய கடமைகளைக் கைவிட்டு காட்டுக்கு ஓடுகிறார்கள். புலன்களை மயக்கும் இடத்திலிருந்து போகலாம். ஆனால் தங்களுடைய மனதிலுள்ள பற்றுதல்களை விட்டு எப்படி

ஓடுவார்கள்? இது தெரியாமல் காட்டின் அமைதியில் தங்கள் இலட்சியத்தை அடையலாம் என்று மனப்பால் குடிக்கிறார்கள். கடமையையும், செயலியக்கத்தையும் துறந்துவிடப் போவதாக கீதையின் துவக்கத்தில் அர்ஜுனன் கூறினான்; அப்படிச் செய்தால் அமைதியும், நிம்மதியும் வந்துவிடுமென்று நினைத்தான். அவ்விபரீத நடவடிக்கையில் அவனை இறங்க விடாமல் தடுக்க வேண்டுமென்றுதான் கிருஷ்ணர் இரண்டாவது அத்தியாயத்திலிருந்து தீவிரமாக விவாதிக்கத் தொடங்குகிறார்.

ஆபத்தான ஆசாபாசங்கள், அர்த்தமில்லாத மன நெகிழ்ச்சி முதலியவற்றைக் கைவிட்டால் மட்டும், மனிதன் தெய்வீக நிலையை எட்டிவிட முடியாது. வெளியுலகப் பற்றுதல்களைக் கைவிட வேண்டும் என்பது உண்மைதான். அதோடு வாழ்க்கையின் சவால்களை எதிர்நோக்கிச் சமாளிக்கும் மனச் சமநிலையையும் பெறவேண்டும். நல்லவை (சுபம்) வரும்போது துள்ளிக் களியாட்டம் போடுவதும், அசுப அனுபவங்கள் வரும்போது மனம் வெறுத்து உட்கார்ந்து விடுவதும்—இந்த இரண்டுமே இல்லாத உள்ளச் சமநிலை பெறவேண்டும்.

வெளியுலகப் பொருள்களில் பற்றுதலைக் கைவிடுதல் முக்கியமாயினும் அது வெறும் எதிர்மறைநிலை; முழுமையின் அறிகுறி அல்ல. அது பொறுப்புகளிலிருந்து நழுவிவிடுவதாகவும் இருக்கலாம். இறையுணர்வு பெற்றவர்கள். பற்றுதல்களுக்கு அடிமைகளாக இருக்காமல், உலக சுக துக்கங்களை கவலையற்று சந்திக்கிறார்கள். மாரிக் காலத்தில் வெளியில் உட்கார்ந்து, இதமான சூரிய வெப்பத்தை அனுபவிக்கும் இன்பம் வேண்டுமென்றால் வெய்யிலின் ஒளி மிகையால் கண் கூசும் துன்பத்தை சகித்துத்தான் அந்த இன்பம் பெறவேண்டும். கண் கூசுவதைப் பற்றி புலம்பிப் பயனில்லை. அறிவுள்ளவர்கள் கண் கூசுவதை சமாளித்துப் புறக்கணித்துவிட்டு, வெப்ப சுகத்தை மட்டும் அனுபவித்துக் குளிர்காய்வார்கள்.

வாழ்க்கையில் நல்லதும், கெட்டதும் கலந்தே இருக்கிறது. துன்பத்தை தவிர்த்து சுகத்தை மட்டும் அனுபவிக்க ...னத்தால் அது நடக்காது. ஆன்ம நிறைவு பெற்றவர்கள், வாழ்க்கையில் நல்லதையும், கெட்டதையும் ஒன்றுபோல் ஏற்று, பற்றிலாச் சமநிலையுடன் அனுபவிக்கிறார்கள். ஏனெனில் பேருண்மையானதும், அழிவில்லாததுமான இறைப் பொருளில் உறுதியாக நிலைப்பெற்றவர்களுக்கு சுகமும் ஒன்றுதான், துக்கமும் ஒன்றுதான்.

அதைப் போன்றவர்கள் எப்படிப் பேசுவார்கள் என்று அர்ஜுனன் கேட்டான். அதற்கு விடை இச் செய்யுளில் இருக்கிறது. துயரமென்றால் ஒரு ஞானிக்கு வெறுப்பு இல்லை.

இன்பம் வந்தால் அதைப்பற்றி களியாட்டமும் இல்லை. எனவே அவர் ஒன்றை இகழவோ, மற்றொன்றைப் புகழவோ மாட்டார் என்ற பொருள் இதில் பொதிந்திருக்கிறது. ஒரு ஞானி, உள்ளதை உள்ளபடியே பார்க்கிறார், தமது மன நிலையை வைத்து நிகழ்ச்சிகளை எடை போடுவதில்லை. எல்லாப் பொருள்களும், நிகழ்ச்சிகளும் அவருக்கு அற்புதமாகவே தோன்றுகின்றன. மக்களின் நடவடிக்கைகளை அடிப்படையாகக் கொண்டு மேலை நாட்டு சமூக விஞ்ஞானிகள் இப்போது அறிவியல் ஒன்றை உருவாக்கியிருக்கிறார்கள். முழுமை பெற்ற முனிவர்கள் இந்த 'நடவடிக்கை இய'லுக்கு அப்பாற்பட்டவர்கள்.

அவர்களுடைய தன்மைகளில் மேலும் சில—

யதா ஸம்ஹரதே சாயம்
கூர்மோங்கானீவ ஸர்வச:
இந்த்ரியாணீந்திரியார்த்தேப்யஸ்
தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா 2:58

ஆமை தனது அவயவங்களை எல்லா பக்கங்களிலிருந்தும் உள்ளே இழுத்துக் கொள்வதுபோல, புலன் பொருள்களிடமிருந்து புலன்களை உள்ளிழுத்துக்கொள்ளும் ஒருவரிடம் ஞானம் உறுதிநிலை பெறுகிறது.

ஒரு பிரம்ம ஞானியிடம் மூன்று தன்மைகள் இருப்பதாக முந்திய செய்யுட்களில் தெரிய வந்தது. (1) அவர் தமது ஆன்மானுபவத்தில் மன நிறைவு பெறுகிறார். (2) இன்பமும் துன்பமும் வரும்போது அவ்விரண்டையும் உறுதியான சமநிலை நோக்குடன் அமைதியாக ஏற்று, கலங்காமல் வாழ்கிறார். (3) வெறுப்பு, மகிழ்ச்சி போன்ற உணர்ச்சிப் பற்றுதல்களை அவர் அறவே துறந்தவர்.

உள்ளத்தில் பரபரப்புகளைத் தோற்றுவிக்கும் பொருள்களிலிருந்து புலன்களை உள்ளிழுத்துக் கொள்ளுவது பிரம்ம ஞானியின் சிறப்பு. இதற்கு மிகப் பொருத்தமான உதாரணம் ஆமை. எங்கோ தனக்கு ஆபத்து வரப் போகிறது என்று லேசாகத் தெரிந்தால் கூடப் போதும்—தனது அவயவங்களையெல்லாம் உள்ளே இழுத்துக்கொண்டு, தனக்குள்ளேயே பாதுகாப்பாக இருந்து கொள்ளுகிறது. ஆன்ம உணர்வு பெற்ற மனிதனும் அவ்வாறே ஐம்பொறிகளின் வழியாக வெளியேறி, பொருளுணர்வு கொள்ளும் தனது புலன் சக்தியை அவன் விருப்பம்போல் கட்டுப்படுத்தி உள்ளிழுத்துக் கொள்ளுகிறான்.

உள்ளுணர்வைத் தாங்கிய மனம், புலனுறுப்புக்கள் வழியாக வெளியே சென்று பொருள்களை அடைகிறது. பொருள்களின் உருவத்தையே பெறுகிறது என்று கூடச் சொல்லலாம்.

மனம் அவற்றைப் பற்றிய 'அறிவு' பெறுவது இப்படித்தான் என்பது வேதாந்தக் கொள்கை. (அத்தியாயம் 2, செய்யுள் 14 பார்க்க) இது உபநிடதத்தில் ஒரு உவமையின் மூலம் விளக்கப்பட்டிருக்கிறது. உணர்வு தீபத்தின் ஒளி நமது மண்டை யோட்டிலுள்ள ஏழு துளைகளின் வழியாக வெளியே வருகிறது என்றும், ஒவ்வொரு துளையிலிருந்தும் வரும். உணர்வுக்கதிர் ஒரு குறிப்பிட்ட வகை *பொருளையே பிரகாசிக்க வைக்குமென்றும் உபநிடதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

கண்கள் வழியாக வெளிவரும் ஒளிக் கதிர் உருவங்களுக்கும், நிறங்களுக்கும் ஒளியூட்டுகின்றது. காது வழி யாக வெளி வருவது ஒலிகளை ஒலிபெறச் செய்கிறது. இன்றைய நிலையில் மின்சாரத்தை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். விளக்கைப் போட்டவுடன்—நமது அறையிலுள்ள பொருள்களைக் காட்டும் அதே மின்சாரம் எக்ஸ்ரே குழாய் மூலம் சென்று நம் கண்களுக்குப் புலப்படாத எலும்புகளை ஒளி பெறச் செய்து நமக்குக் காட்டுகிறது அல்லவா?

ஒவ்வொருவருடைய உள்ளுணர்வும் இவ்வாறு தனித்தன்மை கொண்ட ஐந்து ஒளிக் கதிர்களாக வெளியாகி, வெளியுலக 'அறிவை' திரட்டித் தருகின்றன. இவ்வாறு அவை ஐந்து வாயில்கள் வழியாக எண்ணற்ற வெளியுலகத் தூண்டுதல்களைக் கொண்டு வருகின்றன. இத்தூண்டுதல் ஒருவ னுடைய மனதை எட்டும்போது, அவனுக்கு வாழ்க்கையில் பலவித கலக்கங்கள் உண்டாகின்றன. நான் குருடனாக இருந் தால், எதிரில் வரும் ஒரு பெண்ணின் அழகு என் மன அமைதி யைக் குலைக்காது. நான் செவிடனாக இருந்தால், மற்றவர் என்னைப் பற்றிக் கூறும் அவதூறுகளைக் கேட்டு என் மனம் சஞ்சல மடையாது. நான் ருசித்திராத, முகர்ந்திராத, தொட்டு உணர்ந் திராத பொருள்கள் என் உள்ளத்தில் சலசலப்பை ஏற்படுத்த இடமில்லை. உலக விஷயங்களிலிருந்து விருப்பம்போல் புலன் இயக்கத்தை உள்ளிழுத்துக் கொள்ளக் கூடியவர் ஞானி என்று கிருஷ்ணர் அழுத்தமாக அர்ஜுனனுக்குச் சொல்லுகிறார்.

விரும்பும்போது ஒருவர் பொருளுலகத்திலிருந்து புலன்களை உள்ளிழுத்துக் கொள்ளும் திறனுக்கு, யோக சாத்திரத்தில், ''பிரத்யாஹாரம்'' என்று பெயர். மூச்சைக் கட்டுப்படுத்துவது (பிராணாயாமம்) மூலமாக யோகிகள் அதை சாதிக்க முடிகிறது. பக்தி மிக்க ஒருவனுக்கு இது இயற்கையாக வருகிறது. தனது இஷ்ட தெய்வத்தின் தோற்றத்தைக் காணவும், அவரைப்

---

* சுவாமிகளின் கடோபனிஷத் விரிவுரை காண்க. அத்தியாயம் 2, பகுதி IV செய்–1.

பற்றிய கதைகளைக் கேட்கவுமே பக்தனுடைய கண்களும், காது களும் பயன்படுகின்றன. ஒரு வேதாந்திக்கு இது (உபரதி). அவருடைய வளர்ச்சி பெற்ற, கூரிய விவேக சக்தியிலிருந்து தோன்றுகிறது. எல்லையற்ற பேரானந்தத்தின் உறைவிடமான இறைவன் நம்மிடமே இருக்கிறான் என்பதை மறந்து, இங்குமங்கும் சிந்திக் கிடக்கும் உதவாக்கரை புலனின்பத் துளிகளை நாடுவது மகா முட்டாள்தனமென்று ஒரு வேதாந்தியின் அறிவு அவருடைய மனதிற்கு சுட்டிக் காட்டுகிறது.

நமக்கு உடல் நலமில்லாதிருக்கும்போது புலன் பொருள்களில் நாட்டமிருப்பதில்லை. அப்போது நமது புலன்கள் கட்டுப்பாட்டில் இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் அப் பொருட்களை உட்கொள்ள வேண்டுமென்ற ஆசை மனதில் இல்லாமல் போவதில்லை. இந்த ஆவலையும் கூட கடைசியில் ஒழிப்பது எப்படி என்பதைக் கேளுங்கள்:

விஷயா வினிவர்த்தந்தே
நிராஹாரஸ்ய தேஹின:
ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய
பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே 2:59

புலன் பொருள்கள் தன்னடக்கமுள்ளவரிடமிருந்து அகன்ற போதிலும், அவற்றை அனுபவிக்க வேண்டுமென்ற ஆவல் நீங்குவதில்லை. ஆனால் பரம் பொருளைத் தம்மிடத்தே கண்டவரின் உள்ளத்தில் இந்த வேட்கையும் மறைந்து விடுகிறது.

பிரத்யாஹார, உபரதி திறன் இல்லாத ஒருவர் பொருள் களிடமிருந்து தமது புலன்களை தடுத்து வைத்திருக்கலாம். உடல் நலக் குறைவினாலோ அல்லது தாற்காலிக வருத்தத்தினாலோ தமக்கு எதுவுமே வேண்டாமென்று சில பொருள்களை விலக்கி வைக்கலாம். அந்த நிலையிலும் அப்பொருள்களை அனுபவிக்க வேண்டுமென்ற ஆசை போய்விடுவதில்லை. மனதில் அது உறங்கு கிறது. ஒரு யோகியின் உள்ளத்தில் அது அவ்வாறே உறங்கிக் கொண்டிருக்காது என்பது என்ன நிச்சயம்? தாற்காலிகமாக அது விலகி நின்று, வாய்ப்புக் கிடைத்தவுடன் நச்சுப் பாம்புபோல் மீண்டும் படமெடுத்து ஆடலாம் அல்லவா? அர்ஜுனனுக்கு இதைப் போல் சந்தேகம் வரலாமென்று நினைத்து, அதற்கு பகவான் பதிலளிக்கிறார்.

பொருள்கள் கடைகளிலிருந்து வீடுகளுக்குச் சென்றடையும் முறையை கவனித்தால் இங்கு கூறியிருப்பது தெரியும். அப் பொருள்கள் வேண்டுமென்று கோரி தீவிர முயற்சி செய்பவர் களையே அவை வந்தடைகின்றன. மதுவுக்காக தவிப்பவர் இல்லை யென்றால், மதுக் கிடங்கு காலியாகாது. கலைஞர், கவிஞர்,

வழக்கறிஞர் போன்றவர்கள் கலப்பைகளை வாங்குவதில்லை. அவை விவசாயிகளின் வீடுகளுக்குத்தான் போகின்றன. யார் மிக ஆவலுடன் ஒரு பொருளை தேடித் திரிகிறாரோ அவருக்கு அப் பொருள் கிடைக்கிறது. அதை நாடாதவரை அப்பொருளும் நாடுவதில்லை.

ஒருவர் தாற்காலிகமாக சில பொருள்களைக் கை விட்டாலும், அவற்றை அனுபவிக்க வேண்டுமென்ற ஆவல் மனதைவிட்டு அகலுவதில்லை. அதை முற்றிலும் அகற்றுவது மிகவும் கஷ்டம். ஆனால் இறை நாட்டம் கொண்ட ஒருவர், தமது அகந்தையைக் கடந்து ஆன்மானுபவம் பெறத் தொடங் கியவுடன் அந்த ஆவல் அகலுகிறது, அல்லது வறுத்த விதைகளைப் போல் முளைவிட முடியாமல் கருகி விடுகிறது. இதைத்தான் ஞானக் கடலாகிய கிருஷ்ணர் இங்கு விளக்கிக் கூறுகிறார். படைப்பு ஆரம்பமான நாள் முதல் இன்று வரை அகந்தையில் பதிந்த விஷய அனுபவ வாழ்வுத் தடங்கள், ஆன்மானுபவம் பெற்ற ஒருவருடைய உள்ளத்திலிருந்து மறைந்து விடுகின்றன.

இதைப் புரிந்து கொள்வது கஷ்டமல்ல. ஒரு உணர்வு மட்டத்தில் துயரமளிப்பதாகத் தோன்றும் பொருள்கள், மற் றொரு உணர்வு மட்டத்தில் அப்படி இருப்பதில்லை. நான் ஒரு அரசனாக இருப்பதாகக் கனவு கண்டால், விழித்தெழுந்த பிறகு அது என் கௌரவத்தை இம்மியளவாவது உயர்த்துகிறதா? மிகக் கீழ்நிலையில் வாழ்பவன் ராஜபோகம் அனுபவிப்பதாகக் கனவு காண்பதை யாராவது தடுக்க முடியுமா? அதுவும் முடியாது.

அவ்வாறே விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்க நிலைகளில் இருந்து வரும் அகந்தை, ஏராளமான புலன் அனுபவங்களைத் திரட்டிக் கொண்டே வந்திருக்கிறது. அது இந்த மூன்று மட்டங் களையும் கடந்து இறையனுபவம் பெறத் தொடங்கிவிட்டால், புலன் அனுபவங்கள் அவரை ஒன்றும் செய்ய முடியாது.

சரியான அறிவில் (பிரக்ஞையில்) உறுதியாக நிலைபெற விரும்புகிறவர் முதலில் தமது புலன்களை கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அவை தீமை களுக்கு நம்மை இழுத்துச் சென்றுவிடும். எனவே பகவான் பின்வருமாறு கூறுகிறார்—

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித:
இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மன: 2:60

குந்தியின் மைந்தனே, நல்வழியில் செல்லும் அறிவிற் சிறந்தவருடைய மனதைக்கூட—அவர் எவ்வளவுதான் (அடக்க) முயன்றாலும்—கட்டிலடங்காப் புலன்கள் பலவந்தமாக தன் வசம் இழுத்துச் செல்லுகின்றன.

புலன்களை முழுக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவரே ஆன்ம ஞானி என்று பகவான் ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறார்.

அதன் அவசியம் பற்றிச் சொல்லிவிட்டால் மட்டும் போதாது. வெறும் தத்துவக் கருத்து மட்டுமே இந்தியாவில் ஒரு ஆன்மிகக் கொள்கை ஆகி விடாது. ஒருவர் அதை வாழ்க்கையில் கையாளும் வழிமுறையை வகுத்துக் கொடுத்தால்தான் அதை உண்மையான ஆன்மிகக் கொள்கையாக ஏற்றுக் கொள்ளு வார்கள். ஆரியர்களுடைய மரபு' அது. அதையொட்டி, அந்த நடைமுறையையும் பகவான் அர்ஜுனனுக்கு வகுத்துக் கொடுக் கிறார். பிரம்மஞான நிலை அடைவதற்கு மிக்க கடினமான போராட்டம் நடத்த வேண்டுமென்று கூறுகிறார்.

ஆன்மிகப் பேருண்மையை உணரா அறியாமை பின்கண்ட மூன்று வகைகளில் வெளியாகிறது. 1. செயல் தேவையற்ற சாந்த நிலை (சத்துவ, unactive) *(2)* செயல் ஈடுபாடு (ரஜஸ்—*active)* *(3)* செயல் மந்த நிலை *(inactive)*

இம்மூன்றும் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு விகிதத்தில் கலந்திருக்கிறது. அறியாமை திரையினால் நமது அறிவு மூடப்படுவதாலும் (ஆவரணம்) மனசில் அமைதியின்மை (விக்ஷேபம்)யினாலும், நம்மிடமுள்ள சத்துவகுணம் அல்லலுறும் போது, புலன்கள் கட்டுப்பாடின்றி திரிவதால் பல பிரச்னைகளைத் தோற்றுவிக்கின்றன. புலன்களை உறுதியாகக் கட்டுப்படுத்தினா லொழிய அவை பொருள் உலகத்திற்கே மீண்டும் மீண்டும் நம்மை ஈர்க்கின்றன. அதனால் உள்ளத்தில் குழப்பமும், அக் குழப்பத்தினால் துக்கமுமே உண்டாகின்றன.

ஆன்ம நாட்ட முயற்சியில் மிக முன்னேறிய பெரியோருக்குக் கூட இந்த நிலை வரலாமென்று அர்ஜுனனுக்குப் பகவான் எச்சரிக்கை செய்கிறார். உள்ளறிவு எக்காரணத்தைக் கொண்டும் வெளி மனதிற்கு அடிமையாகாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். புலன்களினால் வரும் சிக்கல்களைப்பற்றி விவரிக்கும் இப்பகுதியில் இந்த எச்சரிக்கை மிகப் பொருத்தமாக இருக்கிறது.

சில சிறந்த சாதகர்கள் நடுவில் தமது முயற்சியைக் கை விட்டு உட்கார்ந்து விடுவதை உலகத்தின் எப்பகுதியிலும் காண லாம். சில ஆண்டுகள் சாதகம் செய்த பிறகு உள்ளத்தில் ஒரு வகை விவரிக்க முடியாத ஆனந்தம் தோன்றுவதை அவர்கள் உணருகிறார்கள். இதனால் எல்லை மீறிய தன்னம்பிக்கையுடன்—ஒருவித கர்வத்துடன் என்றே சொல்லலாம்—அவர்கள் தவத்தில் சற்று தளர்ந்து விடுகிறார்கள். புலனுலகுக்கு அவர்கள் மீண்டும் திரும்பும்போது அவர்களை 'கட்டிலடங்கா'ப் புலன்கள் பலவந்த மாக இழுத்துச் செல்லுகின்றன. அமைதியான தியான நிலை சீர்

குலைந்து விடுகிறது. உண்மையான பல சாதகர்களும்கூட தங்களுடைய முயற்சிகளை அரைகுறையாக நிறுத்தி விடுவதன் காரணம் இதுதான்.

தானி ஸர்வாணி ஸம்யம்ய
யுக்த ஆஸீத மத்பர:
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி
தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா 2:61

அவற்றையெல்லாம் கட்டுப்படுத்தி, என்னையே தியானித்து அவர் உறுதி நிலை பெற்று அமர வேண்டும். புலன்களைக் கட்டுப்படுத்தியவரின் ஞானம் உறுதியானது.

மனிதன் தன் உள்ளுலக அதிபதியாக விளங்குவதைக் கவிழ்க்கும் சதிகார இனங்களாகப் புலன்கள் இருப்பதால், அவனுடைய ஆன்மிக சாம்ராஜ்யம் அடியோடு அழிந்து விடுகிறது. எனவே அதைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்கு புலன்களை இடைவிடாது கட்டுப்பாட்டுக்குள் வைக்கவேண்டும். புலன்களின் அசட்டு வேட்கைகளுக்கு இடமளிக்கக்கூடாது என்று கிருஷ்ணர் எச்சரிக்கை செய்கிறார் இன்றைய உளவியல் இக்கருத்தை ஆதரிக்காது, புலனியக்கத்தைச் சார்ந்து நிற்பதே மனித இயல்பு என்றும், அதை அடக்குவது இயற்கைக்கு மாறானது என்றும் ஃபிராய்டு **(Freud)** போன்றவர்கள் நினைக்கிறார்கள்.

மனத்தை கட்டுப்பாடான முறையில் இயங்கச் செய்வதும் அதை நசுக்கி ஒடுக்கி விடுவதும் ஒன்றல்ல. மனத்தை ஒடுக்கி, மிதித்து வைத்திருக்க வேண்டும் என்று வேதங்கள் சொல்லவில்லை. மனம் சிறப்பாக இயங்கவே, வேதக் கொள்கை வழி காட்டுகிறது. மனத்தில் எழும் புலன் வேட்கைகள் மறைந்த பிறகு, பேரின்பப் புது மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன என்று வேதக் கொள்கை அறிவுறுத்துகிறது.

அதை இச்செய்யுள் வெளியிடும் முறையும் அழகாக அமைந்திருக்கிறது. ஆன்மிகத் துறையில் வளர்ச்சி பெற விரும்பும் ஒருவர் என்ன செய்யவேண்டும், என்ன செய்தால் போதாது என்ற இரண்டையும் ஒரே மூச்சில் கிருஷ்ணர் கூறுவதாகத் தோன்றுகிறது. புலனின்பச் சாக்கடையிலிருந்து வெளியேறுவதால் மட்டும் மன ஆரோக்கியம் வந்துவிடாது. அப்படிச் செய்தால் மட்டும் போதாது. (எல்லாவற்றிற்கும் மேற்பட்ட என்மீது மனத்தை உறுதியாக நிலைநாட்ட இடைவிடாது முயற்சி செய்ய வேண்டும்' என்றும்கூட சீடருக்கு கிருஷ்ணர் புத்திமதி கூறுகிறார்.

படிப்பதற்கு எளிதாக இருப்பதுபோல் தோன்றும் இச்

செய்யுளின் முதலாவது வரியிலேயே ஆன்மிக வளர்ச்சிக்கான வழிமுறை விளக்கப்பட்டிருக்கிறது. மனிதனை மிருகமாக்கும் ஒழுக்கமற்ற தூண்டுதல்கள், தவறான செயல், இயக்கங்கள் முதலியவை ஒருவனுக்கு எப்படி வருகின்றன? எத்தனையோ வகையான பிறவிகள் எடுத்தெடுத்து, கடைசியில் இந்த மனித வடிவம் நமக்குக் கிடைத்திருக்கிறது. அத்தனை பிறவிகளிலும் எண்ணற்ற புலன் பொருள்களுடன் கூடி வாழ்ந்ததன் விளைவாக ஏராளமான வாசனைகளைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறோம். இப்படி நமது அகந்தை சுமந்துகொண்டு வந்திருக்கும் வாசனை மூட்டையை ஒரே வாழ்வில் அகற்றிவிட முடியாது; மனதில் பதிந்துள்ள வாசனைத் தடங்கள் எல்லாவற்றையுமே துடைத்தெறிந்து விட முடியாது. நல்லொழுக்கம், ஆன்மீகப் பற்று முதலியவற்றில் உறுதியாக இருக்கவேண்டுமென்று முயற்சித்து வருகிறவர்கள் எல்லோருக்கும் இது பெரும் திகைப்பூட்டும் பிரச்னையாக இருந்து வந்திருக்கிறது.

இதைத் தீர்க்க நமது புராதன கால முனிவர்கள் தாங்கள் வாழ்ந்து பெற்ற அனுபவத்தின் மூலம் ஒரு வழி கண்டுபிடித்தார்கள். இணையிலா முழு நிறைவின் இலக்கணமாகத் திகழும் இறைப் பொருளை உள்ளத்தில் நிலைக்கச் செய்வதன் மூலம், மனதில் அழுகி வடியும் புண்களை ஆற்றி விடலாம் என்று அவர்கள் கண்டனர். இந்தக் கட்டுப்பாட்டில் வெற்றி காண்பவன் 'உறுதிநிலை பெற்ற பிரம்ம ஞானி' என்று இங்கு குறிப்பிடப்படுகிறது.

இச்செய்யுளின் உட்கருத்து இப்போது தெளிவாகிறது. வெறும் மனவலிமை கொண்டு புலன்களை (இந்திரியங்களை) பலவந்தமாக அடக்கி, அவற்றை இயங்க வொட்டாமற் செய்து கொள்கிறவர்களுக்கு ஆன்மிகப் பொலிவு ஏற்படும் வாய்ப்பு மிகக் குறைவு. புலன் உறுப்புக்கள் தாமாகவே சரணடைந்து கிடக்க, எல்லையற்ற இறையுணர்வில் மூழ்கியிருப்பவர் உண்மையான ஞானி. அறிவு பெறுவதற்கு உதவியாக இருக்கும் அவருடைய ஐம்பொறிகளை சிதைத்துக் கொள்ளவுமில்லை; உபயோகமில்லாதவை என்று ஒதுக்கிவிடவுமில்லை. மனிதனில் உள்ள மிருக இயல்பை அவர் கட்டுப்பாட்டில் வைக்கிறார். உள்ளே இருக்கும் சைத்தானைப் பழக்கி, சரியான முறையில் தமக்குப் பணிபுரிபவனாக ஆக்கிக் கொள்ளுகிறார்—ஷேக்ஸ்பியர் நாடகத்தில் வரும் பிராஸ்பரோ என்பவர் காலிபனைப் பழக்குவதுபோல்.

அவ்வாறு பழக்காவிட்டால் ஒருவர் பல்வேறு துன்பங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. இதைக் கீழ்க்கண்ட செய்யுட்கள் விவரிக்கின்றன.

த்யாயதோ விஷயான் பும்ஸ:
ஸங்கஸ்—தேஷூப ஜாயதே
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:
காமாத் க்ரோதோபிஜாயதே 2:62

பொருள்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவனுக்கு அவற்றில் 'பற்றுதல்' தோன்றுகிறது. பற்றுதலிலிருந்து 'வேட்கை' பிறக்கிறது. வேட்கையிலிருந்து எழுவது 'கோபம்.'

க்ரோதாத் பவதி ஸம்மோஹ:
ஸம்மோஹாத் ஸ்ம்ருதி விப்ரம:
ஸ்ம்ருதி ப்ரம்சாத் புத்திநாசோ
புத்தி நாசாத் ப்ரணச்யதி 2:63

கோபத்தினல் 'மருட்சி' தோன்றுகிறது. மருட்சியிலிருந்து 'நினைவு இழப்பும்', நினைவு இழப்பிலிருந்து விவேக நாசமும் உண்டாகின்றன. விவேகத்தை இழந்தவன் வீழ்ச்சி அடைகிறான்.

இதிலிருந்து ஐந்து அற்புதச் செய்யுட்களில் மனிதன் இறை நிலையிலிருந்து வீழ்ச்சியுற்றது பற்றிய இந்து மத உளவியல் கொள்கையை இதன் மூலம் கிருஷ்ணர் விளக்குகிறார். எல்லா வகைகளிலும் இந்திரியங்களைக் கட்டுப்படுத்துவதில் வெற்றி பெற வேண்டும் என்று மாவீரன் அர்ஜுனனுக்கு அறிவுறுத்துகிறார். இம்மாதிரி வெற்றி பெற்ற ஒருவரைத்தான் முழு நிறைவு பெற்ற ஞானி என்று இந்து மத சாத்திரங்கள் கொண்டாடுகின்றன.

நெடுநாள் சாதகம் செய்த பிறகு கடைசியில் தோல்வியும், ஏமாற்றமும் பெற்றவர்கள், ஏன் அந்தக் கதிக்கு உள்ளாகிறார்கள் என்ற காரணமும் இங்கு கூறப்படுகிறது. உண்மையான இறை நாட்டம் கொண்டோருக்குத் தோல்வியே இல்லை. வேதாந்தம் கூறும் உண்மை இது. ஆனல், 'சிலர் தோல்வி அடைந்திருக்கிறார்களே; அதற்கு இதோ உதாரணங்கள் இருக்கின்றனவே'' என்று சிலர் உதாரணங்கள் காட்டலாம். அவர்களுடைய வாழ்க்கையை ஊன்றிப் பார்த்தால், அவர்கள் புலனின்பங்களில் மறுபடி சிக்கித் தோல்வியுற்றவர்கள் என்று தெரிய வரும். அதுவும் கடைசிச் சொட்டுவரை புலனின்பங்களைப் பருகியவர்கள் என்ற உண்மையும் தெளிவாகும். ஏனெனில் எவரும் அரைகுறையாகப் புலன் கட்டுப்பாடு செய்ய முடியாது. புலன் கட்டுப்பாட்டிலிருந்து ஒரு சிறிது இவர்கள் வழுவினாலும் போதும்; பிறகு எல்லா முயற்சிகளும் படு நாசம்தான்.

வீழ்ச்சி ஏணியில் மனிதன் படிப்படியாக இறங்கிவரும் முறை இங்கு நன்றாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இறை

நாட்டம் கொண்ட ஒருவர் எப்படி வீழ்ச்சி அடைகிறுர் என்ற விவரம் தெரிவதால், அதிலிருந்து மீண்டு, அவன் மறுபடி மேன்மையும், நிறைவும் பெற்று உயருவதற்கான வழியும் இதி லிருந்து அறிந்துகொள்ளலாம்.

விதையிலிருந்து மரம் முளைப்பதைப் போல, தவருன சிந்தனைகளிலிருந்து தீமைகள் எல்லாம் தோன்றுகின்றன. நமது சிந்தனைக்கு கற்பனை அதிகம். அது நம்மை உயர்த்தவும் செய்யும், படு குழியிலும் ஆழ்த்தி விடும். அதை சரியான முறையில் பயன் படுத்திஞல் நல்ல பலன் கிடைக்கும். தவருகப் பயன்படுத்திஞல் நம்மை அது முற்றிலும் அழித்துவிடும். குறிப்பிட்ட ஒரு பொரு ளிடமே நாம் நினைவு செலுத்திக் கொண்டிருந்தால் அப் பொருளிடம் நமக்கு பற்றுதல் ஏற்படுகிறது. அதைப் பற்றி நாம் சிந்திக்க சிந்திக்க அதுவே நமது உள்ளத்தில் பெரும் வேட்கையாக மாறுகிறது. அப்பொருளை நமக்கே சொந்தமாக வைத்துக் கொள்ள வேண்டும், அனுபவிக்க வேண்டும் என்ற ஆவல் உண்டாகிறது. அதற்கு இடைஞ்சலாக யாராவது தடையாக வந் தால், அவர் மீது கோபம் (குரோதம்) வருகிறது. தடைப்பட்ட வேட்கையிலிருந்து எழுவதே கோபம்.

கோபத்திஞல் புகைந்து கொண்டிருக்கும் அறிவு, மருட்சிக்கு உள்ளாகிறது. [கோபமுற்றவன் தன் எதிரியிடம் இல்லாத குற்றங்களை எல்லாம் இருப்பதாக நினைக்கிறுன். அதனுல் 'மருட்சி' ஏற்படுகிறது.] மருட்சியுற்ற அறிவு பாகுபாடு செய்யும் விவேக சக்தியை இழந்து விடுகிறது. கோபாவேசத்தில் கடந்த கால நினைவுகள் எல்லாம் மறைந்து விடுவதால் மருட்சியே, குழப்பமே மிஞ்சி நிற்கிறது. கோபம் கொழுந்துவிட்டு எரியும்போது ஒருவன் தன்னையும், மற்றவர்களுக்கும் தனக்கு முள்ள உறவுகளையும், மறந்து எதையும் துணிந்து செய்யும் நிலையை அடைகிறுன் அல்லவா?

மருட்சியுற்ற முட்டாள் இந்த நிலையில் தனது பெற்றோர், ஆசிரியர் முதலியவர்களைக் கூட எதிர்த்துச் சண்டையில் இறங்கி விடுகிறுன். ''மதிப்பிற்குரிய அந்த மேலோருக்கு நான் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறேன்'' என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் தோன்றுவதில்லை என்று ஸ்ரீசங்கராச்சாரியார் கூறுகிறுர்.

ஒருவனுடைய சிந்தனை இப்படி தவருன வழியில் செல்லத் தொடங்கி விட்டால் பொருள்களில் பற்றுதலும், அதன் காரண மாக அவற்றை அடையும் வேட்கையும் தோன்றுகின்றன. பிறகு அவ்வேட்கையே கோபாவேசமாக மாறி, பொருள்களை அடைய முடியாமற் செய்யும் குறுக்கீடுகள் மீது பாய்கிறது. அப்போது தோன்றும் மனக் கலக்கம் காரணமாக அறிவு மருட்சிக்கு உள்ளா கிறது. நல்லது, கெட்டது என்ற பாகுபாடுகளை மறந்து விடுவ

தால், தனக்கும், வெளியுலகத்திற்குமுள்ள உறவுகள் அவனுக்கு விளங்குவதில்லை. மருட்சியில் ஆழ்ந்துவிட்ட அறிவு கலாச்சார கௌரவத்தை இழந்து விடுகிறது; பேச்சு வழக்கில் 'தன்னுணர்வு' என்று கூறுகிறோமே, அந்த புத்தியையும் இழந்து விடுகிறது. நல்லதையும், கெட்டதையும் பிரித்துக் காட்டும் சக்தி தான் அந்த ''தன்னுணர்வு.'' அதை ஆதாரமாகக் கொண்டு தான் நாம் ஒரு பொருளையோ, நிகழ்ச்சியையோ மதிப்பிடுகிறோம். 'புலன் வேட்கையினால் நான் செய்யத் தகாத மிருகத்தனமான இந்த வேலையைச் செய்கிறேன். இது தவறு' என்று 'தன்னுணர்வு' ஒருவனுடைய மனதை, அவ்வப்போது எச்சரிக்கிறது. அந்த உணர்வு மழுங்கிவிட்டால் மனிதன் இரண்டு காலுள்ள ஒரு மிருகமாக மாறி விடுகிறான். உயர்வு தாழ்வுகள், நல்லவை கெட்டவை என்ற பாகுபாடுகள் அப்படிப்பட்ட பிராணிக்கு இல்லை. உடற் தேவையின் குரல் அவனுக்குக் கேட்குமே தவிர, மிக நுணுக்கமான உள்ளுணர்வின் குரல் அவனுடைய காதில் விழுவதில்லை. அவனுக்கு மிக உயர்ந்த, இறை நாட்டம் இருப்பதில்லையாகையால், சுய அழிவுக்கு சர்வ நிச்சயமான பாதையை அவன் தேடிக் கொள்ளுகிறான். புலன் பொருள்களை அனுபவிக்க வேண்டும் என்ற நாட்டமே எல்லா வகையான தீமைகளுக்கும் பிறப்பிடம் என்று இந்த இரண்டு செய்யுட்களிலும் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. அதிலிருந்து தப்பி, விடுதலை (மோட்சம்) பெறுவது எப்படி என்று கீழ்க்கண்ட செய்யுளில் விளக்கப்படுகிறது.

ராகத்வேஷ—வியுக்தைஸ்து
விஷயா—னிந்திரியைஸ்சரன்
ஆத்மவச்யைர்—விதேயாத்மா
ப்ரஸாத—மதிகச்சதி 2:64

புலன்களைச் சிதற விடாது, சுய கட்டுப்பாட்டுடன் பொருளுலகில் விருப்பு வெறுப்புக்களின்றி நடந்து கொள்ளுபவர் உள்ள அமைதி பெறுகிறார்.

உலகிலுள்ள எண்ணற்ற புலனின்பப் பொருள்கள் உள்ளத்தைக் கவர்ந்து, அதன் அனுபவத்தில் நம்மைக் கட்டுப்படுத்த முயற்சித்துக் கொண்டே இருக்கின்றன. உறுதியான சுய கட்டுப்பாட்டுடன், விருப்புகளோ, வெறுப்புகளோ இல்லாமல் அவற்றினிடையில் வாழ்ந்துவரும் ஒருவர் அமைதிப் பேரின்பத்தை அடைகிறார். புலன் பொருள்களே இல்லாத இடத்திற்கு ஓடிவிட்டால் மன அமைதி கிடைக்கும் என்று நினைப்பது தவறு. அவை நம்மைச் சுற்றி இருப்பதாலோ, இல்லாததாலோ மன அமைதி கெடுவதில்லை; அவை இல்லாத இடத்திற்குச் சென்றால் அமைதி கிடைத்துவிடுமென்ற உத்தரவாதமும் கிடையாது. பொருள்கள்

வேண்டும் என்ற வேட்கையும், அவை கூடாது என்ற வெறுப்பும் தான் மனதில் ஊசலாட்டத்தை ஏற்படுத்தி கலங்கச் செய்கின்றன. தனியாக ஓரிடத்திற்கு சென்றால் மட்டும் இவ்வகை மனக் கலக்கம் தீர்ந்து விடுமா என்ன? கவலைகளும், ஏக்கங்களும் அங்கும் தொடரலாம் அல்லவா?

புத்தியில் சிறந்த பெரியோர் தமது சுய கட்டுப்பாடு மூலம், எல்லா விருப்பு, வெறுப்புகளுக்கும் அப்பாற்பட்டு புலன் பொருள்களிடையில் அமைதியாக வாழ்கிறார்கள். என் நிழல் நான் எங்கு போனாலும் வருகிறது. ஆனால் அது என்னை அன்பினால் ஈர்க்கவோ, வெறுப்பினால் உதறித் தள்ளி விடவோ முடியாது. வெளியுலகு ஒருவருடைய உள்ளத்தில் கிளர்ச்சிகளைத் தோற்றுவிக்கிறதென்றால், அந்தக் கிளர்ச்சிக்கு வேண்டிய சக்தியை தாமே தமது மனத்திற்கு அளித்துக் கொள்ளுகிறார்.

ஒரு பைத்தியக்காரன் இருக்கிறான். தன்னைத் தானே சாட்டையினால் அடித்துக்கொண்டு, 'ஐயோ, வலிக்கிறதே,' என்று அவன் ஓலமிடுகிறான். சாட்டையைக் கீழே போட்டு விடுமாறு செய்தாலொழிய அவனுடைய பிரச்னை தீராது. அவன் போட மறுக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். தன் மீது அடி விழாதபடி சாட்டையை வீச அவனுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். அவ்வாறே பொருள்களை நாடி அடி வாங்கிக் கொள்ளுகிறது நமது மனம். அதற்கு பொருள்கள் மீது குற்றம் சொல்லிப் பயனில்லை. அவற்றின் மீது விருப்பமும், வெறுப்பும் இல்லாமல் சுய கட்டுப்பாட்டுடன் நடந்து கொண்டால், அப்பொருள்களின் தாக்குதலால் ஏற்படும் கிளர்ச்சியிலிருந்து தப்பி விடலாம். இங்கு கிருஷ்ணர் சொல்லுவதும் அதுதான்.

தன் உடல் மீது அடி விழாமல் சாட்டையைச் சுழற்ற பைத்தியக்காரனுக்குக் கற்றுத் தருவது போல, துன்பங்களிலிருந்து தப்புவதற்கு இருவகைப் பயிற்சிகளை மனதிற்கு அளிக்க வேண்டும். (1) சுய கட்டுப்பாடு பயிற்சி (2) பற்றுதலுமில்லாமல், வெறுப்புமில்லாமல் பொருள்களிடையில் இருந்து வாழும் பயிற்சி. இந்த இரண்டு பயிற்சிகளும் பெற்றால், பொருட்கவர்ச்சிகளால் தோன்றும் மனச் சலசலப்பு நமது கட்டுப்பாட்டுக்குள் வந்துவிடும். இதிலிருந்து நமக்கு வருவது பரிபூரண மன அமைதி நிலை (பிரசாதம்).

பூஜை நடந்த பிறகு, கடவுளுக்குப் படைக்கப்பட்ட நைவேத்தியத்தை—இனிப்புப் பண்டங்களை எல்லோருக்கும் 'பிரசாத'மாகப் பகிர்ந்தளிப்பது எல்லா மதங்களிலும் உண்டு. தெய்வீகப் பேரமைதியை எல்லோரும் பகிர்ந்து கொள்ளுவதற்கு அறிகுறி அது. பூஜையின் போது மனதை முழுமையாகக் கட்டுப்படுத்தி, இறையுணர்வில் மூழ்கி இருந்தவர் அருள் எனப்படும்

தெய்வீக அமைதியைப் (ஈசுவர பிரசாதத்தை) பகிர்ந்து கொள்கிறார் என்பதைக் குறியீடாகக் காட்டுகிறது, இனிப்பு வினியோகம்.

ஒரு வேதாந்தியைப் பொறுத்தவரை, மனத் தூய்மையே பிரசாதம். புலன் கிளர்ச்சிகள் தோன்றாத உள்ளம் அப்பழுக்கற்றதாகக் கருதப்படுகிறது. சுயக் கட்டுப்பாட்டுடன் விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டுமின்றிப் புலன் பொருள்களுடன் வாழும் பயிற்சியில் வெற்றி பெற்றவருடைய மனம் அமைதி மிகுந்ததாக இருக்கும். அப்பொருள்கள் அவரை அசைக்க முடியாது. தானாகவே அப்படி அமைதி பெற்ற உள்ளம் ஆன்மிக வாழ்வுக்கு உகந்ததாக, தூய்மை பெற்றது (பிரசாதம்) என்று இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது. இனி மன அமைதி, பெற்ற பிறகு நடப்பதைப் பற்றிக் கேளுங்கள்:

ப்ரஸாதே ஸர்வ து:க்கானும்
ஹானி—ரஸ்யோப ஜாயதே
ப்ரஸன்ன—சேதஸோ ஹ்யாசு
புத்தி: பர்யவதிஷ்ட்டதே 2:65

அந்த (மன) அமைதியில் எல்லாத் துன்பங்களும் அழிந்து விடுகின்றன. ஏனெனில் அமைதியுள்ளம் பெற்றவர்களுடைய அறிவு விரைவில் உறுதிநிலை அடைகிறது.

அர்ச்சுனனைப் போன்ற மனநிலையுள்ள, இலகுவில் விட்டுக் கொடுக்காத அறிவாளிகள், ''அமைதி பெறுவதெல்லாம் சரிதான்; ஆனால் எதற்காக அமைதி பெற வேண்டும்?'' என்று கேட்பது இயற்கை. எனவே மன அமைதி பெற்று அதில் உறுதியாக இருக்க வேண்டியதன் காரணத்தை பகவான் இங்கு விளக்குகிறார். ''மனம் அமைதியாக இருந்தால் எல்லாத் துயரங்களும் ஒழிகிறது.'' என்று கூறுகிறார். மன அமைதியிருந்தால் இன்பம் வருகிறது. அமைதியே இன்பம், இன்பமே அமைதி. மனம் அமைதியாக, கலக்கமற்று இருக்கும்பொழுது மகிழ்ச்சியும் பரிபூரணமாக இருக்கிறது. துயரம் என்பது மனக் கலக்கத்தைத் தவிர வேறில்லை.

அமைதியினால் வருவது துயரங்களின் அழிவு (ஹாநி:) என்று எதிர் மறையாக கிருஷ்ணர் கூறுவது அவ்வளவு திருப்திகரமாகச் சிலருக்குத் தோன்றாமல் போகலாம். 'துயரங்களின் அழிவு' என்றால் என்ன? அதற்கு 'வாசனைகளைக் கழித்தல்' என்று பொருள் கொள்ளவேண்டும். அக மனத்தின் மீது வாசனைகள் தூசிப் படலம்போல் படியும் பொழுது மருட்சி உண்டாகிறது. முழுமை பெறாத நிலையில், மருட்சியிலிருந்து துயரங்கள் தோன்று

கின்றன. இது முன்னுரையிலேயே விளக்கப்பட்டிருக்கிறது. முழுமை பெற்றவர்கள் 'புத்தி யோகம்' மூலம் வாசனைகளைப் போக்கிக் கொள்ளுகிறார்கள்.

வாழ்க்கையில் இடையறாது அனுபவங்களைச் சந்திக்க வேண்டிய நிலையில் உள்ள ஒருவர், தம்மிடமுள்ள எல்லா வாசனைகளையும் துடைத்தெறிந்துவிட முடியாது. அவற்றைப் போக்கிக் கொள்ளுவதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதை கிருஷ்ணர் இங்கு குறிப்பிடுகிறார். வாழ்க்கையில் அமைதி (பிரசாதம்) தோன்றுவதற்குச் சுயக் கட்டுப்பாட்டுடன் விவேகமான வாழ்க்கை வாழ்வது அவசியம் என்று அவர் கூறுகிறார். இந்த அமைதிச் சூழ்நிலையில் மனத்தை ஒருவர் வைத்துக் கொள்ளுதலே வாசனைகளை முழுமையாக அகற்றும் வழி இத்தகைய அமைதியின் உயர்வுபற்றி பகவான் கூறுவதாவது:

நாஸ்தி புத்தி-ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா
ந சாபாவயத: சாந்தி-ரசாந்தஸ்ய குத: ஸுகம்

2:66

உறுதியற்றோருக்கு (ஆன்மிக) அறிவு கிடைக்காது; ஆழ்ந்த சிந்தனையும் அவர்களுக்குக் கிட்டாது. ஆழ்ந்து சிந்திக்காதவர்களுக்கு அமைதியில்லை. அமைதியில்லாதோருக்கு மகிழ்ச்சி எவ்வாறு வரும்?

முழுமை பெறுவதற்கு முறை வகுத்துக் கூறும் இந்து மத இலக்கியத்தில் மன அமைதியின் அவசியத்தை மீண்டும் மீண்டும் வற்புறுத்தியிருப்பதற்குக் காரணம் இச்செய்யுளிலிருந்து தெரிகிறது. பண்பாட்டு வளர்ச்சிக்குச் சிந்தனை தேவை. மன அமைதியில்லை என்றால் சிந்திப்பதற்குப் போதிய அவகாசம் இருக்காது. முதிர்ச்சி பெற்றவர்கள் ஆன்மிக நிறைவையே வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டிருப்பார்கள். மன அமைதியில்லை என்றால், அவ்வாறு ஆன்ம நிறைவு பெறுவதற்கு வேண்டிய உள்ளுறுதி அவர்களுக்கு இருக்காது. அத்துடன், வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றித் தீர ஆலோசித்துச் செயல்படுவதற்கான திட உள்ளமும் அவர்களுக்கு இருக்காது. வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளைத் தெளிவாகப் பாகுபாடு செய்து மதிப்பிட முடியாதவர்களுக்கு 'ஆன்மிக அறிவு' (பாவனை)த் துறையில் ஈடுபாடு இருக்க இடமில்லை. கப்பற் பயணம் செய்பவர்களுக்குத் திசை காட்டும் துருவ நட்சத்திரம் போல, வாழ்க்கைக் கடலில் பிரயாணம் செய்து கொண்டிருப்பவர்களுக்குத் துருவ நட்சத்திரம் ஆன்மிக அறிவு என்ற லட்சியமே. அதைக் கைவிட்டால் நமது வாழ்க்கை, வழி தவறிய மரக்கலம் போல் குறிக்கோளற்றுத் தடுமாறிப் பாழாகிவிடும்.

ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் தத்துவபூர்வமான இலட்சியம் ஒன்று இல்லாவிட்டால் மன அமைதியே இருக்காது. ''பேருண்மையை அறியவே நான் இவ்வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கியிருக்கிறேன்'' என்ற இலட்சியத் தெளிவு இருந்தாலொழிய, வாழ்க்கைப் புயல்களையும் அதில் அலை அலையாக வரும் பிரச்னைகளையும் சமாளித்து முன்னேற முடியாது. நடனக் கலை வெற்றி பெற மத்தளத்தின் லயக் கட்டுக்குத் தகுந்தாற்போல் நடனமாட வேண்டும்.

உறுதி இல்லாதவர்களுக்கு அறிவு பெறும் வாய்ப்பும் இருக்காது என்று கூறியதற்குக் காரணம் பின் வருமாறு:

இந்த்ரியாணும் ஹி சரதாம் யன்மனோனுவிதீயதே
ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்—நாவமிவாம்பஸி 2:67

ஏனெனில், நீரில் மிதக்கும் படகைக் காற்று இழுத்துச் சென்று விடுவதுபோல, அலைகின்ற புலன்களின் அடிச்சுவட்டில் செல்லும் மனம், ஒருவருடைய அறிவையும் இழுத்துக் கொண்டு போய் விடுகிறது.

மீகாமனில்லாத மரக் கலம் புயலாலும், அலைகளினாலும் அலைக்கழிக்கப்பட்டு, சேர வேண்டிய துறைமுகத்தை அடையாமல் நடுக் கடலிலேயே மூழ்கி விடுகிறது. அவ்வாறே நங்கூரம் போன்ற உறுதியுடன் உள்ளம் நிலைத்து நிற்கவில்லையென்றால் புலன்கள் இன்ப வேட்கைப் புயலில் சிக்கி வாழ்க்கைக் கப்பல் கவிழ்ந்து விடும். மனிதன் நிலைகுலைந்து நசித்து விடுவான். எனவே வாழ்க்கையில் வெற்றி பெற்று உயர்நிலை அடைவதற்கு ஒருவர் தமது புலன்களைக் கட்டுப்படுத்துவது மிகவும் அவசியம்.

தாம் ஏற்கனவே கூறியதை (அத்தியாயம் 2 செய்யுள் 61—62 பார்க்க) இவ்வாறு விளக்கிய பிறகு கிருஷ்ணர் கீழ்க்கண்டவாறு தமது கொள்கையை உறுதிப்படுத்துகிறார்.

தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ
நிக்ருஹீதானி ஸர்வச:
இந்த்ரியாணீ ந்த்ரியார் தேப்ய:
தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா 2:68

ஆகையால் புயவலி மிக்கவனே, யார் ஒருவர் புலன் பொருள்களிடமிருந்து தமது புலன்களை முற்றிலும் கட்டுப்படுத்திக் கொள்கிறாரோ, அவருடைய அறிவு உறுதிநிலை பெறுகிறது.

நாம் சொல்லுவதை மற்றவர்கள் ஏற்க வேண்டுமென்று நினைக்கும் போது கூட, ''இதைச் செய், அதைச் செய்யாதே,'' என்று கட்டளையிடுவதில்லை. நாம் சொல்வதற்குக் காரிய—காரணங்களை மற்றவர்களுக்கு விளக்கிக் கூறி, அவர்கள் ஒப்புக்

கொள்ளும் மனநிலே ஏற்பட்ட பிறகே நாம் சொல்ல நினைக்கி ருேம். சொல்ல நினைத்த உண்மைகளை அவர்களுக்குப் புகட்டு கிருேம். தெய்வீகப் பேருண்மைகளை எடுத்துரைக்கும் முறையும் அதுதான். அர்ஜுனனுக்கு இதுவரை காரண—காரிய விவரங் களைக் கூறிய பிறகு, இச் செய்யுளில் கிருஷ்ணர் தமது முடிவை மற்ருெரு முறை உறுதிப்படுத்துகிருர். 'புலன் கட்டுப்பாட்டுடன் நடத்தும் வாழ்க்கையே உண்மையான வாழ்க்கை. அது இல்லே யென்ருல் வாழ்வெல்லாம் கண்ணீரும் கம்பலேயுமாகவே இருக்கும்'—என்று ஆணித்தரமாக வாதத்தை முடிக்கிருர்.

புலன்களை விருப்பம் போனவாறு நுகர்வுப் பொருள்களிடை யில் திரிய விடாமல் அடக்குவது என்ருல் என்ன? ஆன்மீக வளர்ச்சி பெற விரும்பும் ஒருவன், புலன்களின் மூலம் அறிவு பெறக் கூடாது என்று அர்த்தமில்லே. வாழ்க்கையை அனுப விக்கச் சக்தியற்றவனுகத் தன்னே ஆக்கிக் கொள்ள வேண்டும் என்ற பொருளும் இல்லே. புலன்களைப் பலவீனப்படுத்தினுல்தான் அறிவு அதிகரிக்கும் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஐம்பொறிகளின் மூலமாக உள்ளே பிரவேசிக்கும் பொருள் வெள்ளத் தூண்டுதல், முழுமை பெற்றவரின் மனத்தைக் கலக்கத்திற்கு உள்ளாக்காது, அவரை அது அமைதி இழக்கச் செய்யாது—என்பதே கிருஷ்ணர் கூறுவதன் கருத்து.

சாதாரண மனிதர்கள் ஒவ்வொருவரும், த்தம் அகந்தை மைய வாழ்வில், புலனுறுப்புக்களின் இயக்கங்களுக்கு இரையாகி வீழ்ச்சி அடைகிருர்கள். பொருள்களுடன் தம்மை ஒன்று படுத்திக் கொள்ளும் அகந்தை நிலேயை ஒருவர் கடந்து விட்டால், அவர் சுதந்திர வாழ்வில் திளேக்கிருர். புலன்களின் கொடுங்கோன்மை அவரிடம் பலிக்காது. இதைப் பகவான் மேலும் தெளிவுபடுத்துகிருர்.

யா நிசா ஸர்வபூதானும் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே:

2:69

எல்லோருக்கும் இரவாக இருக்கிறதே அதில், புலன்களேக் கட்டுப்படுத்தியவர் விழித்திருக்கிருர்; எல்லோரும் விழித் திருக்கும் நிலே, மெய்ப்பார்வை பெற்ற முனிவருக்கு இரவாக இருக்கிறது.

மனம்—அறிவு உடல் என்ற சிவப்புக் கண்ணுடி மூலம் ஒருவர் உலகத்தைப் பார்க்கிருர். ஆன்மீக உணர்வு என்ற திறந்த ஜன்ன லின் மூலம் மற்ருெருவர் உலகத்தைப் பார்க்கிருர். இவ்விருவருக்குமுள்ள அனுபவ வித்தியாசத்தைக் கிருஷ்ணர்

இங்கு அர்ஜுனனுக்கு அறிவுறுத்துகிறார். புள்ளி விவரங்கள் மட்டுமே ஆதிக்கம் செலுத்தும் இன்றைய அறிவியலில் கவிதையின் அழகை அனுபவிக்க நேரமில்லை, அதற்கு வேண்டிய சக்தியும் இல்லை. கவிதையையும் விஞ்ஞானத்தையும் இணைக்கும் தனித்திறன் பெற்றவர்கள் ஆரியர் மட்டுந்தான். கவிஞரும், தத்துவ ஞானியுமான வியாசர், ஆன்மீக முழுமை பெற்றவரின் பேரின்ப நிலைபற்றிச் சித்திரிப்பதற்குப் பனைஓலை ஏட்டையும் எழுத்தாணியையும் எடுக்கும் போது, வேறு எந்த முறையிலும் இக் கருத்தை இவ்வளவு ஆணித்தரமாக யாரும் எடுத்துரைத்திருக்க முடியாது.

அறியாமையில் மூழ்கியிருப்பவர், புத்தித் தெளிவு பெற்றவர் ஆகிய இருவருடைய உலக நோக்குகளும் இங்கு படம் பிடித்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அறியாமையில் மூழ்கியவர் உள்ளது உள்ளபடியே உலகத்தைப் புரிந்து கொள்வதில்லை. தனது மனத்தின் தன்மையை உலகத்தின் மீது திணிக்கிறார். குறைபாடுகள் உண்மையில் அவருடைய உள்ளத்தில்தான் இருக்கின்றன. ஆனால் அவை பொருள்களில் இருப்பதாக அவர் கருதுகிறார்.

சிவப்புக் கண்ணாடி மூலம் பார்த்தால் உலகமே சிவப்பாகத் தான் தெரியும். அக் கண்ணாடியை அகற்றிவிட்டால் உள்ளது உள்ளபடியே தெரிகிறது.

இன்றைய நிலையில் உடல்—மனம்—அறிவு மூலமே உலகத்தை நோக்கும் சக்தி நமது உணர்வுக்கு இருக்கிறது. எனவே உலகம் குறைபாடுகள் மிக்கதாக நமக்குத் தோன்றுகிறது. அதற்காக உலகத்தைக் குறை கூறிப் பயனில்லை. அதைப் பார்ப்பதற்கு நாம் உபயோகிக்கும் சாதனம் அவ்வளவு மாசடைந்ததாக இருக்கிறது.

தமது புத்தியில் நிலைத்து, உணர்வுக் கதவுகளைத் திறந்து உலகத்தை உள்ள்படியே நோக்குபவர் ஞானி.

மின்சார இயல் வல்லுநர் ஒருவர் நகரத்திற்கு வருகிறார். இருட்டி விடுகிறது. திரும்பிய இடமெல்லாம் அலங்கார தீபங்கள், அற்புதக் காட்சியளிக்கின்றன. ''இது என்ன, ஏ—சியா, டி—சியா?'' என்று கேட்கிறார்.

அதே நகரத்திற்கு வந்துள்ள கிராமவாசியும் அந்தக் காட்சியைப் பார்க்கிறார். ''திரி இல்லாமல், எண்ணெய் இல்லாமல் இத்தனை விளக்குகளும் எப்படி எரிகின்றன?'' என்று அவருக்கு அதிசயமாக இருக்கிறது. அவருடைய நோக்கில் மின்சாரம் என்று ஏதுமில்லை; ஏ.சி., டி.சி. பிரசினைகள் எல்லாம் அவருக்குக் கிடையாது. இஞ்சினியர் பார்க்கும் மின்சார உலகம் கிராமவாசிக்குத் தென்படவில்லை. கிராமவாசியைப் பிரமிக்க வைக்கும் அதிசய உலகம் இஞ்சினியருக்கு இல்லை.

அதைப்போலச் சாதாரண மனிதன் காணும் அகந்தை மைய, வரையறைக்குட்பட்ட உலகம் வேறு, இறையுணர்வில் நிலைத்த மனிதர் காணும் உலகம் வேறு. உறுதியான ஆன்மீக அறிவு பெற்று முழுமை அடைந்தவர் அகந்தையின் குறுகிய, சுயநல வாழ்வில் காணும் இன்ப துன்பங்களை அனுபவிப்பதில்லை.

கோரிக்கைகளைத் துறந்து, புத்தியில் உறுதியாக நின்று, இறை ஈடுபாடு கொண்டவர்களே 'மோட்சம்' அடைவார்கள் என்றும், வேட்கைகளைக் கைவிடாதவர்களுக்கு அது இல்லை என்றும் காட்ட, பகவான் இங்கு ஒரு உதாரணம் கூறுகிறார்:

ஆபூர்யமாண—மசலப்ரதிஷ்ட்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத்
தத்வத் காமாயம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ ஸாந்திமாப்னோதி ந காமகாமீ 2:70

எல்லாப் புறங்களிலிருந்தும் தண்ணீர் வந்து பாய்ந்து கொண்டிருந்த போதிலும் நீர்மட்டத்தில் ஒரு மாறுதலுமின்றி அமைதியுடன் இருக்கும் கடல் போல, வேட்கைகள் பல உட்புகுந்த போதிலும் புலன் அடக்கம் பெற்ற முனிவர்கள், அமைதியுடன் இருக்கிறார்கள், 'கோரிக்கைகளைக் கோருவோன்' அவ்வமைதி பெறுவதில்லை.

உலகிலுள்ள எண்ணற்ற ஆறுகளில் பெருகும் வெள்ளம் எல்லாம் கடலில் போய் விழுகிறது. இருந்தும் கடலின் நீர் மட்டம் துளிகூட உயர்ந்து விடுவதில்லை. அவ்வாறே எண்ணற்ற புலன் பொருள்கள் ஆன்ம உணர்வு பெற்ற முனிவரின் மனோவட்டத்திற்குள் ஐம்புலன்களும் தங்களது தூண்டுதல்களைச் செலுத்தலாம். ஆனால் அவர் உள்ளத்தில் எவ்வித மாறுதலையும் அவை ஏற்படுத்த முடியாது.

ஒருவர் புலன் பொருள்களின் நடுவிலிருக்கும்போது அவற்றை புலனுறுப்புக்கள் சந்திப்பது தவிர்க்க முடியாதது. ஆயினும் அவற்றின் தூண்டுதல்களினால் அமைதி இல்லாத குலையாத உள்ளம் படைத்தோரையே முழுமைபெற்ற முனிவர்கள் என்று கூறுகிறோம். அவர்கள் தன்னில்தானே அமைதியையும் ஆனந்தத்தையும் காண்கிறார்கள் என்று கிருஷ்ணர் அறிவிக்கிறார். இதில் சந்தேகத்திற்கு இடமிருக்கக் கூடாது என்பதற்காக, ''கோரிக்கைகளைக் கோருவோருக்கு அமைதியும், ஆனந்தமும் கிட்டுவதில்லை,'' என்றும் எதிர்மறையில் தெளிவாக்குகிறார்.

இன்றைய உலகில் பொதுவாக நிலவி வரும் கருத்துக்கு இது நேர்மாறானது. ஒருவருடைய கோரிக்கைகளைக் கிளறிவிட்டு, இயன்ற அளவுக்கு அவற்றைத் திருப்தி செய்துவிட்டால், பிறகு அவன் வாழ்க்கையில் சந்தோஷமாக இருக்கிறான் என்று

இன்றைய லோகாயதவாதிகள் நினைக்கிறார்கள். தொழிற் பெருக்கத்தையும், இயந்திரங்களின் பெரு உற்பத்தி முறையை யும் அடிப்படையாகக் கொண்டு, தற்கால நாகரிகம் கோரிக்கை களைப் பெருக்குவதில் பெரும் வெற்றி பெற்றிருக்கிறது. சுமார் நூற்றாண்டுகளுக்கு முன் நமது முன்னோர் நினைத்துக்கூடப் பார்த் திராதவை இப்போது நமக்கு அத்தியாவசியப் பொருள்களாகத் தோன்றுகின்றன. முதலாளிகளும், தொழிலதிபர்களும், விஞ்ஞான முன்னேற்றத்தின் உதவியால், புதுப்புதுக் கோரிக்கை களைத் தோற்றுவிக்கவும், அவற்றைப் பூர்த்தி செய்யவும் பெரு முயற்சி செய்கிறார்கள். ஒருவனுடைய கோரிக்கைகள் நிறை வேறும் அளவைப் பொறுத்து அவனுடைய சந்தோஷமும் அதிகரித்திருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளத் தூண்டுகிறது. இன்றைய நாகரிகம்.

விருப்பங்களைத் திருப்தி செய்து உண்டாகும் சந்தோஷம் ஒருபோதும் நிறைவு பெற்றதல்ல. பண்டைக் காலத்திய இந்தியச் சிந்தனையாளர் தங்களுடைய அனுபவத்திலிருந்து அவர் கள் அந்த வழியை நமக்கு வகுத்துக் கொடுத்திருக்கலாம், அல்லது அவர்களுடைய விசாலமான, கூரிய சிந்தனையில் உதித்த தாகவும் அது இருக்கலாம். ஒருவருடைய நிறைவேறிய கோரிக்கைகளின் எண்ணிக்கையை எடுத்துக் கொண்டு, அதை அவர் கோரிய மொத்தக் கோரிக்கைகளினால் வகுத்தால், அதன் ஈவுதான், குறிப்பிட்ட ஒரு கால அளவில் அவருக்கு வரும் இன்பம் என்று நம் நாட்டுப் புராதன சிந்தனையாளர் கண்டுபிடித் திருக்கிறார்கள். கணித பூர்வமான இவ்வுண்மையை, மதப் பற்றற்ற இன்றைய மேதாவிகளும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் நடைமுறையில் நமது பண்டைக் கால அறிஞர்கள் கூறி யிருப்பதற்கும், இன்றைய அரசியல்வாதிகளின் செயலுக்கும் சம்பந்தமில்லாமலிருக்கிறது.

மொத்தக் கோரிக்கைகளை அதிகரிக்கும் முயற்சியே இன்று தீவிரமாக நடந்து வருகிறது. முற்காலத்தில் சரித்திர நூல்களை எழுதிய சிந்தனையாளரும், ஒரு சமுதாயத்தில், மக்களிடையில் வாழ்ந்தவர்களே—மனிதன் ஒரு சமூகப் பிராணி என்று கருதியே அவர்களும் வழி முறைகளை வகுத்துக் கொடுத்தார்கள். மனிதன் மேலும் மகிழ்ச்சியுடன் வாழ வேண்டுமென்பதுதான் அவர்களு டைய கருத்தாகவும் இருந்தது. ஆனால் லாப நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் இன்றைய மகான்களைப் போல அவர்கள் இல்லை. வகுக்கப்படும் எண்ணை உயர்த்தாமல், வகுக்கும் எண்ணை மட்டும் அதிகரித்துக் கொண்டே போனால், சந்தோஷ ஈவு மிகவும் குறைந்து விடும் என்பது நமது முன்னோர் கள் நிரூபித்த உண்மை. இன்று மொத்த விருப்பங்களின் எண்ணிக்கையை மட்டும் உயர்த்தப் பார்க்கிறோம். இது நடக் காத ஒன்றுக்கு நாம் செய்யும் உபயோகமற்ற முயற்சி. வகுக்கும்

எண்ணை—நமது கோரிக்கைகளை—ஒன்றுமில்லாமலாக்கி விட்டால் நாம் ஆனந்தக் கடலில் திளைத்து இன்பம் பெறுவோம் என்று நமது சாத்திரங்கள் கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை.

இந்நாட்டு முனிவர்கள் கூறிய உபநிடத உண்மைகளை கீதை இங்கு மீண்டும் வற்புறுத்துகிறது. 'கோரிக்கைகளைக் கோருவோன்' பூரண அமைதி (சாந்தியை) என்றைக்கும் அடைய முடியாது. மனத்தை முற்றிலும் கட்டுப்படுத்தியவருக்கு எவ்விதப் பற்றுதலும் இருக்காது. எனவே புலன் பொருள்கள் அவருடைய உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டு பண்ணிக் கோரிக்கைகளை ஏற்படுத்த முடியாது. அதைப் போன்று வாழ்பவர் பேரின்பமும், பூரண மன அமைதியும் பெறுவார்கள். வெளியுலகப் பொருள்கள் தாமாக நமக்குத் தொல்லை கொடுப்பதில்லை. பொருள்களின் தாக்குதலுக்கு நமது புலன்களை உட்படும்படி விட்டுவிடுவதாலேயே நமது புலன் நம்மை இழி நிலைக்குக் கொண்டு வருகின்றன. பொருள்களைத் தவருக மதிப்பீடு செய்து, அவைகளிடம் பற்றுதலை வளர்த்துக் கொள்வதால்தான் மனிதன் பற்பல தொல்லைகளில் சிக்கி அழிய வேண்டிய நிலை உண்டாகிறது.

இப்பகுதியின் ஆரம்பச் செய்யுளுக்குத்தான் (அத்தியாயம் 2, செய்யுள் 55) கிருஷ்ணர் இங்கு விரிவான விளக்கம் அளிக்கிருர். துவக்கச் செய்யுளில் இறையுணர்வு பெற்ற ஞானியைப் பற்றிக் கூறினுர். ''எல்லாக் கோரிக்கைகளையும் துறந்தவர் புத்தியில் நிலை பெறுகிருர்'' என்று அப்போது எடுத்துரைத்தார். அதன் முழு விவரங்கள் இங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஆகையால்,

விஹாய காமான் ய: ஸர்வான்
புமாம்ஸ்சரதி நிஸ்ப்ருஹ:
நிர்மமோ நிரஹங்கார:
ஸ சாந்தி மதி கச்சதி 2:71

கோரிக்கைகளையும் கைவிட்டு, 'நான்', 'எனது' என்ற உணர்ச்சிகளைத் துறந்து ஆவல் எதுவுமின்றி வாழ்பவராக அமைதி பெறுகிருர்.

இதுவும் அடுத்த செய்யுளும் துறவு பற்றிக் கூறுவதாகச் சில உரையாசிரியர்கள் நினைக்கிருர்கள். கீதை முற்றுமாகத் துறவுப் பாதையைக் கைவிட்டுவிடவில்லை. இரண்டாவது அத்தியாயம் ஏறக்குறைய கீதையின் முழுச் சுருக்கம் என்பது ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறது. ஆகவே சந்நியாச யோகம் பற்றிக்கூட விளக்குவதற்குத் தனியாக ஒரு அத்தியாயமே பின்னுல் ஒதுக்கப்பட்டிருப்பதால், இங்கும், வேறு சில இடங்களிலும் அது

தொட்டுக் காட்டப்பட்டிருக்கிறது.

கிருஷ்ணர் முன்னரே எடுத்துரைத்த முக்கிய அறிவுரையின் கருத்து இதில் எதிரொலிப்பதாகத் தோன்றுகிறது. இந்த அத்தியாய தத்துவ விளக்கப் பகுதியின் தொடக்கத்தில் (அத்தியாயம் 2, செய்யுள் 38) 'இரட்டைகளிலிருந்து எழும் உள்ளக் கலக்கங்களை அறவே ஒழித்து வாழ்க்கைப் போரில் ஈடுபடு' என்று கிருஷ்ணர் கூறினார். அதே கருத்து அத்தியாயம் முடியும் தறுவாயிலும் வற்புறுத்தப்படுவதாக நினைக்க இடமிருக்கிறது.

தம்முள் உண்மையான அமைதியை அனுபவிப்போரின் மனநிலை முதலில் விளக்கப்படுகிறது. அவர் எலலாக் கோரிக்கைகளையும் கைவிட்டவராக இருப்பார். பற்றுதல்களும், ஆவல்களும் அவருக்கு இல்லை. அதைத் தொடர்ந்து இரண்டாவது வரியில் அவருடைய அறிவு நிலை சுட்டிக்காட்டப்படுகிறது. 'நான்', 'எனது'. என்ற கருத்துக்களுக்கு அவருடைய அறிவில் இடமில்லை. 'நான்', 'எனது' என்ற அகந்தையே எல்லாப் புலன் பற்றுதல்களுக்கும் காரணம். அகந்தை வெளிப்படையாகத் தெரியாத ஒரு நிலையை எடுத்துக் கொள்ளுங்கள். ஒருவன் தூங்கும் போது அவனுக்கு ஆவலும், வேட்கையும் இருப்பதில்லை. அல்லது அகந்தை வெளிப்படாததால் அவை தலைதூக்காமல் உறங்கிக் கிடப்பதாக வைத்துக் கொள்ளலாம். எனவே 'அறியாமை'யினால் வரும் விளைவுகளாகிய கோரிக்கை, பற்றுதல், சஞ்சலங்கள் முதலியன பற்றி செய்யுளின் முதற் பகுதி கூறுகிறது என்றால், அவ்விளைவுகளுக்குக் காரணமான அகந்தை மன அமைதி பெற்றவருக்கு இல்லை என்பதை இரண்டாவது பகுதி சுட்டிக் காட்டுகிறது.

அர்ஜுனனுடைய அகந்தையினாலும், அகந்தை மையக் கோரிக்கைகளினாலும் அவனுடைய தன்மை பிளவுற்றிருந்தது. இது முன்னுரையிலே தெளிவாக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பிளவு காரணமாக அவனுடைய உள்மனமும், வெளி மனமும் பிரிந்து இரு தீவுகளைப் போல் தனித்தனியே இருந்ததும் ஓய்ச்சல் ஒழிவற்று கோரிக்கை அலைகளை வீசும் மகா சமுத்திரம் அத் தீவுகளைப் பிரித்து நிற்பதும் விவரிக்கப்பட்டது. இவ்வளவையும் தர்க்கரீதியாக எடுத்துரைத்த பிறகு, அர்ஜுனனின் உள்ளத்தை வருத்தும் பெரும் புண்ணை கிருஷ்ணர் மெதுவாக ஆற்றத் தொடங்குகிறார்.

மொத்தமாக இச் செய்யுளின் உட்கருத்தை நோக்கினால், 'உலகத்தில் நாம் படும் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் நம்மிலிருக்கும் அகந்தை மையக் கருத்துக்களின் தவறுகளும், அதனால் ஏற்பாடும் இறுமாப்புகளும் என்று தெளிவாகிறது.

செல்வப் பெருக்கில் ஆவலும், முடிவற்ற கோரிக்கைகளும் அவற்றிலிருந்தே வருகின்றன அல்லவா?

சந்நியாசம் என்ற சொல்லுக்கு 'தியாகம் செய்தல்' என்று பொருள். ஒருவர் தமது அகந்தையையும், அதிலிருந்து எழும் கோரிக்கைகளையும் துறந்துவிட்டுத் தியாக வாழ்க்கை வாழ்வதே உண்மையான சந்நியாசம். அப்படி வாழ்ந்தவர் இறை நிலையின் எல்லையற்ற உணர்வுக் கடலிலேயே மூழ்கியிருப்பார். வாழ்க்கைப் பிரச்னைகளை எதிர்நோக்கி நில்லாமல், நாட்டிலிருந்து காட்டுக்கு ஓடிவிடுவதுதான் சந்நியாசமென்று பலர் தவருக நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். காவியுடை தரித்தால் சந்நியாசி என்று கருதுபவர்களும் இருக்கிருர்கள். இப்படியெல்லாம் நினைப்பது நமது உபநிடதங்களையே அவமதிப்பதாகும். அகந்தை மையத்திலிருந்து எழும் தவருன எண்ணங்களைப் புத்திசாலித்தனமாகத் துறந்துவிட்டு, அதன் விளைவாக எழும் உணர்வு வேகத்தில் வாழ்ந்து வருபவனையே சந்நியாசியென்று இந்து மதம் கருதுகிறது.

இதைச் சங்கரர் மிக அழகாகச் சொல்லியிருக்கிருர். ''முற்றும் துறந்தவன் சந்நியாசி. எல்லாக் கோரிக்கைகளையும் அறவே கைவிட்டு, வாழ்க்கையின் குறைந்த பட்சத் தேவைகளுடன் மன நிறைவு பெற்று வாழ்கிருன். அந்தக் குறைந்த பட்சக் கோரிக்கைகள் கூடத் தனது என்று அவன் நினைப்பதில்லை. தனது அறிவு பற்றி அவன் தற்பெருமை கொள்வதில்லை. அவ்வாறு அறிவிலேயே உறுதி பெற்றவன், பிரமனை உணர்ந்து, அமைதி நிலை (நிர்வாணம்) அடைகிருன். சுருங்கச் சொல்லுமிடத்து, அவனே பிரம்மனுகிருன்'' என்று அவர் சொல்லுகிருர்.

இவ்வகை அறிவு ஈடுபாடுதான் உயர்ந்தது என்று பின்கண்ட செய்யுள் மூலம் உணர்த்தப்படுகிறது.

ஏஷா ப்ராஹ்மீ ஸ்த்திதி: பார்த்த
நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி
ஸ்தித்வாஸ்யா—மந்தகாலேபி
ப்ரஹ்ம நிர்வாணம் ருச்சதி 2:72

பிரம்மநிலை இதுதான், பார்த்தா. இதை அடைந்தவர்களுக்கு மருட்சி அகலும். இதில் உறுதியாக நிலை பெற்றவர்கள் வாழ்வு முடிவிலும் கூட பிரம்மனுடன் இரண்டறக் கலந்து விடுகிருர்கள்.

எல்லாக் கோரிக்கைகளையும் கைவிட்டால் அகந்தை இருந்த அடையாளம் கூடத் தெரியாதவாறு அடியோடு மறைந்து

விடும். அகந்தையற்ற நிலை மந்தமான, அர்த்தமற்ற, சூனிய நிலையல்ல. மருட்சியுண்டாக்கும் அகந்தை போய்விட்டால், பிறகு உண்மை அறிவு, துடைத்த கண்ணாடியைப் போல் முழுமை யாகப் பிரகாசிக்கிறது. ஆன்மீக உணர்வு பெற்ற ஒருவர், ''இந்த ஆன்மாவே எங்கும் நிறைந்த அழிவிலா இறைவன் (பிரம்மன்)'' என்பதை உணர்ந்து கொள்வார்.

அகந்தை அகன்ற பிறகு, உள்ளுணர்வும், இறைவனும் ஒன்றுதான் என்பது தெளிவாகிவிடும். இப்பேருண்மையை உணர்ந்தவர், தமது ஒளிமிக்க ஆன்மானுபவத்தில் ஆன்மாவாகவே மாறிவிடுகிறார். இந்த நிலையைத்தான் ஆன்மநிலை (பிரம்மஸ்திதி) என்று கூறுகிறார்கள்.

இந்த நிலையை அடைந்த பிறகு மீண்டும் ஒருவர் அகந்தை யின் மருட்சிக்கு இரையாகி, துயரத்தில் உழல மாட்டார் என்பதற்கு என்ன உத்தரவாதம்? இந்த ஆபத்துக்கு இடமேயில்லை என்று பகவான் இங்கு உறுதி கூறுகிறார். ஒருதடவை ஆன்மானுபவம் பெற்ற ஒருவர், பிறகு பழைய மருட்சிகளில் சிக்கிக் கொள்வது கிடையாது. ஆன்மானுபவம் ஒருவருக்கு வாலிபப் பருவத்தில் வராமற் போகலாம். முதுமைப் பருவத்திலோ, இறக்கும் தருவாயிலோகூட அவ்வனுபவம் ஒரு கணம் வந்தால் போதும்—அகந்தையற்ற தூய அமைதியும், மனச் சமநிலையும் பெற்று ஆன்ம உணர்வு ஒரு கணம் தோன்றினாலும் போதும். அவர் பிரம்ம நிலை அடைவார் என்று தமது வேதாந்த நூல்கள் கூறுகின்றன.

உண்மையற்றதை மறுத்தலும், உண்மையை உறுதிப் படுத்தலுமே உபநிடதங்கள் செய்துள்ள பெரும் பணி. அப் புனித நூல்கள் கூறும் உண்மையை நடைமுறை வாழ்க்கையில் கடைப் பிடிப்பது எப்படி? இதை முதன் முதலில் கீதையின் 'கர்ம யோக'ப் பகுதியின் மூலமாக நமக்கு எடுத்துக் காட்டுபவர் வியாசர். பற்றுதல், வேட்கை, தற்பெருமைகளின்றி, வெற்றி தோல்விகளுக்கிடையில் மனச் சமநிலை தவறாது ஒருவர் வாழ்ந்து வந்தால், அவருடைய அகந்தையின் ஆட்டம் எல்லாத் துறைகளி லும் ஒடுங்கிவிடும். எனவே கீதை கூறும் 'கர்ம யோக முறை, வேதாந்தம் கூறும் தியான நிலையிலிருந்து எவ்விதத்திலும் மாறுபட்டதல்ல. ஆனால் அர்ஜுனன் இதை முதலில் தெரிந்து கொள்ளவில்லை. கிருஷ்ணரின் 'கர்ம யோக' முறையைக் கேட்ட தும் அர்ஜுனனுக்கு குழப்பமாகிவிட்டது. அவ்ருடைய சொற்கள் எளிதில் விளங்கினவே தவிர, உட்பொருள் சரியாக விளங்க வில்லை. அடுத்த அத்தியாயத்தில், முதல் இரண்டு செய்யுட்களில் அர்ஜுனனுடைய குழப்பம் வெளியாகிறது. அதனால் கர்ம யோகத்தைப் பற்றி மேலும் விரிவாக அவனுக்குக் கிருஷ்ணர் மூன்றாவது அத்தியாயத்தில் கூறுகிறார்.

(சங்கல்ப வாக்கியம்—அறிவியல் யோகம்)

இந்த அத்தியாயத்திற்கு 'சாங்கிய யோகம்' என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அதிலிருந்து சாங்கியம் என்ற பெயரில் விளங்கும் தத்துவத்தை சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்றோ, அதன் கருத்துக்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன என்றோ பொருள் கொள்ளக் கூடாது. சரியாகச் சிந்திக்கும் முறையை எடுத்துரைத்து, காரிய—காரணத் தொடர்பின் அடிப்படையில் பிரச்னைகளை விளக்கி, அவற்றிற்குத் தர்க்க ரீதியாக முடிவுகாண உதவும் முறை' சாங்கியம். எனவே கீதையின் ஆழ்ந்த தத்துவ பூர்வமான இரண்டாவது அத்தியாயம் சாங்கிய யோகமென்று முடிவுரையில் கூறப்பட்டிருக்கிறது.

மகாபாரத மூலத்தில் கீதையில் ஒவ்வொரு அத்தியாய முடிவிலும் சங்கல்ப வாக்கியம் இல்லை என்பது உண்மையே. இவற்றை எழுதியவர் யார் என்பது பற்றி வெவ்வேறு உரையாசிரியர்கள் வெவ்வேறு விதமாகக் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் கல்வியிற் சிறந்த ஒருவரோ, பலரோ ஒவ்வொரு அத்தியாயத்தையும் அலசி ஆராய்ந்து அதற்குத் தகுந்த தலைப்புக் கொடுத்திருப்பது கீதை வாசகர்களுக்கு மிக உதவியாக இருக்கிறது. இப் பகுதிகள் பற்றி சங்கரர் எதுவும் சொல்லவில்லை.

# செயல்முறை யோகம்

3

இதுவரை அர்ஜுனனுடைய கருத்தைக் கடுமையாக எதிர்த்து, அதில் இருந்த தவறை கிருஷ்ணர் எடுத்துக் காட்டினார். தான் போர் புரியப் போவதில்லை என்றும், வெற்றியினால் வரும் புகழை உதறித் தள்ளிவிட்டு, கானகம் சென்று துறவு வாழ்க்கையை மேற்கொண்டு கடவுளை நாடித் தவம் செய்யப் போவதாகவும் அர்ஜுனன் கூறினான் அல்லவா? அதற்குப் பதிலளிக்கையில் பயனைக் கருதாது கடமையைச் செய்ய வேண்டுமென்றும் (அத்தியாயம்—2, செய்யுள் 47 விளக்கம்) செயல் புரியாமையில் பற்றுதல் கொண்டு விடக் கூடாது என்றும் கிருஷ்ணர் எச்சரிக்கை செய்தார். அத்தியாய முடிவில் 'அறிவுப் பாதையைக் கடைப்பிடிக்குமாறு (அத்தியாயம்—2, செய்யுள் 55, 72 விளக்கம்) ஆலோசனை கூறினார். கீதையை ஆழ்ந்து அக்கறையோடு படிப்பவர்களுக்குப் பகவான் கூறியுள்ள இரு வழிகளில் எது உயர்ந்தது என்ற சந்தேகம் ஏற்படலாம். இப்போது அர்ஜுனனுடைய சந்தேகமும் அதுவேதான்.

ஆசானும் மாணவர்களும் நெருங்கி அமர்ந்து எல்லாப் பிரச்னைகளையும் மனம் விட்டு விவாதிப்பதன் மூலம் இந்திய வேதாந்தத் தத்துவம் போதிக்கப்பட்டது. உலகத்தில் வேறு எந்த மதத்திலும் மாணவர்களுக்கு இவ்வளவு சுதந்திரம் இருந்த தில்லை. விருப்பம் போல அவர்கள் எதையும் வெளிப்படையாகக் கேட்கலாம். ஆசிரியர் கூறுவதற்கு மாற்றுக் கருத்தைத் தெரிவிக்கலாம். அவருடன் எல்லாவற்றையும் விவாதிக்க மாணவர்களுக்கு உரிமையுண்டு.

வேதாந்தம் உலக நிலவரமெல்லாவற்றையும் உள்ளிட்ட முழுமையான சமய விஞ்ஞானம். மாணவர்களுக்குத் தங்களிடம் எல்லையில்லா மரியாதை உண்டு என்று அவர்களுக்குத் தெரியும். அதற்காகச் சொந்த அறிவைக் கைவிட்டு தங்களைக் குருட்டுத் தனமாக மாணவர் பின்பற்ற வேண்டுமென்று அவர்களை நினைக்க வில்லை. சில சமயங்களில் சந்தேகம் கேட்கும் ஆர்வத்தை மாணவர்களிடம் தூண்டியும்கூட அவர்கள் தங்களுடன் விவா திக்க உற்சாகமளித்தனர். அந்த விவாதங்கள் மல்யுத்தங்கள் போல் இருக்கும். சிந்தனை கோதாவில் இவ்வாறு ஆசானுடன் செய்யும் மல்யுத்தம் காரணமாக மாணவர்களின் ஆன்மீகப் பண் பாடு அதிகரித்து, வலுவடைந்தது. அவர்களுடைய அறிவு, தீட்டிய ஈட்டி போல் கூராயிற்று. கல்வி புகட்டும் உபநிடத முறை இது. இதைக் கவிஞரும், தத்துவ ஞானியுமான வியாசர், கீதை யில் அற்புதக் கலையழகு தோன்றக் கையாண்டிருக்கிறார்.

இரண்டாவது அத்தியாயத்தில் கூறியபடி வாழ்ந்து ஆன்மீக நிறைவு பெறும் ஆர்வத்துடன் கீதை பயிலும் மற்ற மாணவர் களைப் போலவே, அர்ஜுனனும் இங்கு துவக்கத்தில் தன் சந்தேகத்தை வெளியிடுகிறான். கிருஷ்ணர் கூறியதில் நாலு வழி கள் தோன்றுகின்றன. 1. அறிவுப் பாதை, 2. செயல் முறைப்பாதை, 3. அவை இரண்டும் இணைந்த முறை, 4. இந்த இரண்டையும் துறக்கும் வழி. .

இவற்றில் எதைப் எதைப் பின்பற்றினால் இறுதியும், முதலுமில்ள்லாத இறைவனை நம்முள் உணர்ந்து நலம் பெற லாம். இந்த நான்கில் தலைசிறந்த முறை எது? நமக்கே இப்படிக் கேட்க வேண்டும் போல் தோன்றுகிறது அல்லவா? முன்னர் கூறிய முறையில் சிறப்பாக வாழ்ந்து இலட்சியத்தை அடைய நினைக்கும் ஒவ்வொருவரும் இந்த நான்கு வழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க விரும்புவது இயற்கையே. முதலில் செயல் முறை யையும், அதற்குப் பிறகு துறவுப் பாதையையும் பின்பற்ற வேண்டும் என்று வேதங்கள் கூறுவதை சங்கரர் சுட்டிக் காட்டி யிருக்கிறார். தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும் நேரம் தவிர, மற்ற நேரங்களில் எல்லோரும் ஏதோ ஒரு வகையில் வேலை செய்து

கொண்டுதான் இருந்தாக வேண்டும். எல்லாச் செயல்களுமே ஓய்ந்துவிட்டன என்பது மரணத்தின் அறிகுறி. ஒருவன் இறந்து, உணர்வில்லாமல் ஜடப் பொருளாகி விட்டால்தான் வேலைகளும் ஓயும். பிறப்பு முதல் இறப்பு வரை மனிதன் ஏதோ ஒன்று செய்தே ஆகவேண்டும்.

சாதாரணமாக, நமது செயல்கள் எல்லாம் அகந்தையிலிருந்தும், அகந்தை மைய கோரிக்கைகளிலிருந்தும் எழுகின்றன. இதற்குக் காரணம் பிறப்போடு நமக்கு வரும் அறியாமையே. தேர்ச்சி பெறாத ஒருவன் சிந்திக்காமற் செயல்பட்டு, தன் உள்ளத்தில் எழும் தவறான போக்குகளினால் உந்தப்பட்டுத் தனது வாழ்வைத் துயரமாகச் செய்து கொள்ளுகிறான். அவனுடைய புலன் வேட்கைகள் காரணமாக, உலகத்தில் இன்ப வேட்டையில் இறங்கி, அற்ப சந்தோஷத்தையும் அளவிலாத் துன்பத்தையும், கணக்கிலடங்கா வாசனைகளையும் தேடிக் கொள்கிறான். இந்த வாசனைகளே அவனை மேலும் தவறான வழியில் செல்லத் தூண்டுகின்றன. இதனால் அவனுடைய வாழ்வில் துயரமே நீடிக்கிறது.

அகந்தையிலிருந்து எழும் செயலினால் வாசனைகள் அதிகரிக்கின்றன என்பது மட்டுமல்ல. வாழ்ந்து கழிப்பதற்கு அவை புதுத் துன்பங்களையும் நாட்டுகின்றன. இத் துறைகளில் மீண்டும் ஒருவன் இயங்கத் தொடங்கும்போது, அவனுடைய அகந்தை இன்னும் கொழுத்து வலுக்கிறது..புதுப்புது வேட்கைகள் மறுபடி தோன்றுகின்றன. அகந்தையின் பேயாட்டம் காரணமாக, இவ்வாறு நாம் ஒரு வட்டத்திற்குள்ளேயே சுற்றிச் சுற்றி வருகிறோம். இந்த ஆபத்தான சுழலிலிருந்து மீளுவதற்குச் சரியான செயல் வழியைப் பின்பற்ற வேண்டும். தெய்வார்ப்பணமாக, சுயநலமற்ற வேலையில் முழுமையடைந்து மூழ்கி, சரணாகதி உணர்வுடன் பணிபுரிந்து வருவதுதான் சரியான செயல் முறை. அவ்வாறு செய்தால் இப்போதுள்ள வாசனைகள் அகலுவதுடன் புது வாசனையும் தோன்ற இடமில்லாமல் போகிறது.

தெய்வ வழிபாடு, வேள்வி முயலியவற்றைச் செய்வதே 'வேலை' என்று வேத காலத்தில் குறிப்பிட்டனர். இவற்றை ஏறக்குறைய நீண்ட காலம் தொடர்ந்து ஒருவர் செய்து வந்தால் உள்ளம் தூய்மை பெறும் என்பது உண்மைதான். அவருடைய ஆளுமை ஒருமைப்பாடு பெற்று, ஒரே குறியாக இலட்சியத்தில் ஈடுபடும் சக்தியைப் பெற முடியும். அந்த முறையில் பயிற்சியும் கட்டுப்பாடும் பெற்ற உணர்வுமே ஆன்மீகப் பாதையில் முன்னேறி ஆன்மாவை இறைவனாகக் காண்கிறது.

வியாசர் காலத்திலே தோன்றியிருந்த ஓர் அவசரத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக எழுதப்பட்டது கீதை.

புராதனமாக வந்து கொண்டிருந்த மரபுக் கருத்துக்கள் ஒரே தடத்தில் சென்று, விறுவிறுப்பை இழந்து, வெறும் சம்பிரதாயங் களாகி விட்டன. ஒன்றையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பதால் மட்டும் ஒரு கலாச்சாரம் வளர்ந்து விடாது. வேத உண்மைகளுக்குப் புது விளக்கம் அளிக்க வேண்டிய நிலே வியாசர் காலத்தில் ஏற்பட்டிருந்தது. அதை கிருஷ்ணர் வாயி லாக உயிர்த் துடிப்பு மிக்க உலக மொழியொன்றில் வியாச மாமுனிவர் அளிக்கிறார். மாவீரன் அர்ஜுனன் இப்போது போர்க் களத்தில் நின்று கொண்டிருக்கிறான். அவன் எதிரில் முறை கேடான கொள்கைகளே ஆதரிக்கும் ஒழுக்கமற்ற ராணுவக் கும்பல் நிற்கிறது. ஆன்மீக உணர்வு பெறுவதற்கான முன்னேற்றமே வாழ்வின் இலட்சியம் என்பது உண்மைதான். ஆனால் அவ்வாறு முன்னேற அர்ஜுனன் இந் நேரத்தில் சடங்கு முறைகள் மேற்கொள்ள முடியாது, போர்க் களத்திலிருந்து ஓடி விட்டால் ஒழிய!

ஒப்புயர்வற்ற வாழ்க்கை இலட்சியத்தை அடைவதற்குச் சடங்கு முறை ஒன்றே வழி என்றால், அது இப்போது முடியாது. எல்லா நேரங்களிலும், எல்லா மக்களும் அதைப் பின்பற்ற முடி யாத நிலே ஏற்பட்டுவிட்டது. வேதங்கள் கூறுவதன் உட்கருத்து என்ன? இந்த நிலேயில் அதை எப்படிக் கடைப்பிடிப்பது? இப் பிரச்னைகளேக் கீதை விளக்குகிறது. நோக்கத் தூய்மையும், ஆழ்ந்த பக்தியும் கொண்டு, தன்னேயும், தன் செயல்களின் பயனேயும் தெய்வார்ப்பணமாக்கிவிட்டு ஒருவன் செய்யும் எந்த வேலேயும் இறைவனுக்குச் செய்யும் வேள்வியாகும் என்று கிருஷ்ணரே தெய்வீகப் பிரகடனம் செய்கிறார்.

வேதக் கருத்துக்குப் புதிய விளக்கம் அளிக்கும் இணையற்ற நூல் கீதை. இதற்கு முன் யாருமே சொல்லாத புதுக் கருத்து இது. அது ஒருபுறமிருக்க, இந்த அத்தியாத்தின் தொடக்கத்தில். அர்ஜுனன் கேட்கும் கேள்வி, அவன் மனத்திலுள்ளதைப் படம் பிடித்துக் காட்டுகிறது. அவனுடைய உள்ளம் நோய் நிலே அடைந்திருந்ததை முன்னரே பார்த்தோம். தற்கால உளவியல் நூல்கள் அப்படிப்பட்ட மன நோய் பிடித்த ஒருவனேப் பற்றிக் கூறுகையில், "இந்த நோயாளிக்கு உண்மை உலகத் துடன் தொடர்பு இல்லே. தான் யார் தனது சூழ்நிலே என்ன என்பவை அவனுக்குத் தெரியாது. தானே கற்பனே செய்து கொள்ளும் கனவு உலகத்தில் வசித்து வருகிறான். தனது நட வடிக்கைகளே அவனால் கட்டுப்படுத்த முடிவதில்லே. அவனுக்கு வெகு விசித்திரக் (மருட்சி) கருத்துக்கள் இருக்கும். பார்ப்பதை யும், கேட்பதையும் தவறாகப் புரிந்து கொள்ளுவது அவனுடைய இயல்பு. இல்லாதவை இருப்பதாக அவன் கண்ணில் படும், காதில் கேட்கும், உணர்வில் தோன்றும் சுவையிலும் முகர்வதி

லும் கூட அவன் அப்படித்தான்,'' என்று அறிவிக்கின்றன.

மருட்சிக்கும், உருவெளித் தோற்றத்திற்கும் இரையாகிய நோயாளி அர்ஜுனன். ஆயினும் நண்பர் கிருஷ்ணரின் தெய்வீகப் பேரறிவிடம் அவன் முற்றிலும் சரண் அடைந்துவிடுகிறான். அவர் கூறுவது உடனடியாக அவனுக்குப் புரிந்துவிட்டதாகச் சொல்ல முடியாது. அவன் உள்ளம் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறது. ஆகையால்தான் எவ்வழியைப் பின்பற்ற வேண்டுமென்று தீர்மானிக்க முடியாத நிலையில் இருக்கிறான். உடன் பிறந்தவர்களைக் கொன்று குவிக்கும் இழிவான் போரில் ஈடுபடக் கூடாது என்று முதலில் அவன் முடிவு செய்தான். அதற்கு ஆதரவாக அசைக்க முடியாதவையென்று அவனுக்குத் தோன்றிய வாதங்களை அடுக்கிக் கொண்டே வந்தான். எனவே தனது கருத்தில் நியாயமிருப்பதாக அவனுக்குத் தோன்றுகிறது. முந்திய அத்தியாயத்தில் கிருஷ்ணர் கூறியவற்றை மிக உன்னிப்பாக அர்ஜுனன் கவனித்து வந்த போதிலும் அவர் கூறியவற்றில் ஏதாவது குறை கண்டு பிடிக்க முடியுமா, தன் கட்சிக்கு ஆதரவாக இரண்டொரு விஷயங்களாவது அவருடைய பேச்சில் அகப்படுமா என்பதிலேயே அவனுடைய அறிவு மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தது.

அர்ஜுனன் ஏற்கனவே ஒரு முடிவுக்கு வந்து விட்டதால், கிருஷ்ணருடைய புத்திமதி திட்டவட்டமானதாக அவனுக்குத் தோன்றவில்லை. அவர் கூறியதற்கு இரண்டு மூன்று வகையாகப் பொருள் கொள்ளலாம்போல் இருந்தது. தன் தீர்மானத்திற்கு மாறானதை அர்ஜுனன் கொஞ்சத்தில் ஏற்பதில்லை; அவன் மனம் அப்படி. ஆகையால் கிருஷ்ணர் கூறியவை அவனுக்குத் தெளிவாகவில்லை. ஓரிடத்தில் புத்தியை விடக் கருமம் (செயல்) தாழ்ந்தது என்றார்; ஆனால் அத்தியாய இறுதியில் துறவுப் பாதையைக் கடைப்பிடிக்கச் சொன்னார். இது ஏன் என்று அவனுக்குக் குழப்பமாக இருந்தது.

தனது நண்பரும், வழிகாட்டியுமான கிருஷ்ணர் ஏதாவது ஒரு வகையில் தன் கோழைத்தனத்தை ஆதரிப்பாரா, அதுதான் நல்லதென்று தட்டிக் கொடுப்பாரா என்று அர்ஜுனன் பார்க்கிறான். அவனுடைய துரதிருஷ்டம், அவன் தேடிய எதுவும் கிடைக்கவில்லை. அவனுடைன மனப் போக்குக்கு ஏற்ற பகுதி பகவான் கூறிய ஆலோசனையில் இல்லை. ஆயினும் சுற்றி வளைத்து, அவருடைய வார்த்தைகளில் தன் கருத்தை புகுத்திப் பார்க்கும் முயற்சியில் இறங்குகிறான். பிரம்ம ஞானியின் உயர்வு பற்றி அவர் மிக உயர்வாகப் பேசினார் அல்லவா? கடமையிலிருந்து பின்வாங்குவதற்கு அதைப் பயன்படுத்திக் கொள்ளலாமென்று அர்ஜுனனுக்குத் தோன்றுகிறது. ''அதைத்தானே நானும் சொல்லுகிறேன்'' என்று சொல்ல விரும்புகிறான். ஆனால் பேசிக்

கொண்டே கிருஷ்ணர் அவனைச் சற்று முன்னுக்குத் தள்ளி, கௌரவப் படைகளுடன் போர் நடத்துவதற்குத் தயாராக ஆயுதங்களைக் கையில் எடுக்கும்படியும் கூறுகிறார். நேர்மாறான ஆலோசனைகளைக் கூறித் தன்னை குழப்புவது பற்றி அந்த நிலையில் அர்ஜுனன் சாரதியை நோக்கி நேரடியாகக் கேட்டதில் வியப்பில்லை.

அர்ஜுன உவாச—

ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்—தே
மதா புத்திர்—ஜனார்த்தன
தத் கிம் கர்மணி கோரே மாம்
நியோஜயஸிகேசவ 3:1

அர்ஜுனன் கேட்டான்:

ஜனார்த்தனா, செயலைவிட அறிவுப் பாதை உயர்ந்ததென்று நீ கருதினால் இக் கொடுமைச் செயலில் என்னை ஏன் ஈடுபடுத்துகிறாய், கேசவா?

இன்னும் கூடத் தன் சகோதரர், பாட்டனார் முறையிலுள்ளவர்களையும், ஆசிரியர்களையும் இப் போரில் கொல்ல முற்படுவது கொடுமை(கோர)ச் செயல் என்று அர்ஜுனனுக்குத் தோன்றுகிறது. கிருஷ்ணர் சற்று முன் கூறியதையெல்லாம் மறந்து விட்டானா அல்லது புரிந்து கொள்ளவே இல்லையா என்று தெரியவில்லை. மகாபாரதப் போர் அவனுடைய அண்ணன் தம்பிகளையோ, ஆசிரியர்களையோ ஒழித்துக்கட்ட நினைக்கும் கொலை முயற்சியல்ல. கிருஷ்ணர் இதை ஏற்கனவே தெளிவாக்கி விட்டார். ஒரு ராணுவப் படையில் அர்ஜுனனுக்குத் தனியாகப் பிரித்தெடுத்த உரிமையோ, பொறுப்போ இல்லை. நடக்கப் போவது ஒரு போர். இரு மாறுபட்ட கொள்கைகளுக்காக இரு படைகள் போர் புரியத் தயாராக இருக்கின்றன. இந்தப் பலப் பரீட்டையில் நியாயம், ஆன்மீக உயர்வு, ஒழுக்கத் தூய்மை ஆகியவை தமது பக்கத்தில் இருக்கின்றன. என்று பாண்டவர்களுக்கு நன்றாகத் தெரியும். ஆனால், துரதிருஷ்ட வசமாகத் தன் படைகளுடன் இரண்டறக் கலந்து நிற்கும் அளவுக்கு அகந்தையை அர்ஜுனனால் கைவிட முடியவில்லை. இலட்சியத்துடன் எந்த அளவுக்கு அவன் இணைந்து நிற்க முடியவில்லையோ, அந்த அளவுக்கு அகந்தையும், தற்பெருமையும் அவன் உள்ளத்தில் நிறைந்திருந்தன. இப்போரை நடத்துவது கூட ஒழுக்கத் தவறுகுமோ என்ற சந்தேகம் அவனுக்கு எழுகிறது. அர்ஜுனன் சொல்ல விரும்புவது இதுதான். கிருஷ்ணர் கூறியவை எல்லாம் துறவுப் பாதையை ஆதரிப்பவையாக இருந்த

போதிலும், இக் கொடுமையான செயல்வழி ஆலோசனையும் ஏன் அதில் சேர்க்கப்பட்டிருக்கிறது? மேலும்,

வ்யாமிச்ரேணவ வாக்யேன புத்திம் மோஹயஸீவமே
ததேகம்—வத நிச்சித்ய யேன ச்ரேயோஹமாப்னுயாம்.
3:2

இப்படித் திகைப்பூட்டுவதாகத் தோன்றும் உன் பேச்சு, என்னைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறது. எனவே இணையில்லாத இறைப் பொருளை அடையும் 'ஒரே' வழியை எனக்குக் காட்டு.

அர்ஜுனன் அறிவாளிதான். ஆனால் மருட்சியில் ஆழ்ந்திருந்ததால், சிக்கலான வாதங்களில் தவறுகளை ஒதுக்கி விட்டு, சரியானதை ஏற்கிற பாகுபாட்டுத் திறன் இப்போது அவனுக்கு இல்லை. செயல் பாதையா அல்லது ஞான மார்க்கமா—இவற்றில் எது நேரடியாக இறையுணர்வை பெறுவதற்குகந்தது என்பதை அவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை. இதனால் இணையிலா இறைப் பொருளை அடையும் (ஒரே) வழியைக் காட்டுமாறு கேட்கிறான்.

பொருட் பெருக்கம், அதைக் குவித்து வைத்தல், கொடுக்கல் வாங்கல் ஆகியவற்றுடன் வாழ்க்கை முடிந்து விடவில்லை. அப்படி முடியும் வாழ்வு வீணானது என்று அக்கால மக்கள் நினைத்தனர். அர்ஜுனனுடைய கருத்தும் அதுதான். இந்தத் தர்மம் அவனுடைய உதிரத்தில் ஊறியிருந்தது. ஒரு மாபெரும் இலட்சியத்தை அடைவதற்காக இப் பிறவி எடுத்து இருக்கிறேன் என்ற எண்ணம் அவனுடைய உள்ளத்தில் நிழலாடிக் கொண்டிருந்தது. பொருளைக் குவித்து வைப்பதே ஓர் இலட்சியமாகாது. நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளுவதற்குப் பொருள் ஒரு சாதனம். தற்போதிருந்த சூழ்நிலையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வது எப்படி என்பதே அர்ஜுனனுடைய சந்தேகம். அதைச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டால், தன் பண்பாடு பெரு முன்னேற்றம் அடையும்; ஆன்மீகத் துறையிலும் முழு மலர்ச்சி காண முடியும். அதனால்தான் அர்ஜுனன் அவ்வாறு கேட்கிறான்.

அதற்குப் பகவான் அளிக்கும் பதில் பின்வருமாறு:

ஸ்ரீ பகவானுவாச—

லோகேஸ்மின் த்விவிதா நிஷ்டா
புரா ப்ரோக்தா மயானக
ஜ்ஞானயோகேன ஸாங்க்யானாம்
கர்மயோகேன யோகினாம் 3:3

பகவான் கூறுகிறார்:

பாவமில்லாத தூயவனே. நான் முன்னே கூறியவாறு, இவ்வுலகில் சாங்கியர்களின் அறிவுப் பாதை, யோகிகளின் செயல் பாதை என்று இரண்டு வழிகள் இருக்கின்றன.

செயல்வழி (கர்ம யோகம்) அறிவு வழி (ஞான யோகம்) ஆகிய இரண்டையும், மாறுபட்ட போட்டி முறைகள் என்று நினைப்பவர்களுக்கு, இந்த இரண்டுமே தெரியாது என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாகிறது. அவை மாறுபட்ட இரு முறைகள் அல்ல. வரிசைக் கிரமத்தில் ஒன்றன்பின் ஒன்றாகக் கடைப்பிடிக்கப்பட வேண்டியவை. சுயநலமற்ற பணி புரிவதன் காரணமாக, நம்மிடம் இப்போதுள்ள பெரும்பாலான வாசனை களை அகற்றும் வாய்ப்பை மனத்திற்கு அளிக்கிறோம். அதில் வெற்றியடைந்து தூய்மை பெற்ற உள்ளம், மிக நுணுக்கமான தியான உலகிற்குச் சென்று நிகரிலா இறையுணர்வு பெறுகிறது.

இந்துக்கள் அல்லாத பிறருக்கு இந்தத் தத்துவத்தைப் புரிந்து கொள்ளுவது கஷ்டமாக இருக்கிறது. இந்து மதம் பல வழிகளைப் பற்றிக் கூறுகிறது. அவை ஒன்றுக்கொன்று முரண் பட்டவையாகத் தோன்றுகின்றன. அவற்றை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற உற்சாகமிருந்த போதிலும்கூட, இந்துக்கள் அல்லாதோருக்கு இப்படிப்பட்ட முரண்பாடுகளும், மாறுபட்ட ஆலோசனைகளும் குழப்பமேற்படுத்துகின்றன. இந்து மதம் விஞ்ஞான பூர்வமாக இல்லை என்ற தவறான முடிவுக்கு அவர்கள் வருகிறார்கள். டாக்டர் ஒரு நாள் தம்மிடம் வரும் நோயாளிகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான மருந்து கொடுக்கிறார். ''இப்படி வெவ்வேறு விதமாக மருந்து கொடுக்க லாமா? ஒரே மருந்து எல்லோருக்கும் கொடுக்கவில்லையே?'' என்று ஒருவர் அங்கலாய்த்தால், அதைவிட நகைப்புக்கிடமான கருத்து வேறொன்றுமில்லை. இந்து மதம் பல்வேறு வழிகள் கூறுகிறதே என்று அங்கலாய்ப்பவர்களின் நிலையும் அதுதான்.

இந்து மதத்தில் பற்றும், ஆன்மீகப் பயிற்சியில் ஆர்வமும் உள்ளவர்களை இரு வகையாகப் பிரிக்கலாம். விறுவிறுப்புடன் செயல்படும் இயல்புள்ளவர்கள் ஒரு வகை. அமைதியாக அமர்ந்து சிந்தனையில் ஆழ்பவர்கள் மற்றொரு வகை. இவ்விரு வரும் நேர்மாறான மனப் பக்குவமுள்ளவர்கள். அவர்கள் இருவருக்கும் ஒரே வழி ஒத்து வராது. ஒருவருக்கு ஏற்புள்ளதாக இருப்பது மற்றொருவரை உற்சாகமிழக்கச் செய்துவிடும். அது இரண்டாவது சாதகருடைய ஆன்மீக முன்னேற்றத்தையே தடுத்துவிடும். கீதை இந்துக்களுக்கு மட்டுமே வழிகாட்டும் ஒரு நல்ல நூலல்ல, மனித இனம் முழுவதுமே முன்னேற உதவும் புனித நூல் அது. அறிவிலும், சுபாவத்திலும் மாறுபட்டவர்களின் சுய வளர்ச்சிக்குக்கூட உதவும் முறையில் கீதை அமைந்திருக்

கிறது.

ஆகையால் தாம் கூறும் முறை பல்வேறு மட்டங்களிலுள்ள மக்களுக்காக வகுக்கப்பட்டிருக்கிறது என்பதை இங்கு கிருஷ்ணர் வெளியிடுகிறுர். சிந்தனே இயல்பு கொண்டவர்களுக்கு அறிவுப் பாதையும், செயல் ஈடுபாடு அதிகமுள்ளவர்களுக்குச் செயல் பாதையும் உகந்தது என்று அறிவிக்கிறுர். இவ்விரு வகையினருக்கும் கவனமாக இரு வழிகள் வகுத்துக் கொடுத்திருப்பது புதிதல்ல என்றும், உலகம் தோன்றிய நாளிலிருந்தே அது இருந்து வருகிறது என்றும் கூறுகிறுர்.

இப்போது கீதோபதேசம் செய்பவர் யார் என்பதையும், அவர் இச் செய்யுளில் கொஞ்சம் வெளியிடுகிறுர். தேவகியின் மைந்தன் என்ற சாதாரண மனிதன் பேசுவதாக இருந்தால், தனக்குத் தெரிந்த புள்ளி விவரங்களேக் கொண்டு அறிவுக்கு உகந்த ஒரு கொள்கையை உருவாக்கித் தந்திருக்கலாம். புலன்களுக்குத் தென்படும் புள்ளி விவரங்கள் மாறும் தன்மையுள்ளவை. அவை மாறும்போது, அவற்றை அடிப்படையாகக் கொண்ட முடிவுகளும் மாறியே தீரவேண்டும். அரசியல், பொருளாதார, விஞ்ஞானத் துறைகளில் மிகச் சிறந்தவையென்று முன்பு கருதப்பட்ட பல கருத்துக்கள் இன்று பயனற்றவையாகிக், கைவிடப்பட்டிருக்கின்றன. சமூக வாழ்க்கை மாறியதால் பழைய கருத்துக்கள் பயனற்றதாகி விட்டன. பொருளாதாரத் துறையில் ஏற்பட்டுள்ள மாறுதல்களிஞல் புதுப்புதுப் பொருளாதாரத் தத்துவங்கள் தோன்றி வருகின்றன. புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ள விவரங்கள் நேற்றைய விஞ்ஞான அடிப்படையைத் தகர்த்து வருகின்றன. கிருஷ்ணர் என்ற மனிதனுடைய அறிவிலிருந்து கீதை பிறந்திருந்தால், அதிலுள்ள பண்புகள் பழைமையாகி மாறிப் போய், தற்கால உலகிற்குப் பயன்படாத வெறும் கருத்துக்களாக ஆகியிருக்கும்.

''உலகம் தொடங்கிய நாளிலிருந்தே அவ்விரண்டு வழிகளும் என்னுல் வகுத்து வைக்கப்பட்டிருக்கின்றன,'' என்று பகவான் சூக்குமமாகக் கூறுகிறுர். பிருந்தாவனத்தில் ஓடி விளேயாடிய நந்தகுமாரனே, அல்லது கோபிகைகளின் உள்ளங்களே ஒருங்கே கவர்ந்த கண்ணனே அல்ல, இங்கே பேசுவது. மாபெரும் ராஜதந்திரி என்ற முறையிலும் இப்போது அவர் பேசவில்லே. முற்றும் உணர்ந்து முழுமை பெற்ற மனிதராக மாமுனிவராக அக்காலத்தில் வாழ்ந்து முக்காலுமுணர்ந்த காலாதீதனைப் பேசுகிறுர். அர்ஜுனனின் தேரோட்டும் சாரதியாகவும், பாண்டவரின் நலம் கோரும் நண்பராவும் உள்ள ஒருவர் இப்போது ஆலோசனே சொல்லிக் கொண்டிருப்பதாக யாரும் நினேத்து விடக் கூடாது. பரமாத்ம நிலேயில், பரிபூரணமாக லயித்து, இறை இயல்பில் இரண்டறக் கலந்து நிற்கும்

ஒருவரிடமிருந்து இச் சொற்கள் வருகின்றன. ஆயிரமாயிரம் வகைகளில் காட்சியளிக்கும் இவ்வுலகத்தின் அழியா மூலப் பொருள், உலகெங்கும் விரவியிருக்கும். உயிர்த் துடிப்பின் உருவகம் இங்கு பேசுகிறது. 'சிந்தனைச் சுபாவம் கொண்டவர்களும், செயலியக்க ஈடுபாடு கொண்டவர்களும் அவரவர்களுடைய தன்மைக்கேற்ப நாடி, தாமே அழிவில்லா இறைப் பொருள் என்பதை உணர்ந்து கொள்வதற்காக 'இந்த இரண்டு வழிகளும் உலகம் தோன்றிய நாளிலிருந்தே என்னால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன,' என்று பகவான் இங்கு கூறுகிறார்.

கர்மயோகம் என்பது நேரடியாக இலட்சியத்தை அடையும் வழி அல்ல. அது நாம் அறிவுப் பாதையை அமைத்துக் கொள்ள உதவுகிறது. செயல்முறையினால் பண்படுத்தப்பட்ட நமது உள்ளம் அறிவுப் பாதையில் செல்லத் தொடங்கி விட்டால், அப்புறம் அது வேறு எவ்வித உதவியுமின்றி நேராக இலட்சியத்தை அடைகிறது. இதை விளக்கப் பகவான் கூறுவதாவது:

ந கர்மணா—மனாரம்பான்—நைஷ்கர்ம்யம் புருஷோச்னுதே
ந ச ஸந்ய ஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி 3:4

வேலைகளைச் செய்யாமலிருப்பது 'செயலின்மை' அல்ல; அவற்றைத் துறந்து விடுவதால் ஒருவர் முழுமை பெறுவதும் இல்லை.

நம் ஒவ்வொருவரிடத்திலும் ஆன்மா கோயில் கொண்டிருக்கிறது. எனவே ஆன்மீக நோக்கில் பார்த்தால், நாம் எல்லோரும் முழுமை பெற்றவர்களே, ஆனால் அந்நிறைவை உணராத 'அறியாமை' காரணமாக, எண்ணற்ற இச்சைகள் நம் அறிவில் கொப்புளித்து எழுகின்றன. தான் முழுமை பெறுவதற்கு, அறிவு செய்யும் முயற்சியே *'கோரிக்கை'. நம்மிடம் அறவே இல்லாதவற்றை—அல்லது போதிய அளவு இல்லாதவற்றை நாம் கோருகிறோம். கோரிக்கைகளைப் பொறுத்துத்தான் சிந்தனைகளும் இருக்கும். மன வட்டத்தில் கோரிக்கைகள் இருக்கும். மன வட்டத்தில் கோரிக்கைகள் எழுப்பும் அலைகளே எண்ணங்கள். கோரிக்கைகள் ஒவ்வொரு கணமும் நமது மனத்தில் எழும் சிந்தனைகளின் தன்மையைப் பிரதிபலிக்கின்றன. நமது சிந்தனை, வெளியுலகில், உருவாக்கம் பெறும்போது, செயலாகிறது. இப்படியாக கோரிக்கைகள், சிந்தனைகள் செயல்கள் ஆகிய மூன்றும், 'அறியாமை' என்ற தொடர்சங்கிலியின் பகுதிகள். இத் தொடர் சங்கிலி நம் எல்லோரையும் பிணைத்திருக்

---

* கோரிக்கை. Desire அல்லது இச்சை என்கிற கருத்தில் ஆளப் பட்டிருக்கிறது.

கிறது.

சற்று ஊன்றிப் பார்த்தால் அப்பகுதிகள் தனித் தனியானவையல்ல என்றும் 'அறியாமை' (அவித்தை)யின் பல்வேறான பகுதிகளே என்றும் தெரிந்து கொள்ளலாம். அறிவின் மீது அது கவிந்து மூடியிருக்கும் நிலையில் கோரிக்கைகள் எழுகின்றன. அக் கோரிக்கைகள் மனவட்டத்தில் இயங்கும் போது சிந்தனைகளாக ஆகின்றன. அச்சிந்தனைகள், நடைமுறை உலகில் பரிணமிக்கும் போது செயலாகிறது. ஒப்பிலா நிலையை ''அறியாமையைக் கடந்த உயர்ந்த அனுபவ நிலை'' என்று கூறுகிறோம் அல்லவா? அவ்வாறு ஆன்மிக நிலையை ''கோரிக்கைகள் இல்லாத நிலை'' என்று கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. அதுவே 'சிந்தனைகள் அடங்கி இல்லாது போன நிலை', 'செயல் முறையில்லா வாழ்வு' என்றும் குறிப்பிடப்படுகிறது.

செயல் முறையைக் கைவிடுவதால் (சந்நியாசத்தினால்) மட்டும் ஒருவர் பூரண நிறைவு பெற்று விட்டதாகக் கூறுவதற்கில்லை. பரிணாம வளர்ச்சியின் உச்சியை அடைய விரும்புவோர், வாழ்க்கையிலிருந்து ஓடி விடுவதால் அந்த இலட்சியத்தை அடைய முடியாது. போர்க் களத்திலிருந்து ஓடிவிட வேண்டும் என்பதே முதன் முதலில் அர்ஜுனனுடைய எண்ணமாக இருந்தது. இதை மறந்து விடக் கூடாது. தவறான சிந்தனைக்கு உள்ளாகியிருந்த இந்த ஒருவனுக்கு அழிவிலா வேதப் பண்பாடு பற்றி எடுத்துரைத்து சரியான வழியில் இட்டு செல்வதே பகவான் கீதோபதேசம் செய்வதன் நோக்கம்.

சுருங்கக் கூறுமிடத்து, ஒருவர் செயல் முறையின் மூலம் தமது உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொண்டு, அறிவுப் பாதையில் முன்னேறி இறைவனை உணரவும் ஆன்ம நிலை பெறுவதே சுய வளர்ச்சிக்குச் சரியான வழி என்று இச் செய்யுள் பறை சாற்றுகிறது. எனவே இந்து மதம் பற்றி எழுதும் நூலாசிரியர்கள் அடிக்கடி இதைத் தேர்ந்தெடுத்து மேற்கோள் காட்டுகிறார்கள்.

* அறிவுத் துறையில் முன்னேற்றமின்றி, செயலை மட்டும் துறந்து விடுவதால் ஒருவர் முழுமை பெறுவதில்லையென்றால், அதற்குக் காரணமென்ன? பின்வரும் செய்யுளில் அதற்கு விடை காணலாம்:

ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட்டத்—யகர்மக்ருத்
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்—குணை: 3:5

* இங்கே அறிவுத் துறை என்பது ஞான மார்க்கம் என்ற கருத்தில் ஆளப்பட்டிருக்கிறது.

உண்மையில் எவரும் ஒரு கணம்கூட செயல் புரியாமல் இருக்க முடியாது. ஒவ்வொருவரும் தத்தம் பிரகிருதியிலிருந்து தோன்றிய இயல்புக்கேற்ப செயல் புரிந்தே தீரவேண்டியிருக்கிறது; வேறு வழியில்லை.

சாத்விகம், ராஜஸம், தாமஸம் ஆகிய மூன்று தன்மைகளும் ஒருவரிடம் இயற்கையாகவே அமைந்திருக்கின்றன. இவை உள்ளத்தை எப்போதும், அலைக்கழித்துக் கொண்டே இருக்கின்றன. எவ்வித செயலுமில்லாமல் ஜடப் பொருள் மட்டுமே இருக்க முடியும். ஓய்வெடுத்துக் கொள்வதாகச் சொல்லிக் கொண்டு, நாம் சும்மா உட்கார்ந்திருந்த போதிலும் நமது மனமும் அறிவும் சும்மா இருப்பதில்லை. ஆழ்ந்த தூக்கத்தில்தான் மனமும் அறிவும் முடங்கிக் கிடக்கின்றன. மனிதனிடமுள்ள இம் மூன்று தன்மைகளை மூன்று குணங்கள் என்று குறிப்பிடுகிறோம். அவை காரணமாக நாம் ஏதோ ஒரு வகையில் ஏதோ ஒரு வேலை செய்து கொண்டே இருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

ஆகையால் வேலையே செய்யாமலிருப்பது இயற்கையின் விதிகளைப் புறக்கணிப்பதாகும். அப்படி வேலை செய்யாமல் இருப்பதால் நம்மிடமுள்ள பண்பாடு மேலும் நலியத் தொடங்கும். வேலையே செய்யாமல் இருக்கும் ஒருவனுடைய சிந்தனைத் தரம் மிகவும் குறைந்து விடுவதைக் கண்கூடாகப் பார்க்கலாம். எனவே மனதை சரியான வழியில் செலுத்தி விருப்பு வெறுப்பற்று வேகமாக வேலை செய்ய வேண்டுமென்று கீதை கூறுகிறது. அப்படி நடந்து கொண்டால், உள்ளத்தின் சக்தி வீணுவதைத் தடுத்து நாம் முன்னேற வழி தோன்றுகிறது.

ஆன்மிக உணர்வு பெறுத நிலையில் ஒருவர் தமது கடமையைப் புறக்கணிப்பது தவறு என்று பகவான் அடுத்துக் கூறுகிறுர்.

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே
3:6

யாரொருவன் தனது உடலுறுப்புக்களை மட்டும் கட்டுப் படுத்திவிட்டு, புலன் பொருள்களைப் பற்றிய நினைவாகவே உட்கார்ந்திருக்கிருனே அவ்வாறு மருட்சியில் ஆழ்ந்தவனை 'வெறும் பாசாங்கு செய்பவன், பொய் நடத்தை உள்ளவன்' என்று சொல்லுகிறுர்கள்.

உடல் அளவில் எதுவும் செய்யாமல் உட்கார்ந்திருப்பவனுக்கு எவ்வித முன்னேற்றமும் இருக்காது. முழுமை நிலை அடைவது பற்றி அவன் கனவுகூடக் காண முடியாது. உடலால் செய்யும் வேலைகளைக் கைவிடும்போது, மனமும் அறிவும்கூட பொருட் துறையிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு சிறப்பு

நிலை எய்த வேண்டும். அப்படிச் செய்யாமல் சாதகத்தில் இறங்க நினைக்கும் ஒருவனுக்கு வெற்றி கிடைப்பது சந்தேகந்தான்.

இன்றைய உளவியல் நூல்களும் இக்கருத்தை ஆதரிக்கின்றன. ஒழுக்கங்கெட்ட வேலைகளையும், குற்றச் செயல்களையும் செய்வதைவிட, அவற்றை மனத்திலேயே வைத்துக் கொண்டிருப்பது இன்னும் ஆபத்தான வேலை. மனத்தில் வைத்துக் கொண்டிருந்தால், அவை நம்மைப் படுவீழ்ச்சிக்கு இட்டுச் செல்லும். சிந்தித்ததையே மீண்டும் மீண்டும் நினைத்துப் புழுங்கிக் கொண்டிருப்பது மனிதனுடைய இயற்கை. ஒரே சிந்தனை பல தடவை மனத்தில் திரும்பித் திரும்பி வந்தால், அது ஆழ்ந்த தடமொன்றை மனதில் ஏற்படுத்திவிடுகிறது. பிறகு வரும் சிந்தனைகளும் அதே தடத்தில் செல்லுவதை எவரும் தவிர்க்க முடியாது. அவற்றின் திசை இப்படி உறுதியாக அமைந்த பிறகு, அவற்றைக் கொண்டவருடைய வெளி உலக நடவடிக்கைகளும் அதே முறையில் அமைகின்றன. புலனின்பங்களைப் பற்றி சிந்தித்த வண்ணமிருக்கும் ஒருவனுடைய மனம், புலனின்பத் தடத்தை மனதில் ஏற்படுத்திக் கொள்ளுகிறது. பிறகு அவன் வெளியுலகிலும் புலனின்பங்களையே நாடி அலையும் துயர நிலை ஏற்படுகிறது.

வெளியில் நியதி தவறுதவர்கள் போலவும் ஒழுக்க சீலர்கள் போலவும் நடந்து கொள்ளும் சிலர், தங்களுடைய மனதில் கீழ்த்தரமான நோக்கங்களையும், வெறுப்பளிக்கும் உணர்ச்சிகளையும் வைத்துக் கொண்டிருப்பவர்களாக இருக்கிறார்கள். அவர்களை ஆன்மிக நிறைவுக்காக சாதகம் செய்பவர்கள் என்று கருத முடியாது. இங்கு கூறியிருப்பது போல அவர்கள் 'பாசாங்கு' செய்கிறார்கள், 'தங்களைத் தாங்களே மருட்சியில் ஆழ்த்திக் கொள்ளுகிறார்கள். சாதாரணமாக ஒருவர் தனது உடல் வேட்கைகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளலாம். மனதின் புலனின்ப நாட்டத்தைக் கட்டுப்படுத்துவது அவ்வளவு சுலபமல்ல. இது நம் எல்லோருக்கும் தெரிந்த உண்மை.

இயற்கையாகத் தம்முள் எழும் உணர்ச்சிகளிலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் முறை சாதாரண மக்களுக்குத் தெரியாது. இது நினைவுக்கு வந்தவுடன் அதற்குரிய வழியை கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு விளக்குகிறார்.

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்—யாரபதேர்ஜுன
கர்மேந்த்ரியை: கர்மயோக—மஸக்த: ஸ விசிஷ்யதே

3:7

ஆனல் யாரொவர் மன உறுதியின் மூலம் புலன்களைக் கட்டுப்படுத்தி செயலுறுப்புக்களை பற்றுதலில்லாமல் கர்ம

யோகத்தில் ஈடுபடுத்துகிருரோ, அவருக்கு இணையானவர் எவருமில்லை.

மிக எளிதாகத் தோன்றும் இந்த இரண்டு வரிகளில் சரியான செயல் முறை விஞ்ஞானம் முழுதும் அடங்கியிருக்கிறது. செலவு, உற்பத்தி, விநியோகம் முதலியவற்றைக் கூறும் பொருளாதாரம் எல்லோருக்கும் தெரியும். ஆனல் சிந்தனைப் பொருளாதார விஞ்ஞானம் பலருக்குத் தெரியாது. சிந்தனைப் பொருளாதாரத்தில் சிறந்த நிபுணர்கள் பண்டைக் காலத்தில் இருந்தார்கள். ஒரு 'ரிஷி—இந்தியாவை' உருவாக்கி, ஆன்மிக கலாச்சாரத்தின் பொற்காலத்திற்கு அவர்கள் வழி காட்டியிருக்கின்றனர்.

உள்ளத்திற்கு உணர்வூட்டி உற்சாகமளிக்கும் வேலையை நமது ஐந்து புலனுறுப்புக்களும் செய்து வருகின்றன. வெளி உலக புலன் பொருள்களினுல் தூண்டப்பட்டு, அவை மனதைப் பேணி வளர்க்கின்றன. இப் பொறிகளின் வழியாக நமது மனம் வெளியே சென்று பொருள்கள்மீது படியும்போது, புலன்கள், அவற்றை உணருகின்றன. புலனுறுப்புக்களுடன் மனம் ஒத்துழைக்காவிட்டால், எதிரில் இருப்பதைக்கூட நமது மனம் அறிந்து கொள்ள முடிவதில்லை. சில சமயங்களில் விருப்பமான ஒரு புத்தகத்தை நாம் ஊன்றிப் படித்துக் கொண்டிருக்கும் போது, அருகிலிருந்து யாராவது அழைத்தால் அது நமக்குத் தெரிவதில்லை. இதை விளக்குவதற்கு நூற்றுக் கணக்கான உதாரணங்களை அடுக்கிக் கொண்டு போகலாம். ஆனல் அது அவசியமில்லை.

புலனுறுப்புக்களை மனதினுல் கட்டுப்படுத்த வேண்டும் என்று இச் செய்யுள் கூறுகிறது. சிறகடித்துப் பறப்பதற்கு தெய்வீக வெளிகள் இருந்தால்தான் மனம் அப்படி பொறிகளைக் கட்டுப்படுத்துவதில் வெற்றி அடைய முடியும். பிடிவாதமாக மனதின் போக்கை கட்டுப்படுத்த முயற்சிப்பது, சுழித்துச் செல்லும் வெள்ளத்திற்கு அணை போடுவதைப் போன்றது. எனவே எப்படிக் கட்டுப்படுத்தினுல் பயனுள்ளதாக இருக்கும் என்று கீதை கூறுகிறது.

புலன்களை மன உறுதியுடன் கட்டுப் படுத்தி விட்டால் மட்டும் போதாது. அதனுல் சரியான வாழ்க்கை உடனே வந்து விடாது. அது வெறுப்பின் எதிர்மறைச் செயலே. புலன் பொருள் ஈட்டுவதில் நமது சக்தியின் பெரும் பகுதி செலவழிந்து விடுகிறது. புலன்களைக் கட்டுப்படுத்தும்போது, இவ்வளவு சக்தியும் வீணுவதைத் தடுத்து அதை சேமித்து வைக்க முடிகிறது. இவ்வாறு சேமித்த சக்தியை உபயோகமான சிறந்த முறையில் பயன்படுத்தவில்லை என்ருல், நீர்ப் பெருக்கு கரை புரண்டு போகும். ஆற்றைப் போல அது கரைகளை உடைத்துக் கொண்டு

நமது மனோலோகத்தை வெள்ளக் காடாக்கிவிடும். நமது உள்ளச் சமநிலை வெள்ளத்தோடு வெள்ளமாகப் போய்விடும். ஆகையால் சேமித்த சக்தியை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று இச் செய்யுளின் இரண்டாவது வரி நமக்குச் சொல்லுகிறது.

ஒரு சாதகர் தமது செயலுறுப்புக்களை அவைகளுக்குத் தகுந்த துறைகளில் ஈடுபடுத்த வேண்டும். அதைக் குறிப்பிடும் போது கிருஷ்ணர் அன்புடன் ஒரு எச்சரிக்கையும் செய்கிறார். ஒவ்வொரு கர்ம யோகியும் தமது பணியை எவ்விதப் பற்றுதலு மின்றி செய்ய வேண்டுமென்று கூறுகிறார்.

நிழற்படமெடுக்கும் காமிரா ஒன்று இருக்கிறது. வெறும் வெள்ளைத் தாளை அதற்குள் வைத்து படமெடுத்தால், அதில் படமே விழாது. படம் பதியும் மருந்து பூசிய வெள்ளைக் காகிதத்தை வைத்து காமிராவை இயக்கினால் ஒரு நொடியில் அது படமெடுத்து விடுகிறது. மனமும், ஒரு வெள்ளைத் தாள் தான். 'பற்றுதல்' என்ற மருந்து பூசி வைத்துக் கொண்டால், வெளியுலக நடவடிக்கைகளில் சட்டென்று அது 'வாசனை'களை பற்றிக் கொள்ளுகிறது. அப்படி புதுப்புது வாசனைகளைத் திரட்டிக் கொள்ளாமல், இப்போதிருக்கும் 'வாசனை'களை மனத்திலிருந்து அகற்றுவதற்குகந்த முறையில் நமது நடவடிக்கைகள் இருக்க வேண்டும் என்பதற்காக பகவான், ''பற்றுதல்களை கைவிட்டு கடமையைச் செய்,'' என்று கூறுகிறார்.

அவர் கூறும் விளக்கம் தர்க்க ரீதியாகவும், விஞ்ஞான பூர்வ மாகவும் இருக்கிறது. எனவே கீதையை ஊன்றிப் படிப்பவர் களுக்கு அவர் கூறுவதில் சந்தேகமோ, அதை ஏற்பதில் தயக்கமோ ஏற்படுவதில்லை.

பயனற்ற வேலைகளிலிருந்து நம் பொறிகளை உள்ளிழுத்துக் கொள்ளுவதன் மூலம் நமது மனோசக்தியை வீணாகாமல் சேமித்து வைக்க முடிகிறது. அதை நாம் தேர்ந்தெடுத்துள்ள பணியில் செலவிடுகிறோம். பணியின் மீதே நாம் கண்ணும் கருத்துமாக இருப்பதால் நமது உள்ளம் பற்றற்று இயங்குகிறது. புதிதாக அழுக்குத் தடங்கள் அங்கு ஏற்படுவதில்லை. மாறாக இப்போதுள்ள வாசனைகள் அகன்று, நமது உள்ளம் துடைத்த கண்ணாடியைப் போல் தூயதாக ஆகிறது. இவ்வுலக நடவடிக்கைகள் நம்மிடமுள்ள ஒப்புயர்வற்ற ஆன்மாவுக்குத் துணைகளாகின்றன. கீதை காட்டும் வழியிலிருந்து பிறழாது நடந்து கொண்டால் அந்த நடிவடிக்கைகளே நமக்கு ஆன்ம விடுதலையளிக்கும் சாதனங்களாக மாறுகின்றன. எனவே,

நியதம் குரு கர்மத்வம் கர்ம ஜ்யாயோஹ்யகர்மண:
சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்யேத கர்மண: 3:8

உனக்கு நிர்ணயிக்கப்பட்ட கடமையைச் செய். ஏனெனில் செயல் புரியாமையைவிட செயல் புரிதலே சிறந்தது. எவ்வித வேலையும் செய்யாதிருப்பவன் தனது உடலைக்கூட சரியாக வைத்துக் கொள்ள முடியாது.

நிர்ணயிக்கப்பட்ட கடமை (நியதம் கர்ம) என்ற சொற் தொடரை சரியாகப்புரிந்து கொள்ள வேண்டும். வீட்டிலும், அலுவலகத்திலும், சமூகத்திலும் நாம் அன்றாட வாழ்வில் செய்து தீர வேண்டிய கடமைகளை உள்ளிட்ட பொறுப்புக்களை அது குறிக்கிறது. வீட்டிலும் வெளியிலும் நமது கடமைகளை ஊக்கமாகச் செய்யாதிருப்பது செயல்புரியாமை. எவ்வித வேலையும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருக்கும் சோம்பேறிக்கு உடல்நிலை ஆரோக்கியமாக இருக்காது என்ற எச்சரிக்கையும் இதனுடன் இணைந்திருக்கிறது. பணி புரியாமையினால் நாட்டுக்கும் வீட்டுக்கும் பல வகை இன்னல்கள் ஏற்படுகின்றன. ஒரு சோம்பேறி தன் சோம்பேறித்தனத்திற்கே இரையாகிறான். அவனுடைய உடலும் மனமும் பலவீனம் அடைகின்றன.

எல்லாச் செயல்களுமே நமக்குத் தளைகளாகின்றன என்று கருதி அதில் ஈடுபாடு இல்லாமல் இருப்பதும் தவறு. ஏனென்றால்,

யஜ்ஞார்த்தாத் கர்மணோன்யத்ர லோகோயம் கர்மபந்தன:
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர 3:9

வேள்விக்காகச் செய்யும் பணியைத் தவிர மற்றவை வாழ்க்கைக்குத் தளைகளாகின்றன. ஆகையால் குந்தியின் மைந்தனே அதற்காக (வேள்விக்காக) மட்டும், பற்றுதலைத் துறந்து பணி புரிந்திடு.

ஒருவர் செய்யும் எல்லா வகை வேலைகளும் அவருக்குத் தளைகளாவதில்லை. அறிவற்ற செயல்களே 'வாசனை'த் தடங்களாக மனதில் பதிகின்றன. நாளடைவில் இவை நமது அகந்தை மையத்திற்கும், நம்முள் ஒளிரும் தெய்வீகச் சுடருக்கும் இடையில் சுவர் எழுப்பி விடுகின்றன. அகந்தையிலிருந்து எழும் கோரிக்கைகளின் விளைவாக, நமது வேலைகள் இச் சுவரின் கனத்தை அதிகரித்து, நம்முள் இருக்கும் இறைப் பேரொளி சிறிதளவு 'கூட நமது உயிரியக்கத்தின் மீது படாதவாறு செய்கின்றன. வேள்வி நடவடிக்கைகளைத் தவிர மற்ற எல்லா வேலைகளும் நம்மை வாசனைத் தளைகளில் சிக்க வைக்கின்றன. என்றும், நமது இலட்சிய வளர்ச்சிக்கு அது தடையாகிறது என்றும் இச் செய்யுளுக்கு பொருள் கூறுவது மரபு.

'யக்ஞம்' என்ற சொல் இங்கு உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. வேள்வி உணர்ச்சியுடன் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு

எல்லோருடைய நன்மைக்காகவும் செய்கிற பணியே யக்ஞம். அவ்வாறு செய்யும் வேலை ஒருவரைத் தாழ்வு படுத்தாது. விடுதலைக்கு வழி தேடிக் கொடுக்கும். சமூகம், சமுதாயம், தேசம், தனி நபர்கள் ஆகியோருக்கு நன்மை செய்யும் முறையில் சுய அர்ப்பண உணர்ச்சியுடன் முழுமூச்சாக சேவை செய்தலே 'யக்ஞம்' (வேள்வி). இவ்வாறு பொருள் கொண்டு இனி கீதையைப் படித்தால், அச் சொல்லுக்கு உண்மையான பொருள் தெரிவதுடன், உலகத்திற்கே பொருந்தும் முறையில் கீதை எழுதப்பட்டிருக்கிறது என்றும் தெரிந்து கொள்ளலாம்.

எல்லோரும் ஒன்றுகூடி ஒத்துழைத்து சுயார்ப்பணமாகப் பணிபுரிய முன்வந்தால், நமது சமுதாயம் துன்பம், ஏழ்மை போன்ற கொடிய தளைகளிலிருந்து விடுதலை பெற முடியும். வரலாறு காட்டும் உண்மை இது. பற்றுதலின்றி சேவை செய்யும் போதுதான், ஒருவருக்கு தெய்வீக ஆர்வம் பிறக்கிறது. கௌரவர் பக்கமிருந்த சிலரிடம் அர்ஜுனன் தனிப்பட்ட முறையில் பற்று கொண்டிருந்தான். இதுவே அவனிடமிருந்த குறைபாடு. அதன் காரணமாக அவர்களுடன் தவறான உறவை அவன் வளர்த்துக் கொண்டிருந்தான். பொறுப்பைத் தட்டிக் கழித்துக் கொண்டு, போர் அரங்கத்திலிருந்து ஓடிவிட வேண்டும் என்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டிருந்ததற்குக் காரணம் அதுதான்.

தனக்கென்று ஏற்பட்ட வேலையை, தட்டிக் கழிக்காமல் செய்ய வேண்டுமென்பதற்கு மேலும் சில காரணங்கள் கீழே கொடுக்கப்பட்டுளன.

ஸ்ஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா
புரோவாச ப்ரஜாபதி:

அனேன ப்ரஸ விஷ்யத்வ
மேஷவோ ஸ்த்விஷ்ட—காமதுக் 3:10

முதன் முதலில் மனித இனத்துடன் வேள்வியையும் படைத்த பிராஜாபதி (படைப்புக்கு அதிபதி) ''இதனுல் வளர்ந்து சுபிட்ச வாழ்வு பெறுவீர்களாக. உங்களுடைய கோரிக்கைகளைத் தீர்க்கும் 'காமதுக்'—பசுவாக—இது இருக்கும்,'' என்றும் கூறினர்.

காமதேனு அல்லது காமதுக் என்பது விரும்பியதை எல்லாம் கொடுக்கும். தெய்வீகப் பசு. அதைப் பற்றி இந்தியப் புராணங்களில் பல விவரங்களும் கதைகளும் அடங்கியிருக்கின்றன.

பிரஜாபதி (எல்லா உள்ளங்களையும் உள்ளிட்ட மொத்த மனம்) ஐந்து மூலப் பொருள்களைக் கொண்டு இப் பிரபஞ்சத்தைப் படைத்தான். இப் பணியரங்கத்தில் எல்லா உயிரினங்களையும் தோற்றுவித்தார். அத்துடன் வேள்வியையும்

(யக்ஞம்) படைத்தான். அதாவது சுயார்ப்பணமாக இயங்கும் தன்மையையும் உண்டாக்கினன். இந்த யக்ஞ இயக்கத்தை எங்கும் பார்க்கலாம். சூரியன் ஒளி வீசித் திகழுகிறுன். நிலா உதித்து மறைகிறது. ஆழாழி கரையின்றி அலை பாய்ந்து நிற்கிறது. பூமி நம்மைத் தாங்குகிறது. வேள்வியின் தெய்வீக உணர்வும், தாயின் பேரன்பு போன்ற சுய அர்ப்பணமும் கொண்டு பற்றுதல் கடுகளவுமின்றி, ''மற்றவர்களுக்கு உதவுவதற்காக ஏதோ பெரிய காரியம் செய்கிறோம்,'' என்ற எண்ணம் எதுவுமின்றி, அவை தங்கள் தங்களுடைய வேலைகளைச் செய்து வருகின்றன.

இயற்கை நிகழ்ச்சிகளும், பிரபஞ்ச சக்திகளும் எல்லோரும் நலம் பெற வேண்டுமென்ற பிரதிப்பயனை எதிர்பாராது இயங்கி வருகின்றன. உலகில் உயிரினங்கள் தோன்று முன்பே, இவ்வுலகி லுள்ள மூல சக்திகள் தங்களுடைய புனித சுயார்ப்பணப் பணி களின் மூலம் உயிரியகத்தின் களத்தைப் படைத்து விட்டன. பிறகு பல் வேறு மட்டங்களிலும் உயிரினங்கள் தோன்றின. அவற்றின் வாழ்வும் கூட யக்ஞ பூர்வமான இயக்க இசைவினுல் வளர்ந்து வளம் பெற்றது.

கீதை இதைக் கவிதை உணர்ச்சி தோன்ற சித்திரிக்கிறது. சேவை உள்ளமும், தியாக மனப்பான்மையும் கலந்த வேள்வி யுடன் சேர்ந்தே உலகையும் பிரஜாபதி படைத்தார். என்று கூறு கிறது. 'தியாக உணர்வினுல் நீங்கள், ஒன்றுக்குப் பத்தாகப் பெருகுவீர்கள். இந்தத் தியாக உணர்வே உங்கள் கோரிக்கை களைத் தீர்க்கும் பசுவாக இருக்கும்.' என்றும் பொருள்படுமாறு பிரஜாபதியின் வார்த்தைகள் அமைந்திருக்கின்றன. காமதேனு (காமதுக்) என்பது வசிஷ்டமாமுனிவருடைய தெய்வீகப் பசு என்றும் கோரியவற்றை எல்லாம் பால் சுரந்து கொடுப்பது போல இனிமையுடன் அது கொடுத்து வந்தது. என்றும் நமது புராணங் கள் கூறுகின்றன. அப்படிக் கூறுவதன் பொருள் எல்லோரும் சுயநல நோக்கின்றி ஒத்துழைத்து வேலை செய்தால் மனிதனுல் முடியாதது எதுவுமில்லை. என்ற கருத்தை 'காமதேனு' என்ற சொல் நமக்கு உணர்த்துகிறது. அப்படிப் பணிபுரியும்போது தியாக பண்பும் பற்றுதலின்மையும் நம்மிடம் இருக்க வேண்டும்.

வேள்வியிலிருந்து இவை எவ்வாறு வரும்?

தேவான் பாவயதானேன
தே தேவா பாவயந்து வ:
பரஸ்பரம் பாவயந்த:
ச்ரேய: பரம வாப்ஸ்யத 3:11

இதன் மூலம் நீங்கள் தேவர்களை பேணுவீர்களாக; தேவர்கள் உங்களைப் பேணி செழிப்புறச் செய்வார்களாக.

இவ்வாறு ஒருவருக்கொருவர் அளிக்கும் வலுவினுல் நீங்கள் இருவருமே உயர்ந்து நன்னிலே பெறுவீர்களாக.

எங்கும் பரந்து நாம் காணும் உலகத்தில் இடையருது இயங்கி வருகிற பிரபஞ்ச சக்தியை ''தேவர்கள்'' என்று வேதங்கள் கூறுகின்றன. அந்த சக்தியின் பல்வேறு வேலேகளேப் பொறுத்து அதற்கு வெவ்வேறு பெயர்கள் இப்படியிருக்கின்றன.

வேதங்களில் வரும் தேவர்களுக்கு கொடுக்கப்படும் பெயர்கள் எல்லாமே அம்மகோன்னதப் படைப்பு சக்திகள் செய்யும் வேலேயை பொறுத்து அளிக்கப்பட்டிருப்பவைதான்.

இச்செய்யுளில் உள்ள கருத்து உலகெல்லாம் ஏற்கக் கூடியது. 'தேவர்' என்ற சொல்லே சரியாகப் புரிந்து கொண்டால் அதை எல்லோரும் ஏற்றுக் கொள்வார்கள். ஒரு துறையில் மேற் கொள்ளும் 'நடவடிக்கையின் தலேயாய தெய்வம்' என்று அச் சொல்லுக்குப் பொருள் கொள்ளவேண்டும். வேலே செய் பவருக்கு பயனளித்து அருளும் தெய்வம் அது. அவ்வாறு பய னளிக்கும் தெய்வம் அந்தத் துறையின் உற்பத்தி சக்தியாகத்தான் இருக்க முடியும். அந்த சக்தி நமது வேலேயினுல் வெளியாகி, நமக்குப் பயனளிக்கிறது. நமது நாட்டைக் குறிப்பிடும்போது 'இந்தியத் தாய்' என்று இப்போது கூறுகிறேம் அல்லவா? இதே பொருளில்தான் ஒரு 'துறையின் தெய்வம்' என்றும் குறிப் பிடுகிறேம். ஒரு நாட்டின் சக்தியை, குறியீடாக, 'தாய்' என்று சொல்லுவது அதன் உற்பத்தி சக்தியைக் குறிப்பிடுவதைத் தவிர வேறு என்ன?

எந்தத் துறையிலும் ஒருவர் மனப்பூர்வமாக ஈடுபட்டு உழைத்தால்தான் அதிலிருந்து கிடைக்கக்கூடிய முழுப் பலனும் கிடைக்கும். நாம் வேலே செய்து பெற்ருலொழிய வெளியாகாமல் அது உறங்கிக் கிடக்கும். உற்பத்தி சக்தியையே ''தேவன்'' என்று வேதங்கள் சொல்லுகின்றன. யக்ஞ நடவடிக்கைகளின் மூலமாக அதை நாம் தட்டி எழுப்ப வேண்டும். நமது உழைப்பி ஞல் அத்துறையின் ''தேவன்'' வலுப்பெற்று எழுந்து நம்மை செழிப்புறச் செய்கிருர். இப்படியாக ஒருவரையொருவர் வளர்த்து வலுவூட்டும் முறையில் எல்லோரும் நடந்துகொண் டால் மனித இனம் முழுவதும் உயர்ந்த நிலே அடையும் என்ற கருத்தில் பிரஜாபதி கூறுகிருர். கிருஷ்ணர் இச்செய்யுளில் கூறும் கருத்தும் அதுவே.

இதை ''சேவாவிதி'' என்று கூறலாம். பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் படைப்பினங்களும் தங்களேயுமறியாமலே இதைப் பின்பற்றி வருகின்றன. மனிதன் ஒருவனுக்குத்தான் விருப்பம் போல் நடந்துகொள்ளும் சுதந்திரம் அளிக்கப்பட்டிருக்கிறது. பிரபஞ்ச வேள்வி விதிகளே ஒருவர் மீறினுல், அப்படி மீறும்

அளவுக்கு அவர் துன்பம் அனுபவிக்க வேண்டியதாகிறது. ஏனெனில் இசைவு நிறைந்த உலகச் சூழ்நிலையை, அவருடைய அகந்தையிலிருந்து எழும் விதி மறுப்புச் செயல்கள் கெடுத்து, அமைதியைப் போக்கி விடுகின்றன. மேலும்,

இஷ்டான் போகான் ஹி வோ தேவா
 தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா:
தைர்—தத்தா—னப்ரதாயைப்யோ
 யோ புங்க்தே ஸ்தேன ஏவஸ: *3:12*

தேவர்கள் (உன்னால்) போஷிக்கப்பட்டு நீ கோரும் பொருள்களை அளிப்பார்கள். தேவர்களுக்கு எதுவும் (கைம் மாறாக) கொடுக்காமல், அவர்கள் கொடுக்கும் பொருள்களை அனுபவித்து மகிழ்பவன் ஒரு திருடன்.

மாற்ற முடியாத உறுதி பெற்ற சம்பிரதாயச் சடங்கு விதிகளைப் பற்றி கிருஷ்ணர் இங்கு விளக்கி வைக்கிறார். வேள்வியினால் பேணி போஷிக்கப்பட்ட தேவர்கள் நாம் கோரும் பொருளைத் தருகிறார்கள் என்பது மரபு வழி வந்த விதி. 'தேவர்' ''யக்ஞம்'' என்ற சொற்களுக்கு ஏற்கனவே நாம் கூறியுள்ள பொருளை மனதிற் கொண்டு மீண்டுமொரு முறை இதைப் படித்தால், ''சுயார்ப்பணமாகவும், தியாக உணர்வுடனும் செய்யப்படும் பணியினால் (யகஞத்தினால்) உற்பத்தி சக்தி (தேவர்) பலம் பெற்று, அவ்வாறு பணி செய்வோர் கோரிய பொருளை அளிக்கிறது என்ற அர்த்தம் தானாகவே வருகிறது. வாழ்க்கையின் நடைமுறை விதி வேத மொழியில் செய்யுளில் கண்டவாறு பொதிக்கப்பட்டிருக்கிறது.

தியாக உணர்ச்சியுடன் நாம் உழைத்துப் பெறும் லாபத்தை பங்கிட்டுக் கொண்டு அனுபவிக்க நம் எல்லோருக்கும் உரிமையுண்டு. ஆனால் வேலையில் எவ்வித பங்கும் ஏற்காமல் மற்றவர் வேலையிலிருந்து வரும் பயனை அனுபவிக்க நினைக்கக்கூடாது. முதலாளித்துவ சமூக அமைப்பில் இத்தவறு நடப்பதை நாம் பார்க்கிறோம். லட்சக்கணக்கான தொழிலாளருடைய உழைப்பினால் வரும் லாபம் ஒருசில முதலாளிகளுடைய சொந்த சொத்தாகி விடுகிறது. இதனால் சமூகத்தின் எல்லாத் துறைகளிலும் பொருத்தமில்லா உறவுகள் தோன்றி, தேசீய, சர்வ தேசீய குழப்பங்கள் கூட உண்டாகின்றன. இவ்வளவும் வாழ்க்கையிலுள்ள 'இசை'யைக் கலைப்பதால் ஏற்படும் சிக்கல்கள்''. உற்பத்தி செய்யாமல், நுகர்வில் மட்டும் பங்கு கொள்பவன் தனது நாட்டுக்கே நஷ்டம் ஏற்படுத்துகிறான்'' என்று இன்றைய பொருளாதாரம் கூறுகிறது. இதை நினைவு வைத்துக்கொண்டு செய்யுளைப் படித்தால், இரண்டாவது வரியில் கூறப்பட்டிருப்பதும் அதுவேதான் என்று தெரிய வரும்.

தேவர்கள் கொடுக்கும் பொருள்களை அனுபவித்துக் கொண்டு அதாவது, உற்பத்தி சக்தியை மட்டும் பயன்படுத்திக் கொண்டு 'யக்ஞ' வேலைக்கு எதுவும் செய்யாமலிருப்பவரை சமூகத் திருடன் என்று கிருஷ்ணர் சொல்லுகிறார்.

இங்கு உபயோகிக்கப்பட்டிருக்கும் 'திருடன்' என்ற சொல் மிகக் கடுமையாகத் தோன்றலாம். ஆனால் உழைக்காமல் உட்கொள்ள நினைக்கும் ஒருவரைப் பற்றி மகாபாரத காலத்தில் எவ்வளவு கீழ்த்தரமாக ஒழுக்கக் கேடுள்ளவராக நினைத்தார்கள் என்பது அதிலிருந்து தெரிகிறது.

ஆனால் அதற்கு மாறாக;

யஜ்ஞசிஷ்டாசின: ஸந்தோ
முச்யந்தே ஸர்வ கில்பிஷை:
புஞ்ஜதே தே த்வகம் பாபா
யே பசந்த்—யாத்மக காரணாத் 3:13

வேள்விகளில் எஞ்சியவற்றை உண்ணும், நல்லோர் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறார்கள். ஆனால் தங்களுக்காக (மட்டுமே) உணவு தேடிக்கொள்ளும் பாவச் செயல் செய்வோர் பாவத்தையே உட்கொள்ளுகிறார்கள்.

சமூகச் செலவு உற்பத்தி முறையில் பங்கேற்காமல், செல்வத்தைப் பகிர்ந்து கொள்வதற்கு மட்டும் முன் வரும் சமூகக் குற்றவாளிகளை முந்திய செய்யுள் சாடியது. ஆனால் 'வேள்வி' வேலைகளில் அரும்பாடுபட்டு உழைத்து; பயனில் தங்களுடைய பங்கை மட்டும் எடுத்துக்கொள்ளும் நல்லவர்களைப்பற்றி இப்போது பேசப்படுகிறது. அவர்கள் எல்லாப் பாவங்களுக்கும் அப்பாற்பட்டவர்கள் என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

கடந்த காலத்தில் செய்த பாவங்களின் விளைவாக ஒருவர் இப்போது துன்பம் அனுபவிக்கிறார். இப்போது செய்யும் பாவங்கள் எதிர்காலத்தில் துன்பம் விளைவிக்கும். ஆனால் ஒரு சமுதாயத்தில் உள்ள எல்லோரும் நல்லவர்களாகவும், சமூக உணர்வு பெறுபவர்களாகவும், உண்மையான 'யக்ஞ' நோக்குடன் கூட்டாக ஒத்துழைத்து வேலை செய்து அதில் 'எஞ்சியதை' அனுபவிப்பதுடன் திருப்தி அடைபவர்களாகவும் இருந்தால், அந்த சமுதாயத்தில் துயரத்திற்கான காரணங்கள் யாவும் அகற்றப்பட்டு விடுகின்றன.

இது ஒரு புறமிருக்க, தங்களுக்காக மட்டும் உணவு தேடிக் கொள்ளுகிறவர்கள் 'பாவத்தையே உண்ணுகிறார்கள்' என்றும் கூறப்படுகிறது. தனியார் சொத்துரிமையை கிருஷ்ணர் இங்கு முழு மூச்சாக எதிர்ப்பதைப் போலத் தோன்றுகிறது. ஆனால் அது கம்யூனிஸ்டுகள் கூறும் பொருளில் அல்ல. சமூகத்திலுள்ள ஏழை

எளியோரின் துன்பங்களையும் ஏழ்மையையும் அறவே புறக் கணித்து, பண ஆசை பிடித்து தன்னலத்திற்காக செல்வம் திரட்டிக் குவிப்பது, சொத்து சேமிப்பது ஆகியவற்றை கிருஷ்ணர் எதிர்க்கிறார். அப்படிப்பட்ட சுயநலமிகள் ''பாவத்தையே உட் கொள்ளுகிறார்கள்'' என்று சொல்லுவது அவருடைய எதிர்ப்பை தெளிவாகக் காட்டுகிறது அல்லவா?

வேலைத் தகுதி பெற்றவர்கள் அந்தந்த வேலைகளைச் செய்து வர வேண்டும் என்று சொல்லுவதற்கு மேலும் சில காரணங்கள் உண்டு. பிரபஞ்ச சக்கரம் வேலையினால்தான் சுழலுகிறது. அது எப்படி?

அன்னாத்—பவந்தி பூதானி
பர்ஜன்யா—தன்னஸம்பவ:
யஜ்ஞாத் பவதி பர்ஜன்யோ
யஜ்ஞ: கர்மஸமுத்பவ: 3:14

உணவிலிருந்து உயிரினங்கள் வருகின்றன, மழையிலிருந்து உணவு விளைகிறது. வேள்வியினால் மழை பெய்கிறது. சிறப்புயர் வேள்வி, செயலாக்கத்திலிருந்து வருகிறது.

கர்ம ப்ரஹமோத்பவம் வித்தி
ப்ரஹமாக்ஷரஸமுத்பவம்
தஸ்மாத் ஸர்வகதம் ப்ருஹ்ம
நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்ட்டிதம் 3:15

பிரம்மாவிடமிருந்து செயலாக்கம் வருகிறது. அழிவிலா இறைப் பொருளிடமிருந்து தோன்றியவர் அவர். எனவே எங்கும் விரவியுள்ள பிரம்மன் (இறைப் பொருள்) வேள்வியை எப்போதும் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது.

ஒத்துழைத்துப் பணி புரிவதால் பிரபஞ்ச சக்கரம் சுழன்று கொண்டிருப்பது, வேதக் கவிதையின் அழகுடன் இங்கு திகழ் கிறது. உணவிலிருந்து உயிரினங்கள் தோன்றுகின்றன. உணவு அருந்தி அவை வளருகின்றன. உலகிலுள்ள தனிப் பொருள்களை உடல் செரிக்கும் உணவாக மாற்றுவது மழைதான். அது சைவ உணவாக இருந்தாலும் சரி, அசைவ உணவாக இருந்தாலும் சரி. மழை இல்லையென்றால் காய்கறிகளோ, புல்லோ இருக்காது. மேய்வதற்குப் புல் இல்லை என்றால், கால்நடைகள் பிழைக்க இட மில்லை. மழைதான் இவற்றிற்கு எல்லாம் காரணம். 'வேள்வியின் விளைவாக மழை பொழிகிறது. மனிதன் செயல் புரிவதால் வேள்விகள் நடக்கின்றன.'

ஆழ்ந்து சிந்தித்தாலொழிய இச்செய்யுளின் கருத்து சற்று, வேடிக்கையாகத் தோன்றலாம். ஜடப் பொருள்களிலிருந்து உயி

ரினங்கள் தோன்றுவது பற்றி, படித்தவர்களுக்குத் தெரியும். அப் பொருள்கள் உட்கொள்ளக்கூடியதாகவும், செரித்து உடலை வளர்க்கக்கூடியதாகவும் ஆகின்றன என்ருல் அதற்கு மழையே காரணம் என்பது விளங்குகிறது. ஆனுல் வேள்வியின் விளை வாகவா மழை பெய்கிறது என்று இன்றையக் கல்வி பயின்றவர்கள் கேட்கலாம்.

சடங்கு முறைகளை அர்ஜுனன் பின்பற்ற வேண்டும் என் பதற்காக கிருஷ்ணர் இப்போது பேசவில்லை. பொதுவாக கீதை யில் எல்லா இடங்களிலும் செய்திருப்பது போலவே இங்கும் கூட வேத காலச் சொற்களுக்கு புதிய பொருள் தோன்றும் வகையில் கையாளப்பட்டிருக்கின்றன. மூலப் பொருள்கள் நல்ல உண வாகவும், உடலுக்கு வலிமை அளிப்பவையாகவும் ஆவதற்கு மழை உதவுகிறது. எந்தத் துறையையும் பயன்படுத்தி லாபகர மான நிலைக்குக் கொண்டு வந்தால்தான், அதிலிருந்து கிடைக்கும் விளைச்சலை அறுவடை செய்யலாம்; இதற்கு 'சுயார்ப்பணமாகச் செய்யும் செயல்' (வேள்வி) அவசியம். அப்படி கண்ணும் கருத்து மாக வேலை செய்தால் 'இன்பப் பயன் கிடைக்கும் நிலை' (மழை) தோன்றி 'லாபப் பயிர்' (உணவு) விளைந்து, சமூகம் முழுவதுமே சுபிட்சம் நிலவும். இந்தப் பொருளில்தான் 'வேள்வியின் விளை வாக மழை வருகிறது' என்று இங்கு கூறப்படுகிறது.

ஆற்றில் ஓடி வீணுகிக் கொண்டிருக்கும் தண்ணீரை அணை போட்டுத் தடுத்து, தரிசு நிலங்களைப் பயிரிட உபயோகித்துக் கொள்ளலாம். மற்றவர் நலம் பெற நற்பணி புரிகிருேமென சுயநலமற்ற உணர்ச்சியும், கடுமையான உழைப்பும் அணை கட்டுவதற்குத் தேவை. அதைக் கட்டி முடித்த பிறகு ''பயிரிடு வதற்கான பயன் கிட்டும் நிலை'' தோன்றுகிறது. நீர் பாய்ச்சிய பிறகு கூட நிலத்தை உழுது, அதில் விதைத்து, களையெடுத்து, கதிர் முற்றுகிற வரை பாதுகாத்து—இவ்வளவும் செய்தால்தான் வேலை செய்ததன் பயனுகிய உணவு தானியங்களை அறுவடை செய்ய முடிகிறது.

செயல் சக்கரம் (அத். 3—செய். 15) இறைத் தொடர் புள்ளது. அது இறைவன் உள்ளிட்டது என்ற கருத்து இங்கு பொதிந்திருக்கிறது. சரியான செயல் என்ற கொள்கையும் வேலை செய்யும் சக்தியும்கூட, படைப்பின் அதிபதியாகிய பிரம்மாவிட மிருந்து தோன்றியவை. பிரம்மாவும் அழிவிலா இறைவனும் வெவ்வேருனவர்கள் அல்ல. புதிதாகப் பிறக்கும் குழந்தையிடம் கூட செயலியக்கம் இருக்கிறது. அது படைப்புக் கதிபதியின் அன் பளிப்பு. எனவே நாம் செய்யும் ஒவ்வொரு செயலிலும், எங்கும் பரந்துள்ள இறைவன் குடி கொண்டிருக்கிருர். அவ்வேலையை ஒருவரோ அல்லது பலர் கூட்டாகச் சேர்ந்தோ செய்யலாம். ஆனுல் அது சுயார்ப் பணமாக, எல்லோருடைய நலங் கருதியும்

செய்யும் வேலையாக இருக்கவேண்டும்.

இவ்வாறு செயல் சுதந்திர சுழலுக்கு ஒத்த வகையில் பணி புரிந்து வருபவன், வாழ்வில் இசைவு தோன்றுவதற்குத் தொண்டு செய்தவனாகிறான். அவ்வாறு செய்யாவிட்டால்?

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம்
நானுவர்த்தயதீஹய:
அகாயு: ரிந்த்ரியாராமோ
மோகம் பார்த்தஸ ஜீவதி 3:16

இவ்வாறு சுழலும் சக்கரத்தைப் பின்பற்றி நடந்து கொள்ளாதவன், பாவ வாழ்க்கை நடத்துகிறான். புலனின்ப நாட்டங்களினால் அவனுடைய வாழ்வு பாழாகிறது, பார்த்தா.

தாவரங்களும், விலங்குகளும் உன் உலகத்திலுள்ள எல்லா உயிரினங்களும் வேள்விக் கொள்கையை, தம்மையறியாமலே கடைப்பிடித்து வருகின்றன. பிரபஞ்ச செயலின் சக்கரம் தங்கு தடையின்றி சுழன்று கொண்டே இருப்பதற்கு அவை தங்களுடைய பங்கைச் செய்து வருகின்றன. ஆனால் சிந்தித்துச் செயல்படும் சுதந்திரம் மனிதனுக்கு மட்டுமே இருக்கிறது. சக்கரச் சுழலுக்கு இசைவாக அவன் நடந்துகொள்ள முடியும். அதற்கு இடைஞ்சல் செய்யவும் முடியும். இப் பிரபஞ்ச இயக்கத்திற்கு இசைவாக ஒரு தலைமுறையிலுள்ள பெரும்பான்மை மக்கள் நடந்துகொள்ளும் அளவுக்கு அவர்களுடைய சமூக வலிமை பெருகி செழிப்புற்று வாழ்கிறார்கள். அதைப் போல இருந்த கால கட்டங்களை சமூக, கலாச்சார வாழ்வின் பொற் காலங்கள் என்று நாம் சொல்லுகிறோம்.

ஆனால் எல்லோரும், எல்லாக் காலங்களிலும் கொஞ்சமும் பிறழாமல் அவ்விதியை ஒட்டி நடந்துகொள்ள முடிவதில்லை. வரலாற்றின் சில கட்டங்களில் மனிதன், தான் சமூகத்தின் ஒரு பகுதியாக இருந்த போதிலும், மாற்ற முடியாத அவ்விதியின் இயக்கத்திற்கு மாறாகச் செயல்படுகிறான். அப்போதெல்லாம் வாழ்க்கையில் அமைதி குலைந்து ஆக்கபூர்வமான வளர்ச்சி குன்றி விடுகின்றது. துயரம் மிகுந்து மனிதன் கண்ணீரும், கம்பலையுமாக நிற்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. நாட்டில் குழப்பம், போர், பஞ்சம் முதலியவை தாண்டவமாடுகின்றன. அவற்றை நாம் வரலாறில் இருள் சூழ்ந்த காலங்களாக கருதுகிறோம்.

நல்ல மகிழ்ச்சிமிக்க நாட்கள் மறைந்து குழப்பமிக்க இருண்ட காலங்கள் ஏன் வருகின்றன என்ற பிரச்னை எழுவது இயற்கையே. அதற்கு கீதை இச்செய்யுளில் பதிலளிக்கிறது.

மனிதர்கள் ஒன்று சேர்ந்து வாழ்வது சமுதாயம். ஒரு சமுதாயத்தின் சாதனைகளை நாம் எவ்வளவுதான் போற்றிப் புகழ்ந்

தாலும் அதில் தனி நபர்களின் பங்கை அறவே புறக்கணித்து விட முடியாது. ஒவ்வொரு மனிதனும் அப்பழுக்கற்ற முறையில் நடந்து கொண்டால் அச்சமூகம் வளம் பெற்று உயர்கிறது. ஆனால் பெரும்பாலானவர்கள் நெறி தவறி நடந்து கொள்பவர்களாக இருந்தால், அச்சமூகம் வலுவிழந்து, வளர்ச்சி குன்றி நலிவுறுகிறது. ஒருவனுடைய சரிவும், வீழ்ச்சியும் அவனுடைய புலனின்ப நாட்டத்தில் தொடங்குகிறது. தன்னை வெறும் உடலாகக் கருதி வாழ்க்கை நடத்தும்வரை, உடலைக் கொழுக்க வைப்பதற்கும் புலனின்பத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்குமே. ஒருவனுக்கு பொழுது சரியாக இருக்கிறது. அவனுக்கு உயர்நிலை வாழ்க்கை ஒன்று இருக்கிறதென்று கூடத் தெரிவதில்லை. மிருக உணர்ச்சிகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதை விட உயர்ந்த இலட்சியம் அவனுக்கு இல்லை. பெரும்பாலான மக்கள் இப்படி இருக்கும் காலங்களில், வேள்வியுணர்வின் மாண்புடன் யாரும் பணிபுரிவதில்லை. உற்பத்தி சக்திகள் (தேவர்கள்) நம்மை உயர்த்தும் இன்ப சக்திகளாக உருவாவதற்குச் சாதகமான நிலை (மழை) தோன்றுவதில்லை. புலனின்பத்தில் மனதை பறி கொடுத்தவர்கள் (இந்திரியாராம:) சுய நலமும், பேராசையும் பிடித்து, தங்களுடைய வேட்கைகளை நிறைவேற்றிக் கொள்வதில் வாழ்க்கையைக் கழித்து விடுகிறவர்கள். கர்ம சக்கரச் சுழலுக்கு இடையூறு செய்பவர்கள் இவர்களே. அவ்வாறுள்ளவர்களை பாவத்தில் வாழ்பவர்கள் என்று கீதை கூறுகிறது. அவர்களுடைய வாழ்வு, பாழடைந்த வாழ்வு என்று அழுத்தந்திருத்தமாகச் சொல்லுகிறது.

செயற் சக்கரச் சுழலுக்கு இசைந்தவாறு எல்லோருமே நடந்து கொள்ள வேண்டுமா அல்லது அறிவுப் பாதையில் இன்னும் உறுதி பெறுதவர்கள் மட்டும் பின்பற்றினுல் போதுமா? இந்தக் கேள்வியை அர்ஜுனன் கேட்கா விட்டாலும் அவனுக்கு இந்த சந்தேகம் உண்டாகலாம். அதற்கு இடமளிக்கா வண்ணம் பகவான் தாமாகவே அதற்கு பதிலளித்து விடுகிறுர்.

யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத்
ஆத்மத்ருப்தஸ்ச மானவ:
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்
தஸ்ய கார்யம் ந வித்யதே 3:17

ஆனுல் ஆன்ம உணர்வில் திளைத்து, ஆன்ம பேரின்பத்துடன் திருப்தி அடைந்து, ஆன்ம நிலையில் மனநிறைவு பெறுபவனுக்கு செய்ய வேண்டியது என்று தனியாக எதுவுமில்லை.

இறை நாட்டம் கொண்ட எல்லோருக்குமே பொதுவாக இந்த செயல் வட்டம் (கர்ம சக்கரம்) பொருந்தும். வேள்வி உணர்வுடன் எல்லா வேலைகளையும் செய்வதன் மூலமாக அவர்

களுடைய ஆளுமை ஒருமைப்பாடு பெறுகிறது. அவர்கள் தியான வாழ்வை மேற்கொள்ளத் தகுந்தவர்களாகிறார்கள். சுயநலமற்ற பணியினால் ஒருவருடைய உள்ளச் சமநிலை உறுதி பெறுகிறது. அவர் ஒரே குறியாக இலட்சிய தியானத்தில் அமரும்போது, சுய அகந்தைக்கு அப்பாற்பட்டு நிற்கும் ஆன்மானுபவம் கிட்டுகிறது. வேள்வியாக அமையும் செயல் இவ்வாறு ஒருவர் தம்மைத் தாமே தூய்மைப்படுத்திக் கொள்ளும் முயற்சியாகிறது. முழுமை பெற்ற ஆன்மப் பேரின்பத்தில் திளைக்கும் ஒருவருக்கு தம்மை மேலும் தூய்மைப்படுத்திக் கொள்ளுதல் என்ற பிரச்னையே இல்லை. இறையுணர்வு பெறுவதுடன் அவர் செய்ய வேண்டிய வேலைகள் எல்லாமே முடிவடைந்து விடுகின்றன.

உள்ள நிறைவும், திருப்தியுமே நமது வேலைகளுக்குப் பெரும் பாலும் காரணமாக இருக்கின்றன. அவை இரண்டும் இரதத்தின் இரு சக்கரங்களைப் போன்றவை. இன்னும் அதிகத் திருப்தி பெறவேண்டும். மனநிறைவு வேண்டும் என்ற நோக்கங் களே நம்மை மேன்மேலும் செயலில் ஈடுபடத் தூண்டுகின்றன. செல்வம் சம்பாதிக்கப் பாடுபடுவது, அதைக் குவித்து வைத்து விருப்பமானவற்றில் செலவழிப்பது முதலிய நடவடிக்கைகள் எல்லாம் அவற்றிலிருந்து எழுபவை. ஆனால் தம்மை உடலாக நினைத்துச் செயல்படும் நிலையிலிருந்து ஒருவர் உயர்ந்துவிட்டால், பிறகு அவர் எல்லையற்ற ஆன்மீக உலகில் உலாவத் தொடங்கு கிறார். தமது உண்மையான ஆன்மீக இயல்பைத் தெரிந்து கொள் வதைவிட ஒருவருக்குத் திருப்தியும் பேரின்பமும் வேறு இருக்க முடியாது. அதுவே அவருக்கு மனநிறைவு அளிக்கிறது.

திருப்தியும் மனநிறைவும் பெற்ற ஒருவருக்கு ஒரு கோரிக்கையும் (தேவையும்) இருக்காது. எங்கு கோரிக்கை இல்லையோ அங்கு செயலும் இல்லை. தேவையில்லாதவரை விளைவுகள் (காரியம்) பாதிப்பதில்லை. ஒருவருக்குத் தமது ஆன்மிக இயல்பு பற்றி 'அறியாமை' நிலவுவதன் விளைவே தேவைகளின் கோரிக்கைகள், பல்வேறு எண்ணங்கள், நட வடிக்கைகள் முதலியவை. இந்த அறியாமை அகன்று முழுமை பெற்றுவிட்ட ஒருவருக்கு கடமை எதுவுமில்லை எல்லா வேலை களும் முடிந்து விடுகின்றன. பிறகு அவர் வேலை செய்யலாம், செய்யாமற் போகலாம்—இரண்டுக்குமே அவருக்கு சுதந்திரம் உண்டு. அவர் மனித உருவில் நடமாடும் இறைவனாகி விடுகிறார்.

மேலும்,

நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ
நாக்ருதேனேஹ கஸ்சன
ந சாஸ்ய ஸர்வபூதேஷு
கச்சிதர்த்தவ்யபாச்ரய: *3:18*

என்ன நடக்கிறது, நடக்கவில்லை என்பதில் அவருக்கு கொஞ்சங்கூட அக்கறையில்லை. எந்தப் பொருளுக்காகவும் அவர் யாரையும் எதிர்பார்த்து நிற்கவில்லை.

ஏதோ ஒரு விதத்தில் லாபம் பெறவேண்டும் என்ற ஆவலே ஒருவனை கடுமையாக உழைக்கத் தூண்டுகிறது. அல்லது, வேலை செய்யாவிட்டால் இருப்பதும் போய் விடுமே என்ற பயத்தினால், அவன் வேலை செய்கிறான். ஆன்ம ஞானம் பெற்ற ஒருவருக்கு இந்த ஆவலுமில்லை. அந்த பயமும் இல்லை. தமது ஆன்மானுபவ இன்பத்தை விட நிரந்தரத் திருப்தி அளிப்பது வேறில்லை என்று கண்டு கொண்டவராதலால், அவர் எப்போதும் மன நிறைவுடன் இருக்கிறார். வேலையினால் தமக்கு லாபமோ, வேலை செய்யாமலிருப்பதால் நஷ்டமோ இல்லாததால், வேலை செய்யும் அவசியம் அவருக்கு இல்லை. அவருடைய பேரானந்தம் வேறு யாரிடமிருந்தும், எப்பொருளிலிருந்தும் வருவதல்ல. தமது உள்ளியல்பு என்ன என்பது அவருக்குத் தெரிந்து விட்டது. அடிப்படையில் பார்த்தால், உலகப் பொருள்களும் 'நான்' என்ற உள்ளியல்பும் வெவ்வேறானவை அல்ல. மன அலைகளினால் அலைக் கழிக்கப்படும் உள்ளுணர்வே உலகம்.

''வெள்ளக் காலத்தில் எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கும் நீர்போல* எங்கும் பரவியுள்ளது பற்றி நீ மெய்யறிவு பெறவில்லை. ஆகையால்—''.

த்ஸ்மா—தஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷ:

**3:19**

ஆகையால் பற்றற்று கடமைகளைச் செய். ஏனெனில், பற்றுதலின்றி பணி புரிவதன் மூலமாக மனிதன் பரம் பொருள் நிலை அடைகிறான்.

இதெல்லாம் நண்பருக்குத் தெரியுமே என்று எண்ணி கிருஷ்ணர் எதையும் சொல்லாமல் விட்டு விடுவதில்லை. இதை நாம் முன்னரே பார்த்தோம். தாம் சொல்லுவதை கண்மூடித்தனமாக அப்படியே ஏற்க வேண்டுமென்று அவர் கட்டளையிடுவதில்லை. ''பதில் பேசாமல் நான் சொல்லும் மதக் கொள்கையை ஏற்றுக்கொண்டு என் பக்கம் வந்துவிடு'' என்று அவர் எப்பொழுதும் கூறியது கிடையாது. பிறரை மதம் மாற்றிக் கொள்ளச் சொல்லும் வழக்கம் இந்துக்களிடம் மருந்துக்குக்கூட இல்லை. தர்க்க ரீதியாக ஒரு கருத்தை அலசி ஆராய்ந்து காட்டிய பிறகே அது அழுத்தமாக எடுத்து வைக்கப்படுகிறது. முதலில் செயல் வட்டத்தின் சுழல் விதியை கிருஷ்ணர் விரித்து வைத்தார். இவ்வாறு தத்துவ விளக்கம் கொடுத்த பிறகு அதன் முடிவை இச்

* அத். 2–16)

செய்யுளில் இரத்தினச் சுருக்கமாக எடுத்துரைத்து, செயல் புரியுமாறு அர்ஜுனனுக்கு ஊக்கமளிக்கிறார்.

''ஆகையால் குடும்பத்திலும், சமூகத்திலும், நாட்டிலும் உனக்குள்ள அந்தஸ்துக்கேற்ப உன் கடமையை நிறைவேற்று'' என்று ஆலோசனை கூறும் நிலையிலும் கூட ''ஆபத்தான பற்றுக்களில்* உன் மனம் சிக்கிக் கொள்ளாதவாறு பார்த்துக் கொள்'' என்று மீண்டும் எச்சரிக்கை செய்கிறார். பற்றுதல்கள் நமது மனப்போக்கை உருவாக்குகின்றன என்றும், உள்ளத்தில் 'வாசனை'களை ஆழப் பதித்துச் செல்லுகின்றன'' என்றும் ஏற்கனவே விளக்கமாகச் சொல்லியிருக்கிறார் அல்லவா?

''அது மட்டுமல்ல, மேலும் சில காரணங்களுக்காகவும் நீ உனது கடமைகளைச் செய்து வர வேண்டும்.''

கர்மணைவ ஹி ஸம்ஸித் திம்
ஆஸ்திதா ஜனகாதய:
லோகஸங்க்ரஹ—மேவாபி
ஸம்பச்யன் கர்த்துமர்ஹஸி 3:20

ஜனகரும் மற்றவர்களும் உண்மையில் செயல் மூலமே முழுமை நிலை எய்தினர்கள். பொதுமக்களைக் காக்கும் நோக்கத்திற்காகவேனும் நீ உன் கடமையைச் செய்தாக வேண்டும்.

முற்காலத்தில் ஜனகர், அசுவபதி**போன்ற மன்னர்கள் இவ்வாறு செயல்முறையைப் பின்பற்றித்தான் முழுமை (சம்ஸித்தி) பெற்றனர். பற்றுதலின்றி மற்றவர்களுக்குச் சேவை செய்வதற்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டால் பிறவித் தளைகளிலிருந்து விடுதலை பெறலாமென்று கண்டு கொண்ட மகான்கள் அவர்கள். அவ்வாறு வாழ்ந்து பெற்ற சாதனைகள், உலகமே அவர்களை பின்பற்றுவதற்கான வகையில் அமைந்திருக்கின்றன.

அர்ஜுனன் ஒரு அரச குமாரன். போருக்கு ஆள் திரட்டுவது முதல் படைகளுக்குத் தலைமை தாங்கி நேரடியாகப் போர் செய்வது வரை எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்றிருந்தான். அவ்வளவும் செய்து விட்டு, இப்போது போர்க்களத்திலிருந்து பின் வாங்க நினைப்பது தவறு என்றும், தனது பிராப்தத்திற்கேற்ப நடந்துகொண்டு அவன் போரை நடத்தியே தீர வேண்டுமென்று அர்ஜுனனுக்கு அறிவுறுத்துவதற்காக கிருஷ்ணர் முற்கால

* பற்றுதல்= அகந்தை+ அகந்தைமைய வேட்கைகள். எனவே பற்றுதலின்மை என்றால் அகந்தையும் அதனால் தூண்டப்படும் சுயநல கோரிக்கைகளும் இல்லை என்று அர்த்தம்.

** சாந்தோக்ய உபநிடதம் அத். 2—4

மன்னர்களின் உதாரணங்களைக் காட்டுகிறார். அவன் தனது வாசனைகளைப் போக்கிக் கொள்ளுவதற்கு அது ஒன்றே வழி. அவன் அரசுரிமை பெற்றவனாதலால், மற்றவர்களைவிட அவனுக்கு சமூகப் பொறுப்பு அதிகம். தன்னுடைய பொறுப்பைக் கைவிடக் கூடாது. அதை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும் என்பதற்கு மற்ற மன்னர்களின் உதாரணங்களைக் காட்டுவதே கிருஷ்ணருடைய நோக்கம்.

படரும் கொடிகள் பாலைவனத்தில் நிலைப்பதில்லை. ஒவ்வொரு உயிரினமும் அதற்குத் தகுந்த சூழ்நிலையிலேயே நன்கு வளருகிறது. இது இயற்கையின் விதி. அதைப் போல, அர்ஜுனன் அரச குடும்பத்தில் பிறந்தவன். பிறவியில் வந்த பொறுப்புக்கு ஏற்றபடி அவன் நடந்துகொள்ள வேண்டும். ஆபத்துக்கு அஞ்சாது, எதிரிகளைப் போரில் வென்று, சமூகம் அமைதியாக முன்னேறுவதற்கான முறையில் ஆட்சி செய்ய வேண்டும். இயற்கை அவனுக்கு நிர்ணயித்துள்ள விதி இது.

''உலக நலனைப் பாதுகாக்க வேண்டியது யாருடைய பொறுப்பு? எப்படிப் பாதுகாக்க வேண்டும்? இப்பிரச்னைகள் இப்போது எழுகின்றன.

யத்யதாசரதி ச்ரேஷ்ட்டஸ் தத்ததே வேதரோ ஜன:
ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ்-ததனுவர்த்ததே
3:21

சான்றோர் செய்வதையே சாதாரண மக்களும் பின்பற்றுகிறார்கள். அப் பெரியோர்கள் காட்டும் நெறி முறையின் தரத்தையொட்டி உலகமும் (மக்களும்) இயங்க பார்க்கிறது.

ஒருவரைப் பார்த்து மற்றொருவர் நடந்து கொள்கிறார் என்பது உளவியல் காட்டும் உண்மை ஒரு நாட்டில் நல்லொழுக்கம் வேண்டுமானால் முதலில் அதன் தலைவர்கள் ஒழுக்க மிக்கவர்களாக இருக்க வேண்டும். ஆசிரியர்கள் ஒழுங்கு நெறி தவறாதவர்களாக இருந்தால், மாணவர்களும் அவர்களைப் பார்த்து அப்படி நடந்து கொள்ளுவார்கள். ஒரு நாட்டின் ஆட்சி வர்க்கம் ஊழலில் ஊறியதாக இருந்தால், அங்குள்ள அதிகாரிகள் கூட பெரும்பாலும் அப்படித்தான் இருப்பார்கள் குழந்தைகளின் நடத்தை, பெற்றோர்களின் பண்பு, தூய்மை ஆகியவற்றை பொறுத்திருக்கிறது.

அர்ஜுனன் தன் கடமையை நிறைவேற்ற வேண்டுமென்பதற்கு கிருஷ்ணர் இங்கு மற்றொரு காரணமும் கூறுகிறார். அவன் தனது கடமையை நிறைவேற்றுவதில் தீவிரமாக இருந்தாலொழிய சமுதாயம் சீர்குலைந்துவிடும். அவனைப் பார்த்து மற்றவர்களும் தங்களுடைய கடமைகளை நழுவ விட்டு விடு

வார்கள். இதனால் நாட்டின் பண்பாடு முழுவதும் ஆபத்துக்குள்ளாகிவிடும்.

இதுவரை தாம் கூறியது* மறக்க முடியாதவாறு அர்ஜுனன் உள்ளத்தில் பதிய வேண்டுமென்பதற்காக பகவான் கிருஷ்ணன் தம்மையே உதாரணமாகக் காட்டிக் கொள்கிறார். அவர் விடுதலை பெற்று ஆன்மாவாக (முக்தராக) இருந்த போதிலும் பற்றுதல்களின்றி தீவிரமாகச் செயல்பட்டு வருகிறார். தமது தலைமுறையிலுள்ள மக்கள் தம்மைப் பார்த்தாவது மந்த நிலையிலிருந்து எழுந்து, சுறுசுறுப்புடன் செயலில் ஈடுபட வேண்டுமென்பதற்காகவே தாம் செய்வதை சுட்டிக் காட்டுகிறார்.

தீமையைத் தீவிரமாகத் தடுத்து நிறுத்தலே கிருஷ்ணருடைய அடிப்படைக் கொள்கை. அநீதியை எதிர்த்துப் போராட முடியாமல், பகற் கனவு காணும் ஒரு கோழையின் அகிம்சைத் தத்துவத்தில் அவருக்கு நம்பிக்கையில்லை. நாட்டின் கலாச்சாரக் கொள்கைகளுக்கு ஆபத்து வரும்போது, அவற்றைப் பாதுகாப்பதற்கு போராடியே தீர வேண்டுமென்பது அவருடைய கருத்து. 'செயல் வழியே சிறந்தது' என்பதில் அர்ஜுனனுக்கு இனி எவ்வித சந்தேகமும் இருக்க இடமில்லை.

''நீ என்னுடைய உதாரணத்தையே ஏன் பின்பற்றக் கூடாது? மக்களின் பாதுகாப்புக்கு வேலை செய்யும் தேவை பற்றி உனக்கு சந்தேகமிருந்தால் என்னைப் பார்த்தாவது அதைப் போக்கிக் கொள். மக்களுக்கு உதாரணமாக இருந்து, அவர்கள் நெறி தவறிச் செல்லாமல் கவனித்துக்கொள்ள வேண்டியது உனது பொறுப்பு அல்லவா?''

நமே பார்த்தாஸ்திகர்தவ்யம்
த்ரிஷுலோகேஷு கிஞ்சன
நாநவாப்தம வாப் தவ்யம்
வர்த ஏவ ச கர்மணி  *3:22*

பார்த்தா, இம்மூவுலகிலும் நான் செய்தாக வேண்டிய வேலை ஒன்றுமில்லை. அடைய வேண்டியது எதுவுமில்லை. ஆயினும் என்னை நானே செயலில் ஈடுபடுத்திக் கொள்கிறேன்.

கிருஷ்ணர் எல்லா வகைகளிலும் முழுமை பெற்றவர். ஒரு மகாயோகி. இவ்வுலகில் அவர் பெற வேண்டியது எதுவுமில்லை. நிறைவேற்றிக்கொள்ள விரும்பும் சாதனையுமில்லை. தனக்கே ஒரு ராஜ்யம் வேண்டுமென்று நினைத்திருந்தால் அதை அவர் வெகு சுலபமாக பெற்றிருக்க முடியும் அந்நிலையிலுள்ள ஒருவர் இப்போது போர்க்களத்தில் நிற்பதன் காரணம் என்ன? பாண்

---

* அத்தியாயம் 3 செய். 4–21

டவர்களின் நேர்மையான, உன்னத இலட்சியம் வெற்றி பெற வேண்டும். அதை வெற்றி பெறச் செய்வதில் தமது கடமையை நிறைவேற்றவே அவர் போர்க்களத்திற்கு வந்திருக்கிறார்.

முதலிலிருந்து மகாபாரதப் போர் தொடங்கும் நாள் வரை கிருஷ்ணருடைய வாழ்க்கை பற்றற்றுப் பணிபுரியும் பரிபூரண வாழ்க்கையாகவே இருந்து வந்திருக்கிறது. அவர் அடையாதது, எதுவுமில்லை. இனிமேல் பெற விரும்புவதும் ஒன்றுமில்லை. ஆயினும் அவர் இடைவிடாது பணி செய்து கொண்டே இருக்கிறார். வேலை ஒரு ஆனந்தமான விளையாட்டு என்று நினைப்பதைப் போல் வேலை செய்து வருகிறார்.

இதிலிருந்து அர்ஜுனன் பாடம் கற்றுக்கொள்ளலாமென்று சுட்டிக் காட்டும் கிருஷ்ணர், மேலும் கூறுகிறார்:

யதிஹ்யஹம் ந வர்த்தேயம்
ஜாது கர்மண்—யதந்த்ரித:
மம வர்த்மானு வர்த்தந்தே
மனுஷ்யா: பார்த்த ஸர்வச: 3:23

ஏனெனில், செயலில் என்னை நானே ஈடுபடுத்திக் கொண்டு ஓய்வின்றி பணிபுரியாவிட்டால், என் வழியையே எல்லோரும் பின்பற்றத் தொடங்கி விடுவார்கள், பார்த்தா!

பகவான் வேலை செய்வது எதற்கு? அவர் வேலை செய்ய வில்லையென்றால் மக்களுக்கு பெரும் அளவு நஷ்டம் உண்டாகும்! நடையுடை பாவனைகளிலும் ஒழுக்கம், செயல்பாடு போன்றவை களிலும் மக்கள் தங்களுடைய தலைவர்களைப் பார்த்து அப்படியே நடந்து கொள்ளுகிறார்கள். தலைவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை வைத்து தங்களுடைய நிறைகுறைகளை நிர்ணயிக்கிறார்கள். ஓய்ச்சல், ஒழிவின்றி பகவான் வேலை செய்து கொண்டே இருக்கவில்லை என்றால், மாந்தர்களும் சோம்பேறிகளாகி உபயோகமற்ற வாழ்க்கை நடத்துவார்கள். இயற்கையில் எல்லாமே இடைவிடாது இயங்கிக் கொண்டிருக்கின்றன. செயலினால்தான் பிரபஞ்சம் நிலைத்து நிற்கிறது.

இந்த செய்யுட்களில் ''நான்'' என்று கூறிக் கொள்ளுவது கிருஷ்ணர் என்ற மானிடர் அல்லர். ஆன்மா பேசுகிறது. பரமாத்ம உணர்வு பெற்று முழுமையடைந்தவர் பேசுகிறார். உடல் ஜடப் பொருளாலானது. ஆன்மா இல்லை என்றால், வெறும் ஜடப் பொருளாலாகிய உடலுக்கு மதிப்பே இல்லை. விழிப்பு முதலிய நிலைகளை உடையவன்தான் கனவுக்கும் இருப்புத் தர முடியும். அறியாமையிருந்து விடுபட்ட ஒருவர், தாமே ஆன்மா என்று உணருகிறார். ''இறைத் தத்துவத்துக்கு'' செயலியக்கம் எதுவுமில்லை. ஆனால் அது இல்லையென்றால் ஆயிரமாயிரம் விதங்

களில் நமக்குத் தோற்றமளிக்கும் உலகமே மறைந்து விடும். கடலில் கோடானு கோடி அலைகள் எழுகின்றன, அதனுல் கடல் மட்டமே உயர்ந்து விட்டது என்று அர்த்தமா? அலைகள் கடல் மட்டத்திலிருந்து உயர்ந்து, மீண்டும் பழைய மட்டத்திற்கே வீழ்கின்றன. கடல் இல்லாவிட்டால், அலைகள் எழும் பிரச்னையே இல்லை. அதைப் போலவே, உலகத்திற்கு பகவான் தொடர்ந்து பணிபுரிந்து கொண்டே இருந்தாலொழிய எந்தத் தலை முறையிலுமே பண்பாடு முன்னேருமல், இருந்த இடத்தில் தேங்கிக் கிடக்க வேண்டியதுதான்.

தாம் இயங்காமலிருந்தால் ஏற்படும் நஷ்டத்தையும் கிருஷ்ணர் மேலே விவரிக்கிருர்.

உத்ஸீதேயுரிமே லோகா
ந குர்யாம் கர்ம சேதஹம்
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம்
உபஹன்யா—மிமா: ப்ரஜா: 3:24

நான் பணிபுரியாவிட்டால் இவ்வுலகங்கள் அழிந்து விடும். * சாதிக் குழப்பும், ஏற்படுத்தி மக்களை அழித்தவனுகி விடுவேன்.

நான் எனது வேலையைச் செய்யாவிட்டால், பிரபஞ்சத்தின் இசைவுமிக்க முன்னேற்றத்திற்கு அது உகந்ததாக இருக்காது. நமது விஞ்ஞான விதிகள், கணிப்பு முதலியவைகளைக் கொண்ட சிந்தனைக் கட்டிடம் இடிந்து விழுந்துவிடும். பிரபஞ்சமென்பது ஒரு குழப்பச் சூழல் அல்ல. அது எல்லாம் இனிமையாக ஒத்து இருக்கும் இசைவுச் சூழல். பிரபஞ்ச சக்திகளில் எதுவும் விதி மாறி இயங்குவதில்லை.

கிரகங்களின் போக்கு, பருவங்களின் நியதி, படைப்பின் மதுரகீதம், வண்ணங்களின் களி நடனம் போன்ற எல்லா நிகழ்ச்சிகளும் ஒரு இசைவோடு, அதனதன் விதியை ஒட்டி நடந்து கொண்டிருக்கின்றன. இவற்றையே இயற்கையின் மகத்தான சக்தி அல்லது கடவுள் என்று கூறுகிருர்கள். உடலுருவம் கொண்ட இறைவன் என்ற முறையில் கிருஷ்ணர், ''நான் என் வேலையை சரிவர செய்து வரவில்லையென்ருல் உலகம் அழிந்துவிடும்'' என்று கூறுகிருர். கேட்பதற்கு ஏதோ ஒரு மாதிரிப் பட்டாலும் விஞ்ஞான ரீதியாக நோக்கினுல், இது முட்டாள்தனமான மூட நம்பிக்கையல்ல. குருட்டுத்தனமாகப் பின்பற்ற வேண்டிய கருத்து அல்ல. விஞ்ஞானிகளும் மறுக்க முடியாத ஒரு உண்மை இது.

---

* குலங்களில் குழப்பம்' என்பதற்கு விளக்கம் அத். 1—41 பார்க்க.

உலகத்தில் புலப்படும் பொருள்களையும், உயிரினங்களையும் மட்டுமின்றி சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் கொண்ட உள்ளுலக இயக்க விதியின் உருவகமே கிருஷ்ணர். மனித சமூகத்தை இந்து மாமுனிவர்களும் பெரியோர்களும் நான்கு வருணங்களாகப் பிரித்திருக்கிறார்கள். அவரவர்களுடைய உள்ளப் போக்கை அடிப்படையாகக் கொண்டு இப்படிப் பிரிக்கப் பட்டிருக்கிறது. உளவியல் பற்றிய விதி சரியில்லாவிட்டால் மக்கள் நடந்து கொள்ளும் முறையில் குழப்பம் ஏற்படும். நடத்தையில் உறுதியிருக்காது. 'வர்ண சங்கரம்' என்பதை 'குலக் கலப்பு' என்று பெரும்பாலோர் மொழி பெயர்க்கிறார்கள். அப்படி மொழி பெயர்த்தால் தற்காலத்தில் அதற்கு விபரீதமாகப் பொருள் கொள்ள இடமேற்படுகிறது. நலிவுற்ற இன்றைய இந்து சமூகத்தில் நடக்கும் ''ஜாதிக் கொடுமை''களை கடவுளே அனுமதித்திருக்கிறார் என்று நினைத்து விடுவான்.

ஆன்மீக உணர்வு பெறும் இலட்சியத்தை ஒருவர் அடைந்து விட்டார் என்று வைத்துக்கொள். அர்ஜுனா, தாம் அடைய வேண்டியது இனி ஒன்றுமில்லை என்பது உண்மையானாலும் கூட மற்றவர்களுடைய நலனுக்காக அவர் வேலை செய்தே தீர வேண்டும்.

ஸக்தா: கர்மண்—யவித்வாம்ஸோ
யதா குர்வந்தி பாரத
குர்யாத் வித்வாம்ஸ்—ததாஸக்தஸ்
சிகீர்ஷுர் லோக ஸங்க்ரஹம் 3:25

''அறியாமையில்'' மூழ்கியிருப்போர் செயலிலுள்ள பற்றுதலினால் பணிபுரிவதுபோல, 'அறிஞர்கள்' பற்றற்று உலக நலனைக் கருதி பணிபுரிய வேண்டும்.

எல்லோரும் அவரவர்களுக்கு உகந்த துறைகளில் கண்ணுங் கருத்துமாக ஒவ்வொரு நாளும் வேலை செய்கிறார்கள். வாழ்நாள் முழுதும் ஓய்ச்சல் ஒழிவின்றி அதில் காலங் கழிக்கிறார்கள். இது நமக்குத் தெரிந்ததுதான். அவர்கள் இடைவிடாது பணிபுரிந்து நலிவுறுவதைப் பார்க்கிறோம். தமது உடல் நலத்தையோ, வெய்யில் மழை போன்ற பருவக் கொடுமைகளையோ, சுக, துக்கங்களையோ பொருட்படுத்தாமல் பொருள் திரட்டிக் குவிக்கும் வேலையைச் செய்து வருகிறார்கள். தமது சொந்த லாபமும் இன்பமுமே அவர்களுடைய குறிக்கோள்.

தமது இறை நிலையை உணர்ந்த ஒருவரும்கூட மனப்பூர்வமான ஈடுபாடு கொண்டு அயராமல், ஆனந்தமாக இவ்வுலகில் வேலை செய்கிறார். சாதாரண மனிதர்களைப் போல் அச்சமும், நம்பிக்கைகளும் அவருக்கும் உண்டு. ஆனால் அவ்விருவருக்கும்

இடையில் ஒரு வேறுபாடு இருக்கிறது. அறியாமையில் மூழ்கி யிருப்பவர் பயனில் பற்றுதலும் ஆவலும் கொண்டு வேலை செய் கிறார். இறையுணர்வு பெற்று முழுமையடைந்தவர் பற்றுதல் களைத் துறந்து, உலகம் கடைத்தேற வேண்டுமென்ற நோக்கத் துடன் வேலை செய்கிறார்.

ஞானிகள் செய்யும் வேலைக்கும், அறியாமையில் உழலு வோரின் உழைப்புக்கும் இருக்கின்ற வேறுபாடு மிக நுணுக்க மானது. அது உலகம் முழுவதற்குமே பொருந்தக்கூடிய ஒன்று என்பதை சுட்டிக் காட்டினாலொழிய, அது மிக முக்கியமானதல்ல என்று இன்றைய வாசகர்கள் நினைக்கலாம். ஒரு உழைப்பாளி யின் உன்னத முயற்சிகளைப் பாழாக்குவது பயனுக்காக அவ ருடைய உள்ளத்திலுள்ள ஆவலே. இந்த ஆவல் காரணமாக அவர் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் தோல்வியடைகின்றன. முற்று முணர்ந்த முனிவர்களும்கூட, செயல்புரியும் போது அதில் தமது மனதையும் அறிவையும் ஈடுபடுத்தாமல் இருக்க முடியாது.

ஏதோ ஒன்றுடன் தன்னை இணைத்துக் கொண்டால்தான் மனம் இயங்க முடியும். எதிலும் பற்றுதலில்லாமல் அது இருக்க முடியாது. அப்படியானால் ''பற்றற்ற உள்ளத்துடன்'' பணிபுரிய வேண்டுமென்று இங்கு கூறுவதன் பொருள் என்ன? பொருள்களை நாடிச் செல்லும் தவறான கவர்ச்சியில் விழுந்து விடாமல் பற்றற்று இருக்கவேண்டும் என்பதே அதன் உட்கருத்து. உயர்ந்த இலட்சியங்களில் பற்று கொள்வதன் மூலம் இத்தவறான பற்றுதல்களிடமிருந்து விடுதலை பெறலாம். புத்தியிற் சிறந்தவர்கள் பற்றுதலின்றி வேலை செய்யவேண்டும் என்று கூறிவிட்டு, அதைச் செய்வது எப்படி என்பதையும் உடனே குறிப் பிடுகிறார். ''உலக நன்மைக்கு வழி வகுக்கும் முறையில்'' (லோக சங்கிரகம்) நடந்து கொள்ளுமாறு அர்ஜுனனுக்கு அறிவுரை கூறுகிறார். மிதமிஞ்சிய அகந்தையுடைய பற்றுதல் கொள்வதே துன்பத் துணையாக ஆகிறது. பெருவாரியான மக்களுக்கு நன்மை யளிக்கும் பரந்த திட்டங்களுக்கு நாம் பணிபுரிந்தால் அந்த அள வுக்கு தன்னிடமுள்ள நஞ்சை பற்றுதல் இழந்து விடுகிறது. அப் போதுள்ள மக்களுக்கு அது நன்மை பயக்கிறது. நஞ்சை நீரார மாக்கி பல மருந்துகளுக்குப் பயன்படுத்துகிறார்கள். அதே நஞ்சு, நீர்க்கப்படாமல், இருக்கும்போது ஆளைக் கொன்று விடுகிறது. அப்படியே அகந்தையும் அகந்தை மையக் கோரிக்கைகளும் மனித னுக்குத் தளை போட்டு அவனை ஒழித்துக் கட்டி விடுகின்றன. அவன் உலகத்திலுள்ள பெருவாரியான மக்களுடன் தன்னை ஒருங்கிணைத்துக் கொள்ளும் அளவுக்கு உயர்ந்து விட்டால், அவ்விதப் பற்றுதலுக்கு ஒரு புனிதத்தன்மை வந்து விடுகிறது. தனிப்பட்ட துன்பங்களுக்கும் குறைபாடுகளுக்கும் மாற்றாக அமைகிறது.

நடைமுறையில் பின்பற்றக் கூடிய வழியை பகவான் இங்கு அர்ஜுனனுக்குக் காட்டுகிறார். தன்னையும் தனது உறவுகளையும் பற்றிய குறுகிய நோக்கை அவன் கை விட வேண்டும் என்றும், அகந்தை மையக் கருத்துகளை அறவே ஒழித்து ஒரு மாபெரும் இலட்சியத்தைப் பாதுகாப்போன் என்ற முறையில் போர்க்களம் புகுமாறும் கிருஷ்ணர் அவனுக்கு ஆலோசனை கூறுகிறார். இந்து கலாச்சாரம் கூறும் உயர்வாழ்வின் பண்புகளை மறுக்கவும், எதிர்க்கவும் துணிந்து விட்ட படைகள் அவன் எதிரில் நிற்கின்றன. அக்கொடிய சக்திகளை ஒழிக்கும் இலட்சியப் பணியில் அர்ஜுனன் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவனாக போரில் இறங்க வேண்டும் என்பது அவர் கூறும் புத்திமதி. மக்களுக்குத் தொண்டு புரிய முன்வரும் மூதறிவு பெற்றவர்களுக்கு பின்கண்ட ஆலோசனை கூறப்படுகிறது.

ந புத்தி பேதம் ஜனயேத்
அஜ்ஞானம் கர்மஸங்கினம்
ஜோஷயேத் ஸர்வகர்மாணி
வித்வான் யுக்த: ஸமாசரன் 3:26

செயல்பற்றுக் கொண்டு அறியாமையில் மூழ்கியவர்களின் உள்ளத்தை அறிவிலுயர்ந்தோர் குழப்பி விடக் கூடாது. எல்லா வேலைகளிலும் அவர்களை ஈடுபடுத்தி, தாங்களும் ஈடுபட்டு, பணி செய்துவர வேண்டும்.

ஆன்மிக உணர்வு பெற்றவர் செயல் களத்தில் இறங்கும் போது வாழ்க்கையில் கடைப்பிடிக்க முடியாத தத்துவங்களையும், கருத்துக்களையும் எடுத்துரைக்கும் வாய்ப்புக்கள் அதிகம். அப்படிச் செய்யக் கூடாது. அவர் கூறுவதை பிறர் சரியாகப் புரிந்து கொள்ளாமல் போகக் கூடும். செயலில் ஈடுபாடு கொள்ளாமல் இருப்பதே கடவுளை அடையும் வழியென்று விபரீத முடிவுக்கு அவர்கள் வந்துவிடக் கூடும். எனவே ஆசான் நிலையிலுள்ளவர்கள் அப்படியெல்லாம் சொல்லி, சாதாரண மக்களுடைய செயலார்வத்தை கெடுத்து விடக் கூடாது.

இயற்கையாகவே வாழ்க்கைக்கு ஒரு வேகம் உண்டு. யாரும் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. சோம்பேறிகள் கூடத் தங்களுடைய வேலையை மெதுவாகச் செய்து கொண்டுதான் இருப்பார்கள். இப்படி சுழித்துச் செல்லும் செயல் வெள்ளத்தில் குதித்து, இரு கைகளையும் உயரத் தூக்கி 'மக்களே—சற்று நின்று என உபதேச மொழிகளைக் கேட்டு விட்டுச் செல்லுங்கள். செயல் வெள்ள வேகத்தில் நீங்களும் போய்க் கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை,'' என்று ஒரு அசட்டு ஆசான் சொன்னால், யாரும் அதைக் காது கொடுத்துக் கேட்க மாட்டார்கள். செயல்

வெள்ளம் அவரையும் சேர்த்து அடித்துக் கொண்டு போய்விடும். அவசரப்பட்டு இதைப் போன்ற இன்னல்களில் இடிபட்டுத் தடுமாறிய குருமார்கள் பலர் இருக்கிறுர்கள். பிரபஞ்ச விதி ஒன்றை கிருஷ்ணர் அவர்களுக்கு சுட்டிக் காட்டுகிறுர். காலத்தின் போக்கில் எதிர்நீச்சல் போட வேண்டாம் என்றும், அதன் வேகத்தை எதிர்ப்பதால் மட்டும் பேருண்மையை போதித்துவிட முடியாது என்றும் கூறுகிறுர்.

மக்களுக்கு வழிகாட்டி நடத்தி செல்லுவது ஒரு கலே. அது மிகத் தெளிவாக இங்கு எடுத்துக் கூறப்படுகிறது. ஆன்மிகத் துறையில் மட்டுமின்றி அரசியல் கலாச்சார சமூக நலத் துறைகளில் வழிகாட்ட முன்வரும் எல்லாத் தலேவர்களுக்குமே இந்த ஆலோசனே பொருத்தமானது. சமுதாயம் குறிப்பிட்ட ஒரு வழியில் போய்க் கொண்டிருக்கும் போது திடீரென்று அந்தத் தடுத்து நிறுத்தப் பார்ப்பது ஆபத்து. சமூகமும் அதனுல் பயனடையாது. அதன் போக்கிலேயே விட்டு, பிறகு அதைக் கொஞ்சங் கொஞ்சமாக திருப்பி வழிக்குக் கொண்டு வர வேண்டும்.

ஹரித்துவாருக்குப் போக வேண்டியவர் எப்படியோ சஹ்ரன்பூர் சாலேயில் திருப்பி தனது மோட்டார் காரை வெகு வேகமாக செலுத்திக் கொண்டு போகிறுர் என்றுல் திடீரென்று அவரை நிறுத்திப் பயனில்லே. நிறுத்தி விட்டால் மட்டும் ஹரித்துவாருக்குப் போய் விட முடியுமா? எந்த இடத்துக்குமே போக முடியாது. வண்டி நகர்ந்தால் தானே ஏதோ ஒரு இடத்தை அடையலாம். மோட்டாரை மெதுவாகத் திருப்பிக் கொண்டு வந்து ஹரித்துவார் சாலேயை அடைந்தால், பிறகு ஹரித்துவாருக்கு வந்து சேரலாம்.

ஒவ்வொருவரும் தங்களுடைய கடமைகளே விடாமல் செய்து கொண்டே ஆன்மிகத் துறையிலும் முன்னேற்றம் காண வேண்டும். தவருன ஒரு செயலே, அதற்கு நேர்மாருன மற்ருெரு செயல் மூலமாக மாற்றித்தான் திருத்த முடியும். எனவே யாரையும் செயலில் நம்பிக்கை இழக்கும்படிசெய்யக் கூடாது. அறிவில் உயர்ந்தவர்கள் தம் வேலேகளே நன்ருகச் செய்து வந்தால், அவரைப் பார்த்து மற்றவர்களும் நடந்து கொள்ளுவார்கள். தங்களேயும் அறியாமல் ஆசானேப் பின்பற்றி ஆன்மிகத் துறையிலும் முன்னேற்றம் காண முயற்சிப்பார்கள்.

அப்படியாஞல் அறியாமையிலுள்ளவர்களின் செயலுக்கும் அறிவில் மேம்பட்டோர் செயலுக்கும் என்ன வித்தியாசம்?

ப்ரக்ருதே: க்ரியமாணனி குணே: கர்மாணி ஸர்வச:
அஹங்கார விமூடாத்மா கர்தாஹமிதி மன்யதே 3:27

இயற்கையாக ஒவ்வொருவருக்கும் அமைந்த சுபாவத்தை (குணத்தை) ஒட்டியே எல்லா வேலைகளும் நடக்கின்றன. அகந்தையின் மருட்சிக்கு உள்ளாகியவன் மட்டுமே, 'நான் தான் அதைச் செய்கிறேன்' என்று நினைக்கிறான்.

பற்றுதல் இல்லாமல் செய்யப்படும் வேலை சிறப்புள்ளதாக இருக்கும். கிருஷ்ணர் இதை முன்னரே வற்புறுத்தியிருக்கிறார். 'பற்றுதல் இல்லாமல் வேலை செய்' என்று சொல்லுவது சுலபம். செய்வது கடினம். அது கருத்தளவில் சரியானதுதான் என்று நமது அறிவுக்குப் பட்ட போதிலும், அதைப் பின்பற்ற முடிவ தில்லை. செயலிலிருந்து பிரிந்து நிற்க வேண்டும், அதே சமயத்தில் வேலை செய்யவும் வேண்டும் என்ற கருத்து நம்மில் பலருக்கு விளங்குவதில்லை. பகவான் இதற்கு பதிலளிக்கிறார். அவர் கூறும் பாகுபாடு முறையைக் கடைப்பிடித்து நடந்து கொண்டால் பற்றற்றும் இருக்கலாம். வேலையும் செய்யலாம்.

ஆன்மிக 'அறியாமை' அறிவு மட்டத்தில் விருப்பங்களாக உருவாகின்றன என்பதும், அவையே மன வட்டத்தின் சிந்தனை கள் (எண்ணங்கள்) ஆகின்றன. என்பதும் முன்பே விளக்கப் பட்டிருக்கின்றன. மனதின் தன்மைகளினால் * பாதிக்கப்பட்ட சிந்தனைகளை நடைமுறைக்குக் கொண்டு வரும் போது அவற்றை 'செயல்' என்று சொல்லுகிறோம்.

மனதில் படிந்துள்ள தடங்களே (வாசனைகளே) உலகில் செயல்களாகப் பரிணமிக்கின்றன என்பது இதிலிருந்து தெரி கிறது. சிந்தனைகள் கலங்கியிருந்தால் அக் கலக்கமும், தடுமாற்ற மும் செயலிலும் இருக்கும். மிருகத்தனமான மந்தமுள்ள சிந்தனையிலிருந்து வரும் செய்கை கீழ்த்தரமானதாக, கொடிய தாக இருக்கும். ஒருவர் வெளியுலகில் செய்யும் எல்லா வேலை களுமே அவருடைய வாசனைகளின் உருவாக்கந்தான்.

மன இயக்கம் இருக்கும் வரை செயலியக்கம் தவிர்க்க முடி யாது. மனத்திலே தோன்றி மனத்திலேயே உறுதி பெற்று மனத் தின் உதவியுடன் செயல்கள். நடைபெறுகின்றன. மனத்துடன் தன்னை இணைத்துக் கொண்டிருப்பவன் 'இவற்றை நான்தான் செய்கிறேன்' என்று தவறாகக் கருதுவதால், அவற்றின் விளைவுகளை அவனுடைய அகந்தை ஆவலுடன் எதிர் பார்ப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. பயனில் ஒருவன் பற்றுக் கொள்ளுவது இந்தத் தவறினால்தான்.

---

* சத்துவ, ரஜஸ், தாமகத் தன்னமகள்
தன்மைகள்

கனவில் தாமே ஒரு உலகத்தைப் படைத்துக் கொண்டு அதனுடன் ஒருவர் ஒன்றுபட்டு விடுகிறார். அவரை கனவு உலகவாசி என்று கூறலாம். கனவில் வரும் துயரங்கள் எல்லாம் அவருக்குத்தானே தவிர மற்றவர்களுக்கு இல்லை, கனவிலிருந்து விழித்தெழுந்தவுடன் அத்துன்பங்களிலிருந்து அவருக்கு விடுதலை கிடைத்து விடுகிறது. அப்படியே நமது வெளியுலக நடவடிக்கைகள் (அவை நமது வாசனைகளிலிருந்து எழுபவையே) தாமாக நம்மிடம் எவ்விதப் பற்றுதல்களையும் ஏற்படுத்துவதில்லை. தன்னை மனத்துடன் இணைத்துக் கொள்பவர்களுக்கே பற்றுதல் ஏற்படுகிறது. இந்த எளிய விவரத்தை அறிந்தவர்கள் எல்லாவித பற்றுதல்களையும் துறந்து விடுகிறார்கள். அவர்களுடைய வாழ்வில் பரிபூரண அமைதி நிலவுகிறது.

மனநிலையுடன் ஒன்றுபட்டுவிடும் காரணமாக, தானே எல்லாவற்றையும் செய்யும் வளர்ச்சி அகந்தைக்கு உண்டாகிறது. 'செயல் புரிபவன்' செயலின் பயனை பெற விரும்புகிறான். பற்றுதலைத் துறந்து விட்டவனுக்கு இந்தத் தவறான கருத்து இருக்காது.

தத்வவித்து மஹாபாஹோ குணகர்ம விபாகயோ:
குணா குணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே 3:28

ஆனால் குணங்களையும், அவற்றின் இயக்கங்களையும் பற்றிய உண்மையை அறிந்தவர், புலன்களாகிய குணங்களே, பொருள்களாகிய குணங்களிடையில் சஞ்சரித்து வருகின்றன என்று தெரிந்து கொண்டு பற்றற்று இருப்பார். புயவலிமிக்கவனே!

போன செய்யுளில் குறிப்பிட்ட 'அறியாமை' உள்ளவனுக்கு நேர்மாறானவர் ஞானி. அவர் உள்ளத்தில் பற்றுதலுக்கு இடமில்லை. ஏனெனில் மனமே செயலுக்கு உருவாக்கம் அளிக்கிறது என்ற உண்மை அவர் விவேகத்தில் ஆழப் பதிந்திருக்கிறது. செயல் ஒருவருடைய மனவட்டத்தைச் சார்ந்தது என்று அவருக்குத் தெரியுமாகையால், அதன் பலா பலன்களைப் பற்றி அவருக்குக் கவலையில்லை. அவ்வாறுள்ள விவேகிக்கு வெற்றியும் ஒன்றுதான், தோல்வியும் ஒன்றுதான். அவை அவருடைய மனத்தைச் சார்ந்தவை. விருப்பு, வெறுப்புகளும் கூட அவருடைய மனத்திற்குத் தானே ஒழிய அவருக்கு இல்லை. நடமாடும் கடவுளாக வாழும் அவர், பூரண உள்ளச் சுதந்திரத்துடன் வாழ்கிறார். விளையாட்டு மைதானத்தில் இறங்கிய சிறந்த ஆட்டக்காரருக்கு விளையாட்டுத்தான் முக்கியமே தவிர வெற்றி தோல்விகளைப் பற்றி அவர் கவலைப்படுகிறாரா?

அர்ஜுனனை 'வலிமை மிக்கவனே' என்று கிருஷ்ணர் அழைத்துப் பேசுவதிலேயே ஒரு முக்கியத்துவம் தோன்றுகிறது. அர்ஜுனன் மாபெரும் வீரன். அக்காலத்திய வீரர் எல்லோரிலும் மிகச் சிறந்த வில்லாளி. போர்க் காலத்தில் திரண்டு நிற்கும் படைகளை அழிப்பது அவ்வளவு பெரிய வீரமொன்றுமில்லை. தனது உண்மை இயல்பை அறியவொட்டாமல் திரை போடும் உள் எதிரிகளைக் கூண்டறுத்து அவற்றிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதுதான் உண்மையான வீரம். உள்ளுலகப் போரைத் தளராது நடத்தி மனத்தை அடக்கி, பற்றற்று இருப்வனே உண்மையான வீரன். அப்படிப்பட்டவனாக இரு என்று ஆலோசனை கூறும் தொனி கிருஷ்ணருடைய அழைப்பில் தென்படுகிறது. உலக நடவடிக்கைகளாகிய போர்க் களத்தில், எல்லாப் பக்கங்களிலிருந்தும் வருகின்ற பற்றுதல் அம்புகளைத் தடுத்து நிறுத்துவதில் வெற்றி பெறுபவன் உண்மையில் மாபெரும் வீரன். இதில் வெற்றி பெற்ற பிறகு, மற்ற சாதாரண போர் வீரர்களைப் போல் அவன் இரதத்தில் வந்து அமர்ந்த போதிலும் வில்லைக் கையிலெடுக்காமலே ஆயிரமாயிரம் குரு க்ஷேத்திரங்களில் அவன் வாகை சூட்டித் திகழ முடியும். அவ்வாறுள்ள தன்னிகரில்லாத வீரனை 'தத்துவவித்'—ஆன்மிகப் பேருண்மையை அறிந்த மகான் என்று கூறுகிறார்கள்.

எனவே கிருஷ்ணர் இப்போது அர்ஜுனனுக்குச் சொல்லுவது என்னவென்றால்,

ப்ரக்ருதேர்—குணஸம்மூடா:
ஸஜ்ஜந்தே குணகர்மஸு
தானக்ருத்ஸ்ன—விதோ மந்தான்
க்ருத்ஸ்னவிந்ந விசாலயேத் 3:29

இயற்கையின் தன்மை (குணம்) காரணமாக மருட்சியில் ஆழ்ந்துள்ளவர்கள் அவற்றிலிருந்து மீளும் நடவடிக்கைகளில் பற்றுதல் கொள்ளுகிறார்கள். முழுமையான மெய்யறிவு பெற்றவர்கள் அரைகுறை அறிவு கொண்ட முட்டாள்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி விடக் கூடாது.

ஒருவருடைய மனத்திலுள்ள 'வாசனை'கள் தங்களை வாழ்ந்து தீர்த்துக் கொள்ள முயற்சிக்கின்றன. அந்த முயற்சியே செயல். ஆன்மிக அறிவில் நிறைவு பெற்றவர்கள், பற்றற்று அமைதியாகச் செயல் புரிகிறார்கள். பெரும்பான்மையான சாதாரண மக்கள், மருட்சி காரணமாக, தங்களுடைய மனப் போக்குக்கு முற்றிலும் அடிமையாகி செயலாற்றுகிறார்கள். அவர்களுடைய 'வாசனை' வாய்க்கால்களில் போகும் வாழ்க்கை வெள்ளத்திற்கு அணை போட்டு நிறுத்தக் கூடாது என்று 21—வது

செய்யுளில் கிருஷ்ணர் கூறினர். இது முக்கியமான கருத்து. எனவே அதையே அவர் வேறு வகையில் இங்கு எடுத்துரைக்கிருர்.

மந்த புத்தியுள்ளவர்கள் தங்களையும் அறியாமலே தங்களுடைய வாசனைகளுக்கு இரையாகிருர்கள். அவைகளுக்கு ஏற்றவாறு நடந்து கொண்டு எண்ணற்ற பற்றுதல்களில் மேலும் சிக்கிக் கொள்கிருர்கள். முற்றும் உணர்ந்த முனிவர்கள் இவற்றை திடீரென்று தடுத்து நிறுத்திவிடக் கூடாது. மெதுவாக அந்த வெள்ளத்தை வேறு கால்வாய்களில் திருப்பிவிட்டு பண்பாட்டுத் துறையில் அவர்களும் சமுதாயமும் வளம் பெற வகை செய்ய வேண்டுமென்பது கருத்து.

'அறியாமை'யில் ஆழ்ந்துள்ளோர் செயல் புரிவது எப்படி? செயல் இயல்புள்ளவர்கள் தமது குறுகிய வட்டத்திலிருந்து வெளியேறி விடுதலைபெறுவது எப்படி? இப் பிரச்னைக்கு பகவான் பதிலளிக்கிருர்:

மயி ஸர்வாணி கர்மாணி
ஸம்ன்யஸ்யாத்யாத்ம சேதஸா
நிராசீர் நிர்மமோ பூத்வா
யுத்த்யஸ்வ விகதஜ்வர: 3:30

எல்லாச் செயல்களையும் எனக்கு அர்ப்பணித்து விட்டு உள்ளம் ஆன்மிக உட்பொருளில் லயித்திருக்க நம்பிக்கையும் அகந்தையும் இன்றி (மனதில்) ஜுரப் பரபரப்பைக் கைவிட்டு போர் புரிந்திடு.

அர்ஜுனன் போர் செய்ய வேண்டும் என்பது பகவானின் நோக்கம். இதை முன்பே அவர் கூறி விட்டார். தவ வாழ்வுக்குத் தகுந்த நிலைமையை அர்ஜுனன் இன்னும் எட்டவில்லை. அவன் செயலியல்புள்ளவனுகையால், அச் செயல்களிலிருந்து புதிய வாசனைகள் தோன்றிக் கொண்டே இருக்கும். மேலும் செயல் வேகம் அதிகரிக்கும். இப்போதுள்ள வாசனைகளை அகற்றுவதற்காக ஒருவன், செயல் புரியும் போது புதிய 'வாசனை'கள் பெருகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்காகத்தான் அகந்தையோ அகந்தை மையக் கோரிக்கைகளோ இல்லாமல் வேலை செய்யும்படி கிருஷ்ணர் முன்பே கூறுனர். அதில் வெற்றி பெறும் வழி இங்கு விளக்கப்படுகிறது. 'எல்லாச் செய்கைகளையும் எனக்கு அர்ப்பணித்து விடு' என்பதே அந்த வழி.

தாம் அழிவிலா ஆன்மிகப் பொருள் என்பதை கிருஷ்ணர் வெளிப்படையாகவே தெரிவித்திருக்கிருர். 'எனக்கு' என்று அவர் தன்மை ஒருமையைப் பயன் படுத்துவது 'இறைவனுக்கு'

என்ற அர்த்தத்தில். எல்லாச் செயல்களையும் இறைவனுக்கு அர்ப்பணித்துவிட்டு, ஆன்ம உணர்வில் மூழ்கி (அத்யாத்ம சேதஸா) பணிபுரியுமாறு கிருஷ்ணர் கட்டளையிடுகிறார். எல்லா வேலைகளையும் கடவுளிடம் ஒப்படைப்பதென்றால், தான் எதுவுமே செய்யாதிருப்பது என்ற பொருளில் அல்ல. சுயநல, அகந்தை மைய நாற்றமின்றி வேலை செய்து வரும்படியாகக் கிருஷ்ணர் ஆலோசனை கூறுகிறார். அப்படிச் செய்யும் வேலையில் பற்றுதலோ பயனைப் பற்றிய கோரிக்கையோ இருக்காது.

நச்சுப் பற்களை அகற்றாமல் இருக்கும் வரையில் பாம்பு ஆபத்தானது. அவற்றை அகற்றி விட்டால் பாம்பினிடமிருந்து நமக்கு எவ்வித ஆபத்தும் இல்லை. அவ்வாறே சுயநலத்திற்காகச் செய்கின்ற வேலைகளே நமக்குத் தளைகளாகின்றன. கோரிக்கைகளின்றி செய்யும் வேலை வேலையே அல்ல. ஏனென்றால் துன்பத் தடங்களைத் தோற்றுவிக்கும் சக்தி அதற்கு இல்லை. வேலைகளைக் கடவுளிடம் ஒப்படைத்தல் என்றால், அவற்றிற்கு அடிப்படையான சுயநல நோக்கங்களைக் கைவிடுதல் என்று பொருள். ஒருவருடைய மனம் கடவுளை நினைத்துத் துதி பாடிக் கொண்டிருக்கும் நிலையில் அது தூய்மையாக இருக்க அந்த இதயத்தில் புனித கீதம் எதிரொலித்துக் கொண்டிருக்கும். அப்போது அவர் செய்யும் வேலை அசாதாரணமாக இறைவன் உள்ளமே அவர் மூலமாக வெளியாவதைப் போல் அமையும். ஒருவருடைய குறுகிய அகந்தை அகன்று, அவ்விடத்தில் இடையறா இறையுணர்வு குடி கொண்டால், தாமே ஒப்பற்ற ஆன்மிகப் பரம் பொருள் என்ற உணர்வு நிலைத்து விடுமானால்—தெய்வத் திருவுளம் வெளியாகி திகழ்வதற்கு அவரே தலைசிறந்த களமாகி விடுகிறார்.

தவறான செய்கைகளை ஒருவர் கைவிட்டால் மட்டும் போதாது. இறைவனின் அருட் பெருக்கு இடையறாது நமது உள்ளத்தில் பாய்ந்து கொண்டிருப்பதற்கு நாம் சில மாற்றங்களை நம்மிடத்தில் செய்து கொள்ள வேண்டும். 'நம்பிக்கைகளின்றி'', 'அகந்தையில்லாமல்' என்ற இரு வார்த்தைகளும் நாம் செய்து கொள்ள வேண்டிய மாற்றங்களை சுட்டிக் காட்டுகின்றன.

மேலெழுந்தவாரியாகப் படிப்பவர்களுக்கு இந்தச் சொற்கள் குழப்பம் ஏற்படுத்தலாம். உள்ளத் தெளிவுடனும் விறுவிறுப்புடனும் செயல் படுவதற்கு இந்து மதம் வழிகாட்ட வில்லையே. நம்பிக்கையின்மையை வளர்த்துக் கொண்டு, உப்பு சப்பில்லாத வாழ்க்கை நடத்தச் சொல்லுகிறதே என்ற ஆபத்தான முடிவுக்கு சிலர் வரலாம். ஆனால் ஆழ்ந்து சிந்தித்தால் வாழ்க்கையைப் பற்றி உளவியல் பூர்வமான பெரும் உண்மையொன்று அவ்வார்த்தைகளில் பொதிந்திருப்பது தெரிய வரும்.

'நம்பிக்கை இல்லாமல்—' எதிர்காலத்தில் நடக்கப் போவதை எதிர்பார்த்து நிற்பது நம்பிக்கை. எந்த நம்பிக்கையும் நிகழ்காலத்தைச் சார்ந்தது அல்ல. அது திட்டவட்டமாக உருவாகாத ஒரு காலத்தைப் பொறுத்தது.

'அகந்தை இல்லாமல்—' நமக்குக் கடந்த காலத்தில் ஏற்பட்ட அனுபவங்கள் நாம் சாதித்த வேலைகள் முதலியவற்றின் மொத்தத் தொகுப்புத்தான் நமது அகந்தை மையக் கருத்து. எனவே அகந்தை என்பது கடந்த காலத்தின் நிழல். எப்பொழுதோ மறந்து விட்ட ஒன்றை குழியிலிருந்து எடுத்து வைத்துக் கொண்டு அகந்தை தலை தூக்கி நிற்கிறது.

பிறவா எதிர்காலம் பற்றியது நம்பிக்கை. மடிந்து மண்ணாய் போனதைப் பற்றிய நினைவுத் தொகுப்பு அகந்தை. கடந்த காலத்தின் மடிந்த கணங்களையோ இன்னும் வெளியாகாமல் காலத்தின் கருப்பையில் இருக்கும் எதிர்காலத்தையோ அடிப்படையாக்க் கொண்டு வாழ்வது தவறு. இந்த இரண்டிற்கும் இடையில் நிகழ்காலம் நழுவிவிடுகிறது. ஆக்கபூர்வமான ஒரு வேலை செய்வதற்கும் முன்னேற்றம் காண்பதற்கும் அனுபவிப்பதற்கும் ஏற்றது நிகழ்காலம் ஒன்றுதான். எனவே நம்பிக்கைகள் இல்லாமல் அகந்தை இல்லாமல் செயல் புரியுமாறு கிருஷ்ணர் கேட்டுக் கொள்கிறார். எந்த வேலையையும் சிறப்பாகச் செய்வதற்கு நிகழ்காலமே ஏற்றது என்பது அசைக்க முடியாத உண்மை. கடந்து போனதையும் வரப் போவதையும் பற்றி சிந்திப்பதிலேயே ஒருவன் தனது சக்தியையும் திறனையும் வீணாக்குவது முட்டாள்தனம். இப்போதைய வேலைக்கு அது முட்டுக்கட்டையாகிறது.

கிருஷ்ணர் சொல்வதிலுள்ள பரந்த நோக்கும் உண்மை நுணுக்கமும் இக் கால உளவியல் நிபுணர்களைக்கூட திடுக்கிட வைக்கிறது. இறந்த காலச் சுடுகாட்டிலும் பிறவா எதிர்காலத்திலும் சிந்தனையை சிதற விடாத ஒருவன், நிகழ்காலத்தில் தனது செயல் திறனை வீணாக்காமல் இருப்பான் என்பதற்கு உறுதி என்ன? அனாவசியமான கவலைச் சுமைகளுடன் ஒருவன் நிகழ்காலத்திலும் வேலை செய்கிறான். என்றால், அது அவனுக்குப் பிறவியில் வந்த சுபாவம். இதைப் போன்ற பரபரப்பையும் போர்களையுமே ஒரு வகை ஜுரம் என்று கிருஷ்ணர் கூறுகிறார். எல்லா வேலைகளையும் கடவுளிடம் ஒப்படைத்து விட்டு எதிர்கால நம்பிக்கையை மறந்து சுயநலத்தையும் துறந்து, மனதில் பதட்டமில்லாமல் போர் புரியும்படி அவர் அர்ஜுனனுக்கு ஆலோசனை சொல்கிறார். அதுதான் மிகவும் சிறந்த முறை என்பதை எல்லோரும் தங்களுடைய அனுபவத்திலேயே உணர்ந்திருப்பார்கள். தற்போதைய வேலையில் லயித்துச் செயல் புரியும் ஒருவருடைய சாதனை நிகரற்று விளங்குமென்ற கருத்தை முன்னரே கீதை வலியுறுத்தியிருக்கிறது.

''போர் செய்'' என்பதற்கு, ''ஒவ்வொருவரும் நடத்தி வரும் வாழ்க்கைப் போராட்டத்தை நீயும் நடத்து,'' என்று பொருள் கொள்ளுதல் பொருத்தமாக இருக்கும். அது அர்ஜுன னுக்கு மட்டுமின்றி, வாழ்க்கையில் நிறைவு பெறவும் பயனுள்ள வாழ்வு நடத்தவும் விரும்புகின்ற எல்லோருக்கும் இவ்வாலோசனை உபயோகமாக இருக்கும்.

'கர்ம யோகம்' என்ற சொல்லுக்குக் குறுகிய பொருள் கொண்டு வேதங்களைப் படித்துள்ளவர்களுக்கு, இங்கு கூறியிருப் பது மரபிலிருந்து மாறிய கருத்தாகத் தோன்றலாம். வேத உண்மைகளுக்குத் தாம் அளிக்கும் புதிய விளக்கத்தை தன்னு டைய நலமுறை ஏற்க வேண்டும் என்பதற்காக பகவான் பின்வருமாறு அழுத்தமாக அறிவிக்கிறார்:

யே மே மதமிதம் நித்யம்
அனுதிஷ்டந்தி மானவா:
ச்ரத்தாவந்தோ(அ)ன ஸூயந்தோ
முச்யந்தே தேபி கர்மபி: *3:31*

நான் கூறும் இந்த போதனையை சிரத்தையுடன், வீண் ஆட்சேபங்களை எழுப்பாமல், எப்போதும் பின்பற்றி வரும் அவர் களும் செயலிலிருந்து விடுதலை பெறுகிறார்கள்.

செயல் முறைபற்றி போன செய்யுளில் கூறியிருப்பதைக் கருத்தளவில் தெரிந்து கொண்டால் போதாது, வாழ்க்கையில் கடைப்பிடிக்கவும் வேண்டும். அப்போதுதான் ஆண்டவனின் ஆசி பெற்று, இலட்சியத்தில் வெற்றி பெற முடியும். மதம் என்ற சொல்லுக்கு ''அபிப்பிராயம்'' என்று பொருள். மேலே குறிப்பிட்டிருப்பது கிருஷ்ண மதம்—கிருஷ்ணருடைய அபிப்பி ராயம். குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில் மக்கள் ஆன்மிக உணர்வு பெற்று நன்னிலை அடைய எவ்வழி சிறந்தது என்ற பிரச்னையில் ஆசாரியர்களிடையில் கருத்து வேற்றுமை இருக்க லாம். அதனால் வெவ்வேறு மதங்கள் தோன்றுகின்றன. ஆனால் அவை கூறும் ஆன்மானுபவம் ஒன்றேதான்.

செக்கு மாடுகளைப் போல சென்ற தடத்திலேயே சென்று, முன்னேற்றம் காணும் வழியின்றி உழைத்து மாய்வதில் பயனில்லை. உடலுழைப்பினால் தசை நார்கள் உறுதி பெறலாம். ஆனால் உணர்ச்சியும், சிந்தனையும் உயர்ந்தாலொழிய நமது ஆளுமை ஆரோக்கிய ஒளியும், இயக்க வேகமும் பெற்றுத் திகழ இடமில்லை. முற்கூறிய கர்ம யோக முறையின் மூலமாகத்தான் அவற்றை நாம் பெற முடியும். நாம் அப்படி வேலை செய்யும் போது சிரத்தையுடனும் வீண் ஆட்சேபணைகளை எழுப்பாமலும் இருக்க வேண்டும்.

'சிரத்தை': இந்த வேதாந்தச் சொல்லுக்கு சரியாக வேறு வார்த்தையில் பொருள் கூற முடியாது. சங்கரர் இதற்கு அளிக்கும் விளக்கம் அறிவுக்கு விருந்தாக அமைந்திருக்கிறது. ஒரு சாதகனின் உணர்ச்சித் தேவைகளை அது எட்டாமல் போகலாம். நமது முனிவர்களும், புனித நூல்களும் கூறுவதை முற்றிலும் தேடாத மனமும் அறிவும் அதை தனதாக்கிக் கொள்ளும் ஊக்கமும் சிரத்தை என்று வேதாந்தம் கூறுகிறது. அதை 'முழு நம்பிக்கையில் பிறந்த ஊக்கம்' என்று சுருக்கிக் கூறலாம். முனிவர்களும், புனித நூல்களும் கூறும் உபதேசத்தில் சிரத்தையின்றி நாம் எவ்வித முன்னேற்றமும் பெற முடியாது. அறிவு பூர்வமாக முழு நிச்சயம் ஏற்பட்டாலொழிய சிரத்தை தோன்ருது.

''வீண் ஆட்சேபணைகளை எழுப்பாமல்': வெறும் கருத்து மட்டத்தில் இருந்து வரும் கொள்கையாக இருந்தால் அதை எதிர்த்தும், விமரிசித்தும் தெளிவாக்கிக் கொள்ளலாம். ஒரு பொருளின் நிறை குறைகளை விவாதிக்கும் போது அதைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆனுல் கிருஷ்ணர் இப்பாது கூறுவது ஒரு வாழ்க்கை முறை. அதைக் கடைப்பிடிப்ப தன் மூலமாகத்தான் நமக்கு அது சரியாகத் தெரியவருமே தவிர, வெறும் படிப்பினுலும், எதிர்க்கட்சி பேசிக் கூச்சலிடுவதாலும் அதைப் பற்றிய அனுபவம் ஏற்படாது என்று கிருஷ்ணர் அறிவிக்கிருர்.

'அவர்களும் செயல்களிலிருந்து விடுதலை பெறுகிருர்கள்': கீதையில் தேர்ச்சியில்லாவர்களுக்கு இதைப் போன்ற வாக்கியங்கள் உற்சாகத்தைக் குறைக்கின்றன. இந்த அத்தியாயத் தொடக்கத்திலிருந்தே எல்லோரும் சரியான முறையில் ஊக்கத்துடன் செயல்பட வேண்டுமென்று கூறப்பட்டு வருகிறது. ஆனுல் திடீரென்று 'வேலை செய்யாமை' என்ற புதுக் கருத்தை இங்கு கிருஷ்ணர் புகுத்துகிருர். இது முன்னுக்குப் பின் முரணுகச் சிலருக்குத் தோன்றுவது இயற்கை. 'வேலை செய்யாமை' என்பதற்கு வேதாந்தப் பூர்வமாக பொருள் தெரியாததால் வரும் குழப்பம் இது. எனவே இதற்கு முன் கூறியதை நினைவுபடுத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

நமது ஆன்மிக இயல்பைத் தெரிந்து கொள்ளாத 'அறியாமை'யினுல் கோரிக்கைகள் தோன்றுகின்றன. அவைகளினுல் சிந்தனை சலனமடைகிறது. புலன் பொருள்களிடையில் சிந்தனை நிறைவு பெறுவதற்குத்தான் செயல் என்று பெயர். எனவே 'வேலை செய்யாமை' என்பது 'சிந்தனைகள்

இல்லாமை'யைக் குறிக்கிறது. ஆன்மாவின் பரிபூரண இயலாமையைத் தெரிந்து கொள்வதன் மூலமாகத்தான் ஒருவருடைய கோரிக்கைகள் அகலும். ஆன்மிக அறியாமை அகன்ற ஒருவர் இறையுணர்வு பெற்ற நிலையைத்தான் ''செயலிலிருந்து விடுதலை பெறுதல்'' என்று இங்கு கூறப்பட்டிருக்கிறது.

ஒருவர் கடமைகளைச் செய்து கொண்டிருந்தால் மட்டும் இந்த மகோன்னத இறையுணர்வு நிலை வந்து விடாது என்பது உண்மைதான். பிள்ளையார் கோவில் தெருவே பிள்ளையார் கோவில் ஆகிவிடாது. ஆனல் அந்தத் தெருவுக்கு வந்து விட்டால். பிறகு கோவிலை அடைவது பெரிய பிரச்னையல்ல. கர்மயோகம் ஒருவரை இறையுணர்வு இலட்சியத்தை நோக்கி இட்டுச் செல்கிறது. கோரிக்கையற்ற செயல்களினல் 'வாசனைகள்' அகலுகின்றன. உள்ளம் தூய்மை பெற்று, சூக்குமமடைகிறது. தூய்மையும், சூக்குமத் தன்மையும் பெற்ற உள்ளம் தியானத்தின் மூலம் இறையுணர்வு பெறுகிறது.

இந்த செயற் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்குப் பதிலாக வீண் குறைகள் சொல்லிக் கொண்டு உட்கார்ந்திருப்பவர்கள் என்ன ஆகிறார்கள்?

யேத்வேத—தப்யஸூயந்தோ
நானுதிஷ்டந்தி மே மதம்
ஸர்வஜ்ஞான விமூடான்ஸ்—தான்
வித்தி நஷ்டான சேதஸ: 3:32

ஆனல் நான் கூறுவதைக் கடைப்பிடிக்காமல் குறை கூறிக் கொண்டிருப்பவர்களின் அறிவு எல்லாம் மருட்சிக்கு உள்ளாகி, விவேகத்தை இழந்து, அவர்கள் அழிவுப் பாதையில் செல்லுவது நிச்சயம் என்று அறிந்து கொள்வாயாக.

''நான் கூறும் இந்த மகத்தான கருத்தைப் பின்பற்றுமல் வீண் குறை கூறிக் கொண்டிருப்பவர்கள் மேலும் மருட்சிக்கு உள்ளாகி, விவேகத்தை இழக்க நேரிடும்'' என்று சீடர்களை கிருஷ்ணர் எச்சரிக்கிறார்.

சீரான வாழ்வு முறையை முற்றிலும் அறிந்து கொண்டு தான் செயல்புரிய வேண்டும் என்று அவர் கூறும் கருத்து. ஒரு கொள்கையைப் பற்றி ஒருவன் குற்றம் சொல்லிக் கொண்டிருந்தால், அதை ஏற்கும் நிலைக்கு அவனுடைய அறிவு வரவே வராது. அக் கொள்கையை அவன் ஒதுக்கித்தள்ளி விட்டதையே அவனுடைய ஆட்சேபனை எடுத்துக் காட்டுகிறது. ஒதுக்கித் தள்ளி விட்ட ஒன்றை அவன் வாழ்க்கையில் கடைப்பிடிக்க மாட்டான்.

கர்ம யோகம் என்பது ஒரு வாழ்க்கை முறை. வெறும் விவாதத்தைக் கைவிட்டு அதை பின்பற்றினுலொழிய நமக்கு அது விளங்காது.

செயல் பாதையைக் கடைப்பிடிப்பதன் மூலமாக ஒருவருடைய கோரிக்கைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைகின்றன. அவருடைய அகந்தையும், அகந்தை மையக் கோரிக்கைகளும் ஒழிந்தால், பிறகு அவர் செய்யும் எல்லா வேலைகளும் தெய்வத் திருப்பணியாக ஒப்புயர்வற்றுத் திகழும். இவ்வாறு ஊக்கமாக ஒருவன் செயல்படாத அளவுக்கு அவனுடைய அறிவும் மழுங்கி விடுகிறது. அழிவுப் பாதையில் செல்வதைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லை.

விவேக சக்தி இருப்பதால்தான் மனிதன் விலங்குகளை விட உயர்ந்து விளங்குகிறுன். உண்மை—உண்மையற்றது. நல்லது—கெட்டது போன்ற பாகுபாடுகளைத் தெரிந்து கொள்ளும் சக்தி அவனுடைய அறிவுக்கு இயற்கையாகவே உண்டு. மனிதனை உயர்த்தும் மாபெரும் கருவி அது. அது பாழாகிவிட்டால் மனிதனுக்கும் மிருகத்துக்கும் எவ்வித வேறுபாடும் இல்லாமல் போகிறது. ஏதோ பிறந்தோம் சாவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம் என்ற பிழைப்பாகிவிடும். அந்த நிலையிலுள்ளவன். கீழ்த்தர உணர்ச்சிகளுக்கும் ஆவல்களுக்கும் இரையாகிறுன். வாழ்க்கையின் வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ளும் திறமை அவனுக்கு இல்லை. இவ்வாறு அவன் தன்னைத்தானே அழித்துக் கொள்கிறுன்.

அப்படியானல் ஏன் இக் கொள்கையைப் பின்பற்றி எல்லோரும் தத்தம் கடமைகளை செய்து வரவில்லை? தவறுனவற்றை ஏன் பின்பற்றுகிறுர்கள்? விருப்பம் போனபடியெல்லாம் நடந்து கொள்கிறுர்களே ஏன்? இம் முறையிலிருந்து விலகி நடந்து கொள்ளும் பொழுது இறைவனுடைய கட்டளையையே மீறுகிறோம் என்ற பயம் அவர்களுக்கு ஏன் வருவதில்லை? இப் பிரச்னைகளுக்கு கிருஷ்ணர் கூறும் பதிலைக் கேளுங்கள்.

ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா:
ப்ரக்ருதேர் ஜ்ஞானவானபி
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி
நிக்ரஹ: கிம் கரிஷ்யதி 3:33

விவேகிகளும்கூட தமது இயற்கையை ஒட்டியே நடந்து கொள்ளுகிறுர்கள். எல்லா உயிரினங்களும் தத்தம் இயற்கையின்படி நடந்து கொள்ளுகின்றன. அதை அடக்கிப் பயன் என்ன?

சிறந்த விவேகிகளும்கூட தங்களுடைய இயற்கைக்கு மாருக நடந்து கொள்ள முடிவதில்லை. சிந்தனைக்கேற்ப அவரவர்களுடைய நடவடிக்கைகள் அமைகின்றன. கடந்த காலச் சிந்தனைகள் வகுத்து வைத்த வாய்க்கால்களில் இன்றையச் சிந்தனைகள் பாய்கின்றன. ஒருவருடைய சிந்தனை எப்படியோ அவருடைய இயல்புருவாக்கமும் அப்படியே.

இங்கு விவேகி என்று கூறப்படுவபவர் போன அத்தியாயத்திலுள்ள கர்ம யோக முறையை தெளிவாகத் தெரிந்து கொண்டவர். எப்படிச் செயல்பட வேண்டுமென்று அவருக்குத் தெரியும். ஆயினும் அவர் அதைக் கடைப்பிடிக்க முடிவதில்லை என்று பகவான் கூறுகிறார். ஏனெனில் அது ஒருவருடைய மன உருவாக்கத்தைப் பொறுத்தது. அதில் சுயநல, அகந்தை மையத் தடங்கள் இருக்கலாம். அவற்றிலேயே சென்று அவருடைய அறிவும் பல்வேறு வேட்கைகளில் பற்று கொள்ளுகிறது. எனவே கர்ம யோக முறையை மனப்பூர்வமாக ஏற்று நடந்து கொள்ள விரும்புவர்களில் சிலர் அந்த முயற்சியில் தோல்வி அடைகிருர்கள். 'உயிரினங்கள் யாவும் தத்தம் இயற்கையின்படி நடந்துகொள்ளுகின்றன' என்பது மறக்க முடியாத விதி. ''இயற்கை இவ்வளவு வலுமிக்கதாக இருக்கும்போது அதை அடக்கிப்பயன் என்ன'' என்று கூறுகிருர் கிருஷ்ணர்.

அப்படிக் கூறுவதிலிருந்து, கர்மயோக முறையைப் பின்பற்றுவதும், பின்பற்ருததும் நம் கையில் இல்லை என்று கிருஷ்ணர் கை விரித்து விட்டதாக நினைப்பது தவறு. கிருஷ்ணர் எல்லாம் தெரிந்த, தத்துவஞானி. உயர்நிலை வாழ்வு எல்லோராலும் வாழ முடியாது என்ற உண்மையை அவர் இங்கு வெளிப்படையாகக் கூறுகிருர். பரிணும ஏணியில் இன்னும் காலடி கூட எடுத்து வைக்காதவர்கள் தங்களுடைய மிருக உணர்ச்சிகளில் கட்டுண்டு வெளியேற முடியாமல் தத்தளிக்கிருர்கள். அதனுல் அவர்கள் கர்ம யோகத்தைக் கடைப்பிடிக்க முடியவில்லை. ஓரளவு வளர்ச்சி பெற்றவர்கள் (ரஜோ குணம் படைத்தவர்கள்) ஊக்கத்துடனும், ஆர்வத்துடனும் இப் பயணத்தைத் தொடங்குகிருர்கள். பிரபஞ்ச ஆசானுகிய கிருஷ்ணருடைய பரந்த உள்ளமும், சகிப்புத் தன்மையும் இச் சொற்களில் வெளியாகின்றன.

ஒவ்வொருவரும் தமது இயற்கைக்கு ஏற்ப நடந்து கொள்ளுகிருர்கள் என்ருல், ஒருவர் தமது முன்னேற்றத்திற்கு முயற்சித்துப் பயனில்லை என்று தெரிகிறதே—அவருக்கு உபதேசம் செய்வதில் பயன் என்ன என்ற சந்தேகம் பலருக்கு வரலாம். கிருஷ்ணருடைய அடுத்த பேச்சு அதற்கு இடமில்லாமல் செய்து விடுகிறது.

இந்த்ரியஸ்—யேந்த்ரியஸ்—யார்த்தே
ராகத்வேஷௌ வ்யவஸ்த்திதௌ
தயோர்—ந வஸமாகச்சேத்
தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ 3:34

பொருள்கள் மீது விருப்பு வெறுப்பு கொள்ளும் இயல்பு புலன்களிலேயே இருக்கிறது. அவற்றின் பிடியில் யாரும் சிக்கி விடக் கூடாது. ஏனெனில் அவை அவருடைய எதிரிகள்.

சாத்திரங்களை நன்ருகக் கற்றறிந்தவர்களும்கூட உயர் வாழ்வு நெறியை சுலபமாகப் பின்பற்ற முடியாதென்று மேற் கண்ட செய்யுளில் விவரிக்கப்பட்டது. ஏனெனில் கீழ்த்தர இயல்பை அவர்கள் முறியடிக்க முடிவதில்லை. கிடைக்காத மருந்து ஒன்றை நோயாளிக்கு எழுதிக் கொடுத்து விட்டால் மட்டும் அந்நோயை டாக்டர் தீர்த்து விட முடியாது. வாழ்க்கை யின் பலவீனத்தை முழுமையான இலட்சிய நிலையுடன் ஒப்பிட்டுக் காட்டுவதோடு நின்றுவிடாமல் பலவீனத்தை அகற்றி, முழுமை பெறுவதற்கு வழி வகுத்துக் கொடுப்பதும் ஒரு தத்துவ ஞானியின் கடமை. அப்படிச் செய்தால் மட்டுமே அவரு டைய தலைமுறையை அவர் உயர்த்தியவர் ஆகிருர்.

மனிதனுள் இருக்கும் கள்வர் சீரான வாழ்வு என்ற பேரானந்தத்தைக் கொள்ளையடித்துக் கொண்டு போய் விடுகி ருர்கள். அவன் யார் என்று கிருஷ்ணர் அறிவிக்கிருர். பற்றுதலும் வெறுத்தலும் புலன்களின் இயற்கை. பொருள்களினிடத்தில் தவறு ஒன்றுமில்லை. தாங்களாகவே சந்தோஷத்தையோ துக்கத்தையோ ஏற்படுத்தும் சக்தி வெளியுலகப் பொருள்களுக்கு இல்லை. புலனுறுப்புக்களிலும் அவை தோன்ற இடமில்லை. மகிழ்ச்சியும், துயரமும், சலனமும் மனத்தில்தான் தோன்று கின்றன. சில பொருள்களைக் கண்டதும் அவை நல்லவை என்றும், அதற்கு மாருனவற்றை கெட்டவை என்றும் விஷமத் தனமாகப் பாகுபாடு செய்து கொண்டு மனம் அல்லலுறுகிறது. அது நல்லதென்று நினைப்பதன் மீது பற்றுதலும், கெட்டதென்று நினைப்பதன் மீது வெறுப்பும் கொள்ளுகிறது. இவ்வாறு பலவகை யான அனுபவங்கள் பெறுவதை மனம் விரும்புகிறது. உலகில் எண்ணற்ற பொருள்கள் இருக்கின்றன. மனம் அவற்றுடன் தொடர்பு கொள்ளும் போது தனக்கு விருப்பமானவற்றை அடையவும், தான் விரும்பாததிலிருந்து விலகிச் செல்லவும் முயற்சிக்கிறது. இதனுல் வரும் சலனமே மனம் அனுபவிக்கும் கொடும் துயரங்களுக்கெல்லாம் காரணமாகிறது.

இதை விளக்கி வைக்கும் கிருஷ்ணர், அவற்றின் பிடியில் சிக்கிவிட வேண்டாமென்று இறை நாட்டம் கொண்ட சாதகர் களை எச்சரிக்கிருர்.

புலன் பொருள் நிறைந்த உலகத்திலிருந்த ஓடிப் போய் குகையிலோ, காட்டிலோ ஒளிந்து கொள்ள வேண்டுமென்று இதற்கு அர்த்தமில்லை. அப்படிப் பொருள் கொள்ளக் கூடிய சொற்களைக் கூட கீதை உபயோகிக்கவில்லை. இவ்வுலகிலேயே நாற்புறமும் நடக்கும் நிகழ்ச்சிகளுக்கு இடையில் மனம் அறிவு போன்ற புனிதக் கருவிகளால் எல்லா அனுபவங்களையும் ஏற்றுக் கொண்டே வாழ்வில் முன்னேறுமாறு கிருஷ்ண தத்துவம் கூறு கிறது. புலனுறுப்புக்களை நாம் அடக்கியாள வேண்டுமேயொழிய, அவை நம்மை அடக்கியாளும் நிலையில் இருக்கக் கூடாது. புலன் களுக்கு நாம் அடிமைகளாகி விடக் கூடாது என்று கிருஷ்ணர் கூறுகிறார். அவைகளுக்கு அடிமையாகாமல் இருக்க வேண்டுமென்றால், பற்று, வெறுப்பு ஆகியவற்றின் கொடுங்கோன்மையிலிருந்து விடுபட வேண்டும்.

வெறுப்பு விருப்புக்களிலிருந்து விலகி நிற்பதற்கு நமது அகந்தையை, வீண் பெருமைகளை விட்டொழிப்பது ஒன்றுதான் வழி. பற்றுதலும் வெறுப்பும் அகந்தையைச் சார்ந்தவை. அகந்தையற்றுச் செய்யும் எந்தச் செயலும் 'வாசனைகளை' அகற்று கிறது என்று முன்னதாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. (பொது முன்னுரையில் காண்க) மனம் தோன்றுவதற்கு வாசனைகளே காரணம். மனம் இருக்குமிடத்தில் அகந்தையும் தோன்றுகிறது. 'வாசனை'கள் குறையும் அளவுக்கு மனமும் மறையத் தொடங்குகிறது. மனம் முற்றிலும் மறைந்து விட்டால் பேருண்மையை முற்றிலும் திரித்துக் காட்டும் அகந்தையும் அறவே ஒழிகிறது.

'வாசனை'களைப் போக்கும் வழிகளை அடுத்த செய்யுள் விளக்குகிறது.

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண:
பரதர்மாத் ஸ்வனுஷ்ட்டிதாத்
ஸ்வதர்மே நிதனம் ச்ரேய:
பரதர்மோ பயாவஹ: 3:35

திறம்படச் செய்ய முடியவில்லை என்றாலும், ஒருவர் தமது சொந்தக் கருத்தைக் கடைப்பிடிப்பது மற்றவர்களுடைய தரு மத்தை திறம்படச் செய்வதைக் காட்டிலும் சிறந்தது சொந்த தருமத்தைப் பின்பற்றி இறக்க நேரிடினும் அது நல்லதே. பிறரு டைய தருமத்தைச் செய்ய முற்படுவது நிச்சயமாக ஆபத்து விளை விப்பது.

தருமம் என்ற சொல்லை சரியாக மொழிபெயர்க்க முடியாது. நேர்மை, நல்லொழுக்கம், கடமை முதலிய பல பொருள்களில் அது உபதேசிக்கப்பட்டு வருகிறது. பொதுவாக தருமம் என்ப

தற்கு 'வாழ்க்கையின் விதி' என்று பொருள் கொள்ளலாம்.

ஒருவருடைய தனித்தன்மை அவருடைய சிந்தனைகளைப் பொறுத்தது. சிந்தனைகள் கடந்த காலத்தில் அவருடைய மனம் பதிப்பித்துக் கொண்ட வாசனைகளை அடிப்படையாகக் கொண்டவை. ஒருவர் தமது கடந்த காலச் சிந்தனைப் போக்கினால் ஏற்படுத்திக் கொண்ட சிந்தனைகளின் பதிவுகளே வாசனைகள். கடந்த காலத்தில் நமது செயலியக்கத்தின் விளைவாக இப்போது நம் உள்ளத்தில் தோன்றும் தவிர்க்க முடியாத ஆழ்ந்த தூண்டுதல்களே 'வாசனைகள்'. தற்கால உணர்ச்சிப் போக்கை அவை நிர்ணயிக்கின்றன. எனவே இங்கு பயன் படுத்தப்பட்டிருக்கும் 'தருமம்' என்ற சொல்லுக்கு 'வாசனை''கள் என்று பொருள் கொள்ள வேண்டும். மனதின் கட்டுப்பாடு பற்றி விவாதிக்கும் இப் பகுதியில் இதற்கு வேறு விதமாகப் பொருள் கொள்ள இடமில்லை.

சுயதர்மம், பரதர்மம். ஒருவருடைய சுயதருமம் அவர் பிறந்த சாதியை அடிப்படையாகக் கொண்டதல்ல. குறிப்பிட்ட ஒரு சாதியில் ஒருவர் தற்செயலாகப் பிறந்திருக்கலாம். அவருடைய தருமம் அதிலிருந்து பிறந்து விடாது. ஒருவருடைய மனதிலுள்ள 'வாசனை' களின் இயல்புக்கு ஏற்ற செயல் செய்வதே சுயதருமம். பிறவியில் வரும் சுபாவத்திற்கேற்ப நடந்து கொண்டால்தான் ஒருவர் அமைதியாகவும், மகிழ்ச்சியுடனும் இருக்க முடியும். வாழ்வில் வெற்றியும் திருப்தியும் தோன்றும். ஒருவர் தமது வாசனைகளின் தன்மைக்கு எதிராக நடந்து கொள்ளுதல் பர தருமத்தைக் கடைப்பிடித்தலாகும். இதனால் சிக்கல் அதிகரிக்கும் என்பது தெளிவு.

அர்ஜுனனுக்கு உடனடியாக பயன்படும் அறிவுரை இதில் பொதிந்திருக்கிறது. பிறவியில் அர்ஜுனன் அரச குமாரன். போர்க் கலையில் தேர்ச்சிபெற்றவன். எத்தனையோ வீர தீரச் செயல்கள் செய்திருப்பவன். அவனுடைய சொந்த தருமம் அரச தருமம். மற்றவர்கள் பயங்கரமானவை என்று கருதுபவற்றில் ஈடுபட்டு, சலியாமல் உழைத்து மேம்படுவதன் மூலமாகத்தான் அவன் தன்னிறைவு பெற முடியும். அவன் கல்வி கற்கத் தொடங்கிய பொழுது, எப்படியோ துறவையும், சிந்தனையையும் அடிப்படையாகக் கொண்ட பிராம்மண வாழ்க்கை தன்னுடைய வாழ்க்கையைவிட மேலானது என்ற எண்ணம் உருவாகியிருந்தது. அதனாலேயே போர்க் களத்திலிருந்து வெளியேறி குகையில் போய் உட்கார்ந்து தவம் செய்ய போவதாக முதலாவது அத்தியாயத்தில் கூறினான். தனது சொந்த வாசனைகளுக்கு ஏற்ற வகையில், அரைகுறையாகவாவது, நடந்து கொள்வதுதான் அவனுக்கு உரிய வளர்ச்சிப் பாதை என்று கிருஷ்ணர் இங்கு நினைவூட்டுகிறார். அவனுடைய தனித்தன்மையை வெளியிடாமல்

அடக்கிக் கொண்டு மற்றவர்களுடைய நடவடிக்கைகளைக் காப்பி அடிப்பது ஆபத்து. அது மாண்புமிக்க, உயர்வாழ்வு முயற்சியாக இருந்த போதிலும் சரி, சுயதர்மத்தை விட அது தாழ்ந்ததுதான்.

தீமை எங்கிருந்து தோன்றுகிறது என்பதை முன்னரே எடுத்துரைத்திருந்த போதிலும், (அத்தியாயம்—2, செய்யுள்—62, அத்தியாயம்—3, செய்யுள் 34) அது போதிய அளவு திட்டவட்டமானதாக அர்ஜுனனுக்குத் தோன்றவில்லை. தெளிவாக அதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அர்ஜுனன் பின்வருமாறு கேட்கிறான்:

அர்ஜுன உவாச:—

அத கேன ப்ரயுக் தோயம் பாபம் சரதி பூருஷ:
அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: 3:36

அர்ஜுனன் கூறினான்:

ஒருவனை பாவம் செய்யத் தூண்டும் சக்தி எது வார்ஷ்னேயா! வலுக்கட்டாயத்திற்கு உள்ளானவனைப் போல், தனது விருப்பத்திற்கு மாறாகவும் கூட (பாவம்) செய்கிறானே!

இப்போது விவாதிப்பதை விளக்கமாகத் தெரிந்து கொள்ளுவதற்காக மாணவன் ஒரு கேள்வி கேட்கிறான். இவ்வாறு பிரச்னைகளை எழுப்பி, கருத்தைத் தெளிவாக்குவது மத நூல்களின் புனித மரபு, இரண்டாவது அத்தியாயத் தொடக்கத்தில் அர்ஜுனனின் தன்மை இருந்த நிலை வேறு. இப்போது இருப்பது வேறு. அவன் எதையும் அலசி ஆராயாமல் திடீர் முடிவுகளுக்கு வருவது முன்பு காணப்பட்டது. அந்த நிலையிலிருந்து அவன் பெருமளவுக்கு மாறியிருக்கிறான். இந்த மாற்றம் அவனுடைய பிரச்னைகளிலிருந்து தெரிகிறது. தன் உள்ளத்தைத் தானே பரிசீலித்து கொள்ளுகிறான். நல்லுணர்ச்சிகளைக் கடைப்பிடிக்க முயற்சிக்கும் போது ஏதோ ஒன்று முட்டுக்கட்டையாக வருவது அவனுக்கே தெரிகிறது. இதைப் பற்றி அர்ச்சுனன் கேட்கும்போது, சாதாரண இருவர் பேசிக் கொள்வதைக் கேட்கும் உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது. நமது கல்லூரி வகுப்புகளில் ஒரு மாணவன் எழுந்து ஆசிரியரை சந்தேகம் கேட்பதைப் போன்ற நடையில் வியாசர் எழுதியுள்ளது மிக நன்றாக இருக்கிறது.

எது நல்லது, எது உயர்ந்தது என்று ஏறக்குறைய எல்லோருக்குமே நன்றாகத் தெரிகிறது. அதைப் போன்ற பாகுபாடுகள் தெரியாதவர்களே இல்லை என்று சொல்லலாம். அறிவு மட்டத்தில் எல்லோருக்கும் அது தெரியும். நடைமுறையில் அதைக் கொண்டு வர முயற்சிக்கும் போதுதான் ஏதோ ஒன்று குறுக்கிடுகிறது. அது தவறான பாதையில் ஒருவனை இழுத்துச்

செல்கிறது. கருத்தும், செயலும் இப்படி முரணாக அமைவது ஏன்? தம்முடைய உள்ளத்தை பரிசோதித்துப் பார்த்துக் கொள்ளும் ஒவ்வொருவருக்கும் இது விளங்காப் புதிராக இருக்கிறது.

ஒருவரிடமுள்ள தெய்வீக இயல்பு உயர்ந்த இலட்சியத்தை நோக்கிச் சிறகடித்துப் பறக்கிறது. நுணுக்கத்திலும் நுணுக்கமாக உள்ள பரம்பொருளை அடைய வேண்டுமென்று அளவற்ற ஆர்வத்துடன் அது துடிதுடிக்கிறது. ஆனால் நம்மிடமுள்ள விலங்கியல்பு நம்மைக் கீழ் நோக்கி இழுக்கிறது. நாம் கீழ்த்தர சதை இன்பங்களை நோக்கிச் செல்லுவதன் காரணம் அதுதான். பெரும்பாலும் நமது விருப்பத்தையும் மீறி அப்படி நடந்து கொள்கிறோம். 'நம்மிடமுள்ள நல்லுணர்ச்சிகளை இவ்வாறு கவர்ந்து செல்லும் கள்வனின் தன்மைதான் என்ன?'' என்று அர்ஜுனன் கேட்கிறான்.

கிருஷ்ணருக்கு உள்ள பல பெயர்களில் வார்ஷ்ணேயர் என்பதும் ஒன்று. விருஷ்ணி குடும்பத்தில் பிறந்தவர் என்பதைக் காட்டும் பெயர் அது.

'அந்தக் கள்வன் யார் என்று சொல்லுகிறேன், கேள். எல்லாத் தீமைகளுக்கும் ஆணி வேராக இருக்கும் அந்த எதிரியைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம் தான்' என்று பகவான் அதை விளக்குகிறார்.

ஸ்ரீ பகவானுவாச—

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ:
மஹாசனோ மஹாபாப்மா வித்த்யேந மிஹ வைரிணம் 3:37

பகவான் கூறினார்:

இந்த வேட்கையே, ரஜோ குண இயல்பான இக் கோபமே, எல்லாவற்றையும் விழுங்கி விடுவது: மிகப் பாவகரமானது. இது தான் இங்குள்ள (இவ்வுலகத்திலுள்ள) பெரும் விரோதி என்று தெரிந்து கொள்.

இந்தக் (காமமே) வேட்கையே, இந்தக் கோபமே ஒருவருடைய உள்ளத்தில் ஒளிந்திருந்து கொள்ளையடிக்கும் கள்வன். ஆன்மிக 'அறியாமை' அறிவு மட்டத்தில் இயங்கும்போது கோரிக்கை உருவாகிறது. இதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். கிருஷ்ணர் தனிப்பட்ட இரண்டு உணர்ச்சிகளைப் பற்றி இங்கு பேசவில்லை. ஒரு குறிப்பிட்ட நிலையில் காமமே (வேட்கையே) கோபமாகிறது. ஒரு பொருளைப் பெற்று விட வேண்டுமென்ற எண்ணம் இடைவிடாது இருந்து அரித்துக் கொண்டே இருந்தால், அது வேட்கை (காமம்), நம்மை அல்லாத மற்றொன்றை

நாம் நாடுவதையே அது குறிக்கிறது. சூழ்நிலை காரணமாக அவ்வேட்கை நிறைவேறுவதற்கு யாராவது இடையூருக நின்ருல், நமது உணர்ச்சி அவர் மீது முட்டிச் சிதறும் போது, கோபமாக மாறுகிறது.

ஒரு பொருளைப் பெற வேண்டும், தானே அதை வைத்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சிகள், ஒரு பொருளை நோக்கிப் பாய்ந்து கொண்டே இருந்தால் அந்த எண்ணங்களின் தொகுப்பு அவருடைய வேட்கையாகிறது. நாடிய பொருளை அடைய முடியாமல் அது தடைப்பட்டு நிற்கும் போது அதே விருப்பம் (காமம்) கோபமாகிறது. வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியங்களை கருத் தளவில் அறிந்திருந்த போதிலும் நடைமுறையில் அவற்றைப் பின்பற்ற வொட்டாது செய்வது இந்த காமம்—கோபம்தான். வேட்கையின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க அதையொட்டி ஒருவன் செய்யும் பாவச் செயல்களின் வேகமும் அதிகரிக்கிறது. அறிவு மட்டத்தில் காமம் உருவானவுடன் நமது விவேகத்தை அது திரை போட்டு மூடிவிடுகிறது.

எனவே காமம், கோபம் முதலிய பாவ உணர்ச்சிகள் எல்லாம் மருட்சியற்ற அறிவாகிப் பாழ் நிலத்தில் தோன்று கின்றன. அவைகளுக்கு அடிமை யாவது 'அறியாமை'. அவற்றை அடக்கியாள்வது விவேகம்.

வேட்கையை நமது எதிரி என்று ஏன் கூறுகிறேம். அது விவேகத்திற்கு எப்படி திரை போடுகிறது? சில உதாரணங்களின் மூலம் பகவான் அதை விளக்குகிருர்:

தூமேனுவ்ரியதே வஹ்னிர்—
யதாதர்சோ மலேனச
யதோல்பே—நாவ்ருதோ கர்ப்பஸ்
ததா தேனேதமாவ்ருதம் 3:38

நெருப்பை புகை சூழ்ந்திருப்பது போல, கண்ணுடியை தூசி மறைப்பது போல, கருவை கருப்பை மூடியிருப்பது போல, அது இதனுல் மூடப்படுகிறது.

காமமும் அதன் விளைவாக வரும் கோபமும் நமது அறிவை மருட்சிக்கு உள்ளாக்கி, விவேகத்தை மூடி விடுவதற்கு மூன்று உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புனித நூல்களில் ஒரு கருத்தை விளக்க உதாரணங்களை அடுக்குவது கிடையாது. அது தவறு என்று கூடக் கருதப்படுகிறது. கீதையிலும் அத்தகைய தவறு இல்லை. இம் மூன்று உதாரணங்களும் மூன்று வகை மருட்சி களை எடுத்துக் காட்டுகின்றன. நுணுக்கமாக ஆராய்ந்த பிறகு இதில் நாம் நினைப்பதைவிட ஆழ்ந்த பொருள் இருப்பது தெரி

கிறது.

மனிதனுடைய விவேகத்தை மூடி மறைப்பது பற்றுதல். மாறிக் கொண்டே வரும் உலகப் பொருள்களின் மீது பற்றுதல் கொள்வதால் நாம் விவேகத்துடன் செயல்பட முடிவதில்லை. பற்றுதல் மூன்று வகைப் படும். வேட்கைகள் கீழ்த்தரமானவை யாயும், தீமை மிக்கவையாயும் இருப்பது ஒரு வகை. உடலின்பம் பெறுவதில் நாட்டமுள்ளவர்களை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். அதையடுத்து அதிகாரமும், செல்வமும் பெறுவதில் சிலர் தங்களுடைய வாழ்க்கையை கழித்து வரலாம். புகழும், பெருமையும் பெறுவதே இவ்வகை இச்சையின் நோக்கம். கடைசியாக, ஆன்மிகப் பேருணர்வு பெற விரும்பும் முயற்சியில் ஈடுபடுவது மூன்ருவது வகைப் பற்றுதல். எனவே இச்சைகளின் தன்மையைப் பொறுத்து, அவை மந்த (தாமச) செயலியக்க (ராஜச) தெய்வீக (சாத்விக)த் தன்மை வாய்ந்தவை என்று பாகுபாடு செய்யலாம். இந்த மூவகைப் பற்றுதல்களைக் காட்டவே மூன்று உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

புகை சூழ்ந்த தீயைப் போல—புகை சூழ்ந்திருக்கும் போது கூட அதன் நடுவிலுள்ள தீயின் ஒளி முழுவதையும் அது மறைத்து விடுவதில்லை. ஓரளவுக்குத்தான் அது தடுக்கிறது. திரியை ஏற்றி வைத்து, புகை தோன்ரு வண்ணம் ஒரு கண்ணுடிச் சிமினியையும் அதற்குப் பொருத்தி விட்டால், எரியும் திரியின் ஒளி சுற்றிலும் பளிச்சென்று படருகிறது. சாத்விக வேட்கைகள் ஆன்மிகப் பேரொளியை முற்றிலும் மறைத்து விடுவதில்லை என்பதை இவ்வுதாரணம் காட்டுகிறது.

கண்ணுடியை மறைக்கும் தூசி போல—அதிகாரத்திற்காகவும் பெருமைக்காகவும் அல்லலுறும் ரஜோ குணப் பற்றுதல்கள் நமது தூய விவேக சக்தியைக் கப்பிக் கொள்ளுகின்றன. தூசிப் படலம் கண்ணுடியை முழுமையாக மூடி விடுகிறது. புகையை ஊதி அகற்றி விடலாம். ஆனல் தூசிப் படலத்தைத் துடைத்து சுத்தமாக்குவதற்கு அதைவிடச் சற்று அதிக முயற்சி தேவை. படிந்து ஒட்டிக் கொண்ட தூசியை கடிந்து வீசும் காற்றும்கூட சுலபமாக அகற்ற முடியாது. சுத்தமான துணியினுல் கண்ணுடியைத் துடைத்துத் துடைத்து பளபளக்கச் செய்ய வேண்டும். புகை அடர்த்தி இருக்கும் போது கூட தீயின் ஒளி நமக்குத் தெரிகிறது. தூசிப் படலம் கனமாக இருந்தால் நமது முகம் கண்ணுடியில் தெரியாது. அப்படித் தெரிந்தாலும் மிக லேசாகத்தான் தெரியும். காமங்களிலிருந்து எழும் இச்சைகள் நமது விவேகத்தைச் சற்று அதிகமாகவே பாதிக்கின்றன என்பதை இது காட்டுகிறது.

கருவை மூடியிருக்கும் கருப்பை போல்: . புலனின்பங்களை

நாடித் திரியும் கீழ்த்தர இச்சைகளும் மிருகப் பிராயமான வேட்கைகளும் நம்முள்ளிருக்கும் பரம் பொருளை கனமாக மூடிவிடுவதற்கு மிகப் பொருத்தமான இந்த உதாரணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கரு முற்றும்வரை கருப்பை அதை மூடி வைத்துக் கொள்ளுகிறது. நாம் பார்க்க முடியாதவாறு அது முற்றிலும் மறைக்கப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட கால வரைக்குப் பிறகேதான் அது வெளியாகும். அவ்வாறே உடலின் இச்சைகள் விவேகத்தைச் சுற்றி சுவரெழுப்பி விடுகின்றன. மந்த (தாமச)த் தன்மை மிக்க அவை நீண்ட காலத்திற்குப் பிறகே அகலும். மனமும் அறிவும் மருட்சியை உதறித் தள்ளிவிட்டு, ஆன்மிக வளர்ச்சி பெற்றால்தான் அவ் வேட்கைகள் அகன்று, விவேகம் தோன்ற வழியுண்டு.

ஒருவருடைய உண்மையான தெய்வீகத் தன்மையை மறைக்கும் மூன்று வகை இச்சைத் திரைகளை மிக அழகாக சாத்திர முறைகளையொட்டி கிருஷ்ணர் எடுத்துரைக்கிறார். நம்மிடமுள்ள வேட்கைகளே நமது தெய்விக இயல்பை நம்மிட மிருந்து ஒளித்து விடுகின்றன.

சுலோகத்தில் 'அது இதனால் மூடப்படுகிறது' என்று இருக் கிறதே தவிர அது எதனால் மூடப்படுகிறது என்பது வெளிப்படை யாக சொல்லப்படவில்லை. அடுத்து வரும் செய்யுளில் இந்த இரண்டும் விளக்கப்படுகின்றன.

ஆவ்ருதம் ஜ்ஞானமேதேன ஜ்ஞானினோ நித்யவைரிணா
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணா நலேன ச: *3:39*

குந்தி மைந்தனே! வேட்கை உருவத்தில் வரும் இந் நிரந்தர எதிரியினால், ஞானம் மூடி மறைக்கப்படுகிறது. தீயைப் போல காமமும்கூட அணைக்கப்பட முடியாதது. (பூர்த்தி செய்ய முடி யாதது)தான்.

உண்மையல்லாதவற்றையும், உண்மையையும் பாகுபாடு செய்து அறிந்து கொள்ளும் சக்தியே ஞானம். தோன்றி மறைவதையும், நிரந்தரமானதையும் பிரித்தறியும் திறமை மனித னுக்கு இருப்பதாலேயே, பரிணாம வளர்ச்சியில் அவன் உயர்ந்த நிலையில் இருக்கிறான். இவ்வாறு பாகுபடுத்தும் புனிதத் திறனை முழுமையாக அடைய விடாமல் செய்பவை நமது வேட்கைகளே. காம வேட்கைகளை முழுமையாகத் திருப்தி செய்ய முடியாது என்று மகாபாரதம் கூறுகிறது. அவற்றை நிறைவேற்றிக் கொள்ளுவதால் அவை அடங்கி விடுவதில்லை. ஒன்று நிறை வேறினால், மற்றொன்று தலைதூக்குகிறது. நெருப்பிலிடும் நெய், தீயை மேலும் வளர்க்கவே பயன்படுவது போல, விருப்பங்களும் நிறைவேற நிறைவேற மேலும் மேலும் பெருகுகின்றன. முந்திய

சுலோகத்தில் உபயோகிக்கப்பட்ட 'அது' 'இதனுல்' என்ற சொற்களுக்கு இப்போது பொருள் தெரிகிறது அல்லவா? 'அது' (இதம்) என்ற சொல் ஞானத்தைக் குறிக்கிறது. 'இதனுல்' என்பது 'தீர்க்க முடியாத காம இச்சைகளினுல்' என்ற அர்த்தத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

விவேகத்தை (ஞானத்தை) மூடி மறைத்து, உலக மக்கள் எல்லோருக்குமே எதிரியாக இருக்கும் காமத்தின் உறைவிடம் எது? அது இருக்குமிடம் தெரிந்தால், அதை அங்கேயே கொன்று விடுவது நலம், சுலபம். எனவே கிருஷ்ணர் அதையும் கூறுகிருர்.

இந்த்ரியாணி மனோபுத்திர்
அஸ்யாதிஷ்டான—முச்யதே
ஏதைர் விமோஹயத்யேஷ
ஜ்ஞான மாவ்ருத்ய தேஹினம் 3:40

புலன்களும், மனமும் அறிவும்தான் அதன் உறைவிடம் என்று சொல்லப்படுகிறது. அவற்றினுல் மனிதர்களின் விவேகம் மறைக்கப்பட்டு மருட்சிக்கு உள்ளாகிறது.

இச்சையாகிய எதிரி தன்னுள்ளேயே இருந்துகொண்டு, தனது மன சாம்ராஜ்யத்தின் பாதுகாப்புக்கும், சுபிட்சத்திற்கும் உலே வைத்துக் கொண்டிருக்கிறதென்று மாவீரன் அர்ஜுனனுக்குத் தெரிகிறது. நாட்டில் ஒரு கொள்ளேக்காரன் ஒளிந்திருந்தால், அவன் பதுங்கியிருக்குமிடம் பற்றிய விவரங்களே உடனே சேகரித்து வரும்படியாக அரசன் கட்டளேயிடுவது இயற்கையே. எனவே வேட்கை எதிரியின் உறைவிடம், அதை ஒழிக்கும் வழி முதலியவற்றைப் பற்றி அரசனுகிய அர்ஜுனன் கிருஷ்ணனேக் கேட்கிருன். கிருஷ்ணர் அவனுடைய ஆன்மிக குரு. தமது மாணவ வீரனுக்கு அக் கள்வன் ஒளிந்திருக்குமிடத்தை சுட்டிக்காட்டி,'' புலன்களும் மனமும் அறிவுமே அதன் உறைவிடங்கள்'' என்று கூறுகிருன்.

நாட்டின் விசாலமான ஒரு பகுதியில் திருடர் கூட்டமொன்று கொள்ளேயடித்து வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அக் கொள்ளேக் கூட்டத் தலேவனின் தலேமை முகாம் ஒரே இடத்தில் இருக்காது. அப்படியே கோரிக்கையும் மூன்று முக்கிய இடங்களேச் செயல் இடங்களாகக் கொண்டு அது மன அமைதியையும், ஆரோக்கியத்தையும் அழித்து வருகிறது என்று கிருஷ்ணர் கூறுகிருர்.

புலனுறுப்புக்கள் கட்டிலடங்காமல் களி நடனம் புரியும் கவர்ச்சியரங்கம். அம் மூன்று செயலகங்களில் ஒன்று வெளியுலகத் தூண்டுதல்கள் புலன் உறுப்புகளின் வழியாகச் சென்று மனதை அடைந்தவுடன் இங்கு கோரிக்கைகள்

தோன்றுவதால் மனம் ஒரு துயரப் பண்ணையாகி விடுகிறது. பிறகு, தான் அனுபவித்த புலனின்ப நினைவுகளிலும் ஏற்படுத்திக் கொண்ட மாறுதல்களிலும் அறிவு திளைக்கும் போது, அந்த அறிவும் கோரிக்கையின் முகாம்களில் ஒன்றாக ஆகிறது.

மருட்சியினால் ஒரு அகந்தை தன்னை உடலுடன் ஒருங்கிணைத்துக் கொள்ளும் பொழுது புலனின்பங்களை அனுபவிக்க விரும்புகிறது. மனதுடன் இணைத்துக் கொள்ளும்போது மேலும் மேலும் உணர்ச்சி இன்பங்களைப் பெற்று மகிழ விரும்புகிறது. அறிவுடன் தன்னை இணைத்துக் கொள்ளும்போது, மனம் பெற்ற மகிழ்ச்சிகளை நினைவுக்குக் கொண்டு வந்து, அந்நினைவுகளில் மீண்டும் வாழ வேண்டுமென்று முட்டாள்தனமாக நினைக்கிறது. தான் பரம் பொருளே என்ற உண்மையான நினைவுச் செல்வத்தைக் கவர்ந்து செல்லும் கொள்ளைக்காரக் கோரிக்கை இவ்வாறு மூன்று முகாம்களிலிருந்து வேலை செய்கிறது.

இந்த மூன்று இடங்களையும் நாம் வசப்படுத்திக் கொண்டு விட்டால், வெற்றி கொள்ளலாம் என்பது கீழே விவரிக்கப்படுகிறது.

தஸ்மாத்—த்வமிந்த்திரியாண்—யாதௌ
நியம்ய பரதர்ஷப
பாப்மானம் ப்ரஜஹிஹ்யேனம்
ஜ்ஞான—விஞ்ஞான நாசனம்: 3:41

ஆகையால், பாரதப் புதல்வர்களில் காளையென சிறந்தோனே, புலன்களை முதலில் கட்டுப்படுத்தி பாவகரமான இதை அழித்துவிடு. அறிவையும் விவேகத்தையும் நாசமாக்குவது இதுதான்.

தர்க்க ரீதியாக வாதப் பிரதிவாதங்களை எல்லாம் எடுத்துரைத்து, கடைசியில் தாம் கூற விரும்பும் உண்மையை போதிப்பது கிருஷ்ணர் கையாளும் வழி. ''ஆகையால் புலன்களை முதலில் கட்டுப்படுத்து'' என்று அவர் இரத்தினச் சுருக்கமாக விவாதத்தை முடிக்கிறார்.—உள்ளத்திலுள்ள கோரிக்கையை ஒழிப்பதற்கு வழி காட்டிய பிறகு.

கோரிக்கை பாவகரமானது என்று கூறப்படுகிறது. மிகக் கீழ்த்தர வாழ்க்கை நடத்தும் நிலையிலே அது நம்மை வைத்து விடுகிறது. உயிர் இயக்கத்தில் உயருவதற்கு பதிலாக தாழ்வதற்கு அது வழி வகுக்கிறது. நல்ல (சாத்துவீக) கோரிக்கைகளும்கூட—அவை தீயைச் சூழ்ந்த புகையாக இருக்கும் நிலையில் கூட நம்முள் இருக்கும் மெய்ப் பொருளின் முழு ஒளியும் விரிந்து படர இடமில்லாமல் தடங்கல் செய்கிறது. எனவே எவ்வகை கோரிக்கையாயி

னும், அது மனிதனுடைய பாவத்தை வளர்க்கவே உதவுகிறது.

எனக்கு ஒரு காயம் பட்டதென்ருல், அதற்கு டாக்டர் ஒரு மருந்து எழுதிக் கொடுக்கிருர். ''சீட்டில் எழுதியிருப்பதை ஒரு தடவை போட்டாலே போதும். புண் ஆறிவிடும்'' என்று தைரியமும் சொல்லுகிருர். மருந்துச் சீட்டை வாங்கிக் கொள்ளும் போது எனக்கும் சற்று ஆறுதலாக இருக்கிறது. ஆனல் ''ஆகாயப் பூக்களைக் கொண்டு வந்து அரைத்துப் போடுங்கள்,'' என்றும் அதில் எழுதியிருப்பதைப் படிக்கும் போதுதான் தூக்கிவாரிப் போடுகிறது. எனக்கு ஆகாயப் பூ கிடைக்கப் போவதுமில்லை, புண் ஆறப் போவதுமில்லை என்றும் தெரிகிறது.

அவ்வாறே ஆன்ம ஞானம் பெற்ற ஒரு மகான், ''புலன்களை அடக்கி, இச்சைகளை அழித்து விடு'' என்று சுலபமாகச் சொல்லி விடலாம். அதனல் மாணவனுக்கு என்ன உபயோகம்? அதைக் கடைப்பிடிக்கும் முறையைச் சொல்லாவிட்டால் அது ''ஆகாயப் பூ'' மருத்துவமாகிவிடும்!

ஓரிடத்தில் உறுதியாகக் காலை ஊன்றிக் கொண்டால், அடுத்த அடி எடுத்து வைக்க முடியும். எந்த இடத்தில் உறுதியாக நின்ருல் கோரிக்கைகளை ஒழிக்கலாம் என்பதை கிருஷ்ணர் சொல்லுகிருர்:

இந்திரியாணி பராண்யாஹுரிந்திரியேப்ப: பரம் மன:
மனஸஸ்து பரா புத்திர் யோ புத்தே: பரதஸ்துஸ: 3:42

உடலைவிட புலன்கள் மேம்பட்டவை என்று கூறுகிருர்கள். புலன்களைவிட மனம் உயர்ந்தது. மனதைக் காட்டிலும் உயர்ந்தது அறிவு. அறிவைவிட அது (ஆன்மா) மேலும் உயர்ந்தது.

இதிலும் அடுத்த செய்யுளிலும், நம்முள் இருக்கும் கோரிக்கை எதிரியை வேட்டையாடிப் பிடித்து சிறை செய்யும் முறையை கொஞ்சம்கூட சந்தேகத்துக்கு இடமின்றி வியாச மாமுனிவர் விளக்குகிருர். பகவத் கீதையில்—அதுவும் ஆரம்ப அத்தியாயங்களில்—தியான மார்க்கத்தைப் பின்பற்றும் முறை பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ளலாம் என்று யாரும் எதிர் பார்க்க மாட்டார்கள். ஆயினும் நம்முள் இருக்கும் இறை பொருளைக் கண்டு கொள்ளும் வழியை பகவான் இங்கு முழுமையாகக் காட்டுகிருர்.

உலகத்திலுள்ள ஜடப் பொருள்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது புலன்கள் புனிதமானவை என்றும், தெய்வீகத் தன்மை பெற்றவை என்றும் நன்ருகத் தெரிகிறது. நமது கை கால்களை விட புலன்கள் சூக்குமமானவை. ஆனல் அவை மனத்திற்கு உட்பட்டு நடந்து கொள்ளுகின்றன. எனவே இந்திரியங்

களை விட மனம் சூக்குமமானதென்று அனுபவத்திலேயே நமக்குத் தெரிகிறது.

மனம் மிகவும் பரந்து விரிந்தது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதற்கும் ஒரு எல்லையுண்டு. அந்த எல்லையை முதன் முதலில் கடப்பது அறிவு. அதற்குப் பிறகுதான் மனம் தனது எல்லைகளை விரிவுபடுத்திக் கொண்டே போகிறது. அறிவு புதிய துறைகளைக் கண்டுபிடித்தால், மனம் பிறகு அவற்றை ஆக்ர மித்துக் கொள்ளுகிறது. எனவே மனத்தின் பரப்பை விட அறிவு மேலும் சூக்குமமானதென்று கூறுகிறோம். எது அறிவுக்கும் அப்பாற்பட்டு நிற்கிறதோ அதுவே ஒப்புயர்வற்ற பரம் பொருள்.

அறிவின் அடிப்படையில் எழும் கருத்துக்களுக்கு ஒளி அளிப்பது மனிதனின் ஒளி விளக்காக விளங்கும் பேருணர்வு. அறிவைவிட அது மிக சூக்குமமாகத்தான் இருக்க வேண்டும். ஆன்மிக அகப் பொருளைவிட நுணுக்கமானது எதுவும் இல்லை என்று உபநிடதங்கள் உறுதி செய்கின்றன. உடல், மனம், அறிவு ஆகியவற்றை ஒருங்கிணைத்து நிற்பது வெறும் மன மயக்கம் என்பதை உணர்ந்து அந்த இணைப்பிலிருந்து நாம் விடுபட்டு தியானத்தில் ஈடுபட வேண்டும்.

மருட்சிமிக்க வேலைகளிலிருந்து நமது உணர்வு முழுவதை யும் உள்ளிழுத்துக் கொண்டு ஆன்மாவுடன் ஆன்மாவாக பிரிதொன்றில்லாப் பேருணர்வு மூலமாக நாம் நிலைத்துவிடும் போது முயற்சிகளும் முடிவடைகின்றன.

*தியானக் கலையை இவ்வாறு கடைப்பிடித்தால் ஒருவர் அடையும் இலட்சியம் என்ன? பதில் பின்வருமாறு—

ஏவம் புத்தே: பரம் புத்த்வா
ஸம்ஸ்தப்யாத்மான மாத்மனு
ஜஹி சத்ரும் மஹாபாஹோ
காமரூபம் துராஸதம் 3:43

புயவலிமை மிக்கவனே—இவ்வாறு அறிவுக்கு மேம்பட்டு விளங்கும் பரம் பொருளைத் தெரிந்து கொண்டு, அகந்தையை ஆன்மாவினுல் அடக்கி, வெல்வதற்கரிய 'வேட்கை' எதிரியைக் கொல்வாயாக.

இது அத்தியாயத்தின் கடைசிச் செய்யுள். அர்ஜுனன் குறிப் பாகக் கேட்ட கேள்விக்கு பகவான் இறுதியாக அளிக்கும் பதில்

* சுவாமிகளின் 'தியானமும் வாழ்க்கையும்' என்ற நூலைப் பார்க்க. தியானக் கலையில் சாதகர் முன்னேறுவதற்குத் தகுந்த பயிற்சி முறைகள் அதில் அடங்கி யிருக்கின்றன.

இதில் அடங்கியிருக்கிறது. 'அறியாமை'யை அகற்றுவதற்கு 'புத்தி' ஒன்றுதான் வழி. நம்முள் இருக்கும் இறைப் பொருளை நேரடியாக அனுபவிப்பதன் மூலம் அது பற்றிய 'அறியாமை' அகலுகிறது. ஆன்மிக அறியாமை காரணமாக வேட்கைகள் எழுகின்றன. அவை புலன், மன அறிவுத் துறைகளில் தோன்றி வளருகின்றன என்று பகவான் முன்பே எடுத்துரைத்தார். தியான முறையைப் பின்பற்றி பொருள், மனம், அறிவு ஆகியவற்றுடன் நாம் கொண்ட பொய்யுறவுகளை அறுத்துக் கொண்டால் விருப்பம் போல திரிந்து கொண்டிருந்த வேட்கை, அறிவுக்கு திரும்பி வந்து அங்கு உறுதியாக நிலைத்துவிடுகிறது.

பொருளுலகுடன் இணைந்து நிற்கும்வரை நாம் நமது தெய்வீக இயல்பை அறிந்து கொள்ளமுடியாது. மாறாக ''துயர மிக்க இச்சிறு அகந்தையே நான்'' என்ற மருட்சியில் ஒவ்வொருவரும் உழன்று கொண்டிருப்போம். நமது இறைத் தன்மையைத் தெரிந்து கொண்டவுடன், 'ஆன்மாவிடம்' அகந்தை அடங்கி நடந்து கொள்ளும். முழுமை பெற்ற புத்தரின் வாழ்க்கையில் அகந்தை ஒருவருடைய தெய்வீகத் தன்மைக்கு அடங்கி நடந்து கொள்ளுவதைப் பார்க்கிறோம். கோரிக்கை தூண்டுதல் எதுவும் அவருடைய உள்ளத்தில் தலையெடுக்க இயலவில்லை. அப்படி எடுத்திருந்தாலும் அவற்றுக்கு இடமில்லை. அவருடைய அக வாழ்வைச் சீர்குலைக்கும் சக்தி அதற்கு இல்லை.

வாழ்க்கையை ஆக்கபூர்வமாக புனரமைப்புச் செய்து கொள்ளும்படி கீதை கூறுகிறது. அதை ஒதுக்கித் தள்ளி விடும்படி சொல்லவில்லை. நினைத்து பார்க்கும் போது, கீதையின் இலட்சியம் மிக சுவாரசியமாக இருக்கிறது. தொழுநோய் பிடித்தவனின் துன்பமிக்க புலன்களிலிருந்து வடியும் நீர் போன்றது இவ்வேட்கைகள். அவற்றைப் போக்குவதற்கு, கிருஷ்ணர் அளவற்ற அன்பு கொண்டு, ஒரு மருந்து சொல்லுகிறார். அதை உபயோகித்து செயல்வேகம் குன்றா மனிதனாக, சூழ்நிலைகளின் தலைவனாக உணர்ச்சிகளுக்கு அடிபணிந்து விடாதவனாக இருக்கும்படி கூறுகிறார். அவர் கூறுவதை வெற்றிகரமாக நடைமுறையில் கொண்டு வரும் சாதகர் ஒரு நடமாடும் கடவுளாக வாழ்வார் என்பதில் ஐயமில்லை.

(சங்கல்ப வாக்கியம்).

கர்ம யோகம்: இந்த அத்தியாயத்திற்குப் பெயர் ''கர்ம யோகம்''. யோகம் என்ற சொல்லுக்கு ''இணைத்தல்'' என்று பொருள். மனிதனின் சுய வளர்ச்சியில் தாழ்ந்ததை உயர் நிலையுடன் இணைக்கும் முறையை இது குறிப்பிடுகிறது. நம்மிடமுள்ள கீழ்த்தரப் போக்குகளை திருத்தி உயர் வாழ்வுக்கு வழி காட்டும் எந்த முறையும் ''யோகம்'' தான். அதைக் கையாள்வதின் மூலம் நமது அகவாழ்வு புற வாழ்வு இரண்டையும் சிறப்பாக நிர்வகிக்கும் திறன் நமக்கு வருகிறது.

அர்ஜுனனைப் போன்றுள்ளவர்களுக்கு சுய வளர்ச்சி பெறும் வழியொன்று இங்கு வகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. தன்னை முறியடிக்கக் கொடுத்திருக்கும் சக்திகளை சந்திப்பதற்காக, போதிய தளவாடங்களுடனும் நன்கு நிறுவப்பட்ட பலமான படைகளுடனும் அர்ஜுனன் நிற்கிறான். எதிர்ப்பு சக்திகளை அழிப்பதற்குத் தயாராகவும் இருக்கிறான். நம்மில் நேர்மையுள்ள ஒவ்வொருவரும் ஒரு அர்ஜுனனே. முனிவராக இருக்கட்டும், அல்லது முட்டாளாக இருக்கட்டும். வாழ்க்கையாகிய போர்க்களத்தில் எல்லோரும் அர்ஜுனனைப் போலவே இருக்கிறார்கள். பிரச்னைகளை எதிர்கொள்வதில் அவர்களுக்கும் தயக்கம் ஏற்படுகிறது. போர்க்களத்தை விட்டு ஓடி விடலாமா என்று தோன்றுகிறது. ஆயினும் எதிரிகள் கைக்கொட்டிச் சிரிப்பார்களே என்ற பயம் மறுபுறம். இப்படி நாமும் கூட வாழ்க்கையில் உழலுகிறோம். வாழ்க்கைப் போரில் தைரியமாக நின்று சமாளிப்பதற்கு கர்ம யோகம் நமக்கு மிகச் சிறந்த பயிற்சி அளிக்கிறது.

# ஞான கர்ம சன்யாச யோகம்

4

(ஞான அடிப்படையில் செயல் துறத்தல்)

முகவுரை

ஆரிய உள்ளத்துக்கு ஆன்மிகத்துறையில் புதுமையில் மோகம் கிடையாது. புதிதாகக் கூறப்படும் ஒன்று தர்க்க உறுதியும், சிந்தனைச் செறிவும் கொண்டதாக இருந்த போதிலும், அது தங்களுடைய் புனிதமான மத நூல்களில் ஏற்கனவே உள்ளது தான் என்று நிரூபிக்கப்பட்டாலொழிய ஆரியர்கள் அதை ஒப்புக் கொள்ளவதில்லை. புதிய் முறைக்கு மரபு நூல்களில் ஆதாரம் இருக்கிறதென்று காட்ட வேண்டும். இந்த நோக்கில் பார்த்தால், நாமெல்லோரும் வேதத்திற்குக் கட்டுப்பட்ட கலாச் சாரத்தினர் என்றே சொல்ல வேண்டும்.

முந்திய அத்தியாயத்தில் புரட்சிகரமான கர்மயோக முறையை கிருஷ்ணர் வெளியிட்டார். அது அவரே சொந்தமாக உருவாக்கிய கொள்கையைப் போல் இருந்தது. அதில் புதுமை ஒன்றுமில்லை என்றும், புராதன வேத விஞ்ஞானத்தின் விளக்கம் தான் அது என்றும் காட்டினாலொழிய, இந்து மரபில் ஊறிய அர்ஜுனன் இதய பூர்வமாக அதை ஏற்காமல் போகக்கூடும். எனவே வேதங்களைத் தோற்றுவித்தவரே இப்போது பேசுகிறு

ரென்றும், பழம் பெரும் உண்மைகளை புதிய உலக நிலைக்கு ஏற்ற வாறு எடுத்துரைப்பதாகவும் அர்ஜுனன் உணர வேண்டுமென்று கிருஷ்ணர் எல்லாவற்றையும் விவரமாகக் கூறுகிறார்.

மற்றொன்றையும் முக்கியமாக கவனிக்க வேண்டியிருக் கிறது. குரு, தமது உணர்ச்சி வேகத்தில், குறிப்பிட்ட வளர்ச்சி நிலைபற்றி அழுத்திக் கூறியது என்று வைத்துக்கொள்ளுவோம். அதிக புத்தி கூர்மையில்லாத சில மாணவர்கள் அதை தவறாகப் புரிந்து கொள்ளலாம். இறைவனை அடைவதற்கு அழுத்திச் சொன்ன அந்தப் பகுதியே போதும், மற்றது முக்கிய மில்லை என்று நினைத்துவிடுகிறார்கள்.

இவ்வாறு தவறாக நினைப்பதைத் தடுப்பதற்காக நான் காவது அத்தியாயம் ஞானயோகமென்ற மகத்தான அறிவுப் பாதையை சுட்டிக் காட்டுகிறது. ஆன்ம உணர்வு என்ற திருக் கோயிலை அடைய விரும்பும் ஒவ்வொரு யாத்திரியும் இந்த முக்கிய வாயில் வழியாகத்தான் உள்ளே வர வேண்டும். இருக் கிற பாதை அது ஒன்றுதான். உள்ளப்பாங்கிலும், அறிவிலும் வெவ்வேறு நிலையிலுள்ள சாதகர்கள் இவ்வாயில் வரை தங்கள் தங்களுக்கு ஏற்ற 'பாதை'களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள லாம். ஆனால் ஆலயத்தினுள் வந்து இறைவனை நேரடியாக தரிசிக்க இந்த வாயில் மூலமாக வந்தேயாக வேண்டும். கீதையில் கிருஷ்ணர் கூறுவதெல்லாம் இந்த யோகம் ஒன்றையே பொரு ளாகக் கொண்டிருக்கிறது என்று சங்கரர் கருதுகிறார்.

மதச்சார்பற்ற சாதாரண விஞ்ஞானங்களை எந்த ஆசிரியரும் கடு முயற்சியெடுத்து மாணவனுடைய மூளையில் எப்படியோ பதிய வைத்துவிடலாம். அவனுக்கு ஆசிரியர் மீது அன்பு, நம் பிக்கை, மரியாதை போன்ற பண்புகள் இருக்க வேண்டியது அவசியமில்லை. இந்த நிலையில் ஆசிரியர் வெறும் 'போதனைக் கருவி'தான். இன்றைய கல்லூரிகளிலுள்ள பேராசிரியர்கள்' பேசும் கருவி'களாக இருப்பதிலிருந்தே இது விளங்கும். மேஜையும், மேடையும் போன்று அவரும் வகுப்பு அறையிலுள்ள மற்றொரு சாதன பொருள். அவ்வளவுதான். ஆனால் கலாச்சார நிலையும், அற்புத ஒழுக்க நெறி முறையும் உயர வேண்டுமானால் மாணவன் பணிவன்புடனும், ஈடுபாட்டுடனும் ஆசிரியரை அணுக வேண்டும். அப்படியிருந்தால்தான் அவர் அளிக்கும் அறிவுரை மாணவனுடைய உள்ளத்தைப் பண்படுத்தும். அர்ஜுனனைப் பொறுத்தவரை, கிருஷ்ணர் அவனுடைய நண்பன். பிருந்தாவனத்தில் ஆடித்திரிந்த ஆயர் குலச் சிறுவன். பழகப் பழக பால் புளிக்கவில்லையென்றாலும், அதன் முக்கியத் துவமும், புனிதத் தன்மையும் ஓரளவு குறையத்தான் செய்கிறது. கிருஷ்ணரிடம் பணிவன்பும் எல்லையற்ற மதிப்பும் தோன்றுமாறு இந்த அத்தியாயத்திலுள்ள விவரங்கள் செய்கின்றன.

கிருஷ்ணன் இங்கே சாதாரணத் தோற்ற உடையைக் கழற்றி விட்டு ''சர்வ வல்லமை பெற்ற, எல்லாமறிந்த தெய்வ உலகத்திற்கு வந்திருக்கிறுர்'' என்ற எண்ணத்தை அர்ஜுனன் உள்ளத்தில் தோன்ற வைக்கிறுர்.

முதலில் கர்ம யோகத்தில் பயிற்சிபெற்று மனமும் அறிவும் ஒருங்கிணையப் பெற்று ஒருவர் தியானத்திஞல் ஆன்மிகப் பேருண்மையில் ஆழ்ந்துவிடும் தகுதி பெறுகிறுர். இந்த அத்தியாயம் ஞான மார்க்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியம் பற்றிக் கூறுகிறது.

ஸ்ரீ பகவானுவாச—

இமம் விவஸ்வதே யோகம்
ப்ரோக்தவான்ஹ—மவ்யயம்
விவஸ்வான் மனவே ப்ராஹ
மனு—ரிக்ஷ்வாக—வேப்ரவீத் 4:1

பகவான் கூறினுர்:

நான் இந்த அழிவற்ற யோகத்தை விவஸ்வானுக்குக் கற்பித்தேன். விவஸ்வான், மனுவுக்குச் சொன்னுன்; மனு அதை இக்ஷ்வாகுவுக்கு கற்பித்தான்.

வேதங்களில் கூறியுள்ளதை மீண்டும் இங்கு புத்திசாலித்தனமாக எடுத்துரைப்பதைத் தவிர தாம் என்று பகவான் பேசத் தொடங்கினுர். இப்படிச் சொல்ல வேண்டிய அவசியமென்ன என்பது அத்தியாய முன்னுரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. தமது இறை நிலையில் லயித்து நினைவுடன் பேசுகையில், படைப்பின் ஆரம்பத்திலேயே வேதப் பேருண்மையை சூரிய தேவனுக்குத் தாமே அறிவூட்டியதாகவும் பிறகு சூரியன் அதைத் தனது மகனும், புராதன இந்தியாவுக்கு விதி முறைகள் வகுத்துக் கொடுத்தவனுமான மனுவுக்குக் கற்பித்ததாகவும், மனு அதை சூரிய வம்சத்தைத் தோற்றுவித்தவனும், அயோத்தியை தலைநகராகக்கொண்டு நீண்ட காலம் அரசு செலுத்தியவனுமான இக்ஷ்வாகுவுக்குச் சொன்னதாகவும் கிருஷ்ணர் தெரிவிக்கிறுர்.

'வித்' (அறிதல்) என்ற சொல்லிலிருந்து வருவது 'வேதம்' என்ற சொல். எனவே வேதமென்ற சொல்லுக்கு ''அறி'' என்று பொருள். மனிதனுள் தெய்விகத் தன்மை இருப்பதையும், அது முழுமையாக மலர்ந்து வெளியாக மணம் வீசச் செய்யும் கலையை பேருண்மை பொதித்த வேதங்கள் விளக்குகின்றன.

மின்சாரம் நிரந்தரமானது. விஞ்ஞானிகள் கண்டுபிடிப் பதற்கு முன்னரே அது இருந்து வந்திருக்கிறது. நாம் அதை மறந்துவிட்டால்கூட, அது இருந்துகொண்டுதான் இருக்கும். அப் படியே, நாம் உணராவிட்டாலும்கூட மனிதனுள் உள்ள தெய் விகத் தன்மையும் இருந்துகொண்டே இருக்கும். அதை அனு பவித்து உயரும் வாய்ப்பு மனிதனுக்கு உண்டு என்பதை விவர மாகக் கூறும் உண்மையும் நிரந்தரமானதே அல்லவா?

பிரபஞ்சத்தின் தோற்றம் சூரியனுடன் ஆரம்பமாகி இருக்க வேண்டுமென்று நவீன விஞ்ஞானமும் ஒப்புக்கொள்ளுகிறது. எல்லா சக்திக்கும் மூலமாக இருந்து சக்தியூட்டுவது கதிரவனே. இம்மகத்தான ஆன்மிகப் பொருள் பற்றி அவனுக்கு முதன் முத லாகத் தாம் போதித்தாக பகவான் கூறும்போது, இது பிரபஞ்சத் தோற்றத்துடன் இணைந்த புராதனப் பேருண்மை என்றும் நமக்குத் தெளிவாகிறது.

மனிதனுள் இருக்கும் தெய்வீகத்தன்மை பற்றி வேத நூல்கள் கூறுவதால், அதன் பொருளை எம் மொழியிலும் முற்றிலும்கொண்டு வந்துவிட முடியாது. ஆழ்ந்த அனுபவம் எதையுமே சொற்கள் மூலம் முழுமையாக விவரிக்க இயலாது. அந்த நிலையில், வேதங்களைப் போன்ற அற்புதப் புனித நூல்களை தாமே படித்தறிய முற்படுபவர்கள் அவற்றை சரியாகப் புரிந்து கொள்ளாமற் போகலாம். எனவே, ஆன்மானுபவம் பெற்றுத் தெளிந்த உண்மையான மகான்களை அணுகி, அவர்களிடம் நேரடி யாகப் பாடம் கேட்பது இந்தியாவில் ஆயிரமாயிரம் ஆண்டுக ளாக இருந்து வரும் மரபு. குரு சிஷ்ய பரம்பரையில் வரும் ஞானம் இது. பிரம வித்தையை ஆதி காலத்தில் கற்றுயர்ந்த சீடர்களைப் பற்றியும் இந்த சுலோகத்திலிருந்து நமக்குத் தெரி கிறது.

ஏவம் பரம்பரா—ப்ராப்த—மிமம் ராஜர்ஷயோ விது:
ஸ காலேனேஹ மஹதா யோகோ நஷ்ட: பரம்தப 4:2

பரம்பரையாக வந்த இம் மெய்யறிவு ராஜரிஷிகளுக்குத் தெரிந்தது. பிறகு இந்த யோகம் காலப் போக்கில் இவ்வுலகி லிருந்து மறைந்து போயிற்று, பரமந்தபா (எதிரிகளைச் சுட்டெரிப் பவனே).

பிரவிருத்தி நிவிருத்தி (செயல், செயலைக் கைவிடுதல்) மார்க் கங்களைப் பற்றிக் கூறும் வேதக் கருத்துகளைக் கொண்ட இந்த யோகம் பரம்பரையாக ராஜரிஷிகளுக்குக் கற்பிக்கப்பட்டு நடை முறையிலிருந்தது. இதனல் மனித இனம் உயர்ந்தது. ஆனல் காலப் போக்கில் பலர் இதைக் கடைப்பிடிக்கத் தவறிவிட்டார் கள். அதனல் இந்த யோக முறை கொஞ்சம் கொஞ்சமாக

மறைந்துவிட்டது. ஆன்மிகப் பயிற்சியின் பொற்காலம் மடிந்து அதற்குப் புறம்பான இருண்ட காலம் சூழ்ந்தது. கொடிய லோகாயதக் கருத்துக்கள் மேலோங்கின. அதைப் போன்ற நிலையில்கூட மக்கள் எக்கேடு கெட்டாவது போகட்டும் என்று கைவிடப்படுவதில்லை. அந்த நிலையிலும் சில மகான்கள் தோன்றி, கொடிய வழிகளிலிருந்து அவர்களைக் காத்து, கலாச் சார முன்னேற்றத்திற்கு நல்வழி காட்டுகிறார்கள்.

கிருஷ்ணர் மகாபாரத காலத்தை சரியாக மதிப்பிட்டு, ''இந்த யோகம் காலப் போக்கினால் இவ்வுலகத்தில் மறைந்து போயிற்று'' என்று கூறுகிறார்.

புலன்களைக் கட்டுப்படுத்த முடியாத பலவீனர்களுடைய கையில் அகப்பட்டு இந்த யோகமும் மறைந்துவிட்டது. வாழ்க்கையில் இலட்சியத்தை மகாபாரதக் காலத் தலைமுறை அடைய முடியவில்லை. எனவே கிருஷ்ணன் பின்வருமாறு கூறினார்.

ஸ ஏவாயம் மயா—தேத்ய யோக: ப்ரோக்த: புராதன:
பக்தோஸி மே சகா சேதி ரஹஸ்யம் ஹ்யேத—துத்தமம் 4:3

அதே புராதன யோகத்தை நான் இன்றைக்கு உனக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஏனெனில் நீ என்னுடைய பக்தன்; எனது நண்பன். (நான் கற்பித்த) இது பரம இர கசியமானது.

முந்திய அத்தியாயத்தில் கூறியுள்ள கர்ம யோகம் பிரபஞ் சத்தின் தோற்ற காலத்தில் தாம் அளித்த அதே மகத்தான உண்மைதான் என்று கிருஷ்ணர் அழுத்தமாகக் கூறுவதன் நோக்கம், வைதீக உள்ளங்களில் ஏற்படக்கூடிய சந்தேகங்களைப் போக்குவதுதான்.

ஒரு ஆசிரியர் உற்சாகமாகவும் திறமையுடனும் கல்வி கற் பிக்க வேண்டுமானால், அவருக்கும் சீடனுக்குமிடையில் ஒரு வகை அன்பு கலந்த நல்லுறவு இருக்க வேண்டும். அர்ஜுனனுக்குத் தம்மிடம் பக்தி இருக்கிறது என்றும் தாம் காட்டுகிற வழியை பின்பற்றும் உறுதி இருக்கிறதென்றும் கிருஷ்ணருக்கு நன்கு தெளிவாகத் தெரிகிறது. ஆசியரியருக்கும் சீடனுக்குமிடையே உள்ள உறவு, 'பணம்கொடு. பேசுகிறேன்' என்பதைப் போன்று வெறும் வியாபார அடிப்படையில் இருக்கக் கூடாது. நட்பும், ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளும் தன்மையும் இருக்க வேண்டும். அன்பும் சுதந்திரமும் தோன்றும் அருமைச் சூழ்நிலையில்தான் மாணவனுடைய அறிவும், மனமும் மலர்ந்து பொலிவுறுகின்றன. தமது உள்ளத்திலுள்ளதைப் புகட்டுவதற்கு அவசியமான தன்மைகள் எல்லாம் அர்ஜுனனிடமிருப்பதால்,

'முற்கூறிய யோகத்தை உனக்கு நான் கற்பித்தேன்' என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

எவ்வளவு அறிவாளியாக இருந்தாலும் தம்முள் இருக்கும் ஆன்மப் பொருளை அனுபவிக்க மற்றொருவர் சொன்னாலொழிய, தெரியாது. அறிவுக்கு மேற்பட்டது ஆன்மா. எனவே தம்முள் நிரந்தரமான மாற்றமில்லாத பேருணர்வு இருக்கிறதென்று ஒருவருடைய அறிவு தானாகவே தெரிந்துகொள்ள முடியாது. அகப்பொருள் அறிவைவிட நுணுக்கமானது. *சிந்தனைக்கு ஒளியூட்டுவதே அதுதான். எனவே இப்பேருண்மை விஞ்ஞானத்தை 'பரம இரகசியமானது' என்று பகவான் கூறுகிறார்.

அவர் முன்னுக்குப் பின் முரணாக ஏதாவது சொல்லுகிறாரோ என்ற சந்தேகம் மற்றவர்களுக்கு ஏற்படக் கூடாதென்பதற்காக அர்ஜுனன் மூலமாக அவர் ஒரு கேள்வி கேட்ச வைக்கிறார்.

அர்ஜுன உவாச—

**அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத:**
**கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி**

அர்ஜுனன் பேசினான்:

நீ பிறந்தது அப்புறம், விவஸ்வான் (உனக்கும்) முன்னால் பிறந்தவன். ஆதியிலேயே நீ இந்த யோகத்தை போதித்தாய் என்று எப்படி நான் தெரிந்து கொள்வது?

இந்த அத்தியாயத்தின் முதலாவது செய்யுளிலேயே காலக் குறிப்பு தவறாக இருப்பது தெரிகிறது. படைப்பின் ஆரம்பத்திலேயே இந்த சாசுவத உண்மையை சூரிய தேவனுக்கு கிருஷ்ணர் எப்படிப் போதித்திருக்க முடியும்? தேவகியின் மகனாகவும், கோகுலத்தில் குழலூதி விளையாடிக் கொண்டிருந்தவனாகவும் கிருஷ்ணரைப் பற்றி அர்ஜுனன் நினைப்பது இயற்கையே. கிருஷ்ணர் பிறந்த நாளையும் அவர் தனது சக காலத்தவராயிற்றே என்பதையும் நினைத்து அர்ஜுனன் கேட்கிறான். விண்ணிலுள்ள மற்ற எல்லா கோள்களுக்கும் முன்பு தோன்றிய சூரியனுக்கு தனது சமகாலத்திய கிருஷ்ணர் எப்படி இந்த யோகத்தைக் கற்பித்திருக்க முடியும்?

ஆழ்ந்து படிக்காதவர்களுக்கு, தேவகியின் புதல்வனே கீதோபதேசம் செய்து கொண்டிருக்கிறார் என்ற தவறான எண்ணம் ஏற்பட்டு விடலாமென்று வியாசர் இக் கேள்வியை எழுப்பி, பதிலும் அளிக்கிறார்.

---

* அத்தியாயம் 3:41

ஸ்ரீ பகவானுவாச:—

ப்ஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன
தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரம்தப 4:5

பகவான் சொன்னர்:

அர்ஜுன, நானும் நீயும் பல பிறவிகள் எடுத்தாகி விட்டது. அவையெல்லாம் எனக்குத் தெரியும், உனக்குத் தெரியாது—பரந்தபா.

புனிதமான இந்து மத நூல்களை கற்றுயர்ந்த மகான்களின் பொறுமைக்கும், மற்றவர்களுடைய கஷ்டங்களை அறிந்து கொள்ளும் சக்திக்கும் எல்லையே இல்லை. அதை அறிவுபூர்வமான ஒரு தீரச் செயல் என்றே சொல்லவேண்டும். மற்றவர்களுக்கு வரக்கூடிய எல்லா வகையான சந்தேகங்களையும் தீர்ப்பதற்கு அவர்கள் மிக உற்சாகத்துடன் முன் வருகிருர்கள். இந்த இடத்தில், இறையியல்பு கொண்ட பரம் பொருள் தாமே யென்றும், படைப்பின் தொடக்கத்தில் பிரம்ம வித்தையை சூர்ய னுக்கு அளித்ததும்கூட தாமேதான் என்றும் கிருஷ்ணன் விளக்கு கிருர்.

புராண இலக்கியங்களில் கண்ட அவதாரக் கொள்கை இப் பகுதியில் விவரிக்கப்படுகிறது. வெளிநாட்டினருக்கு இந்து தத்துவத்திலுள்ள இப்பகுதியும், இதில் பொதிந்துள்ள நம்பிக்கை யும் மிகக் குழப்பமளிப்பதாகத் தோன்றுகிறது. இதைப் பற்றி பலர் அவ்வாறு குழப்பக் கருத்துக்களைக் கூறியிருக்கிருர்கள். மாக்ஸ் மியூலர் அவதாரக் கொள்கையை கடுமையாகத் தாக்கி யிருக்கிருர்.*

படைப்பைப் பற்றிய வேதாந்தக் கருத்தைப் பின்னணி யாகக் கொண்டு இக்கொள்கையை நாம் சிந்தித்துப் பார்த்தால், நமக்கு இது அவ்வளவு கஷ்டமாகத் தோன்ருது. எல்லையற்ற பேருண்மைப் பொருள் 'அகர்ம' (சத்துவ)த்தின் மூலமாக வெளி யாகும். போது இறைத் தத்துவம் தோன்றுகிறது. இது வேறு ஒரு நூலில் ** மனிதனின் வீழ்ச்சியில் *** விளக்கப்பட்டிருக்கிறது. கிருஷ்ண பகவானே தமது எல்லையற்ற சுதந்திரம் காரணமாக மனித உருவம்கொண்டு, அழியும் மாந்தர்களிடையில் அழிவிலா

---

* . அவதாரக் கொள்கை வெறும் தத்துவப் பிதற்றல். பிரிக்க முடியாததைப் பிரித்து பார்க்கும் உபயோகப ற்ற வேலை என்று மாக்ஸ் மியூலர் கூறுகிருர்.

** சுவாமிகள் எழுதியுள்ள 'Kindle Life'

*** கேனுேபநிடத்தில் சுவாமிகள் எழுதிய விளக்கவுரையில் காண்க.

இறைவனாக விளையாடிக் கொண்டிருக்கிறார். ஆனால் அவருடைய தெய்வீக உணர்வு இடைவிடாது திகழ்ந்து கொண்டிருக்கிறது. இதையெல்லாம் அவரே இந்தப் பகுதியில் பிறகு கூறுகிறார்.

உயிரினம் எதுவுமே தற்செயலாக உருவெடுத்தது என்று சொல்ல முடியாது. டார்வின் கொள்கையை எடுத்துக் கொண்டாலும் ஒவ்வொரு மனிதனும் தனது பரிணாம முன்னேற்றத்தின் விளைவாக இவ்வுலகில் பிறக்கிறான் என்று அக்கொள்கை கூறுகிறது. உருவெடுத்த ஒவ்வொரு உயிரும் அதனுடைய அகந்தையின் நீண்ட சுயசரிதையை எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. அது பல்வேறு உருவங்களில் இருந்து வளர்ந்து தற்போதைய உருவாக்கத்திற்கு வந்திருக்கிறது. ஒவ்வொரு வாழ்விலும் அந்த அகந்தை தனது செயலியக்கத்தைத் தொடங்கியவுடன், அதிருஷ்டவசமாக தனது கடந்த வரலாறு முழுவதையும் மறந்து விடுகிறது. பழைய 'வாசனை'யை மட்டுமே அது சுமந்து கொண்டு வருகிறது. ஆனால் எக்காலத்தையும், எல்லாவற்றையும் அறிந்த கிருஷ்ண பகவானுக்கு தாமும், அர்ஜுனனும் பல வாழ்க்கைகளை வாழ்ந்து இங்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. ஆகவே 'அவை எல்லாம் எனக்குத் தெரியும்'; உனக்குத் தெரியாது' என்று கூறுகிறார்.

''அப்படியானால் நிரந்தரப் பொருளாகிய நீ, தர்மமோ அதர்மமோ இல்லாதபொழுது எப்படிப் பிறவி எடுத்திருக்கிறாய்?''

அஜோபிஸன்—னவ்யயாத்மா
பூதானா—மீச்வரோபி ஸன்
ப்ரக்ருதிம் ஸ்வா—மதிஷ்ட்டாய
ஸம்ப—வாம்—யாத்ம மாயயா 4:6

எனக்குப் பிறவி இல்லையென்றாலும், நான் அழியாத்தன்மை கொண்டவனாகவும், எல்லா உயிரினங்களின் தலைவனாகவும் இருந்த போதிலும், என் இயல்புக்கு அதிபதியாகிய நானே எனது மாயையினால் பிறவி எடுக்கிறேன்.

வியாசர் ஒரு புதிய கருத்தை இங்கு தைரியமாக உருவாக்கித் தருகிறார். கீதையில் மிக அற்புதமான கருத்து இது. ஒப்புயர்வில்லாப் பரம் பொருள், தனது எல்லையற்ற சுதந்திரத்துடன், குழப்பத்தில் உழலும் குறிப்பிட்ட ஒரு தலைமுறையினருக்கு உதவுவதற்காக உருவெடுத்து வருகிறார். 'அறியாமை' யுள்ளவர் போல் அவர் நடிக்கிறாரே தவிர, உண்மையில் அறியாமை வாழ்வு அவருக்கு இல்லை. சாதாரண மனிதன் அறியாமை (அவித்யை)க்கு இரையாகிறான். ஆனால் பகவானிடம் மாயை அடி பணிந்து நிற்கிறது. ஒரு மோட்டார் காரை ஓட்டுபவர் தனது

கடமைக்குக் கட்டுப்பட்டவர். அதன் சொந்தக்காரரோ அதற்கு எஜமானர். தமது நோக்கம் போல அவ்வண்டியை எஜமானர் பயன்படுத்துகிறார். தாம் நினைத்த இடத்திற்குச் சென்றவுடன் சுதந்திரமாக வண்டியிலிருந்து இறங்கி விருப்பம்போல் வேலை பார்க்கச் சென்று விடுகிறார். ஆனால் அதை ஓட்டுகிறவர், வண்டியுடன் வண்டியாகக் கட்டுண்டு, அதிலேயே உட்கார்ந்திருக்கிறார். ஜடப்பொருள்களால் தோன்றிய 'உடல்' என்ற உறையை அவர் விருப்பம்போல் ஒரு கருவியாக உபயோகித்துக் கொள்கிறார். படைப்பைக் காக்கும் விளையாட்டுப் பொருள்களில் இதுவும் ஒன்று.

இவ்வாறே பகவானுக்கு பிறவியுமில்லை; மாற்றங்களுமில்லை. தமது இயல்பிலேயே இருந்து எப்போதும் திளைத்துக் கொண்டிருக்கிறார். ஜடப் பொருளுக்கு அவர் எஜமானனாக இருந்து வருகிறார். மாயையைத் தம்முடைய கட்டுப்பாட்டில் முழுமையாக வைத்துக்கொண்டு, தாம் விரும்புவதால், இவ்வுலகில் அவதரிக்கிறார். தமது இறை நிலை அவருடைய உள்ளத்தில் எப்போதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அவருடைய தனி உரிமையைத் தட்டிக் கேட்பதற்கு எதனாலும் முடியாது. மனிதர்கள் தங்களுடைய கடந்த காலக் கர்மத்தின் கட்டாயத்திற்கு உட்பட்டு பிறக்கிறார்கள். இயற்கைக்கு அடிமையாக இவ்வுலகத்தில் வாழ்கிறார்கள். ஆனால் பகவான் எவ்வித கர்மத்தின் விளைவாகவும் உருவெடுத்து வருவதில்லை. அவர் வாசனைகளினால் கட்டுண்டவர் அல்லர். மாயையின் விஷமத்தனம் அவரிடம் பலிக்காது. அவர் எல்லா நிலைகளிலும் சுதந்திரமானவர்.

நமது கனமான மோட்டார்சைக்கிளை வேலைக்காரனிடம் கொடுத்து, அதில் பெட்ரோல் போட்டுக்கொண்டு வரச் சொல்லுகிறோம். அவ்வேலையைக் கூர்ந்து கவனிப்பவர்களுக்கு இங்கு பகவான் சொல்லுவது ஓரளவு தெளிவாகும். அந்த மோட்டார் சைக்கிளை அவன் தள்ள முடியாமல் தள்ளிச் செல்கிறான். அவன் படும்பாடு 'ஐயோ கடவுளே' என்று முறையிடுவதைப்போல் இருக்கும். குறுக்கே சாலையைக் கடப்பதற்குள் ஒரே தத்தளிப்புத் தான். அது போன போக்கில் அவன் போவானே தவிர, அவன் இழுக்கும் வழிக்கு அது வராது. மிக கனமான வண்டி அல்லவா?

அவனிடம் கொடுக்காமல் அதை சொந்தக்காரரே பெட்ரோல் வாங்குவதற்கு ஓட்டிச் செல்லுகிறார். அல்லது தள்ளிச் செல்லுகிறார்—என்றால், அதை எவ்வளவு சுலபமாக சந்தோஷமாக செய்கிறார் தெரியுமா? அவரிடம் அடிமையாக நடந்து கொள்ளும் அதே வண்டி வேலைக்காரனுடன் மல்லுக்கு நிற்கிறது!

வண்டியின் விசை பற்றியும், ஓட்டும் விவரங்கள் பற்றியும்

தெரியாதவனுக்கு அது பெரிய தொல்லையாகவும், பொறுப்புச் சுமையாகவும் இருக்கிறது. எல்லாம் தெரிந்த பகவானுக்கும் இப்பிரபஞ்சம் ஒரு பிரச்னையே அல்ல. அவர் ஒரு உடலை மேற் கொள்ளும் போது, அதன் உட்கருவிகளும், அவயவங்களும், விருப்பங்களும் அவருடைய விருப்பப்படி ஆடுகின்றனவே தவிர, அவரை ஆட்டிப் படைக்கும் சக்தி அவைகளுக்கு இல்லை.

உலகில் கண்காணும் தெய்வமாக நடமாடும் ஒருவர், எவ்வளவு பூரண சுதந்திரத்துடன் வாழ்கிறார் என்பதை இச் சுலோகத்தில் உள்ளதைவிட அழகாக, சுருக்கமாக எடுத்து வைக்க முடியாது.

''ஆனால் எல்லையிலா ஒன்று ஒரு எல்லைக்குட்பட்டு, வரைய றைக்குள் அடங்கி அவதரிக்கிறது. எந்த நிலையில் அது நடக் கிறது?'' இந்தப் பிரச்னைக்கு பதில் பின்வருமாறு:

யதா யதா ஹி தர்மஸ்ய
க்லானிர்—பவதி பாரத
அப்யுத்தான—மதர்மஸ்ய
ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் 4:7

தருமம் நலிந்து அதருமம் எப்பொழுதெல்லாம் மேலோங்குகிறதோ, அப்பொழுதெல்லாம் நான் (உடல் எடுத்து) உலகில் தோன்றுகிறேன், பார்த்தா.

'தருமம் நசித்துச் சாயும்போது எனக்கு நானே ஒரு உடலைப் படைத்துக்கொண்டு இங்கு வருகிறேன்' என்று பகவான் கூறு கிறார். தருமமென்பது வாழ்வு நியதி. இதற்கு முன்பே விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது.* அந்த நடைமுறை விதி ஒரு புனிதமான உண்மைக் கருத்தை வலியுறுத்துகிறது. சமுதாயத்திலுள்ள பெரும்பான்மையான மக்கள் அதை மீறும்போது, மனித உருவத்திலுள்ள மிருகங்கள் உலகில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி விடுகின்றன. மக்கள் எல்லோரும் ஒன்று கூடி, ஒத் துழைத்து வாழும் குடும்பம் போல இருப்பதில்லை. கண்ணிய வாழ்க்கையும், புத்திசாலித்தனமான நடவடிக்கைகளும் மறைந்து விடுகின்றன. வரலாற்றில் இதைப் போன்ற இருண்ட காலங்கள் வரும்போது, ஒரு மாபெரும் தலைவர் தோன்றி நல் வாழ்வுக்கு மீண்டும் வழிகாட்டி மக்களை நடத்திச் செல்லுகிறார். உயர்ந்த மதிப்புக்களையும், ஒழுக்க நெறியையும் நிலைநாட்டு வதுடன் நின்று விடாமல் தீய வழிகளையும் அடியோடு அவர் ஒழித்து விடுகிறார்.

இதற்காகவே எல்லை வரைகளைக் கடந்து இறைவன் தலைவர் உடை தரித்து உலகில் தோன்ற வேண்டியதாகிறது. ஒரு பெரும் தொழிற்சாலை முதலாளி அவ்வப்போது தொழிலாளிகள்

---

* அத். 1 முன்னுரையின் கடைசிப் பகுதி.

அணியும் தடித்த செருப்புக்களை மாட்டிக்கொண்டு தொழிற்சாலையைச் சுற்றி பார்வையிடுகிறார். ஏதோ சில கோளாறுகள் இருப்பதாகத் தெரிந்தால் அவற்றைத் தீர்த்துவைக்க வருகிறார். சூறாவளியில் எழும் தூசிப் படலத்தைப் போல நாலு பக்கமும் சூழ்ந்துள்ள தூசியில் தொழிலாளியுடன் தொழிலாளியாக நின்று, அவர் தவறுகளைத் துருவி ஆராய்கிறார். அப்பொழுது கூட அவருக்கு 'இத் தொழிற்சாலையின் அதிபர் நானே' என்ற உணர்வு போவதில்லை. பன்மையாகத் தோன்றும் உலகத்தில் அடிப்படையிலுள்ள அழியா ஒருமைப்பொருள், சீர்கெட்ட மனித இனத்தைத் தூய்மையாக்குவதற்காக உருவம் கொள்கிறார்.

இந்நோக்கம் நிறைவேறுவதற்கான உடலை தாமே படைத்துக் கொள்ளுவதாக பகவான் இங்கு தெளிவாகக் கூறுகிறார். அவ்வுடலில் இருந்த போதிலும், அதன் தன்மையுடன் எவ்வித உறவும் கொள்ளா தெய்வீக சுதந்திரம் அவருக்கு இருக்கிறது. ''அப்போது நான் உருவம் கொண்டு வெளியாகிறேன்'' என்ற வார்த்தைகளிலிருந்து தெரிகிறது. அவர் அப்படிச் செய்வது எதற்காக?

பரித்ராணாய ஸாதூனாம்
விநாஸாயசதுஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே 4:8

நல்லோரைக் காக்கவும், கொடியோரை அழிக்கவும், அறவழியை நிலைநாட்டவும் நான் யுகந்தோறும் பிறப்பு எடுக்கிறேன்.

எங்கும் பரந்திருக்கும் பரம் பொருளுக்கு கோரிக்கை தோன்றினாலொழிய தன்னைத் தானே வெளிப்படுத்திக்கொள்ள முடியாது. கோரிக்கை இல்லையேல் செயலுமில்லை. மின்சாரம் வெளிப்படுவதற்கு ஒரு சாதனம் வேண்டுமல்லவா? அதைப் போல், தெய்வீக அவதாரமாகவோ, அசட்டு அகந்தையாகவோ— எந்த உருவத்தில் தோன்ற வேண்டுமானாலும் அதற்கு ஒரு கோரிக்கை ஏற்பட வேண்டும். மிகைப் பொருள் கரைசலை அப்படியே வைத்துவிட்டால், அதில் எவ்வித மாற்றமும் தோன்றாது. ஆனால் அப்பொருளின் ஒரு சிறு தூள் அந்த நீரில் விழுந்தவுடன் கரைசலில் உள்ள மிகைப் பொருள் அவ்வளவும் மணியுருவம் பெற்று வெளியாகிவிடும். அவ்வாறே இயக்கத்தின் உறைவிடமாகிய பரம் பொருள் எதுவும் செய்யலாம். ஆனால் செய்வதில்லை. ஒரு கோரிக்கை தோன்றினாலொழிய உருவெடுப்பதில்லை. அது புனித் நோக்கமாக இருக்கலாம். நல்ல அல்லது கெட்ட கோரிக்கையாகவும் இருக்கலாம். ஆனால் கோரிக்கை என்று ஒன்று தோன்ற வேண்டும்.

கிருஷ்ணவதாரத்தின் நோக்கம் இங்கு எடுத்துரைக்கப்படுகிறது. இறைவன், அற்புத ஆயர் குலச் சிறுவனாக, எல்லாரையும் அன்பின் அரவணைப்பில் ஈர்க்கும் நீல வண்ணக் கண்ணனாகத் தோன்றியுள்ளதற்கு மூல காரணமான 'கோரிக்கை'யை வியாசர் மிக நன்றாகக் கூறுகிறார்.

உலகத்திற்குப் பணி புரியும் சுயநலமற்ற ஆர்வம் ஒரு புனிதமான கோரிக்கை என்பது உண்மைதான். ஆனால் அதுவும் கோரிக்கையே அல்லவா? 'நல்லோரைக் காக்க வேண்டும்' என்று இறைவன் தொடங்கும்போது தாம் மாயையின் எஜமானனாயினும் மாயையின் கட்டாயத்தினால் 'கொடியோரை அழிக்கும்' மற்றொரு வேலையையும் சேர்த்துச் செய்ய வேண்டியிருக்கிறது.

'அழித்தல்' என்பதற்கு மனிதர்களைக் 'கொல்லுதல்' என பொருள் கொள்வதைவிட அவர்களுடைய உள்ளத்திலுள்ள ''கொடுமைப் போக்குகளை அகற்று''வதாகப் பொருள் கொள்ளுவது சிறந்தது. அழுக்குத் துணிகளை பெட்டியிலிருந்து எடுத்துவிட்டால், புதியவற்றை அதில் வைப்பதற்கு இடம் கிடைக்கிறது. அதைப் போல உலகில் மகான்கள் நல்லவர்களை ஊக்குவிக்கும்போது அதைப் பார்த்துக் கெட்டவர்களும் திருந்தத் தொடங்குகிறார்கள். சமூகத் தோட்டத்தில் நச்சுப் பாம்புகள் நுழைந்து வாழ்வைப் பாழாக்கி விடாமல் மகான்கள் பாதுகாக்கிறார்கள்.

கிருஷ்ணருடைய தெய்வீக இயல்புபற்றி அர்ஜுனனுக்குத் தெரியாது. அதனால்தான் அவர் தம்மை யாரென்று வெளியிட வேண்டிய அவசியம் நேரிடுகிறது. அர்ஜுனன் அவரை ஒரு சாதாரண மனிதனாக நினைத்தே பேசிக் கொண்டிருந்தான் என்பது முதலாவது அத்தியாயத்தில் அவன் கூறிய வாதங்களிலிருந்தே தெரிந்தது* கடவுள் அருளினால் வெற்றி கிடைக்குமென்று நம்பாத ஒரு நாத்திகனாக இருந்தாலொழிய வேறு எவரும் அப்படிப் பேச மாட்டார்கள். ஆயினும் கிருஷ்ணர் அவனை ''குற்றமில்லாதவன்'' ''நண்பன்'' ''பக்தன்'' தமது உதவியைப் பெறத் ''தகுந்தவன்'' என்றெல்லாம் கூறுகிறார். அர்ஜுனனும் ஒரு குழந்தையைப் போன்று. மாசற்ற உள்ளத்துடன் ''நீதான் வழிகாட்ட வேண்டும், நான் உனது சீடன்'' என்று வேண்டிக் கொள்ளுகிறான். அவனுடைய மனப்பூர்வமான வணக்க நிலையை இது தெளிவாகக் காட்டுகிறது. ஆனால் கிருஷ்ணரை இறைவனாகப் புரிந்து கொண்டானா என்பதுதான் பிரச்னை. அவன் அவ்வாறு புரிந்து கொள்ளவில்லை.

தமது 'சுயசரிதை'யை அவர் கூற வேண்டிய அவசியம் என்ன? அதன் காரணம் அடுத்த சுலோகத்தில் இருக்கிறது.

---

* அத். 1—20க்கு பிறகுள்ள சுலோகங்கள்

ஜன்ம கர்மச மேதிவ்யமேவம்
யோ வேத்தி தத்வத:
த்யக்த்வா தேஹம் புனர் ஜன்ம
நைதி மாமேதி ஸோர்ஜுன 4:9

எனது தெய்வப் பிறவியையும், செயலையும், இப்படி யார் உண்மையான முறையில் அறிகிறரோ அவர் இவ்வுடலைக் கைவிட்ட பிறகு மீண்டும் பிறப்பெய்துவதில்லை; அவர் என்னை வந்து அடைந்து விடுகிறர், அர்ஜுன.

முதலில் அவதாரத்தின் காரணம், முறை ஆகியவற்றை கிருஷ்ணர் பொதுவாக விளக்கினர். இதைப் பற்றி இடையருது சிந்தித்து, அவருடைய தெய்வப் பிறவியையும் செயலையும் தெரிந்து கொள்ளுவோர் தளைகளிலிருந்து விடுபட்டு இறை நிலையை அடைகிறர்கள் என்று பகவான் அறிவிக்கிறர். சும்மா அறிவினல் தெரிந்து கொள்ளுவதைப் பற்றி மட்டும் அவர் பேச வில்லை என்பது ''உண்மையான முறையில்'' (தத்வத:) என்ற சொற்களிலிருந்து தெரிகிறது. ஒப்புயர்வில்லா ஆன்மீகப் பொருள் எந்த சமயத்தில் எப்படி நம்மில் அவதரிக்கிறது என் பதை உள்ளுணர்வின் அனுபவத்தில் தெரிந்துகொள்ள வேண் டும். இன்று வரையறைகளுக்கு உட்பட்ட மனித விலங்குகளாக நாம் வாழ்ந்து வருகிறோம் என்பது உண்மைதான். ஆனல் நமது உள்ளத்தில் சுயநலமற்ற பரிசுத்த கோரிக்கைகள் தோன்றும் சில நேரங்களில், நம்மிடம் மறைந்துள்ள உயிரொளி திடீரென்று சுடர்விட்டு எழுந்து நாமே எதிர்பாராத அதீத சக்தியை அளித்து வெற்றி தேடித் தருகிறது.

ஆன்மீக வளர்ச்சி பெறுவதற்கு ஆண்டவனின் அற்புத உருவத்தை ஆழ்ந்து வழிபடுவது ஒரு முறை. அவரை உருவ மில்லாப் பரம் பொருளாக தியானித்து, அந்த சலனமில்லா நிலையில் இரண்டறக் கலந்து விடுவது மற்றெரு முறை. இந்த இரண்டுமே சம சிறப்புப் பெற்றவை, என்ற பொருள் இந்த சுலோகத்தில் மிக நுணுக்கமாகப் பொதிந்திருக்கிறது. பகவா னுக்கு உருவம் எதுவுமில்லை என்று வேதாந்த தொழிற் துறையில் ஈடுபட்ட சிலர் கூறுவார்கள். வெறும் நிழலைத்தான் அவர்கள் தாக்குகிறர்கள். மனப்பூர்வமாக ஈடுபடுகிறவர்கள் சகுணப்பிரம்மமாக ஒரு உருவத்துடனே அல்லது உருவமற்ற நிர் குணப் பிரம்மமாகவோ கடவுள் உபாசனையில் ஈடுபடலாம். இரு வகை வழிபாட்டின் மூலமாகவும் இலட்சியத்தை அடைய லாம் என்பதில் சந்தேகமில்லை.

ஒப்புயர்வற்ற நிறைவு நிலையை இங்கு கிருஷ்ணர் விவரிக் கிறர் . மீண்டும் பிறவாதிருக்கும் ஆன்ம மயமான வாழ்வு அது. தோற்ற கால வேத இலக்கியத்தில் இதை 'சாவு இல்லாத நிலை'

(அமரத்துவம்) என்று குறிப்பிடுகிறார்கள். பிற்கால வேத இலக்கியங்கள் இதைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றிக் கொண்டு வந்து மீண்டும் 'பிறவா நிலை'யை (அஜ:) 'நிரந்தர நிலை' என்று கூறுகின்றன. அக்காலத்தில் அறிவு எந்த அளவுக்கு முன்னேறியது என்பதை இக்கருத்தின் வளர்ச்சி எடுத்துக் காட்டுகிறது. சமூகம் போதிய முதிர்ச்சி பெறாதபோது சாவு என்பது மிக பயங்கரமானதாகத் தோன்றியது. ஆனால் அதே சமூகம் வளர்ச்சி பெற்று உயரும்போது சாவைவிட, மீண்டும் பிறவியெடுக்கும் சாத்தியக்கூறுதான் மேலும் பயங்கரமானதாக இருக்கிறது. மீண்டும் பிறந்து இந்த தாறுமாறான சூழ்நிலையில் துன்பச் சகதியில் மாட்டிக்கொண்டு மீண்டும் தத்தளிக்க வேண்டுமா? இப்பிறவியே வேண்டாம் என்று அவர்களுக்குத் தோன்றுகிறது.

சாவின்மையும், மறுபிறவியின்மையும் ஒன்றுதான். பிறந்துவிட்ட ஒன்றுதான் இறக்க முடியும். ஆயினும் அதைச் சொல்லும் முறை மாறியிருப்பது பிற்காலத்தில் வேதங்களை ஊன்றிப் படித்தவர்களுடைய அறிவு முதிர்ச்சியை காட்டுகிறது.

ஏதோ இந்த சமயத்தில் அர்ஜுனனுடன் வாதம் புரிவதற்கு வசதியாக இருக்கிறதென்பதற்காக கிருஷ்ணர் இந்த விமோசனக் கொள்கையைப் பற்றி பேசவில்லை. புராதன காலத்திலேயே இவ்வழியைப் பின்பற்றிய பலர் இந்த பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுதலை பெற்றிருக்கிறார்கள்.

வீத—ராக—பய—க்ரோதா
மன்மயா மாமுபாச்ரிதா:
பஹவோ ஜ்ஞான—தபஸா
பூதா மத்பாவ—மாகதா: 4:10

பற்றுதல், பயம், கோபம் ஆகியவற்றை அறவே கைவிட்டு, என்னிடம் லயித்து என்னைத் தஞ்சம் அடைந்து ஞானத் தீயினால் தூய்மை பெற்று பலர் என்னை அடைந்திருக்கிறார்கள்.

ஆன்மிக முன்னேற்றப் பாதையும் அதன் குறிக்கோளும் இங்கு முழுமையாக விவரிக்கப்பட்டிருக்கிறது. மன அமைதியைச் சீர்குலைக்கும் பற்றுதல்களையோ, அவற்றின் விளைவுகளையோ கைவிடாமல், ஆன்மிக முன்னேற்றமடைய நினைப்பது வெறும் பகற் கனவு. மனத்தைக் கட்டுப்படுத்தி ஆன்ம முழுமை பெறும் கருத்தில் மூழ்கி விட்டால், இம் மாபெரும் வெற்றியிலேயே சாதகர் அடைக்கலம் புகுந்து விடுகிறார். அவருடைய வாழ்க்கையில் ஆன்ம நிறைவு முயற்சி ஒன்றே பிறகு மேலோங்கி நிற்கிறது. இந்நிலையை எட்டிய ஒருவர் மகோன்னத உபநிடத நூல்களைப் படித்து, அவற்றைக் கடைப்பிடிக்கும் தகுதி பெறுகிறார்.

(1) ஒரு மகானை அணுகி அவரிடம் வேதங்களைப் போன்ற புனித நூல்களைக் கேட்டு ஆழ்ந்த அறிவு பெறுதல். (2) அதனுடன் வேதாந்தம் கூறுகிற மகத்தான உண்மைகளின் உட்கருத்தைத் தெரிந்து கொள்ளுவதற்காக அவற்றைப் பற்றி தாமாகவே சிந்தித்து சிந்தித்துத் தெளிவு பெறுதல். (3) கடைசியாக ஒரு நிலைப்பட்ட தியானத்தில் உள்ளத்தை நிலைநாட்டி மெதுவாக, தொடர்ந்து முயற்சித்து, சமநிலை பெறுதல்—இம்மூன்றும் சேர்ந்த கூட்டு முயற்சியே ஒரு சாதகர் ஆன்மிகத் துறையில் வெற்றி பெறுவதற்கான முறை என்று இந்து மதம் கூறுகிறது. வேதாந்தக் கொள்கைகளை ஊன்றிப் படித்து, அவற்றில் கூறியுள்ள கலக்கமிலா அமைதியையும், அன்பு வழியையும் நடைமுறையில் கொண்டு வர முயற்சிப்பதே, இச் சுலோகத்தில் கூறப்படும் 'ஞானத்தவம்.'

இந்தச் 'சுலோகத்தில்' மூன்று பாதைகளும் இணைக்கப்பட்டிருப்பதாக சில உரையாசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். அவர்கள் கூறுவது பின்வருமாறு. முதலாவது வரியில் பாதி, 'செயல் வழி'யை குறிப்பிடுகிறது. செயல் முறையில் பழகினலொழிய வேட்கை, அச்சம், கோபம், இவைகளிலிருந்து ஒருவர் விடுதலை பெற முடியாது. 'என்னிடம் லயித்து, என்னைச் சரணடைந்து' என்ற பகுதி பக்திப் பாதையை வலியுறுத்துகிறது. இதயத்தில் குடிகொண்ட இஷ்ட தெய்வத்துடன் ஒருவன் தன்னை பக்தியால் பிணைத்துக் கொள்ளுகிறான். அவரைத் தவிர தனக்கு வேறு புகலிடம் இல்லையென்று நினைத்து வாழ்கிறான். உண்மைகளை ஆராய்ந்தறிந்து, பரம் பொருளில் லயித்து விடுவதற்கு இடையறா முயற்சியில் ஈடுபடுதல் ஞான மார்க்கம். கிருஷ்ணர் இவை மூன்றையும் பற்றி இச்செய்யுளில் குறிப்பிடுகிறார் என்று சிலர் நினைக்கிறார்கள். இவை வெவ்வேறு வழிகளாகத் தோன்றினாலும் இவற்றின் இலட்சியமே ஒன்றுதான்—'என்னை அடைகிறார்கள்.'

இங்கு கூறப்படும் மூன்றும் நமது உள்ளத்தைப் பண்படுத்தி, முழுமை பெறச் செய்யும் மூன்று வழிகள். ஆன்மிகத் துறையில் கூறப்படும் எல்லாப் பாதைகளுமே உள்ளத்தைத் தூய்மையாக்குவதற்கான நடைமுறைகள். அதாவது அதை உறுதியாக ஒரு நிலைப்படுத்தும் வழிகள். 'நான் என்பது இந்த உடலைத் தவிர வேறில்லை,' என்று சிலர் நினைக்கலாம். சிலர் தம்மை மனத்துடன் இணைத்துக் கொள்ளலாம். வேறு சிலர் தம்மை அறிவின் ஆளுமையாகக் கருதுகிறார்கள். இம்மூன்று வகை சாதகர்களுக்கும் ஒரே வழியைக் காட்டினால், அதனதனுடன் ஒட்டிய செயல் முறைகளை சிலர் ஏற்க முடியாமல் போகும். அது நடைமுறைக்கு ஒத்து வராது.

சாதகர்கள் இம்மூன்றில் எவ்வகையைச் சேர்ந்தவர்களாக

இருந்தாலும், அவர்கள் பின்பற்றும் 'பாதை' எதுவாக இருந்தாலும், இறைப் பேரொளி கிட்டியவுடன் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்படும் ஆன்ம நிறைவு அனுபவம் ஒன்றுதான். இது யாரும் மறுக்க முடியாத உண்மை. ஏனெனில் தெய்வானுபவம் பெற்ற மகான்கள் கூறியுள்ளதைப் படிக்கும்பொழுது, பல்வேறு காலங்களிலும், வெவ்வேறு உலகப் பகுதிகளிலும் வாழ்ந்தவர்களாக இருந்த போதிலும் அவர்கள் கூறும் அனுபவங்கள் எல்லாம் ஒரே மாதிரி இருக்கின்றன.

எல்லோருக்கும் விடுதலையளிக்காமல், சிலருக்கு மட்டுமே 'என்னை வந்து அடையும்' சலுகையை அளிப்பதால் கிருஷ்ணருக்குக் கூட வெறுப்பு விருப்புகள் இருப்பதாகத் தோன்றலாம். ஆனால் கிருஷ்ணர் அந்த சந்தேகத்திற்கும் இடம் வைக்கவில்லை என்பது அடுத்த சுலோகத்தைப் படித்தவுடன் தெரிந்து விடுகிறது.

யே யதா மாம் ப்ரபத்யந்தே
தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்
மம வர்த்மானு வர்த்தந்தே
மனுஷ்யா: பார்த்த ஸர்வஸ: 4:11

யார் எந்த வழியில் என்னை அணுகுகிறார்களோ அதற்கேற்றவாறு நான் அவர்களுக்கு அருள் புரிகிறேன். எல்லா முறைகளிலும் அவர்கள் பின்பற்றுவது என் வழியையே, பார்த்தா,

பற்றுதலோ, வெறுப்போ பகவானுக்கு இல்லை. எல்லாச் செயல்களுக்கும் சாதனைகளுக்கும் காரணமான பிரம்மாண்ட இயக்க சக்தியே அவர். 'பேருள்ள'மென்ற அந்த சக்தியிலிருந்து நமக்கு வேண்டியதை எடுத்துக் கொள்ளலாம். அதற்குத் தேவையான கருவிகள் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை நாம் சரியாக, கவனத்துடன் உபயோகித்தால், நமது இலட்சியத்தை அடையும் வெகுமதி கிடைக்கிறது. தவறாகப் பயன்படுத்தினால் அதுவே நம் அழிவுக்குக் காரணமாகிறது.

எரிசக்திமிக்க பெட்ரோலை மோட்டார் காரில் நிரப்பி ஓட்டுகிறார்கள். நாம் விரும்பும் இடத்திற்கு இட்டுச் செல்லுவதும், சில சமயங்களில் படு குழியை நோக்கிச் சென்று காரையும், அதிலுள்ளவர்களையும் தூளாக்கி விடுவதும் அந்த சக்தியேதான். ஒருவரை பத்திரமாக வீடு சேர்க்க வேண்டுமென்று விருப்பமோ, மற்றவரை எலும்புத் தூளாக்கி மூட்டை கட்டி வைத்துவிட வேண்டுமென்ற நோக்கமோ அந்தச் சக்திக்கு இல்லை. விருப்பு வெறுப்பின்றி பெட்ரோல் தனது சக்தியை மோட்டாருக்கு அளிக்கிறது. அதைச் சரியாக புத்திசாலித்தனமாக உபயோகித்துக் கொள்ளுவது மோட்டார் ஓட்டுபவரைப் பொறுத்தது.

அதைப் போலவே ''உயரியக்கமென்ற முறையில் நான் எல்லோருக்கும் பாரபட்சமின்றி எனது சக்தியை அளிக்கிறேன். அவர்கள் என்னை எப்படி அணுகுகிறார்களோ, அந்த வழியில் நான் அவர்களுக்கு உதவுகிறேன்,'' என்று பகவான் இங்கு கூறுகிறார். வீட்டில் மின்சாரம் வரும் பகுதியில் தொடர்புப் பகுதியைப் பொருத்தினால் அதன் மூலம் ரேடியோ கேட்கலாம். விசிறியை ஓடச் செய்யலாம், நீரை சுட வைத்துக் குளிக்கலாம். நாம் பயன்படுத்தும் முறையைப் பொறுத்து அந்த சக்தி நமக்குப் பயன் அளிக்கிறது. விசிறி சுவிட்சைப் போட்டால் விளக்கு எரியாது. விளக்கு சுவிட்சைப் போட்டால்தான் அது எரியும். இதே மாதிரி, நிரந்தரமான உயிர் சக்தியை நமக்குத் தேவையான முறையில் உபயோகித்துக் கொள்ளலாம். நாம் பயன்படுத்தும் முறையைப் பொறுத்து, அது நம் 'கோரிக்கை'யைப் பூர்த்தி செய்கிறது.

கடவுள் இப்படி எவ்விதப் பற்றுதலும் இல்லாதவராக இருந்தால், உயிரினங்கள் எல்லாவற்றிற்கும் சமமாக அல்லவா அருள் புரிய வேண்டும்? அவர்களுடைய எல்லாக் கோரிக்கைகளையும் நிறைவேற்ற வேண்டும்? ஆனால் நடைமுறையில் என்ன பார்க்கிறோம்? கடவுளை நாடி அழிவிலா நிலைபெற வேண்டுமென்ற கோரிக்கை சாதாரணமாக எல்லா மக்களுக்கும் ஏன் வருவதில்லை? இதற்கு பகவான் அளிக்கும் பதிலைக் கேளுங்கள்.

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம்
யஜந்த இஹ தேவதா:
க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே
ஸித்திர்பவதி கர்மஜா 4:12

இவ்வுலகில் (தங்களுடைய) செயல்களுக்குப் பயன் வேண்டுவோர் தேவர்களுக்கு வேள்விகள் செய்கிறார்கள். அப் பயன் மனிதர் வாழும் இவ்வுலகில் விரைவில் கிடைத்து விடுகிறது.

ஒருவர் நல்வழியில் செல்வதற்கும் தீமையைக் கடைப்பிடிப்பதற்கும் ஆன்ம சக்தியே காரணமென்றால், இவ்வுலகில் அற வழியைக் கடைப்பிடிப்பவர்களுடைய எண்ணிக்கை மிகமிகக் குறைவாக இருப்பது ஏன்? பெரும்பாலோர் தீய வழிகளில் நடந்து கொள்வதையே நாம் காண்கிறோம். ஆழ்ந்து சிந்திக்கும் ஒவ்வொருவருக்கும் இந்த சந்தேகம் எழுவது இயற்கை. இதை எதிர்பார்த்து, கிருஷ்ணர் இதற்கு பதிலும் அளிக்கிறார். வெளியுலக நாட்டத்திற்கும் உள்ளுலகப் பேரானந்தத்தைப் பருகுவதற்கும்—இரண்டுக்கும் சக்தியளிப்பது ஆன்மாதான். அதற்குள்ள சக்தி வேறு எதற்கும் இல்லை. கீழ்த்தரமான பொருளுலகக் கிளர்ச்சிகளைப் பெறுவது சுலபம். எனவே அந்த நாற்றத்தை அனு

பவிப்பதில் மனம் திருப்தியடைகிறது. உலகில் புலன் வேட்கை மிகுதியாக இருப்பதற்குக் காரணம் அதுதான். பெரும்பாலோர் மிருக வேட்கைகள் நிறைந்த வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். அதை அவர்கள் மாற்றிக் கொள்ளுவதற்கு முயற்சித்தாலும் முடிவதில்லை. ''மனிதர்கள் வாழும் இவ்வுலகில் செயல்களுக்கு வெகு விரைவிலேயே பயன் கிடைத்து விடுகிறது.''

பொருள்களுடன் புலன்கள் தொடர்பு கொள்ளுவதன் விளைவாக செயல்கள் தோன்றுகின்றன. அவற்றினால் விரைவில் பயன் கிடைக்கிறது. புலன் மட்டத்தில் பெறும் மகிழ்ச்சி மட்டரக மானதாக இருந்தாலும், அதற்கு நடத்த வேண்டிய போராட்டம் சற்று குறைவு. இன்பமும், அமைதியும் கிடைத்தால் போதுமென்று நினைத்து, நிலையில்லாப் பொருள்களைத் தேடுவதிலும், பெறுவதிலும், அனுபவிப்பதிலுமாக ஒருவன் தனது ஆன்ம சக்தியைப் பயன்படுத்தாது வீணாக்கி விடுகிறான். இது நூற்றுக்கு நூறு உண்மை என்பதை நமது அனுபவம் நமக்கு அறிவுறுத்தும்.

உலக விஷயங்களில் சுலபமாக வெற்றி கிடைக்கிறது என்று மட்டும் இச்செய்யுள் கூறுவதாக நினைக்கக் கூடாது மனிதர்கள் என்ற முறையில் விலங்கு, தாவர வகைகளைவிட நாம் புத்தி சாலித்தனமாகத் திட்டம் வகுத்து இயற்கையிலிருந்து உயர்ந்துவிட இன்பம் பெறும் வாய்ப்பளிக்கிறது. என்பதையும் இந்தச் செய்யுள் சுட்டிக் காட்டுகிறது.

ஆன்ம சக்தியை உபயோகிக்கும் முறையை அடிப்படையாகக் கொண்டு ஒருவர் கீழ்த்தர வாழ்க்கை வாழ்பவர் அல்லது உயர்தர வாழ்க்கை வாழ்பவர் என்று சொல்லிவிடலாம். அவருடைய நோக்கு உள்நோக்கி இருக்கிறதா அல்லது அவர் வெளி நோக்கு கொண்டவரா என்று பார்த்தாலே இது தெரிந்துவிடும். ஆனால் வெளி நோக்கு கொண்டவர்களையும், அவர்களுடைய சிந்தனை, செயல் முறை ஆகியவற்றின் தன்மையைக் கொண்டு நான்கு வகையினராகப் பிரிக்கலாம்.

சாதுர்—வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்
குணகர்ம விபாகச:
தஸ்ய கர்த்தாரமபி மாம்
வித்த்ய கர்தார மவ்யயம் 4:13

உள்ளத்தின் தன்மையையும் செயலையும் அடிப்படையாகக் கொண்டு நான்கு வருணங்களை நான் தோற்றுவித்தேன். அதற்குக் காரணம் நானாயினும் நான் செய்கையற்றவன், மாற்றமில்லாதவன் என்பதை அறிவாயாக.

சாதி முறை என்ற பெயரில் இன்று இந்தியாவில் நிலவிவரும்

சமூகக் குற்றத்தை ஆதரிப்பவர்கள், அதைத் தவருகப் பயன் படுத்தி வருகிருர்கள். வருணம் என்பது யோக சாத்திரப் பொருளில் இங்கு உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. அச் சொல் லுக்கு நிறம் அல்லது தன்மை என்று அர்த்தம். முக்குணக் கலவைக்கு திட்டவட்டமான நிறங்கள் உண்டு. உதாரணமாக சத்துவ குண நிறம் வெள்ளை என்றும், ரஜோ குண நிறம் சிவப்பு என்றும், தாமச குண நிறம் கருப்பு என்றும் சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன. ஒருவருடைய உள்ளப் பாங்கும், சிந்தனை களும் அவருடைய தன்மையை நிர்ணயிக்கின்றன. வெளித் தோற்றத்திற்கு சிலருடைய சிந்தனைகள் ஒன்று போலத் தோன்றி ஞலும், அவர்களுடைய மனப்பாங்கில் வேறுபாடுகள் இருப்பது தெளிவாகத் தெரிகிறது.

இப்பாகுபாடு மனித இனம் முழுவதையும் உள்ளடக்கியது. ஆன்மிக முன்னேற்றத் துறையில் ஈடுபட்டவர்களின் வசதிக் காக, அவரவர்களுடைய சுபாவத்தின் அடிப்படையில் இப் பிரிவினை செய்யப்பட்டிருக்கிறது. நாம் தொழில் புரிபவர்கள், டாக்டர்கள், வக்கீல்கள், வர்த்தகர்கள், ரிக்ஷாக்காரர்கள், அரசியல்வாதிகள் என்று பிரிக்கவில்லையா? அதைப் போலவே மக்களுடைய சிந்தனைப் பாங்கை வைத்து, அவர்கள் நான்கு 'சாதி'களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். அரசாங்க நோக்கில் டாக்டர்களும், ரிக்ஷாக்காரர்களும் எவ்வளவு முக்கியமானவர் களோ, வக்கீல்களும் இஞ்சினியர்களும் கூட அவ்வளவு முக்கிய மானவர்களே. எல்லாச் சாதிகளுமே சமூக நலனுக்கு அவசிய மானவை. அவை ஒன்றுக்கொன்று போட்டியாக இல்லாமல், இசைந்து வேலை செய்தால் சமூகம் சிறப்பாக இருக்கும். ஒரு வகுப்பு இல்லாமல் மற்ருென்று நிறைவு பெருது.

பிற்காலத்தில் —அதாவது சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் தோன்றிய ஆதிக்க அரசியல் காரணமாக், வகுப்பு உணர்ச்சிகளில் வெறுக்கத்தக்க போக்குகள் தலை யெடுக்கத் தொடங்கின. அப்போதிருந்த சாதாரண மக்களின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டு தங்களை மேதாவிகள் என்று காட்டிக்கொள்ள விரும்பிய சில கீழ்த்தரப் பண்டிதர்கள் இச்செய்யுளின் சில பகுதிகளை மட்டும் படித்துக் காட்டி மக்களை குழப்பத்தில் ஆழ்த்தி விட்டனர்.

அப்போதைய நிலைகெட்ட பிராமண இந்துவுக்கு ''நான்கு வருணங்களை நான் ஏற்படுத்தினேன்'' என்ற சொற்களை மட்டும் எடுத்துக் காட்டுவது சற்று வசதியளிப்பதாக இருந்தது. மகத்தான ஒரு தெய்வீகக் கருத்தை இவ்வாறு கூறு போட்டதன் விளைவாக இன்று சமூகம் சிதறி நிற்கும் துயர நிலை தோன்றியிருக் கிறது. அதைச் செய்தவர்கள் கடவுள் அருளியதை அவமதிப் பவர்கள். இப்படிப்பட்டவர்களை எப்போதுமே இந்து மதம்

எதிர்த்து சமாளிக்க வேண்டியிருந்தது. வியாசரே இதை மிகக் கவனத்துடன், ''மனிதன் தன்மையையும் (மக்களுடைய) செயல்களையும் வைத்து பாகுபாடுகள் செய்யப்பட்டு இருப்பதாக'' கூறுகிறார்.

வருணமென்ற வார்த்தைக்கு முழு விளக்கம் அளிப்பதனல் இப்போதுள்ள தவறான கருத்துக்களை அகற்றுவதுடன், அப்பாகுபாட்டின் முக்கியத்துவம் பற்றி அறிந்து கொள்வதற்கேற்ற புள்ளி விவரங்களையும் வியாசர் தருகிறார். பிறப்பினுல் ஒருவர் பிராமணராவதில்லை. உயர்ந்த நோக்கங்களையும், சிறந்த சிந்தனைகளையும் வளர்த்துக் கொள்வதன் மூலமே பிராமணத்துவம் அடைய முடியும். புறச் சின்னங்களினுலோ, வெளியுலகத்தில் செய்யும் சில செயல்களினுலோஒருவர் பிராமணராவதில்லை. செயல்களைப் போல சிந்தனைகளிலும் சாத்துவிகமாக இருப்பவர் மட்டும் பிராமணர் என்பதை இவ்விளக்கம் வலியுறுத்துகிறது. சிந்தனையிலும், செயலிலும் ரஜோ குணம் மேலோங்கி நிற்பவர் க்ஷத்திரியர். சிந்தனையில் தாமச குணம் மேலோங்கியிருப்பதன்றி வாழ்விலும் கீழ்த்தர முயற்சிகளில் ஈடுபட்டிருப்பவர்—அதாவது விலங்குணர்ச்சிமிகுந்து உடலின்பத்தையே நாடி செயல் புரிபவர்கள் —சூத்திரர் என்ற பிரிவினையில் வருகிறார்கள். அவரவர்களுடைய குண, கர்ம இயல்புகளைக் கொண்டு இவ்வாறு பாகுபாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதை ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் அதிலுள்ள விஞ்ஞான அடிப்படை நமக்கு நன்கு விளக்குகிறது.

தன்னை மறந்து (மாயையில்) இயங்கும் ஆன்மா அகர்மம், கர்மம், விகர்மம் என்னும் மூன்று வகைகளில் வெளியாவது பற்றி முன்னரே விளக்கப்பட்டது. உயிரோட்டம் இம் மூன்று வாய்க்கால்களில் பாயும் பொழுது வெவ்வேறு சிந்தனைகளும், சஞ்சலங்களும் நடவடிக்கைகளும் தோன்றுகின்றன. உயிரோட்டம் உட்கருவிகளைத் தொடவில்லையென்றால் வாழ்க்கையில் இவ்வளவு சலசலப்புகள் இருக்க இடமில்லை. கிருஷ்ணர் உயிரியக்கத்தின் ஊற்றுக்கால். செயல்களுக்கெல்லாம் தாமே மூல காரணம் என்று அவர் இங்கு அழுத்திச் சொல்லுகிறார். ''அலைகளையும், நுரையையும் உண்டாக்குவது நானே'' என்று கடல் சொல்லுவதில் தவறென்ன? ஆபரணங்களைத் தோற்றுவித்து அவை அவ்வுருவம் பெறுவதற்கு தானே மூல காரணமென்று தங்கம் சொல்லலாம். ஏனென்றால் அவற்றிலிருந்து தங்கத்தை எடுத்துவிட்டால், பிறகு அவை ஆபரணமே அல்ல.

ஆனல் எல்லையற்ற பரம் பொருள் நாம் ஏற்கனவே கூறியவாறு எங்கும் பரவியிருப்பதால், எந்தச் செயலிலும் அது பங்கு கொள்ள முடியாது. ஆகையால் ''நான்தான் வருணங்களைத் தோற்றுவித்தேன்'' என்று அறிவித்து, அதே மூச்சில், ''நான்

செய்கையற்றவன்'' என்றும் பகவான் கூறுகிறார்.

வேதாந்தப் பயிற்சியின் இரகசியங்கள் தெரியாதவர்களுக்கு இதைப் போன்ற பகுதிகள் முன்னுக்குப் பின் முரண்படுவதைப் போல் தோன்றும். 'நான் வண்டியில் உட்கார்ந்து கொண்டு பத்து மைலுக்கு அப்பாலுள்ள ஊருக்கு போய்ச் சேர்ந்தேன்' என்றோ; 'ரயிலைப் பிடித்ததால் நான் இங்கு வர முடிந்தது' என்றோ ஒருவர் கூறினால், அதில் நமக்கு முரண்பாடுகள் தோன்றுவதில்லை. உட்கார்ந்தவர் பத்து மைல் தூரத்தைக் கடந்து எப்படி வந்தார்? ரயிலைப் பிடித்துக் கொண்டால் மட்டும் இங்கு வந்து சேர்ந்துவிட முடியுமா? இருவர் பேசிக் கொள்ளும் பொழுது இவ்வாறு வாக்கியத்தைத் துண்டு போட்டு முரண்பாடு களைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று ஆராய்ச்சி நடத்துவதில்லை. பஸ், ரயில் பயணத்தின்போது உட்கார்ந்து கொண்டோ, தொங்கிக் கொண்டோ இருந்திருக்கலாம். பிரயாணி எப்படி இருந்திருந்த போதிலும் வண்டிகள் ஓடியதால் இடையிலுள்ள தூரத்தைக் கடக்க முடிந்தது. இந்த உண்மையை நாம் புரிந்து கொள்ளுகிறோம். அதாவது, வண்டியின் செய்கையை நமது செய்கையாக்கிப் பேசுகிறோம். இதுவும் அதைப் போலத்தான். மனமும் அறிவும்தான் சுபாவத்தை உண்டாக்குகின்றன. ஆனால் கடவுளே அதை உண்டாக்குவதுபோல் கூறப்படுகிறது. பரம் பொருள் என்ற முறையில் இறைவன் எங்கும் நிறைந்தவர், என்றும் மாறாதவர். எனவே அவர் செயல் புரிவதுமில்லை, உண்டாக்குவதும் இல்லை.

நான் செயல் புரிவதாக நீ நினைக்கிறாய். உண்மையில் நான் செய்கையற்றவன். எனவே—

ந மாம் கர்மாணி லிம்பந்தி
ந மே கர்மபலே ஸ்ப்ருஹா
இதி மாம் யோபிஜானாதி
கர்மபிர் ந ஸ பத்யதே 4:14

செயல்களின் கறை என்மீது படிவதில்லை. செயலின் பயனைப் பெறும் கோரிக்கை எனக்கு இல்லை. இவ்வாறு என்னை அறிந்து கொள்ளுபவன் செய்யும் செயல்கள் அவனைக் கட்டுப் படுத்துவதில்லை.

எக்காலும் பரிசுத்தமான, குறைவிலா முழுமை பெற்ற பரம் பொருள் மீது எவ்விதமான கறையும் படிவதில்லை. தன்னிடம் ஏதோ ஒன்று இல்லை என்றால்தானே கோரிக்கை எழுகிறது? அதைப் போன்ற குறை எதுவுமில்லாத நிறை பொருளே இறைவன். எனவே ''செயல்களினால் என் மீது கறை படிவதில்லை. செயலின் பயனைப் பெறும் கோரிக்கை எனக்கு இல்லை''

என்று ஆன்ம நிலையிலிருந்து கிருஷ்ண பகவான் இங்கு பேசுகிறார். ஆன்மா குறிப்பிட்ட ஒரு மனம் அல்லது அறிவின் மூலம் இயங்கும் போது அது அகந்தையாகிறது. கறைபடுதல் அல்லது கோரிக்கை என்பது அவ்வகந்தைக்குத்தான் உண்டு. இதைப் போன்ற சஞ்சலங்களினால் உள்ளுறை மீது கறை படியும்போது, அதிலுள்ள அகந்தையும் பாதிக்கப்படுவதாகத் தோன்றுகிறது. ஒரு உதாரணத்தின் மூலம் இதை விளக்கலாம்.

பாத்திரத்திலுள்ள தண்ணீரில் சூரிய ஒளி பிரதிபலிக்கிறது. நீர் அசைந்தால் அதில் தெரியும். சூரியனும் ஆடுவதாகத் தோன்றுகிறது. நீர் கலங்கியிருந்தால் பிரதிபலிப்பும் மங்கலாக இருக்கிறது. அதன் மங்கிய தோற்றமும் அசைவும், ஆகாயத்திலுள்ள சூரியனுக்கு இல்லை. அவ்வாறே மனத்தில் தோன்றும் சஞ்சலங்களும், பயன் பெற வேண்டுமென்ற விருப்பங்களும் அகந்தையை பாதிக்கின்றன. ஆன்மா வெறும் உணர்வு பாங்கானது. அகந்தையில் தோன்றும் சஞ்சலங்களின் பாதிப்பு ஆன்மாவை எவ்விதத்திலும் எட்டுவதில்லை.

சுய நிறைவு பெறுவதற்கு வேத நூல்கள் கூறும் நடைமுறைக்கு, வழக்கமாகக் கூறும் விளக்கம்போல் இல்லாமல், இது புதிதாகத் தோன்றுகிறதே—இதற்கு முன்னோடியான உதாரணங்கள் உண்டா என்ற ஐயம் தோன்றலாம். அதற்கு பகவான் கூறுவதைக் கேளுங்கள்—

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம
பூர்வை—ரபி முமுக்ஷுபி:

குரு கர்மைவ தஸ்மாத்—த்வம் பூர்வை:
பூர்வதரம் க்ருதம் 4:15

(ஆன்ம) விடுதலை பெற்ற முற்கால முனிவர்களும் இதையறிந்தே தங்கள் தங்களுடைய கடமைகளைச் செய்து வந்தனர். ஆகையால் நீயும் அவர்களைப் போல் உன் கடமையைச் செய்வாயாக.

'செயல் புரிவது நானல்ல, பயன்பெறும் ஆவல் எனக்கு இல்லை, ஆன்ம நிலை குறையிலா முழுமை பெற்றது' என்பதையெல்லாம் தெரிந்துகொண்ட பிறகு ஒருவருக்கு கோரிக்கையோ, அகந்தையின் வீண் பெருமைகளோ இருக்க இடமில்லை. போன அத்தியாயத்தில் கூறிய கர்மயோக முறையை முற்காலத்தில் மூதறிவு பெற்ற முனிவர்களே கடைப்பிடித்து வந்தனர் என்று கிருஷ்ணர் அறிவிக்கிறார். அதாவது கர்ம யோகம் புதியதல்ல ஆன்ம உணர்வு பெற்ற எல்லா ஞானிகளுமே இதைப் பின்பற்றி வந்தனர் என்று விளக்கப்படுகிறது.

''கர்ம யோகமாகச் செயல் புரியுமாறு நீ சொன்னால்

அப்படியே செய்கிறேன். முற்கால முனிவர் கூட அதைக் கடைப் பிடித்ததாக ஏன் கூறுகிறாய்? நீ சொன்னால் போதாதா?'' என் பதைப் போன்ற கேள்விக்குறி அர்ஜுனனுடைய முகத்தில் தோன்றியிருக்கலாம். எது சரியான செயல் என்பதை நிர்ண யிப்பது மிகவும் கடினமான வேலை. அதிலுள்ள சிக்கலை கிருஷ்ணர் விவரிக்க தொடங்குகிறார்.

கிம் கர்ம கிமகர்மேதி
கவயோப்யத்ர மோஹிதா:
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி
யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே சுபாத் *4:16*

செயல் என்பது என்ன? செயல் புரியாமை என்றால் என்ன? அறிவிற் சிறந்தவர்கள் கூட இது பற்றி குழப்பத்திற்கு உள்ளாகி றார்கள். ஆகையால் கருமத்தை (செயலை)ப் பற்றி உனக்கு விளக்குகிறேன். இதைத் தெரிந்து கொண்டால் நீ (சம்சார) தீமையிலிருந்து விடுதலை பெறுவாய்.

செயலைப் பற்றி விளக்கப் போவதாகப் பகவான் கூறும் போது செயலின் இயல்பு, செயல் புரியாமை முதலியவற்றையும் கூறப் போகிறார் என்று நாம் தெரிந்துகொள்ள வேண்டும். சம்சாரம் என்பது பிறப்பு—இறப்புச் சூழலைக் குறிக்கிறது.

பொருள்களைத் தொடர்ந்து, இவ்வுலகில் ஓடியாடி வேலை செய்வது, 'செயல்' என்று நாம் நினைக்கிறோம். அவ்வாறு விறுவிறுப்பாக, விஷயமறிந்து செய்யும் வேலைகளை அறவே நிறுத்திவிடுவது செயல் புரியாமை (அகருமம்) என்று கருது கிறோம். கருமம், அகருமம் இவைகளைப் பற்றி பொதுவாக நில வும் கருத்து இது. வாழ்க்கையின் அன்றாடப் பிரச்னைகளைப் பொறுத்தவரை இக் கருத்தை ஒத்துக் கொள்ளலாம். ஆனால் தத்துவ நோக்கிலிருந்து பார்க்கும்போது, அவற்றின் கருத்தும், அடையாளங்களுமே மாறி விடுகின்றன.

நமக்குப் புலனாவதைக் கொண்டு ஒரு செயலை முற்றிலும் மதிப்பிட்டு விட முடியாது. நாம் ஆன்மிகத் துறையில் முன்னேறு வதற்கு அது போதாது. நமக்கு வெளிப்படையாகத் தெரியா விட்டாலும், ஒரு செயலுக்குப் பின்னால் பல நோக்கங்கள் மறைந் திருக்கலாம். அவற்றையும் சேர்த்தே நாம் மதிப்பிட வேண்டும். வெளிப்படையாகப் பார்த்து ஒரு செய்கை நல்லதா, கெட்டதா என்று சொல்லுவதற்கில்லை. அதன் அடிப்படை நோக்கம் என்ன என்று பார்க்க வேண்டும்.. ஒரு பழம் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கலாம். உட்கொண்டால் அது மனிதனுடைய உயிருக்கே ஆபத்து வந்துவிடும். நஞ்சுள்ள பழமாக இருக்கக் கூடும். எந்த நோக்கத்திலிருந்து ஒரு செயல் எழுகிறது? அந்த நோக்கமே, செய

லின் தன்மையை நிர்ணயிக்கிறது. கெட்ட நோக்கத்துடன் செய்யப்படும் நல்ல செயலும்கூட மோசமான, குற்றச் செயலாக ஆகிறது.

எனவே செயலுக்கும், செயல் புரியாமைக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்று தெரியாமல் சிறந்த அறிவாளிகள்கூட சில சமயங்களில் திகைப்பு அடைகிறார்கள். கவி என்ற சொல் அறிவாளிகளை குறிப்பிடுகிறது. கவிதை எழுதுகிறவர்களை மட்டுமே கவி என்று இப்பொழுது குறிப்பிடுகிறோம். முற்காலத்தில் ரிஷிகளையும் கவி என்றே குறிப்பிட்டு வந்தனர். உபநிடத உண்மைகளை தீர்க்கதரிசனமாகக் கொண்டு மற்றவர்களுக்குக் கற்பித்த கவிகளே அவர்கள். தெய்வீக உள்ளாவேசம் பெற்று, தாம் கண்ட மகத்தான உண்மைகளை வெளியிடுபவரே கவி.

செயலுக்கும், செயல் புரியாமைக்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டு பிடிப்பது அவ்வளவு சுலபமான வேலையல்ல என்று கூறிய பிறகு எது சரியான செயல் என்பதை விளக்குவதாக அர்ஜுனனுக்குக் கிருஷ்ணர் வாக்களிக்கிறார். அது தெரிந்தால் ஒருவர் எல்லா தீமைகளிலிருந்தும் தம்மைக் காத்துக் கொள்ளலாம் என்றும் பகவான் அறிவிக்கிறார்.

செயல் என்றால் வேலை செய்வது. செயல் புரியாமை என்றால் வேலை செய்யாமல் இருப்பது. இதில் விளக்குவதற்கு என்ன இருக்கிறது என்று சிலர் நினைக்கலாம். ஆனால்—

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம்—
போத்தவ்யம் ச விகர்மண:
அகர்மணஸ்ச போத்தவ்யம்
கஹனா கர்மணோ கதி: 4:17

உண்மையான செயலின் இயல் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அதனுடன், தவிர்க்கப்பட்டுள்ள செயலையும், செயல் புரியாமையையும் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் செயலின் இயல்பு (வழி) நினைத்துக் கூடப் பார்க்க முடியாத அளவுக்கு ஆழமானது.

செயலியக்கமே வாழ்க்கை. செயலியக்கம் முடிவடைந்து விட்டால் மரணம் புகுந்து விடுகிறது. ஒருவர் முன்னேறுவதும், தாழ்வதும் அவருடைய செயலைப் பொறுத்திருக்கிறது. தேங்கிக் கிடக்கும் குட்டை நீர் நாற்றமடிக்கத் தொடங்குகிறது. நீரோட்டமுள்ள ஆற்றில் தண்ணீர் தெளிவாகவும், சுத்தமாகவும் புதிதாகவும் இருந்து கொண்டிருக்கும். வாழ்க்கையும் அப்படித்தான். உயிர் இருக்கும் வரை ஒருவர் தொடர்ந்து சும்மாவே இருந்து கொண்டிருக்க முடியாது. வாழ்வின்

அடிப்படை அது.

ஒருவருடைய வாழ்நாள் முழுவதும் செயல் நிறைந்த தாகவே இருப்பதால், செயல்களின் சாத்தியக் கூறுகள் பற்றி தீர்க்கத் தரிசிகளான நமது முற்கால முனிவர்கள் சிந்தித்து அந்த அடிப்படையில் வாழ்க்கையை மதிப்பிட்டு வந்தனர். அவர்கள் பின்கண்டவாறு செயல் பிரிவினை செய்தார்கள்.




சில சமயங்களில் சுறுசுறுப்பாக வேலை செய்கிறோம். சில சமயங்களில் ஓய்ந்து செயல் புரியாமல் இருக்கிறோம். செயல் புரியாமலிக்கும் போது முன்னேற்றமோ, பின்னேற்றமோ இருக் காது—இருக்க முடியாது. ஆழ்ந்து தூங்கும்போது அல்லது ஒன்றுமே செய்யாமல் முழு ஓய்வெடுத்துக் கொண்டு உட்கார்ந் திருக்கும் போது வாழ்க்கையில் சற்று நேரம் முழு விடுமுறையை அனுபவிக்கிறோம். மனிதனின் பரிணாம முன்னேற்றத்திற்கு இச்சிறு இடைவெளி ஓய்வுகள் உதவவும் முடியாது. அதை தடுக் கவும் முடியாது.

சுறுசுறுப்பாக வேலை செய்யும் காலங்கள் ஒருவருடைய சிறப்புக்குக் காரணங்களாகின்றன. ஆனால் அச் சிறப்பு எவ்வகை வேலைகளை நாம் மேற்கொள்கிறோம் என்பதைப் பொறுத்தது. செயல்களை நமது புராதன முனிவர்கள் இரு வகையாகப் பிரித் திருக்கிறார்கள்— ஆக்கபூர்வமான செயல்கள், அழிவுச் செயல்கள். ஒருவருடைய வளர்ச்சிக்கு உதவக் கூடிய ஆக்கபூர்வமான செயல் களை 'கருமம்' என்றார்கள். நாச வேலைகளை அடியோடு கைவிட வேண்டுமென்று சாத்திரங்கள் கூறுகின்றன. ஏனெனில் மனிதனை அவை பரிணாம முறையில் கீழ்நிலைக்குக் கொண்டு செல்கின்றன. நமது புனித நூல்களில் இவற்றை 'விகர்மம்' என்று குறிப்பிடு கிறார்கள். ஆக்கபூர்வமான வேலைகள் (கருமத்தை) மூன்று வகை களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவை 1. நித்திய கருமம்— தொடர்ந்து செய்யப்பட வேண்டியவை, 2. நைமித்தியக் கருமம்—விசேஷ சந்தர்ப்பங்களில் செய்ய வேண்டிய சிறப்பு

வேலைகள். 3. காம்ய கருமங்கள்—விரும்பத்தக்க விளைவை அல்லது லாபத்தை எதிர்பார்த்து வேண்டுமென்றே சுய நிர்ணயத்துடன் செய்யும் வேலைகள்.

இப்புராதன வேதக் கொள்கையின் அடிப்படையில் சுய முன்னேற்றத்திற்கான கொள்கையொன்றை ஸ்ரீ கிருஷ்ணன் இங்கு விரித்துரைக்கிறார். இடையறு செயலியக்கத்திற்கு இடப் பட்டுள்ள மற்றொரு பெயர்தான் 'வாழ்க்கை' என்று கூறுகிறார். அச் செயலியக்கத்தை கருமம், விகருமம் என்று இரண்டாகப் பிரிக்கலாம். செய்யக் கூடாது என்று சொல்லியுள்ள வேலைகளை (விகர்மத்தை) தவிர்க்கும்படியும், ஆக்கபூர்வமான வேலைகளை (கருமத்தை) செய்யும்படியும் கிருஷ்ணர் கூறுகிறார். விஞ்ஞான பூர்வமாக இப்படிச் செய்யும் ஆராய்ச்சியில், கிருஷ்ணர் கொஞ்சங்கூடத் தயங்காமல், செயல் புரியாமையை (அகருமத்தை) அறவே புறக்கணித்து விடுகிறார்* .

பொருள்துறை, ஆன்மிகத்துறை இவை இரண்டிலும் முன்னேற்றம் பெற நினைத்து விறுவிறுப்புடன் இயங்கும் உண்மையான சாதகன், வாழ்க்கையின் இம் மூவகைப் பிரிவினையை நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று இங்கு கூறப்படுகிறது. ஏனெனில் வாழ்க்கை என்றால் செயலியக்கந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது அல்லவா?

கருமம், விகருமம், அகருமம் என்ற மூன்று வகைப் பிரிவினைகளையும், அழகாகவும், தெளிவாகவும் விளக்கிபின், இம் மூன்றுக்கும் இடையிலுள்ள வேறுபாடுகளைக் கண்டுகொள்வது சுலபமானதல்ல என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

எது எந்த வகையைச் சேர்ந்தது என்று அவர்களால் பிரித்துப் பின்பற்ற முடியாது. ஏனெனில் ''கருமத்தின் இயல்பு நினைத்துக்கூட பார்க்க முடியாத இயல்பு அளவுக்கு ஆழமானது'' என்ற சொல்லுகிறார் கிருஷ்ணர்.

இதில் மறைமுகக் கருத்து ஒன்று நிழலாடுகிறது. வெளிப்படையாகத் தோன்றுவதை மட்டும் வைத்து ஒரு செயலை மதிப்பிடக் கூடாது. அச் செயலின் அடிப்படையான நோக்கத்தை நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்த பிறகே முடிவு செய்ய வேண்டும். நோக்கமோ, கோரிக்கையோ பரிசுத்தமானதாகவும், ஆக்கபூர்வமானதாகவும் இருந்தால், அவருடைய செயலும்

---

* அகரும நிலையை செயலற்ற ஆன்ம உணர்வு நிலையாக சில உரையாசிரியர்கள் நினைக்கிறார்கள். பகவான்' 'செயல் புரியாதவர்' என்று முன்னரே கூறப்பட்டது. அடுத்த செய்யுளில் (4.18) 'அகர்மா' என்ற சொல் உபயோகிக்கப் பட்டிருப்பதைப் பார்த்தால் இப்போது அளிக்கப்படும் விளக்கம் சரியானது என்று தோன்றுகிறது. 'அகர்மா'வை 'செயல் மறை'யென்று சொல்லலாம். சாத்வீக அமைதியும், ஆனந்தமும் நிலவுகின்ற செயல் மறைந்த நிலை.

உயர்ந்தது. கண்ணியமிக்கது. இந்த மதிப்பீடு தனிப்பட்ட ஒருவர் எப்படி நடந்து கொள்கிறார் என்பதைப் பொறுத்தே இருக்கிறது. எனவே "கருமத்தின் இயல்பு நினைத்துக்கூடப் பார்க்க முடியாதவாறு அவ்வளவு ஆழமானது" என்று கிருஷ்ணர் கூறுவதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

செயலைப் பற்றியும், செயல் புரியாமை பற்றியும் தெரிந்து கொள்வதற்கு என்ன இருக்கிறது? அதற்குப் பதில் பின்வருமாறு:

கர்மண்—யகர்மய: பச்யேத்
அகர்மணி ச கர்ம ய:
ஸ புத்திமான் மனுஷ்யே ஷு
ஸ யுக்த: க்ருத்ஸ்ன—கர்ம—க்ருத் 4:18

செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் யாரொருவர் காண்கிறாரோ, அவர் மாந்தருள் புத்திமான்; யோகி; உண்மையில் அவர் எல்லா வேலைகளையும் செய்பவர்.

கரும நெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்து வரும் ஒருவர், குறிப்பிட்ட எந்த சமயத்தில் ஆன்ம நிறைவு பெறுகிறார்? அதைத் தெரிந்து கொள்ளுவது எப்படி? ஆழ்ந்த அக்கறையுடன் சிந்திப்பவர்களுக்கு இவற்றைப் போன்ற பிரச்னைகள் தோன்றலாம். கருமங்கள் முற்றிலும் முடிவடைந்த உன்னத நிலையை விளக்குவதற்கு ஸ்ரீ கிருஷ்ணர் இங்கு முயற்சிக்கிறார்.

நம் உள்ளத்தில், தெரிந்தோ தெரியாமலோ ஆழ்ந்திருக்கும். விருப்பம் வெளியுலகில் நடவடிக்கையாகும் போது அதை 'செயல்' என்று கூறுகிறோம். இது ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது. விருப்பமே இல்லாத நிலையிலும், இறை நிலையிலும் எவ்விதச் செயலும் இல்லை என்பது உண்மைதான். ஆனால் இங்கு பேசப்படுவது அதைப் பற்றி அல்ல. இறை நாட்ட யாத்திரையில் ஒரு வழியோர விடுதி இது. நமது உடல் வேலை செய்யாவிட்டாலும் மனமும் அறிவும் வேலை செய்து கொண்டே இருப்பது நமக்குத் தெரிகிறது.

உடல் மிகக் கடுமையாக உழைத்து வேலை செய்யும் போது கூட உள்ளத்தை நுணுக்கமாக ஆராய்ந்து பார்த்து சாதகர்களுக்கு தங்கள் உள்ளம் 'செயல் மறை' (அகர்ம) நிலையில் இருப்பது தெரிய வரும். சாத்வீக நிலையின் மிக உயர்ந்த மட்டம் இதுதான்.

அந்த மட்டத்திற்கு வந்துவிட்ட ஒருவருக்கு உன்னதமான உள்ளச் சமநிலை கிட்டுகிறது. தியான வாழ்க்கை வாழ்பவருக்கு அதைப் போன்ற சமநிலை நிச்சயமாக வருகிறது. இதுவே இறையுணர்வென்றும், சரியான செயல் மூலமாக இறைவனை எட்டிவிடலாம் என்றும் இங்கு கூறப்படுவதாகவும் சிலர் நினைக்கி

ருர்கள். அது தவறு. இங்கு கூறியிருப்பதன் பொருள் அதுவல்ல. விருப்பத்திலிருந்து செயல் பிறக்கிறது. செயல் மூலம் பற்பல பொருள்களைத் தோற்றுவிக்கிறோம். தோன்றியவற்றிற்கு முடிவும் உண்டு. செயல் மூலமாகத் தோன்றும் இறைநிலை ஞாயிற்றுக்கிழமை வந்துவிட்டு திங்கட்கிழமை புறப்பட்டுப் போய்விடும் விடுமுறை நிலையாகத்தான் இருக்கும்.

சங்கரரும், மற்ற ஆசாரிய மகான்களும் ஒரு விஷயத்தை வற்புறுத்தி வந்திருக்கிறார்கள். பக்தி சிரத்தையுடன், எல்லாவற்றையும் இறைவனுக்கே அர்ப்பணித்து விட்டு ஒருவர் செய்யும் வேலை, அவருடைய உள்ளத்திலுள்ள பற்றுதலை அறவே நீக்கிவிடுகிறது. தமது உள்ளம் போகும் போக்கை எல்லாம் அவர் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்ப்பவர் ஆகிவிடுகிறார். உலகத்தில் நடக்கும் ஆயிரமாயிரம் நடவடிக்கைகளில் தாம் செய்வது ஒன்று என்ற விவரிக்க இயலா சமநிலை அவருக்கு வந்துவிடுகிறதென்றும், அதுவே தியானத்திற்கு அத்தியாவசியமான நிலை என்றும் நமது மாபெரும் ஆசாரியர்கள் கூறியிருக்கிறார்கள்.

ஒருவர் சும்மா உட்கார்ந்திருக்கிறார் என்பதனுல் மட்டும் அவர் எவ்வித செயலிலும் ஈடுபடவில்லை என்று தீர்மானித்து விடக் கூடாது. ஒருவர் உடலால் வேலை செய்யவில்லை என்பதைக் கொண்டு அவர் ஒரு சோம்பேறி என்று முடிவு கட்டுவது தவறு, நாம் மிகவும் ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும்போது—குறிப்பாக, ஆக்கபூர்வமான சிந்தனையிலிருக்கும்போது—பேசுவதில்லை. இருந்த இடத்தைவிட்டு அசைவதில்லை. இது நமக்கே நன்ருகத் தெரிகிறது. ஊரிலுள்ள சந்து பொந்துகளில் எல்லாம், ஏதோ அவசர வேலை இருப்பது போல திரிந்து கொண்டிருப்பவர்களே. அமைதியாக. அமர்ந்து சிந்தித்துக் கொண்டிருப்பவர்களைப் பார்த்துச் சோம்பேறிகள் என்று சொல்வார்கள். வெளிப் பார்வைக்கு சும்மா உட்கார்ந்திருப்பவர்கள் போல தோன்றுபவரின் உள்ளம் தீவிர வேலையில் ஈடுபட்டிருக்கலாம். மரத்தடியில் அமர்ந்திருந்த புத்தர், தமது ஓவியத்தில் இரண்டறக் கலந்து நிற்கும் கலைஞன், நாத இன்பத்தில் மூழ்கி உலகத்தை மறந்திருக்கும் சங்கீத மேதை, கற்பனை ஓட்டத்தை எழுத்தில் உருவாக்குவதற்கு தலை தூக்காமல் சிந்திக்கும் எழுத்தாளன்—இவர்கள் எல்லாம் தீவிரச் செயலில் அமைதியாக உட்கார்ந்திருப்பவர்களுக்கு உதாரணம். இவர்களிடம் தோன்றும் 'செயலின்மை'தான் அகருமம். அவர்களிடம் உடல் அசைவு எதுவும் தென்படுவதில்லை. அறிவும் மனமும் அதி தீவிரமாக வேலை செய்வதற்கு இப்படிப்பட்ட 'செயலின்மை மிக அவசியமாக இருக்கிறது. உள்நோக்கிப் பார்க்கத் தெரிந்தவர்களுக்கு, செயலே இல்லாதது போன்ற இடங்களில் ஒப்புயர்வற்ற வேலை நடப்பது நன்ருகத்தெரியும்.

அறிவுச் சிறப்புமிக்க தத்துவ உள்ளமொன்றை பரிசீலனை செய்தால், மற்றொரு உண்மை விளங்கும். வெளி உலகில் அது வேலை செய்து கொண்டிருக்கலாம். ஆனால் அவ் வேலையிலிருந்து ஒதுங்கி நின்று தான் செய்யும் வேலையை தானே உற்று நோக்கிக் கொண்டிருப்பதை உணரலாம்.

இவ்வார்த்தைகளை நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். சிந்தனை ஓட்டத்தையொட்டி அடுத்ததிலிருந்து வந்து கொண்டிருக்கும் கருத்துக்களில் லயித்திருக்கிறது, சிந்தனையின் ஒரு பகுதி. ஆனால் மற்றொரு பகுதி சற்று விலகி நின்று காகிதத்தின் மீது பேனா சரியான முறையில் சென்று கொண்டிருக்கிறதா, எழுத்துப் பிழைகள் வராமல் இருக்கின்றனவா என்று கவனித்துக் கொண்டிருக்கிறது. இப்படி நமக்குள் நடப்பதை நாமே உணருகிறோம். இதை மற்றவர்கள் பார்த்துச் சொல்ல வேண்டியதில்லை. நாம் செய்வதை நமக்குள்ளிருந்தே கவனித்துக் கொள்கிறதே, அது செயல் புரியத் தேவையில்லை. என்பதைத்தான் நாம் குறிப்பாக நினைவிற் கொள்ள வேண்டும்.

ஓடுவது ரயில்தானே தவிர நீராவியல்ல. மின்சார விசிறியில் சுழலுவது மின்சாரமல்ல, விசிறி மட்டுமே. அடுப்பில் விறகு எரிகிறது, நெருப்பு அல்ல. அதைப் போலவே வேலை செய்வது உடல், மனம், அறிவு ஆகியவையே தவிர உள்ளிருக்கும் ஆன்மா அல்ல. உயிர்ப் பொருளல்ல.

இவ்வாறு ஒருவர் தமது செயலிலிருந்து தம்மைப் பிரித்துக் கொண்டு அச் செயலை நோக்குபவருக்கு 'செயலின்மையில் செயல் புரியும்' உண்மை தெரியவரும். அவ்வாறே மிகத் தீவிரமான இயக்கத்திலும் தாம் இயக்கமின்றி இருப்பது தெரியும். தாம் செய்யவில்லை என்று ஒதுங்கி நின்று நோக்கும் தன்மையைத்தான் 'அ—கர்மம்' என்ற சொல் விளக்குகிறது. இவ்வாறு செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் பார்ப்பவர் உடனே இறையுணர்வு பெற்ற ஞானி ஆகிவிடுவதில்லை. அவரை 'முழு வளர்ச்சி பெற்ற புத்திமான்' என்று சொல்லலாம். ''மனிதர்களில் அவர் புத்தி மிக்கவர். ஆன்மாவுக்கு வெகு அருகிலுள்ளவர். (ஆத்மயுக்தர்.)''

சுருக்கமாகச் சொல்லுமிடத்து, வேலையில் நம்மை அர்ப்பணித்துக் கொண்டு விருப்பமற்று மேற்கொள்ளும் எல்லா நடவடிக்கைகளும் நம்மைத் தூய்மைப்படுத்துகின்றன. அதனால் அறிவு இன்னும் கூர்மையடைகிறது. ஏதோ புதிய சக்தி தோன்றுகின்றதே என்றே சொல்லலாம். வாழ்க்கை அரங்கத்தில் தன்னை ஒரு நடிகனாகக் காணும் சக்தி மிக உயர்ந்த தெய்வீக சக்தி. ஏனெனில் அந்த நோக்கு வந்தவுடன் வாழ்க்கையில் சுயநலமற்று வேலை செய்யும் தன்மையும் வந்து விடுகிறது.

செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலை யும் காண்பது எவ்வளவு பெரும் சாதனை என்பது பின் கண்ட செய்யுளிலிருந்து தெரிகிறது.

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா:
காம—ஸங்கல்ப—வர்ஜிதா:
ஜ்ஞானாக்னி—தக்த கர்மாணம்
தமாஹு: பண்டிதம் புதா: 4:19

யாருடைய வேலைகளில் விருப்பங்களும் பயன்பெற வேண்டு மென்ற நோக்கங்களும் இல்லையோ, யாருடைய செயல்கள் ஞானத் தீயில் எரிந்து கொண்டு விடுகின்றனவோ அவரை ஒரு முனிவர் என்று புத்திமான்கள் சொல்லுகிறார்கள்.

திட்டமிட்டு வேலை முறையோ, கோரிக்கைகளோ இல்லாதவர் முழுமை பெற்ற முனிவர் என்று கூறுவதற்கு முக்கிய காரணங்கள் இருக்கின்றன. திட்டங்கள் வகுத்துக் கொண்டு வேலை செய்வது சுதந்திரமாக வேலை செய்வதற்கு விலங்கு மாட்டியதைப் போல ஆகிவிடுகிறது. எல்லாத் திட்டங்களும் சமய சந்தர்ப்பச் சூழ்நிலைகளைக் குறிப்பிட்ட ஒரு வடிவத்தில் வார்த்து அடைத்து விட முயற்சிக்கின்றன. நாம் விரும்பும் ஒரு முறையிலான—வடிவங்களை உருவாக்க நினைக்கிறோம்.

அப்படிச் செய்வதால் நாம் பலவீனமடைந்து போவது மட்டு மின்றி பெரும் இடையூறுகளையும் எதிர்த்து போராட வேண்டியும் இருக்கிறது. வேலை தொடங்கும் போது இருக்கும் உணர்வும் வேகமும், ஆனந்தமும் பிறகு மறைந்து விடுகின்றன.

பயனைக் கருதி வேலை செய்வதால் நமது சக்தி பாழா கிறதென்பதை முந்தியே கவனித்தோம். பயன் எதிர்காலத்தில் பழுக்கப் போகும் கனி. அதற்காக எதிர்பார்த்து நிற்பவர் செயலுக்கேற்ற நிகழ்காலத்தை நழுவவிட்டு விடுகிறார். வேலையை போலத்தான் விளைவுகளும் இருக்கும். இது தவிர்க்க முடியாத விதி. பலனை எதிர்பார்க்காமல் ஒரு பணியை நிறை வேற்றி வந்தால் எந்த சாதனையிலும் வெற்றி பெறலாம் என்ப தில் ஐயமில்லை.

குறிப்பிட்ட பயன்பெற வேண்டுமென்ற நோக்கத்துட னேயே ஒருவர் திட்டம் வகுத்து வேலை செய்கிறார். முழு நிறைவு பெற்ற முனிவர்கள் அவ்வாறு செயல் புரிவதில்லை என்று கிருஷ்ணர் இங்கு கூறுகிறார். திட்டமிடுவதில்லை, விருப்பங்கள் இல்லை என்ற வார்த்தைகளைப் பரந்த நோக்கில் நாம் எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர, அகராதியைப் பார்த்துப் பொருள் கொள்ளக் கூடாது. உயர்ந்த நோக்கங்களுக்காக, தமது நல்லறிவைப் பயன்படுத்தி, திட்டம் வகுத்து வேலை செய்யக்

கூடாது. என்று இங்கு தடை செய்யப்படவில்லை. உள்ளத்தில் சமநிலை பெற்று தெய்வீக ஆவேசம் பொங்க ஒருவர் வேலை செய்யும் போது பயனைப் பற்றிய பயத்திலும், மற்றவகை சிந்தனை களிலும் கவனத்தை சிதற விடக் கூடாது என்ற கருத்தில் இது கூறப்படுகிறது. மனிதனுடைய அறிவை வேதாந்தம் எப்போதுமே புறக்கணித்ததில்லை. நமது திறனை முழுமையாக வளர்த்துக் கொள்ளவும் எது வேலையிலும் சிறப்பாக வெற்றி பெறவும் கீதை நமக்கு வழிகாட்டுகிறது.

தமது உள்ளத்தில் எழும் தெய்வீக வேகத்துடன் வேலையோடு வேலையாக லயித்துவிடும் ஒருவருக்கு விளைவுகளைப் பற்றிக் கவலையில்லை. அவை அவரைப் பாதிப்பதில்லை. வேலையின் விளைவு என்ன ஆகுமோ, அதிலிருந்து என்ன ஆபத்து வருமோ என்று மற்றவர்கள் கவலைப்படலாம். ஆனால் உணர்வு வேகத் துடன் வேலை செய்பவருக்கு அப்படிப் பட்ட கவலைகள் வருவ தில்லை. எல்லோரையும் போல சாதாரண வேலைகளை செய்த போதிலும்கூட, தமது பேருணர்வில் ஒன்றிய மகிழ்ச்சியுடன் பணி புரிபவரே முழுமை பெற்ற முனிவராகத் திகழ்கிறார். அவர் செய்யும் எந்த வேலையும் அப்பழுக்கற்றதாக இருக்கும்.

அர்ஜுனன் சரியான மனப் பாங்குடன் அறிவுக் கலக்க மின்றித் தனது வேலையில் ஈடுபட வேண்டுமென்று அறிவுறுத்து வதற்காகவே கிருஷ்ணர் இங்கு ஒரு முனிவர் எவ்வாறு இயங்கு வாரென்பதை சுட்டிக் காட்டுகிறார். கிருஷ்ணர் வாயிலாக வியாசர் கூறும் அறிவுரை எல்லாத் தலைமுறைகளிலும் உள்ள சாதகர்களுக்கும் பொருந்தக் கூடியது. எனவே இது அர்ஜுன னுக்கு மட்டுமல்ல, எனக்கும் உங்களுக்கும் கூட இது ஒரு சிறந்த அறிவுரை.

என் மகன் ஒரு டாக்டராக விரும்புகிறான் என்றால், மற்ற பிரபல டாக்டர்களின் வெற்றி தோல்விகளைப் பற்றியும், அவர் களுடைய வரலாறு பற்றியும் அவனுக்குச் சொல்லுகிறேன். இதைக் கேட்டு தானும் ஒரு நல்ல டாக்டராவது எப்படியென்று அவன் தெரிந்து கொள்ளுகிறான். அதைப் போலவே முழு நிறைவு பெற்ற முனிவர் இயங்கும் முறையை அர்ஜுனனுக்குக் கூறினால், அவனும் ஆன்ம முன்னேற்றப் பாதையில் அணுவளவும் தவறாமல் நடந்து கொண்டு வாழ்க்கையின் இலட்சியத்தை அடைவான் என்ற நோக்கத்துடனேயே கிருஷ்ணர் அதை விவரிக்கிறார்.

பற்றோ, விளைவுகளில் ஆசையோ இல்லாமல், சமூகத்திற்கு ஒரு முனிவர் செய்யும் சுயநலமற்ற அன்புப் பணியை 'செயல்' என்றே சொல்ல முடியாது. அது ஞானத்தீயில் எரிந்து போய் விடுவதால் அதை 'செயல் புரியாமை' என்றே சொல்ல வேண்டும். இந்த ''செயல் மறை'யை ((அ—கருமத்தை) விளக்கு வதற்கு கிருஷ்ணர் பின்வருமாறு கூறுகிறார்:

த்யக்த்வா கர்ம பலாஸங்கம்

நித்யத்ருப்தோ நிராச்ரய:

கர்மண்—யபிப்ரவ்ருத்தோபி

நைவ கிஞ்சித் கரோதிஸ: 4:20

செயலின் பயனில் பற்றுதலின்றி, நித்திய திருப்தியுடன், மற்ற ஆதரவு எதையும் நாடாமல் இருப்பவன் வேலைகளில் ஈடு பட்டிருந்த போதிலும், உண்மையில் அவன் செயல் புரிவதில்லை.

வேலையின் பயனைத் துறந்து விடும்படியாக இங்கு கூறப்பட வில்லை. அதை ஒதுக்கித் தள்ளிவிடும்படியாகவும் சொல்லவில்லை. பயனையே நினைத்துக் கொண்டு அந்தக் கற்பனைக்கு நமது மனம் அடிமையாகி விடக்கூடாது என்றும், அறிவு அதைப் பற்றிக் கொண்டு ஊசலாடிக் கொண்டு இருக்கக் கூடாது என்றுமே எச்சரிக்கை செய்யப்படுகிறது. செயலின் பயனைப் பற்றிய யோசனைகளிலேயே நாம் காலத்தையும் சக்தியையும் வீணாக்கிக் கொண்டிருந்தால் செய்யும் வேலையில் திறன் குறைந்து விடு கிறது. வேலையின் பயனை (கர்ம பலனை)ப் பற்றிக் கொண்டு ஊசலாடுவதை (சங்கம்) கைவிட்டு (த்யக்த்வா) சமுதாயத்தின் நன்மைக்காக முயற்சி செய்யும்படி இங்கு ஆலோசனை கூறப் பட்டிருக்கிறது.

ஒரு உண்மையான ஓவியன், தான் வரைந்த எல்லாவற்றி லும் சிறந்ததென்று கருதும் சித்திரத்தை விற்க, முழு மனதுடன் முன்வர மாட்டான். அதற்காகச் செலவிட்ட நேரமும், முயற்சி யும் அச் சித்திரமாக உருவாகியிருக்கிறது. பட்டினி கிடக்க நேரிட்ட போதிலும், அவ்வோவியமே அவன் முயற்சிகளுக்கு போதிய பரிசு. அதுபற்றி அவன் பெறும் திருப்தி, ஆனந்தம் ஆகிய வற்றிற்கு உலகத்திலுள்ள செல்வம் எல்லாம் கொடுத்தால்கூட ஈடாகாது. வரையறைக்குட்பட்ட ஒரு படம், சலனங்களும் விருப்பங்களுமிக்க ஒரு மனிதனுக்கு இவ்வளவு பெரு மகிழ்ச்சி அளிக்க முடியுமானால், நாம ரூபங்கள் நிறைந்த உலகில் வேலை செய்யும் முனிவருடைய தெய்வீகப் பேரானந்தம் இன்னும் எவ்வளவு அதிகமாக இருக்க வேண்டும்! தமது ஆன்மாவே எல்லை யற்ற பேருண்மைப் பொருள் என்று உணர்ந்துவிட்டபின், நிறைவு பெற்ற அந்த மனிதர் வேறு எதையும் அல்லது யாரையும் சார்ந்திருக்க வேண்டிய அவசியமில்லாமல் போகிறது.

அதனுடன் மற்றொன்றையும் நினைவு வைத்துக் கொள்ள வேண்டும். பயன்பற்றிய கவலை, அதிருப்தி, இன்னொருவர் மீது ஆதாரப்பட்டிருக்கும் உணர்ச்சி இவை எல்லாம் அகந்தை தனக்குத்தானே ஏற்படுத்திக் கொள்ளும் குழப்பங்கள். அவ்வாறு ஏற்படுத்திக் கொண்டு அது அவதிப்படுகிறது. இறை நாட்டத்தில் ஈடுபட்ட சாதகர் தனது அடிப்படைத்தன்மையே பரம்பொருள்

என்று கண்டுகொண்டவுடன், வரையறைக்குட்பட்ட அக்ந்தைத் தன்மை தனது துயர வாழ்விலிருந்து மீளுகிறது. அக்கணமே அதன் துயரங்களும் இயலாமையும் கூட முடிவடைந்து விடுகிறது. ஒரு பாத்திரத்திலுள்ள நீரை சற்று அசைத்தால், அதில் தெரியும் சூரியன் பிரதிபிம்பம் ஆடுகிறது. அதிலுள்ள நீரைக் கீழே கொட்டிவிட்டால், சூரியன் ஆடும் தோற்றம் அப்புறம் ஏற்படாது. ஆகாயத்திலுள்ள சூரியனைப் பேய் ஒருவரும் ஆட்ட முடியாது. அதற்கு ஒருவரும் வழி கண்டுபிடிக்கவில்லை. ஆன்மிக உணர்வு பெற்றுவிட்ட ஒருவர் செயலில் ஈடுபட்டிருப்பதாகத் தோன்றிய போதிலும் அவர் எதுவும் செய்வதில்லை.

பொருளுலகில் இயங்குவது உடல், மனம், அறிவு ஆகியவையே தவிர, எங்கும் நிறைந்த ஆன்மிகப் பொருளல்ல—நமது உயிர்த் தத்துவம் அல்ல. ''உயிர் தத்துவம் இல்லையென்றால் உடல் இயங்காது. ஆனால் உடல் இயங்கும்போது உயிர் மட்டும் இயங்க முடியாது. எனவே ஆன்மாவில் நிலைத்த ஒருவர் வேலை செய்தாலும், வேலை எதுவும் செய்வதாகச் சொல்ல முடியாது. ரயில் ஓடாமல் நீராவி ஓடுவதில்லை அல்லவா?

பொதுவாக இந்த இடத்தில் மாணவர்களுக்கு ஒரு சந்தேகம் உண்டாகிறது. கடந்த காலத்தில் செய்த வினைகளின் விளைவுகள் ஆன்ம உணர்வு பெற்ற ஒருவருக்கு முடிவடைந்து விடுகின்றன என்றே வைத்துக் கொண்டாலும் அவர் இவ்வுலகில் செயல்படத் தொடங்கும் போது மீண்டும் பாவ, புண்ணியங்கள் வருகின்றனவே. அவற்றின் காரணமாக மீண்டும் பிறவிகள் எடுக்க வேண்டியிருக்குமே? இந்தத் தவறான கருத்தை இச்செய்யுள் முற்றிலும் களைந்து விடுகிறது. கடவுள் அனுபவம் பெற்ற பிறகு, ஒரு முனிவரி உலகத்தில் வேலையில் ஈடுபட்டிருந்த போதிலும் அவர் எதுவும் செய்வதில்லை.

ஒவ்வொரு செயலுக்கும் எதிர் விளைவு ஒன்று உண்டு. முனிவரானாலும் கூட அவருடைய உடல் செய்யும் செயலுக்கு எதிர்ச் செயலொன்று இருந்துதானே தீர வேண்டும்? சாதாரணமாக இப்படித்தான் எல்லோரும் கேட்கிறார்கள். இதை பகவான் தக்க காரணங்களுடன் மறுக்கிறார்:

நிராசீர்—யதசித்தாத்மா
த்யக்த—ஸர்வ—பரிக்ரஹ:
சாரீரம் கேவலம் கர்ம
குர்வன்—னாப்னோதி கில்பிஷம் 4:21

(எதிர்கால) நம்பிக்கைகளை உதறித் தள்ளி உடலையும் மனத்தையும் கட்டுப்படுத்தி, எல்லா வகை உடைமைகளையும் துறந்துவிட்டு, உடலினால் மட்டும் ஒருவன் செய்யும் செயல்,

அவனை பாவத்திற்கு உள்ளாக்குவதில்லை.

உடலினால் மட்டும் செய்யப்படும் செயலுக்கு எதிர்விளைவுகள் ஏற்படுவதில்லை. செயலின் விளைவுகள் மன, அறிவு வட்டங்களில் ஏற்படுகின்றன என்பது முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. வேலை செய்வது நான்தான் என்ற அகந்தை மைய உணர்வுடன் செயல்புரியும்போதுதான், அது ஒருவருடைய சூக்கும உடலில் தடங்களை உண்டாக்குகிறது. மிக பலமான அகந்தை மையக் கோரிக்கைகளிலிருந்து நமது செயல்கள் பிறக்கும்போது மட்டுமே இத் தடங்கள் நம்மை பாதிக்கின்றன.

ஆன்மா, தானே மேற் கொள்ளும் மருட்சி காரணமாக, தன்னை உடல், மனம், அறிவு அவை இயங்கும் துறைகள் ஆகியவற்றுடன் ஒருங்கிணைத்துக் கொள்ளும் போது அகந்தை தோன்றுகிறது. இவ்வகந்தைக்கு ஊட்டமளிப்பவை எதிர்காலம் பற்றிய நம்பிக்கைகளும், இப்போதுள்ள உடைமைகளில் பெருமையுமே.

ஆகையால் 1. எப்போது ஒருவன் நம்பிக்கைகள் எல்லாவற்றையும் முற்றிலும் துறந்து விடுகிறானோ, 2. தன் உடலையும், மனதையும் முழுமையாயாக கடுப்படுத்திக் கொள்ளுகிறானோ, 3. எல்லா உடமைகளையும் துறந்து விடுகிறானோ—இந்த மூன்றையும் சேர்த்து யார் செய்கிறானோ—அவனுக்கு அகந்தையோ அதனால் ஏற்படும் வீண் மயக்கமோ இருக்காது. அகந்தை அகன்ற பிறகு, ஒருவனுடைய உடல் மட்டும் செய்யும் செயல்கள் அவனுடைய மனத்திலும் அறிவிலும் தடங்களை ஏற்படுத்த இயலாதவை ஆகின்றன.

தூக்கத்தில் என் ஆடைகள் அவிழ்ந்து நிர்வாண நிலையிலிருந்தால், நான் நாகரிகமற்றவன் என்று எவரும் ஏச மாட்டார்கள். தூக்கத்தில் எனது கால் அருகிலுள்ள என் மகனை உதைத்து விடுகிறதென்றால், நான் மகனைக் கொடுமையாக உதைத்தவன் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். எனது உடல் செய்யும் காரியங்களுக்கு அப்போது நான் பொறுப்பல்ல, அந்த உடலில் நான் இல்லவே இல்லை. இதிலிருந்து ஒன்று தெளிவாகத் தெரிகிறது. உடலே நான் என்று நினைக்கும் அகந்தை மைய பாவனையே செயல் புரிகிறது. இதனால் வரும் விளைவுகளை அனுபவித்து அல்லலுறுகிறது. அகந்தை இல்லாமல்—உடல் மட்டும் செய்யும் செயல்களினால் ஒருவனுக்கு எவ்வித விளைவுகளும் ஏற்படுவதில்லை.

ஆன்ம உணர்வு பெற்ற முனிவரின் நடவடிக்கைகள் அவரைத் தொடுவதே இல்லை. ஏனெனில் செயல் புரிவது அவரல்ல. செயல்கள் அவர் மூலம் நடக்கின்றன. எனவே உண்மையான மகான் செயல் புரிபவர் அல்லர். இறைவனுடைய

திருவுள்ளம் அவரை மகத்தான கருவியாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது. அவ்வளவுதான்.

ஒரு வீணையிலிருந்து வரும் இசை நன்முக இல்லை என்முல், கச்சேரியில் உட்கார்ந்திருப்பவர்கள் எழுந்து போய் வீணையைத் தாக்குகிறுர்களா? வீணை வாசிப்பவரின் நிலைதான் சற்று கவலைக்கு இடமாகுமே தவிர, வீணைக்கு ஒன்றுமில்லை. சங்கீதத்தை வீணை தானுக வெளியிடவில்லை. அதன் மூலமாக வீணை வித்வானுடைய இசைக் கலை வெளியாகிறது. அவருடைய விரல்களுக்கு ஏற்ப வளைந்து கொடுப்பதுடன் வீணையின் கடமை முடிந்து விடுகிறது. ஆன்ம நிறைவு பெற்று, அகந்தையில்லாது திகழும் ஒருவர், பரம் பொருளின் இனிய கீதம் வெளியாவதற்கு உகந்த தெய்வீக வீணை. இறைவனின் திருவுள்ம் அவர் மூலம் வெளியாகிறது. முழுமை பெற்ற மகான் செய்யும் செயல்கள் எவ்வித விளைவுகளையும் ஏற்படுத்துவதில்லை. அவருக்கு நல்ல விளைவுகளும் வருவதில்லை. கெட்ட விளைவுகளும் வருவதில்லை. அவர் ஒரு 'தெய்வீகக் கருவி' என்பதைத் தவிர அவருக்கு பொறுப்பு ஒன்றும் கிடையாது.

ஆன்ம உணர்வு பெற்றுவிட்ட ஒருவர் எல்லா செயல்களையும் துறந்து விட்ட போதிலும், தனது உடலைத் துறந்து விட முடியாது. அதை அவர் சுமந்துதானே தீர வேண்டும். அதனுல் அவர் ஞானப் பாதையில் நடந்து நிரந்தரமான விடுதலை பெறுகிறுர். இதை கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு கீழ்க்கண்டவாறு விளக்குகிறுர்:

யத்ருச்சா—லாப—ஸந்துஷ்டோ
 த்வந்த்வாதீதோ விமத்ஸர:
ஸம: ஸித்தாவஸித்தெள ச
 க்ருத்வாபி ந நிபத்யதே 4:22

சுய முயற்சியின்றி (தானுக) வருவதைக் கொண்டு திருப்தி அடைந்தவனுக, ''எதிர்மாமுன (துக்கம்—சுகம், சூடு—குளிர் போன்ற) இரட்டைகளிலிருந்தும் பொமுமையிலிருந்தும் விடுபட்டு, வெற்றி—தோல்விகளை மனச் சமநிலையுடன் ஏற்று வாழ்பவன் செயல் புரிந்த போதிலும் அவன் தளைகளால் பிணைக்கப்படுவதில்லை.

தனது அகந்தையைக் கடந்து நிற்பவன், கோரிக்கையால் தூண்டப்பட்டு எவ்வித வேலையையும் மேற் கொள்வதில்லை. பயனை எதிர்பார்த்து அவன் பணிபுரிய மாட்டான். தனது செயல்களிலிருந்து தானுக வருவதைக் கொண்டு சந்தோஷமாகவும், திருப்தியுடனும் இருப்பான். தனது மனதையும், அறிவையும் அடக்கியாள்வதில் வெற்றி பெற்றுவிட்டான் என்பதை அவனு

டைய அகந்தையற்ற நிலையே எடுத்துக் காட்டுகிறது. எனவே குளிர்ச்சி—சூடு, வெற்றி—தோல்வி, நல்லது—கெட்டது, துன்பம்—இன்பம் போன்ற எதிர்மாறான இரட்டைகள் அவனை பாதிப்ப தில்லை. பொருள், உலகத்தை அப்படி மாறான இரட்டைகளாகக் காட்டுவது மனமே அல்லவா?

மன இயக்கம் இல்லாத இடத்தில் அறிவுக்கும் இடமில்லை. அறிவின் விருப்பு, வெறுப்புகளும் பொருமைகளும் அங்கு தலை தூக்க முடியாது. வெற்றியும் தோல்வியும் வெவ்வேறு பக்கங் களில் இழுக்கும்போதுதான் நம் உள்ளத்தில் பதட்டமும், பரபரப்பும் தோன்றுகின்றன. அலை அலையாக வெற்றிகள் வந்து கொண்டிருக்கும் போது நமது அகந்தை ஆனந்தமடைந்து ஆட்டம் போடுகிறது. தோல்விகள் வரும்போது துயரத்தினால், நிலைகுலைந்து உட்கார்ந்து விடுகிறது. ஆனால் ஒருவனுடைய அகந்தை முற்றிலும் தெய்வீக மயமாகிவிடும் போது, அவன் உள்ளம் வெற்றியையும், தோல்வியையும் சமமாக பாவிக்கும் ஆற்றல் பெறுகிறது. தன்னைப் பற்றித்தானே கொண்டிருக்கும் அகந்தை மையத் தப்பெண்ணங்களை அறவே விட்டொழித்தவன் இவ்வுலகில் செயல் புரிந்த போதிலும், அதிலிருந்து இயற்கையாக எழும் விளைவுகள் (கர்ம பலன்கள்) அவனுக்குத் தளைகள் ஆவதில்லை.

இவ்வாறு இறையுணர்வு பெற்ற பெரியோர் நம்மிடையில் வாழும் போது, நம்மைப் போலவே சாதாரணமாகப் பழகி வேலை செய்கிறார். ஆனால் அவருடைய வேலைகளில் அதிக இயக்க வேகம் தோன்றுகிறது. அதனால் அவர் தொட்டதெல்லாம் பொன்னாகி; செய்யும் முயற்சி எல்லாம் நிரந்தர வெற்றியாக மலர்ந்து திகழு கிறது. ஒரு ஞானியினுடைய செயல்கள் அவரை எந்த விதத் திலும் பாதிப்பதில்லை என்று பகவான் கூறுகிறார். எப்படி ஞானி அவ்வாறு செய்கிறார் என்று அறிந்து கொள்ளுவது சாதாரண மனிதர்களுக்கு சற்று கடினமாக இருப்பது இயற்கையே.

ஆன்ம நிறைவு பெற்ற சிலர் இவ்வுலகில் செயல் புரியும் போது எவ்வாறு தெய்வீக நோக்கத்துடன் இயங்குகிறார் என்பதை அடுத்து வரும் ஒன்பது செய்யுட்கள் விளக்குகின்றன.

கதஸங்கஸ்ய முக்தஸ்ய
ஜ்ஞானாவஸ்தித சேதஸ:
யஜ்ஞாயா சரத: கர்ம
ஸமக்ரம் ப்ரவிலீயதே 4:23

பற்றுதல்களைக் கைவிட்டு (தளைகளிலிருந்து) விடுதலை பெற்று, ஞானத்தினால் மனதை நிலையில் நிறுத்தி, யாரொருவன்

வேள்விக்காக வேலை செய்கிறானோ, அவனுடைய செயல்கள் கரைந்து விடுகின்றன.

ஒரு ஞானியின் இலக்கணம் முதல் வரியில் முழுமையாக விவரிக்கப்பட்டிருக்கிறது. அவருடைய தன்மைகள் வரிசைக் கிரமத்தில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது முழுமை பெறுவதற்கான வழியையே விளக்குவது போல் அமைந்திருக்கிறது. எல்லா புனித நூல்களிலும் நிறைந்த கருத்துக்களை குறைந்த வார்த்தைகளில் சொல்லும் முறையே கையாளப்பட்டு வந்திருக்கிறது. அதிலும் பொருட் செறிவுள்ள வார்த்தைகளை கவனத்துடன் தேர்ந்தெடுத்து அவற்றை வரிசைப் படுத்திக் கூறும் பாங்கு மிக மகிழ்ச்சியளிப்பதாக இருக்கிறது. அதறகு மிகச் சிறந்த உதாரணம் இச் செய்யுள்.

பற்றுதலைக் கைவிட்டு (கதசங்க) ரிஷிகள் பெற்ற தெய்வீகத் தன்மை, ஏதோ ஒரு இரகசிய இடத்திலிருந்து அவர்கள் பெற்ற அந்தஸ்து அல்ல. நாம் ஒவ்வொருவரும் முழுமை பெற்றவர்களே. ஆனால் அது நமக்கே தெரியாமலிருந்திருக்கிறது. ரிஷிகள் அதை மீண்டும் கண்டுபிடித்து தங்கள் அனுபவத்தை நமக்குக் கூறுகிறார்கள். வெளியுலகப் பற்றுதல்கள் காரணமாக நமது உண்மையான இயல்பிலிருந்து நாமே விலகி நிற்கிறோம். உலகப் பொருள்களில் நமக்கு உள்ள பற்றுதல்களை அறவே துறந்தவர் ஞானி.

விடுதலை பெற்றவராக (முக்தா:) சாதகர்களில் பெரும்பாலோருக்கு முக்தி (விடுதலை) என்ற சொல் திட்டவட்டமாக விளங்குவதில்லை. நமது ஆளுமையும், வாழ்வும் பல்வேறு வகையான தளைகளால் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அத் தளைகளை நமக்கு நாமே போட்டுக் கொள்ளுகிறோம். பொருள்கள் மீது நாம் கொள்ளும் ஒவ்வொரு பற்றுதலும் மிக சூக்குமமான ஒரு தளையாகிறது. மருட்சியுற்ற அகந்தை, பொருளுலகிலேயே நிறைவு பெற விரும்புவதால் அப் பொருள்களைப் பற்றிக் கொண்டு அது ஊசலாடுகிறது. உடல் என்ற வகையில் புலன் பொருள்களில் அது பற்றுதல் கொள்ளுகிறது. மனம் என்ற முறையில் உணர்ச்சிகளுக்கு அடிமைப்படுகிறது. அறிவு என்ற முறையில் நமது அகந்தை கருத்துக்களின் பிணைப்புகளுக்கு உள்ளாகிறது. இவ்விதத் தளைகளிலிருந்து பெறும் விடுதலையே முக்தி.

ஞானத்தில் மனதை நிலை நிறுத்தி (ஞான அவஸ்தித சேதஸ:) ஒருவருடைய பற்றின்மையிலிருந்து தோன்றும் விடுதலை உணர்ச்சி, அவருடைய மனம் ஞானத்தில் ஊன்றிக் கொள்ளும் போதுதான் நிறைவு பெறுகிறது. நிரந்தரமில்லாதவற்றிலிருந்து நிரந்தரமானவற்றைப் பிரித்துப் பார்க்கும் சக்தி பெறுகிறது.

முழுமை பெற்ற மாமுனிவர், எல்லாப் பற்றுதல்களிலிருந்தும் தன்னை விடுவித்துக் கொண்டவர். தமது ஞான ஒளியின்

உதவியால் மனச் சமநிலை பெற்றவர். புலன் வேட்கைகளைப் போன்ற பலவீனங்களை ஒழித்து விட்டவர், அந்த நிலையிலிருந்து கொண்டே அவர் பிறகு செய்யும் வேலை (யக்ஞ) உணர்ச்சியுடன் செய்யப் படுகிறது. * இவ்வுணர்ச்சியுடன் அவர் செய்யும் வேலை விளைவுகளை ஏற்படுத்துவதில்லை, ஏற்படுத்த முடியாது. புதிய வாசனைகளைத் தோற்றுவிப்பதால் எவ்விதத் தளைகளிலும் அவரைச் சிக்க வைப்பதில்லை.

யக்ஞம் என்ற சொல் நமது புனித நூல்களிலிருந்து இங்கு எடுத்தாளப்பட்டிருக்கிறது. அதை எல்லா நிலைகளுக்கும் பொருந்தக் கூடிய மிகப் பரந்த முறையில் கிருஷ்ணர் உபயோகிக்கிறார். வேதத்தில் கூறப்பட்டுள்ள யக்ஞம் (வேள்வி) என்ற சடங்கு, கீதையில் ''பலருக்கு சேவை செய்யும் உணர்ச்சியுடன் செய்யப்படும் ஒரு சுயார்ப்பணச் செயல்'' என்ற பொருளில் உபயோகிக்கப்படுகிறது. அகந்தையும், ''அகந்தை மையக் கோரிக்கைகளுமின்றி செய்யப்படும் எல்லா வேலைகளும் கீதையில் ''யக்ஞம்' என்ற பெயரில் கொண்டு வரப்படுகின்றன.

அடுத்த ஆறு செய்யுட்களில் ஏறக்குறைய பன்னிரண்டு யக்ஞங்கள் கூறப்படுகின்றன. இவற்றை எல்லோரும், எல்லா சந்தர்ப்பங்களிலும், எல்லாத் துறைகளிலும் பின்பற்றலாம்.

இங்கு கூறப்பட்டுள்ள முனிவரைப் போன்ற ஒருவர் வேள்வி உணர்ச்சியுடன் செயல் புரிந்தால் அச் செயல் அப்படியே கரைந்து போகிறது. அது மனதில் எவ்விதத் தடங்களையும் விட்டுச் செல்வதில்லை, தூவானம் தோன்றும் பொழுது தெரியும் வானவில், சூரிய ஒளியில் மறைவதைப் போல.

அவர் செய்யும் எல்லா வேலைகளும் அவ்வாறு மறையக் காரணமென்ன? இயற்கையாக அவை உண்டாக்கும் விளைவுகள் ஏன் ஏற்படுவதில்லை? இதைப் போன்ற பிரச்னை ஒன்று எழலாம். இதற்கு கிருஷ்ணன் கூறும் பதிலைக் கேளுங்கள்:

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம—ஹவிர்
ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம்
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம்
ப்ரஹ்மகர்ம ஸமாதினா 4:24

அர்ப்பணிப்பது பிரம்மம் நெய் முதலியவையும் பிரம்மம். பிரம்மமாகிய தீயில் அந்த அவியை வார்ப்பதும் பிரம்மம். இவ்வாறு எல்லாச் செயல்களிலும் பிரம்மத்தைக் காண்பவன் நிச்சயமாக பிரம்மத்தை அடைகிறான்.

---

* தெய்வார்ப்பணமாகச் செய்யப்படும் எந்த வேலையும் ''யக்ஞம்''தான்

இந்தியா முழுவதிலுமுள்ள இந்துக்கள் உணவு முன் அமர்ந்து, அதை உட்கொள்ளுமுன், இம் மந்திரத்தை ஓதுகிறார் கள். இவ்வளவு பிரபல மந்திரமானாலும், அதை உச்சரிப்பவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்கு அதன் பொருள் தெரியாது. உண்மையில் இது மிகவும் பொருட் செறி வுள்ளது. வேதாந்த உள்ளடக்கம் அவ்வளவுமே இதில் பொதிந் திருப்பதாகத் தோன்றுகிறது.

ஆயிரமாயிரம் விதங்களாக மாறுதல்களைக் காட்டும் இவ்வுலகத்தின் அடிப்படையில், மாறாப் பொருளாக, எல்லை யற்ற பேருண்மையாக விளங்கும் ஒன்றையே பிரம்மம் என்று வேதங்கள் குறிப்பிடுகின்றன. அதுவே 'உடலிலிருந்து இயங்கும் போது ஆன்மா என்று பெயர் பெறுகிறது. ''இறைப் பொரு ளுக்கு'' இவ்வாறு இரண்டு பெயர்கள் கொடுக்கப்பட்டிருந்த போதிலும், ''ஆன்மாவே பிரம்மம்'' என்று வேதாந்தம் சிங்க கர்ஜனை செய்கிறது.

வேள்வியாகிய வேதச் சடங்கு முறைகளிலிருந்து இந்த உவமை எடுத்தாளப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வேள்வியிலும் நான்கு முக்கியப் பகுதிகள் உண்டு. 1. அர்ப்பணங்களை (ஹவிஸை) ஏற்கும் தெய்வம். 2. அர்ப்பணங்களை இடும் தீ 3. அத் தீயில் சொரியும் அர்ப்பணப் பொருள்கள், 4. வேள்வியைச் செய்பவர்.

வேள்வி செய்யும் போது ஒரு முனிவரின் உள்ளப் பாங்கும், அனுபவமும் இங்கு விளக்கப்பட்டிருக்கின்றன. பரம் பொருளையே அவர் எங்கும் காண்கிறார். அறியாமை அவருடைய மனதில் இதற்கு முன் தோற்றுவித்த பன்மை மிக்க உலகம் இப்பொழுது இல்லை.

ஆகையால் எல்லா வேள்விகளும் பிரம்மத்தினிடத் திலிருந்தே தோன்றுகின்றன. அந்த யக்ஞத்தை (வேள்வியை) செய்பவரும் பிரம்மம். பொருளை வேள்வித் தீயில் அர்ப்பணிப் பதும் பிரம்மத்துக்காகவே. அந்தத் தீயே பிரம்மம்தான். ஒரு அலை மற்றொரு அலைமீது விழுந்து, இரண்டும் ஒன்றாகப் போகும்போது கடலும் அலைகளும் ஒன்றுதான், கடலிலிருந்து கடல் எழுந்து மீண்டும் கடலாகவே கலந்து நிற்கிறது என்ற உண்மை நமக்குப் புலனாகிறது.

இவ்வாறு பல்வேறு நாம ரூபங்களுக்கும், செயல் நட வடிக்கைகளுக்கும் அடிப்படையான 'சத்து'ப் பொருள் ஒன்றே என்று தெரிந்து கொண்டவருக்கு எல்லாப் பொருள்களும், உயிரினங்களும் பரமானந்தப் பேருண்மைப் பொருளையே நினைவூட்டிக் கொண்டிருக்கும். பிரம்மத்தைத் தவிர வேறு எந்த நினைவுமில்லாத ஒரு முனிவர் செய்யும் எல்லா வேலைகளும்

கரைந்து மறைந்து விடுகின்றன. (அதாவது எதிர் விளைவுகள் ஏற்படுத்துவதில்லை.) விடுகிறது.) ஏனெனில் ஒரே ஒரு பேருண்மையாகத் திகழும் பரம் பொருளுக்கு அவர் எல்லா வற்றையும் அர்ப்பணித்து விடுகிறார்.

இந்த மந்திரத்தை உணவு உட்கொள்ளுவதற்கு முன் சொல்லுவதன் நோக்கம் இதிலிருந்தே தெரிகிறது. உயிர் வாழ் வதற்கு உணவு அவசியம். பசித்திருக்கும் போது எவ்வகை உணவு கிடைத்தாலும் ஒருவர் அதை இன்பத்துடன் சாப்பிடுகிறார். இயற்கையினால் தோன்றும் இவ்வகை இன்பத்தினிடையில் கூட பிரம்மம் பிரம்மத்தை உண்ணுகிறது என்ற உண்மையை மறந்து விடக் கூடாது என்பதற்காகவே இதைச் சொல்லுகிறோம். உண வருந்தும் பிரம்மத்துக்கு உணவு என்ற பிரம்மத்தை அளித்து, பிரபஞ்சமெங்கும் பரந்து நிற்கும் பிரம்மத்தின் அருளுக்காகப் பிரார்த்தனை செய்கிறோம். இக் கருத்து நம் உள்ளத்தில் எப்போதும் இருந்து கொண்டிருந்தால், அனுபவிக்கும் இன்பங் களில் நாம் பற்றற்று இருக்க முடியும். அதன் மூலம் எல்லையிலா தெய்வீக ஆனந்த நிலையை ஒருவர் எட்டுகிறார். அந்த மனிதனுக்கு அந்த நிலையைவிட பெரும் பேறு இருப்பதற்கில்லை.

வேள்விகளின் உண்மையான நோக்கம் பற்றி இப்போது விளக்கமளிக்கப்பட்டது. வாழ்நாள் எல்லாம், நாம் எல்லாச் செயல்களுமே வேள்வியாக முடியும் என்று அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் இனிது எடுத்துரைக்கிறார். சரியான ''பாவனையே'' ஒவ்வொரு செயலையும் ஒரு வேள்வியாக்குகிறது என்று கூறுகிறார்:

தைவமே வாபரே யஜ்ஞம் யோகின: பர்யுபாஸதே
ப்ரஹ்மாக்னௌவபரே யஜ்ஞம் யஜ்ஞேனைவோபஜுஹ்வதி
4:25

சில யோகிகள் தேவர்களுக்கு மட்டும் வேள்வி செய்கிறார்கள் (தேவயக்ஞம்). மற்றும் சிலர் பிரம்மத் தீயில் ஆன்மா செய்யும் வேள்வியையே வேள்வியாக (பிரம்ம யக்ஞமாக) செய்கிறார்கள்.

இவ்வுலகில் வேலைகளைத் தொடர்ந்து செய்து வரும் ஒரு முனிவரின் மனப் போக்கை கிருஷ்ணர் சில சுலோகங்களில் அறி விக்கிறார். கீதையை ஆழ்ந்து படிப்பவர்களுக்கு அடிக்கடி ஒரு சந் தேகம் ஏற்பட்டு வருகிறது. ஒரு சாதகர், தமது அறிவிலும் உயர்ந்து தியானத்தில் ஈடுபடும் போது ஆன்மானுபவம் கிட்டு கிறது என்பதில் ஐயமில்லை. இந்த அனுபவம் கொஞ்ச காலமோ அல்லது நீண்ட காலமோதான் இருக்கும். அது ஒரு கால வரைக்கு உட்பட்டது. இறையனுபவம் பெற்ற பெரியோர் விரிவாக புத்தரைப் போலவோ, ஏசுவைப் போலவோ—இவ்வுல

கிலிருந்து வேலை செய்து வந்திருக்கிறார்கள். சிலர் ரமண மகரிஷியைப் போல் ஒரு குறிப்பிட்ட அளவில் பணி புரிந்திருக்கிறார்கள். மற்றும் சிலர் எவ்வித வேலையையும் மேற்கொள்ளாமல் சும்மா இருந்து விடலாம். இவ்வுலகில் முற்றுமுணர்ந்த முனிவர்கள் வேலை செய்யும் போது அவர்களுடைய மனநோக்கு எவ்வாளறு இருக்கும்? பலருக்கு இந்த சந்தேகம் வருகிறது.

தமது உடல், மனம், அறிவு ஆகியவற்றின் குற்றம் குறைகளைப் போக்கிக் கொண்டு வாழ்க்கையில் முழுமை பெறுவதற்கு எப்போதும் எல்லா வழிகளிலும் முயற்சித்துக் கொண்டிருப்பவர் யோகி, இந்தப் பொருளை வைத்துப் பார்க்கும் போது வெளிப்படையில் தோன்றும் சாதாரண அர்த்தத்தை மட்டும் எடுத்துக் கொள்வது போதாது.

'ஒளி' என்னும் பொருள் கொண்ட சொல்லிலிருந்து பிறந்தது 'தேவர்' என்ற சொல். உள்ளொளியைப் பொறுத்தவரையில், நமது ஐந்து புலனுறுப்புக்களும் ஐந்து தேவர்கள். வண்ணங்களுக்கும், உருவங்களுக்கும் ஒளியூட்டுபவை நமது கண்கள். ஒலிக்கு ஒளியூட்டுபவை காதுகள். மணம் வீசுவதற்கு ஒளியூட்டுவது மூக்கு. சுவைக்கும், ஸ்பரிசத்திற்கும் ஒளியூட்டுபவை நாக்கு, சருமம் ஆகியவை. இவ்வுலகத்தில் இருக்கும் பொருள்கள் எல்லாம் சாதகர்களுக்கும் யோகிகளுக்கும் கூட புலன்களின் மூலம் தெரிகிறது. ஆனால் தமது உணர்வுத் தீயில் தேவர்களுக்கு (புலனுணர்வு) அப்பொருள்கள் தங்களையே வேள்விச் சமர்ப்பணமாக ஆக்கிக் கொள்ளுகின்றன என்ற நோக்குடன் அவர்கள் புலன் அனுபவங்களை ஏற்றுக் கொள்ளுகிறார்கள். அதாவது, புலனுணர்வு என்ற தேவர்களுக்கு பொருள் உலகம் ஒரு வேள்விப் பொருளாகிறது.

இந்த மனப்பான்மை சாதகர்களுக்கும், யோகிகளுக்கும் இருந்தால், தங்களுக்கும் புலனனுபவங்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்ற தீர்மானத்துடன் அவர்கள் நடந்து கொள்ளுவார்கள். எந்த அனுபவம் வந்த போதிலும் அவர்கள் பற்றற்று, மனச் சமநிலை தவறாது இருப்பார்கள். இது தேவர் (புலன்)களுக்குச் செய்யும் வேள்வி (தேவ யக்ஞம்.)

இதைப் பற்றிச் சொல்லிய பிறகு 'பிரம்ம யக்ஞம்' பற்றியும் கிருஷ்ணன் கூறுகிறார். ஆன்மத் தீயில் ஆன்மாவையே வேள்விப் பொருளாகத் தமது ஆன்மா சமர்ப்பிக்கிறது என்ற நோக்குடன் செய்வது பிரம்ம வேள்வி. இதை நாமே ஆராய்ந்து பார்த்தால் இதிலுள்ள உண்மை மிகத் தெளிவாகத் தெரியும். இவ்வுடலுடன் இருக்கும் வரை நாம் பொருளுலகை சந்தித்தே ஆகவேண்டும். வெளியுலகம் தானாகவே நமக்கு மகிழ்ச்சியோ துக்கமோ அளிப்பதில்லை. நாம் சரியான முறையில் அதை அனு

தினல் சந்தோஷம் வருகிறது. தவறாக அணுகினல் துக்கம் வருகிறது. மகிழ்ச்சியோ, துயரமோ உண்டாக்கும் சக்தி பொருள்களிடமில்லை. நம்மிடம்தான் இருக்கிறது.

நமக்கு உணர்ச்சிகளைக் கொண்டு வரும் கருவிகளே, இப்புலனுறுப்புக்கள் என்பது நமது மகா யோகிகளுக்குத், தெரியும். ஆன்மிகப் பரம் பொருளுடன் ஒன்றுபட்ட நிலையிலேயேதான் அவர்கள் எல்லா வேலைகளையும் செய்து வருகின்றார்கள். புலனுறுப்புக்கள் தங்களையே பிரம்ம ஞானத் தீயில் வேள்விப் பொருளாக அர்ப்பணித்துக் கொள்ள விட்டு விட்டு, அவர்கள் தங்களுடைய வாழ்நாளைக் கழித்து வருகிறார்கள். சாதகர்களும்கூட, உலகத்தின் நன்மைக்காகத் தங்களுடைய புலன் வாழ்வை அர்ப்பணித்து விட்டுச் செயல் புரிந்தால், புலன்களின் ஆதிக்கத்திலிருந்து ஓரளவு விடுதலை பெறலாம். இதுதான் இங்கு கூறப்படும் புத்திமதியின் அடிப்படைக் கருத்து.

ஒருவர் தமது புலன்களையும், அவயங்களையும் அகந்தை மைய சுயநல நோக்கங்களுக்கு அல்லாமல் சமுதாய மேம்பாட்டிற்கோ உலக நன்மைக்கோ பயன்படுத்தி வாழ்பவராக இருந்தால், அவர் இப்பொருளுலகில் இருந்தாலும், தமது உடைமைப் பற்றுதல்களுக்கு அடிமையாவதில்லை.

இவ்வாறு தேவ யக்ஞம், பிரம்ம யக்ஞம் ஆகிய இரண்டையும் பற்றி கூறிய பிறகு மேலும் இரண்டு முறைகளையும் கிருஷ்ணர் பின்வரும் சுலோகத்தில் அர்ஜுனனுக்குச் சொல்லுகிறார்:

ச்ரோத்ரா—னீந்த்ரியாண்—யன்யே
ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி
சப்தாதீன் விஷயானன்ய
இந்த்ரியாக்னிஷு ஜுஹ்வதி 4:26

செவியுறுதலையும், மற்ற பொறிகளின் வேலைகளையும், புலனடக்கத் தீயில் சிலர் வேள்வி செய்கிறார்கள். சிலர் ஓசையையும், புலன் பொருள்கள் எல்லாவற்றையுமே புலன் அக்கினியில் படைத்து விடுகிறார்கள்.

வேதங்களில் கூறப்பட்டுள்ள சடங்குகள் செய்யும் போது, புனிதத் தீ வளர்த்து, வேள்விப் பொருள்களை அதிலிட்டு குறிப்பிட்ட தெய்வங்களை ஆராதிப்பார்கள். அர்ஜுனன் காலத்திய இச் சடங்குகள் பற்றிப் பொதுவாக எல்லோருக்கும் தெரியுமாகையால் கிருஷ்ணன் இவ்வுவமையைப் பயன்படுத்துகிறார். நெருப்பிலிட்ட அப்பொருள்கள் எரிந்து போனதுடன் தெய்வ ஆசியும் கிடைக்கிறது. புலனடக்கத் தீயில் புலன்களை அர்ப்பணித்துவிட்டு வாழும் பெரியோர் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவ்வாறு செய்யும் சமர்ப்பணத்தினல் புலனுணர்வு அழிந்தொழிவது மட்டுமல்ல, அப்படிச் செய்பவர்களுடைய அகவாழ்வு

மகிழ்ச்சி மிக்கதாகவும் சுதந்திரத்துடனும் திகழ்கிறது. புலன்களை திருப்தி செய்யத் தொடங்கினால் அதற்கு முடிவே இல்லை. மேலும் மேலும் கோரிக்கைகள் வளர்ந்துகொண்டு இருக்கும். இவ்வுண்மையை நமது அனுபவத்தில் காணலாம். சுயக் கட்டுப் பாடு மூலமாகத்தான் முழுமையான புலனடக்கம் வரும். தியான வாழ்க்கையை மேற்கொண்டு பேரின்பம் பெறுவதற்கு இதுவும் ஒரு வழி.

முதலாவது வரியில் கூறியிருப்பது புலனடக்க முறை பற்றி. அடுத்த வரியில் மனதைக் கட்டுப்படுத்தும் முறை பற்றிக் கூறப் படுகிறது. வெளியுலகத் தூண்டுதல்கள் புலன்களின் வழியாக உள்ளே நுழைந்து மனத்திற்கு ஊட்டமும், வலுவும் அளிக் கின்றன. புலன்கள் சேகரிக்கும் பொருள்களே நமது மனத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. அவற்றின் அனுபவங் கள் இல்லை என்றால், மனமும் இல்லை. புலன்களின் தூண்டுதல் களை மனம் ஏற்காதவாறு செய்து விட்டால், தியான வாழ்வுக் கேற்ற மனச் சமநிலை நம்மிடம் மலரும். மனத்தை முற்றிலும் கட்டுப்படுத்தி, புலன் மையங்களிலிருந்து தம்மை உள்ளிழுத்துக் கொண்ட ஒருவரை 'புலன் தீயில் ஓசையையும் மற்ற பொருள்களையும் படைத்து வேள்வி செய்தவர்' என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

புலன்களின் வழியாக உள்ளே நுழையப் பார்க்கும் தூண்டு தல்களை வாசலிலேயே தடுத்து நிறுத்தி விடுவது முதலில் கூறப் பட்டுள்ள வழி. அப்படி அவை வந்துவிட்டாலும், அவற்றை ஏற்க மறுத்து அழித்து விடுவது இரண்டாவது வழி. இதிலும் முந்திய சுலோகத்திலும் மொத்தம் நான்கு செயல்முறைகள் காட்டப் பட்டிருக்கின்றன. இவற்றுடன் மற்றொரு வழியும் இருக்கிற தென்று கிருஷ்ணர் கூறுகிறார்.

ஸர்வாணீந்த்ரிய—கர்மாணி ப்ராண—கர்மாணி சாபரே
ஆத்ம—ஸம்யம யோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞானதீபிதே
4:27

எல்லா புலனியக்கங்களையும் (உயிர்ச் சக்தியாகிய) மூச்சின் அலுவல்களையும், மெய்யறிவிலிருந்து எழும் 'தற்கட்டுப்பாடு' என்ற யோகத் தீயில் சிலர் படைத்து விடுகிறார்கள்.

புலனுறுப்புக்கள் செயலுறுப்புக்கள் ஆகியவற்றின் அலுவல் களை எல்லாம் இறையுணர்விலிருந்து எழுந்த ஞானத் தீயில் சிலர் வேள்வி செய்கிறார்கள். பரம்பொருளை உணர்ந்த பெருநிலையில் அகந்தையை அடக்குவதை 'அகந்தைக் கட்டுப்பாடு யோகம்' என்று கிருஷ்ணர் சொல்லுகிறார்.

வரையறைக்குட்பட்ட அகந்தையையும் வரையிலாப் பரம் பொருளையும் அறிவின் உதவி கொண்டு பாகுபடுத்தி, இறைவனை அறிந்து கொள்ளுவது விசார முறை. இவ்வாறு அறிந்து கொண்டவர் தாம் அகந்தையல்ல என்பதை உணர்ந்து ஆன்மா வாக வாழ்கிறார்கள். இதை 'அற கட்டுப்பாடு' என்று சுலோகம் குறிப்பிடுகிறது. 'அகந்தையை ஆன்ம உணர்வினால் அடக்குவது' என்பது இதன் பொருள் (ஆத்ம சம்யம)* புலன்கள் விருப்பம் போல் திரிவதையும் அதன் விளைவாகத் தோன்றும் செயல்களை யும் கட்டுப்படுத்தி வெற்றி கொள்வது எப்படி என்பது இதி லிருந்து தெரிகிறது.

இதையும் முற்கூறியவற்றுடன் சேர்த்தால், மொத்தம் ஐந்து முறைகள் ஆகின்றன. இதைப்போல இன்னும் நூறு சொல்லலாம் என்று அர்ஜுனனுக்கு அறிவுறுத்த விரும்புவதைப் போல் மேலும் ஐந்து முறைகளை ஒரே மூச்சில் சொல்லுகிறார் கிருஷ்ணர்.

த்ரவ்ய யஞாஸ்—தபோயஜ்ஞா
யோகயஜ்ஞாஸ்—ததாபரே
ஸ்வாத்த்யாய—ஜ்ஞானயஜ்ஞாஸ்ச
யதய: ஸம்சித வ்ரதா: 4:28

செல்வத்தையும், எளிமையையும், யோகத்தையும் சிலர் வேள்விப் பொருட்களாக்குகிறார்கள். தன்னடக்கத்தையும் கடும் விரதங்களையும் பின்பற்றும் துறவிகள் புனித நூல் படிப்பதையும், அறிவையும் வேள்வி செய்து விடுகிறார்கள்.

செல்வத்தை வேள்விப் பொருளாக்குதல் (திரவிய யக்ஞம்)—செல்வம் என்ற சொல்லுக்கு இங்கு விரிவான பொருள் சொல்ல வேண்டும். தருமம் செய்தல், நேர்மையான வழிகளில் தேடிய திரவியத்தை தனிப்பட்டவர்களுக்கும், சமுதாயத்திற்கும், பயன் படும் வகைகளில் செலவழித்தல்—இவையெல்லாம் 'திரவிய வேள்வி'. பண உதவி, அன்னதானம் போன்றவற்றை மட்டுமே திரவிய வேள்வியாக நினைக்கக் கூடாது. நம்மிடமுள்ள எல்லா உடைமைகளும் 'திரவியம்'தான். வெளியுலகப் பொருள்கள் மட்டுமின்றி, உணர்ச்சிகளும், கருத்துக்களும் கூட அச் சொல்லில் அடங்கும். உடல், மனம், அறிவு முதலிய எல்லா உடைமைகளை யும் உலக நன்மைக்காக அர்ப்பணித்துப் பணிபுரிபவர், 'திரவிய வேள்வி' செய்பவர். பணக்காரர்தான் இதைச் செய்ய முடியு

* வெளியறிவு, உள்ளறிவு ஆகிய இரண்டையும் அளிக்கும் ஐம்பொறிகளை அடக்குவது அவ்வளவு சுலபமல்ல. ஆன்ம உணர்வில் முழுமையாக ஆழ்ந்திருப் பவர்களே அவற்றை முற்றிலும் அடக்க முடியும். தன்னை (சுய ஆளுமையை) தன்னால் (ஆன்மாவினால்) அடக்குதல் என்று கூறியிருப்பதன் காரணம் இது தான்.

மென்று கருதுவது தவறு. ஏழைகளும், உடல் ஊனமுற்றோரும் கூட தரும வாழ்க்கை நடத்த முடியும். ஏனெனில் உள்ளத்திலிருக்கும் அன்பு, நேசம் பிரிவு, பாசம், அனுதாபம் போன்ற மாபெரும் உணர்ச்சிகளை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதற்கு பணமோ, உடல் ஊனமோ குறுக்கே நிற்பதில்லை. சில சமயங்களில் நாம் அனுதாபத்துடன் கூறும் ஒரு அன்புச் சொல், மனமின்றி கொடுக்கப்படும் பணத்தைவிட அதிக ஆறுதல் அளிக்கிறது.

தவ வேள்வி (தபோ யக்ஞம்)—வாழ்நாள் முழுவதும் கடவுள் நினைவாகவே இருந்து, சிலர் மிக எளிய வாழ்வு நடத்தி வருகிறார்கள். வாழ்வில் எளிமையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று உலகத்திலுள்ள எல்லா மதங்களும் கூறுகின்றன. குறிப்பிட்ட சில நாட்களிலாவது அப்படி இருக்க வேண்டுமென்று சில மதங்கள் கூறுகின்றன. இந்துக்கள் பல புனித விரதங்களை மேற்கொள்ளுகிறார்கள். பரிவுக்கும், அன்புக்கும் இலக்கணமாக விளங்கும் இறைவன், மிகக் கீழ்நிலையிலுள்ள கடைய உயிரினங்களுக்கும் உணவளித்துக் காக்கிறார். ஒரு நாள் உணவின்றி விரதமிருந்தால் கடவுள் அதைக் கண்டு மகிழ்ந்து போவதில்லை. தமது உடலை ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதற்காகவே, சுய அர்ப்பண உணர்ச்சியுடன் அதைப் போன்ற விரதங்களை நாம் மேற் கொள்ளுகிறோம். புலனடக்கத்திற்காக சிலர் உடலை வருத்தும் கடுமையான விரதங்களையும் மேற்கொள்ளுகிறார்கள்.

யோக வேள்வி செய்தல்—நம்மிடமுள்ள குறைபாடுகளை நீக்கிக்கொண்டு, தெய்வநிலைக்கு உயருவதற்காக நாம் மனப்பூர்வமாகச் செய்யும் முயற்சிக்கு 'யோகம்' என்று பெயர். இதற்காக சிலர் தங்களுடைய இஷ்ட தெய்வத்தை ஆழ்ந்த பக்தியுடன் வழிபடுகிறார்கள். ஆன்மிக வளர்ச்சியில் முன்னேறுவதற்கு இது ஒரு சிறந்த வழி. இதை உபாசனை என்று சொல்லுகிறார்கள். எவ்வித கோரிக்கையுமின்றி பிரதிபலனை எதிர்பார்க்காமல் இவ்வழிபாடு செய்தால், அதுவே யோகம். ஒருவர் விரைவாக ஆன்மிக முன்னேற்றம் பெறுவதற்கு இது ஒரு படியாக உதவுகிறது.

சுய அத்தியாய வேள்வி (சுவாத்யாய யக்ஞம்)—நமது சாத்திர நூல்களை நாள்தோறும் சிரத்தையாக படித்து வருவதும் ஒரு யோகந்தான். ஆன்மிக சாதனங்களின் காரண காரிய விவரங்கள் அவற்றைப் படிக்காதவர்களுக்குத் தெரியாது. எதற்காக ஒரு வேலை செய்கிறோமென்று தெரியாமல், இயந்திரத்தைப் போல் ஒருவர் இயங்கிவந்தால், அவர் செய்யும் வேலைகளில் சிறப்பும், செம்மையும் இருக்காது. ஆன்மிகத் துறையில் முன்னேறுவதற்கு ஆழ்ந்த அறிவும், கூரிய சிந்தனையும் அவசியம். புனித நூல்கள் படிப்பதை எல்லா மதங்களும் அத்தியாவசியப் பயிற்சிக்காகக் கூறுவதன் காரணம் இதுதான். ஒவ்வொரு சாத

கரும் தொடக்கத்தில் இதைக் கட்டாயமாகச் செய்ய வேண்டு மென்று வற்புறுத்துகிறார்கள். ஆன்ம உணர்வு பெற்ற ஞானி களும்கூட, நேரம் கிடைக்கும் போதெல்லாம் வேத, சாத்திர நூல்களைப் படிப்பதுடன் அவற்றிலுள்ள நுணுக்கங்களையும், மறைந்துள்ள கருத்துக்களையும் பற்றி மீண்டும் சிந்திக்கிறார்கள்.

சுவாத்தியாயமென்ற சொல்லுக்கு, 'தானே தெரிந்து கொள்ளுதல்' என்று பொருள். தன் மனதைத் தானே ஆராய்ந்து, தன் பலவீனங்களைத் தெரிந்து கொள்ளுவதும் இதில் அடங்கும். சாதகத்தில் இறங்கிய ஒருவர் தமது ஆன்மீக முன்னேற் றத்தைக் குறிப்பிட்டுக் கொள்ளுவதற்கு இது மிகச் சிறந்த முறை. இம் முறையைக் கடைப்பிடித்து முனிவர்கள் தங்களு டைய ஆன்ம உணர்வில் மூழ்கித் திளைத்தனர்.

ஞானவேள்வி (ஞானயக்ஞம்)—இச் சொல் கீதையில் அடிக் கடி பயன்படுத்தப்படுகிறது. பகவான் கூறும் அழகான உபதேசங் களுக்கு மேலும் அழகு செய்யும் நோக்கத்துடன் வியாசரே புனைந்த சொல் இது. ஒருவர் தாமே ஞானத் தீயை தமக்குள் வளர்த்துக் கொண்டு அதில் தமது அறியாமையை இட்டு எரித்து விடுதலே ஞான வேள்வி. அறியாமையை அழித்து விடுதல் என்பது இதன் பொருள். இதில் இரண்டு பகுதிகள் இருக் கின்றன என்பதைக் கவனிக்க வேண்டும். 1. பொய்யானதைப் புறக்கணித்தல். 2. ஆன்மாவின் உண்மை இயல்பை உறுதிப் படுத்துதல். ஒருவர் ஆழ்ந்த தியானத்தில் இருக்கும்போது இவை இரண்டும் நடைபெறுகின்றன.

செல்வத்தைத் தியாகம் செய்தல், எளிமையுடன் வாழ்ந்து புலனடக்கத் தவம் மேற்கொள்ளுதல், விழைதல்களோ, பற்றுதலோ இல்லாமல், இஷ்ட தேவதையை உபாசனை செய் தல், புனித நூல்களை தினந்தோறும் படித்தல், ஞானத் தீயில் அறியாமையை எரித்துவிடுதல் ஆகிய ஐந்து ஆன்ம முன்னேற்ற வழிகளும், அவற்றை திட சித்தத்துடன் பின்பற்றுகிறவர் களுக்கே பயனளிக்கும். தளரா ஊக்கத்துடன் அவர்கள் தமது இலட்சியத்தில் ஈடுபட வேண்டும். அவற்றைத் தெரிந்து கொண் டால் மட்டும் போதாது. இடையறா இந்த மாபெரும் சாதனையில் ஈடுபட்டிருப்பவர்களே (யதிகளே) ஆன்மிக முன்னேற்ற முயற்சி யில் வெற்றி பெறுகிறார்கள்.

இதுவரை கூறப்பட்டவைகளுடன் பிராணாயாமும் ஒரு வழி என்று கிருஷ்ண பகவான் கீழே குறிப்பிடுகிறார்:

அபானே ஜுஹ்வதி ப்ராணம்
ப்ராணே(அ)பானம் ததாபரே
ப்ராணுபான—கதீ ருத்த்வா
ப்ராணுயாம—பராயணு: 4:29

சிலர் உள்ளிழுக்கும் மூச்சில் வெளியில் செல்லும் சுவாசத்தையும், வெளியாகும் மூச்சில் உள்ளிழுக்கும் மூச்சையும் ஹோமம் செய்து பிராணுயாம வேள்வி செய்கிறுர்கள்.

நாம் சுவாசிக்கும் மூச்சைக் கட்டுப்படுத்தி பிராணுயாமம் செய்வதன் மூலமாக ஆன்மிக முன்னேற்றம் பெறும் முறை இங்கு விவரிக்கப்பட்டிருக்கிறது. திரும்பிய இடமெல்லாம் புலன்களைக் கவரும் பொருள்களே இவ்வுலகில் நிறைந்திருக்கின்றன. இவை களுக்கிடையில் சுய கட்டுப்பாட்டுடன் வாழ்வதற்கு சிலர் இம் முறையை இடையருது பின்பற்றுகிறுர்கள்.

வெளிவிடும் மூச்சில் உள்ளிழுப்பதையும் உள்ளிழுக்கும் மூச்சில் வெளிவிடுவதையும் ஹோமம் செய்து வேள்வி செய்கிறுர் கள். பிராணுயாம முறையில் மூச்சை உள்ளிழுப்பதற்கு பெயர் பூரகம். இவ்வார்த்தைக்கு நிரப்புதல் என்று பொருள். உள்ளிழுத்த காற்றை வெளிவிடுவதற்குப் பெயர் ரேசகம் ('வெளியேற்றுதல்') என்று சொல்லுகிறுர்கள். இவ்விரண்டு செயல்களுக்கும் நடுவில் உள்ள இடை நேரத்தில் மூச்சு கட்டுப் படுத்தப்பட்டு உள்ளேயே இருக்கும். அவ்வாறு மூச்சை உள்ளிழுக்காமலோ, வெளிவிடாமலோ அடக்கி வைத்திருக்கும் இடை நேரத்திற்குப் பெயர் கும்பகம். எனவே பிராணுயாம முறை பூரகம்—கும்பகம்—ரேசகம்—கும்பகம் என்ற முறையில் மாறி மாறி வரும். இதைக் குறிப்பிட்ட விகிதத்தையொட்டி பயிற்சி செய்து வந்தால் இது 'மூச்சுக் கட்டுப்பாடு' முறை (பிராணுயாமம்) ஆகிறது. தொடர்ந்து இதைச் செய்து வந்தால், முக்கியப் பிராணனுக்கு, மற்ற எல்லாப் பிராணன்களையும் அர்ப் பணிக்கும் முறை தெரியவருகிறதென்ற காரணத்தினுல், இதை ஒரு வேள்வி என்று இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

பிராணன் என்பதும், மூச்சு என்பதும் ஒன்றல்ல. அவை இரண்டும் ஒன்றுதான் என்று நினைத்து பலர் குழம்பிக் கொள்ளு கிறுர்கள். மூச்சை அடக்கப் பயிற்சி செய்து கொள்ளுவதன் மூல மாக உள்ளிருக்கும் பிராண இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் சக்தி நமக்கு வருகிறது. ஒரு உடலில் வெளியாகும் உயிரியக்க வேலை களே பிராணன். இந்து சாத்திரங்களை ஊன்றிப் படித்தவர் களுக்கு இது நன்ருகத் தெரியும். உயிருடன் இருக்கும் ஒவ்வொன் றும் செய்கின்ற ஐந்து வகை உடலியக்கங்களையும் 'ஐந்து பிராணன்கள்' என்று நமது புனித நூல்கள் கூறுகின்றன. அவ்வைந்து பிராணன்களும் பின்வருமாறு:

1.எதையும் அறிந்து கொள்ளும் திறன், 2. உள்ளிருக்கும் அசுத்தங்களை வெளியே தள்ளுதல். 3. உண்ட உணவை ஜீரணித்து உடலில் ஒட்டும்படி செய்தல். 4. உணவுச் சத்தை உடலில் எல்லாப் பகுதிகளுக்கும் கொண்டு செல்லும் இரத்த ஓட்டம். 5. மன, அறிவுபூர்வமாக தன்னை உயர்த்திக் கொள்ளுவதற்கு ஒவ்வொரு உயிரினத்திற்கும் இயல்பாக அமைந்துள்ள திறன்.

நம்மையும் அறியாமலே இந்த ஐந்து வேலைகளையும் நமது உடல் செய்து வருகிறது. இவற்றை பிராணாயாமத்தின் மூலம் நமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரலாம்; நமது உணர்வை முழுமையாக உள்ளிழுத்துக் கொள்ளலாம். தியானத்தை மேற்கொள்ளும் ஒருவருக்கு இது மிகப் பெரிய உதவியாக இருக்கும்.

இவ்வாறு பல்வேறு முறைகளைச் சொல்லி வரும் கிருஷ்ணர், கடைசியாக மற்றொரு யோக முறையையும் கீழ்க்கண்ட செய்யுளில் சொல்லி முடிக்கிறார். இதையும் சேர்த்து பன்னிரண்டு முறைகள் கூறப்பட்டிருக்கின்றன.

அபரே நியதாஹாரா: ப்ராணன் ப்ராணேஷு ஜுஹ்வதி
ஸர்வேப்–யேதே யஜ்ஞவிதோ யக்ஞக்ஷபித கல்மஷா:
4:30

வேறு சிலர் கட்டு திட்டங்களுக்கு உட்பட்டு உணவருந்தி, பிராணனுக்கு பிராணன்களை அளித்து வேள்வி செய்கிறார்கள். இவர்கள் வேள்விகளை அறிந்தவர்கள். இவர்கள் அளிக்கும் வேள்விப் படைப்பால் பாவங்கள் அழிந்தொழிகின்றன.

சிலர் உணவு கொள்ளும் முறையில் கட்டு திட்டங்களை ஏற்படுத்திக் கொண்டு, தங்களுடைய வேட்கைகளையும், ஆசாபாசங்களையும் கட்டுப் படுத்திக் கொள்ளுகிறார்கள். உணவுக் கட்டுப்பாடு இந்தியாவுக்குப் புதிதல்ல. பண்டைக் கால முனிவர்களுக்கு எந்தெந்த உணவுப் பொருளில் என்னென்ன வைட்டமின் சத்துக்கள், கனலி மதிப்புக்கள் இருக்கின்றன என்று தெரியும். அதுமட்டுமல்ல, ஒருவருடைய ஆரோக்கியத்திற்கு எவ்வளவு தானியங்கள், கறிகாய்கள் வேண்டியிருக்கும் என்பதுகூடத் தெரியும். கடுமையாக உடலுழைப்புச் செய்பவர்களுக்கு ஒருவகை உணவு தேவை. சமூகத்தில் பல்வேறு மட்டங்களில் செயலாற்றுபவர்களுக்குத் தகுந்த உணவு வகைகள் பற்றி முற்கால முனிவர்கள் நன்கு அறிந்திருந்தனர். மேலும் ஒருவருடைய ஒழுக்கம், நடவடிக்கை, பண்பு ஆகியவற்றிலுள்ள குற்றங்குறைகளைப் போக்கி, உணவு மூலமாக அவருடைய தன்மையை உயர்த்த முடியும் என்ற அளவுக்கு விவரமறிந்து, அதற்கேற்ற உணவுக் கட்டுப்பாட்டுக் கலையைப் பின்பற்றி வந்தனர். உணவு பற்றிய

விவரம் அவர்களுக்கு அவ்வளவு நன்ருகத் தெரிந்திருந்தது.

வேள்விகளை அறிந்தவர்கள்—இது வேள்விக் கலையை சிறப்பாகக் கையாளும் திறமை பெற்றவர்களைக் குறிக்கிறது. சுய அர்ப்பண உணர்ச்சியுடனும், சுயநலமற்ற உற்சாகத்துடனும் வேள்விக் கலையைப் பின்பற்றிஞல் முழுப் பயனும் பெறலாமென்று இங்கு எடுத்துரைக்கப்படுகிறது. இதுவரை கூறியுள்ள பன்னிரண்டு முறைகளையும் கையாண்டு வந்தால் இறையனுபவம் உடனே பெற்று விடலாமென்று யாரும் உத்தரவாதம் அளிக்கவில்லை. இந்த முறைகள் எல்லாவற்றையுமோ, அவற்றில் சிலவற்றையோ அல்லது ஒரே ஒரு முறையையோ தொடர்ந்து, உறுதியுடன் கடைப்பிடித்து வந்தால், 'பாவம் நீங்கப் பெறுவார்கள்' என்று உறுதிமொழி அளிக்கப்படுகிறது.

உள்ளத்தில் பதிந்துள்ள தவருன சிந்தனைக் கால்வாய்களுக்குப் பெயர்தான் பாவம். இது முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. அது மனிதனை முன்னேற விடாமல், பின் நோக்கி இழுத்துச் செல்லும் தன்மையுள்ளது. மருட்சியில் மூழ்கிய ஒருவனுடைய அகந்தை உண்மை நிலையை அறிந்து கொள்ளாமல், உடலுடனும், புலன்களுடனும் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்வதால் இத்தகைய பாவங்கள் அவனை வந்தடைகின்றன. இப் பாவ வாசனைகளிஞலேயே அவன் மிருகத்தனமாக நடந்து கொள்ளுகிருன். அவனுடைய அகந்தை அவ்வாறு நடந்து கொள்ளச் செய்கிறது. அவன் கீழ்த்தரமான குற்றச் செயல்கள் புரிவதற்கும் அதுவே காரணமாகிறது. மேற்கூறிய உணவுக் கட்டுப்பாடுகளை மேற்கொண்டால் இப்போதுள்ள தவருன 'வாசனை'கள் மறைவதுடன், ஆக்கபூர்வமான பரிணும முன்னேற்றத்திற்குகந்த, புதிய தடங்கள் மனதில் பதிகின்றன.

இங்கு கூறப்பட்டுள்ள உடல், மன, அறிவு முறைகள் எல்லாம் தெய்வீகமானவை என்றும், மத இயல்பு கொண்டவை என்றும் சொல்லப்பட்டிருந்த போதிலும், நமது மன—அறிவு அமைப்பு சிறப்பாக, பயன்மிகு தியானத்தில் ஈடுபடுவதற்கும், நம்மை நாமே உயர்த்திக் கொண்டு முன்னேற்றம் பெறுவதற்கும் இவை எல்லாம் வழிமுறைகள் என்பதை உறுதியாக நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

பொதுவாக வாழ்க்கையைப்பற்றியும், குறிப்பாக தன்னைப் பற்றியும் அகந்தை தவருகச் செய்யும் மதிப்பீடுகளைப் போக்கிக் கொண்டு தனது உண்மையான தெய்வீக இயல்பை ஒருவர் உணர்ந்து கொள்ளுவதற்கு தியானம் ஒன்றுதான் சரியான வழி. உண்மையான சாதகர்களில் சிலர், சில சமயங்களில், தாங்கள் பின்பற்றும் வழிகளில் பற்றுமிகுந்த, வீண் வாதங்களில் இறங்கி விடுகிருர்கள். இப்போது கூறிய எல்லா வழிகளும்—அவை

எவ்வளவு உயர்ந்தவையாக இருந்த போதிலும் சரி—இலட்சியத்தை அடையும் பாதைகளே தவிர, அவையே இலட்சியமாகிவிடாது என்பதை அர்ஜுனனுக்கு வலியுறுத்திக் கூறுகிறார் கிருஷ்ணன்.

இதுவரையில் விளக்கப்பட்ட பன்னிரண்டு வேள்வி முறைகளுக்கும் பொதுவாக இருப்பது சுயமுயற்சி. எனவே கிருஷ்ணர் பின்வருமாறு கூறுகிறார்:

'யக்ஞ—சிஷ்டாம்ருத—புஜோ யாந்தி ப்ரஹ்ம—ஸநாதனம்
நாயம் லோகோ ஸ்த்ய யக்ஞஸ்ய தோன்ய: குருஸத்தம
**4:31**

(வேள்வியில் எஞ்சிய) அமுதத்தை உண்பவர்கள் அழிவிலா பிரம்மத்தை அடைகிறார்கள். வேள்வி செய்யாதவனுக்கு இவ்வுலகமே இல்லை என்றால், மற்ற (உலகு) மட்டும் எப்படிக் கிட்டும், குருவமிசத்தில் சிறந்தவனே.

வேள்வியில் எஞ்சிய புனிதப்பொருளை உண்ணுதல்—பண்டைய வேள்விச் சடங்குகளின்படி, தெய்வங்களுக்கு வேள்வித் தீயில் படைத்தது போக, கலசத்தில் மிகுந்ததைப் 'புனித' பிரசாதமாகவும், அதற்கு தெய்வீக இயல்பு உண்டு என்றும்—நினைத்தனர். கடவுள் உணவருந்திய இலையில் அவர் விட்டு வைத்ததைப் பெற்றுக் கொள்ளும் பிரசாதமாக நினைத்து, வேள்வியில் எஞ்சியதை பக்தர்கள் உண்டனர். இதனால் தங்களுடைய உள்ளம் தூய்மை பெறுவதாக அவர்கள் கருதினர்.

வேள்வியில் எஞ்சியது என்பதற்கு புதிய வகையில் பொருள் கொண்டால், இன்றைய உலகத்திற்கும் கூட அது பொருத்தமாக இருக்கிறது. இதற்கு முன் கூறிய பன்னிரண்டு வகை வேள்விகளின் மூலமாக நமக்கு ஏற்படும் விளைவு என்று அதற்குப் பொருள் கூறலாம். அவ்வேள்விகளில் ஏதோ ஒன்றைச் செய்து வெற்றி பெற்றாலும்கூட, பரிபூரண சுயகட்டுப்பாடு ஏற்படும். அதனால் நமது உள்ளம் பல விதங்களிலும் சிதறி ஓடாமல் ஒருமைப்பாடு பெறும். ஆழ்ந்த தியான இலட்சியம் கைகூடுவதற்கு இவ்வேள்விகளால் நமக்கு மிஞ்சி நிற்பது ஆத்ம ஞானம்.

மன ஒருமைப்பாட்டுடன் தியானத்தில் ஆழ்ந்து ஈடுபடுபவர்கள் எல்லையற்ற, நிரந்தர பரம் பொருளாகிய பிரம்மனை தம்மில் உணருகிறார்கள். முக்கியக் கருத்தை வலியுறுத்துகிற பொதுப் படையான உண்மை செய்யுளின் இரண்டாவது வரியில் வருகிறது. அவ்வுண்மை இதுதான்: தொடர்ந்து மனப்பூர்வமான சுய முயற்சி இல்லாவிட்டால், ஒருவர் அக வளர்ச்சியோ, சுய முன்னேற்றமோ காண முடியாது. சுய அர்ப்பண உணர்ச்சி

யுடன், தன்னலம் கருதாது எந்த வேலையிலும் ஈடுபட வேண்டும். அப்படிச் செய்யாமல், செயலையே கைவிடுவதனால் இவ்வுலகில் எவ்விதச் சிறப்பையும் அடைய முடியாது. இவ்வுலகிலேயே எவ்வித வெற்றியும் கிடைக்காது என்றால், 'இலட்சியத்தை அடையும் மகோன்னத முயற்சியில் ஒரு சாதகர் ஒன்றும் செய்யாமலே எப்படி வெற்றி பெற முடியும்?' என்று கிருஷ்ணர் கேட்கிறார்.

ஆழ்ந்து சிந்திக்கும் இயல்புடையவர்களுக்கு இரண்டு சந்தேகங்கள் வரும் வாய்ப்பிருக்கிறது. ''வெவ்வேறு பாதைகளைப் பின்பற்றுபவர்கள் வெவ்வேறு இலட்சியங்களை அடைகிறார்களா?'' என்று சிலர் கேட்கிறார்கள். இப்படி ஒரு சந்தேகம். இரண்டாவதாக, 'இவை கிருஷ்ணருடைய அபிப்பிராயங்கள். இந்துக் கோட்பாடுகளுக்கு அவர் தாமாக சில கருத்துக்களை இதில் சேர்ந்திருக்கிறார்—அவ்வளவுதானே?' என்று நினைப்பவர்களும் இருக்கிறார்கள்.

இந்த இரண்டு சந்தேகங்களுக்கும் பகவானே பின்வருமாறு பதிலளிக்கிறார்:

ஏவம் பஹுவிதா யஜ்ஞா
விததா ப்ரஹ்மணோ முகே
கர்மஜான் வித்திதான் ஸர்வான்
ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே 4:32

பிரம்மன் முன்னிலையில் எண்ணற்ற வேள்விப் பொருள்கள் படைக்கப்பட்டுக் கிடக்கின்றன. இவை எல்லாம் செயலிலிருந்து உண்டானவை என்று நீ அறிவாயாக. இதைத் தெரிந்து கொண்டால் உனக்கு விடுதலை கிடைக்குமென்பதில் சந்தேகமில்லை.

இரு செயல்கள் இவ்வுலகில் ஒரே வகை விளைவுகளை ஏற்படுத்துவதில்லை. இதுவரையில் கூறிய பன்னிரண்டு வேள்விகளும் வெவ்வேறு வகையானவை. எனவே அவற்றின் விளைவு ஒன்றாக இருக்க முடியாது என்று சிலர் நினைக்கலாம். அவ் வேள்விகளிலிருந்து வெவ்வேறு வித பயன்களைத்தான் எதிர்பார்க்க முடியுமென்று அவர்கள் நினைப்பது இயற்கை. ஆனால் பாதைகள் வேறாக இருந்தாலும், அவை சென்று அடையும் குறிக்கோள் ஒன்றுதான் என்று கிருஷ்ணர் இங்கு காட்டுகிறார். தோற்றமும் மறைதலுமில்லாத பிரம்மனை அடைவதற்கு எவ்வித வேள்வியையும் மேற்கொள்ளலாம் என்பது அவர் கூறும் கருத்து. ''எல்லா சாலைகளும் கடைசியில் ரோமாபுரியையே அடைகின்றன'' என்று சொல்லுவார்களே, அதைப் போல எல்லா வேள்விகளும் ஒரே குறிக்கோளை அடைகின்றன.

இவையெல்லாம் செயலிலிருந்து தோன்றியவை என்று அறிவாயாக—இதை இப்போது நினைவூட்டுவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. சரியான நேரத்தில்தான் கிருஷ்ணர் இதை நினைவூட்டுகிறார். அப்படிச் செய்வதற்குக் காரணங்கள் பின்வருமாறு: 1. வேதங்களில் கூறப்பட்டுள்ள இந்தப் பாதைகள் எல்லாவற்றிலும் சுயமுயற்சியே முக்கியமானதாக இருக்கிறது. கலாச்சார சுய முன்னேற்றம் பெற்று உயர வேண்டுமானால், அர்ஜுனனும் சரியான செயல் முறையைக் கடைப்பிடித்தே ஆக வேண்டும். 2. இதுவரை கூறப்பட்டவை எல்லாம் பாதைகளே தவிர, இவற்றையே குறிக்கோளாக நினைத்து விடக் கூடாது என்றும் இச் செய்யுள் அறிவுறுத்துகிறது. விருப்பத்திலிருந்து செயல் பிறக்கிறது. எனவே செயல் புரியும் வரை ஒருவர் கோரிக்கைகளிலிருந்து விடுதலை பெற முடியாது. கோரிக்கையில்லாத நிலையே முழுமை பெற்ற நினைவு நிலை. ஆகையால் இங்குள்ள பொருட் செறிவுமிக்க சொற்கள் நமக்கு ஒரு எச்சரிக்கையாகவும் அமைகின்றன. முற்கூறிய வேள்விகள் செய்வதே வாழ்க்கையின் குறிக்கோள் என்று நினைத்து விடவேண்டாமென்ற எச்சரிக்கை இதில் அடங்கியிருக்கிறது.

இதை நீ தெரிந்து கொண்டால்—தெரிந்து கொள்ளுதல் என்றால் சும்மா அறிவில் பதித்துக் கொள்ளுதல்' என்று அர்த்தமல்ல. அகத்திலுள்ள பேருண்மைப் பொருளை நேரடியாக அனுபவித்து, ஆன்ம உணர்வு பெறுதலையே தெரிந்து கொள்ளுதல்' என்ற சொல் குறிக்கிறது.

மெய்யறிவு பெறுதலை 'ஞான வேள்வி' என்று கிருஷ்ணர் குறிப்பிட்டார். * அத்துடன் மற்ற வேள்விகளையும் விவரித்த போதிலும், ஞான வேள்வியே எல்லாவற்றிலும் சிறந்தது என்று பின்வரும் செய்யுளில் அவர் சுட்டிக் காட்டுகிறார். எல்லா வேள்விகளும் அகத்துறையில் ஒருமைப்பாடு பெறுவதற்காக —அதாவது 'புருஷார்த்தத்திற்காக' செய்யப்படுகின்றன. எனவே இவை ஒரு இலட்சியத்தை அடைவதற்கான வழிகள். அவற்றையே இலட்சியமாக நினைத்து தடுமாறக் கூடாதென்பதற்காக விளக்கம் அளிக்கிறார் கிருஷ்ணன்.

'ச்ரேயான் த்ரவ்யமயாத்—யஜ்ஞாத்
ஜ்ஞானயஜ்ஞ: பரந்தப
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த
ஜ்ஞானே பரிஸமாப்யதே *4:33*

---

*1 அத்தியாயம் 4, செய்யுள் 4 பார்க்க.

பொருள் வேள்வியைவிட ஞான வேள்வி சிறந்தது. மொத்தத்தில் எல்லாச் செயல்களுமே ஞானத்தில் முடிவுறுகின்றன. பார்த்திபா. (எதிரியைப் பொசுக்குபவனே!)

சாதாரணமாக எல்லா வேள்விகளிலும் பொருள்களை தீயில் படைத்து வேள்வி செய்கிறார்கள். திரவிய வேள்வி செய்கிறார்கள். இவற்றையும் ஞான வேள்வியையும் * ஒப்பிட்டு, ஒருவருடைய பண்பாட்டு முன்னேற்றத்திற்கு ஞான வேள்வியே எல்லா விதங்களிலும் உயர்ந்ததென்று கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார்.

அறியாமையை அறிவுத் தீயில் ஹோமம் செய்யும் வேள்வி (ஞானம்) ஏன் உயர்ந்தது, எப்படி அது சிறந்ததாகும் என்பதை இரண்டாவது வரியில் பகவான் விளக்குகிறார்.

சடங்குகளில் செய்யும் நற்கருமங்களினால் நமக்கு நற்பயன் கிட்டுகிறது. அதை அனுபவிப்பதற்காக நமது மேதை மீண்டும் புதிய உருவெடுத்துத்தான் ஆகவேண்டும். அப்படிப் புதிதாக உருவெடுக்கும் போது மற்ற செயல்களிலும் அது ஈடுபடுகிறது. இப்படியாக இது ஒரு தொடர் சங்கிலியாக வந்து கொண்டே இருக்கும். கருமத்தின் மூலம் கருமத்திற்கு முடிவு கட்ட முடியாது. ஆகையால் செயலே தன்னிறைவு பெறும் ஒரு பாதையாக ஆவதற்கில்லை.

ஆனால் ஞான வேள்வியில் அப்படி நிகழ்வது கிடையாது. ஆன்ம ஞானமென்ற அக்னியில், மருட்சியுற்ற மமதை (அகந்தை, மமதை என்ற இரு சொற்களும் ஒரே பொருளில் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன) தன்னைத் தானே அர்ப்பணித்துக் கொண்டு தீய்ந்து விடுகிறது. இப்படியாக ஞானம் எல்லாக் கருமங்களுக்கும் முற்றுப் புள்ளி வைத்து விடுகிறது. அறியாமையிலிருந்து விழைவுகளும், விழைவு (விருப்பங்கள்)ளிலிருந்து செயல்களும் எழுவதை ஏற்கனவே பார்த்தோம். எல்லாச் செயல்களுக்கும் அடிப்படைக் காரணமாக உள்ள அறியாமை முற்றிலும் அழிந்து மெய்யறிவு உதித்தவுடன் எல்லாச் செயல்களும் நிறைவு பெற்று விடுவதில் வியப்பு ஒன்றுமில்லை. எனவே ''எல்லாச் செயல்களும், ஒருவர் ஞானம் பெற்றவுடன் முடிவடைந்து விடுகின்றன,'' என்று ஐயப்பாட்டுக்கு இடமின்றி விளக்கிக் கூறுகிறார் கிருஷ்ணர்.

இப்படி எல்லாச் செயல்களையும் ஒரேயடியாக எரித்துச் சாம்பலாக்கி விடும் ஞானத்தைப் பெறுவது எப்படி?

தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞானினஸ் தத்வதர்சின:

*4:34*

---

* 2 அத்தியாயம்4—28ல் காண்க.

பேருண்மையுணர்ந்த 'விவேகி'களின் முன் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கியும், கேள்விகளைக் கேட்டும் பணி விடை புரிந்தும் வந்தால் அவர்கள் உனக்கு (அந்த) அறிவைப் புகட்டுவார்கள் என்று தெரிந்து கொள்.

நமக்கு அறிவுப் பாதையை விளக்கிவைத்து வாழ்க்கையில் நிறைவு பெற வழிகாட்டும் குருவின் தன்மைகள் இங்கு குறிப் பிடப்பட்டிருக்கின்றன. அத்துடன், தனது முயற்சியில் வெற்றி பெற ஒரு மாணவனுக்குத் தேவையான மனப்பான்மை, அறிவு பெறும் ஆவல், ஆசிரியரை அணுகும் முறை முதலியவைகளும் இங்கு எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

நிலத்தில் விழுந்து வணங்கி—மாணவனுடைய அணுகுமுறை பணிவு மிக்கதாகவும், மரியாதையுடனும் இருக்க வேண்டும் என்பதே இதற்கு அர்த்தம். ஒரு குருவை அடைந்து அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து வாழ்க்கையின் இரகசியத்தை அவரிட மிருந்து கற்கவேண்டும். அக உலகாகிய மனம் பற்றியும், அதைக் கட்டுப்படுத்துவது பற்றியும் பொதுவாக மாணவர்களுக்கு ஒன்றும் தெரியாது. ஆகையால் ஆசான் கூறுவதைச் சரியாகப் புரிந்து கொண்டு, அதைப் பின்பற்றும் மனப்பான்மை அவர்களி டம் இருக்க வேண்டும்.

தண்ணீர் எப்போதும் உயர் மட்டத்திலிருந்து கீழ்மட்டத் திற்குப் பாய்கிறது. அறிவும் அப்படித்தான். வணக்கத்துடன் தனது ஆசிரியரை அணுக வேண்டுமென்று மாணவனுக்குக் கூறு வதன் நோக்கம் அதுவே. அருவியாகப் பெருகிவரும் அறிவை குருவிடமிருந்து அந்த நிலையில் ஒரு மாணவன் பெற முடியும். வணக்கமென்பது மனத்திலும், அறிவிலும் இருக்கவேண்டுமே தவிர, சும்மா நிலத்தில் விழுந்து கும்பிட்டால் மட்டும் போதாது.

கேள்விகளைக் கேட்டும், ஆசானுடைய உள்ளத்தில் அடங்கி யிருக்கும் அறிவுக் களஞ்சியத்தைத் திறப்பது மாணவர்கள் கேட்கும் கேள்விகளே. ஒரு மாணவன் சந்தேகம் கேட்டவுடன், அவனுடைய சிந்தனைப் போக்கில் உள்ள தவறு உடனே குருவுக் குத் தெரிகிறது. அவன் கேட்ட பிரச்னைக்கு விடையளிப்பதுடன், அவனுடைய சிந்தனைப் போக்கு சரியான வழியில் இருக்கும்படி யாக உள்ளறிவையும் அவர் மாற்றி அமைப்பர். குருவுடன் சீடர் கள் அவ்வாறு அறிவுத் துறையில் மல்யுத்தம் செய்வதன் காரண மாக, அவர்களுடைய அறிவுக் கூர்மை அதிகரிக்கிறது. குருவின் அறிவு மணம் மாணவனுடைய மனத்திலிருந்து வீசத் தொடங்கு கிறது.

மனந்திறந்து விவாதிப்பதன் மூலம் கல்வி கற்கும் 'சத்சங்க' முறை இந்துக்களிடையில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இருந்து வருகிறது. மற்ற உலக மதங்களில் இந்த மாதிரி மரபு இல்லை.

வேதாந்தம் மட்டுமே இவ்வாறு அறிவுக்குப் பரிபூரண சுதந்திரம் அளிக்கிறது. குருட்டு நம்பிக்கையை ஆதாயமாக்கிக் கொள்ளும் வழக்கம் இந்து மதங்களுக்கு இல்லை. மற்ற மதங்களில் எல்லாம், மதத் தலைவர்கள் கூறுவதை அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டு மென்று வற்புறுத்தப்படுகிறது. அப்படியே அவர்களுடைய புனித நூல்களில் ஏற்படும் சந்தேகங்களுக்கு, அந்த மதங்களைச் சேர்ந்தவர்கள் அறிவுபூர்வமான விளக்கங்களைக் கொடுக்க முடியாமல் போவதற்கு அதுதான் காரணம். ஆகையால் அப் புனித நூல்களில் உள்ளவை பற்றி மாணவர்கள் சுதந்திரமாக சந்தேகங்கள் எழுப்புவதை அந்த மதங்களில் உள்ள பிரசாரகர்களும், பூசாரிகளும் தடுத்து விடுகிறார்கள்.

பணிவிடை செய்து—ஆசிரமங்கள் நிறுவப்பட்டு, அந் நிறுவனங்களில் கல்வி கற்பிக்கும் முறை தோன்றிய பிறகு, பூஜைக்கு மலர்களும், தெய்வத்திற்கு நிவேதனம் செய்ய இனிப்புப் பண்டங்களும் மாணவர்கள் எடுத்துக் கொண்டு வரும் வழக்கம் ஏற்பட்டது. அவ்வாறே குருவுக்கு இப்பண்டங்களை அளிக்கும் முறையும் வந்தது. வாழ்க்கையைக் குறித்து ஆசான் கூறும் கொள்கைகளைக் கடைப்பிடித்து நடப்பதைவிடப் பெரிய சேவை ஒன்றுமில்லை. நமது மாமுனிவர்கள் காட்டியுள்ள வழியில் நம் வாழ்க்கையைத் திருத்தி அமைத்துக் கொண்டால், அதுவே நிறைவு பெற்ற மகானுக்கு நிறைவு பெறாத சாதாரண மக்கள் செய்யும் அஞ்சலியும், பணிவிடையுமாகும்.

ஆன்மிகத் துறையில் சரியான வழிகாட்ட முன்வரும் குருவுக்கு இரண்டு முக்கியத் தகுதிகள் இருக்க வேண்டும். 1. சாத்திர அறிவைப் பொறுத்தவரை அவர் நிறைகுடமாக இருக்க வேண்டும். 2. அவர் நூலறிவு பெற்றவராக மட்டும் இருந்தால் போதாது. இறை அனுபவம் பெற்றவராகவும் இருக்கவேண்டும். தாமே நேரடியாக ஆன்ம உணர்வை அனுபவத்திராத ஒருவர் மாணவர்களுக்கு எப்படி அவ்வுணர்வு நிலையை எடுத்துரைக்க முடியும்? எனவே இந்த இரண்டு தகுதிகளும் ஒவ்வொரு குருவுக்கும் இருக்க வேண்டும். இச்செய்யுள் தொட்டுக்காட்டிச் செல்கிறது. சாத்திரங்களைக் கரைத்துக் குடித்தவர் மாபெரும் பண்டிதராக இருக்கலாம். சாதகருக்கு வழிகாட்டும் ஞானியாக இருக்க அது போதாது. இறை அனுபவம் பெற்ற ஒருவர், அவ்வனுபவத்தை மற்றவர்களுக்கு விளக்க முடியாது என்ற காரணத்தினால் பெரும்பாலும் மௌனியாகி விடுகிறார்.

ஞானந்தான்—அறிவும் மெய்யுணர்வு பெற்ற விவேகிகள் அளிக்கும் அறிவு மட்டும்தான்—பயனளிப்பதாக இருக்கும். வேறு எந்த அறிவும் அறிவாகாது என்று கிருஷ்ணர் இங்கு வலியுறுத்து

கிறார். அவ்வகையான சிறப்பறிவு பெற்றவர்கள் நிலையை கிருஷ்ணர் கீழ்க்கண்ட சுலோகத்தில் விளக்குகிறார்.

யத்ஜ்ஞாத்வா ந புனர்மோஹம்
ஏவம் யாஸ்யஸி பாண்டவ
யேன பூதான்—யசேஷேண
த்ரக்ஷ்யஸ்—யாத்மன்யதோ மயி 4:35

பாண்டவா, நீ அதைத் தெரிந்து கொண்ட பிறகு மீண்டும் இதைப் போன்ற மருட்சியில் மூழ்க மாட்டாய். படைப்பு முழுவதையும் உனது ஆன்மாவில் காண்பாய். அத்துடன் அவற்றை என்னிலும் காண்பாய்.

இவ்வளவு கஷ்டப்பட்டு ஒருவர் 'அறிவு' பெறுகிறார் என்று வைத்துக் கொள்ளுவோம். அவர் இறந்த பிறகு மீண்டும் பழைய மாதிரி 'அறியாமை'யில் மூழ்கி அதன் விளைவாக மறுபடியும் இவ்வளவு பாடுபட்டு மெய்யுணர்வு பெற வேண்டுமா? நம் வாழ்க்கையிலேயே சில ஆண்டுகளுக்கு முன் கற்று அனுபவித்த பலவற்றை இப்போது நாம் மறந்து விடுகிறோமே, அதைப்போல பெற்ற அறிவையும் நாம் பிறகு இழந்து விடமாட்டோமா?

இவ்வளவு பெற்ற பிறகு, 'மீண்டும் இதைப் போன்ற மருட்சிக்கு உள்ளாக மாட்டாய்' என்று ஆணித்தரமான பிரகடனம் செய்கிறார் கிருஷ்ணர். இது ஏதோ உணர்ச்சி மிக்க பிரசங்கத்தைக் கேட்பதைப் போல் இருந்தாலும், சாதகர்கள் இதை அப்படியே ஒப்புக் கொள்வது நல்லது. இக் கருத்தை, கற்றுணர்ந்த முனிவர்கள் எல்லோரும் ஏக மனதாகக் கூறுகிறார்கள். தங்கள் தங்களுடைய தலைமுறையைச் சேர்ந்த மக்களை ஏமாற்ற வேண்டுமென்ற நோக்கம் அவர்கள் எல்லோருக்குமேயா இருந்திருக்கும்? எனவே இதிலுள்ள உண்மையை இதயபூர்வமாக ஏற்றுக் கொள்ளுவதே புத்திசாலித்தனம். சாதகத்தில் வெற்றி பெற்ற பிறகு, இவ்வுண்மையை நம் அனுபவத்தின் மூலமாகவே தெரிந்து கொள்ளலாம்.

புது மணமான தம்பதிகளின் முதலிரவு இன்பங்களைப் பற்றி ஒரு குழந்தைக்குத் தெரியாது என்பது உண்மைதான். அதற்காக அவர்கள் கூறுவது பொய் என்று ஆகிவிடுமா? தம்பதிகள் பெற்ற இன்பத்தைக் கேட்டு இன்பம் பெறும் வயது கூட அந்தக் குழந்தைக்கு இல்லை. ஆன்ம அனுபவத்தைப் பொறுத்தவரை நம் நிலையும் அக் குழந்தையைப் போன்றதுதான். மருட்சியில் உள்ளவர்கள், அழியா இறையின்பத்தைக் கற்பனை கூட செய்து பார்க்க முடிவதில்லை. ஞானிகள் அதை உற்சாகமாக எடுத்துரைக்க முன்வந்தாலும், அதைப் புரிந்து கொள்ளுவதற்கு வேண்டிய முதிர்ச்சி இருந்தால்தான் அது விளங்கும்.

தம்மை ஆன்மாவாகக் கண்டு கொண்ட பிறகு, படைப்பு முழுவதுமே ஆன்மாவின் தோற்றத்தைத் தவிர வேறில்லை என்பதையும், ஆன்மாவும் பரம் பொருளும் ஒன்றே என்பதையும் ஒருவர் அறிந்து கொள்ளுவார் என்று கிருஷ்ணர் உறுதி கூறுகிறார். படைப்பு என்று சொல்லும்போது வெளியுலகத்தில் உள்ளதை மட்டுமின்றி, உணர்ச்சி கருத்துலகப் படைப்புக்களையும் உள்ளிட்டே பரமாத்மாவாகிய அவர் பேசுகிறார். எதிரிலிருப்பது கடல் என்று தெரிந்த பிறகு, எல்லா அலைகளும்கூட கடல் தான் என்பதைச் சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம் அல்லவா?

முந்திய சுலோகங்களில் கூறப்பட்ட அறிவை ஒருவர் பெற்றிருக்கிறாரா இல்லையா என்று தெரிந்து கொள்ளும் வழி இச் சுலோகத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு குருவை அடைந்த பிறகு எவ்வளவு காலம் அவரை அண்டியிருக்க வேண்டும் என்ற பிரச்னைக்கும் இங்கு விடை கிடைக்கிறது. படைப்பு முழுவதையும் தமது ஆன்மாவாக உணரும் சக்தி பெறுதவரையில், எல்லாம் வல்ல இறைவனைக் காண முடியாதவரை, ஒருவர் குருவுடைய அரவணைப்பிலிருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

'அறிவு'ச் சிறப்பு பற்றி கிருஷ்ணன் மேலும் கூறுவதைக் கேட்கலாம்:

*அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம:*
*ஸர்வம் ஜ்ஞான—ப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி:*

**4:36**

பாவிகளில் பாவியானாலும் கூட, நீ அறிவுத் தோணியினால் மட்டுமே எல்லா பாவங்களையும் கடக்கிறாய்.

இறைவனைத் தன்னுள்ளும் எல்லாவற்றிலும் காணும் அனுபவம் தனக்குக் கிடைக்குமென்று அர்ஜுனனுக்குத் தோன்றவில்லையோ அல்லது கிருஷ்ணர் வாக்களித்த அப்பெரும் பேறு பெறுவதற்குத் தான் தகுதியில்லை என்று நினைத்தானோ என்னவோ! அகத்தின் அழகு முகத்தில் தெரிந்து விடுமல்லவா?

இந்த மகத்தான அனுபவம் எனக்கா ஏற்படப் போகிறது என்ற எண்ணம் நம்மில் யாருக்கும் இயற்கை. நம்மிடமுள்ள குறைகள் நமக்கு நன்கு தெரிவதால் அப்படித் தோன்றுகிறது.

பாவிகள் ஞான மாளிகைக்குள் நுழையக் கூடாது என்று வேதாந்தத் தத்துவம் ஈவிரக்கமின்றி ஒதுக்கி வைக்கவில்லை. கைவிடப்பட்ட ஆன்மா ஒன்று இருப்பதாகவும் வேதாந்தமன்ற மாதா கோவிலுக்கு வந்தால் அவர் உய்வு பெறுவார் என்றும் வேதாந்தம் கூறவில்லை. அளவிலா சகிப்புத் தன்மைக்கு வேதாந்தம் எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது. இவ்வளவு சகிப்புத்

தன்மை காட்டுவது ஒரு பலவீனமாகக் கூட சிலருக்குத் தோன்ற லாம். அந்த அளவுக்கு விட்டுக் கொடுத்து, சத்தியம் ஒன்றையே அது பறை சாற்றி நிற்கிறது. ஒவ்வொருவரிலும் பரமன் குடி கொண்டிருக்கிறன். பாவத்தில் ஊறியவர்கள்கூட தீவிரமாக முயற்சித்தால், தன் பாரம்பரிய உரிமையை அடையலாம் என்று வேதாந்தம் கூறுகிறது. எல்லா மனிதர்களும் உயருவதற்கு வழி காட்டும் நூல் கீதை. உலகத்திலுள்ள எல்லோருக்கும் இது பொருந்தக் கூடியது என்பது கிருஷ்ணருடைய இவ் வார்த்தை களிலிருந்து தெரிகிறது. பாவிகளிலும் பாவியாக இருந்தாலும், ஒருவன் தற்காலச் சூழ்நிலையும் கடந்து நல்லுலகை அடைய வழி யுண்டு என்று பகவான் கூறுகிறார். உரிமை சாசனம் எழுதிக் கொடுப்பதைப்போல், இவ்வாறு தெய்வ நிலை அடையும் வாய்ப்பு எல்லோருக்கும் உண்டு என்று கூறும் சாத்திரம் வேறு எந்த மதத் திலும் இல்லை.

அகந்தை நமது ஆன்மாவைத் தவிர வேறில்லை. அதை உணர்ந்து, எல்லோருடைய ஆன்மாவிலும் பரந்து விரிந்த பேருண்மையில் திளைப்பதே ஞானம். நம்முடைய உண்மை இயல்பை உணர்ந்து கொண்டால், உடல் வேட்கைகள் வெறும் கானல் நீராகி விடுகின்றன. பிறகு அவை தெய்வீக மாண்பி லிருந்து நம்மை இழி நிலைக்கு இழுத்துக் கொண்டு வர முடியாது. எனவே பாவம், துயரம் என்ற பாறைகளில் நமது வாழ்க்கைத் தோணி மோதிச் சிதறிவிடும் வாய்ப்பில்லை. இதை அழகான உருவகத்தின் மூலம் கிருஷ்ணன் சுட்டிக் காட்டுகிறார்.

ஞானம் எவ்வாறு பாவங்களை அழிக்கிறது தெரியுமா?

யதைதாம்ஸி ஸமித்தோக்னிர்—பஸ்மஸாத் குருதேர்ஜுன
ஜ்ஞானுக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா:

4:37

விறகைப் பெரு நெருப்பு எரித்து சாம்பலாக்கி விடுவது போல, அறிவுத் தீ எல்லாச் செயல்களையும் சாம்பலாக்கி விடு கிறது, அர்ஜுனு.

விறகை அக்கினி சாம்பலாக்குவது போல—ஒரு தந்தை தன்னுடைய மகனுக்கு எளிய உதாரணங்கள் கொடுத்து ஒரு பிரச்னையை விளக்கி அன்புடன் அறிவு புகட்டுவது போல இந்த உதாரணம் அமைந்திருக்கிறது. வேள்வி நடக்கும் இடங்களில் எல்லாம் எல்லோரும் பார்த்திருக்கக் கூடிய உதாரணத்தை எடுத்துரைத்தவுடன் வேள்விச் சாலையின் அமைதி, கடவுளு டைய முன்னிலையில் நிற்பதைப் போன்ற புனித நினைப்பு, இதைப் போன்ற சூழ்நிலை முழுவதும் நம் கண்முன் வருகிறது.

இவ்வுதாரணம் மேலும் பல வகைகளில் பொருத்தமாக

இருக்கிறது. வேள்வித் தீ வளர்ப்பதற்கு பலர் கொண்டு வரும் கட்டைகளும், சுள்ளிகளும் பல நிறங்களில் இருக்கும். பற்பல அளவுள்ளவைகளாக இருக்கும். சில நன்ருகக் காய்ந்திருக்கும், சில அவ்வளவு காயாமலிருக்கும். எரிந்த பிறகு இதில் எல்லாமே ஒரே நிறமுள்ள சாம்பல்தான் எஞ்சி நிற்கிறது. ஒருவித விறகுக்கும், இன்னொருவித விறகுக்கும், சாம்பலிலிருந்து வேறு பாடு கண்டுபிடிக்க முடியாது. அவ்வாறே நல்லவை, சுமா ரானவை, கெட்டவை முதலிய எல்லாக் கனிமங்களும் ஞான அக்னியில் எரிந்து, காரண விளைவு நிலையிலிருந்து முற்றிலும் மாறு பட்டு இறுதியில் ஒரே மாதிரியான சாம்பலாகி விடுகின்றன. கன மான பெரிய கட்டைகள்கூட எரிந்த பிறகு காற்றில் பறக்கும் சாம்பலாகி விடுகின்றது. எல்லா சாம்பலும் ஒரே நிறந்தான். அக்கினிக்கு இரையாகும் எல்லாப் பொருள்களும் இந்த நிலையைத்தான் அடைகின்றன.

ஒவ்வொரு செயலுக்கும் விளைவு உண்டு. அது முற்றி, வெவ் வேறு காலங்களில் பயனுகத் தோற்றமளிக்கத் தொடங்குகிறது. விளைவுகள் முற்றுவது செயலின் தன்மையைப் பொறுத்து இருக் கிறது. கற்பனைக்கும் எட்டாத கடந்த காலத்திலிருந்து எத்தனையோ வகையான பிறவிகள் எடுத்து, மமதையுடனும், தற்பெருமை கொண்டும் செயல் புரிந்து வந்திருக்கிறோம். அச் செயல்களின் விளைவாக கோடானுகோடித் தடங்கள் நம் உள்ளத்தில் பதிந்திருக்கும். அவற்றை எல்லாம் காலக்கிரமமாக வாழ்ந்து தீர்ப்பதைத் தவிர வேறு வழியில்லை.

கருமங்களை, விஞ்ஞான பூர்வமாக மூன்று வகைகளாகப் பிரித்திருக்கிறார்கள். இன்னும் விளைவு தராமல் சேமிக்கப்பட்டு வருபவை ஒரு வகை. இதை நீண்ட காலத்துக்குப் பிறகு விளைவு கள் தரத் தொடங்கும். இவற்றிற்கு சஞ்சித கர்மா என்று பெயர். இப்பொழுது விளைவு அளித்துக் கொண்டிருப்பவை—நாம் அனுப வித்து வருபவை—பிராரர்த்த கர்மா. இவற்றைத் தொடர்ந்து விளைவு தரக் காத்திருப்பவை ஆகமி என்று பெயர். எல்லாக் கருமங்களும் ஞானத் தீயில் சாம்பலாகி விடுகின்றன என்று இங்கு பகவான் கூறும்போது, சஞ்சித, ஆகமி கருமங்களும்கூட எரிந்து போகின்றன. என்பதைக் குறிப்பிடுகிறார்.

ஆகையால்—

நஹி ஜ்ஞானேன ஸத்ருசம் பவித்ர—மிஹ வித்யதே
தத்—ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேனுத்மனி விந்ததி

*4:38*

ஞானத்தைப் போல், தூய்மையாக்குகின்ற வேறொன்று இவ்வுலகில் இல்லை. யோக நிறைவு பெற்றுள்ள ஒருவர் அதை

நாளடைவில் தமக்குள்ளேயே காணப் பெறுகிறார்.

ஆன்ம உணர்வினால் வரும் மகத்தான ஆனந்தம் பற்றி கூறும்போது, கிருஷ்ணனுக்கே ஆனந்தம் தாங்க முடியவில்லை. ''ஞானத்தைவிட மேம்பட்டதும், புனிதமானதுமான ஒன்று இவ்வுலகத்தில் வேறு எதுவுமில்லை'' என்று வெளுத்து வாங்கு கிறார். நீரில் மூழ்கி இறந்து விடும் தறுவாயில் உள்ளவனுக்கு ஒரு தெப்பக் கட்டை கிடைத்ததைப் போல, மருட்சியுள்ள மமதைக்கு தனது உண்மை இயல்பு பற்றிய மெய்யறிவு பெறுவதைவிட மேம்பட்ட செல்வமோ பெரும் பேறோ இருக்க முடியாது என்பது இதிலுள்ள கருத்து.

யோகத்தில் முழு வெற்றி பெற்றவுடன் ஒருவருடைய உள்ளத்தில் ஆன்ம ஞானம் தானாகவே மலருகிறது. யோகத்தில் நிறைவு பெறுதல் என்றால், இதற்கு முன் கூறிய பன்னிரண்டு வேள்விகளையும் உற்சாகத்துடனும், உறுதியுடனும் செய்து அதில் வெற்றி கண்டவர் என்று பொருள். ஊனுடலை முறியடித்து ஆன்மா பெறும் வெற்றி இது. இதை ஒருவர் சுய முயற்சியினால் பெற வேண்டுமே தவிர, எந்தக் குருவும் இதை அளிக்க முடியாது. மாணவரை ஒரு குரு தொட்டவுடன் பளிச்சென்று அவருக்கு ஞானோதயம் ஆகிவிட்டதாகக் கூறுவதெல்லாம் வெறும் கதை. அப்படி நடக்கவே முடியாது. அது முடியுமானால் அர்ஜுனனிடம் இவ்வளவு அன்பும் நட்பும் கொண்ட பரமாத்மா வாகிய கிருஷ்ணன் கண் மூடித் திறப்பதற்குள் அவனைத் தொட்டு தெய்வ மனிதனாக ஆக்கி இருக்கலாமே. இவ்வளவு நேரம் வாக்கு வாதம் செய்து மல்லுக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை அல்லவா?

இப்படி எல்லாம் நடக்குமென்று நம்பி பல பக்தர்கள் தங் களுடைய வாய்ப்புக்களை எல்லாம் வீணாக்கிக் கொண்டிருக்கிறார் கள். இதனால் தங்களுக்கும், தங்களுடைய தலைசிறந்த குருமார் களுக்கும் அகௌரவத்தையே இவர்கள் தேடித்தருகிறார்கள். அறிவாற்றலும், உடலுழைப்பினாலும் மாணவர்கள் குருவுக்கு எத்தனையோ பணிவிடைகள் செய்யலாம். அதற்கு பிரதிபலனாக, அவர் பெற்ற ஞானத்தை அப்படியே தூக்கிக் கொடுத்து விடவேண்டுமென்று எதிர்பார்க்கிறார்கள். இப்படி சுலபமாக ஆன்ம உணர்வு பெறும் பயனற்ற முயற்சிகளில் பலர் இப்போதும் ஈடுபட்டு வருகிறார்கள். பொன்னான வாய்ப்புக்களை இழக்கும் வழியே இது என்று அவர்களை எச்சரிக்கை செய்ய வேண்டியது அவசியமாகிறது. நாட்டில் எத்தனையோ ஆசிரமங்கள் இருக் கின்றன. அதில் ஏதேனும் ஒன்றில் நுழைந்தால் நாலைந்து குருமார்களை மலிவாக வாங்கி விடலாம், அல்லது தொட்டு விட்டாவது வந்துவிடலாம்! இந்த முறையில் 'ஆன்ம உணர்வு' பெறும் வியாபாரத்திற்கு சாத்திரங்களில் இடமே இல்லை.

கிருஷ்ணன் அன்பு கனிந்த உள்ளத்துடன், ''உன்னை நீயேதான் (ஸ்வயம்) தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். அர்ஜுனா, பிறகு நாளடைவில் (காலேன) பரம்பாருளை நீ காண்பாய்,'' என்று கூறுகிறார்.

தன்னை நிறைவு பெற்றவனாகச் செய்து கொள்ளுவதற்குக் கால அட்டவணையொன்றும் இங்கு கொடுக்கப்படவில்லை. உண்மையான உள்ளத்துடனும், சிரத்தையுடனும் முற்கூறிய பன்னிரண்டு 'வேள்வி'களையும் செய்து வந்தால் 'நாளடைவில்' ஆன்மானுபவம் அடைந்து பேரின்பம் பெறுவார்கள்.—அதாவது, தெய்வ நிலைக்கு உயருகிறார்கள்—என்று கூறப்படுகிறது.

நாளடைவில் (காலேன)—இதற்கு 'உடனடியாக' என்று அர்த்தமில்லை. ''ஆயிரமாயிரம் ஆண்டு கழித்து'' என்றும் பொருள் கொள்ளக் கூடாது. இந்தப் பிரச்னையை அடுத்த சுலோகம் இன்னும் சற்று விவரமாகக் கூறுகிறது. அங்கு 'அசிரேண' (கூடிய விரைவில்) என்ற சொல் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. ஏக காலத்தில் எல்லா சாதகர்களுக்கும் நம்பிக்கையூட்டி, நேரடியாக வழிகாட்டும் கருத்து அது. யாரும் பொறுமை இழந்தவிட வேண்டியதில்லை. முழு நம்பிக்கையுடன், சரியான வழியில் முயற்சித்து வந்தால், 'கூடிய விரைவில்' அவர்கள் ஆன்ம இலட்சியத்தை அடைவார்கள் என்று அடுத்த சுலோகத்தில் தெரிகிறது.

ச்ரத்தாவான் லபதே ஜ்ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய:
ஜ்ஞானம் லப்த்வா பராம் சாந்திம் அசிரேணாதிகச்சதி
*4:39*

யாரொருவர் சிரத்தை மிக்கவராகவும், தாம் மேற்கொண்ட வழியில் தளரா ஈடுபாடு கொண்டவராகவும், புலன்கள் அடங்கியவராகவும் இருக்கிறாரோ, அவர் (இந்த) அறிவு பெறுகிறார். இவ்வறிவைப் பெற்றவர் கூடிய விரைவில் ஒப்புயர் வற்ற சாந்தியை அடைகிறார்.

ஒருவர் ஆன்ம ஞானத்தை நிச்சயமாகப் பெறுவதற்கு தேவையான தகுதிகள் என்னென்ன என்று ஒரு விஞ்ஞான நூல் விளக்கி வைப்பதைப் போல, இங்கு விவரமாகப் பட்டியல் போட்டுக் காட்டப்பட்டிருக்கிறது. மூன்று முக்கியமான தகுதிகள் இருக்க் வேண்டும். சில சாதகர்கள் மனப்பூர்வமாக முன்னேற்ற ஏணியின் முதற் படியருகில் கூட வர முடியவில்லை என்றால், அதற்குக் காரணம் இதைப் படிக்கும்பொழுது தெரிகிறது. இப்போதுள்ள வாழ்விலிருந்து தெய்வ நிலையை அடைய விரும்புகிறவர்கள் கட்டாயமாக சிரத்தை,

இறைவனிடம் ஈடுபாடு, புலனடக்கம் ஆகிய மூன்றிலும் நிறைவு பெற்றிருக்க வேண்டும். ஆனால் இவற்றை பெரும்பாலோர் சரியாகப் புரிந்து கொள்ளுவதில்லை.

சிரத்தை—மதத்தை பிழைப்புக்காகப் பயன்படுத்திக் கொள்ளுகிறவர்கள் இந்த வார்த்தைக்கு 'குருட்டு நம்பிக்கை' என்ற பொருள் தோன்றுமாறு செய்து விட்டார்கள். பல பக்தர்கள் தங்களுடைய ஆன்மிகப் பிரச்னைகளுக்காக அந்த ஆன்மிக 'வழிகாட்டி'களை அணுகுகிறார்கள். தாங்கள் கூறுவதே தேவ வாக்கென்றும், அதை தட்டிக் கேட்காமலே ஒப்புக் கொள்ளுவதுடன் கண்ணை மூடிக் கொண்டு பின்பற்றவும் வேண்டும் என்று சொல்லி விடுகிறார்கள். அவர்கள் கூறுவதை அப்படி கண்மூடித் தனமாக பின்பற்றினால்தான் சிரத்தையாம்! இந்த ஆலோசனையைக் கேட்டு நடப்பவர்களில் பலர் வெறியர்களாக மாறி விடுகிறார்கள். சிலர் தங்களுக்கு ஏற்கனவே இருந்த கொஞ்ச நஞ்ச முன்னேற்றத்தையும் இழந்து தத்தளிக்கிறார்கள். இந்தக் குளறுபடிக்கு சங்கரர் சாவு மணி அடிக்கிறார். ''சாத்திர நூல்களின் உட்பொருளையும் குருவின் பொருட் தெளிவுமிக்க கருத்துக்களையும் இம்மியளவும் பிறழாது புரிந்து கொள்ள உதவும் தன்மையே சிரத்தை'' என்று சங்கரர் கூறுகிறார்.

அதனிடம் மிக்க ஈடுபாடு கொண்டு (தத்பரா)—ஆன்மீக முன்னேற்றத்திற்கு ஒருவர் எந்த மார்க்கத்தை மேற்கொண்ட போதிலும், அதில் அவர் முழு கவனமும் செலுத்தி உறுதியுடன் சாதகம் செய்ய வேண்டும். அவருடைய உள்ளத்தில் தெய்வ உணர்வு தொடர்ந்து இருந்து கொண்டிருக்க வேண்டும். சாத்திர நூல்களைப் படித்து அவற்றில் உள்ளவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அறிவு நாட்டம் மட்டும் போதாது. நமது அகந்தையைத் தூய்மையாக்கி ஆன்ம உணர்வு பெறுவதற்கு வெறும் புத்தகப் படிப்பு மட்டும் இருந்து பயனில்லை. அறிவையும் மனத்தையும் கடவுளிடம் செலுத்தி உபநிடதங்கள் கூறும் வாழ்க்கைத் திட்டத்தை மேற்கொண்டு சாதகத்தில் இறங்கவேண்டும்.

புலன்களை அடக்கி—புலனடக்கத்துடன் வாழ்வதற்கு ஒருவர் தொடர்ந்து முயற்சித்து வந்தாலொழிய சிரத்தையும், ஞானமும் நிலைக்காது. நமது ஐம் பொறிகளும் புலனின்ப நாட்டத்திற்கு நம்மை இழுத்துச் செல்லுகின்றன. ஒருவன் புலனின்பச் சூழலில் சிக்கிக் கொண்டால், வாழ்வின் உன்னத மதிப்புக்களில் அமைதியுடன் நிலைத்து நிற்கும். வாய்ப்பு அவனுக்கு அடியோடு போய்விடும். புலனின்பச் சாக்கடையிலிருந்து வெளியேறி, கை கால்களை சுத்தமாகக் கழுவிக் கொண்ட பிறகுதான் அற்புதமான ஆன்மிக ராஜ பாட்டையில் ஒருவர் நடக்கத் தொடங்கலாம். மிதமிஞ்சிய புலன் வாழ்வுக்கும்

இணையற்ற இறை வாழ்வுக்கும் உள்ள வேற்றுமை மலைக்கும் மடுவுக்கும் உள்ளதைப் போன்றது. ஒன்று இருந்தால், மற்றொன்றுக்கு அங்கு இடமில்லை. சாந்தத்தின் பேரொளியும் ஆழ்ந்த அமைதியும் உள்ளத்தில் ஏற்பட்ட பிறகு புலன் வேட்கைகளினுலும் மிருக உணர்ச்சிகளினுலும் உண்டான இருள் அங்கிருந்து விலகி விடுகிறது. எனவே ஒவ்வொரு சாதகரும் தொடர்ந்து உறுதியாக புலனடக்க வாழ்வு நடத்தப் பழக வேண்டியது மிக அவசியம்.

புலனின்பங்களைத் துறந்து, தன்னம்பிக்கையுடனும் மத விஞ்ஞானத்தை நம்பியும், ஆன்மிக இலட்சியம் முக்கியமென்று நினைத்து வாழ்வது எதற்காக? அறிவு சாதாரணமாக காரிய காரண தொடர்புகளைத்தான் ஆராய்ந்தறிய முடியும். மமதையோ தன்னுடைய சொந்த நோக்கங்களைப் புகுத்தும் வேலையிலேயே ஈடுபட்டிருக்கிறது. தொடக்கத்திய அறிவு மட்டத்தில் மட்டும் இயங்கும் ஒரு சாதகர் தாம் செய்யும் புலனின்ப 'தியாக'த்திற்கு என்ன பயன் கிடைக்கப் போகிறது என்ற கேள்வியை எழுப்புவது இயற்கையே. அவருடைய சந்தேகத்தைப் போக்குவதற்காக இரண்டாவது வரியிலுள்ளதை பகவான் கூறுகிறார்.

மேலே கூறியுள்ள மூன்று தகுதிகளையும் பெற்று வாழ்பவர் ஞானநிலை அடைகிறாரென்று உயர்மிகு சாத்திரங்களின் ஆசிரியர்களான முனிவர்கள் உத்தரவாதமளிக்கிறார்கள். அப்படிக் கூறியவுடன் மற்றொரு சந்தேகம் நம் உள்ளத்தில் முளைக்கிறது. இந்த 'ஞானநிலை'யினால் என்ன பயன்? இந்தக் கேள்விக்கும் கிருஷ்ணன் பதிலளிக்கிறார். ''சரியான, அறிவு பெறுவதன் மூலம் ஒருவர் விரைவில் ஒப்பற்ற அமைதி பெறுகிறார்'' என்று கூறுகிறார். வாழ்வின் மகத்தான அந்த இலட்சியத்தை அடைவதற்கு காலவரை எதுவும் இப்போதுகூடக் குறிப்பிடவில்லை. முந்திய சுலோகத்தில் ''நாளடைவில்'' (காலேன) என்று கூறினார். இந்தச் சுலோகத்தில் ''கூடிய சீக்கிரம்'' (அசிரேன) என்று கூறுகிறார். சுருங்கக் கூறுமிடத்து இங்கு கூறியுள்ள ஞானத்தைப் பெற்ற பிறகு ஒருவர் விரைவில் வாழ்க்கையின் இலட்சியத்தை அடைவார்.

ஒப்பற்ற அமைதி (பரம சாந்திம்) வாழ்க்கையின் இலட்சியம் என்றைக்கும் குறையாத அமைதி நிலையை அடைவதே என்று எடுத்துரைக்கப்படுகிறது. அமைதியைக் காக்க அணுகுண்டுகளைத் தயாரித்துக் கொண்டிருக்கும் இக்காலத்தில், இதைப் போன்ற அமைதி நிலை இலட்சியத்தில் சிலருக்கு நம்பிக்கையில்லாமல் போகலாம். திட்டவட்டமான பொருள் எதுவும் இல்லாமல் அரசியலில் அடிபடுகிற ''அமைதி'' அல்ல இது. தங்களுக்கு வசதியாக இருக்கும் பொழுது பயன்படுத்திக் கொண்டு, பிறகு மறந்து

விடுகிறுர்களே—அந்த மாதிரி அமைதியைப் பற்றி இங்கு பேச வில்லே. சாந்தி என்ற சொல் எத்தனேயோ கருத்துக்களே நமது உள்ளத்தில் நிழலாடச் செய்கிறது.

உயிரினங்கள் யாவும், வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும், தங்களுடைய மகிழ்ச்சியை அதிகரித்துக் கொள்வதற்கு முயற் சிக்கின்றன என்பது எல்லோருக்கும் தெரியும். உணவருந்துவது முதல் உலகச் சந்தைகளேப் பிடிப்பது வரை—எல்லா முயற்சிகளும் தங்கள் தங்களுடைய மகிழ்ச்சியை உயர்த்திக் கொள்ளுவதற் காகத்தான் நடைபெறுகின்றன. மனிதன் மட்டுமல்ல, விலங்கு களும், தாவர இனங்களும்கூட இதே நோக்கத்துடன்தான் இயங்குகின்றன. தமக்கு இன்னும் அதிக மனநிறைவு அல்லது மகிழ்ச்சி வேண்டும் என்று கருதினலொழிய ஒருவர் எவ்விதச் செயலேயும் மேற்கொள்ள மாட்டார் என்று சுருக்கமாகச் சொல்லி விடலாம்.

உச்சநிலே மகிழ்ச்சியைப் பெறுவதற்கும் தொடர்ந்து அதைத் தன்னிடமே வைத்துக் கொள்வதற்கும் உலகம் முழுவதும் முயற் சிக்கிறது என்ருல், வாழ்க்கையின் இலட்சியம் ஒப்புயர்வற்ற மகிழ்ச்சி பெறுவதுதான் என்பதில் சந்தேகமில்லே. அதைப் பெற்ற பிறகு உலகில் சந்தேகமில்லே. அதைப் பெற்ற பிறகு உலகில் எவ்வித போராட்டமும் இருக்காது. கோரிக்கைகள் எல்லாம் நிறைவேறிவிடுகின்றன. எல்லாக் கவலேகளும், சிந்தனேகளும், கலக்கங்களும் கடைசியாக முடிவடைந்து விடுகின்றன. மகிழ்ச்சி பெற வேண்டுமென்ற கோரிக்கைகளே சிந்தனேயில் கலக்கங்களே உண்டாக்குகின்றன. அவை உலகத்தில் நிறைவு பெறப் பார்க்கும் போது, அவை அன்ருட வாழ்க்கையின் நடவடிக்கை களாகின்றன. ஒப்புயர்வற்ற உச்ச மகிழ்ச்சி நிலே எய்தும் போது மனக் கலக்கமும், உடல் களேப்பும் மறைந்து விடுகின்றன. எனவே மகிழ்ச்சியின் மிகையும் அமைதியின் மிகையும் ஒன்று தான்.

வாழ்க்கையின் இலட்சியம் ஒப்பற்ற அமைதி பெறுவதே—அதாவது ஒப்பற்ற ஆனந்தத்தை அனுபவிப்பதே—என்று இந்தச் சுலோகம் தெளிவாக்குகிறது.

இதில் நீ சந்தேகம் கொள்ளக் கூடாது. ஏனெனில் ஐயத்தை விட பாவகரமானது வேறென்றுமில்லே. அது எப்படி என்று கேட் கிருயா? இரு, சொல்லுகிறேன்—

அஜ்ஞஸ்—சாஸ்ச்ரத்த தானஸ்ச ஸம்சயாத்மா விநச்யதி
நாயம் லோகோஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஸயாத்மன:

**4:40**

அறியாமையில் உழல்பவர்களும், சிரத்தை இல்லாதவர் களும், சந்தேகம் கொண்டவர்களும் அழிந்து போகிறுர்கள். சந்தேகம் கொண்டவர்களுக்கு இவ்வுலகும் மறு உலகும் இல்லை. மகிழ்ச்சியுமில்லை.

சிரத்தையும் அறிவும் கொண்டு முயற்சிப்பவர்கள் ஒப்பிலா அமைதியை அடைந்து அனுபவிக்கிறுர்கள் என்று இதற்கு முந்திய சுலோகத்தில் சொல்லப்பட்டது. அர்ஜுனன் உள்ளத்தில் இவ்வுண்மையை ஆழப் பதிப்பிக்க கிருஷ்ணன் அதை எதிர்மறை யாகவும் கூறுகிறுர்—சிரத்தையும் அறிவும் அடையாதவர்கள் கடைசியில் அழிந்து போகிறுர்கள். இறையுணர்வு பெறுவது அவ்வளவு சுலபமல்ல என்பது உண்மைதான். ஆனுல் தமது அறிவைக் கொண்டு ஒருவர் ஆன்ம உயர்வு பற்றி அறியவாவது செய்யலாம் அல்லவா? அது இல்லை. சாத்திரங்கள் கூறுவதிலும், மகான்களின் அறிவுரைகளிலும் உள்ள உண்மைகளைப் பற்றிச் சிந்தித்து அவற்றின் முக்கியத்துவத்தை புரிந்து கெள்ளுவதற்கான நம்பிக்கையாவது, சிரத்தையாவது காட்டலாம் அல்லவா. அதுவும் இல்லை. இப்படி எதுவுமே இல்லாமல் ஒவ்வொன்றிலும் சந்தேகப்பட்டுக் கொண்டிருக்கும் ஒருவர் (சம்சயாத்மா) அழிந்து போகிறுன் என்று கிருஷ்ணன் அழுத்தமாகத் தெரிவிக்கிறுர்.

இவ்வாறுள்ள சந்தேகப் பிராணிகளை கண்டிப்பதுடன் அவர் களுடைய துயர முடிவையும் அடுத்த வரியிலேயே கிருஷ்ணன் தெளிவாக்குகிறுர். தன்னிடமுள்ள ஆன்மாவைப் பற்றி ஐயம் கொண்டவர்கள் ஆனந்தத்தை வேறு எந்த இடத்திலும் அடைய மாட்டார்கள். அவர்களுக்கு மகிழ்ச்சி இவ்வுலகத்திலுமில்லை, மறு உலகிலுமில்லை. இப்படிச் சொல்லும்போது அறிவும், சிரத்தையும் இல்லாதவர்களுக்கு ஏதோ ஒரு வகை சந்தோஷம் இவ்வுலகில் கிடைக்கலாம். சந்தேகப் பிராணிகளுக்கு அதுவு மில்லை என்று கூறுவதைப் போல் தோன்றுகிறது. சந்தேகம் கொண்டவர்கள் எந்த நிலையிலும் சந்தோஷம் அனுபவிக்கச் சக்தியற்றவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய மனப் பான்மை அப்படி. அவர்கள் பெறும் எல்லா அனுபவங்களிலும் இந்தச் சந்தேக நஞ்சு, கலந்து விடுகிறது. நமது வாயில் புண் இருந்தால் அதிலிருந்து வரும் அசுத்தப் பொருள்கள் நஞ்சாக மாறி நாம் உண்ணும் உணவிலும் கலந்து விடுகிறது. அவ்வாறே எல்லாவற்றையும் சந்தேகக் கண்ணோடு பார்ப்பவர்களுக்கு எந்த நிலையுடனும் ஒத்துப் போக முடியாது—அது எவ்வளவுதான் நியாயமாக இருந்த போதிலும், அறிவிருந்தும் நம்பிக்கை யில்லாதவர்களை செய்யுளின் இப் பகுதி கடுமையாகத் தாக்கு கிறது.

இத் தாக்குதலின் காரணம் பின்வருமாறு:

யோக ஸந்யஸ்த கர்மாணம்
    ஜ்ஞான—ஸம்சின்னஸம்ஸயம்
ஆத்மவந்தம் ந கர்மாணி
    நிபத்னந்தி தனஞ்ஜய 4:41

யோகத்தின் மூலம் செயல்களைத் துறந்து, நல்லறிவினுல் ஐயப்பாடுகளை அகற்றி, தன்னைத்தானே அடக்கியாளும் ஒருவனை செயல்கள் கட்டுப்படுத்துவதில்லை, தனஞ்சயா.

அடுத்த செய்யுளுடன் இந்த அத்தியாயம் முடிவடைகிறது. எனவே இதுவரையில் வாழ்க்கையின் இரகசியங்கள் பற்றிக் கூறியதை இங்கு சுருக்கமாகவும், அழகாகவும் கிருஷ்ணன் நினைவூட்டுகிருர். பலனை எதிர்பாராமல் தொடர்ந்து பணிபுரிந்து வரும் ஆற்றல் கர்ம யோகத்தின் மூலமாக வருகிறது. அத்துடன் நமது சிறப்புமிக்க அகத்துறை அனுபவங்களின் காரணமாக வாழ்க்கையின் இலட்சியம் பற்றிய சந்தேகங்கள் அறவே நீங்கி விடுகின்றன. இந்த இரண்டு முயற்சிகளிலும் ஒருவர் வெற்றி பெற்று விட்டால், தானே ஆன்மா என்று அவருடைய அகந்தை தெரிந்து கொள்ளுகிறது. இதைப் போல ஆன்ம உணர்வு பெற்று ஒருவர் வெளியுலகத்தில் செயலாற்றும் போது, அச் செயல்கள் அவரைக் கட்டுப்படுத்துவதில்லை.

அகந்தை மையக் கோரிக்கைகளினுல் உந்தப்பட்டு ஒருவர் செய்யும் செயல்கள் அவருடைய உள்ளத்தில் ஆழ்ந்த தடங்களை ஏற்படுத்துகின்றன. அச் செயல்களின் விளைவுகளை அனுபவித்தே தீர வேண்டுமென்ற துன்பகரமான நிலையில் அவை. நம்மை வைத்து விடுகின்றன. முன்கூறியபடி ஒருவர் நல்லறிவுடனும், பற்றுதலின்றியும் நடந்து கொண்டு அகந்தை உணர்ச்சியை அகற்றி விட்டால், பிறகு அவருடைய செயல்கள் அவரைக் கட்டுப்படுத்த முடியாது. நான் என் மனைவியைக் கொலை செய்வ தாகக் கனவு காண்கிறேன். விழித்தெழுந்தவுடன் நான் செய்த கனவுக் கொலைக்கு தண்டனை அளிக்க வேண்டிய நாள். ஆனல் விழித்தவனில் அவன் இல்லையே! அவ்வாறே அகந்தை மையச் செயல்கள் அகந்தையைத்தான் கட்டுப்படுத்துகின்றன. ஆனல் அந்த அகந்தை, ஆன்மாவில் நிலைத்த பிறகு—கனவில் இருந்தோன் விழித்தவனில் நிலைத்து விட்டதைப் போல—அதன் செயல்கள் நம்மைக் கட்டுப்படுத்துவதில்லை.

அகந்தை ஆன்மாவில் லயித்து விடுவதே, ஆன்மானுபவம். விழித்தவனில் நிலைத்துவிட்ட கனவு கண்ட நபர்தான் 'விழிப்பு நிலையுற்ருேன்.'

மருட்சியுற்றவனுக்கு ஞானம் அளிக்கும் பயன் இவ்வளவு அற்புதமாகத்தான் இருப்பதால் அர்ஜுனனுக்குப் பின்வருமாறு கிருஷ்ணன் ஆலோசனை கூறுகிருர்:

தஸ்மா—தஜ்ஞான ஸம்பூதம்
ஹ்ருத்ஸ்தம் ஜ்ஞாநஸிநாத்மன:
சித்த் வைனம் ஸம்சயம் யோகம்
ஆதிஷ்ட்டோத் திஷ்ட்ட பாரத 4:42

ஆகையால் அறியாமை காரணமாக உன் உள்ளத்தில் தோன்றும் ஆன்மிக சந்தேகங்களை அறிவு வாள் கொண்டு வெட்டி எறி. யோகத்தில் தஞ்சம் புகுந்திடு. எழுந்திரு, பாரதா;

அர்ஜுனன் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதை திட்ட வட்டமாகவும், அன்புக் கட்டளையாகவும் பகவான் கூறுகிறார். ஒரு தந்தை அவசர நிலையொன்றில் தன் மகனை மேலும் சுறுசுறுப்பாக இயங்குமாறு ஊக்குவிப்பதைப்போல இங்கு அமைந்திருக்கிறது.

அமைதி நிலவும் இமயமலைச் சாரல்களில் வாழ்ந்த பண்டைய இந்து மாமுனிவர்கள் சுயார்ப்பண உணர்வுடன் செயலாற்றி முழுமை பெறுவது எப்படி என்பதை மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறார்கள். அவர்கள் கண்ட அறிவுச் செல்வத்தை கிருஷ்ணன் இங்கு வாரி வழங்குகிறார். போர்க்கள நடுவில் பேசுவதால், ''உன் அறிவு வாளைக் கொண்டு அறியாமையினால் இதயத்தில் தோன்றும் சந்தேகத்தை எல்லாம் பிளந்து தள்ளு,'' என்று அவர் போர் மொழியை உபயோகித்தது சுவை மிக்கதாக இருக்கிறது.

ஆன்மாவைப் பற்றி எழும் சந்தேகம் இதயத்திலிருந்து எழுவதாகக் கூறுவது இக் காலத்தவருக்கு சற்று அதிசயமாகத் தோன்றலாம். 'அறிவில் எழுவதல்லவா ஐயப்பாடு? இங்கு அது இதயத்தில் இருந்து வருவதாக எழுதியிருக்கிறாரே, ஏன்?' என்று சிலருக்குத் தோன்றலாம்.

வேதாந்த மரபில் ''அறிவு ஒருவருடைய இதயத்தில் குடி கொண்டிருக்கிறது,'' என்று கூறுவார்கள். அவர்கள் இதயமொன்று கூறுவது, உடலுக்குள் இரத்த ஓட்டத்தை இயக்கிக் கொண்டிருக்கும் அந்தப் பகுதியைப் பற்றி அல்ல. அன்பு, அனுதாபம் போன்ற உன்னத உணர்ச்சிகளின் இருப்பிடம் இதயம் என்று குறிப்பிடுவது இலக்கிய மரபு. அவ்வுணர்ச்சிகளின் சூழ்நிலையில் இயங்கும் அறிவையே மனித அறிவாக நமது தத்துவ சாத்திரங்கள் ஏற்றுக் கொள்ளுகின்றன. சந்தேகங்கள் இதயத்திலிருந்து எழுவதாக உபநிடதங்கள் கூறும் போது, சில சாதகர்களின் அறிவு வக்கிரமாக வேலை செய்வதைத்தான் குறிப்பிடுகின்றன. அறிவுக் கோணல் காரணமாக அவர்களுக்கு உண்மை

யான ஆன்ம ஞானம் ஏற்பட வழியில்லாமற் போய் விடுகிறது.

ஒருவர் தமது ஆன்மாவுடன் ஒருங்கிணைந்து அனுபவம் பெற்ற பிறகு, முன்பு குறிப்பிட்ட சந்தேகங்கள் தாமாகவே விலகி விடும்.

யோகத்தின் மூலமாக அந்த நிலையை அடைய முடியும்—''யோகமென்பது அபூர்வ சக்தி பெற்ற சில குருமார்களுக்கே விளங்கக் கூடிய இரகசிய முறை என்று நினைத்து விடக் கூடாது. இருண்ட இமாலயக் குகைகளில் அமர்ந்து, பயங்கரத் துன்பங்களை அனுபவித்த பிறகுதான் இந்த யோக முறை ஒருவருக்குக் கைகூடி வருமென்று நினைப்பதைப் போன்ற அசட்டுத்தனம் வேறொன்றுமில்லை. கீதையில் விளக்கப்பட்டிருக்கும் இந்த யோகத்தை எல்லோரும் பின்பற்றலாம் என்று காட்டுவதற்காகத்தான் பன்னிரண்டு வழிமுறைகளையும் கிருஷ்ணன் விவரமாகக் கூறியிருக்கிறார்.

வீராவேசத்துடன் போர் செய்யுமாறு விடுக்கும் 'எழுந்திரு, பாரதா' என்ற அறை கூவலுடன் இந்த அத்தியாயம் முடிவடைகிறது. இது அர்ஜுனனுக்கு மட்டும் கூறும் புத்திமதி அல்ல. ஒவ்வொரு சாதகரும்—ஏன் இந்த நாடு முழுவதுமே—எழுந்து நின்று வேள்வி உணர்ச்சியுடன் செயல்பட வேண்டுமென்று அழைக்கும் கட்டளையாக இச்சுலோகம் அமைந்திருக்கிறது. இவ்வுணர்ச்சியுடன் செயல்பட்டால் மக்களுடைய உள்ளங்களின் தூய்மை வளரும். பிறகு உண்மையான தியானத்தின் மூலமாக நாம் ஒவ்வொருவரும் ஈடு இணையில்லா அமைதியனுபவம் பெற்று வாழ்வு நடத்த முடியும். அந்த அனுபவ அடிப்படையில் வாழ்வதே பரிணாம வளர்ச்சியின் நிறைவாகும்.

# கர்ம சன்னியாச யோகம்

## 5

### முன்னுரை

அர்ஜுனன் எழுப்பும் ஒரு பிரச்சினையுடன் இந்த அத்தியாயம் தொடங்குகிறது. மேலேழுந்தவாரியாகப் பார்த்தால் இது மூன்றுவது அத்தியாயத் தொடக்கத்தில் அவன் கேட்ட கேள்வியைப் போல் தோன்றும். ஆனுல் அதுவும் இதுவும் ஒன்றல்ல. இரண்டாவது அத்தியாய இறுதியில் கிருஷ்ணர் கூறிய அறிவுரைகளைக் கேட்ட பிறகுகூட அர்ஜுனன் எவ்வித திட்டவட்டமான முடிவுக்கும் வரமுடியாத நிலையில் இருந்தான். ஆன்மிக நாட்டம் கொண்டவர்களுடைய வாழ்க்கையில் செயலுக்கு ஏதாவது இடமிருக்கிறதா, இல்லையா என்று அவன் தீர்மானிக்க முடியவில்லை. அவனுடைய உள்ளத்திலிருந்த கலக்கம் அப்போது தீரவில்லை. இப்போது அவனுடைய நிலை வேறு. செயலைத் துறப்பது, செயலீடுபாடுகொள்வது—இந்த இரண்டில் எது உயர்ந்தது என்பது மட்டும்தான் இப்போது அவன் முன்னுள்ள பிரச்சினை. ''சரியான முறையில் செயலீடுபாடு கொள்ளவேண்டும். தீமையைத் திட்டவட்டமாக எதிர்த்தே தீர வேண்டும்'' என்று கிருஷ்ணர் எடுத்துரைத்து எந்த அளவுக்குப்

பயனளித்திருக்கிறதென்று, அவன் கேள்வி கேட்கும் விதத்தி லிருந்தே தெரிகிறது. அர்ஜுனனுடைய அகச்சிதைவு பெரும் ஆபத்து நிலையடைந்து அவனை அழித்துவிடுவதற்கு முன்பே, கிருஷ்ணர் காப்பாற்றி விடுகிறார். அப்பெரும் விபத்திலிருந்து தப்பி, இப்போது அவன் ஓரளவு சமநிலை பெற்றிருக்கிறான். செயல் முறையை புத்திசாலித்தனமாகப் பின்பற்றுவதன் மூலம் ஆன்மிக முன்னேற்றமும், சுய வளர்ச்சியும் பெற முடியுமென்று அவனுக்குத் தெரிகிறது. அவன் அதை ஏற்றுக்கொள்ளுகிறான்.

கருமம் என்றால் வேதங்களில் கூறப்பட்டுள்ள யக்ஞம், யாகம், ஹோமம் போன்ற சடங்குகள் செய்வதுதான் என்றும், சன்னியாசமென்றால் சொத்து சுகங்களை அறவே துறந்து, இமய மலைச் சாரலில் எங்கோ ஒரு காட்டில், வேலை வெட்டி எதுவு மின்றி உடல் வருத்தம் பாராமல் அமர்ந்து விடுவது என்றும் அவன் நினைத்திருந்தான். அவனுக்குத் தெரிந்தது இந்த இரண்டு தான். அக்காலத்தியவர்களில் நன்கு படித்த புத்திசாலியான அரசிளங்குமரனுடைய நிலையே இந்த கதியில் இருந்தது என்றால் சாதாரண இந்து குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனைப் பற்றி கேட்க வேண்டியதில்லை. இந்து சமூகம் அக்காலத்தில் எவ்வளவு பரிதாப நிலையை அடைந்திருந்தது என்று இதிலிருந்தே நன்கு தெரிகிறது.

சாத்திர மரபில் வழக்கொழிந்த சொற்களுக்குப் புது விளக்க மளித்து, இந்துக்கள் அவற்றைப் பின்பற்றக் கூடியவாறு செய் திருக்கிறார் கிருஷ்ணர். இல்லாததையெல்லாம் மிகப் புனித மானது போல் செய்து, பெரிய மூடு மந்திரங்களாக்கி குகை களுக்குள் சிலர் வைத்துவிட்ட வேதச் சடங்கு முறைகளை அன்றாட வாழ்க்கையின் பகுதியாக கிருஷ்ணர் செய்ததை, போன அத்தியாத்தில் பார்த்தோம். தங்களுக்கு மட்டும் பயன் படும் முறையில் சிலர் வைத்திருந்த வேதச் செல்வத்தை அவர் தேசீயமயமாக்கி மனித இனம் முழுவதுமே இன்புற திட்டம் வகுத்துக் கொடுத்தார். இந்த மாபெரும் பணியினால் இந்து மதக் கொள்கைகளையும், அதன் விஞ்ஞான முறைகளையும் உலகத்தி லுள்ள எல்லாச் சாதகர்களும் பின்பற்றி நன்மை பெறும் வாய்ப்பை அவர் ஏற்படுத்தினார்.

புத்திசாலித் தனமாகச் செயல்பட்டு ஆன்மிக உயர்வுபெறும் வழியை விவரித்த பிறகு, செயலைக் கைவிடும் முறையையும் அவ்வாறே எடுத்துரைத்து, ஆன்ம நிறைவுக்கு அவர் வழிகாட்ட வேண்டியதாகிறது, ஆன்ம நிறைவுக்கு அவர் வழிகாட்ட வேண்டியதாகிறது. தூங்கி வழிந்து கொண்டிருக்கும் மந்த நிலையி லுள்ள மனிதனை முதலில் சுவுக்கடி கொடுத்து எழுப்பி, சுறுசுறுப் பாக இயங்கச் செய்கிறார். இந்த நிலையில் மனிதன் செய்பவை யெல்லாம் அகந்தைமையக் கோரிக்கைகளிலிருந்து எழும்

செயல்களாகத்தான் இருக்கும். மந்த இயல்பு (தாமச குணம்) சூடு பிடிக்கும்போது அது விறுவிறுப்பும் செயலார்வமும் நிறைந்த (ராஜச குணம்) இயல்பாக மாறுகிறது. ஒருவர் இந்த நிலையையும் கடந்து மேலே சென்று உலக நன்மைகளின் பொருட்டு செயல் களில் அன்புள்ளத்தோடு ஈடுபடவேண்டும். கீதை இதை 'யக்ஞம்' என்று குறிப்பிடுகிறது. இவ்வுன்னத உணர்ச்சிகளுடன் செயலாற்றுபவர், பெரும் அளவுக்கு அமைதியும், தூய்மையும், பெருமகிழ்ச்சியு மிக்க (சத்துவ குணம்) நிலை அடைகிறார். வாழ்க்கையின் அமைதியற்ற சலனங்கள் சற்று அடங்கிய இந்த நிலையில் ஒருவர் தியானத்தை மேற்கொள்ள முடியும்; வரையறை களின் எல்லையிலிருந்து மட்டுமே வரையறையற்ற பரப்பைக் காண முடியுட.

சுயவளர்ச்சி பெறுவதற்கு மூன்று படிகளைக் கடந்து செல்ல வேண்டுமென்று இதிலிருந்து தெரிகிறது—கோரிக்கைகளால் தூண்டப்பட்டு வேலை செய்தல், எவ்வித கோரிக்கைகளு மில்லாமல் செயல்புரிதல், இவை இரண்டையும் கடந்த தியான நிலை ஆகிய மூன்றுமே முற்கூறிய மூன்று படிகள். இவை வியாசர் கற்பனையில் எழுந்தவையல்ல. வேதங்களை அலசி ஆராய்ந்து, அவற்றின் சாரத்தை அவர் வடித்தெடுத்து, இம் மூன்று படிக ளாக்கி அளிக்கின்றார். ஆன்ம நிலையை அடையும் வழிமுறைகள் வேதங்களில் இருக்கின்றன. இயற்கையின் பரப்பு, சக்தி, அழகு ஆகியவற்றைக்கண்ட மருட்சிமிக்க மாந்தரின் வியப்பையும் திகைப்பையும் வேதங்களின் 'மந்திர'ப் பகுதிகள் காட்டுகின்றன. உலகில் ஒருவருடைய கோரிக்கைகள் நிறைவேறுவதற்கு என்னென்ன செய்ய வேண்டுமென்பதைக் கூறுபவை 'பிரமாணங்கள்.' அதையடுத்து வரும் 'ஆரண்யக' பகுதிகளில் 'உபாசனை'கள் என்னும் வழிபாட்டு முறைகள் விவரிக்கப் பட்டிருக்கின்றன. எவ்வகை கோரிக்கைகளினாலும் மாசடையாத தூய உள்ளம் படைத்தவர்கள் அந்த உபாசனைகளை மேற் கொள்ள வேண்டும். கோரிக்கைகளிலிருந்து எழாத அச் செயல் கள் (யக்ஞங்கள்) சாதகர்களுக்குச் சிறகளித்து, வரையறைகள் இல்லாத உலகிற்குப் பறந்து செல்லும் சக்தியைத் தருகின்றன.

கீதையும் இதே வேத முறைகளைத்தான் வலியுறுத்துகிறது. மகா பாரத காலத்தினருக்கு விளங்கும் முறையில், பழைய சொற் களுக்குப் புதிய பொருள் தோன்றுமாறு செய்தும், கருத்துக்கு புத் தாடை அணிவித்தும், வேதக் கருத்துக்களுக்குப் புதுவேகம் தோன்றுமாறு வியாசர் செய்திருக்கிறார். அதிக உற்சாகம் காரண மாக, சிலர் இதை மொத்தப் புரட்சியாக எடுத்துக் காட்டுகிறார் கள். அப்படிக் கூறுவதால் சிலர் விஷமத்தனமாகப் பொருள் கொள்வதற்கு இடமேற்படுகிறது. பழைய நடைமுறைகளும் கருத்துக்களும் அடியோடு ஒழிக்கப்பட்டு, அவைகளுக்குப் பதி லாக புதிய அமைப்பே தோன்றும் போது, அதை புரட்சி என்று

சொல்லுகிறார்கள். சுழலும் காற்றாடிகளை நட்டுவைத்து, அதன் சக்தியினால் வேலை நடந்துகொண்டிருந்த முறை, இயந்திரப் புரட்சியினால் மாறியது. அத்துடன் தந்தை வழி வந்து கொண்டிருந்த மேலை நாட்டு சமூக வாழ்க்கையும் மாறிற்று. இது புரட்சி. கீதையினால் இத்தகைய புரட்சி எதுவும் நடக்கவில்லை, நமது பழைய பண்புகள் மாறி புதிய முறை எதுவும் தோன்ற வில்லை. அப்படியானால் கீதையை புரட்சிகரமான சாத்திரமாக நமது நாட்டிலுள்ள மகான்கள் கருதி வருவது ஏன்?

ஒரு மரத்திலுள்ள மலர் வாடி உதிர்ந்து, அதன் இடத்தில் கனி தோன்றுகிறது. மலரிலுள்ள சத்துப் பொருள்கள் எல்லாம் கனியில் நிறைவு பெறுகின்றன. ''ஐயோ—இந்த மலர் நாசமாகி அந்த இடத்தில் ஒரு பழம் வந்து உட்கார்ந்திருக்கிறதே'' என்று யாராவது ஓலமிடுவார்களா? மலரின் அனாவசியப் பகுதிகள் உதிர்ந்து, அதன் சாராம்சமே கனியாக உருவெடுத்து, நிறைவு பெற்றிருக்கிறது என்று மற்ற எல்லோருக்குமே தெரியும்.

அதே மாதிரி விரிவான வேத சம்பிரதாயச் சடங்குகளையும் அவற்றின் இரகசிய முறைகளையும் ஒதுக்கிவிட்டு, அவற்றின் சாரமான சாதக வழிகளை மட்டும் கீதையில் வியாசர் வடித் தெடுத்துக் கொடுக்கிறார். எனவே பகவத் கீதையிலுள்ள முறை முழுமை பெற்றதாக இருப்பதோடு எல்லோருக்கும் விளங்கும் விஞ்ஞானமாகவும் இருக்கிறது.

ஆன்ம நிறைவு பெறும் மகத்தான இலட்சியத்தை முதலில் விளக்கிய பிறகு, * கிருஷ்ணர் அடுத்த இரண்டு அத்தியாயங்களில் சரியான செயல் முறையை விளக்கினார். வாழ்க்கையில் புத்தி சாலித்தனமாக செயல்புரியத் தெரிந்துகொண்டால்தான் ஆன்ம முன்னேற்றம் காண முடியும். டாக்டராகவோ, வக்கீலாகவோ, பொருளாதார நிபுணராகவோ ஆக விரும்பும் ஒருவன் முதலில் தொடக்கப் பள்ளியிலேயே அப்படி ஆகிவிட முடியாது. அதில் தேறி, பிறகு நடுநிலைப் பள்ளியிலோ, கல்லூரியிலோ படித்து விட்டு, அப்புறந்தான் மருத்துவக் கல்லூரியில் அல்லது அதைப் போன்று வேறு துறையிலுள்ள கல்லூரிகளில் சேர வேண்டும். ஆன்மிகத் துறையில் முன்னேறுவதும் அப்படித்தான். முதலில் கோரிக்கைகளற்ற செயல்களை, வேள்வி உணர்ச்சியுடன் நிறை வேற்றி வந்தால், தியான முறையைக் கையாளுவதற்கு வேண்டிய மனப் பக்குவம் படிப்படியாக வரும்.

---

வேள்வியைப் பற்றி முன்னரே, மூன்றாவது நான்காவது அத்தியாயங்களில் விளக்கமாகச் சொல்லியாகிவிட்டது. அதற்கு அடுத்த தியான நிலைபற்றி ஆறாவது அத்தியாயம் சொல்லப்படு கிறது. இதற்கிடையில் செயலை எப்படித் துறப்பது, எந்த

உணர்ச்சியுடன் அதைத் துறக்க வேண்டும் என்பன போன்ற முக்கிய விவரங்களை இந்த 'செயல் துறவு' அத்தியாயத்தில் காண்கிறோம். இது கர்ம யோகத்திற்கும் தியான யோகத்திற்கும் இடையில் ஒரு பாலம் அமைத்திருப்பது போல் இருக்கிறது. இந்நுணுக்கமான கட்டுக்கோப்பும், இணைப்பும் வேதங்களில் இவ்வளவு வெளிப்படையாக இல்லை என்றே சொல்லலாம். வேத முனிவர்களின் சிந்தையில் வெளிப்படையாகத் தென்படாத இவ்விணைப்பை கீதையின் ஐந்தாவது அத்தியாயம் நமக்கு வெளிப்படையாகவும், தெளிவாகவும் தேடித் தருகிறது. 'தென்படாததை தேடித் தருகிறது' என்றுதான் கூறுகிறேனே தவிர ''இல்லாததை உண்டாக்கிக் கொடுக்கிறது'' என்றோ ''வியாசர் தாமாகவே ஒன்றை கற்பனை செய்து நமக்கு அளிக்கிறார்'' என்றோ நான் சொல்லவில்லை.

சங்கரர் குறிப்பிடுவது போல, *எல்லாச் செயல்களையும் துறந்து விடவேண்டுமென்று பல இடங்களில் கூறிய கிருஷ்ணர், அத்தியாய முடிவுக்கு வந்ததும் கருமயோகத்தில் ஈடுபடுமாறு அர்ஜுனனுக்கு உபதேசம் செய்கிறார். இது முன்னுக்குப்பின் முரணான யோசனையாகத் தோன்றுவதால், இதைப் பற்றி அர்ஜுனன் கேட்கிறான்.

அர்ஜுன உவாச—

ஸந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண
புனர் யோகம்ச ஸம்ஸஸி
யச்ச்ரேய ஏதயோரேகம்
தன்மே ப்ரூஹி ஸுநிஸ்சிதம் 5:1

அர்ஜுனன் கேட்டான்:

கிருஷ்ணா, செயலைத் துறப்பதைப் புகழ்கிறாய்; அதே நேரத்தில் யோகமாகச் செயல் புரிவதையும் புகழ்கிறாய். இந்த இரண்டில் எது உயர்ந்தது? இதை முடிவாக எனக்குச் சொல்லு.

அர்ஜுனன் மனநோய் பிடித்துக் குழம்பிய நிலையிலிருந்து, தன்னையுமறியாமல், பெரும் அளவுக்கு முன்னேறியிருக்கிறான் என்று இக்கேள்வி கேட்பதிலிருந்து தெரிகிறது. தன் ஆருயிர் நண்பனுடைய வாதங்களைச் சரியாகப் புரிந்துகொண்டு உள்ளத் தெளிவு பெறும் அக்கறை இதில் தெளிவாகிறது. செயல் முறையே அவனுடைய பிறவிக் குணத்துக்கு இயல்பானது. ஆகையால் நண்பன் கூறிய கரும மார்க்கத்தை அவன் ஏற்றுக்

* முதல் மூன்று அத்தியாய முடிவுகளில் 'சங்கல்ப வாக்ய' விளக்கத்தில் காண்க.

கொள்ளுகிறான். ஆனால் எல்லாக் கருமங்களையும் துறப்பது, வேள்வி உணர்ச்சியுடன் வேலை செய்வதைவிட மேலானது என்றும்கூட அடிக்கடி சொல்லி வருகிறாரே, இது ஏன்? சில சமயங்களில் நேரடியாகவும்கூட அவ்வாறு கிருஷ்ணர் கூறியிருக்கிறார். இந்த சந்தேகத்தை வெளிப்படையாகவே கேட்டுவிடலாம் என்று தீர்மானித்து இப் பிரச்னையை அர்ஜுனன் எழுப்புகிறான்.

மனநோய் பிடித்திருந்த ஒருவனுக்கு, நோய் தீர்ந்தவுடனேயே, முழு தன்னம்பிக்கை வந்துவிடாது. இது சாதாரணமாக எல்லோருக்குமே தெரியும். நள்ளிரவில் பயங்கரக் கனவு கண்டு, அலறிப் புடைத்தவாறு ஒருவன், எழுந்து உட்காருகிறான். அவ்வளவும் கனவுதான் என்று இப்போது தெரிகிறது. ஆயினும் கனவில் அடைந்த பயங்கர அனுபவங்களை முற்றிலும் மறந்துவிட்டு மீண்டும் அவன் தூங்கப்போவதற்கு வெகு நேரமாகிறது. அதைப் போல, இரண்டாவது அத்தியாயத்தில் நாம் கண்ட உணர்ச்சிச் சீர்குலைவு நிலையிலிருந்து அர்ஜுனன் பெரும்பாலும் சமாளித்துக் கொண்டுவிட்ட போதிலும், கிருஷ்ணருடைய வாதங்களைச் சரியாகப் புரிந்துகொண்டதாக அவனுக்கு இன்னும் தன்னம்பிக்கை வரவில்லை. சுயநலமில்லாமல் செயல்புரியும் வழி, செயலை அறவே துறக்கும் வழி—இந்த இரண்டு வழிகளில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படியாக நண்பன் கூறுவதைப் போல் தோன்றிற்று. அவை இரண்டும் ஒரே மதிப்புள்ளவை அல்ல என்றும், வண்டியில் போகும் ஜோடிக் காளைகளைப் போல் அவை இரண்டையும் ஒரே சமயத்தில் கடைபிடித்து வரமுடியாது என்றும், வேதாந்திகளுக்கு எடுத்துக் காட்டுவதே இந்தச் செய்யுளின் நோக்கம்.

செயல்புரிவதையும், பிறகு அதைத் துறப்பதையும் வரிசைக் கிரமத்தில் ஒன்றன்பின் ஒன்றாகச் செய்ய வேண்டும் பின்னால் இக் கருத்து மேலும் விரிவாக விளக்கப்படுகிறது.

ஸ்ரீ பகவானுவாச—

ஸந்யாஸ: கர்ம யோகஸ்ச
நிஸ்ரேயஸ—கராவுபௌ
தயோஸ்து கர்ம ஸந்யாஸாத்
கர்ம யோகோ விசிஷ்யதே 5:2

பகவான் கூறினார்:

செயலைத் துறப்பதும், அதை யோக அடிப்படையில் செய்து வருவதும்—இவை இரண்டுமே பேரின்ப நிலைக்கு இட்டுச் செல்லுகின்றன. ஆனால் அதில் யோகமாகச் செயல் புரிவது செயலைத் துறப்பதைவிடச் சிறந்தது.

அர்ஜுனன் மேலே கேட்ட முதற் கேள்வியிலிருந்தே அவன் எந்த அளவுக்கு அசட்டு அறியாமையில் மூழ்கியிருந்தான், என் பதை கிருஷ்ணர் தெரிந்து கொண்டார். கர்மயோகம் ஒரு பாதை என்றும், கர்ம சன்னியாச யோகம் மற்ஞெரு பாதை என்றும், கர்ம சன்னியாச யோகம் மற்ஞெரு பாதை என்றும், அவை வெவ் வேறு இலட்சியங்களை அடைய உதவுகின்றன என்றும் அவன் நினைத்திருந்தான்.

தூண்டுவதற்கு ஒருவருமில்லை என்ருல், பெரும்பாலோர் தங்களுடைய உணவுக்கு வேண்டிய அளவுமட்டும் வேலை செய்து விட்டு மற்ற நேரங்களில் எதுவும் செய்யாமல் காலங்கழிக்கவே விரும்புவார்கள். இந்த மந்த நிலையிலிருந்து மனிதனைத் தட்டி, எழுப்பி சுறுசுறுப்பாக இயங்கச் செய்வது அவனுடைய வளர்ச்சி யில் முதலாவது படி. அவன் உள்ளத்தில் சில கோரிக்கைகளை ஏற்படுத்தினல், அவைகளுக்காக அவன் சுறுசுறுப்புடன் வேலை செய்வான். மண்ணுங்கட்டியைப் போன்ற மந்த நிலையைவிட, கோரிக்கைகளுக்காகவாவது கொஞ்சம் வேலை செய்வது ஓரளவு நல்லது. ஆனுல் இது கொஞ்ச நாட்களில் அலுத்துப் போகும். மந்த நிலையிலிருந்து அவன் சற்று வளர்ந்திருப்பதால், ''நல்ல பணிகளை மேற்கொள்ளாமல் ஏதேதோ செய்து கொண்டிருக்கி றேனே'' என்று நினைப்பான். அந்த நிலையில் ஒரு பெரும் இலட்சி யத்திற்கு, சுய அர்ப்பண உணர்ச்சியுடன் சேவை செய்யும்படி அவனை அழைத்தால், மிக உற்சாகமாக அவன் முன் வருவான். இதைப் போன்ற வேலைகள் எல்லாம் பொதுவாக மற்றவர் களுக்குச் செய்யும் பணியாகவே இருக்கும். அதில் ஈடுபடும்போது நான், எனது என்பதைப் போன்ற அகந்தைக் கருத்துக்கள் மிகக் குறைவாகவே இருக்கும். சுய அர்ப்பண உணர்ச்சியுடன் செயல் புரிவதன் இரகசியம் முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது அகந்தை குறைந்த நிலையில் ஒருவர் பணி செய்கையில் அவருடைய 'வாசனை'கள் மறையத் தொடங்குகின்றன. வாசனைச் சுமை அழுத்தாமலிருக்கும்போது, தியானத்திற்கு ஏற்ற உள்ளமும் அறிவும் அவருக்கு உண்டாகிறது. அமைதி மிக்க ஆனந்த உலகில் அவர் சிறகடித்துப் பறக்கிருர். இது அவருடைய வளர்ச்சியில் இரண்டாவது படி. கடைசிப் படியாகிய தியானநிலை வருவது பற்றி அடுத்த அத்தியாயம் விளக்குகிறது. ஆகக்கூடி, ஆன்மிகத் துறையில் ஒருவர் முன்னேறுவதற்கான மூன்று படிகள் கோரிக்கைத் தூண்டுதல் காரணமாகச் செயல் புரிவது, எவ்வித கோரிக்கைகளும் இன்றி பணி செய்வது, பிறகு தியானத்தில் ஆழ்ந்து விடுவது ஆகியவையே.

இவற்றில் முதலாவது முறை முந்திய இரு அத்தியாயங் களில் விவாதிக்கப்பட்டது. தியானத்தில் வெற்றி பெறும் முறையை அடுத்த அத்தியாயம் விளக்குகிறது. இந்த அத்தியாயம் மமதை மையச் செயல்களைக் கைவிட்டு சுய அர்ப்பண உணர்ச்சி யுடன், சுயநலமற்று வேலை செய்வது பற்றிக் கூறுகிறது.

செயல்புரிவது, செயலைத் துறப்பது—இவை இரண்டுமே ஆன்ம உணர்வு பெறும் இலட்சியத்திற்குத்தான் வழிகாட்டுகின்றன என்று கிருஷ்ணர் இங்கு தெளிவாக்குகிறார். ஆனால் செயல்துறவைவிட (கரும சன்னியாசத்தைவிட) செயல் வழியே (கரும மார்க்கமே) சிறந்தது என்றும் எச்சரிக்கை செய்கிறார். செயல்துறவு தாழ்ந்ததென்று அவர் சொல்லவில்லை. அப்படி அவர் சொல்லுவதாக நினைத்துத் தடுமாறுவது நம்முடைய அறியாமையையே காட்டும். இதுவரை கிருஷ்ணர் கூறியதையும், அவருடைய கருத்தோட்டத்தையும் தெரிந்து கொள்ளாதவர்களே அப்படி நினைப்பார்கள். பரம குருவாகிய கிருஷ்ணருக்கும், இக்கட்டான பிரச்சினையை எதிர்நோக்கி நிற்கும் அவருடைய மாணவனுக்கும் நடக்கும் விவாதம் கீதை. அர்ஜுனனுடைய மனச்சோர்வுக்கும், குழப்பத்திற்கும் என்ன காரணம் என்று ஆசானுக்கு நன்கு தெரிகிறது. அர்ஜுனனுடைய உள்ளத்திலுள்ள பெரும் 'வாசனை' சுமையை, போர்க் களத்தில் விறுவிறுப்புடன் செயல் புரிவதன் மூலமாகத்தான் போக்கிக் கொள்ள முடியும். அர்ஜுன்ன் மட்டுமென்ன—நாம் எல்லோருமே ஏறக்குறைய அர்ஜுனனுடைய நிலையில்தான் இருக்கிறோம். எனவே, அந்த நிலையில், செயலைத் துறப்பதைவிட, தீவிரமாகச் செயல் புரிவது நல்லது என்று கிருஷ்ணர் கூறுவதை ஆழ்ந்து சிந்தித்து, தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டியது அவசியம்.

அதற்கு என்ன காரணம் தெரியுமா?

ஜ்ஞேய: ஸ நித்ய ஸன்யாஸீ
யோ நத்வேஷ்டி ந காங்க்ஷதி

நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ
ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே. 5:3

வெறுப்போ, வேட்கைகளோ இல்லாதவனையே நித்திய சன்னியாசியென்று கூறவேண்டும், பரந்தபா. எதிர்மாறான இரட்டைகளிலிருந்து விடுபட்டுவிடுவதால், அவன் தளைகளிலிருந்து சுலபமாக விடுபடுகிறான்.

சாதகம் செய்யத் தொடங்கும் ஒருவர் செயலைக் கைவிடுவதைவிட, செயல்புரிவது எளிது. வெளித் தோற்றத்தையும் காவி உடையையும் கொண்டு ஒருவரை சன்னியாசி என்று சொல்லிவிட முடியாது. அவருடைய வெளித்தேற்றத்தைவிட அகநிலை தான் மிக முக்கியமானது என்று புரட்சிகரமாகப் பிரகடனம் செய்கிறார் கிருஷ்ணர். வெறுப்பு விருப்புகளிலிருந்து விடுபட்டவன் மட்டுமே உண்மையான சன்னியாசி என்று அறிவிக்கிறார், அழுத்தமாக.

விருப்பு, வெறுப்பு; வெற்றி, தோல்வி; இன்பம், துன்பம் போன்ற இரட்டைகளைக் கொண்டது மனம். அந்த இரு சக்கரங்களையும் கொண்டு மனமென்ற வண்டி, பல்வேறு இடங்களுக்குச் சென்று, வாழ்க்கையில் எத்தனையோ அனுபவங்களைப் பெறுகிறது. ஒளியில்லா விட்டால் இருட்டு, என்று சொல்லுகிறோம். வெற்றி கிடைக்காவிட்டால் அதைத் தோல்வி என்று கூறுகிறோம். இருட்டைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு அதை ஒளியுடன் ஒப்பிடவேண்டியிருக்கிறது. வெற்றியைப் பற்றி அறிவது அதைத் தோல்வியுடன் ஒப்பிட்டுத்தான். நேர்மாறான மற்றொன்றுடன் ஒப்பிடுவதன் மூலமாகவே எதைப் பற்றிய அறிவையும் நாம் பெறுகிறோம். இம் மாறுபாடு தெரியவில்லை என்றால், அதைப் பற்றிய அறிவும் நமக்கு இல்லை.

ஒப்பீடும், மாறுபாடும் மன—அறிவுக் கருவிவைப் பொறுத்தவை. இந்த வேலை இல்லை என்றால் மன—அறிவுக் கருவிக்கு வேலையே இல்லை. இவ்வாறு மாறுபாடுகள் நிறைந்த பன்மைத் தோற்ற உலகிலேயே மன—அறிவுக் கருவியைப் பயன்படுத்த முடியும். பன்மைத் தோற்றமில்லா உலகில் அதை உபயோகிக்க இடமில்லை. மோட்டார் கார் நிலப் பிரயாணத்திற்கு உதவுகிறது, கடற் பிரயாணத்திற்கு உதவுமா? கடலைக் கப்பலில்தான் கடக்க வேண்டும். அவ்வாறே, மாறுபாடுகளைக் கடந்துவிட்ட ஒருவனே சன்னியாசி என்றால், அவன் மனத்திற்கும், அறிவுக்கும் அப்பாற்பட்டவன் என்று தெரிகிறது அல்லவா?

எதிர்மறை இரட்டைகளைக் கடப்பது அவ்வளவு சுலபமானதல்ல. உலக வாழ்க்கையின் வரையறைகளைக் கடந்து விடுதலை பெற்ற ஒருவரே மாறுபட்ட இரட்டைகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள முடியும். கிருஷ்ணர் அப்படிச் சொல்லுவதைக் கேட்டு பயந்துபோய், சாதகர்கள் நம்பிக்கை இழந்துவிட வேண்டியதில்லை. அர்ஜுனனுடைய நிலையில் முன்னேற்றத்திற்கு அவன் என்ன செய்ய வேண்டும் என்று அவனுடைய பிரச்னையைத் தீர்ப்பதற்கு சொல்லப்படும் புத்திமதி இது. அரச வம்சத்திற்கே இயல்பான வீரதீரச் செயலீடுபாடு வேலை செய்யும் ஆர்வம் முதலியவற்றால் அவன் உள்ளத்தில் ஆயிரமாயிரம் 'வாசனை'கள் படிந்திருக்கின்றன. இந்தச் சுமையுடன் அவன் துறவு பூண முயற்சிப்பது சுத்த முட்டாள்தனம் என்றும், அவசரப்பட்டு அப்படிச் செய்ய வேண்டாமென்றும் அன்புக் கட்டளையிடுகிறார், கிருஷ்ணர். இதனால் மற்ற சாத்கர்கள் நம்பிக்கையிழந்து விடவேண்டுமென்று அர்த்தமில்லை.

ஸாங்க்ய யோகௌ ப்ருதக் பாலா:
ப்ரவதந்தி ந பண்டிதா:
ஏகமப்யாஸ்த்தித: ஸம்யக்
உபயோர் விந்ததே பலம். 5:4

சாங்கியமும், யோகமும் (அறிவும், வேலையை யோகமாகச் செய்வதும்) வெவ்வேறானவை என்று நினைப்பது சிறு பிள்ளைத் தனம். கற்றறிந்த பெரியோர் அப்படி நினைக்க மாட்டார்கள். இந்த இரண்டு வழிகளில் ஏதோ ஒன்றில் உறுதியுடன் நிலைத்து, பின்பற்றி வருபவர்கள் இரண்டின் பயனையும் பெறுகிறார்கள்.

சாதாரண அன்றாட வேலைகளைக்கூட இறைவழிபாடாகச் செய்து விடலாம். அப்படிச் செய்வதற்கு இரண்டு வழிகள் உள்ளன என்று இங்கு காட்டப்படுகிறது. 'நான்தான் செயல்புரிவேன்' என்ற பொய்ப் பொறுப்பைக் கைவிட்டு வேலை செய்வது ஒருவழி. செயலின் பயனை அனுபவிக்க வேண்டுமென்ற அசட்டு ஆவலை அறவே அகற்றிப் பணிபுரிதல் மற்றொரு வழி. முதலாவது வழியை சாங்கியமென்றும், இரண்டாவதாகக் கூடியதை கர்ம யோகமென்றும் சொல்லுகிறார்கள்.

'நான்தான் செயல்புரிகிறேன்' என்ற மமதையை அவ்வளவு சுலபமாக அகற்றிவிட்டுப் பணிபுரிய முடியாது. அறிவின் மிக உயர்ந்த மட்டத்திலிருந்து பிரபஞ்ச இயக்கத்தைத் தெளிவாகக் காணும் சக்தி பெற்றவரே, எதுவும் தம்மால் நடைபெறவில்லை என்ற உண்மையை உணருகிறார். பிரபஞ்ச முழுவதிலும் நடப்பதை மொத்தமாக எடுத்துக்கொண்டு பார்த்தால், நாம் மாறுபடும் வெற்றிகளென்றும், பிரம்மாண்ட சாதனைகளென்றும் நினைப்பவை எல்லாம் உண்மையில் எவ்வளவு அற்பமானவை என்று தெரியவரும்.

முதிர்ச்சி பெறாத குழந்தை உள்ளங்களே, செயல்புரிதலும் செயலைத் துறத்தலும் இரண்டு இலட்சியங்களுக்கு வழிகாட்டும் இரு பாதைகள் என்று கருதும். அவற்றில் ஏதோ ஒரு பாதையைப் பின்பற்றுபவர்கள்கூட இரண்டு வழிகளின் பயனையும் அடைவார்கள் என்றும் அந்த அனுபவம் பலருக்கு கிடைத்திருக்கின்றதென்றும் கிருஷ்ணர் அறிவிக்கிறார். ஒருவர் தமக்கென்று வகுத்துக்கொண்ட வழியை இடையறாது, உறுதியுடன் கடைப்பிடித்து சாதகம் செய்து வந்தால், மற்ற ஆன்மிக வழிகளைப் பின்பற்றுவோர் பெறும் இலட்சியத்தையே அவரும் அடைகிறார்.

ஒரு வழியைப் பின்பற்றி, இரண்டு வழிகளின் பயனையும் ஒருவர் எப்படி அடைகிறார்?

யத்ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்த்தானம்
தத்யோகைரபி கம்யதே
ஏகம் ஸாங்க்யம்ச யோகம்ச
ய: பஸ்யதி ஸ பஸ்யதி 5:5

சாங்கியர்கள் (ஞானிகள்) அடையும் இடத்தைத்தான் யோகிகளும் (கருமயோகத்தைச் செய்பவர்களும்) அடைகிறுர்கள். பார்வை சரியாக இருப்பவனுக்கு சாங்கியமும், யோகமும் ஒன்ருகவே தோன்றும்.

சாங்கிய வழியைப் பின்பற்றுவோர் அடையும் அதே இலட்சியத்தை கர்ம யோகிகளும் அடைகிறுர்கள் என்று கிருஷ்ணர் இங்கு ஆணித்தரமாகக் கூறுகிறுர். இந்த இரண்டு பாதைகளும் போய்ச் சேரும் இடம் ஒன்றுதான் என்பதை அனுபவபூர்வமாக அறிந்துகொள்பவனே வேத உண்மையை சரிவர உணர்ந்தவன்.

இங்கு, 'பார்த்தல்' (பச்யதி) என்ற சொல், வேத வழக்கையொத்து உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அச்சொல் கண்கள் செய்கிற வேலையைக் குறிப்பிடவில்லை. அத்வைதக் கொள்கையில் ஆன்மாவும் அதைப் 'பார்ப்பவரும்' வேறல்ல. தாமே ஆன்மா என்பதுதான் அத்வைதம். தாமே ஆன்மா என்பதைப் பரிபூரணமாக ஒருவர் உணருதலை 'பார்த்தல்' என்ற சொல் குறிப்பிடுகிறது. கண்ணுல் ஒரு பொருளைப் பார்க்கும்போது, அது எவ்வாறு ஒருவருக்குத் தெளிவாகத் தெரிகிறதோ அவ்வாறே ஆன்மானுபவம் பெற்றவர்களுக்கு அவ்வனுபவம் தெளிவாக இருக்கிறது என்பதற்காக அச்சொல் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

சாங்கியத்தையும், கரும மார்க்கத்தையும் இங்கு இணைத்துப் பேசும்போது, 'ஓ—இவை இரண்டையும் கலந்து விட்டால் ஒரு நல்ல மார்க்கக் கலவையாகும் போலிருக்கிறது' என்று நினைத்துவிடக்கூடாது. அவ்விரண்டையும் ஒன்றன் பின் ஒன்ருக வரிசைக்கிரமத்தில் கடைப்பிடிக்க வேண்டும். கரும யோகம் நமது அறிவைத் தூய்மைப்படுத்தி, தியான (சாங்கிய)த்திற் கேற்ற அமைதி நிலைக்குக் கொண்டு வருகிறது. இறுதியான இறையுணர்வு நிலையை தியானத்தின் மூலமாகத் தான் அடைய முடியும். இரண்டு வழிகளும் இவ்வாறு ஒன்றுக்கொன்று இசைவாக இருக்கின்றன என்ற அர்த்தத்தில்தான் யோகமுல், சாங்கியமும் பிரிக்க முடியாதவை என்று பகவான் இங்கு கூறுகிறுர். முதலில் கருமயோகம் பிறகு சாங்கியம் என்ற வரிசைக் கிரமத்தை நினைவுவைத்துக்கொண்டு எல்லா சாதகர்களும் முயற்சி செய்ய வேண்டும்.

கரும யோகத்தின் நோக்கம் சன்னியாசமென்ருல், அது எப்படி? இப்பிரசினைக்கு பகவான் அளிக்கும் பதில் என்னவென்று பார்க்கலாம்.

ஸன்யாஸஸ்து மஹாபாஹோ துக்கமாப்துமயோகத:
யோகயுக்தோ முனிர் ப்ரஹ்ம நசிரேணுதி கச்சதி 5:6

தோள்வலி மிக்க வீரனே! யோகமின்றி துறவுநிலை

அடைவது மிகவும் கஷ்டம். யோகத்தைக் கைப்பற்றிக்கொண்டு தியானத்தை மேற்கொள்பவர் விரைவில் பிரம்மனை அடைகிறார்.

தம்மிடமுள்ள ஆன்மாவை மீண்டும் கண்டு கொள்வதற்கு சரியான செயல்முறை அவசியமென்று புராதன காலத்தில் நமது ஞானிகள் கூறிய முடிவை, கிருஷ்ணர் இங்கு அழுத்தந்திருத்தமாக, இனி எவ்வித சந்தேகம் எழுவதற்கும் இடமில்லாத வகையில், எடுத்துரைக்கிறார். நம்மிடம் ஒரு பொருள் இருக்கும்போது தான் அதைத் துறப்பதா இல்லையா என்ற பிரச்னையே எழுகிறது. செயலே புரியாதவர்கள் எப்படிச் செயலைத் துறக்க முடியும்? வாழ்வில் ஆசைகளும் நம்பிக்கைகளும் நிறைவேறாமல் போய், 'சீ, இந்தப் பழம் புளிக்கும்' என்ற மனப்பான்மையுடன் 'துறவு' பூணுவது உண்மையில் துறவே அல்ல.

பாத்திரங்களுக்கு 'பாலிஷ்' போட்டு, பளபளக்கச் செய்கிறோமே, அதைப் போன்றது தான் உள்ளத்தைத் துலக்குவதும். வெகுகாலம் உபயோகிக்காததால் களிம்பேறிய பாத்திரங்கள் மீது அப் பாலிஷைப் போட்டுத் தேய்த்தால், பாலிஷில் உள்ள மருந்து களிம்பைத் தின்று மீண்டும் பாத்திரத்தைப் பளபளவென்று ஆக்குகிறது. கடைசியில் நாம் அதைத் துடைக்கும் போது களிம்பும், பாலிஷும் இரண்டுமே அகற்றப்பட்டு விடுகின்றன.

மனதை அப்படி தூய்மைப் படுத்துவது கருமயோகம்—சரியான செயல்முறை—என்ற பாலிஷ்தான். மனதில் படிந்துள்ள 'வாசனைகள்' என்ற களிம்பை அது அகற்றுகிறது. இப்படி தூய்மையடைந்த உள்ளம் நாம் செயலைத் துறந்து ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட உதவுகிறது. உள்ளம் தூய்மை பெறாத போது செயல்களைக் கைவிட முயற்சித்தால், அதனால் எவ்வித பயனும் கிடைக்காது. உடல் செயல்புரியாமல் சும்மா இருக்கலாம். ஆனால் நமது மனம் ஊரெல்லாம் திரிந்துகொண்டிருக்கும். வெளியுலகத்தில் அப்படி சஞ்சரிப்பதால் மனம் பொலிவிழந்து இருக்கும். அதன் உண்மை அழகும் ஒளியும் மங்கிப் பாழாகியிருக்கும். நமது மாமுனிவர்கள் அனுபவபூர்வமாக இந்த உண்மையை உணர்ந்தவர்கள். எனவே சுயவளர்ச்சிக்கு இக் கரும மார்க்கத்தை நமக்குக் காட்டுகிறார்கள்.

சரியான செயல் முறையை மேற்கொண்டு, அதை சரியான மனநோக்குடன் பின்பற்றாவிட்டால், மனத்தூய்மையும், தியான ஆற்றலும் நமக்குக் கிட்டாது. இதை எப்படி எதிர்மறையாகச் சொல்வது போதாது என்று, கிருஷ்ணர் மேலும் ஒரு படி சென்று, ''சரியான செயல் முறையைக் கடைப்பிடித்தால்தான் தியானத்திற்கு ஏற்ற மனநிலை சாதகர்களுக்கு வரும்'' என்று கூறுகிறார்.

யோக யுக்தஹ—சுயநலமோ, விருப்பு வெறுப்புக்களோ இல்லாது, செயல் முறையில் நிலைத்து நிற்கும் ஒருவருக்கு, ஒரே குறியான சிந்தனையில் சலனமற்று ஈடுபடும் சக்தி வருகிறது. இடையரு தியான வாழ்வுக்கு ஒரு சாதகரைத் தகுதியாக்குவதன் மூலம் கருமம் (செயல்முறை) நிறைவு பெறுகிறது. கரும யோகத்தின் நோக்கம் அதுவே. 'நானே' செயல்புரிகிறேன்' என்ற உணர்வைக் கைவிடுவதன் மூலமாகவோ, அல்லது செயலின் பயனை அனுபவிக்க வேண்டுமென்ற ஆவலைத் துறந்து பணிபுரிவதன் மூலமாகவோ, கரும மார்க்கத்தில் வெற்றி பெற்ற பிறகு ஒரு தியானி (முனிவர்) ஆன்ம உணர்வு பெறும் முடிவிலா இன்பத்தை எய்துகிறார்.

இந்த முறையில் வெற்றி பெறுவதற்கு காலவரை எதுவும் சொல்லவில்லை. அதைப் பின்பற்றி வெற்றிகண்டவர் ஆன்ம உணர்வு பெறும் நாள் 'வெகு தூரத்தில் இல்லை,' (ந—சிரேண) என்றுதான் குறிப்பிடப்பட்டு இருக்கிறது.

இதை நினைவு வைத்துக்கொண்டால், செயலைத் துறப்பதை விட அதைச் செய்து வருவதே மேலானது என்று இந்த அத்தியாயத்தில் இரண்டாவது செய்யுளில் கூறிய காரணம் தெளிவாகும். கருமத்தை ஒரு யோகமாகச் செய்து வந்தால்—

யோகயுக்தோ விஸுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய:
ஸர்வபூதாத்ம பூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே 5:7

உள்ளத் தூய்மை பெற்று, அகந்தையை வென்று புலன்களை அடக்கி தம்முள் இருக்கும் ஆன்மா எல்லா உயிரினங்களிலும் விரவியிருப்பதை உணர்ந்து கருமயோக முறையைக் கடைப் பிடித்துவரும் ஒருவர் மீது, அவருடைய செயல்களின் விளைவுகள் படிந்து மாசுபடுத்துவதில்லை.

கரும யோகத்தை தியானத்துடன் இணைத்துப் பின்பற்றும் ஒருவர், கூடிய விரைவிலேயே முழுமை நிலை அடையும் அனுபவத்தை சுய அனுபவத்திலேயே காண்கிறார் என்று கிருஷ்ணர் முந்திய செய்யுளில் பொதுப்படையாகக் கூறினார். அந்த அக நிலைப் புரட்சி எப்படி நடக்கிறதென்று தர்க்கரீதியாக இங்கு விளக்குகிறார். பல்வேறு தளைகளில் சிக்கி, கட்டுண்டு, வரையறைகளுக்கு உட்பட்டிருக்கும் நாம், ஒப்புயர்வற்ற இறைநிலை அடைவதற்குச் செய்யும் புனித யாத்திரையில் என்னென்ன மாறுதல்களுக்கு உள்ளாகிறோம் என்பதை விஞ்ஞான முறையில், காரண—காரியத் தொடர்பாக பகவான் இங்கு எடுத்துரைக்கிறார்.

கருமயோகத்தில் வேரூன்றியவனுடைய அறிவு தூய்மை அடைகிறது. சூட்சும உடல் தூய்மை பெறுவதால் உள்ளத்திலும்

அமைதி நிலவுகிறது. உணர்ச்சிகள், கோரிக்கைகள் முதலியவற்ருல் ஏற்படும் கலக்கங்கள் குறையக் குறைய ஆன்ம வளர்ச்சியில் நாம் முன்னேறுவதாக வேதாந்தம் கூறுகிறது. சுயநலமின்றியும், பலனை அனுபவிக்கும் ஆவலின்றியும் ஒருவர் செயல்புரியும்போது, அவர் உள்ளத்தில் படிந்த 'வாசனை'கள் அகலுகின்றன. கோரிக்கைகள் அலை அலையாக மனதைத் தாக்குவதாலேயே, மனம் சலனமடைகிறது. நமது அறிவு தூய்மையடைந்தவுடன், வேட்கைச் சலசலப்புகளிலிருந்து விடுபட்டு, உறுதி நிலை பெற்றவுடன் மனக் கலக்கங்கள் தோன்ருது. அறிவு நிலையை பிரதிபலிப்பதே மனம். கடல் மடை திறந்தாற்போல் நம்முள் பாய்ந்து கொண்டிருக்கும் கோரிக்கைகளை அடைத்துத் தடுத்துவிட்டால், உணர்ச்சிகள் அடங்கி அமைதி பெறுகின்றன.

கருமயோகத்தைக் கடைப்பிடித்து மன, அறிவு மட்டங்களில் ஒருவர் அமைதி பெற்றுவிட்டால், பிறகு புலன்கள் நாம் காட்டுகிற பாதையில் ஒழுங்காகச் செல்லும். அவற்றின் அடங்கா வேட்கைகளை ஒரு நொடியில் அடக்கிவிடலாம். அவற்றை கட்டுப்படுத்தவோ, சரியான வழியில் செலுத்தவோ முடியும். உடல், மனம், அறிவு ஆகிய மூன்றையும் கட்டுப்படுத்திய சாதகன் சிறப்புயர் மிக்க தியான நிலைக்குத் தகுதியுள்ளவனுகிருன். தியானத்தை மேற்கொள்ளவிடாமல் இடைஞ்சல் செய்பவை புலன் வேட்கைகளும், உணர்ச்சிகளும் கோரிக்கைகளுமே. இத்தளைகளைத் தகர்த்தெறிந்துவிட்டால், தியான நிலை இயல்பாகவே வருவதுடன், தமது ஆன்மிகத் தன்மையையும் அக்கணமே ஒருவர் முழுமையாக அறிந்து கொள்ளுகிருர்.

மெய்யறிவு அரை குறையாக இருக்க முடியாது. ஒருவர் தியானத்திலாழ்ந்து தமது தெய்வீக இயல்பை அறிந்து கொண்டால் மட்டும் போதாது. பார்க்கப் போனுல் அதை மெய்யறிவு என்றுகூடச் சொல்ல முடியாது. ஏனெனில் எல்லையற்றுப் பரந்திருக்கும் பரம் பொருளை மெய்யறிவு பெற்ற ஒருவர் தம்முள் மட்டுமின்றி எல்லாவற்றிலும், எல்லா இடங்களிலும், எக்காலத்திலும் காண்கிருர். 'உயிர்வாழ் இனங்களில் எல்லாம் உட்பொருளாகத் திகழும் ஆன்மா என்னுள்ளும் இருக்கிறது' என அவர் உணர்ந்து கொள்ளுவாரென்று கிருஷ்ண பகவான் கூறுகிருர்.

கடலும் அலையும் ஒன்றுதான். இவ்வாறு தனது உண்மை இயல்பை அறியும் ஒரு அலை, கடலைத் தவிர வேறு எதுவும், எந்த அலையிலும் இல்லை என்ற அசைக்க முடியாத முடிவுக்கு வருகிறது. அதைப்போல, தாமே எல்லையற்ற பரம்பொருள் என்ற மெய்யறிவு ஒருவருக்கு உறுதியாக ஏற்பட்ட பிறகு, அவர் எப்போதும் இந்த உணர்விலேயே இயங்கி வருகிருர். எனவே

அவருடைய செயல்களின் விளைவுகள் அவர் மீது படிவதில்லை. தானே செயல்களைச் செய்து வருவதாகவும், அவற்றின் பயனுக்குத் தானே அதிபதி என்றும் கருதுவது ஒருவனுடைய அகந்தையே. இறையுணர்வு பெற்றவரிடம் இந்த அகந்தை இருந்த சுவடுகூடத் தெரியாமல் மறைந்து விடுகிறது. எனவே அவருடைய செயல்கள் எவ்வித 'வாசனை'யையும் அவர் உள்ளத்தில் ஏற்படுத்துவதில்லை. நீர்மேல் எழுதிய எழுத்தைப் போல அவை 'வாசனை'களை ஏற்படுத்தாமலே போய்விடுகின்றன.

மொத்தத்தில் தமது கருமயோகக் கொள்கையை *கிருஷ்ணர், இவ்வுபதேச முழுவதிலுமே வலியுறுத்தி வருகிறார். வெவ்வேறு முறைகளில் அதை அழகான சொற்கோவைகள் மூலம் பல்வேறு வகைகளில் குறிப்புணர்த்துகிறார். அகந்தை—மையச் செயல்கள் மட்டுமே ஒருவருடைய அறிவில் வாசனைத் தூள் படலத்தைப் படியச் செய்கின்றன என்றும், அதனால் தமது நிரந்தரமான தெய்வீக இயல்பை அறிந்துகொள்ள இயலாதவாறு அவருடைய விவேகம் மங்கி விடுகிறது என்றும் இந்தச் செய்யுளில் கூட பகவான் விளக்கமாகத் தெரிவிக்கிறார்.

ஒப்பற்ற ஆன்ம உணர்வில் நிலைத்து, பிரபஞ்ச இயக்கத்துடன் ஒருமைப்பாடு பெற்ற ஞானியின் அகநோக்கு பற்றி மேலும் சில விவரங்கள்:

நைவகிஞ்சித் கரோமீதி
யுக்தோ மன்யேத தத்வவித்
பஸ்யன் ஸ்ருண்வன் ஸ்ப்ருஸன்ஜிக்ரன்
அஸ்நன் கச்சன்ஸவபன் ஸ்வஸன் 5:8

ப்ரலபன் விஸ்ருஜ்ன் க்ருண்ஹன்
உன்மி ஷன் நிமிஷன்னபி
இந்த்ரியா ணீந்த்ரியார்த்தேஷு
வர்த்தந்த இதி தாரயன் 5:9

8. பேருண்மையில் மையம் கொண்டு உறுதியாக நிலைத்தவர் தாம் செய்வது எதுவுமில்லை என்ற உணர்வுடன் இருப்பார். பார்த்தல், செவியுறுதல், தொட்டுணர்தல், முகருதல், உணவு கொள்ளுதல், நடத்தல், உறங்குதல், சுவாசித்தல்.

9. பேசுதல், நழுவ விடுதல், பிடித்துக்கொள்ளுதல், இமைத்தல் ஆகியவற்றைச் செய்த போதிலும்கூட, புலன்

---

* இந்நூலின் பொது முன்னுரையிலும், அதன் விளக்கமாக அமைந்துள்ள அ—ஆ படங்களையும் பார்க்க.

பொருள்களிடையில் புலன்கள் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றன என்று உறுதியாக இருந்து விடுகிருர்.

பேருண்மையுணர்ந்து நிறைவு பெற்ற ஞானி, கற்சிலே போல் உட்கார்ந்திருக்கமாட்டார். மற்ற சாதாரண மக்களேப் போல எல்லா வேலேகளேயும் செய்து கொண்டிருப்பார். இந்த இரண்டு செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ளவை—பார்த்தல், செவியுறுதல், இமைத்தல் முதலியவை பொதுவாக எல்லோரும் செய்யும் வேலேகளுக்கு உதாரணங்களாகக் கொள்ளவேண்டும். வாழ்க்கையில் தவிர்க்க முடியாத எல்லா வேலேகளேயும் அகந்தை, தற்பெருமையின்றி அவர் செய்துகொண்டுதான் இருப்பார் என்று கிருஷ்ணர் இங்கு கூறுகிருர்.

ஆழ்ந்து தூங்கும்போது நமது அகந்தை வேலே செய்யவில்லேயாதலால் நாம் மூச்சு விடுவதுகூட நமக்குத் தெரிவதில்லே. விழித்த நிலேயிலும் அவ்வாறே அகந்தை அகன்றுவிட்டால், எல்லா வேலேகளும் நம்மை அறியாமலே நடந்துகொண்டிருக்கும். ஆன்ம உணர்வில் லயித்தவர், தாம் எதுவுமே செய்யவில்லே என்ற வகையில்தான் இடைவிடாது செயல் புரிந்து கொண்டிருப்பார். இப்படிச் சொன்னவுடன், தூக்கத்தில் நடக்கும் நோயுள்ளவர்களேப் போல் அவரும் இருப்பார் என்று தீர்மானித்து விடக்கூடாது. தூக்கத்தில் நடக்கும் வியாதியுள்ளவர்கள் தனக்குத் தெரியாமலே நடந்துகொள்ளுகிருர்கள். ஆன்ம உணர்வு பெற்றவர் அப்படியல்ல. இவர் தெளிவான உள்ளத்துடன் இருந்து செயலாற்றுவார். அவர்கள் இருவருக்கும் உள்ள வேறுபாடு இதுதான்.

செயல்புரிவது தாமல்ல என்ற உணர்ச்சி முழுமைபெற்ற மகானுக்கு மட்டுமே வரும் என்பதை 'மையம்கொண்டு' 'உறுதியாக நிலேத்து' என்ற சொற்கள் எடுத்துக்காட்டுகின்றன. 'யுக்த' என்பதன் பொருளும் 'ஆன்ம மையம்கொண்டு' என்பதுதான். இரண்டு மட்டங்களில் ஒருவர் ஆன்ம மையம் கொண்டிருக்கலாம். சாத்திர நூல்களேப் படிப்பதன் மூலமாகவும், சிந்திப்பதன் மூலமும், தியானத்தின் மூலமாகவும் ஒருவருடைய அறிவு ஆன்மாவில் நிலேக்கலாம். அது ஒரு மட்டம். தம்மிடமுள்ள ஆன்மாவை பரிபூரணமாக உணர்ந்துகொண்ட பிறகு, ஒவ்வொரு கணமும் அந்த ஆன்மாவையே ஆழ்ந்து அனுபவித்து மகிழும் 'ஆத்மவித்'தாக வாழ்வது மற்ருெரு மட்டம்.

'இதைச் செய்வது நான்தான்' என்ற தவருன கருத்தை நம்மிடமிருந்து அகற்ற வேண்டுமென்ருல், அதற்கு பதிலாக மற்ருெரு கருத்தைப் பதிக்க வேண்டும். 'விழிப்பு நிலேயில் எனது தன்மை என்னவென்று எனக்குத் தெரியாத போதுதான், கனவில் கண்ட அதே ஆள்தான் நான் என்று நினேத்துக்

கொள்ளுகிறேன். விழித்த நிலையில் என் தன்மை என்னவென்று தெரிந்துகொண்ட பிறகுதான் கனவில் நடமாடியவருடன் என்னைப் பிணைத்துக்கொண்டது தவறு என்பது மீண்டும் தெரிகிறது. அதன் பின் 'விழிப்பு நிலையில் உள்ளவனே நான்' என்ற உணர்வு தொடர்ந்து இருந்து வருகிறது. அதைப் போலவே 'நான் செயல்புரிபவன் அல்ல' என்ற நோக்கத்தில் ஒருவர் நிலைத்திருக்க வேண்டுமானால், அந்த எதிர்மறைக் கருத்துக்கு பதிலாக, 'நான் யார்' என்பதைப் பற்றிய திட்டவட்டமான கருத்து அவருக்கு இருக்க வேண்டும். இது செய்யுளின் கடைசி வரியில் இருக்கிறது. முழுமைபெற்று பேருண்மைப் பொருளுடன் கலந்து நிற்பவன், தனது செயல்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஒரு சாட்சியாக சித்தரிக்கப்பட்டிருக்கிறான். தன்னுடைய பொருட்படலங்களான பல்வேறு உறுப்புக்கள் பொருளுலகத்தில் செய்யும் வேலைகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

கடலுக்கு உணர்வு இருக்குமானால், தன்னிடம் தோன்றி எழுந்து தனது பெருமையையே பறைசாற்றும் அலைகளைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கும். அதைப் போலவே தனது ஆன்ம உணர்வில் ஆழ்ந்துவிட்ட மகான் தனது பொருட் பகுதியான அவயவங்கள் செய்யும் வேலைகளை எல்லாம் வெறும் சாட்சியாக இருந்து பார்த்துக்கொண்டிருப்பார். இந்த வரிகளை நான் டைப் அடித்துக்கொண்டிருக்கும்போது என் விரல்கள் சடசட வென்று எழுத்துக்கு எழுத்து தாவுவதைக் காண்கிறேன். நான் ஒதுங்கியிருந்து பார்க்கப் பார்க்க அது மிகவும் வேடிக்கையாகத் தோன்றுகிறது. ஒரு ஞானி அவ்வாறு தனது ஆன்மக் கோயிலின் தெய்வ பீடத்தை அடைந்து விட்டால் பிறகு தனது பொருட் பகுதிகள் ஏதோ தாமாக இயங்குவதுபோல ஆயிரமாயிரம் வேலைகள் செய்து மகிழ்வதை சும்மா பார்த்துக் கொண்டிருப்பார். அவருக்கும் செயல் புரியும் அவயவங்களுக்கும் சம்பந்தமில்லை. ஆழங்காண முடியாத தமது பரமான்மிக வாழ்வு நிலையிலிருந்து எல்லாவற்றையும் விருப்பு வெறுப்பின்றி, 'இவற்றை எல்லாம் செய்பவன் நான் அல்லன்' என்று உறுதியுடன் பார்க்கிறார்.

ஆனால் அப்பேருண்மையை உணராமல் இருக்கும் ஒருவர் செயல் முறையில் ஈடுபடுவது எப்படி?

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதிய:
லிப்யதேனஸ பாபேன பத்ம பத்ரமிவாம்பஸா 5:10

ஒருவர் தாம் செய்யும் வேலைகளை எல்லாம் பிரம்மனுக்கு அர்ப்பணித்துவிட்டு செயல்படும்போது, தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாததைப் போல பாவம் அவரை ஒட்டுவதில்லை.

இதற்கு முந்திய செய்யுட்களில் கூறப்பட்டவை எல்லாம் பேருண்மையை உணர்ந்து, இறையுணர்ச்சியில் திளைத்துக் கொண்டிருப்பவர்களுக்கும் பொருத்தமாக இருக்கலாம். ஆனால் செய்ல் புரிந்து கொண்டிருப்பது தாம் அல்ல என்ற உணர்ச்சி சுலபத்தில் வந்துவிடாது. அந்த நிலையை எட்டுவதற்கு நாமெல்லோரும் முயற்சித்துக் கொண்டிருக்கிறோம். அவ்வளவுதான். கீதையிலுள்ள கருத்துக்களைப் பற்றிப் பேசினால் மட்டும் போதாது. அவற்றை நடைமுறையில் கொண்டுவர வேண்டும். செயல்புரிவது நானல்ல என்ற நிலையை எட்டுவது எப்படி என்பதே கீதையை உண்மையாகப் படிக்கும் ஒவ்வொருவருக்கும் பிரச்னையாக இருக்கும். அவ்வாறு பற்றற்ற நிலையை எட்டுவதற்கு இங்கு ஒரு வழிகாட்டப்பட்டிருக்கிறது.

பிரம்மனுக்கு செயலையெல்லாம் சமர்ப்பித்துவிட்டு—முற்றிலும் பற்றற்ற நிலையை அடைவது மனித உள்ளத்தினால் முடியவே முடியாது. இதைத்தான் சாதகர்களில் பெரும்பான்மையோர் புரிந்துகொள்வதில்லை. மனம் என்ற ஒன்று இருக்கும்வரை, அது ஏதோ ஒன்றைப் பற்றிக்கொண்டுதான் ஆக வேண்டும். உண்மையைப் பற்றிக்கொண்டாலொழிய, உண்மையில்லாத்திலிருந்து நம்மைப் பிரித்துக்கொள்ள முடியாது. உளவியல் நிபுணர்கள் ஒப்புக்கொள்ளும் இவ்வுண்மையை இச் செய்யுள் விஞ்ஞான பூர்வமாகக் கூறுகிறது. தன்னிடமுள்ள எல்லா பற்றுதல்களையும் பிரம்மனிடம் வைத்துக்கொண்டு, முயற்சியைத் தொடர்ந்து செய்யுமாறு சாதகர்களுக்கு கிருஷ்ணர் ஆலோசனை கூறுகிறார். ஒரு இலட்சியத்தை இடைவிடாது நினைத்தவண்ணமிருந்தால், அதன் முழுமைக்கு இசைந்த வகையில் நாம் உருவாகி வருவோம். நமது செயல்களின் பொறுப்பையும் பிரம்மனிடம் முழுமையாக ஒப்படைத்து விடவேண்டுமென்றால், அகந்தையைப் பற்றி இப்போது நாம் நினைத்துக் கொண்டிருப்பதைப் போல, பேருண்மைப் பொருளையும் இடைவிடாது நினைவு வைத்துக்கொள்ள வேண்டும். அப்படி நடந்துகொண்டால், 'நான்' என்பது நமக்கு எந்த அளவு மிக நெருக்கமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு 'பிரம்மன்' என்ற இலட்சியமும் நெருக்கமானதாக ஆகும்.

சுருங்கக் கூறுமிடத்து, நாம் இன்று அகந்தை உணர்வு கொண்ட ஆத்மாக்களாக இருக்கிறோம். அதற்கு பதிலாக, ஆன்ம உணர்வுகொண்ட அகந்தையாக மாறும்படியாக கீதை நம்மைக் கேட்டுக்கொள்ளுகிறது.

நமது உண்மையான இயல்பை அறிந்து கொண்டவுடன் நம் உடல், மனம், அறிவு ஆகியவை செய்யும் வேலைகள் எவ்வித 'வாசனை'யையும் நம்மிடம் ஏற்படுத்துவதில்லை. நன்மை, தீமை என்பதெல்லாம் அகந்தையைச் சார்ந்தவை. ஆன்மாவுக்கு அவை

இல்லை. கண்ணாடியில் எனது இயற்கை முகம் தோன்றவில்லை என்றால், திடீரென்று என் முகமே மாறிவிட்டது என்று அர்த்த மில்லை. நான் பார்த்த கண்ணாடியில் ஏதோ தவறு இருக்கவேண்டும். சில கண்ணாடிகளில் முகம் நன்கு காணப் பட்டாலும் வேறு சில என் முகத்தைக் குறுக்கி பூதங் காட்ட லாம். அகந்தையும் தான் செய்வதன் விளைவை நன்மையாகவோ, தீமையாகவோ காண்கிறது.

ஆன்ம உணர்வு பெற்ற ஒருவர் பொருள் உலகில் இருந்து கொண்டிருந்தால், தாமரை இலைத் தண்ணீர் போலத்தான் இருப்பார். தாமரை இலை தண்ணீரில்தான் இருக்கிறது. அதி லிருந்தே, தனது சத்துப் பொருட்களைப் பெறுகிறது. அதிலயே மடிகிறது. ஆனால் அது தண்ணீரில் நனைக்கப்படுவதில்லை. அதைப் போலவே ஒரு ஞானியும் பொருட் சேர்க்கையினால் தோன்றிய இவ்வுடலுக்கு, பொருளுலகத்திலிருந்தே உணவு பெறுகிறார். ஆனால் நன்மை, தீமைகளிலிருந்து ஒதுங்கி நிற்கிறார். உலகத்தில் அவருக்கு வெறுப்பு, விருப்புக்கள் இல்லை; அழகு அழகின்மை என்ற கருத்துக்கள் இல்லை.

செயலை செயல் யோகமாக (கருமத்தைக் கருமயோகமாக) மாற்றுவதற்குரிய இரண்டு வழிகளில் 'செயல்புரிவது நானல்ல' என்ற விளக்கப்பட்டது. ''செயல் புரிவது நானல்ல'' என்ற பாதை மிக விரிவாக விளக்கப்பட்டது. இது ஏதோ புதிய கொள்கை என்று யாரும் நினைக்கக் கூடாது. இதில் அதிசயமான கருத்து எதுவுமில்லை. ஒவ்வொரு கணமும் உலகெங்கும் நடந்து வரும் ஒன்றுதான் இது. மிக கெட்டிக்கார டாக்டர், எவ்வளவு பெரிய ஆபரேஷனாக இருந்தாலும், மிகச் சுலபமாகச் செய்து விடு கிறார். ஆனால் அதே டாக்டர் தன் மனைவிக்கு ஆபரேஷன் செய்ய வரும்போது அவருடைய கை நடுங்குகிறது. பற்றுதலும், ஆசாபாசங்களுமின்றி மற்றவர்களுக்கு அறுவை சிகிச்சை செய்யும் டாக்டர், தமது மனைவி என்றவுடன் ஒரு அசட்டுப் பாசத்தினால் தனது வழக்கமான திறமையைக் காட்ட முடியாதவராகிறார்.

ஆகையால்—

காயேன மனஸா புத்யா கேவலை ரிந்த்ரியை ரபி
யோகின: கர்மகுர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்ம சுத்தயே

5:11

யோகிகள் பற்றுதலைத் துறந்து தம்மை (தம் அகந்தையை) தூய்மைப்படுத்திக் கொள்வதற்காக, கேவலம் உடல், மனம், அறிவுக் கருவிகள் மூலமாகச் செயல் புரிகிறார்கள்.

தம்மை தமக்குள்ளேயே நிலைபெறச் செய்வதற்கு ஒரு

கர்மயோகி, பற்றற்று, ஆனால் ஆர்வத்துடன், தம்முள்ளும் வெளியிலும் நடக்கும் நிகழ்ச்சிகளை கவனித்து வருகிறார். தம்முள்ளிருந்து இப்படித் தம்மையே கூர்ந்து நோக்கும்போது, தமது உடல், மனம் முதலிய செயற்கருவிகளே வேலை செய்கின்றன என்றும், தம்முள் ஒதுங்கியிருந்து பார்த்துக் கொண்டிருக்கும் ஒருவருக்கும், வேலை செய்து கொண்டிருக்கும் பகுதிகளுக்கும் சம்பந்தமே இல்லை என்றும் அவர் சுலபமாகக் கண்டு கொள்ளுகிறார். ஆனால் இவ்வாறு பார்த்துக் கொண்டிருப்பவர் பரம்பொருள் அல்ல என்பதை உணர்ந்து கொள்ள வேண்டியது அவசியம். அறிவின் திறந்த முன்முகப்பில் நின்று பார்த்துக் கொண்டிருக்கும் பேருண்மையே அது. நாம் வேலை செய்யும் போது, நம்மை நாமே கூர்ந்து நோக்கினால் முன்கூறியவாறு சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருப்பவர் நம்முள்ளும் இருப்பது தெரியவ்ரும். ''இப்படிச் சாட்சியாக நிற்பவருக்கு ஒளியூட்டுவது ஆன்மிக மையம், ஆன்மாவேதான்,'' என்று எல்லா உபநிடதங்களும் கூறுகின்றன.

எல்லாவற்றையும் சாட்சியாகப் பார்த்துக் கொண்டே இருப்பவர்க்கு அப்பால்தான் ஆன்மிக மையம் இருக்கிறது என்றால், தன்னைத்தானே உற்று நோக்கிக் கொண்டிருக்கும் இந்த நடைமுறையை ஒரு கர்மயோகி ஏன் கையாளவேண்டும்? (இவ்வாறு தன்னைத்தானே ஒதுங்கி நின்று கவனிக்கும் போக்கை சாட்சி பாவம் என்று நமது சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன.) இந்தக் கேள்விக்கு, ''அகந்தையைத் தூய்மையாக்கிக் கொள்ளுவதற்காக'' என்று பகவான் இச் செய்யுளிலேயே பதிலளிக்கிறார். இந்த முறையைக் கடைப்பிடித்தால் ஒருவர் வேலையும் செய்யலாம். அதே சமயத்தில் 'வேலை செய்பவன் நான்' என்று ஆட்டம் போடும் அகந்தையையும் அடக்கலாம். அதனால் இப்போதுள்ள 'வாசனைகள் சுலபமாகவும், நிச்சயமாகவும் நம்மைவிட்டு அகலும். இவை அகலும் அளவுக்கு நமது உட்கருவிகள் தெளிவும் உறுதியும் பெறுகின்றன. பிறகு நமது மன-அறிவுக் கண்ணாடியில் இறையுணர்வு பளிச்சிட்டுப் பிரதிபலிக்கிறது.

மேலும், பின்கண்ட காரணத்திற்காகவும் கருமயோகிகள் பற்றற்றுச் செயல் புரிகின்றனர்:

யுக்த: கர்மபலம் த்யக்த்வா ஸாந்தி மாப்னோதி நைஷ்டிகீம்
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே

5:12

(உறுதியான மனச்சமநிலை பெற்று) ஒருங்கிணைந்து தமது செயலின் பயனைக் கைவிட்ட ஒருவர் சாசுவத அமைதி பெறுகிறார்.-

ஒருங்கிணையாதவர் (சமநிலை உறுதி பெறாதவர்) வேட்கைகளினால் உந்தப்பட்டு, பயனில் பற்றுதல் கொண்டு, கட்டுண்டவராக வாழ்கிறார்.

பலனை எதிர்பார்ப்பதில் தமது சக்தியை வீணாக்கிக் கொள்ளாமல் சரியான செயல்களை மேற்கொள்ளும் ஒரு கருமயோகி, எல்லையற்ற அமைதியைப் பெறுகிறார். அவருடைய மனஉறுதியே அதற்குக் காரணம். பொருளாதார நிலையாலோ, ஒரு குறிப்பிட்ட அரசியல் அமைப்பு காரணமாகவோ வருவதல்ல. அரசியல் நிர்ணய நிறுவனங்களும் சர்வதேச அரங்கங்களும் அதை உற்பத்தி செய்துவிட முடியாது. அது ஒருவருடைய உள்ளத்தைப் பொறுத்தது. அவருடைய உள்ளுலகத்தில் அனாவசியமான புயல்களும், சீர்குலைவுச் சிந்தனைகளும் தோன்றாதவரை அவர் அமைதி பெற்றவராகவே இருப்பார். இடையறா மகிழ்ச்சியும், ஒருமைப்பாடு பெற்ற ஆளுமையும் அமைதியின் சின்னங்கள். சுயநல நினைவுகள் இல்லாமல், வேள்வி உணர்வுடன் செயல்புரிந்து வந்தால்தான் ஆளுமை இசைவும். அமைதியும் நமக்கு வரும். இந்தப் புரட்சிகரமான கொள்கையைச் செய்யுள் அளிக்கிறது.

செயல் புரிவது தாமே என்ற அகந்தை உணர்ச்சியைக் கைவிட்டு உறுதி பெறவேண்டும். செயலின் பயனை அனுபவிக்க வேண்டுமென்ற அகந்தை மையக் கோரிக்கைகளைத் துறக்க வேண்டும். இந்த இரண்டையும் செய்பவர், அசைக்க முடியாத அமைதியைப் பெறுகிறார்.

இப்படி நேரடியாகச் சொல்லுவதுடன் நிறுத்திக்கொள்ளாமல், அதே தத்துவ உண்மையை எதிர்மறையாகவும் பகவான் சொல்லுகிறார். ஒருவர் நாம் செயல் புரிவதில்லை' என்ற உறுதியில் நிலைக்கவில்லை (அயுக்த) என்றால், செயல்களின் பயனை எதிர்பார்க்கும் ஆவல் ஒருவருக்குப் போகவில்லை என்றால், அவர் எதிர்பார்க்கும் பயன்களே அவருக்குத் தளைகள் ஆகின்றன என்று கிருஷ்ணர் கூறுகிறார். குறிப்பிட்ட ஒரு மருந்தை அளவோடு உபயோகித்தால் நோய் குணமாகிறது. ஆனால் அதையே அளவுக்கு மீறி உபயோகித்தால் அது ஒருவரைக் கொன்று விடுகிறது. தூக்கம் வரவில்லை என்பதற்காக ஒருவர் ஒன்றிரண்டு மாத்திரைகளைப் போட்டுக்கொள்கிறார். ஆனால் அதே மாத்திரைகளைப் பெரும் அளவில் விழுங்கிவிட்டால், செத்தேபோய் விடுகிறார். பாதுகாத்துக் கொள்வதற்கு உபயோகமாக இருக்கும் வாள் ஒன்று தற்கொலை செய்து கொள்வதற்கும் காரணமாகிறது அல்லவா?

அதைப்போலவே, வெளியுலகத்தில் நாம் புத்திசாலியாக நடந்து கொள்ளவில்லை என்றால் என்ன ஆகிறது தெரியுமா?

மகிழ்ச்சியும், உள்ள நிறைவும் பெறுவதற்கு பதிலாக, மேலும் பல தளைகளில் அகப்பட்டுக் கொண்டு முடிவிலாக் காரிருளில் ஆழ்ந்து தத்தளிக்கிறார். இதன் காரணத்தை கிருஷ்ணர் மிக அழகாக விளக்குகிறார். சில குறிப்பிட்ட பலன்களைப் பெறவேண்டு மென்பதற்காக எதிர்காலக் கோரிக்கை அமைப்புக்களில் நமது மனம் சிக்கிவிடுகிறது. எதிர்காலம் பற்றிய கற்பனையை ஒட்டி நமது வாழ்க்கையை ஒரு பற்றுதலுக்கு உள்ளாக்கிக் கொள்ளு கிறோம். ஒரு தவளை, எருதுபோல் ஆகவேண்டுமென்று நினைத்து முயற்சித்தால், அது நிச்சயமாக அழிந்து போகும். வரையறை களுக்கு உட்பட்ட மனித உள்ளம், எதிர்கால அமைப்பை நிர்ண யிக்க முயற்சிப்பதும் அது மாதிரிதான்.

ஸர்வ கர்மாணி மனஸா
ஸன்யஸ்யாஸ்தே ஸுகம் வஸீ
நவத்வாரே புரே தேஹீ
நைவ குர்வன் ந காரயன் 5:13

எல்லாச் செயல்களையும் மனத்தால் துறந்து, முழுமையான சுய கட்டுப்பாட்டுடன் ஒன்பது—வாயில் நகரத்தில் ஆனந்தமாக இருந்துவரும் தாமும் வேலை செய்வதில்லை; (உடல், புலன்கள் போன்ற) மற்றவைகளையும் இயக்குவிப்பதில்லை.

உடலால் எவ்வித வேலையும் செய்யாமல் உட்கார்ந்திருப்பது அல்ல சன்னியாசம். உபயோகமில்லாத வேலைகளிலிருந்தும் பொருள்களிலிருந்தும் மனதை ஒரு சன்னியாசி உள்ளுக்கிழுத்துக் கொள்கிறான். ஒருவன் சன்னியாசியா, அல்லவா என்று அவனுடைய மனப்போக்கை வைத்தே சொல்லமுடியும்; வெளித் தோற்றத்தைக் கொண்டு சொல்லமுடியாது. தமது புலன் வேட்கைகளை எல்லாம் முற்றிலும் அடக்கி, அகந்தை மையச் செயல்களையும், கோரிக்கைகளிலிருந்து எழும் வேலைகளையும் அறவே துறந்து, சுய கட்டுப்பாட்டுடன் இருக்கும் ஒருவருக்கு விவரிக்க இயலா ஆனந்தமும் அமைதியும் உண்டாகிறது. 'ஒன்பது வாயில் நகரத்தில்' அவன் ஆனந்தமாக இருக்கிறான்.

தீவிர இறைநாட்டம் கொண்ட ஒருவருடைய உடல் ஒன்பது வாயில்கள் உள்ள ஒரு நகரமாகச் சித்தரிக்கப்பட்டிருக் கிறது. இந்தப் பிரபல உருவகம் உபநிடதங்களிலிருந்து எடுத் தாளப்பட்டிருக்கிறது. மதில் சுவர்களால் சூழப்பட்ட ஒரு நகரம் இந்த உடல். இதற்கு ஒன்பது வாயில்கள் இருக்கின்றன. அவற்றில் ஏழு, முகத்திலேயே இருக்கின்றன. (இரு கண்கள், மூக்கிலுள்ள துளைகள் இரண்டு, இரு காதுகள், வாய் ஆகியவை) பாலுறுப்பும், மலம் வெளியேறும் இடமும் மற்ற இரண்டு வாயில்கள். இவற்றில் பெரும்பான்மையானவை வேலை செய்யா விடில் உயிருடன் இருக்கமுடியாது. ஒரு அரசன் தலைநகரத்தில்

இருந்து, மந்திரிகள் மூலம் ஆட்சி புரிகிருன். அவர்களுக்கு அதிகாரமும் ஊக்கமும் வருவது அரசன் இங்கு இருப்பதனுல் தான். அதைப்போல உடலில் தங்கியிருப்பதைத் தவிர ஆன்மா வேறு எதுவும் செய்வதில்லே. ஆனுல் அது இருப்பதால்தான், ஞான கர்ம இந்திரியங்கள் இயங்குகின்றன. அவற்றிலுள்ள 'உயிர்' தத்துவத்தை ஆட்சிபுரிவது ஆன்மா எனும் அரசனே.

இப்பிரபல உருவகத்தை கிருஷ்ணர் இங்கு உபயோகிக் கிருர். சுய கட்டுப்பாட்டுடன் வாழும் ஒருவர், தமது தூய தெய்வீக வாழ்வு காரணமாக விவரிக்க முடியாத ஆனந்தத்தை அனுபவித்து வருகிருர். சடப் பொருளான தமது அங்க அவயவங் கள் செய்யும் வேலேகளே எல்லாம் இடைவிடாது கவனித்து வரு கிருர்!

இப்படி இடையரு ஆன்ம உணர்வுடன் திகழும் ஒருவர், தமது பொருளுறுப்புக்கள் செய்யும் வேலேகளில் பற்றுதல் கொள்வதில்லே, அவற்ருல் பாதிக்கப்படுவதுமில்லே. அமைதியாக அவர் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிருர். அவர் வேலே செய்வதுமில்லே, செய்விப்பதும் இல்லே.

மேலும்,

நகர்த்த்ருத்வம் ந கர்மாணி
லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு:
ந கர்ம பல ஸம்யோகம்
ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே 5:14

செயலேயோ, அதைச் செய்யும் பொறுப்பையோ இறைவன் உலகத்திற்குப் படைத்துக் கொடுக்கவில்லே. செயல்களின் பயனேப்பெறுவது என்பதும் அவனுடைய ஏற்பாடு அல்ல. இயற்கையே செயல் புரிகிறது.

வேதங்களின் சடங்குப் பகுதிகளில் கடவுள் எல்லாவற்றிற் கும் மேம்பட்ட அறிவொளியாகவும், எல்லாம் வல்ல இயக்க சக்தியாகவும் சித்தரிக்கப்படுகிருர். நமது செய்கைகளேயெல்லாம் அவர் கூர்ந்து கவனித்து, ஒவ்வொருவருக்கும் அவரவர்களுடைய செய்லுக்குத் தகுந்தவாறு வெகுமதியளித்து வருவதாக அப்பகுதி கள் கூறுகின்றன. ஆனுல் இங்கு கடவுள் எப்படி இருக்கிருர் என்று கூறப்படவில்லே. அவருக்கும் பிரபஞ்சத்திற்கும் உள்ள உறவு மட்டும் விவரிக்கப்படுகிறது.

செயல் புரியும் பொறுப்புணர்ச்சியைத் தோற்றுவித்தவர் பரம் பொருள் அல்லர். எவ்வித நடவடிக்கைகளேயும் மேற் கொள்ளுமாறு அவர் எவருக்கும் அதிகாரமளிக்கவில்லே.

ஒவ்வொரு செயலுக்கும் தகுந்த பயனைத் தேடி எடுத்துக் கொண்டு வந்து தரும் வேலையும் அவருக்கு இல்லை. வேதத்தில் கூறியுள்ள இறைத் தத்துவம் பற்றிப் பேசும்போது, கடவுள் 'கர்ம பலன்களை அளிப்பவர்' என்று விளக்கவுரை ஆசிரியர்கள் கூறியிருப்பது எவ்வளவு தவறு என்று பகவானுடைய சொற்களே எடுத்துக் காட்டுகின்றன. பரம் பொருளின் இயல்பும், இயக்கமும் பற்றி அர்ஜுனனுக்கு விளக்க முயற்சிக்கிறார். அதோடு ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களுக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு பற்றியும் விளக்குகிறார்.

செயல், அதன் பயன் ஆகியவைகளுக்கும், கடவுளுக்கும் சம்பந்தமில்லை என்றால், நமது வாழ்க்கைக்கும் அவருக்கும் சம்பந்தமில்லை என்று பொருள் படுகிறது. ஏனெனில் செயல், செயலிலிருந்து வரும் பயன்—இவையில்லாமல் வாழ்க்கையே இல்லை. ஆனால் இவை மட்டும் ஆன்மா இல்லாமல் தனித்திருக்க முடியுமா? அதுவும் முடியாது. ஆன்மா இல்லையேல் வாழ்க்கையே இல்லை. எனவே ஆன்மாவுக்கும், ஆன்மாவல்லாத மற்றொன்றுக்கும் இடையில் ஏதோ ஒரு உறவு இருந்துதான் ஆக வேண்டும். இந்த அதிசயமான 'தொடர்பற்ற தொடர்பு' இங்கு விளக்கப்படுகிறது.

மூக்கு தானாகவும் ஆடுவதில்லை. மற்றவர்கள் பிடித்து ஆட்டினாலும் ஆடுவதில்லை. ஆனால் சில நாட்களுக்கு முன் ஒரு பாத்திரத்திலிருந்த தண்ணீரில் நான் எட்டிப் பார்த்தபோது என்ன நடந்தது தெரியுமா? எனது மூக்கும், காதுகளும், பெட்டி மூடியைத் திறந்து மூடுவது போல பக்கவாட்டில் ஆடிக் கொண்டிருந்தன. என் மூக்கு ஆடவில்லை என்று எனக்குத் தெரிந்தே போதிலும் அது ஆடுவதை நான் கண்ணால் பார்த்தேனே, தண்ணீரின் அசைவுக்கு ஏற்ப என் மூக்கின் நிழலும் ஆடிற்று. இதே போல ஆன்மா செயல் புரிவதில்லை. செய்விப்பதும் இல்லை. பொருட்படலங்களின் வரையறைகளுக்கு உள்ளிருக்கும் அந்த ஆன்மா—அகந்தை—ஒருவருடைய உடலுறுப்புக்கள் வேலை செய்யும் போது, தான் செயல் புரிவதாகவும், செயலின் பயனை அனுபவிக்க வேண்டுமென்றும் நினைக்கிறது.

மின்சாரம் ஓட்ட இயல்பற்ற ஒரு சக்திதான். ஆனால் அதை உற்பத்தி செய்து, சேமித்து, விநியோக அமைப்புக்களின் மூலம் அனுப்பப்படும்போது அதன் தன்மை மாறுகிறது. என் அறையிலுள்ள மின் முனைகளில் தொடர்பு ஏற்படுத்தி விசிறியுடன் இணைத்துவிட்டால், விசிறி சுழல்கிறது. அசைவிலாத் தன்மையுள்ள சக்தி ஓடும் அல்லது ஓட்டும் சக்தி பெறுகிறது. பொருள் சாதனங்களின் மூலம் ஆன்மா இயங்கும்போது, அப்படியே செயல்புரிபவன், செயல், பயன் முதலிய பல்வகை அகந்தை

மையப் போக்குகளை தனது ஆன்மாவைப் பெற வைக்கிறான்.

செயல் புரிவதும், அதன் பயனை அனுபவிக்கத் துடிப்பதும் அகந்தையே தவிர, ஆன்மாவல்ல. பாத்திரத்திலுள்ள நீர் ஆடும் போது அதில் தெரியும் நிழல் ஆடுகிறதே தவிர, நான் ஆடவில்லை. சுபாவம் என்பதை இயற்கை அல்லது மாயை என்றும் சொல்லு கிறார்கள். சுபாவத்தின் நிர்ப்பந்தத்திற்கு உள்ளாகும் போது தான் ஆன்மா தனக்கு செயல்புரியும் தன்மையை ஏற்றுக்கொள் கிறது. 'தெய்வீக மாயை மூன்று குணங்களினால் தோன்றுவது,' என்று பகவானே அதை மாயை என்று குறிப்பிடுகின்றார்.

ஆனால் அவருடைய சுத்த சுயம்பிரகாச நிலையை எடுத்துக் கொண்டால் செயல், பயன் போன்றவைகளுடன் அவருக்கு எவ்வித சம்பந்தமுமில்லை.

நாதத்தே கஸ்ய சித்பாபம்
நசைவ ஸுக்ருதம் விபு:
அஜ்ஞானேனாவ்ருதம் ஜ்ஞானம்
தேன முஹ்யந்தி ஜந்தவ: 5:15

இறைவனைப் பொறுத்தவரை அவருக்கு நற்செயலும் இல்லை. பாவமும் இல்லை. ஞானத்தை அறியாமை சூழ்ந்து கொண்டிருப்ப தால் மக்கள் மருட்சிக்கு உள்ளாகிறார்கள்.

எங்கும் நிறைந்த 'விபு'க்கு மக்கள் செய்யும் பாவ புண்ணி யங்களைப் பற்றிக் கவலையே இல்லை என்று இங்கு கூறப்படுகிறது. பாவ, புண்ணியங்கள் பட்டியலாகத் தயாரித்து ஐந்தொகை கட்டும் சாமிகளையும், தேவதைகளையும் பற்றி நமது புராணங்கள் கூறுவதற்கு நேர்மாறான கருத்து இது. கதை கேட்கும் பக்தர் திருக்கூட்டம் இதைப் போன்ற பகுதிகளை கீதையில் படித்தும், திடுக்கிட்டு உட்கார்ந்து விடுகிறார்கள். கீதையை உள்ளே வைத்துப் பூட்டிவிட்டு, கிருஷ்ணருடைய பெருமையைக் காட்டும் கதைகளைப் படிப்பதுடன் நிறுத்திக் கொள்கிறார்கள். ஆகாயத் தில் எங்கோ உட்கார்ந்துகொண்டு, புவியில் மனிதர்கள் செய்யும் தீய செயல்களையும், நற்கருமங்களையும் கண் கொட்டாமல் கவனித்து கடவுள் கணக்கெழுதி வருவதாகவும், நீதி வழங்கும் நாளன்று அந்தப் பரம பிதாவின் முன்னிலையில் நின்று ஒவ்வொரு வரும் தத்தம் கணக்கில் பதிவாகியுள்ள செயல்களுக்கு ஏற்ற பரிசையோ, தண்டனையையோ பெற்றுக்கொள்ளுகிறார்கள் என்றும் கூறும் கதைகளை எல்லாம் அறிவு முதிர்ச்சியில்லாத, பாமர மக்களே நம்புவார்கள்.

உயிரியக்கத்திற்கே அடிப்படையாக உள்ள நித்திய சக்தி, படைக்கப்பட்ட, தோற்ற மறைவுகளுக்கு உட்பட்ட எல்லா

உயிரினங்களின் நடவடிக்கைகளையும் கவனித்து குறிப்பெழுதிக் கொண்டிருக்கிறார் என்று நினைத்துப் பார்ப்பதுகூட சற்று வேடிக்கையாக இருக்கிறது. எல்லையற்ற பொருளின் நிலையிலிருந்து நோக்கும்போது வரையறைகளுக்கு உட்பட்டுள்ள இனங்கள் இருக்குமிடமே தெரியாது. அவை இல்லையென்றே சொல்லிவிடலாம். தன்னியல்பை மறந்து, செயல் புரிபவன், செயல், பலன் என்றும் பரம்பொருள் பிரிந்து நிற்கும் போதுதான் அது தன்னையே தெரிந்து கொள்ளுகிறது. மாசற்ற கண்ணாடியாக இருந்தால் சூரிய ஒளி அதன் மூலமாக தங்கு தடையின்றி உள்ளே வருகிறது. ஆனால் பட்டைக் கண்ணாடியில் விழும் சூரியக் கிரணங்கள் ஏழு வண்ணக் கதிர்களாகப் பிரிந்து வெளியாகின்றன. அவ்வாறே ஞானத்தின் மூலம் வெளிப்படும் ஆன்மாதான் எங்கும் ஊடுருவி நிற்கும் இரண்டற்ற ஒரே பரம் பொருள். அதே ஆன்மாவை அறியாமை மூலம் (உடல், மனம், அறிவுக் கருவிகளின் மூலம்) நோக்கும் போது, அதுவே பன்மைத் தோற்றம் காட்டும் உலகமாக நமக்குப் படுகிறது.

ஞானத்திற்கும் அறியாமைக்கும் உள்ள உறவு இங்கு விளக்கப்படுகிறது. அறியாமை இருக்குமிடத்தில் ஞானம் இருக்க முடியாது. ஞானம் பெற்ற பிறகு அறியாமைக்கு இங்கு இடமில்லை; ஞானத்தின் ஒரு சிறு பகுதியாகக் கூட அறியாமை இருக்க முடியாது. ஆனால் 'ஞானத்தை அறியாமை சூழ்ந்து கொண்டிருக்கிறது' என்று பகவான் இங்கு பேசுகிறார். அடர்ந்து இருண்ட காடு ஒன்று இருக்கிறதாக நினைத்துக் கொள்ளுங்கள். அதன் நடுவில் வெகு தொலைவில் ஒரு சிறு விளக்கு மினும் மினுக் கென்று தென்படுகிறது. இருள் சூழ்ந்த ஒன்று என்றுதானே அதைப் பற்றிக் கூறுகிறோம்? அதே முறையில்தான் கிருஷ்ணரும் பேசுகிறார். இந்த உறவும், ஞானத்தைக் கேவலம் ஞானமாகப் பிரித்துப் பார்க்கும் அவசியமும் அடுத்த செய்யுளில் விவரிக்கப்படுகின்றன.

பேருண்மையை உணர்ந்து கொள்வதற்குப் புதிதாக எவ்வித அறிவையும் உற்பத்தி செய்து கொள்ளவேண்டியதில்லை. இருக்கும் அறியாமையைப் போக்கிக் கொள்ளுவது ஒன்றுதான் வழி. தன் உண்மை இயல்பை மீண்டும் கண்டு கொள்ளுதலே இது. இதில் நாம் புதிதாக எதையோ சாதிக்கப் போகிறோம் என்று நினைத்தல் தவறு என்பதை அடுத்த செய்யுளில் வியாச மாமுனிவர் மிகத் தெளிவாகக் காட்டுகிறார்.

ஜ்ஞானேநது ததஜ்ஞானம்
யேஷாம் நாஸித மாத்மன:
தேஷாமாதித்ய வத் ஜ்ஞானம
ப்ரகாஸயதிதத்பரம் 5:16

ஆன்ம ஞானத்தில் அறியாமை அழிக்கப் பெறுபவர்களுக்கு அந்த ஞானம் கதிரவனைப்போல் ஒப்பிலா மெய்ப்பொருளை (பிரம்மனை)க் காட்டுகிறது.

அறியாமை (அவித்யை)ச் சுவர்கள் குறுக்கே நிற்பதன் காரணமாக, சாதாரண மனிதர்கள் தங்களிடமேயுள்ள ஆன்மாவை உணர முடியவில்லை. ஞானத்தினுல் இவ்வறியாமைத் திரையை விலக்கியவரே ஆன்ம உணர்வை பெற்றவராகிருர். ஒரு விளக்கை ஏற்றியவுடன் இருள் கொஞ்சம் கொஞ்சமாக மறைவதில்லை. உடனடியாக, முற்றிலும் அகன்று விடுகிறது. அந்த இடம் எவ்வளவு நாட்களாக இருளில் மூழ்கியிருந்த போதிலும், எவ்வளவு அடர்ந்த இருளாக இருந்த போதிலும், ஒளி வந்த கணமே அது மறைந்து விடுகிறது. ஆன்மஞானம் பெற்ற ஒளி தோன்றியவுடன், தொன்றுதொட்டு இருந்து வரும் அறியாமை கூட ஒரு மின்னல் தோன்றி மறையும் நேரத்தில் மறைந்து விடுகிறது. அகந்தை மையக் கருத்தைப் படைப்பது அறியாமையேதான். உடல், மனம், அறிவு ஆகியவற்றினுல் அந்த அகந்தை உரம் பெறுகிறது. அறியாமை அகன்றவுடன், அகந்தையும் அழிந்து, நேரடியாகப் பரம்பொருள் அனுபவம் தோன்றுகிறது.

ஜீவாத்மா வேறு, ப்ரமாத்மா வேறு என்று த்வைத' கொள்கையுடையவர்களுக்கு இந்த இடத்தில் பெரும் சிக்கல் தோன்றுகிறது. குழப்பத்தில் ஆழ்ந்து போய் அவர்கள் உட்கார்ந்து விடுகிருர்கள். அகந்தை போன்ற அனுபவக் கருவிகள் மனிதர்களிடம் இருப்பது அவர்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது. புலன்கள், மனம், அறிவு முதலிய உறுப்புக்களும், அகந்தையும் அடியோடு அழிந்து போனபிறகு—அதாவது அனுபவிப்பவர்கள் இல்லாத போன பிறகு—ஆன்மாவை அனுபவிப்பது யார், எது? இந்தக் கேள்வி த்வைதக் கொள்கை உடையவர்களைத் திகைப்புறச் செய்துவிடுகிறது. புத்திசாலிகளாக உள்ள எல்லோருக்குமே இத்தகைய சந்தேகம் நிச்சயமாக ஏற்படும். கிருஷ்ணரே இதை எதிர்பார்த்து, அப்பிரச்னையை இங்கு விளக்குகிருர். அகந்தை முடிந்தவுடன் பரம்பொருள் பற்றிய ஞானம் சுயம்பிரகாசமாக விளங்குகிறது என்று கூறுகிருர்.

சிந்திக்கும் கருவியாகிய அறிவைக் கொண்டு இதை விளக்க முடியாமல் போகலாம். ஆனுல் 'சூரியனைப் போல்' என்ற உவமையிலிருந்து அந்த அனுபவ நிலையை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது. சில நாட்களுக்கு, மழைக் காலத்தில் நாம் சூரியனைப் பார்க்க முடியவில்லை. ''மேகங்கள் கவிந்து கொண்டு சூரியனை மறைத்து விட்டன'' என்று சொல்லுகிருேம்.

நாம் கூறிய சொற்களைப் பற்றி நாமே மீண்டும் சிந்தித்துப் பார்த்தால், சின்னஞ் சிறுமேகம் சூரியனை மறைத்து விடமுடியாது என்பது நமக்கே விளங்குகிறது. மேகம் நமக்கு வெகு அருகில் இருக்கிறது. சூரியனோ வெகு வெகு தொலைவில் பிரபஞ்ச மையமாக பிரகாசம் குன்றாமல் ஈடு இணையற்று ஒளிவீசிக் கொண்டிருக்கிறான். சின்னஞ்சிறு உலகத்தில் கடுகு போலுள்ள மனிதன், மிகச் சிறிய கண்களினால் பார்த்துவிட்டு ஜாஜ்வல்லியமாகப் பிரகாசிக்கும் மாபெரும் ஒளிப் பிழம்பை ஒரு மேகத் துண்டு கப்பி விட்டதாக நினைக்கிறான். கண்ணுக்கு முன் ஒரு விரலை வைத்துக் கொண்டு இமய மலை கூட மறைந்து விட்டது என்று சொல்லலாமல்லவா?

இதைப் போலவே அகந்தை (ஜீவன்) பரமாத்மாவைப் பற்றி நினைக்கும் பொழுது, அறியாமை, அந்த எல்லையில்லாப் பொருளைக் கப்பி மறைத்து விட்டது என்று கருதுகிறது. மேகங்கள் சூரியனில் இல்லை. அவ்வாறே அஞ்ஞானமென்பது பேருண்மையில் இல்லை. எல்லையற்று எங்கும் பரந்திருக்கும் பேருண்மைப் பொருளுடன் ஒப்பிடும் போது அறியாமை சிறியது, வரையறைகளுக்கு உட்பட்டது. ஆயினும் சுய இயல்பை மறந்த நிலை ஒரு பனிப் படலத்தைப் போல் இதயவெளிகளில் பரவி நிற்பதால், ஆன்மிகப் பேருண்மையை அறியாமை மறைத்து விட்டதென்ற தவறான கருத்து அகந்தைக்கு வருகிறது. இந்த அஞ்ஞானத்தை அகற்றியவுடன், ஆன்மீகப் பேரொளி தங்கு தடையின்றி வீசுகிறது. மேகங்கள் அகன்றவுடன் சூரியவொளி தானாகவே வீசுவதைப் போலத்தான் இதுவும்.

கதிரவனைக் காண்பதற்கு விளக்கு ஒளி தேவை இல்லை; ஆன்மாவை அனுபவிக்க வேறு எந்த அனுபவமும் தேவையில்லை. ஆன்ம சுத்த சுயம்பிரகாசமான ஞான உணர்வு கேவலம் ஞான நிலை. அப்பேருணர்வை உணருவதற்கு வேறொரு உணர்வு நமக்கு வேண்டியதில்லை. அறிவை அறிவதற்குப் பேரறிவைத் தவிர வேறு வேண்டியதில்லை அல்லவா? ஏதோ ஒன்றைத் தெரிந்து கொள்ளும் இயல்பே அறிவு. எனவே, தான் ஆன்மாவே என்ற உண்மையை அகந்தை மீண்டும் அறிந்து கொண்டதும், அது ஆன்மாவாகிறது.

கனவிலிருந்தவன் விழித்தெழுந்தவுடன் 'கனவும் உண்மையல்ல, அதில் எனக்கு இருப்பதாகத் தோன்றிய இயல்பும் உண்மையல்ல' என்று ஒருவன் தெரிந்து கொள்ளுகிறான். ''விழித்த நிலையில் இதோ இப்போது இருந்து கொண்டிருப்பவனே உண்மையான நான்'' என்று மறுபடியும் தன்னைத்தானே கண்டு கொள்ளுகிறான். விழித்துக் கொண்டிருந்தவன் உண்மையானவன் அல்லன் என்று கனவு காண்பவனுக்குத் தோன்றுவதில்லை. கனவில் இருப்பவன் கனவுலகைத் தாண்டிய வேறு ஒரு

வகை விழிப்பு நிலையில் இருக்கும் தோற்றம் பெறுகிறுன். அகந்தையின் நிலையும் அதுதான். மருட்சியுற்ற அகந்தை அறியாமையிலிருந்து மீண்டு உண்மையான உணர்வு நிலையை அடையும் போது, தானே ஆன்மா என்ற பேருணர்வு பெறுகிறது. அகந்தைக்கும் ஆன்மாவுக்கும் உள்ள இவ்வுறவு; தன்னை ஆன்மா வாக அகந்தை கண்டு கொள்வதற்கு ஒருவர் கையாள வேண்டிய முறை—இவற்றை இந்த உவமை மிக அழகாக சுட்டிக் காட்டு கிறது. சிந்திக்கத் தெரிந்தவர்களுக்கு இந்த உவமானத்தின் சிறப்பு மிகத் தெளிவாக விளங்கும். இறைப் பேருண்மையில் வேரூன்றிய ஒரு ஞானிக்கு பிறப்புமில்லை, இறப்புமில்லை.

தத் புத்தய ஸ்ததாத்மான:
தந்நிஷ்டாஸ்தத்பராயணு:
கஸ்சந்த்ய புனராவ்ருத்திம்
ஜ்ஞான நிர் தூத கல்மஷா: 5:17

புத்தியை அதில் லயிக்கச் செய்து, தாமே அதுவாகி அதிலேயே வேரூன்றி, அதையே தங்களுடைய பரம இலட்சிய மாகக் கொண்டவர்கள், ஞானத்தினுல் பாவங்கள் எல்லாம் நீக்கப் பெற்று மீண்டும் திரும்பி வருதலில்லா இடத்தை அடை கிருர்கள்.

தமது பல்வேறு நிலைகளிலிருந்து ஒரு சாதகர் பேருண் மையைப் பற்றிக் கற்றறிந்து ஒரு முடிவுக்கு வந்த பிறகு, தாம் பெற்ற தெய்வ அறிவுக்கு இசைய வாழத் தொடங்குகிருர். அவரு டைய அறிவு அக் கருத்துக்களிலேயே ஊறி விடுகிறது. அவரு டைய மனத்தில் எழும் ஒவ்வொரு உணர்ச்சியும் இறைவனை ஏத்தி இசைபாடும் கீதமாக அமைகிறது. தமது உண்மை இயல்பு பேரானந்தமே என்பதை உணர்ந்து அதில் திளைக்கும் விருப்பத் தில் கண்ணும் கருத்துமாக இருக்கிருர். ஆன்மானுபவம் பெறும் இலட்சியம் ஒன்றுதான் அவர் உள்ளத்தில் மேலோங்கி நிற்கிறது.

தமக்கு உள்ளேயே இருக்கும் ஆன்மீக உலகு பற்றிக் கற்றறிந்தவர், வெறுப்பு, விருப்பு மிக்க வெளியுலகத் தடுமாற்றங் களில் சிக்கிக் கொள்வாரென்று நினைக்க இடமில்லை. ஆன்மிகப் பெருநிலை பற்றிக் கற்பதில் பேரார்வம் காட்டுவதால் ஏற்படும் பயன் அது. இந்த அறிவின் அடிப்படையில் வாழ்க்கை நடத்துவதற்கான முயற்சிகளில் அவர் ஈடுபடுகிருர். அதிலிருந்து வரும் அதியுன்னத அனுபவங்கள் அவருக்குத் தமது இலட்சியத் தில் தளரா உறுதியை நிலை நாட்டுகின்றன.

ஆனுல் அவருடைய உள்ளத்தில் அகந்தை மீண்டும் தலை தூக்காதென்று எப்படி நிச்சயமாகக் கூறமுடியும்? அதற்கும் இங்கு காரணம் கூறப்பட்டிருக்கிறது. அவர்கள் மனதிலுள்ள

மாசு ஞானத்தினுல் அகற்றப்படுகிறதென்று பகவான் கூறுகிருர். வாசனைகளே அகந்தைக்கு உரமிட்டு வளர்க்கும் மாசு. 'இறை யுணர்வுக்குத் தடையாக இருக்கும் அறியாமை' பற்றித் தத்துவ நூல்கள் பேசும் போது, இந்த வாசனைகளையே குறிப்பிடுகின்றன. அறியாமையைப் போக்கும் மருந்து அறிவு ஒன்றுதான். ஆன்மிக அறிவு உதித்தவுடன் அகந்தையும் அகலுகிறது. காரணம் இல்லை என்ருல் விளைவுகளும் இல்லை. அகந்தைக்குக் காரணமானவை மறைந்து விடுவதால் அகந்தை மீண்டும் தலையெடுக்க வகை யில்லை.

மாந்தருடைய பரிணும வளர்ச்சிக்கு இவ்வளவு நம்பிக்கை யூட்டும் தத்துவம் வேறு எதுவுமில்லை. நாமே ஆன்மா என்ற உண்மையை நாம் இறுதியாக அறிந்து கொள்ளமுடியும் என்பது மட்டுமல்ல இவ்வளர்ச்சிக்குக் காரண சக்தி தன்னைத்தானே பூர்த்தி செய்து கொள்கிறது என்றும் இத்தத்துவம் முழக்கம் செய் கிறது. வளர்ச்சியின் இறுதி லட்சியம் இறையுணர்வு பெறுவதே. வளர்ச்சியின் முயற்சிகள் எல்லாம் ஒப்புயர்வற்ற இந்நிலையை நோக்கியே செல்லுகின்றன. அதே சுயவளர்ச்சி பெறுவதற்குத் தான் அகந்தையும், தானே படைத்துக் கொண்ட வரையறை களுக்கு உட்பட்டு நிறைவு பெருத நிலையில் திகைத்துக் கொண்டிருந்தது.

ஞானத்தினுல் ஆன்மிக அறியாமை அகற்றப் பெற்றவர்கள் எவ்வாறு பேருண்மையைக் காண்கிருர்கள்?

வித்யாவினயஸம்பன்னே ப்ராம்ஹணே கவி கஸ்தினி
ஸுனிசைவ ஸ்வபாகேச பண்டிதாஸமதர்ஸின: 5:18

கல்வியும், எளிமையுமிக்க பிராம்மணனையும், பசுவையும் யானையையும், புலையனையும், நாயையும்கூட ஞானிகள் சமமாகப் பார்க்கிருர்கள்.

விவேகிகளுக்கு எல்லா இடங்களிலும் பரம்பொருளே காட்சியளிக்கிருர். கடலுக்கு எல்லா அலைகளும் ஒன்றுதான். ஒரு அலையிடம் ஓரளவு உணர்ச்சியும், மற்ருென்றிடம் சற்று அதிக உணர்ச்சியும் அது காட்டுவதில்லை. ஒரு நகையில் தன்னுடைய மதிப்பு அதிகமென்றும், மற்ருென்றில் தன் மதிப்பு குறை வென்றும் தங்கம் நினைப்பதில்லை. மண்ணைப் பொறுத்தவரை எல்லாப் பானைகளும் அதற்கு ஒன்றுதான். அகந்தையற்ற மனிதன், தான் கடவுள் என்று உணர்ந்த பிறகு, பெயர்களையும் உருவங்களையும் கொண்டு வெளியுலகப் பொருள்களைப் பாகு படுத்திப் பார்க்க முடியாது. குடத்திலிருந்தாலும் குவளையிலிருந் தாலும் தண்ணீர் தண்ணீர்தானே? நம் கண்ணில் படுவது குடம்,

குவளை என்ற பாத்திரங்கள். மனிதரில்கூட சிலர் உயரம் சிலர் குட்டை. சிலர் சிவப்பாக இருப்பார்கள். சிலர் கருப்பு. மனமும் அறிவும் அவ்வாறே மாறுகின்றன. ஆனால் உயிரினங்கள் எல்லாவற்றிலுமுள்ள உயிர் ஒன்றுதான்.

எனவே ஆன்ம உணர்வு பெற்ற ஞானியைப் பொறுத்தவரை சிறப்பாகக் கல்வி பயின்று எளிய வாழ்வு நடத்தும் பிராம்மணனும் பசுவும், யானையும், நாயும், புலையனும் ஒன்றுதான். பாத்திரங்கள் வெவ்வேறு உருவத்திலிருந்தாலும், அவற்றிலுள்ள நீர் மாறுபடாததைப்போல, எல்லோரிடமும் எல்லா உயிரினங்களிலும் பரம்பொருள் இருப்பதை விவேகிகள் காண்கிறார்கள்.

ஒருவர் ஆன்ம உணர்வு பெற்றவரா, இல்லையா என்பதை இச்சம நோக்கை வைத்து எடை போட்டு விடலாம். நிறைவு பெற்றவர் தமது விருப்பு வெறுப்புக்களைக் கொண்டு பாகுபாடுகள் செய்ய மாட்டார்கள். எல்லா உருவங்களிலும் எல்லா நிலைகளிலும், தம்மிடமுள்ள ஆன்மிகப் பொருளே வெவ்வேறு தோற்றம் கொண்டிருக்கிறதென்று கருதுவார்கள்.

இச் செய்யுளுக்கு விளக்கவுரை கூறுகையில் சங்கரர் கௌதம ஸ்மிருதியை மேற்கோள் காட்டுகிறார். யார் மரியாதைக்குத் தகுந்தவர்களோ அவர்களுக்கு மரியாதை காட்டாமலிருப்பது பாவம். யார் மரியாதைக்குத் தகுதியில்லாதவர்களோ அவர்களுக்கு மரியாதை செய்வதும் அதைப் போன்ற பாவமே என கௌதம ஸ்மிருதி கூறுகிறது. *

இக் கொள்கையைக் கொண்டு பார்த்தால் பிராம்மணனுக்குச் சமான மரியாதையை ஒரு நாய்க்குக் கொடுப்பதும், நாய்க்குச் சமமானவன்தான் ஒரு பிராம்மணனும் என்று கூறுவதும்—இரண்டுமே பாவந்தான் என்று தோன்றலாம். ஆனால் இப்போது தாம் கூறியதில் பாவமொன்றுமில்லை என்று விளக்குவதற்காக பகவான் பின்வருமாறு கூறுகிறார். அதில் ஏன் பாவமில்லை என்றால்,

இஹைவ: தைர்ஜித: ஸர்கோ
யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன:
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரம்ஹ
தஸ்மாத் ப்ரஹ்மணிதேஸ்திதா: 5:19

சமத்துவத்தில் மனத்தை உறுதியாக ஊன்றிக் கொண்டவர்கள் இங்கேயே (இவ்வுலகிலேயே) பிறவித் தளைகளை நீங்கப் பெறு

---

* கௌதமர் கழகம்–XVIII, 20

கிறுர்கள். பிரம்மன் சமத்துவத்திஞல் நிறைவு பெற்றது. எனவே அவர்கள் பிரம்மனில் நிலேத்தவர்கள்.

சாத்திரங்களின் சாராம்சம் முழுவதுமே இந்த ஒரு செய்யுளில் அடங்கியிருக்கிறது. தமது கருத்தை விவரித்து வரும்போது, முந்திய செய்யுட்களில் கூறிய தெய்வ அனுபவத்தை இறந்த பிறகுதான் அடைய முடியுமென்று யாராவது நினைத்தால், அது முட்டாள்தனமென்று முதலில் கிருஷ்ணர் நிருபித்தாக வேண்டும். வாழ்வின் இலட்சியமும், ஆன்மிக முயற்சிகளின் நோக்கமும் எங்கோ ஆகாயத்திற்கு அப்பாலுள்ள சொர்க்கத்தை அடைவதே என்று இந்து மதப் புராணங்களும், வேறு சில மதங்களின் புனித நூல்களும் கூறுகின்றன. சிந்திக்கும் இயல்புள்ளவர்களுக்கு இது அழகான கற்பனைத் தோற்றம்போல தோன்றுகிறதே ஒழிய, நிச்சயமான பயன் பெறும் வழியாகத் தோன்றவில்லே. அதை மனப்பூர்வமாக உற்சாகத்துடன் முயற்சித்துப் பார்க்கவேண்டுமென்ற ஆவலேத் தூண்டுவதில்லே.

நிச்சயமற்றதாகத் தோன்றும் இக் கருத்துக்குப் பதிலாக, நமது முனிவர்களும், ஞானிகளும், ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அனுபவித்துக் கூறும் வேதாந்த உண்மையை கிருஷ்ணர் இங்கு விண்டு வைக்கிறுர். நாம் தீவிரமாக முயற்சித்தால், இச்சிறு அகந்தையை ஒரே கணத்தில் முடித்துக் கட்டிவிட்டு, தனது உண்மையான தன்மையை அறிந்து ஒவ்வொரு மனிதனும் தெய்வநிலே அடையலாம் என்று அவர் திட்டவட்டமாகச் சொல்லுகிறுர். இறந்த பிறகு அந்த நிலேயை அடையலாமென்று அவர் கூறவில்லே. இதே வாழ்வில், இதே உடலுடன், இவ்வுலகில் இருந்து கொண்டே மனிதன் தெய்வீக இயல்பு பெறலாமென்று அறிவிக்கிறுர். அகப் பண்பாட்டுக்கு வழியின்றி, அகந்தை நிலேயில் உழன்று கொண்டிருக்காமல், இப்புவியிலேயே இறையுணர்வு பெற வாய்ப்பிருக்கிறது என்று பகவான் பேசுகிறுர்.

ஒப்புயர்வற்ற அந்நிலேயை அடையும் தகுதி யாருக்கு வருகிறது? அதைப் பெறுவதற்கான இரகசியம் என்ன? இவ் வாழ்விலேயே ஆன்ம உணர்வு பெறலாம் என்று செய்யுளின் முதலாவது வரியில் கூறுவதுடன் நிறுத்திவிடாமல், அதைப் பெறுவது எப்படி என்பதையும் அடுத்த வரியில் கிருஷ்ணர் விளக்குகிறுர். சம நோக்குடன் எல்லாவற்றையும் பார்க்கும் மனம் யாரிடம் நிலேயாக இருக்கிறதோ, அவர் பரிபூரண அமைதி பெற்று ஒரு தெய்வ மனிதனுக இவ்வுலகில் வாழ்கிறுர் என்று அறிவிக்கப்படுகிறது.

பதஞ்சலியின் 'யோக சூத்திர'த்தில் இதே கருத்தை வேறு வார்த்தைகளில் பொதித்திருக்கிறது. * சிந்தனைப் போக்குகளின் காரணமாக மனதில் திடீர் திடீரென்று ஏற்ற தாழ்வுள்ள பல எண்ணங்கள் தோன்றுகின்றன. அதைப் போன்ற சிந்தனைப் போக்குகளைத் தடுத்து நிறுத்திவிட்டால், அப்புறம் மனம் என்ற ஒன்றே இருக்காது. ஒருவன் தன்னை இக்குறுகிய அகந்தையாக நினைத்துச் செயல்படுவதற்கு அவனுடைய மனந்தான் காரணம். எனவே மனம் முடிவடைந்தவுடன் அகந்தையும் அகன்று விடுகிறது. அதோடு அகந்தைமைய 'சம்சார' அடிமைத்தனமும் ஒழிகிறது. சம்சாரமென்ற துயரச் சூழலிலிருந்து விடுபட்ட அகந்தை, தான் அழிவற்ற ஆன்மா என்பதை மீண்டும் கண்டு கொள்ளுகிறது. மனம் உறுதியான சமநிலை பெற்றாலொழிய, இச் செய்யுள் கூறும் 'சமதர்சி'யின் 'சமத்துவம்' ஒருவருக்கும் கிட்டாது.**

மனத்தை வென்று எல்லா நிலைகளிலும் அமைதியுடன் வாழ்பவர் 'பிரம்மனில் நிலைத்திருக்கிறார்' என்று கிருஷ்ணர் அழுத்திச் சொல்லுகிறார். முதல் தடவையாக இச் சொற்களைக் கேட்பவர்கள், 'இது சற்று முரண்பாடாகத் தோன்றுகிறதே' என்று நினைக்கலாம். எனவே அதையடுத்து, 'ஏனெனில் ஏற்ற தாழ்வுகள் இல்லாதவர் பிரம்மன். குறைவிலா முழுமை பெற்றவர்' என்றும் கிருஷ்ணர் சேர்த்துச் சொல்லுகிறார்.

எங்கும் ஊடுருவி நிற்கும் பிரம்மன், எல்லா இடங்களிலும் ஒரே தன்மை வாய்ந்தவராக இருக்கிறார். எல்லா நிகழ்ச்சிகளும் பிரம்மனில்தான் நடைபெறுகின்றன. ஆனால் பிரம்மனுக்கு எதுவும் நடந்துவிடுவதில்லை. எனவே அவர் மாற்றமில்லாதவராகவும், எங்கும் ஒரே தன்மை கொண்டவராகவும் என்றென்றும் விளங்குகிறார். ஆற்றில் நீர் ஓடுகிறதே தவிர, ஆற்றுப் படுகையும் சேர்ந்து ஓடுவதில்லை. அடிப்படையின் தன்மை எப்போதும் மாறா நிலையில் இருப்பது. அவ்வடிப்படை மீது எழுந்த மற்றவை மாறும். தன்னை, உடலுடன் ஒன்று படுத்திக் கொண்டு, ஒரு மாறும் பொருளாக நினைக்கும் வரை உலகத் தொல்லைகள் அவரை பாதிக்கும். ஆனால் அவருடைய ஆன்மாவாகிய அடிப்படை பொருள் எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை; ஒரே நிலையில் இருக்கிறது.

எந்த நிகழ்ச்சியும் கலக்கத்தை ஏற்படுத்தாத அளவுக்கு ஒருவர் அமைதி பெற்றவராக இருந்தால், அவர் முற்கூறிய அடிப் பொருளை நிச்சயமாக அனுபவித்தவராகத்தான் இருக்க வேண்டும். அலைகளிடையில் தலை நீட்டிக் கொண்டிருக்கும் கோரைப் புல்லைத்தான் அவை இப்படியும் அப்படியும் அசைந்

* 'யோகாச் சித்தவ்ருத்தி நிரோத:'—பதஞ்சலி
** 'சமத்துவம் யோக உச்யதே' என்று கீதை 2—45ல் கூறியிருப்பது காண்க.

தாடச் செய்கின்றனவே தவிர, பாறை மீது கட்டிய கலங்கரை விளக்கத்தை எதுவும் செய்ய முடிவதில்லை. மிக வேகமாக வந்து மோதும் அலைகூட அதன் காலைத் தொட்டு வணங்கிவிட்டு பேசாமல் திரும்பி விடுகிறது. மாற்ற அலைகளால் பாதிக்கப்படுவது இவ்வுடல் மட்டுமே. ஆனால் அவ்வாறு பாதிக்கப்படாமல் இருக்கும் ஒருவர் நிச்சயமாகத் தன்னுள் இறை அனுபவம் பெற்றுவிட்டவராகவே இருப்பார்—'பிரம்மனில் அவர் நிச்சயமாக நிலை பெற்றவரே' என்று கிருஷ்ணர் கூறுவது முற்றிலும் தர்க்க உறுதி பெற்றதாக இருக்கிறது.

ஆன்மாவாகிய பிரம்மன், எங்கும் ஒரே தன்மையுடன் எவ்வித நிறைகுறைகளுக்கும் இடமின்றி விளங்குவதால்,

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய
நோத்விஜேத் ப்ராப்யசாப்ரியம்
ஸ்திரபுத்திரஸம்மூட:
ப்ரஹ்மவித் ப்ரஹ்மணிஸ்தித: 5:20

மருட்சிகள் நீங்கப் பெற்று அறிவுறுதி பெற்ற பிரம்ம ஞானி பிரம்மனில் நிலைத்து விடுவதால் இன்ப அனுபவங்களினால் ஆனந்திப்பது இல்லை, துன்பம் வரும்போது துயரப்படுவதுமில்லை.

கைதேர்ந்த ஓவியக் கலைஞன், தான் வரைந்த தலை சிறந்த சித்திரத்தை மீண்டும் மீண்டும் அணுகி மேலும் மேலும் அழகு கூட்ட விரும்புவதுபோல், கிருஷ்ணரும்கூட அர்ஜுனனுடைய உள்ளத்தில் தாம் தீட்டிய சித்திரத்திற்கு மேலும் சில விவரங்கள் சேர்த்து மேலும் சிறப்புறச் செய்கிறார். உறுதியாகச் சமநிலை பெற்று நிறைவுற்ற ஒருவருடைய உள்ளத்தை முழுமையாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஒரு சாதாரண மாணவனுக்குக் கூடப் புரியும் வகையில் தமது சித்திரம் தெளிவாகவும், விரிவாகவும் இருக்க வேண்டுமென்பதற்காகப் பல செய்யுட்கள் மூலம் அதை விளக்குகிறார். இன்னும் குழம்பிய நிலையிலேயே இருந்து வரும் அர்ஜுனன், ஒரு நிறைவுபெற்ற மனிதனைப் பற்றி நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று மிக உற்சாகத்துடன் இச் செய்யுளில் அதைப் பற்றிப் பேசுகிறார். முழுமை பெற்றவன் கங்கைக் கரையில் உட்கார்ந்திருக்கும் கையாலாகாத கற்சிலை அல்ல. சம காலத்திய மக்களிடையில் தனது செல்வாக்கு பரவும் படிச் செய்து அவர்களைச் சரியான முறையில் உருவாக்கும் வேகமும், விறுவிறுப்பும் அவனுக்கு உண்டு.

நிகழ்ச்சிகளினால் மட்டும் ஒருவன் பரபரப்பு அடைவதில்லை, சோர்வடைவதும் இல்லை. அவனுக்கும் அந்நிகழ்ச்சிகளுக்கும் உள்ள தொடர்பினால்தான் மகிழ்ச்சிப் பரபரப்பும், துயரச் சோர்வும் வருகின்றன. இந்த நகரத்தில் யாரோ ஒருவர் இறந்து

விட்டார் என்றால், உடனே நான் மூர்ச்சையடைந்து விழுந்து விடுவதில்லை. ஆனால் அப்படி இறந்தது என் தந்தையாக இருந்தால், அதை மிகப் பெரிய இழப்பாக நினைத்து நான் பதைபதைக்கிறேன். இதிலிருந்து என்ன தெரிகிறது? ஒருவருடைய சாவு என்ற நிகழ்ச்சியை மட்டும் தனியாக எடுத்துக்கொண்டால், என் உள்ளத்தில் அது கலக்கத்தை ஏற்படுத்துவதில்லை—என் மனம் காலமானவருடன் ஏற்கனவே ஒரு உறவை ஏற்படுத்திக் கொண்டிருந்தாலொழிய.

எனவே மனத்தை வென்று, எல்லையற்ற ஆன்ம உணர்வில் திகழும் பெருந்தகை ஒருவர் இன்ப அனுபவங்கள் நேரும்போது ஆனந்திப்பதுமில்லை துன்ப நிகழ்ச்சிகளினால் துக்கப்படுவது மில்லை. இப்படிச் சொல்லுவதிலிருந்து முழுமை பெற்ற பெரியோர் வெறும் மரக்கட்டைபோல், இரும்புத் தூணைப் போல், வெளியுலகத்தில் நடக்கும் நல்லவை கெட்டவைகளைப் பற்றி அக்கறையே இல்லாமலிருப்பார்களென்று நினைத்து விடக் கூடாது. உண்மையில் உள்ளப் பண்பு பெற்றவர் தனது அமைதிச் சமநிலையை அவ்வளவு சுலபமாகச் சீர்குலைய விடமாட்டார்; அந்த அளவுக்கு அவர் விவேகம் பெற்றவர் என்றுதான் இதற்குப் பொருள்.

இவ்வாறு அதியற்புத மன உறுதி பெற்ற ஒருவரை அலசி ஆராய்ந்து பார்த்தால், வெளியுலக நிலையோ, நிகழ்ச்சிகளோ அவருடைய உள்ளக் கோயிலின் வாயிலைக் கூட மிதிப்பதில்லை என்பதை சுலபமாகக் கண்டு கொள்ளலாம். அகந்தை மையத்திலிருந்து வழக்கமாக எழும் தவறான கருத்துக்கள் அவருக்கு இல்லையாததால், அந்த நஞ்சு அறிவில் கலப்பதில்லை. ஆகையால் அவருடைய அறிவு உறுதியாக ஒரே இலட்சிய நிலையில் நிற்கிறது. கருத்துக்களை இந்தச் செய்யுளில் எடுத்துரைத்து வரும் வரிசைக் கிரமத்தில் இருந்தே ஒரு சிறந்த உண்மை வெளியாகிறது. நல்லவை கெட்டவை போன்றவற்றினால் பாதிக்கப்படாதவர் 'அறிவுறுதி பெற்றவர்'. அறிவுறுதி பெற்றவர், ''எல்லா மருட்சிகளும் நீங்கப் பெற்றவர்''. மருட்சிகள் அகன்று அறிவுறுதி பெற்றவர் ''பிரம்மனை அறிந்தவர் பிரம்மனாக ஆகிறார்.'' ஆகையால் பிரம்மப் பேருணர்வாகிய பரவச நிலையில் வேரூன்றியவராக வாழ்ந்து வருகிறார். இவ்வுலகம் தெய்வங்களின் இருப்பிடமாக அவருக்குத் தோன்றுகிறது. எப்போதும் தெய்வ மனிதனாக அவர் இங்கு நடமாடுகிறார்.

மேலும் பிரம்மனில் நிலைத்து—

பாஹ்யஸ்பர்ஸேஷ்வ ஸக்தாத்மா
விந்த்தத்யாத்மநி யத்ஸுகம்
ஸ ப்ரஹ்மயோக யுக்தாத்மா
ஸுகமக்ஷய மஸ்னுதே 5:21

வெளித் தொடர்புகளில் தனக்குள்ள பற்றுதலைக் கைவிட்டவன் ஆன்ம இன்பம் பெறுகிறான். பிரம்மனையே தியானித்த வண்ணம் இருப்பவனுக்கு முடிவற்ற ஆனந்தம் கிட்டுகிறது.

போதிய மனப் பக்குவம் இல்லாதவர்களுக்கு இதற்கு முன் செய்யுளைப் படித்தால், ஆன்மிக வாழ்வு பற்றித் தவறாக நினைக்க இடமிருக்கிறது. உலக ஆசா பாசங்களில் பங்குகொள்ள முடியாதவாறு நெஞ்சைக் கல்லாக்கிக் கொள்ளுவதும் சமநிலை, சமநிலை என்று ஓயாமல் சொல்லிக் கொண்டு உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காமலிருப்பதும்தான் வேதாந்தம் போலிருக்கிறது என்று சிலர் எண்ணி விடலாம். நம்மில் பலர் ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டு இந்த மாதிரி வேதாந்தம் நமக்கு வேண்டாமென்று உடனே விடை பெற்றுக் கொள்ளலாம். நாம் காணும் வெளியுலகத்தில் எத்தனையோ குறைபாடுகள் இருக்கின்றன. உள்ளுலகும் பல விதங்களில் இடைஞ்சல்கள் செய்து கொண்டிருக்கலாம். ஆனால் இவ்விரு உலகுகளுக்கு இடையிலும் தொடர்பு ஏற்படும் போது இன்பச் சுடர்கள் மின்னி எழுகின்றன என்பதை யார் மறுக்க முடியும்? சமநிலை, அமைதி, இறைநிலை என்று சொல்லுகிறார்களே, அப் பெயர்களுக்காக இப்போது கிடைக்கும் சிறிதளவு இன்பத்தையும் உதறித் தள்ளிவிட்டு கல்லாக ஆகிவிட வேண்டுமா? அழகான அந்தப் பெயர்களுக்காக உணர்ச்சியற்ற வாழ்வு நடத்திக் கொண்டிருக்க வேண்டுமா? இவ்வாறு சிலர் நினைக்கிறார்கள்.

இது கற்பனையாக, மிகைபடுத்திக் கூறப்படும் உதாரணமல்ல. உண்மையில் சில சாதகர்கள் இப்படிப் பேசுகிறார்கள். சிறந்த அறிவாளிகள் ஆன்மிக முயற்சிகளில் இறங்கும் போது, 'இதனால் பயனோ, வெற்றியோ கிடைக்குமா? என்று சிந்திப்பதில் வியப்பு ஒன்றுமில்லை. அது இயற்கையே. பண்பட்ட ஒரு குரு இவர்களைப் போன்ற மாணவர்களுக்கு திருப்திகரமான பதிலளித்தால்தான், அவர்களுடைய உள்ளத்தில் எழும் சந்தேகங்கள் நீங்கி உறுதி பெறுவார்கள். மிகச் சிறந்த ஆசானாகிய கிருஷ்ணர் இச்செய்யுளில் அதைப் போன்ற ஐயப்பாடுகளுக்கு பதிலளிக்கிறார்

வெளியுலகப் பொருள்களுடன் தொடர்பை முற்றிலும் அறுத்துக் கொண்டவன் ஆன்மப் பேரின்பத்தைத் தன்னிடம் காண்கிறான் என்று அவர் கூறுகிறார். பற்றுதலைத் துறத்தலே சுயவளர்ச்சி பெறும் முறை. அதைத் துறந்தவர்கள் எதுவுமில்லா சூனிய நிலையை அடைவதில்லை. பயனற்ற பொய் உறவுகளையும், பற்றுதல்களையும் கைவிட்ட பிறகு உண்மை மதிப்புக்கள் நமக்குப் புலப்படுகின்றன. கனவிலிருந்து விழித்த ஒருவன், கனவு உலகத்தில் தனக்கு இருந்ததாகத் தோன்றிய சுபாவம் தவறு, பொய் என்று கண்டு கொள்ளுகிறான். அவனுடைய கனவு ஆளுமையைக் கைவிட்ட பிறகு வெற்று வெளியில், வெறும் சூனியத்தில்

இருக்கும் உணர்ச்சியா அவனுக்கு வருகிறது? சுபாவமான தனது 'விழிப்பு நிலையில்' மேலும் சிறப்பாகவும் விறுவிறுப்பாகவும் இருப்பதை மீண்டும் கண்டு கொள்கிறுன் அல்லவா?

அம்மாதிரியே உடல், மனம், அறிவு ஆகிய கருவிகளைக் கொண்டு வெளியுலகப் பொருள்களுடன் நாம் ஏற்படுத்திக் கொள்ளும் உறவுகள் அகன்றவுடன், தெய்வ உணர்வு என்ற இன்பச் சூழ்நிலையில் நாம் விழித்தெழுகிறோம். நிரந்தரமான ஆன்மிகப் பேரின்பத்தின் அருமை அப்போது நமக்குத் தெரிகிறது. அறிவையும், மனத்தையும் அகநோக்கில் அமர்த்தி, ஆழ்ந்து பிரம்மனை இதயத்தில் தியானிக்கும் கொஞ்ச நேரத்திலேயே ஒரு சாதகர் பிரம்மானந்தத்தை அனுபவிப்பது தெரிகிறது. அறிவதற்கும் அனுபவிப்பதற்கும் நாம் உபயோகிக்கும் உட்கருவிகளையே, 'இதயம்' என்று பொதுப்படையான சொல் இங்கு குறிப்பிடுகிடது.

பொருளுலகிலிருந்து பின்கண்ட காரணத்திற்காகவும் கூட ஒருவர் தமது பலன்களை உள்ளிழுத்துக் கொள்ள வேண்டும்.

யேஹி ஸம்ஸ்பர்ஸஜா போகா
துக்க யோனய ஏவ தே
ஆத்யந்தவந்த: கௌந்தேய
ந தேஷு ரமதே புத: 5:22

(புலன் பொருட்) தொடர்புகளால் தோன்றும் இன்பங்களெல்லாம் பிறகு துன்பத்திற்கே காரணமாகின்றன. ஏனெனில் அவற்றிற்குத் தொடக்கமும் முடிவும் உண்டு. அவற்றைப் பெறுவதால் விவேகமுள்ளவர்கள் மகிழ்ச்சியுறுவதில்லை, குந்தியின் புதல்வனே!

சாதகர்கள் என்ற முறையில், நாம் வெளியுலகத் தொடர்புகளைத் துறந்து, ஆன்ம இயல்பாகிய எல்லையற்ற பேரானந்தத்தை அனுபவிக்க முயற்சிக்கிறோம். தோற்ற முடிவுகளுக்கு உட்பட்ட பொருட்களில் இன்பம் காண முயற்சிப்பது பயனற்ற வேலை என்பதை சாதாரண அறிவுள்ளவர்கள்கூட தங்களுடைய அனுபவங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பொருளாதார நூல்களில் 'பயன் குறைவு விதி' பற்றிப் பேசுகிறார்கள். அது நம் அனுபவங்கள் எல்லாவற்றிற்குமே பொருந்தும். முதலில் இன்பமாக இருக்கும் பொருள், வெகு விரைவில் துன்ப ஊற்றாக மாறி விடுகிறது. முதலாவது லட்டு மிகச் சுவையாக, மிக இன்பமூட்டும் பொருளாக இருக்கிறது. ஆனல் இருபத்தைந்தாவது லட்டு உள்ளே போனவுடன் ஆபத்தும் வந்துவிடுகிறது. இதைத்தான் பொருளாதாரத்தில் 'பயன் குறைவு விதி' என்று குறிப்பிடுகிறார்கள். புலனின்பங்கள் தொடக்கத்திலிருந்தே தொல்லைகளின்

ஊற்றுக்காலாக இருக்கின்றன என்ற உண்மைக்கு நடைமுறை உலகில் இது ஒரு நல்ல உதாரணம்.

நகரங்களின் இருண்ட சந்துகளில், தங்களுடைய தொழுநோயை மேல்பூச்சுக்களாலும் பவுடர்களாலும் மூடி மறைத்து வண்ணச் சேலைகளுடன் வந்து நிற்கும் வேசியர் எவ்வளவு அழகோ, அவ்வளவு அழகாக இருக்கும் புலன் பொருள்கள், அவர்கள் அளிப்பதைப் போன்ற இன்பத்தையே அளிக்கின்றன. கிருஷ்ணர் இதையே வெகு அழகாக அர்ஜுன னுக்கு எடுத்துக் காட்டி, 'புலன் பொருள்களும், அவை அளிக்கும் இன்பமும் தோன்றி மறையும் தன்மையுள்ளவை. ஆதலால், விவேகமுள்ளவர்களை அவை கவருவதில்லை'' என்று கூறுகிறார்.

முடிவற்ற ஒன்றுதான் மதியுள்ள மனிதனுக்கு மனத் திருப்தி யளிக்கிறது. வரையறைக்கு உட்பட்ட ஒன்று நமக்குக் கிடைக்கும் போது, ''இதற்கு அடுத்தது இதைவிட இன்பகர மாக இருக்கும்படி முயற்சி செய்ய வேண்டும் என்ற துடிப்பு எழு கிறது. புலனின்பப் பாதையில் இவ்வளவு எண்ணற்ற முயற்சிகளை நாடிச் செல்லுமாறு இக் கீழ்த்தரமான ஆவல் நமக்கு சவுக்கடி கொடுத்துக் கொண்டே இருக்கிறது—ஒரு படு குழியிலிருந்து மற் றொரு படுகுழியில் விழுந்து கடைசியில் நாமே சக்தியற்று ஓயும் வரை இந்த ஆவல் துரததிக் கொண்டிருக்கும். ஆனால் முந்திய செய்யுளில் கூறிய ஆன்மானுபவம் பெறும்போது தூய, முழுமை யான, தெய்வீகப் பேரானந்தம் நிரந்தரமாகக் கிடைக்கிறது.

ஆனால் அந்த ஆனந்தப் பாதையினைப் பின்பற்றும் போது ஒரு பயங்கர எதிரி குறுக்கிட்டு, நமது முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டை போடுகிறது. இதை எதிர்த்து சமாளிப்பது மிகவும் கஷ்டம். எல்லாத் தீமைகளுக்கும் அடிப்படையாக இருப்பது இதுவே. இதை முறியடிக்க மிகப் பெரிய முயற்சிகள் அவசியம் என்று பகவான் கூறுகிறார்:

ஸக்நோதி ஹைவய: ஸோடும்
ப்ராக் சரீர விமோக்ஷணாத்
காமக்ரோதோத்பவம் வேகம்
ஸயுக்த:ஸஸுகீ நர: 5:23

கோரிக்கையினாலும், கோபத்தினாலும் தனக்கு வரும் ஆவேசங்களைத் தடுத்து நிறுத்திவிடும் வல்லமை பெற்றவன், இங்கு (இவ்வுலகில்) இருக்கும்போதே, உடலிலிருந்து விடுதலை அடையுமுன்னரே, இன்பம் மிக்கவனாகிறான், ஒரு யோகியாகி றான்.

உற்சாக மிகுதியினால், முழுமைபெற்ற மனிதனைப் பற்றியும், அவனுடைய உள்ளப்பாங்கு பற்றியும் தாம் கூறியவற்றைக்

கேட்டவர்கள், ''அடேயப்பா! யார் இப்படியெல்லாம் இருக்க முடியும்?'' என்று மனந்தளர்ந்து விடலாமென்று கிருஷ்ணருக்கே தோன்றுகிறது. திரும்பிய திசைகளில் எல்லாம் தொல்லைகளும், கலக்கமுமே தோன்றும் இவ்வுலகில் கிருஷ்ணர் கூறியதைப் போன்ற நிலையை எட்டுவது பற்றிக் கனவு கூட காண முடியாது என்று பயந்து பின்வாங்கி விட்டால், நடைமுறையில் பின்பற்ற முடியாத ஒரு தத்துவம், மிகச் சிறந்த கவிதை நயம் பெற்ற இலட்சியமாக இருக்கலாமே தவிர, மனிதனை ஒரு படி உயர்த்து வதற்குக் கூட அது பயன்படாது.

எனவே தமது கொள்கை கடைப்பிடிக்க முடியாததல்ல என்று கிருஷ்ணர் இங்கு எடுத்துக் காட்டுகிறார். வாழ்க்கையை சீர்படுத்திக் கொண்டால், இவ்வுலகிலேயே இவ்வாழ்க்கை யிலேயே, எல்லோரும் பரிபூரண ஆனந்தத்தை அனுபவிக்கலாம் என்று உறுதி கூறுகிறார்.

என் முப்பாட்டனார் பிரபல வயலின் வித்வான். அவர் வாசித்து வந்த வயலினை இன்று வரை வீட்டில் பத்திரமாகப் பாதுகாத்து வைத்துப் பூஜை செய்கிறார்கள். எனக்கும்கூட அது கொஞ்சம் வாசிக்கத் தெரியும். ஒரு நாள் திடீரென்று எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று. எனது முப்பாட்டனாரின் வயலினை எடுத்து வாசிக்கத் தொடங்கினால் நானும் பெரிய வித்வானாகி விடலாமே என்று நினைத்தேன். ஆனால் அதை உடனே எடுத்து உபயோகிக்கத் தொடங்கினால், அதிலிருந்து நல்ல சங்கீதம் வராது. முதலில் அதை எடுத்து தூசி தட்டி, சுத்தம் செய்ய வேண்டும். தந்திகளை மாற்ற வேண்டும். பிறகு சுருதி சேர்த்து வில் போட்டுப் பார்த்தால், அதிலிருந்து நான் விரல் வைப்பதற்கு இசைவான இன்னிசை வரும். அதைப் போலவே தெய்வீக இசை எழுப்பும் நமது மன—அறிவுக் கருவியைப் பல்லாயிரம் ஆண்டுகள் தூசி படிய விட்டுவிட்டோம். அதை மீண்டும் துடைத்துத் தூய்மையாக்கி உபயோகித்தால் அற்புத ஆன்ம கீதத்தை அதி லிருந்து கேட்கலாம்.

அவ்வாறு நமது அகக் கருவியைச் சுருதி கூட்டி இசைக்கும் முறையை கிருஷ்ணர் இங்கு விளக்கி வைக்கிறார். இச் செய்யுள் சுருக்கமாகவும், இனிமை ததும்புவதாகவும் இருப்பதால், அதனு டைய உட்பொருளை நாம் சில சமயங்களில் மறந்து விடுகிறோம். ''வேட்கை, சினம் ஆகிய இரண்டையும் கட்டுப்படுத்தி விடு. அப்படிச் செய்தால் இவ்வுலகிலேயே இறப்பதற்கு முன்னரே நீ யோகியாகி விடுகிறாய். உன் வாழ்க்கை இன்பமயமாக இருக்கும்'' என்பது கேட்பதற்கு எளிமையாகத் தோன்றுகிறது.

பிராய்டு போன்றவர்களின் நூல்களையும் ''செயல்விளக்க இயல்'' போன்றவற்றையும் நுனிப்புல் மேய்ந்துவிட்டு வரும் தற்

கால மாணவர்களுக்கு இக் கொள்கை விஞ்ஞான பூர்வமாக இல்லாததைப் போல் தோன்றும். ஆனால் இச் செய்யுளை ஆராய்ந்து பார்ப்பவர்களுக்குத்தான் இதிலுள்ள சிந்தனைச் செறிவு தெரியவரும்.

மாபெரும் பனிமலை சருக்கிக் கொண்டு கீழே பள்ளத்தாக்கை நோக்கி வருவதைப்போல நமது அறிவிலிருந்து எண்ணற்ற வேட்கைகள் மலையாக வருகின்றன. வெளியுலகில் ஆசை காட்டி நிற்கும் பொருள்களை நோக்கி அவை விரைந்து வந்து கொண்டிருக்கின்றன. இப்படி அசைந்து, புரண்டு வரும் சிந்தனை மலைக்குக் குறுக்கே ஏதோ ஒன்று தோன்றினால் அதன் வேகமெல்லாம் அந்த முட்டுக் கட்டை மீது தாக்கிக் 'கோபம்' என்ற உணர்ச்சியாகி நாற்புறமும் சிதறுகிறது. நம் உள்ளக் கலக்கத்திற்குக் காரணமாக இருப்பவை இந்த வேட்கையும், கோபமும்தான். கோரிக்கை அதிகமாக இருக்குமிடத்து, கோபமும் அதிகமாகிறது.

மகிழ்ச்சி, துயர உணர்ச்சிகளை வென்று, வெளியுலகப் பொருள்கள் மீது பற்றுதலை ஓரளவு கைவிட்டவருக்கு எவ்வித கோரிக்கைகளும் இருக்க முடியாது. கோரிக்கை இல்லாத இடத்தில் வெறுப்பு தலைகாட்ட இடமில்லை. கட்டுப்படுத்துவதற்கு மிகக் கஷ்டமான வலிலை மிக்க இந்த இரண்டையும் ஒருவன் முறியடித்து வெற்றி பெற்று விட்டால், ஆயிரமாயிரம் குறைபாடுகள் நிறைந்த இவ்வுலகில் அவன் ஆனந்த வாழ்க்கையில் திளைக்கும் சுதந்திரத் தனி மனிதனாகத் திகழ்கிறான்.

ஒருவன் ஆன்மிக வளர்ச்சி பெறுவதன் மூலம் கோரிக்கையையும் வெறுப்பையும் துறந்துவிடக் கற்றுக்கொண்டால் இவ்வுடலிலிருக்கும்போதே, இவ்வளவு பொருள்களுக்கும் இடையிலிருந்து கொண்டே, இந்த உலகத்திலேயே, இவ்வாழ்க்கையிலேயே பூரண ஆனந்தத்தை அனுபவிக்கலாம் என்று அர்ஜுனனுக்கு கிருஷ்ணர் உறுதியளிக்கிறார். 'இது அர்ஜுனனுக்கு மட்டுமல்ல, காலத்தைக் கடந்து நிற்கும் இப்புனித நூலைப் படித்துப் பயன் பெற விரும்பும் எல்லோருக்கும் அளிக்கப்படும் உறுதி இது.

பிரம்மனை அடைபவரின் தன்மை எப்படி இருக்குமென்று கிருஷ்ணர் அடுத்து விளக்குகிறார்.

யோந்த: ஸுகோந்தரா ராம
ஸ்ததாந்தர் ஜ்யோதிரேவய:
ஸயோகீ ப்ரஹ்ம நிர்வாணம்
ப்ரஹ்மபூ தோதி கச்சதி 5:24

தன்னுள்ளேயே இன்பம் கண்டு தன்னுள்ளேயே பெரு மகிழ்ச்சியை அனுபவித்து, உள்ளொளி திகழ யாரொருவர்

இருக்கிறரோ அந்த யோகி, தாமே பிரம்மனுகி, பரிபூரண விடுதலே (மோட்சம்) பெறுகிறர்.

இன்பத்திற்காகவும் சந்தோஷமடைவதற்காகவும் மற்றெல் லாரும் வழக்கமாகச் செல்லுமிடத்திற்கு முழுமை பெற்றவர்கள் செல்லுவதில்லே. இதற்கு முன்னுள்ள மூன்று பாட்டுகளில் கிருஷ்ணர் கூறியதிலிருந்து அது தெளிவாகிறது. உடல் சேர்க்கை இன்பத்தையோ உணர்ச்சிக் குதூகலங்களேயோ, சிந்தனேக் கவர்ச்சிகளேயோ நிறைவு பெற்ற ஒருவர் நாடுவதில்லே. அவற்றை எல்லாம் துறந்து விருப்பு வெறுப்புக்களே முறியடித்து, இவற்றிற்கு அப்பால் உயர்ந்து நிற்கும் மகிழ்ச்சிமிக்க உலகை ஒரு யோகி அடைகிறர். அவர் பெறுவதே உண்மை இன்பமென்று கிருஷ்ணர் இங்கு தெரிவிக்கிறர்.

அவர் கூறுவதைப் போன்றுள்ள ஒரு யோகிக்கு தாம் மகிழ்ச்சியுடனிருக்கும் உணர்ச்சி இருக்காது என்றே தோன்று கிறது. மற்றவர்களே மகிழவைக்கும் எல்லா சாதனங்களேயும் அவர் புறக்கணிவ்து விட்டவர். அவருக்கு புறத் துறையில் உள்ள நிறைவு அளிப்பது எதுவுமில்லே. உணவு கொள்வதை நிறுத்தி விட்ட ஒருவன் சாப்பாட்டில் இன்பம் காண்பானென்று எதிர் பார்க்க முடியுமா?

எதுவுமில்லாத சூனியத்தில் மனிதன் திருப்தி அடைய மாட்டான். வாழ்க்கையின் போக்குக்கே அது மாறுபட்டது. இன்ப நிறைவு பெறுவதற்காகவே ஒவ்வொருவரும் தத்தம் துறை களில் முயற்சித்து வருகிறர்கள். மனிதன் மட்டுமல்ல, எல்லா உயிரினங்களும் அதைச் செய்து வருகின்றன. ''முற்றிலும் துன்ப மற்ற நிலே''யும் மனிதனுக்கு முழு திருப்தி அளிக்கும் உச்சக் கட்ட மாக இருக்க முடியாது. துயரம் இல்லே என்பதால் சுமையைச் சற்று இறக்கி வைத்ததைப் போன்ற உணர்ச்சி ஏற்படலாம். ஆனுல் அதுவே 'இன்ப நிறைவு' என்று கொள்ள முடியாது அல்லவா?

எனவே முந்திய மூன்று செய்யுட்களிலும் கிருஷ்ணர் உண்மையை மிகைப்படுத்திக் கூறுவதாக சிலருக்குத் தோன்ற லாம். அதற்காகவே, நிலேயாப் பொருள்களே நாடிச் செல்லும் வேலேயைக் கைவிட்டு, 'நான் அழிவில்லா ஆன்மா' என்பதை அகந்தை கண்டு கொள்ளும்போது ஒருவரிடம் தோன்றும் தெய்வீகப் பேரொளியை கிருஷ்ணர் படம் பிடித்துக் காட்டு கிறர். ஆன்மா, ஆன்மாவில் ஆன்மாவாக இருக்கும் அனுபவம் திட்டவட்டமானது, ஆனந்தமயமானது என்று அவர் அறிவிக்கி றர்.

ஒரு சாதகர் பற்றுதல்களேத் துறப்பதால் வெளியுலகப் பொருள்களிலிருந்து தன்னே உள்ளிழுத்துக் கொள்வதுடன்

ஆனந்தமும், பாதுகாப்பும் தன்னுள்ளே நிச்சயமாக இருக்கிறதென்ற உறுதியைப் பெறுகிறார். இந்த உள்ளின்பம் மின்னல் தோன்றி மறைவதைப்போல் எப்பொழுதோ ஒரு தடவைதான் நமக்கு உண்டாகும் என்று நினைத்துவிடக் கூடாது. அது தொடர்ந்து அனுபவிக்கக் கூடிய ஒன்று. முதிர்ச்சி பெற்ற சாதகர், இடையறாது முயற்சித்து வந்தால், இந்தத் தெய்வீக ஒளியில் மட்டற்ற மகிழ்ச்சியும், நிம்மதியும் அடைந்து மனநிறைவு பெறுவார் என்பதில் சந்தேகமில்லை.

அவருடைய உள்ளம் முழுவதும் பேருணர்வு மயமான தூய ஒளியில், மூழ்கியிருக்கும். அவருடைய இதயத்தில் அது தெய்வீக நந்தா விளக்காக எப்போதும் எரிந்து கொண்டே இருக்கும்.

வெளி உலகத்திலிருந்து முற்றிலும் தன்னை உள்ளிழுத்துக் கொண்டு, நினைத்த கணத்திலேயே அகப்பொருளில் இரண்டறக் கலந்து விடும் சக்தி பெற்ற அவர் பிரம்மனை அறிந்து பேரானந்தம் பெறுகிறார்.

மேலும்,

லபந்தே, ப்ரஹ்ம நிர்வாணம்
ருஷய: க்ஷீண கல்மஷா:
ச்சின்னத்வைதா யதாத்மான:
ஸர்வ பூதஹிதேரதா: 5:25

புலன்களை அடக்கியும், எல்லா உயிரினங்களின் நலன்களைக் கருதியும் வாழ்ந்துவரும் பெருந் தவத்தோர் தங்களுடைய பாவங்கள் நீங்கப்பெற்று, இருமைகளை அறவே ஒழித்தவர்களாகி, பரிபூரண விடுதலை (மோட்சம்) அடைகிறார்கள்.

ஆழ்ந்த தியான வாழ்வு நடத்திவரும் ஒருவர், புலனடக்கத்தினாலும், ஆன்ம நாட்ட உறுதியினாலும், தமது பாவ 'வாசனை'களைத் துடைத்தெறிந்து ஆன்ம இன்பம் பெறுகிறார். ஒருவர் தம்முடைய அகப் பொருளைக் காண முடியாதவாறு, பலவகை ஐயப்பாடுகளை எழுப்பி புகை மூட்டம் போடுவது இவ்வாசனைத் தடங்களே. அறியாமை என்பது மனக் கலக்கங்களை (விக்ஷேபம்)த் தவிர வேறு ஒன்றுமில்லை. உண்மை மறைக்கப்படும் நிலை (ஆவரணம்) அதிலிருந்து தோன்றுகிறது. இவற்றை அகற்றிய பிறகு தாம் ஆன்மா என்ற உண்மையை மீண்டும் ஒருவர் கண்டு கொள்கிறார். இவ்வாறு தம்மைத் தாமே அறிவதுதான் பரிணாம வளர்ச்சியின் இலட்சியம்.

வாழ்க்கையின் இலட்சியத்தை அடைந்துவிட்ட பிறகு, அவர் சந்தோஷமாக இந்த உடலைத் துறந்து பரம்பொருளுடன் இரண்டறக் கலந்துவிடும் நாள்வரை இவ்வுலகில் உள்ள

கடமைகள் என்ன? அவர் உணர்ச்சியற்ற கற்சிலை என்று பலர் நினைக்கிறார்கள். அது ஏதோ ஒரு பைத்தியம்—சும்மா ஊர் சுற்றிக் கொண்டிருக்கறது என்று வேறு சிலர் கருதுகிறார்கள். அவர் ஒரு வேளையாவது சாப்பிடுவதால் சமூகத்திற்கு அவர் சுமையாக இருக்கிறார். என்றும், எல்லா நம்பிக்கைகளையும் இழந்து நிற்கும் நோய்ச் சின்னமென்றும் அவரைப் பற்றிப் பேசுபவர்களும் உண்டு. ஆனால் வேதங்களும், இந்து முனிவர்களும் இவர்கள் நினைப்பதைப் போல் நடைபிணமாக வாழும் வாழ்க்கைக்கு வழி காட்டவில்லை.

ஆன்ம உணர்வு பெற்றவர் துக்கக் காட்சியளிக்கும் ஒரு விசித்திரப் பொருளல்ல. முன்னாடியே கட்டி வைத்துவிட்ட ஒரு சமாதியை நோக்கி அவர் ஊர்ந்து சென்று கொண்டிருக்கிறார் என்று நினைப்பதைவிட பெரிய தவறு வேறொன்றும் இருக்க முடியாது. அறியாமையினாலும், குழப்பத்தினாலும் வழி தவறிச் சென்றுவிட்டதை உணர்ந்து, இப்போது மெய்ப்பொருளின் அரண்மனைக்கு அவர் கம்பீரமாகச் சென்று கொண்டிருக்கிறார். அன்பெனும் அணையாத் தீயில் தம்மைத் தாமே அர்ப்பணித்துக் கொள்பவரே உண்மையான தீர்க்கதரிசி, நம் மதிப்பிற்குரிய மாமுனிவர். ஆன்மாவுக்கும், அதை மூடி மறைத்துக் கொண்டிருக்கும் ஆன்மா அல்லாத மற்றொன்றுக்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக் காட்டுவதற்கு அவர் இடைவிடாது முயற்சித்துக் கொண்டிருக்கிறார். இதைச் சுட்டிக்காட்டுவதற்காகத் தான் 'எல்லா உயிரினங்களின்' நலன்களைக் கருதி வாழ்ந்து' கொண்டிருப்பவர்' என்று பகவான் கூறுகிறார்.

இந்த 'லோக சேவை' முற்கூறிய மாமுனிவருக்கு ஒரு பொழுதுபோக்கு. தமக்குத்தாமே ஏற்படுத்திக் கொண்ட கடமை. நற்பணி என்ற புனிதத் தீயில் தமது உடல், மனம், அறிவு ஆகிய எல்லாவற்றையும் இட்டு வேள்விப் பொருளாக்கி விடுகிறார். உள்ளச் சமநிலை உறுதியுடனிருக்க அழியா மெய்ப் பொருளில், தெய்வீக உணர்வில் அம்மாமுனிவர் எப்போதும் திளைத்துக் கொண்டிருக்கிறார்.

அது மட்டுமல்ல:

காம க்ரோத வியுக்தானாம்
யதீனாம் யத சேதஸாம்
அபிதோ ப்ரஹ்ம நிர்வாணம்
வர்த்ததே விதிதாத்மனாம் 5:26

சுய கட்டுப்பாடு பெற்று கோரிக்கைகளையும் கோபதாபங்களையும் துறந்து, சிந்தனைகளை அடக்கி ஆன்ம அறிவு பெற்ற

துறவிகளுக்கு எல்லாப் பக்கங்களிலும் பரிபூரண விடுதலை (பிரம்மானந்தம்) நிலவுகிறது.

சைத்தானின் பேயாட்டம் மேலோங்கிநிற்கும் காலங்களில் தெய்வீக ஒளிபரப்பியும் இழிவாழ்வு நடத்தும் வேசியரை நல் வழிக்கு மீட்டும், அழுகியொழுகும் தொழு நோயினுல் அவதிப் படுகிறவர்களின் துயர் துடைத்தும் காரிருளும், குருட்டுத்தனங் களும் மிகுந்துள்ள இடங்களில் அறிவொளி பரப்பியும், உலகத் திற்கு ஆன்ம உணர்வை பெற்ற மகான்கள் பெரும்பணி செய்து வருகிருர்கள். இதனுல் அவர்கள் தெய்வ நிலையைக் கைவிட்டு விடுவதில்லை. நூற்றுக் கணக்கான நோயாளிகளுக்கிடை யிலிருந்து வேலை செய்யும் ஒரு டாக்டரை அந்த நோய்கள் ஒன்றும் செய்வதில்லை. அதைப்போலவே காமத்திலும், புலனின்பத்திலும் வேட்கையிலும் மூழ்கி வெறுக்கத் தக்க வாழ்க்கை நடத்துபவர்களை உயர்த்தும் பணியில் ஈடுபட்டுள்ள ஒரு ஞானியின் மீது அவரைச் சுற்றியுள்ள பாவ வாழ்க்கையின் காற்று கூடப் படுவதில்லை.

தம்மைச் சூழ்ந்துள்ள கொடிய கவர்ச்சிக்கு இரையாகாமல், மனச் சமநிலை பெற்ற மகான்கள் எப்படித் தப்புகிருர்கள் என்பது இங்கு விவரிக்கப்பட்டிருக்கிறது. உண்மையான சாதகர் சுய முயற்சிகள் மூலமாக எல்லா வேட்கைகளையும் வென்று உயர்ந்து விளங்குகிருர். காமம், கோபம் முதலிய உணர்ச்சிகள் அவரை அணுகுவதில்லை. உள்ளத்திலிருந்தும், வெளி உலகத்திலிருந்தும் வரும் கொடிய சக்திகளை ஒழித்த பிறகு எல்லா நிலைகளிலும் ஆன்ம உணர்வுடன் திகழுவது சுலபமாகிறது. எப்போதும் அவர் இன்ப நிறைவு பெற்று ஆனந்த வாழ்வு நடத்துகிருர்.

பெறற்கரிய பேரறிவு பெறுவதற்கு தியான யோகமே தலை சிறந்த மார்க்கம் என்பதனுல் அதை பகவான் சுருக்கமாக அர்ஜுனனுக்கு எடுத்துரைக்கிருர்:

ஸ்பர்சான் க்ருத்வா பஹிர் பாஹ்யாம்ஸ்
சக்ஷுஸ்சை வாந்தரே ப்ருவோ:
ப்ராணபானௌ ஸமௌ க்ருத்வா
நாஸாப்ப்யந்தர சாரிணௌ 5:27

யதேந்த்ரிய மனே புத்தி:
முனிர் மோக்ஷபராயண:
விகதேச்சாபயக்ரோத:
ய: ஸதா முக்த ஏவஸ: 5:28

27. வெளியுலகத் தொடர்புகளை (எல்லாம்) உள்ளே வரா மல் தடுத்து நிறுத்தி, பார்வையைப் புருவங்களிடையில்

(பார்ப்பது போல்) நிலைக்கச் செய்து மூக்கின் மூலம் உள்ளும் புறமும் போகும் மூச்சுக் காற்றைச் சமநிலைப்படுத்தி

28. புலன்கள், மனம், புத்தி ஆகியவற்றை (எப்போதும்) கட்டுப்படுத்தி, விடுதலையையே இலட்சியமாகக் கொண்டு, இச்சை, பயம், கோபம்—இவற்றையெல்லாம் அறவே துறந்த முனிவர் நிரந்தரமாக விடுதலை பெற்றவர்.

இரத்தினச் சுருக்கமான இவ்விரண்டு பாக்களில் அடுத்து நாம் கூறப்போகும் கருத்தை பகவான் சுட்டிக் காட்டுகிறார். பிரம்மவித்தை பற்றிய சம்ஸ்கிருத நூல்களின் மரபு இது. ஒரு அத்தியாயம் முடியும்போது அடுத்து அத்தியாயத்தில் வரப் போவதைக் குறிப்புணர்த்துவது வழக்கம்.

மேற்கண்ட இரு பாக்களில் முழுமை பெற்ற ஒருவருடைய சித்திரம் தெளிவாக வரைந்து காட்டப்பட்டிருக்கிறது. குறிக்கோளிருந்து அவரை அசைக்க முடியாது என்பதை இச் செய்யுட்கள் வலியுறுத்துகின்றன. வேதாந்த ஈடுபாடு கொண்டவர்கள் அதைப் போன்று தாங்களும் வாழ்க்கையில் முழுமை பெற விரும்புவார்கள். வெறும் இலட்சியக் கற்பனைகளுடன் அவர்கள் மனநிறைவு பெற்று விட மாட்டார்கள். வாழ்க்கையை பயனுள்ளதாகவும் விறுவிறுப்புள்ளதாகவும் செய்து கொள்ள விரும்புவது புத்திசாலிகளின் சுபாவம். நடைமுறை வாழ்க்கையில் நாம் கடைப்பிடிக்க முடியாத ஏட்டுச் சுரைக்காய்களில் அவர்களுக்கு அவ்வளவு ஆர்வம் இருப்பதில்லை. எவ்வளவு சிறந்த கருத்தாக இருந்த போதிலும், அது நடைமுறையில் கையாள முடியாததாக இருந்தால் அதை அவர்கள் கைவிட்டு விடுவார்கள். இதுவரை பல இடங்களில் கூறியுள்ளவாறு மனச் சமநிலை பெறுவது எப்படி? உண்மையான பல சாதகர்களின் உள்ளத்தில் இப் பிரச்னை தோன்றலாம். ஒரு சில வார்த்தைகளில் கிருஷ்ணர் அப்பிரச்னைக்கு பதிலளிக்கிறார். நாலு வரியில் சொல்லி முடிக்கிற விஷயமல்ல அது. விரிவாகவும் நுணுக்கமாகவும் அடுத்த அத்தியாயத்தில் அதைப்பற்றி பேசப் போகிறார். அதற்கு முன்னோடியாக இருக்கட்டுமென்று சில சிறு குறிப்புகள் மூலம் கோடிகாட்டிச் சொல்லுகிறார்.

வெளியுலகப் பொருள்கள் தாமாகவே வந்து நமது உள்ளத்தில் கலக்கமேற்படுத்துவதில்லை. இது ஏற்கனவே விவரிக்கப் பட்டதுதான். பொருள்களுடன் நாம் தொடர்பு கொள்ளும் போது வாழ்க்கையின் கலக்கங்களை நாம் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. கடற்கரையில் நாம் ஒதுங்கி நின்று கொண்டிருக்கும் போது அலைகள் நம்மை வந்து தொடுவதில்லை. நாமாகப் போய் அலைகளிடையில் தொடர்பு கொண்டு நிற்கும் போதுதான் அவை இப்படியும், அப்படியும் நம்மைத் தள்ளுகின்றன. உருவங்கள்,

ஒலிகள், சுவைகள், வாசனைகள், தொட்டுப் பார்ப்பது—இவை எல்லாம் பொருள்களை நம் உள்ளத்திற்குக் கொண்டு வருகின்றன. உள்ளம் கலக்கமடைகிறது. ஆனால் அவ்வாறுள்ள நிலையுடன் நாம் நம்மை ஒருங்கிணைத்துக் கொண்டால்தான் நாமும் கலக்கமடைகிறோம். ஆனால் அவை உள்ளே வராமல் தடுத்து நிறுத்திவிட்டால், வெளியில் நிறுத்திக் கதவை மூடிவிட்டால், தியானத்திற்கு ஏற்ற மனச் சமநிலை நம்மிடம் தோன்றுகிறது. அவற்றைத் தடுத்து நிறுத்திவிடுதல் என்றால் காதுகளில் பஞ்சை வைத்து அடைத்துக்கொள்வது போன்ற செயல்களினால் அல்ல. மனத்தின் சலசலப்புக்களிலிருந்து அறிவு ஒதுங்கி நின்று விடுவது தான் அவற்றைத் தடுக்கும் சரியான முறை. இங்கே குறிப்பிட்டிருப்பது அதைத்தான்.

இங்குள்ள சொற்களுக்கு வெறும் பதவுரையை மட்டும் கற்றுக் கொண்டு சில சாதகர்கள் அதைக் கையாளத் தொடங்கி விடுகிறார்கள். தங்களுடைய பார்வையைப் புருவங்களுக்கு இடையில் நிலைநிறுத்தினால்தான் தியானம் கைகூடுமென்று நினைத்து விடுகிறார்கள். இங்கு கூறப்பட்டுள்ளதை இம்மியளவும் பிசகாது அவர்கள் செய்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் முயற்சியை அது மிகைப்படுத்திச் செய்வதாகும். புருவங்களிடையில் உள்ள இடத்தைக் கூர்ந்து நோக்குவது போன்ற நிலை என்று சங்கரர் கூறுகிறார். அந்த விளக்கத்தை மனதிற் கொண்டு சாதகம் செய்வது நல்லது. 'புருவங்களை நோக்குவது போன்ற நிலை'யில் இருந்தால் கூட கருவிழிகள், நிமிர்ந்திருக்கும் நமது முதுகெலும்புக்குச் சுமார் 45 டிகிரி அளவில் பார்வை உயர்ந்து செல்கிறது. அப்படிக் கண்கள் மேல்நோக்கி இருக்கும்போது, நமது உள்ளமும் மேநோக்கிப் போகிறது. சிந்தனை உயர்ந்து தியான நிலை பெறுவதற்கு அது வசதியான முறை ஆகிறது.

சங்கீதத்திற்கு தாளக்கட்டு இருப்பதைப் போல, நமது மூச்சு உள்ளே போவதும், வெளியிலே வருவதும் ஒரே மாதிரியான அளவுடன் இருக்க வேண்டும். அதற்கும் நமது மனத்தில் ஏற்படும் சிந்தனை நிலைக்கும் நெருங்கிய உறவு உண்டு. மனத்தில் கவலையும், கலக்கங்களும் இருக்கும்போது நாம் மூச்சு விடுவதைக் கவனித்திருந்தால் இது தெரியும். அந்த நேரங்களில் ஒரே மாதிரியாக நாம் சுவாசிப்பதில்லை. திடீரென்று பெருமூச்சு வருகிறது. பிறகு மெதுவாக மூச்சு விடுகிறோம். எப்படியெல்லாமோ ஆகிவிடுகிறது. அதனால்தான் மூக்கு மூலம் மூச்சை உள்ளிழுப்பதும் வெளிவிடுவதும் சமநிலையில் இருக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. இப்படிச் செய்வதனால் மனமும் சலசலப்புக் குறைந்து சற்று அமைதி பெறுகிறது.

இவை எல்லாம் உடலைப் பொறுத்த விவரங்களே. தியானம் செய்வதற்கு முன் அதற்கு வசதியான மனச் சூழ்நிலையை

ஏற்படுத்துவதுதான் இவ்விவரங்களைக் கூறுவதன் நோக்கம். மேற்கண்ட இரண்டாவது செய்யுளில் மன, அறிவுக் கருவிகளை எந்த நிலைக்குக் கொண்டு வரவேண்டும் என்று தெளிவாக்கப் பட்டிருக்கிறது. புலன் வேட்கைகளையும், மனச் சலனங்களையும் அறிவின் கொந்தளிப்பையும் அடக்கி, தமது அக, புற நட வடிக்கைகளையெல்லாம் ஆன்ம உணர்வு பெறும் ஒப்பற்ற இலட்சியத்தில் செலுத்துமாறு சாதகர்களுக்கு ஆலோசனை கூறப் படுகிறது. அறிவைக் கட்டுப்படுத்துவதற்கு வேட்கை, பயம், கோபம், ஆகிய மூன்றையும் கைவிட வேண்டுமென்று கிருஷ்ணன் இங்கு வழி வகுத்துக் கொடுக்கிறார்.

இம் மூன்று தன்மைகளையும் சுட்டிக் காட்டுவதன் மூலம் கிருஷ்ணர் அக முன்னேற்றத்திற்கான விரிவான உளவியல் தத்துவம் ஒன்றை உருவாக்கித் தருகிறார். இவை ஒன்றுக் கொன்று நெருங்கிய தொடர்புடையவை. சிந்தனையின் அமைப்பு முறையே கோரிக்கை என்றும், அது வெட்டிவைத்த கால்வாய் களிலே மனம் ஓடுகிறது என்றும் ஏற்கனவே தெளிவாக்கப் பட்டிருக்கிறது. பொருள்களைப் பெற வேண்டும், அவற்றைத் தனது உடைமையாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆவல் காரணமாகவே மனம் அவ்வாறு பொருள்களை நோக்கிப் பாய்ந்து செல்கிறது. அப்படிப்பட்ட கோரிக்கைகள் இருப்பவர்களிடம் பயமும் குடிகொள்கிறது. ஒரு பொருளை மிகவும் விரும்பி, அது நம்மிடமிருந்து போய்விடுமோ என்ற அச்சமும் நமக்கு ஏற்படு மானால், நமக்கும் அப்பொருளுக்கும் குறுக்கே வரும் யார் மீதும், எதன் மீதும், நமக்கு அடங்காத கோபம் வருகிறது. இது எல்லோருக்கும் தெரிந்த உண்மை. எனவே இந்த மூன்று உணர்ச்சிகளையும்—வேட்கை, பயம், கோபம் ஆகிய மூன்றையும்— கட்டுப்படுத்தி விட்டால் அறிவின் அட்டகாசம் முழுவதையும் அடக்கிய மாதிரிதான்.

எனவே, வேட்கை, அச்சம், கோபம் ஆகிய உணர்ச்சிகளி லிருந்து விடுதலை பெறுவதுடன் மூச்சு விடுவதிலும் சமநிலையை ஏற்படுத்திக் கொண்ட ஒருவர், வெளியுலகத் தொடர்புகள் ஒழிந்து, மேல் நோக்கிய பார்வையுடன் பேருண்மை பற்றிய சிந்தனையிலேயே மூழ்கியிருக்க முடியும். அவர் உண்மையிலேயே ''நிரந்தரமாக விடுதலை பெற்றவர்'' என்று பகவான் இங்கு கூறு கிறார்.

ஏற்கனவே விடுதலை பெற்றிருப்பவர்களே கிருஷ்ணர் கூறுவதைப்போல் இருப்பார்கள் என்று நினைத்துவிடக் கூடாது. அவர் சொல்வதைப் போல் நடந்து கொண்டால் நாளடைவில் விரைவில் விடுதலை பெறலாம் என்பதுதான் அவர் கூறுவதன் கருத்து. பேச்சு வழக்கில் 'ரொட்டி சுடுகிறார்' என்று சொல்லுவதைப் போலத்தான் இதுவும். வார்த்தைக்கு

வார்த்தை அப்படியே பொருள் கொண்டால், அதன் அர்த்தம் அனர்த்தமாகி விடும். மாவைப் பிசைந்து சட்டியில் வைத்துச் சுட்டால்தான் ரொட்டியாகும். யாராவது ரொட்டியைப் போட்டுச் சுடுவார்களா? பிறகு நாம் ஏன் அப்படிச் சொல்லு கிறோம்? மாவு ரொட்டியாக மாறுவதற்கு வெகு நேரமாகாது. தண்ணீர் கொதித்துக் கொண்டிருக்கும்போது 'டீ போட்டுக் கொடுக்கிறேன்' என்று சொல்லுகிறோம். தண்ணீர் கொதித்து விட்டால் டீ போடுவதற்கு வெகு நேரமாகாது. இலட்சியம் வெகு அருகில் இருக்கும்போது இப்படிக் கூறுவது மொழி வழக்கு. அப்படியே கிருஷ்ணர் கூறிய முறையைச் சிறிதும் வழு வின்றி நிறைவேற்றி ஆன்ம தியானத்தில் அமர்ந்தால், நம்மு டைய தப்பெண்ணங்களிலிருந்து விடுபட்டு இறை நிலை சுதந் திரத்தை அனுபவிக்கத் தொடங்குகிறோம். விரைவிலேயே (அசிரேண).

உறுதியான மனச் சமநிலை பெற்ற ஒருவர் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன? தியான யோகத்தில் எதைப்பற்றி தியானம் செய்ய வேண்டும்?

போக்தாரம் யஜ்ஞ தபஸாம்
ஸர்வலோக மஹேச்வரம்
ஸுஹ்ருதம் ஸர்வபூதானும்
ஞாத்வா மாம் சாந்திம்ருச்சதி 5:29

எல்லா உலகங்களுக்கும் அதிபதியாகவும், எல்லா உயிரினங் களின் நண்பனுகவும் உள்ள நானே வேள்விகள், தவங்கள் ஆகிய வற்றை அனுபவிக்கிறேன் என்பதைத் தெரிந்து கொண்டவர் பேரமைதி பெறுகிறார்.

என்னை அறிந்தவர் அமைதி பெறுகிறார்—கீதையில் தன்மை ஒருமையை ('என்னை') கிருஷ்ணர் பயன்படுத்தும் போது, தேவகி யின் புதல்வனுகப் பிறந்து குறிப்பிட்ட உருவத்திலுள்ள அந்த கிருஷ்ணராகப் பேசவில்லை. தாம் அழிவில்லா ஆன்மிகப் பொருள், கிருஷ்ண பரமாத்மா என்ற பொருளில் பேசுகிறார். ஜீவ னுக்கு (அகந்தைக்கு) பின்னல் உயிரியக்கமாக இருப்பது ஆன்மாவே. அது தன்னை ஜடப்பொருளாகிய உடலுடன் ஒருங் கிணைத்துக் கொள்ளும்போது 'செய்வதும் அனுபவிப்பதும் நானே' என்று நினைத்துக் கொள்ளுகிறது. 'வேள்வி' என்ற சொல்லின் பொருள் இதற்கு முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. எந்தத் துறையிலும் ஒருவர் சுயார்ப்பணமாகச் செய்யும் திருப் பணியையே 'வேள்வி' என்று கீதை குறிப்பிடுகிறது. தவமென்பது சுயகட்டுப்பாடு, எளிய வாழ்வு ஆகியவற்றைக் குறிக்கிறது. தனது உண்மை நிலையை அறிந்து நிரந்தரமான மெய்ப்பொரு

ளுடன் கலந்து விடுவதற்காக அகந்தை தவத்தை மேற்கொள் கிறது.

ஆன்மாவை அதிபதிகளுக்கெல்லாம் அதிபதி, தேவர்களின் தேவர்—மகேசுவரார் என்று குறிப்பிடுவது மிகப் பொருத்தமாக இருக்கிறது.

அறிதல், அறிந்ததை வெளியிடுதல் போன்ற எல்லாத் துறைகளிலும் நடைபெறும் வேலைகளை நிர்வகிப்பவர் ஈசுவரார் என்று இங்கு இச் சொல்லுக்குப் பொருள் கொள்ள வேண்டும். ஒவ்வொரு வேலைக்கும் அதிபதியாக இருந்துகொண்டு அதைச் செய்விப்பவர் தேவர். பல்வேறு வேலைகளின் தலைவர்களாக இருந்து செய்வித்துக் கொண்டிருப்பவர்கள் பல்வேறு ''தேவர்கள்.'' அச் சொல்லுக்கு 'ஒளிபெறச் செய்பவர்கள்' என்றுதான் அர்த்தம். கண்கள் நோக்கும் துறையை ஒளிபெறச் செய்வது பார்வை சக்தி. இந்தச் சக்தியின் இயக்கத்தினுல் உருவ, வண்ண அறிவு நமக்கு வருகிறது. காதுகளின் இயக்கத்திற்குச் சக்தி அளிப்பது கேட்கும் சக்தி. இதனுல் நாம் ஒலியறிவு பெறு கிறோம்.

இதைப் போன்ற சக்திகளை எல்லாம் ஆளும் மகா சக்தியாக விளங்குவர் ஆன்மாவாகிய இறைவனே. எனவே ஆன்மா என்ற நிலையிலிருந்து பேசும் கிருஷ்ணர் 'சர்வலோக மகேசுவரார்' என்ற பட்டத்தைத் தமக்குத் தாமே சூட்டிக்கொண்டு பேசுகிறுர்.

ஒரு பெரிய அரசாங்க அதிகாரியைச் சந்திக்க வேண்டு மென்ருல் நாம் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. பார்த் தாலே மரியாதையும் அச்சமும் ஏற்படும் ஒரு சக்கரவர்த்தியைச் சாதாரண மனிதர்கள் பேட்டி காணவே முடியாதென்று சொல்லிவிடலாம். ஆனுல் இங்கு பேசும் சக்கரவர்த்தி வேறு மாதிரியானவர் என்று தெளிவாக்குவதற்காக 'சர்வலோக மகேசுவரார்'—அதாவது 'எல்லா உயிரினங்களுக்கும் நெருங்கிய நண்பஞகிய சக்கரவர்த்தி' என்று சொல்லிக் கொள்ளுகிறுர்.

இங்கு 'தெரிந்து கொண்டவர்' என்ருல், ஒரு பொருளைப் பார்த்து அல்லது முகர்ந்து இது மலர், அல்லது ஒரு கனி என்று தெரிந்து கொள்ளுகிறோம். அப்படித் தெரிந்து கொள்வது அல்ல. கிருஷ்ணரை ''பரமாத்மாவாக அறிந்தவர்'' என்ற பொருளில் இச் சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஆன்மாவே உள்ளி ருந்து எல்லாவற்றையும் ஆட்சி செய்து கொண்டிருக்கிறது. இதற்குத்தான் ஆன்மிக அனுபவம் என்று பெயர். உடலினுள் நடக்கும் எல்லா வேலைகளுக்கும் தலைமை வகித்து நடத்தி வைப் பது ஆன்மாவே. முழுமையை நாடும் அகந்தை தனது ஆன்மிக நடவடிக்கைகளை எல்லாம் இவ்வாறு ஒன்றே ஒன்ருகத் திகழும்

பரம் பொருளின் சந்நிதானத்தில் சமர்ப்பித்து விடுகிறது. அப்பரம் பொருளே கிருஷ்ணர் என்று தெரிந்து கொள்பவர், முழுமை நிலையின் உருவகமான பேரமைதி இலட்சியத்தை அடைகிறார்.

ஓம் தத்ஸத்

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸு
ப்ரம்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே
ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
ஸந்யாஸ யோகோநாம பஞ்சமோத்யாய:

இங்ஙனம் உபநிடதமும் பிரம்ம வித்தையும் யோக சாத்திரமுமான ஸ்ரீ. கிருஷ்ணார்ஜுன சம்வாதமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் கர்மஸந்யாச யோகம் என்ற ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

# தியான யோகம்

## 6

கீதையின் கருத்து வளர்ச்சியில் ஒரு பகுதி இந்த அத்தியாயத்துடன் முடிவடைகிறது. இந்நூலை ஆராய்ந்தறிந்த பல அறிஞர்களும் அப்படியே கருதுகிறார்கள். கீதையின் 18 அத்தியாயங்களும், ஆறுறு அத்தியாயங்களைக் கொண்ட மூன்று பகுதிகளாக அமைந்திருக்கின்றன என்றும் அம் மூன்றையும் சேர்த்துப் பார்த்தால் 'தத்வமஸி' (அது நீதான்) என்ற வேத மகா வாக்கியத்திற்கு விளக்கமாகத் தோன்றுகிறது என்றும் அவர்கள் எழுதியிருக்கிறார்கள். முதலாவது ஆறு அத்தியாயங்களையும் 'த்வம்' (நீ) என்ற சொல்லின் தத்துவ விளக்கமாகக் கொள்ளலாம். தொடக்கத்திலிருந்து இதுவரை கூறிவந்த கருத்து இந்த ஆறுவது அத்தியாயத்திலும் தொடர்ந்து விரிவாக்கம் பெற்று, தகுந்ததொரு முடிவுக்கு வருகிறது.

மனிதன் ஆன்மிக முழுமை பெறுவது பற்றியே எல்லா

உபநிடதங்களும் பேசுகின்றன. அதையே சுருக்கமாகவும், விரைவாகவும் கிருஷ்ணர் இரண்டாவது அத்தியாயத்தில் அர்ஜுனனுக்கு எடுத்துரைத்தார். அவனுடைய உள்ளத்தில் அவர் கூறியவை யாவும் சரியாகப் பதிந்திருக்குமா என்பது சந்தேகம்தான். மனச் சமநிலையும், முழுமையும் பெற்ற ஒரு யோகியை பகவான் அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுவதுடன் இரண்டாவது அத்தியாயம் முடிந்தது. அவர் கூறியவற்றைக் கேட்டவுடன் ஒரு சாதகனுக்கு உற்சாகமும், பரபரப்பும் தோன்றுவது இயற்கையே. தானும் அவர் கூறியவாறு அகவளர்ச்சியும் சுயகட்டுப்பாடும் சமநிலையும் அடையவேண்டுமென்ற ஆவலுடன் அதற்கான வழிமுறைகளைப் பற்றி அர்ஜுனன் கேட்கிருன்.

குறிப்பாக அர்ஜுனனுடைய நிலையை நினைவிற் கொண்டு அவனுடைய சொந்த சிக்கலைத் தீர்ப்பதற்குக் கூறிய ஆலோசனையே கீதை. அவனுடைய உள்ளம் பெரும் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கிறது. தனது வேலைகளையெல்லாம் துறந்து நுணுக்கமான தியான நிலையை எட்டுவதற்கு தீவிரமான அகப் பயிற்சி அவசியம். அர்ஜுனன் அதில் உடனடியாக தன்னம்பிக்கையுடன் ஈடுபடும் அளவுக்கு அது சுலபமானதல்ல. ஆனல் வேதாந்த முறைகள், குறிப்பிட்ட சிலர் கடைப்பிடிப்பதற்காக மட்டுமே ஏற்பட்டவையல்ல. உடனடியாக சிலர் அவற்றைப் பின்பற்றும் நிலையில் இருக்கலாம். ஆனல் ஒவ்வொருவரும் அவற்றைப் பின்பற்ற வகை செய்யும் ஆரம்ப முறைகளும் வேதாந்தத்தில் இருந்தே ஆக வேண்டும்.

வெறும் வாய் வேதாந்தம் பேசும் தற்காலப் பெரியோர்களில் பலருக்கு இதுகூடத் தெரியவில்லை! ஆன்மிக வளர்ச்சிக்குப் படிப்படியான சாதக முறைகள் இருக்கின்றன. பொதுவாக நிலவும் அறியாமையினுல்தான் சிலருக்கே வேதங்களைப் படிக்கும் உரிமை உண்டு என்ற எண்ணம் தோன்றுகிறது. அவ்வாறு நினைப்பவர்கள் இந்து மதத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாதவர்கள். இறை நாட்டம் கொண்டவர்கள் முதலில் உபாசனை முறையைக் கடைப்பிடித்து, அந்தக் கருவிகளை தூய்மையாகக் கொள்ள வேண்டும். அதில் வெற்றி பெறுபவர்கள் அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதும் நமது சாத்திரங்களில் இருக்கின்றன. இவ்வாறு படிப்படியாக உயருவதற்கு வழி வகுத்துக் கொடுக்கப்படவில்லை என்றுல், வேதாந்தத்தை முழுமையான ஒரு விஞ்ஞானமாக நாம் கருத முடியாது.

கிருஷ்ணர் ஒரு தலைசிறந்த ஆசானுகையால், அர்ஜுனன் மனத்திலுள்ள பலவீனத்தை அவர் உடனே தெரிந்து கொள்கிருர். அவன் இருந்த குழப்ப நிலையில், தூய தியான முறையை மேற்கொள்ளவோ முடியாது. அவனுடைய குறைகளைப் போக்கி

உயர்நிலைக்குக் கொண்டு வர வேண்டுமென்றால், தொடக்கப் பயிற்சி அளித்து முதலில் அவனை மன ஒருமைப்பாடு பெற்றவனாகச் செய்ய வேண்டும். அதற்காகத்தான் மூன்றாவது அத்தியாயத்தில் கரும யோகம் பற்றி விரிவாகவும், விஞ்ஞான பூர்வமாகவும் கிருஷ்ணர் விளக்குகிறார்.

எல்லா வெளியுலக நடவடிக்கைகளும் நமது உள்ளத்தில் ஆழ்ந்த தடங்களையும், கலக்கங்களையும் விட்டுச் செல்கின்றன. நல்ல செயல், கெட்ட செயல் ஆகிய இரண்டுமே வாசனைத் தடங்கள் ஏற்படுத்துகின்றன. இவ் விளைவைக் குறைத்துக் கொள்ளுவதற்கும், மனத்தில் ஏற்பட்ட தடப் புண்கள் ஆறி உள்ளச் சமநிலை பெறுவதற்கும், 'அறிவில் செயலைத் துறத்தல்' என்ற முறையை கிருஷ்ணர் நாலாவது அத்தியாயத்தில் அர்ஜுனனுக்கு விளககுகிறார். இதை நாம் ஒரு புண் ஆற்றும் மருந்தாகக் கொள்ளலாம். செயல்களுக்கெல்லாம் காரணமான பரம்பொருளை இடைவிடாது உணர்விற் கொண்டு உலக வேலைகளில் எவ்வளவுதான் ஒருவர் ஈடுபட்டிருந்தாலும், அவற்றின் விளைவுகள் அவருடைய அக வாழ்வை பாதிப்பதில்லை என்பதே கிருஷ்ணர் தயாரித்தளிக்கும் அருமருந்து.

முதலில் செயல் புரிவதைப் புகழ்ந்துவிட்டு, பிறகு செயல் துறத்தலை ஆதரித்து ஆசான் பேசியதைக் கேட்டவுடன் அர்ஜுனனுக்குக் குழப்பம் தோன்றுகிறது. அவன் இருந்த நிலையில் இது எதிர்பார்க்கக் கூடியதுதான். எனவே 'துறத்தல்' என்றால் என்னவென்று கிருஷ்ணர் ஐந்தாவது அத்தியாயத்தில் விளக்க வேண்டியதாகிறது. செயல்களுக்கிடையில் அவற்றின் விளைவுகள் பற்றிய எண்ணங்களும், பலனை அனுபவிக்கும் ஆவலும் ஏற்பட்டு, நம் உள்ளத்தை மாசுபடுத்தாமல் இருப்பதே துறவு. சுயலாபத்திற்கு வழி தேடிக் கொண்டிருக்காமல், பொதுவாக எல்லோருடைய நலன்களுக்காகவும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, வேள்வி உணர்ச்சியுடன் வேலை செய்ய வேண்டும். அறிவும் மனமும் இவ்வுலகச் சூழல்களுக்கு இடையிலிருந்து கொண்டு வேலை செய்வதைத் தவிர வேறு வழியே இல்லை. தானே ஏற்படுத்திக் கொண்ட கடந்த காலத் தடங்களை (வாசனைகளை) போக்கிக் கொள்ளும் தவிர்க்க முடியாத சிகிச்சை முறையை நாலாவது அத்தியாயத்தில் பகவான் அறிவிக்கிறார். இலட்சியம் ஒன்றேயாயினும், அதை அடைவதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. 1. ''நானாகவே செயல் புரிகிறேன்'' என்ற தன்னுணர்ச்சியைக் கைவிட்டு வேலைகளைச் செய்தல். 2. செயலின் பயனை அனுபவிக்க வேண்டுமென்ற அசட்டு ஆவலை மனத்திலிருந்து களைந்து விட்டு வேலைகளைச் செய்தல்—இவை இரண்டுமே அவர் காட்டும் இரு வழிகள். ஒருவரை துன்பச் சகதியில் தொடர்ந்து ஆழ்த்திவரும் வாசனைச் சுமையை அகற்றுவது எப்படி என்று பகவான் அளித்த விளக்கத்திலிருந்து அர்ஜுனன் தெரிந்து கொள்ளுகிறான்.

உணர்வு மழுங்கிய உள்ளம் கூட கிருஷ்ணர் இதுவரை கூறியவற்றைக் கேட்டுப் புதுவேகம் பெற்றிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அவர் கூறிய முறையில் உள்ளத்தை தூய்மை யாக்கிக் கொண்ட ஒரு சாதகர், அதைத் தனது கட்டுப் பாட்டுக்குள் கொண்டு வந்து தியானத்திற்குகந்ததாக ஆக்கிக் கொள்ள வேண்டும். இதற்கான வழிமுறைகள் இப்போது வகுத்துக் கூறப்பட்டுள்ளன. முற்கூறியவாறு தூய்மை அடைந்த உள்ளம் கட்டுப்பாடும் பெற்று விட்டால், ஒருமுகமான தியானத் திற்கும், ஆன்ம உணர்வு மலருவதற்கும் அதுவே தலைசிறந்த கள மாகிறது.

தியான முறையின் நுணுக்கங்களை விளக்கி அதை மேற் கொள்ளும் விதத்தையும் புகட்டுவதுதான் ஆறுவது அத்தியாயத் தின் நோக்கம். இதில் கூறும் அற்புதக் கருத்துக்களைப் படிக்கும் போது கூட பிரமித்துப் போய் நாம் நின்றுவிடப் போவதில்லை. துருவி ஆராய்ந்து விவாதிக்காமல் அவற்றைக் கண்மூடித்தனமாக ஏற்கப் போவதில்லை. நமது பலவீனங்களை அகற்றி, ஆரோக்கிய மான நல்வாழ்வு அளித்து, உயருவதற்கு வழிகாட்டப் போவதாக இவ்வத்தியாயம் நமக்கு உறுதியளிக்கிறது. இந்த வழிக்குப் பெயர் 'தியானம்'. ஏதோ ஒரு வகையில், எல்லா மதங்களும் எல்லாக் காலங்களிலும், எல்லா மகான்களும் இவ்வழியை ஆதரித்து வந் திருக்கிறார்கள்.

ஸ்ரீ பகவானுவாச—

*அனாஸ்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதிய:*
*ஸ ஸந்ந்யாஸீச யோகீச ந நிரக்னிர் ந சாக்ரிய:* 6:1

யாரொருவர் பயனைக் கருதாது தம் கடமைகளைச் செய்து வருகிறாரோ அவர் ஒரு சன்னியாசி.; ஒரு யோகி. செயல் புரியாமலோ, தீ இல்லாமலோ மட்டும் இருப்பவர் (சன்னியாசி) அல்லர்.

அர்ஜுனன் முதலாவது அத்தியாயத்தில் பேசிய பேச்சி லிருந்து, அவன் செய்ய விரும்பியது தெளிவாகத் தெரிந்தது. போர்க் களத்திலிருந்து வெளியேறி அவன் சன்னியாச வாழ்க் கையை மேற்கொள்ள நினைத்தான். ஒரு சன்னியாசி, சுயநல மற்ற, மாபெரும் செயல் வீரர் என்பது அவனுக்குத் தெரியாது. எல்லாப் பற்றுதல்களையும் துறந்து செய்யும் பணியைத் தவிர, மற்ற எந்த வேலையும் பிரபஞ்ச இசைவுக்கு ஏதோ ஒரு விதத்தில் இடைஞ்சல் செய்வதாகவே ஆகும்.

போதிய மனப் பக்குவமின்றி ஒருவன் கங்கைக் கரையில் போய் உட்கார்ந்தால் மட்டும் பயனென்ன? அவன் நல்லவனாக இருக்கலாம். அவன் மனப்பக்குவம் அடையாத வரை அவனுக்கும் அதே கங்கையில் கிடக்கும் கல்லுக்கும்

வித்தியாசமே இல்லை. செய்யுளின் இரண்டாவது வரியில், கிருஷ்ணர் அர்ஜுனனுடைய குழப்பத்தைக் கண்டு கேலி செய்கிறார். அவனைப் புண்படுத்துவது அவருடைய நோக்கமல்ல. தான் குழப்ப நிலையிலிருந்ததை நினைத்து, அர்ஜுனன் சிரிக்கப் போவதை நாம் விரைவில் பார்க்கலாம்.

இந்த அத்தியாயத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை, நமது சிந்தனை, உணர்ச்சி போன்ற அக சக்திகளை வளர்த்துக் கொள்வது பற்றியும் நடைமுறைக்கு உகந்த வண்ணம் அவற்றை மாற்றியமைத்துக் கொள்வது பற்றியும் கூறப்படுகிறது. எனவே ஆன்மிக வாழ்க்கையை மேற்கொள்ளுமுன் ஒருவர் தமது உள்ளத்தை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டியதன் அவசியம் பற்றி கிருஷ்ணர் இங்கு விளக்குவது மிகப் பொருத்தமாக இருக்கிறது.

ஆனால் திடீரென்று 'அவனே சன்னியாசி, அவனே யோகி' என்று கூறுவது அர்ஜுனனுக்கு ஏதோ புதிர் போட்ட மாதிரி இருக்கலாம். சன்னியாசமென்பது எப்படி யோகமாகும் என்ற திகைப்பு உண்டாகலாம். எனவே கிருஷ்ணர் அதை மேலும் விளக்குகிறார்.

*யம் ஸந்ந்யாஸ மிதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ*
*நஹ்—ய ஸந்யஸ்த—ஸங்கல்போ யோகீ பவதி கஸ்சன*

***6:2***

சன்னியாசத்தைத்தான் யோகமென்று சொல்லுகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள் பாண்டவா. உண்மையிலேயே தனது சங்கல்பங்களை துறந்துவிடாத எவரும் யோகியாக முடியாது.

சன்னியாசமே ஒரு யோகந்தான். இதை அர்ஜுனன் சரியாக மனதில் வாங்கிக் கொண்டானோ இல்லையோ என்பதற்காக, கிருஷ்ணர் அதை மீண்டும் வற்புறுத்துகிறார். 'செயல் புரிவது நானே' என்ற தன்னுணர்ச்சியைக் கைவிடுவது சன்னியாசம். பயனில் பற்றுதலைக் கைவிடுவது யோகம். யோகப்பயிற்சி மூலமாக ஒருவர் சன்னியாச நிலை அடைகிறார். இதயத்தில் சன்னியாச உணர்வு இல்லாமல், யோகமென்னும் ஆன்மீகப் பயிற்சி பற்றி நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. ஆன்ம நிறைவை ஒரு நாணயமென்று வைத்துக் கொண்டால், அதன் ஒருபுறம் சன்னியாசம், மறுபுறம் யோகம்.

கிருஷ்ணர் இப்படிச் சொன்னவுடன், அர்ஜுனனுக்குத் தூக்கிவாரிப் போட்டிருக்குமென்று தோன்றுகிறது. சுயமாக சிந்திக்கத் தெரிந்தவனாகையால், 'அது எப்படி?' என்ற கேள்வி அவன் உள்ளத்தில் எழுந்திருக்க வேண்டும். அதை வாய் திறந்து அவன் கேட்கவில்லை என்றாலும், அகத்தின் அழகு முகத்தில்

தெரியும் அல்லவா? இதைப் பார்த்த கிருஷ்ணர் அவன் மனத்தி லெழுந்த சந்தேகத்திற்கு காரண—காரிய ரீதியாக இங்கு பதிலளிக்கிறார். எல்லா சங்கற்பங்களையும் முற்றிலும் துறந்து விடும் கலையில் வெற்றி பெற்றாலொழிய, தன் கலாச்சார புனர மைப்பில் யாரும் வெற்றிபெற்று நிலைக்க முடியாது என்று கூறு கிறார்.

மனித உள்ளம் கணந்தோறும் புதுப்புது கற்பனைக் கோட்டைகளைக் கட்டிக் கொண்டுதான் இருக்கும். நமக்குப் புலப்படா எதிர்காலத்தை மூடியிருக்கும் திரையை அகற்றிவிட அது படாதபாடு படுகிறது. அடுத்த இரண்டொரு ஆண்டுகளில் ஏதோ ஒரு திட்டத்தை நிறைவேற்றிவிட வேண்டும் என்று நமது உள்ளம் முடிவு செய்கிறது. திட்டம் உருவான பிறகு அது எப்படி இருக்குமென்று நமக்குத் தெரியாத போதிலும், நமது கனவை நனவாக்கும் முயற்சியில் தீவிரமாக இறங்கிவிடுகிறோம். ஆனால் அந்த முயற்சி நிறைவேறுவதற்குள், வேறொரு இலட்சியம் நமது கற்பனையில் உதிக்கிறது. முதலில் தொடங்கிய வேலையை அரை குறையாக நிறுத்திவிட்டு, இரண்டாவது கருத்தை அமுல் நடத்தும் முயற்சியில் ஈடுபடுகிறோம். முதலில் நினைத்ததை நமது கற்பனை அடியோடு மாற்றிவிடுகிறது. இரண்டாவது திட்டத்தை நிறைவேற்றுவதற்குள் மூன்றாவது—இப்படியாக நாமே உருவாக்கிக்கொண்ட இலட்சியத்திற்கு வேலை தொடங்குவதற் குள், அதை நமது கற்பனை அடியோடு மாற்றி விடுகிறது. அதாவது, முயற்சி தொடங்கும் வரையில்தான் இலட்சியம் இலட்சியமாக இருக்கிறது. செயலில் இறங்கிவிட்டால், பிறகு அந்த இலட்சியம் இருந்த இடம் கூடத் தென்படுவதில்லை; அடைய வேண்டியது என்னவென்று தெரிவதில்லை. இப்படி நம்மையும் அறியாமலே நமது உள்ளத்தில் கற்பனைக் கோட்டை களை எழுப்பும் நுணுக்கமான இந்தப் பைத்தியக்கார சக்திக்குத் தான் 'சங்கல்ப சக்தி' என்று பெயர். ஆபத்தான இந்த உள் எதிரியை தேடிக் கண்டுபிடித்து ஒழித்தாலொழிய, அகத் துறை யிலோ, புறத் துறையிலோ நாம் குறிப்பிடத்தக்க எதுவும் சாதிக்க முடியாது. இதைத் தெரிந்து கொள்ளுவதற்கு பெரிய விரிவுரையாளர்களோ, விளக்க வல்லுநர்களோ தேவையில்லை. நம் அனுபவத்திலேயே இது தெரிகிறது.

இதில் கண்டிப்பாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தான், இந்த சங்கற்பத் தொல்லையை அடியோடு களைந்து அகற்று வதற்கான வலிமை பெறாதவரை, சுய விடுதலைப் பாதையில் யாரும் (கஸ்சன) முன்னேற முடியாது என்று பகவான் அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார்.

பயனைக் கருதாது செயல்புரியும் முறையாகிய கருமயோகம், தியான யோகத்திற்கு வெளியுதவியாக இருக்கிறது. தியான

மென்ற உயர்நிலைக்கு நம்மை இட்டுச் செல்லும் சாதனமே கருமயோகம் என்பதை கிருஷ்ணர் தெளிவாக்குகிறார்.

ஆருருக்ஷோர்—முனேர்—யோகம் கர்மகாரண முச்யதே
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரண—முச்யதே

6:3

யோகநிலை எய்த விரும்பும் சாதகருக்கு கரும யோகம் ஒரு சாதனமென்று சொல்லுகிறார்கள். அவரே யோகநிலை எய்திய பிறகு செயலின்மை அவருக்கு சாதனமென்று சொல்லப்படுகிறது.

''மனத்தை ஒருமுகப்படுத்தவும், ஆன்மிக வளர்ச்சி பெறவும் சாதகர்களுக்கு செயல் மார்க்கம் உகந்தது. எதையும் தான் செய்வதாக நினைப்பது அகந்தையிலிருந்து எழும் தன்னுணர்ச்சி. பயனை அனுபவிக்கும் ஆவல் குறியாகச் செயல்படுவதும் அகந்தை மைய வேட்கை எழுவதே. இவ்விரண்டையும் அறவே துறந்தால்தான், இவ்வுலகத்தில் செயல் புரிந்து கொண்டிருந்த போதிலும் புதிய வாசனைகள் உள்ளத்தில் ஏற்படாமலிருக்கும். பழைய வாசனைகளும் மறையும்*.

குதிரையேற்றக் கலையிலிருந்து மிக அருமையான உவமையொன்றை இங்கு எடுத்தாளப்பட்டிருக்கிறது. புதிய குதிரையொன்றைப் பழக்கும்போது, நாம் அதன் மீது சவாரி செய்யப் பார்க்குமுன் அது நம் மீது சவாரி செய்ய முயற்சிக்கிறது. முதலில் அதனுடன், ஒரு போராட்டமே நடத்த வேண்டியிருக்கிறது. சேணத்திலிருந்து தொங்கும் இரும்பு வளையத்தில் கால் வைத்துக் குதிரையைப் பற்றிக் கொண்டு தொங்கியவாறு சில நாட்களுக்கு ஊசலாடுகிறோம். பிறகு தரையை ஒரு உதை உதைத்து, மேலே எழும்பி குதிரையின் இரு பக்கங்களிலும் இரண்டு கால்களைப் போட்டுக் கொண்டு உட்கார வேண்டும். அப்படி உறுதியாக உட்காரத் தெரிந்துவிட்டால், பிறகு குதிரையை அடக்கி, வழிக்குக் கொண்டு வந்துவிடலாம். ஆனால் அதை அடக்குவதற்கு முன் நாம் முற்றிலும் தரையிலும் இல்லாமல், குதிரை மேலும் இல்லாமல் திரிசங்கு நிலையில் பல நாட்கள் திண்டாட வேண்டியிருக்கிறது.

நமது மனக் குதிரையைப் பழக்குவதிலும் இந்த மாதிரியான கஷ்டங்கள் இருக்கின்றன. ஆரம்பத்தில் நாம் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு வேலையை இவ்வுலகில் செய்து கொண்டுதான் இருக்கிறோம். அகந்தையும் வேட்கைகளும் பெரும் சுமையாக நம்மை

* விளக்கம்: பொதுமுன்னுரையில் காண்க.

அழுத்துகின்றன. கண்ணீரும், கம்பலையுமாக நாம் அவற்றையெல்லாம் சகித்துக் கொண்டு தொடர்ந்து செயலாற்றுகிறோம். இவ்வாறு மனக் குதிரை நம் மீது சவாரி செய்வதற்கு இடங் கொடுக்கக் கூடாது என்றும், அதற்குக் கடிவாளம் போட்டு கட்டுப்படுத்தினலொழிய நிலைமையை சமாளிக்க முடியாது என்றும் நிச்சயமாக நமக்கு ஏதோ ஒரு நாள் தோன்றிவிடும். மனக் குதிரை மீது பிறகு சவாரி செய்யத் தொடங்குபவர் (ஆருருக்ஷு) முன்போல் அதே வேலைகளைச் செய்து வருவார். ஆனால் அகந்தையோ, அகந்தை மையக் கோரிக்கைகளோ அற்று இப்போது அவர் செயல்படுவார். கோரிக்கைகளற்று, வேள்வி யுணர்ச்சியுடன் செய்யும் வேலைகள், மனத்திலுள்ள பழைய வாசனைத் தடங்களை அகற்றி, உள்ள ஒருமைப்பாட்டுக்கு வழி வகுக்கின்றன. * வாசனைகளற்ற தமது மனத்தை ஒருவர் அசைக்க முடியாதவாறு பேருண்மையில் நிலைநாட்டப் பழக்கி விட்டால், ஆழ்ந்த தியான வாழ்வை மேற்கொள்ளவும், வெளி யுலக வேலைகளைக் குறைத்துக் கொள்ளவும் முடியும். மனச் சலனங்களைக் கடந்து யோக நிலை எய்திய ஒருவர், மனக் குதிரையை அடக்கி அதன் மீது சவாரி செய்பவராக (யோக ஆரூடராக) கருதப்படுகிறார். அவருக்கு செயலின்மை ஒரு சாதன மாகிறது. சுய முயற்சியும், மனக் கட்டுப்பாடும் (சம) இருப்பதால் அவர் முழுமையை நோக்கிப் பறந்து செல்கிறார்.

ஒருவருடைய வளர்ச்சியின் இரு நிலைகளில் இரண்டு வித முறைகளைக் கையாளச் சொல்லுவதில் முரண்பாடு எதுவுமில்லை. அவ்விரு முறைகளும் மாறுபட்டவையல்ல என்பதையே அது எடுத்துக் காட்டுகிறது. ஒருநிலைவரை தன்னலமற்ற பணிபுரிவது நல்லது. பிறகு அச் செயல்களும் கூட கலக்கங்களின் ஊற்றுக் காலாகி, பேரமைதிப் பெரு வெளியில் மனம் சிறகடித்துப் பறக்க முடியாதவாறு செய்துவிடுகிறது; எழும்பும் மனம் தலைகுப்புற அடித்து விழுந்து விடுகிறது. சின்னஞ்சிறு குழந்தைக்கு பால் தூளை வெந்நீரில் போட்டுக் கலக்கிக் கொடுப்பது நல்ல உணவு. ஆனால் அக் குழந்தை வளர்ந்து இளைஞனான பிறகு பால் தூளை கரைத்துக் கொடுத்தால் போதாது. நாள் முழுவதும் சுறுசுறுப் பாக ஓடியாடிக் கொண்டிருக்கும் அவனுக்கு வெண்ணெயும், ரொட்டியும் கொடுத்தால்தான் உடல் வளர்ச்சி பெறுவான். இரண்டு நிலைகளில் இருவகை உணவு ஏன் கொடுக்க வேண்டு மென்று யாரும் கேட்க மாட்டார்கள். அதே வெண்ணெயையும் ரொட்டியையும் குழந்தை வாயில் திணித்தால், அது மூச்சுத் திணறி செத்துப் போகும் என்று எல்லோருக்கும் தெரியும்.

அதைப்போல, தொடக்கத்தில் ஒரு சாதகர் சுயநலமற்ற

* அத். 4, செய்யுட்கள் 18–21, 25–30 பார்க்க.

வேலையில் ஈடுபடுவது நல்லது. போகப்போக மனதை மேலும் அமைதியுறச் செய்து எல்லாப் புலனியக்கங்களையும் உள்ளிருக்கும் உயர்ப் பொருள் மீது செலுத்தி, சிந்தனையை ஒரே குறியாக நிலை நாட்டுவதற்கு வேள்வி உணர்ச்சியுடன் ஒருவர் வேலை செய்வது உதவியாக இருக்கும். ஆன்மிக முன்னேற்றம் காண்பதற்கு அது இன்றியமையாதது.

பிறகு 'ஆன்ம நினைவிலேயே மூழ்கியிருப்பது' இரண்டாவது நிலை. அப்போது செயலின்மை ஒரு சாதனமாகிறது. இலட்சியம் கை கூடும் வரை இடையருது கையாள வேண்டிய தியான நிலை அது. அகந்தையே உண்மைப் பொருள் என்ற உணர்வு பற்றி அதன் சாரமாக நிற்பது ஆன்மா என்ற அனுபவம் நமக்கு இறுதியில் கிடைக்கிறது. நாம் செயல் புரிந்து வந்தாலும் இல்லாவிட்டாலும் அத் தெளிவு கிடைக்கிறது. இப் பேரனுபவம் கிடைக்கும்வரை நாம் தொடர்ந்து சாதகம் செய்து வரவேண்டும்.

வேதாந்த சிந்தனையில் தலைசிறந்த நமது பண்டை மாமுனிவர்கள், ஆன்ம உணர்வு பெறுவதற்கான வழி முறைகளை நமக்கு வகுத்துக் கொடுக்கும்போது, அத் திட்டத்தில் சடங்குகளின் முக்கியத்துவத்தையும் வலியுறுத்தியிருக்கும் காரணம் அது தான்.

ஒருவரை யோகத்தில் உறுதியாக நிலைத்தவர் (யோகாரூடர்) என்று எப்போது சொல்லலாம்? இதை கிருஷ்ணர் எடுத்து விளக்குகிருர்.

யதாஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வனுஷஜ்ஜதே
ஸர்வ ஸங்கல்ப—ஸந்ந்யாஸீ யோகாரூடஸ்—ததோச்யதே
6:4

புலன் பொருள்களிலோ, செயலீடுபாடுகளிலோ எள்ளளவும் பற்றில்லாதவராகவும், சிந்தனைகளையெல்லாம் துறந்தவராகவும் இருப்பவரை 'யோகத்தை எய்தியவர்' என்று சொல்லுகிறோம்.

ஒரு சாதகரின் (ஆருருக்ஷு) நிலையைத் தெரிந்து கொள்வது பெரிய பிரச்னையல்ல. சுய முழுமைப் பாதையில் வெற்றி பெறுவதற்கு ஒருவர் முயற்சித்துக் கொண்டிருக்கும் வரையில் தன்னலமற்ற பணியில் அவர் ஈடுபட்டிருப்பதே நல்லதென்று பகவான் சற்றுமுன் கூறினுர். மனத்தை முற்றிலும் அடக்கிய பிறகு (யோகாரூட) செயலிலிருந்தும் ஒதுக்கிவிடலாம். முதல் நிலையிலேயே செயலின்மையை மேற்கொள்ளுவது தவறு. இரண்டாவது நிலையில் செயலினுல் ஒருவருடைய உள்ளத்திற்கு எவ்வளவு...

தொல்லேயோ, அந்த அளவுக்கு முதல் நிலேயிலேயே செய லின்மையை மேற்கொள்வது தொல்லே கொடுக்கும். ஒரு யோகாரூடர் தியானத்தின் மூலமாக இலட்சியத்தை நோக்கி வரைந்து கொண்டிருக்கையில் பரிபூரண அமைதி இருந்தால் அது அவருடைய நோக்கம் வெற்றியடைவதற்கு வசதியாக இருக் கிறது. எனவே இரண்டாவது நிலேயை ஒருவர் எப்போது எட்டு கிருர் என்பதை ஆன்ம நாட்டம் கொண்டவர்கள் தெரிந்து கொள்ள விரும்புவதில் வியப்பில்லே. யோகாரூட நிலேயில் உள்ள வரை எப்படித் தெரிந்து கொள்வதென்று இங்கு பகவான் விளக்குகிருர். புலன் பொருள்களிடமும், வெளியுலகச் செயல் களிலும் ஒருவருக்குப் பற்றுதல் தோன்ருதிருக்குமாளுல் அவர் உள்ளக் கட்டுப்பாட்டில் வெற்றி பெற்றுவிட்டார் என்று தெரிந்து கொள்ளலாம் என்று கிருஷ்ணர் கூறுகிருர்.

இச் சொற்களுக்குப் பதவுரை தெரிந்து கொண்டு, இப்படி நடந்து கொள்வது சாத்தியமாவென்று ஆலோசிக்கத் தொடங்கு வது வெறும் கேலிக் கூத்து. தியான பீடத்தில் அமர்ந்தவுடன் வெளியுலகப் பொருள்களிலிருந்தும் நடவடிக்கைகளிலிருந்தும் ஒருவருடைய மனம் தாளுகவே விலகி, உள்ளடங்கி, அசையா உறுதியுடன் இறைநாட்டத்தில் ஈடுபட வேண்டும் என்பதே பகவான் கூறுவதன் கருத்து. மனம் ஐம் பொறிகளின் வழியாக உடைப்பெடுத்த ஆறுபோல் பெருக்கெடுத்து ஓடும்போது, அவை புலன் பொருள் வாய்க்கால்களேச் சென்று அடைகின்றன. பேருண்மை உணர்வில் உள்ளம் ஆனந்தமாக லயித்திருக்கும் போது, புலனின்பச் சாக்கடையில் போய் அது இன்பம் தேடாது. உயர்தர உணவளித்து வீட்டில் அன்பாகப் பழக்கிய நாய்க்குட்டி இரை தேடுவதற்கு தெருவிலுள்ள குப்பைத் தொட்டிக்கா போகும்?

வெளியுலகப் பொருள்களிலும் அகந்தைமைய நடவடிக்கை களிலும் செல்லாமல் மனத்தை முற்றிலும் அடக்கிவிட்டால், தாளுகவே அது ஆன்ம சிந்தனேகளில் லயிக்கிறது. இவ்வாறு பற்றுதல்களே முற்றிலும் துறந்த நிலேயைக் குறிப்பிடுவதோடு இங்கு சிறப்புச் சொல் ஒன்று பயன்படுத்தப்பட்டிருப்பதை கவனிக்க வேண்டும். சமஸ்கிருதத்தில் 'ஷஜ்' என்ருல் 'பற்றுதல்'. அதனுடன் வேற்றுமை உறுபுகள் ஏற்காத 'அனு' என்ற பகுதி முற்சேர்க்கையாக இணேக்கப்பட்டு 'அனுஷஜ்ஜதே' என்ற சொல் உருவாக்கப்பட்டிருக்கிறது. 'அணுவளவும் இல்லா மல்' என்ற பொருள் இதிலிருந்து தோன்றுகிறது; வெளியுலகப் பொருள்களிலும், செயல்களிலும் 'அணுவளவும் பற்றுதலின்றி' இருப்பவர் யோக ஆரூடர் என்ற கருத்து இதளுல் தெளிவாகி றது.

அந்த நிலேயிலும் உள்ளே அடங்கிக் கிடக்கும் வேட்கைகளி

ணுலும் சங்கற்பங்களினுலும் மனத்தில் சலசலப்புக்கள் தோன்ற இடமுண்டு. சங்கற்பம் உள்ளத்தில் பெரும் புயலேயே எழுப்பி விடும் தன்மை பெற்றது. வெளியுலகப் பொருள்களேவிட இன்னும் அதிகக் கலக்கங்களே ஏற்படுத்தவல்லது இச்சங்கற்ப சக்தி. எனவே செயல்கள், புலன் பொருட்கள் ஆகியவற்றிட மிருந்து மனத்தை உள்ளிழுத்துக் கொண்டால் மட்டும் போதாது. மனத்தின் சங்கற்கங்களேயும் பூண்டறுத்தவரே* மனத்தை முற்றிலும் வென்றவராகிறுர். கிருஷ்ணருடைய சொற் களில் இக் கருத்து நிழலாடுவது இச் செய்யுளின் சிறப்பு. மனத்தின் அட்டகாசங்களே அடக்கி, நிர்மூலமாக்கி, ஒருமுகமான தியானத்தில் ஆழ்ந்துவிடும் நிலேயில் இருப்பவரை 'யோகரூடர்' என்ற சொல் குறிப்பிடுகிறது. இவ்வாறு அது அடங்கிய (சம) நிலேயில் அவருடைய அனுபவம் எப்படிப்பட்டதாக ருஇக்கும் என்பதை விவரிக்க வேண்டியதில்லே.

யோகநிலே எய்தியவுடன் ஒருவருடைய ஆன்மா தோற்ற மும் முடிவும் கொண்ட இச் சிறு வாழ்வின் பற்பல துன்பங்களி லிருந்து அவரை விடுவித்து விடுகிறது. ஆகையால்—

உத்தரே—தாத்மனுத்மானம் நா்த்மான—மவஸாதயேத்
ஆத்மைவஹ்யாத்மனே பந்து—ராத்மைவ ரிபு—ராத்மன:
6:5

சுய முயற்சியினுல் ஒருவன் தன்னேத்தானே உயர்த்திக் கொள்வானுக, தாழ்த்திக் கொள்ள வேண்டாம். ஏனெனில் மனிதன் தனக்குத்தானே நண்பனும், பகைவனுமாகிறுன்.

நாட்டின் மரபு காரணமாக தெய்வபக்தியுள்ளோரின் கருத்துக்கள் எப்படி இருந்த போதிலும், கீதை ஒரு முழுமையான சாத்திரம் என்ற முறையில் உண்மையொன்றையே சார்ந்ததாக இருக்க வேண்டும். சாதகர்களின் ஆன்மிக முயற்சி வெற்றி பெறு வதற்கு வெளிச்சக்தியின் அருள் வேண்டுமென்று நினேப்பதில் விரும்பத்தகாதது ஒன்றுமில்லே. ஆனுல் தீவிர சுய முயற்சியுடன் சேர்ந்தால்தான் இந்தக் கருத்து பயனுள்ளதாக இருக்கும். மனிதன் தன்னேத்தானே உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று கொஞ்சங்கூட சந்தேகத்துக்கு இடமில்லாதவாறு இங்கு வலி யுறுத்துகிறுர். அவர் யமுனு நதிக்கரையில் கோபியர்களுடன் சிரித்து விளேயாடிக் கொண்டிருக்கும்போது பேசியது அல்ல இது.

---

* ''வேட்கையே, எந்த வேர்களிலிருந்து நீ முளேத்து வருகிறுய் என்பது எனக்குத் தெரியும். சங்கல்பத்திலிருந்து நீ தோன்றுகிறுய். உனக்கு என் மனத்தில் இடம் கொடுக்க மாட்டேன். அப்படி இடம் கொடுக்காவிட்டால் நீ வேருடன் காய்ந்து போய்விடுவாயென்று எனக்குத் தெரியும்.''

—மகாபாரதம் சாந்தி பர்வம், 177, 25.

போர்க்களத்தின் நடுவில், அவருடைய அவதாரத்தின் நோக்கம் நிறைவேறப்போகும் நேரத்தில் கூறியுள்ள முக்கியமான செய்தி இழிமைக்கு இட்டுச் செல்லும் இயல்புகளைக் கைவிட்டு, முழுமை நெறியில் முன்னேற்றும் முயற்சிகளை மனிதன் தானே மேற் கொண்டால்தான் ஆன்மிக, பண்பாட்டுத் துறைகளில் முன்னேற முடியுமென்று பகவான் கூறுகிறார்.

அடைய வேண்டிய இலட்சியம் பற்றி எல்லோருக்கும் கருத்தளவில் தெளிவாகத் தெரிந்தேயிருக்கிறது. ஆனால் அது செயலாக உருவாவதில்லை. பார்க்கப் போனால் மனமும், உடலும் கருத்துக்கு நேர்மாறாக செயல்படுகின்றன. என்னைப் பற்றி நான் கொண்டிருக்கும் இலட்சியத் தோற்றத்திற்கும், உலகில் நாம் நடந்து கொள்ளும்போது காணப்படும் தோற்றத்திற்கும் முரண் பாடு இருக்கிறது. கருத்துக்கும், செயலுக்கும் உள்ள இந்த இடைவெளி மனிதனுடைய வீழ்ச்சியின் அளவை எடுத்துக் காட்டுகிறது.

நம் கருத்துக்கு மாறான முறையில் நடந்து கொள்ளுகிறோம் என்று கூட பலருக்குத் தெரிவதில்லை. நமது குறைபாடுகள் நமக்கே தெரியாததால், 'எனக்கு நிகர் யாருமில்லை' என்று மனப் பால் குடித்துக்கொண்டு காலந் தள்ளுகிறோம். சுயநலம் உரு வெடுத்த பலர், மற்றவர்களை 'சுயநலமிகள்' என்று ஏசும் வேடிக் கையைப் பார்க்கிறோம். அல்லவா? கண்ணாடி இல்லாத உலகில் ஒன்றரைக் கண்ணன் ஒருவன் மற்றொரு ஒன்றரைக் கண்ணனைப் பார்த்து கேலி செய்வதைக் கதையாகதான் இருக்கிறது இது.

ஒழுக்க நெறியில் சிறந்தவனாகவும், எல்லோரிடத்திலும் அன்பு செலுத்துபவனாகவும், சமூகத்துடன் இசைந்து வாழ்ப வனாகவும் இருக்க வேண்டும் என்று எனக்கு நன்றாகத் தெரிகிறது. ஆனால் உண்மையில் எப்படி இருக்கிறேன் என்பதும் தெரிகிறது. மனத்தில் நூற்றுக்கணக்கான பற்றுதல்களும், விருப்பு வெறுப்புக் களும் என்னை ஆட்டிப் படைக்கின்றன. ஆசைகளும், ஆவல் களும் பொங்கிவருகின்றன. தெரு நாய்களைவிட மோசமாக மற்றவர்களுடன் சண்டை, சச்சரவுகளிலேயே பலர் வாழ்க்கையை வீணாக்கிக் கொண்டிருப்பதை நாம் பார்த்த தில்லையா?

தான் இப்படி இரண்டு மட்டங்களில் முரண்பட்டு நடந்து கொள்வதை ஒருவன் உணராத வரையில், மதம் அவருக்கு எவ்வித நன்மையும் அளிக்க முடியாது. கருத்துக்களின் உயர் வுக்கு ஏற்ப, மனத்தையும் நடவடிக்கைகளையும் தூய்மையாக வைத்துக் கொள்ள விரும்புகிறவர்களுக்கு மட்டுமே மதம் பயனளிக்கிறது.

ஒருவன் முழுமை பெற முடியாமல் நிலைகுலைந்து போவ தற்கு காரணமே அவனுடைய மனம்தான். தோன்றி மறையும் நிரந்தரமற்ற பொருள்களில் நாட்டம் கொள்வதும், உடலின்பங் களுக்காக அலைவதும், உன்னத இலட்சியங்களை திரித்துக் காட்டும் பூதக் கண்ணுடியாக விளங்குவதும் நமது மனமே. அது புலனின்ப வேட்கைகளை நம் உள்ளத்தில் உறுதியாக நாட்டிவிடு கிறது. நமது மேலறிவுடன் அது இசைந்து விளங்கினுல் ஆன்ம உணர்வு பெறும் முயற்சியில் நாம் வெற்றி பெற்று விடலாம். ஆனுல் அவ்வாறு இசைந்து இயங்காமல் நமது மனம் நம்மைக் கீழே வீழ்த்தி விடுகிறது. ஒரு திடமான முடிவுக்கு வரமுடியாமல் அலைந்து கொண்டும், புலன் பொருள்களை நமது அறிவின் விவேக சக்தியின் ஆதிக்கத்திற்குள் கொண்டு வந்துவிட்டால், எல்லாக் கீழ்த்தர இயல்புகளையும் உயர்ந்த உணர்வு நிலைக்கு நேரடியாகக் கொண்டுவரும் முயற்சியே ஆன்மிக முறைகள் என்று ஒட்டு மொத்தமாகச் சேர்த்துக் குறிப்பிட்டு வருகிறோம்.

நம்மை பாதாளத்திற்கு இழுத்துச் செல்லும் சைத்தானின் பிடியை உதறி விடுவித்துக் கொண்டு உயர் நிலை அடையும் இந்த வேலையை ஏலத்திற்கோ, கண்டிராக்டர்களிடமோ விட்டு நாம் வெற்றி பெற முடியாது; சுய முயற்சியினுல்தான் முடியும். ஒவ்வொருவரும் தனியாக தனிமையில், தனி முயற்சி செய்வது ஒன்றே இதற்குத் தகுந்த வழி. எந்த குருவும் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள இயலாது. எந்த சாத்திரமும் இவ்வெற்றிக்கு உத்தரவாதமளிக்கமுறியாது. எந்தக் கோவிலில் போய் நின்றுலும் ஒருவருடைய இழிவுத் தன்மை உயர்ந்துவிடாது. நமது கீழ்த்தர உணர்ச்சிகளை நாமேதான் படிப்படியாக ணீக்கிக் கொண்டு, உயர்மிகு பண்புகளின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டும். இம் முயற்சியில் குரு, சாத்திரங்கள், கோயில் இவை எல்லாவற்றிற்கும் உரிய இடமிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இவை குறிப்பிட்ட அளவுக்கு உதவி செய் கின்றன. ஆனுல் நமது சாதனையில் வெற்றிபெறுவது இறுதியில் நம் சுய முயற்சியைப் பொறுத்தே இருக்கிறது.

ஒருவருடைய உள்ளத்தை அவரே பரிசீலனை செய்து பார்த்துக் கொள்ளுதல் பற்றி இக்கால உளவியல் நிபுணர்கள் பேசுகிறுர்கள். அல்லவா? இதைப் போன்ற ஒரு முறையைத்தான் இங்கு பகவான் விரித்துரைக்கிறுர். நமது பலவீனங்களை உணர்ந்து, தவறுகளைக் களைந்து விட்டு, உயர்வாழ்வு முறையை பற்றியே இயன்றவரை கடைப்பிடித்து வருதல் போன்ற உள வியல் முறைகளைப் பற்றியே கிருஷ்ணர் குறிப்பிடுகிறுர். ஆன்மிகச் செயல், அதில் வெற்றி பெறும் முயற்சியில் பெரும் பகுதி இச் சுயமுயற்சியில் அடங்கியிருக்கிறது என்றே இதற்குப் பொருள்.

மற்ற பகுதியையும் கிருஷ்ணர் இங்கு அழுத்தமாகக் கூறுகிறார். அகப் பரிசீலனை மூலம் நமது பலவீனங்களை இனங் கண்டு கொண்டு, அவற்றை ஒழித்து உயர்முறைகளை பின்பற்றினால் மட்டும் போதாது. சைத்தானிடமிருந்து மீட்ட பகுதிகளை, மீண்டும் அவன் கைப்பற்றி விடாமல் விழிப்புடனிருந்து பார்த்துக் கொள்ள வேண்டும். முன்னேற்றப் பாதையில் போகத் தொடங்கிய பிறகு மீண்டும் பழைய படுகுழிகளிலே தடுக்கி விழுந்து தாழ்ந்து விடக்கூடாது என்றும் பகவான் அதே மூச்சில் எச்சரிக்கையும் செய்கிறார்.

மனித இதயத்தில் அழியா இடம் பெற்றிருக்கும் அருமைக் கவிஞர், வியாசர், இச் செய்யுளின் பிற்பகுதியில் அற்புதக் கருத்தொன்றை இனிய சொற்களில் வடித்தெடுத்துத் தருகிறார். 'நமக்கு நண்பனும் நாமே, பகைவனும் நாமே' என்று கூறுவது பொருட் செறிவு மிக்கதாக இருக்கிறது. வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கும் ஒவ்வொருவருக்கும் இதில் பொதிந்துள்ள உண்மை விளங்கும். இதில் ஒரு தத்துவப் புதையலே இருக்கிறது. நமக்கு நாமே நண்பன் என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளும் போது, அதனுடைய முழுப் பொருளையும் உணர்ந்து அவர்கள் பேசிக் கொள்ளுவதில்லை. நம்முடைய கீழ்த்தரமான எண்ணங்களையும், செயல்களையும் எந்த நிலையிலும் நாம் சீர்த்திருத்திக் கொள்ளலாம். ஆனால் அவை ஆன்மிக செல்வாக்குக்கு உட்பட இருந்தால்தானே அவற்றை நாம் உயர்த்த முடியும்! எந்த அளவுக்கு இழிவுணர்ச்சிகள் நமது உயர்தர ஆன்மிக பண்பிடம் சரணடைகின்றனவோ, அந்த அளவுக்கு அவ்வுயர் நிலைப் பொருளை நமது நண்பனாகக் கருதலாம். இழிவுணர்ச்சிகள் உயரிய பண்பாட்டுக்கு அடிபணிய மறுத்தால் நமக்கு நாமே பகைவனாகிறோம். இறை நாட்டம், புலனின்ப நாட்டம் ஆகிய இரு மாறுபட்ட முயற்சிகளுக்கும் விசையாக இருப்பது உயிரியக்கம். இந்த இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது நம் கையில் இருக்கிறது.

ஒரு சாதகன் வெற்றி பெறுவதும், படுகுழியில் வீழ்வதும், இறுதியாகப் பார்த்தால், அவன் கையிலேயே இருக்கிறது. நம்மைப் பற்றி நாம் கொண்டுள்ள தவறான கருத்துக்களை மாற்றிக் கொண்டு, நம்மிடமுள்ள உயரும் சக்தி, சுயவளர்ச்சி வாய்ப்பு ஆகியவற்றை சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். உயருவதற்கோ அல்லது தாழ்வதற்கோ அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளும் முழுப் பொறுப்பு நம்முடையதுதான்.

எப்படிப்பட்டவன் தனக்குத்தானே நண்பன். யார் தனக்குத்தானே எதிரி என்ற பிரசினைக்கு பகவான் அடுத்து பதிலளிக்கப் போகிறார்.

பந்து—ராத்மாத் மனஸ்—தஸ்ய யேனுத்மைவாத் மனுஜித:
அனுத்மனஸ்து ஸத்ருத்வே வர்த்தேதாத்மைவ சத்ருவத்

6:6

தனது இழியியல்புகளை முறியடித்து வெற்றி பெறுபவன் தனக்குத்தானே நண்பன். அதில் வெற்றி பெருதவனுக்கு அவனுடைய சுய இயல்பே (வெளியுலகப் பகைவனைப்போல) எதிரியாகிறது.

நம்மிடமுள்ள கீழ்த்தரமான பேயுணர்ச்சிகளை களைந்தெறிய நாமே முயற்சிகளை மேற்கொள்ளும்போது, நமது தெய்வீக சக்தி நண்பனுகிறது. உடல், புலன்கள், உணர்ச்சிகள், புறவாழ்வு ஆகியவற்றுடன் இப் பிணைப்பிலிருந்து எந்த அளவுக்கு அவ்வகந்தை தன்னைப் பிரித்துக் கொள்ளுகிறதோ அந்த அளவுக்கு அது நமது உயரிய தன்மைகளின் செல்வாக்குக்கு உட்படுகிறது என்று பொருள். அப்படிப் பிரித்துக் கொள்ளும் அகந்தை ஒருவனுடைய நண்பன். கீழ்த்தர உணர்ச்சிகளிலேயே உழன்று கொண்டிருக்கும் அகந்தை ஒருவனுடைய எதிரி. ஏனெனில் நம்மிடமுள்ள உயர்நிலை சக்திகளுக்கு மாறுபட்ட நிலையில் நிற்கிறுன்.

சுருங்கச் சொல்லுமிடத்து, நமது இழிதன்மை நம்மிடத்திலுள்ள உயர்நிலைப் பண்புகளிடம் அடி பணிந்து சீரடைய முன்வந்தால், அவ்வுயரிய தன்மை நமக்கு நண்பனுகிறது. அப்படிப் பணிய வைக்க முடியாதவர்கள் தமக்குத் தாமே பகைவர்களாகிறுர்கள். இச் செய்யுள் இதற்கு முன் கூறப்பட்டதற்கு விளக்கமாக அமைந்திருக்கிறது.

ஒரு யோகாரூடனுடைய மனச் சமநிலை பற்றி முன்னரே* எடுத்துரைக்கப்பட்டது. யோக நிறைவில் அதன் இடம் என்ன? இதோ இப்போது பகவான் விளக்குகிறுர்.

ஜிதாத்மன: ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித:
சீதோஷ்ண—ஸுகது: கேஷு ததா மானப மானயோ:

6:7

தன்னைத்தானே அடக்கி, அமைதி நிலை பெற்றவரின் ஒப்புயர்வற்ற ஆன்மா, சீத—உஷ்ண, இன்ப—துன்பமான அவமானங்களுக்கிடையில் சமநிலையுடன் திகழ்கிறது.

அக வாழ்வில் ஒரு சாதகர் யோகாரூடராகி, அவருடைய மனம் தியானத்தில் ஈடுபடும்போது, எவ்வளவு சாதக, பாதகங்

* இதே அத்தியாயம், செய்யுள் 3, 4 பார்க்க.

கள் நேரிட்ட போதிலும் அவ்வுறுதியான தியானத்தில் சீர்குலேவ தில்லே. தமது நிரந்தர இயல்பின் உணர்வில் அவர் தொடர்ந்து மூழ்கியிருப்பதை உலகத்திலுள்ள எந்தச் சக்தியும் அசைக்க முடியாது.

மூன்று எதிரெதிரான இரட்டைகள் இங்கு குறிப்பிடப் பட்டிருக்கின்றன—குளிரும் வெப்பமும், இன்பமும் துன்பமும், கௌரவமும் அகௌரவமும் உலகில் ஒருவருடைய அமைதிக்கும், சமநிலேக்கும் குந்தகம் விளேவிக்கும் எல்லாவகை சாத்தியக் கூறுகளும் இவற்றில் அடங்கி விடுகின்றன.

குளிரும்—வெப்பமும்: இவை இரண்டும் உடலேப் பாதிப் பவை. அனல் பறக்கும் சூடும் நடுக்கும் குளிரும் நமது சிந்தனே களே விரிவடையவோ, சுருங்கவோ செய்வதில்லே. இது நமக்குத் தெரியும். கருத்துக்களுக்கு வேர்வை கொட்டுவதில்லே, நடுக்கம் காண்பதும் இல்லே. இவை உடலில் தோன்றும் விளேவுகள். உடலுக்கு வரும் நோய், ஆரோக்கியம், வாலிபம், முதுமை போன்ற எல்லா மாறுதல்களேயுமே இந்த இரட்டையின் மூலம் கிருஷ்ணர் குறிப்பிடுகிருர்.

இன்பமும்—துன்பமும்: இவை இர்ண்டாவதாகக் குறிப்பிடப்படும் எதிர்மாருன இரட்டை உணர்ச்சிகள். மன வட்டத்தில் தோன்றும் எல்லா மாறுதல்களும் இதன் மூலம் குறிப்பிடப்படுகின்றன. இன்ப துன்ப உணர்ச்சிகளே அனுப விப்பது உடல் அல்ல; மனம் அனுபவிக்கிறது. எல்லா வகையான உணர்ச்சிக் கொடுங்கோன்மைகளும் இந்த இரட்டையில் அடங்கிவிடுகின்றன. வாழ்க்கையில் ஒரு சமயத்தில் இல்லா விட்டாலும், மற்ஹெரு சமயத்திலாவது, இதில் ஏதோ ஒன்று ஏற் பட்டுத் தொல்லே கொடுக்கிறது. விருப்பு வெறுப்புக்கள், பாசம், பொருமை, அன்பு, கொடுமை—இப்படி எத்தனேயோ எதிரெதி ரான இரட்டைகள் நம்முடைய மன அமைதிக்கு உலே வைக்கின் றன. ஆனுல் ஒரு யோகாரூடரின் தியான உறுதியை இதைப் போன்ற இரட்டைகளினுல் ஒன்றும் செய்ய முடியாது.

கௌரவமும் அகௌரவமும் கடைசியாகக் குறிப்பிடப்படும் எதிர்மாருன இரட்டை இது. மானம், அவமானம் என்பவையெல்லாம் அறிவு மட்டத்தில் எழும் புயல்கள். அப்படி அறிவு மட்டத்தில் எழும் சலசலப்புக்கள் கூட முழுமை நிலே பெற்றவர்களே ஒன்றும் செய்ய முடியாது என்பது இங்கு கூறப் படும் பொருள். ஒரு சாதகனே மானம் அல்லது அவமானம் போன்ற கருத்துக்கள் கலக்கத்திற்கு உள்ளாக்கினுல், அவன் இன்னும் முழுமை பெறவில்லே என்பதையே அது எடுத்துக் காட்டுகிறது.

கௌரவமும் அகௌரவமும் கடைசியாகக் குறிப்பிடப்படும்

எதிர்மாறுன இரட்டை. மானம், அவமானம் என்பவையெல்லாம் அறிவு மட்டத்தில் எழும் பயங்கள். அப்படி அறிவு மட்டத்தில் எழும் சலசலப்புக்கள்கூட முழுமை நிலை பெற்றவர்களை ஒன்றும் செய்ய முடியாது. என்பது இங்கு கூறப்படும் பொருள். ஒரு சாதகனை மானம் அவமானம் போன்ற கருத்துக்கள் கலக்கத்திற்கு உள்ளாக்கினுல், அவன் இன்னும் முழுமை பெறவில்லை என்பதையே அது எடுத்துக்காட்டுகிறது.

உடல், மனம், அறிவு என்ற மூன்று மட்டங்களில் தோன்றும் எதிர்மாறுன இரட்டைகளைக் குறிப்பிடுவதன் மூலமாக, ஒருவருடைய சமநிலையைக் குலைக்கும் எல்லாத் தொல்லைகளையும் சுட்டிக்காட்டி, முழுக் கட்டுப்பாட்டுடனும், பூரண அமைதியுடனும் ஒரு சாதகன் ஆன்ம தியானத்தில் ஈடுபட வேண்டும் என்று கிருஷ்ணர் கூறுகிறுர். அறிவாளிகள்—முட்டாள்கள், நன்மை— தீமைகள், ஆதரவு—எதிர்ப்பு நிலைகள், இவ்வளவுக்கும் நடுவில்கூட தியானத்தில் ஊன்றிய யோகாரூடர் கொஞ்சம்கூட அசைந்து கொடுப்பதில்லை.

அவ்வாறுள்ள ஒருவருடைய பெருமை என்ன? உள்ளத்தை இவ்வளவு கடுமையான பயிற்சிக்கும், கட்டுப்பாட்டுக்கும் ஏன் உள்ளாக்க வேண்டும்? காரணம் பின்வருமாறு:

ஜ்ஞான விஞ்ஞான த்ருப்தாத்மா
கூடஸ்தோ விஜிதேந்த்ரிய:
யுக்த இத்—யுச்யதே யோகீ
ஸம—லோஷ்டாஸ்ம—காஞ்சன: 6:8

ஞான, விஞ்ஞான அனுபவங்களுடன் திருப்தியடைந்து தளரா உறுதியும், புலனடக்கம், மண், கல், பொன் ஆகிய எல்லாம் ஒன்றே என்ற சமநோக்கும் பெற்ற ஒருவர் இறைப் பொருளுடன் இசைவு பெற்றுவிட்ட (நிர்விகல்ப சமாதியிலுள்ள) யோகி என்று சொல்லப்படுகிறுர்.

தற்கட்டுப்பாடும், மன அமைதியும் பெற்று சாத்திரங்கள் கூறும், ஆன்ம இயல்பு பற்றியே நினைவாக இருக்கும் ஒருவர் அசையா யோக நிலை எய்துகிறுர். எல்லா சூழ்நிலைகளிலும் அவரிடம் தெய்வீகத் திருப்தி நிலவுகிறது; இங்கு கூறப்படுவது வேதாந்த சாத்திரங்களை கரைத்துக் குடித்த அறிவாளியின் மனநிறைவு பற்றி அல்ல. அதைவிட யோகியின் உள்ள நிறைவு மிக உயர்ந்தது என்று கிருஷ்ணர் கூறுகிறுர்.

நூலறிவின் மூலம் ஒருவர் பெறும் அறிவை ஞானமென்றும்,

நேரடியாகப் பெறும் ஆன்மானுபவத்தை விஞ்ஞானமென்றும் கீதை குறிப்பிடுகிறது.*

மாற்றமில்லாத, நிலைத்த (கூடஸ்த): அழிவிலா ஆன்மாவைக் குறிப்பிடும் செயல் இது. 'கூட' என்றால் உலைக் களத்தில் ஒரு பொருளை வைத்து சம்மட்டியால் அடிக்கும் அடிக்கல்; பட்டறைக்கல். இது நினைவிருந்தால், எவ்வளவு பொருத்தமாக இச் சொல் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. என்று தெரிய வரும். கொல்லன் பழுக்கக் காய்ச்சிய இரும்பை, பட்டறைக் கல் மீது வைத்து, சம்மட்டியால் அடித்து, தேவை யான உருவத்திற்குக் கொண்டு வருகிறான். எவ்வளவு அடித் தாலும் பட்டறைக் கல்லுக்கு ஒன்றுமில்லை. அதன் மீது வைத்து அடிக்கும் பொருளின் உருவந்தான் மாறுகிறது. எனவே 'கூடஸ்தன்' பட்டறைக் கல்லைப்போல் மாறாமல் இருந்து கொண்டு, நடக்கின்ற மாற்றங்களைப் பார்த்துக் கொண்டிருக்கி றான்.

முழுமையாக மலர்ந்த முனிவரும் அப்படியேதான். நிரந்தர மனநிறைவை நாடி, சாத்திரங்கள் கூறும் மெய்ப் பொருளை தன்னிடமே கண்டு, பேரானந்தத்தில் மூழ்கி விடுகிறார். அந்நிலை பெற்றவர் வாழ்க்கையின் எந்தச் சூழ்நிலையிலும் பரம சாந்த முள்ளவராகவும், சமநோக்குமுள்ளவராகவும் விளங்குகிறார். மண்ணாங்கட்டியும், வைரக்கற்களும், தங்கமும் அவருக்கு ஒன்றா கவே தென்படுகின்றன. கிடைக்காத பொருள் கிடைத்து விட்டதே என்று அவர் துள்ளிக் குதிப்பதுமில்லை, கிடைத்த பொருள் இப்படி உபயோகமற்றதாகி விட்டதே என்று கருதப் படுவதுமில்லை. ஆன்ம முழுமை பெற்ற ஒருவருடைய மனப்பாங்கு எவ்வகை இலாப, நஷ்டங்களுக்கிடையிலும் சீர் குலைவதில்லை.

எனக்கு ஒரு கனவு வந்தது. நான் திடீரென்று இலட்சாதிபதி யாகி விட்டதாகக் கனவு. நினைத்ததை எல்லாம் இனி வாங்கிக் குவித்துவிட வேண்டியதுதான் என்று திட்டம் போட்டுக் கொண்டிருக்கும் போதே, தூக்கம் கலைந்து விழித்தெழுந்து விட் டேன். சுற்றிச்சுற்றிப் பார்த்தாலும் அருகில் ஒரு சல்லிக்காசு கூட காணப்படவில்லை. பழைய ஏழ்மைதான் எங்கும் தாண்ட மாடிற்று. பசி வயிற்றைக் கிள்ளிக் கொண்டிருந்தது. கனவில் நான் இலட்சாதிபதியாக இருந்தேனே என்று நினைவு படுத்திக் கொண்டால் மட்டும் பசி தீர்ந்துவிடுமா? கனவிற் கண்ட

* இது சங்கரர் அளித்துள்ள விளக்கம். ஞானத்திற்கும், விஞ்ஞானத்திற்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்றிக் கூறுகையில் நூல்களைப் படித்துப் பெறும் அறிவு 'ஞானம்' என்றும், 'நூல்களில் படித்ததை நேரடியாக அனுபவித்துப் பெறும் ஆன்ம உணர்வு 'விஞ்ஞானம்' என்றும் இன்றைய வேதாந்தத்தின் தந்தை யாகிய சங்கரர் விளக்கம் தருகிறார்.

பொற்குவியல் எதற்காவது பயன்படப் போகிறதா? அவ்வாறே மன அறிவு உலகத்தைக் கடந்து ஆன்மானுபவம் பெற்ற ஒருவருக்கு மண்ணும், வைரமும், தங்கமும் வெறும் அற்பப் பொருள்களே. இவற்றில் எதுவும் அவருடைய பேரின்பத்தை இம்மியளவும் அதிகரிக்காது. பேரானந்தத்தின் பரிபூரண உரிமையாளர் அவர். தேவலோகத்திலுள்ள செல்வங்களுக்கும் அதிபதியான குபேரனுக்கு, இம் மண்ணுலகிலுள்ள ஒரு நாடு கிடைத்து விட்டால், அதைப் பற்றி மகிழ்ச்சியடைந்து ஆனந்தக் கூத்தாடுவானா, என்ன?

ஸுஹ்ருன்—மித்ரார் —யுதாஸீந
மத்த்யஸ்தத்—த்வேஷ்ய—பந்துஷு
ஸாதுஷ்வபி ச பாபேஷு
ஸமபுத்திர்—விசிஷ்யதே 6:9

நல்லவர்கள், நண்பர், பகைவர்கள், எதிலும் ஒட்டாதவர்கள், நடுநிலை வகிப்போர், வெறுப்பூட்டுவோர், உறவினர்கள், நேர்மையாளர், நேர்மையற்றோர் இவர்கள் எல்லோரையுமே சமமாக நினைத்து நடந்து கொள்ளும் ஒருவருக்கு ஒப்பாருமில்லை, மிக்காரும் இல்லை.

முழுமை பெற்ற ஒருவர் உலகப் பொருள்களில் சம நோக்குக் கொண்டவர் என்று முந்திய செய்யுள் எடுத்துரைத்தது. உலகத்தில் பொருள்கள் மட்டுமின்றி, மனிதர்களும் இருக்கிறார்கள். அவர்களிடம் முற்கூறிய யோகி எவ்வாறு நடந்து கொள்ளுவார்? மாற்றங்கள் நிறைந்த இவ்வுலகின் அடிப்படையாக இருந்து இயக்குபவர் மாற்றமிலாப் பரம்பொருளே. இறைவனே எல்லாவற்றிலும் கலந்து நிற்கும்போது, இறையுணர்வு பெற்ற யோகி யாருக்கும் பயன்படாமல் மக்களிடமிருந்து ஒதுங்கி விடுவாரா? எல்லாமே வீண் கனவென்று புறக்கணித்து விட்டு இருப்பாரா? இப் பிரச்னைக்கு இங்கு பதிலளிக்கப்படுகிறது.

மெய்யுணர்வு பெற்றுத் திகழும் யோகி எல்லோரிடமும் அன்பும், ஆதரவும் காட்டி சம்நோக்குடன் நடந்து கொள்ளுவார். நண்பர்கள், எதிரிகள், நல்லவர், கெட்டவர், உறவினர் முதலிய எல்லோரும் அவருடைய நோக்கில் ஒன்றுதான். அவருடைய பரந்த உள்ளத்தில் எல்லோருக்கும் இடமுண்டு. அவர்களுக்கு உதவ வேண்டுமென்ற ஆர்வமும், அன்பும் அவரிடம் இருக்கும். நல்லவர் கெட்டவர் என்ற பாகுபாடுகள் அவருடைய மனத்தில் ஏற்படுவதில்லை. எனவே எல்லோரிடமும் அவர் அன்பு செலுத்த முடிகிறது. ஒருவன் பாவம் செய்வதைப் பார்க்கும் போது அவருக்கு வெறுப்புத் தோன்றுவதில்லை. தனது உண்மை

இயல்பை இவனுடைய அகந்தை இன்னும் தெரிந்து கொள்ள வில்லையே'' என்ற இரக்கமே தோன்றுகிறது. 'ஒருவருடைய ஆன்மா தனது உண்மை இயல்பைத் தெரிந்து கொள்ளாமல் செய்யும் தவறுகளுக்குப் பெயர்தான் பாவம். ''பாவத்திற்காக யாரோ ஒருவர் வந்து நம்மை தண்டிப்பதாக நினைப்பது தவறு. பாவமே நம்மை தண்டிக்கிறது'. என்று இராமதீர்த்தர் மிக அழ காக எழுதியிருக்கிறுர்.

நம் அகத்தே உள்ள ஆன்மாவை உண்மையில் உணர்ந்து கொண்ட பிறகு ஒருவர் ஆன்மாவாவே ஆகிவிடுகிறுர். எண்ணற்ற தோற்ற வேறுபாடுகளுக்கு இடையிலும் அவர் ஒருமைப்பாட்டையே காணுகிறுர். வெளியுலகில் உள்ள கோடானுகோடி ஒலிகள் அவருடைய காதுக்கு ஒரு லயத்தை ஒட்டியே இசைவு கீதமாகவே கீதமாகவே படுகிறது. எங்கும் விரிந்துள்ள ஆன்மா தன்னுள்ளும் இருக்கிறதென்ற உணர்வு நிலைத்தவுடனே இப் பிரபஞ்சமெல்லாம் அவருடைய ஆன்மாவாகிவிடுகிறது. பிரபஞ்சத்தின் ஒவ்வொரு பகுதியுடனும் அவருடைய உறவு, சமநோக்கின் அடிப்படையில்—எல்லோரிட மும் ஒரே மாதிரியாக—அமைகிறது. காயம், காலிலோ, கை யிலோ, தலையிலோ எங்கு பட்டாலும், அது எனக்குப் பட்ட காயந்தான். ஏனெனில் கை, கால், தலை ஆகிய உறுப்புக்களுடன் நான் இரண்டறக் கலந்து இருக்கிறேன்.

எந்த முறையைப் பின்பற்றினுல் ஆன்ம உணர்வு பெறும் இப் பெரு முயற்சியில் வெற்றி அடையலாம்? பதில் பின்வருமாறு:

யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம் ரஹஸி ஸ்த்தித:
ஏகாகீ யதசித்தாத்மா நிராசீர பரிக்ரஹ:

6:10

ஒரு யோகி தன்னந்தனியாக ஒதுங்கி, உடலையும் உள்ளத் தையும் அடக்கி, நம்பிக்கை, பேராசைகளை எல்லாம் கைவிட்டு மனத்தை இடையருது ஒருமுகப்படுத்தி தனியனுக இருப்பானுக.

சுய விருப்பத்தினுல் இறைவன் கிருஷ்ணராக உருவெடுத்து இவ்வுலகில் தோன்றியதாக மகாபாரதம் கூறுகிறது. அதனுல் தான் அவரை கிருஷ்ண பரமாத்மா என்று சொல்லுகிறுர்கள். சுயவளர்ச்சி அடைந்து முழுமை பெறும் முறைகளை அவர் தமது ஆருயிர் நண்பனும், சகாவுமான அர்ஜுனனுக்கு எடுத்துரைக்கி ருர். ஒருவன் எவ்வித முயற்சியும் செய்யாமல், எல்லாப் பொறுப்பையும் இறைவன்மீதே போட்டுவிட்டு, வேலையைச் சாதித்துக் கொள்ளும் இரகசிய முறை எதையும் கிருஷ்ணர் சொல்லவில்லை. சாதகர்களுக்கு அப்படிப்பட்ட தவருன

நம்பிக்கை தோன்ற இடம் கொடுத்து விடக் கூடாது என்று அவர் நினைப்பதைப் போல் செய்யுளின் தொடக்கமே அமைந்திருக்கிறது. ''தற்கட்டுப்பாடு மிக்க யோகியே, இடையறுது உன் உள்ளத்தை உறுதியான தியானத்தில் ஈடுபடுத்து'' என்று பகவான் கூறுகிருர். ஒருமுகமான தியானத்தின் மூலமாகவே ஒருவன் தனது பலவீனங்களை வென்று முழுமை முயற்சியில் சுயமலர்ச்சி பெற முடியும்.

தீவிர ஒருமுகத் தியானத்திற்குத் தேவையான விவரங்களையும் இச் செய்யுள் அளிக்கிறது. 'தன்னந்தனியாக இருந்து தியானம் செய்க.' பலர் ''தியானம்'' என்ற வார்த்தைக்கு இல்லாத அர்த்தமெல்லாம் கற்பித்து, அச் சொல்லைக் கேட்டாலே மற்றவர்கள் நடுங்கும்படி இப்போது செய்து வருகிருர்கள். காட்டிலோ, மலைக் குகைகளிலோ போய் தன்னந்தனியாக உட்கார்ந்து கொண்டால்தான் தியானம் செய்ய முடியும் என்று சொல்லுவது வெறும் கதை. அமைதியாக ஒருவன் தன்னுடைய அறையிலேயே தனியாக உட்கார்ந்து கொண்டு, உடலும் மனமும் பற்பல திசைகளில் ஓடாமல் கட்டுப்படுத்தி தியானம் தொடங்கலாம்.

வெளியுலகத்திலிருந்து மனத்தை உள்ளிழுத்துக் கொண்டால்தான் ஒருவருக்குத் தனிமை கிடைக்கும். மனத்தில் இச்சைகளுடனும், புலன் பொருள்களில் ஆவல்களுடனும் காட்டில் போய் உட்கார்ந்தால் மட்டும் போதாது அவனுக்குத் தனிமை வந்துவிட்டது. 'தனிமை'க்கு இச் செய்யுளில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கும் சொல் 'ரகசி' என்பது. இரகசியம் என்ற பொருளும் அதில் தொனிக்கிறது. மதம் ஒருவருடைய சுய விளம்பரத்திற்குச் செய்யும் வானெலி ஒலிபரப்பாக இருக்கக் கூடாது. அது மனத்தில் இரகசியமாக ஒருவர் பின்பற்றும் வாழ்க்கைப் பண்பு. ஒருவருடைய சிந்தனைகளையும், வாழ்க்கையின் மதிப்புக்களையும் அது உயர்த்துவதாக இருக்க வேண்டும்.

தனியனுக (ஏகாகி)—ஒருவர் தியானத்தை மேற்கொள்ளும் போது அவருக்கு வரும் மன அமைதி, அன்றாட வாழ்வில் அவர் பின்பற்றும் சுயக் கட்டுப்பாட்டைப் பொறுத்திருக்கிறது. பொருள் சேர்ப்பதிலும், அதைப் பெருக்கிக் குவிப்பதிலுமே கண்ணுங் கருத்துமாக காலந் தள்ளிக் கொண்டிருப்பவர்களுக்கு சுயக்கட்டுப்பாடு வராது. பொருள் சேர்ப்பதே குறியாக திட்டங்கள் போட்டுக் கொண்டிருக்கும் வேலையைக் கைவிட வேண்டுமென்பதை, ''நம்பிக்கையை கைவிட்டு'' (நிராசி) என்ற பகுதி சுட்டிக் காட்டுகிறது. மேலும் மேலும் சேமித்துக் குவித்து வைத்தலையும் அதைப் பாதுகாத்துப் பெருக்குதலை ''பேராசை'' (அபரிக்ரஹ) என்ற சொல் மூலம் இச் செய்யுள் கண்டிக்கிறது.

இவ்வகை சுயக் கட்டுப்பாடுகளிலும், மன அறிவுப் பயிற்சி களிலும் நிலைத்த உறுதி பெற்ற பிறகு, தனிமையில் தியானத்தில் மூழ்கியிருக்கும் ஒருவர் உண்மையான சாதகர். கிடைத்தற்கரிய பெரும்பேறு பெறும் முயற்சியில் அவர் இறங்கி விட்டதாகக் கருத லாம்.

யோக முயற்சியில் ஈடுபடும் ஒருவர் எப்படி உட்கார வேண்டும், என்ன உணவு அருந்த வேண்டும், எவ்வாறு ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும் என்ற விவரங்களையும் பகவான் தொடர்ந்து அறிவிக்கிறார். இவை எல்லாம் யோகப் பயிற்சிக்கு உதவுபவை. முதலில் அமரும் முறை பற்றி இங்கு கூறுகிறார்.

சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திர—மாஸன—மாத்மன:
நாத்யுச்ரிதம் நாதிநீசம் சைலாஜின குசோத் தரம் 6:11

மிக உயரமாகவோ, மிகத் தாழ்வாகவோ இல்லாத சுத்த மான இடத்தில், தருப்பைப் புல், தோல், துணி ஆகியவற்றை ஒன்றன் மீது ஒன்றாகப் போட்டு தனக்கு உறுதியான ஆசன மொன்றை அமைத்துக் கொண்டு—

அமைதியும் சமநோக்கும் பெறுவதற்கு தியானமே சிறப்பு மிக்க வழியென்பதால் கிருஷ்ணர் அதற்குத் தேவையான எல்லா விவரங்களையும் முழுமையாகத் தருகிறார். தியானத்திற்கு அமரும் போது ஒருவர் எப்படி உட்காரவேண்டும், அவருடைய இலட்சி யம் எதுவாக இருக்கும், அதை அடையும் வழி என்ன என்பவை யெல்லாம் சில செய்யுட்களில் விவரிக்கபடுகிறது. இங்கு தியானத் திற்கு வசதியான இடமும், ஆசனம் அமைத்துக் கொள்ளும் முறையும் எடுத்துரைக்கப்படுகின்றன.

ஒரு சுத்தமான இடத்தில்—சுற்றுப்புறத்திற்கும் மனித உள்ளத்திற்கும் நேரடித் தொடர்பு இருக்கிறது. ஆகையால் சுத்த மான இடத்தில் தியானத்திற்கு உட்கார வேண்டும். இடம் சுத்த மாக இருந்தால்தான் சாதகரின் மனமும் சுத்தமாக இருக்க வாய்ப்புண்டு. தவிரவும், ஈ, கொசு, மூட்டைப் பூச்சி, எறும்பு முதலியவற்றின் தொல்லைகள் இல்லாமலிருந்தால் தொடக்க நிலையிலுள்ள சாதகரின் தியான முன்னேற்றத்திற்கு வசதியாக இருக்கும். அவருடைய நோக்கு உட்புறமிருக்கும்போது, இதைப் போன்ற இடையூறுகளால் தியானம் கலையாதிருக்கும் என்று பல உரையாசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள்.

சாதகர் தமது ஆசனத்தின் மீது உறுதியாக (ஸ்திரம்) அமர வேண்டுமென்று சொல்லப்படுகிறது. பக்கவாட்டிலோ, முன்னும் பின்னுமாகவோ ஆடாமல், ஒரே நிலையில் உட்கார்ந் திருக்கவேண்டும். உடல் ஒரு நிலையில் இல்லாவிட்டால், சிந்தனை

யும் அலை பாய்ந்துகொண்டே இருக்கும். மனம் அமைதி பெருது. இதைச் சாதாரணமாக எல்லோரும் கவனித்திருக்கலாம். நாம் மிக ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும்போது, உடலும் அசையாதிருக்கும். முதுகெலும்பு நேராக நிற்கும் முறையில், கைகள் முன்னிருக்க, கை விரல்களைக் கோர்த்து உட்காருவது நல்லது.*

ஒருவர் ஆசனம் அமைத்துக் கொள்ளும் இடத்தைப் பற்றிய விவரங்களையும் கிருஷ்ணர் சொல்லுகிருர். தியானத்திற்கு அமரும் இடம் மிக உயரமாகவும் இருக்கக் கூடாது. மிகத் தாழ்வாகவும் இருக்கக் கூடாது. உயரம் மிக அதிகமாயிருந்தால் உடல் நினைவற்று இருக்கும்போது கீழே விழுந்து மன்டையுடைந்து விடுமோ, கை கால் முறிந்து விடுமோ என்ற எண்ணங்கள் வந்து கொண்டிருக்கலாம். இவை வெளியுலக உணர்ச்சிகளிலிருந்து அறவே விடுபட்டு உள்ளுணர்வில் மூழ்கியிருப்பதற்கு இடையூருக இருக்கும். அவ்வாறே, மிகக் கீழாக ஆசனம் இருந்தால், அல்லது தரை மீதே உட்கார்ந்து விட்டால், மற்ருெரு வகை ஆபத்து. பூமிக்கு அடியிலுள்ள குகையில் போய் அமருபவருக்கு அங்குள்ள ஈரப்பதத்திஞல் உடல்வலி எடுத்துவிடும். கீல்வாதம் வந்துவிடும். தியான காலத்தில் இதயம் கொஞ்சம் மெதுவாக வேலை செய்யத் தொடங்குகிறது. இரத்த அழுத்தம் சற்று குறையும் அந்த அளவுக்கு நமது வெளி நோக்கு குறைந்து, உள் நோக்கு அதிகரிக்கிறது. வேறு திசையிலே நமது சக்தியெல்லாம் பாய்ந்து கொண்டிருக்கும் அந்த நேரத்தில், உட்காருமிடத்திலுள்ள ஈரப் பதம், கீல்வாதம் வந்து மூட்டுக்கு மூட்டு வலி தோன்ற வாய்ப்பளிக்கும். இதைப் போன்ற தொந்தரவுகளைத் தவிர்ப்பதற்காவே தியானத்திற்கு ஏற்ற இடம் பற்றி எச்சரிக்கை செய்யப்பபட்டிருக்கிறது.

நுணுக்கமாக எல்லாவற்றையும் சொல்லும்போது ''சாதகருக்கு இதுகூடத் தெரியாதா?'' என்று நினைத்து சில விவரங்களை கீதை சொல்லாமல் விட்டு விடுவதில்லை. தியானத்திற்கு உகந்த இடம், மட்டம் ஆகியவற்றைப் பற்றி இவ்வளவு விரிவாக எல்லாவற்றையும் எடுத்துரைப்பததே அதற்கு உதாரணம். தருப்பைப் புல் பாயை முதலில் போடு, அதன் மேல் மான்தோல் போன்ற ஏதோ ஒரு தோலை விரி, அதன் மேல் ஒரு துணியை விரித்துப் போட்டு உட்கார், என்று கூறுவதெல்லாம் நீண்ட தியானத்தில் அமருபவர்களுக்கு உதவி செய்வதற்காகவே. மாரிக் காலத்தில் ஈரப்பதம் அவர்களை பாதிக்காமலிருக்கவும், அமருமிடத்தில் வெப்பம் தோன்றச் செய்யவும் தருப்பைப் புல் உதவுகிறது. ஆனுல் அதன் மீது விரிக்கப்படும் மான் தோல் கோடைக் காலத்

தில் வெப்பத்தை அதிகரித்து விடலாம். மேலும் சிலருக்கு இயற்கையாகவே தோல் மீது உட்காருவது உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. தியானத்தில் ஆழ்ந்திருக்கும் போது சிலருக்கு சற்று அதிகமாகவே வேர்வை வரும். இந்த நிலையில், தோல் விரிப்பு ஒரு சங்கடமாக இருக்கும். இதனால்தான் அதன் மீது ஒரு துணியைப் போடும்படி கூறப்பட்டிருக்கிறது.

இவ்வாறு தயாரிக்கப்பட்ட தியான பீடத்தில் திடமாக அமர்ந்த பிறகு மனத்தினாலும், அறிவினாலும் அவர் செய்ய வேண்டியது பற்றி அடுத்து விவரிக்கப்படுகிறது.

தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா யத—சித்தேந்த்ரிய க்ரிய:
உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத் யோக—மாத்ம விசுத்தயே
6:12

புலன்களையும், மனத்தின் (பல்வேறு வகை) கற்பனைகளையும் அடக்கி, உள்ளத்தை ஒருமுகமான நிலையில் வைத்த பிறகு ஆசனத்தில் அங்கு அமரும் சாதகன் தன்னை தூய்மையாக்கிக் கொள்ளுவதற்கு யோகப் பயிற்சி செய்வானாக.

ஆசனம் அமைத்து உட்கார்ந்து விடுவது மட்டுமே யோக மாகிவிடாது. ஆன்ம நாட்ட மனப்பான்மையை வளர்க்க அப்படி ஆசனம் அமைத்து அமரவேண்டியது அவசியந்தான். ஆனால் அது மட்டிலுமே ஆன்மிக வளர்ச்சிக்கு நம்மை இட்டுச் செல்லப் போதுமானது என்று நினைத்துவிடக் கூடாது.

உட்கார்ந்த பிறகு என்ன செய்ய வேண்டும் என்று இங்கு விளக்கப்படுகிறது. முந்திய செய்யுளில் கூறியவாறு அமர்ந்து தனது மனத்தையும் அறிவையும் இறைவனைப் பற்றிய சிந்தனை யில் நிலைநாட்ட வேண்டும். மனத்தை ஒருமுகப்படுத்த முடியாத வர்கள் சாதக முயற்சியில் வெற்றி பெற முடியாது என்பதே பகவான் கூறும் முதலாவது அறிவுரை. ஏற்கனவே பலவகைக் குழப்பங்களுக்கிடையிலுள்ளவர்களைப் பார்த்து, ''உங்கள் மனத்தை ஒரே குறியில் வைக்கப் பழகுங்கள்'' என்று சொல்லு வது சுலபம். அதைச் செய்வது எப்படி என்று கூறினாலொழிய அது வெறும் தத்துவப் பிரசங்கமாகவே இருக்கும். கருத்தளவிலுள்ள தத்துவங்களை திட்டவட்டமாக கடைப்பிடிக்க வழி காட்டும் நூல் என்ற முறையில், கீதை நமது மனத்தை ஒருமுகமான நிலை நிறுத்த ஒரு முறையையும் இங்கு எடுத்துக் கூறுகிறது.

மனத்தின் கற்பனைகளையும், புலன்களின் போக்கையும் அடக்கி வைத்து—கிருஷ்ணர் தாம் கூறிய அறிவுரையின் விளக்க மாக இதை எடுத்துரைக்கிறார். சாதாரணமாக மனம் ஒருநிலைப் பட்டுத்தான் இயங்கும். ஆனால் எவ்வித இயக்கத்திற்கும் இடமில்

லாத சந்தடியற்ற அமைதி நிலவந்ததும் அது திகைத்துக் குழம்பி விடுகிறது. தனது சொந்தக் கற்பனையிலிருந்து எழும் உட்கொந்தளிப்புகளினுலோ அல்லது புலன்கள் தோற்றுவிக்கும் மருட்சிகளினுலோ பைத்தியம் பிடித்து விடுவதைப் போன்ற நிலையே கூட மனத்திற்கு சில சமயங்களில் ஏற்படுகிறது. உன் சக்தியை இப்படி வீணுக்கும் இரு வழிகளையும் அடைத்து விட்டால் மனம் தன்னியல்பான ஒருமுகத்தன்மையைப் பெறுகிறது.

இதற்கு முன் கூறியவாறு இருக்கை தயாரித்து அமர்ந்து, மனக் கற்பனைகளையும், புலன்களின் தறிகெட்ட ஓட்டங்களையும் அடக்குவதன் மூலமாக மனத்தை ஒரே குறியில் நிறுத்தி யோக முயற்சியில் ஈடுபடுமாறு சாதகருக்கு ஆலோசனை கூறப்படுகிறது. ஆன்மிகப் பொருளை இலட்சியமாகக் கொண்டு இடையரு தியானத்தில் மூழ்கியிருத்தலையே இங்கு அகத்துறை யோகமென்று கிருஷ்ணர் குறிப்பிடுகிறுர்.

இந்த வகை தியானத்தினுல் உடனே ஆன்ம அனுபவம் கிடைத்து விடுமென்று யாரும் நினைத்துவிடக் கூடாது என்பதற்காகவே, அவர் அதன் பயனையும் தெளிவாக்குகிறுர். தியானத்தினுல் அகத் தூய்மை உண்டாகுமென்று மட்டுமே சாத்திரம் இங்கு உறுதி கூறுகிறது. கலக்கமே மனத்தின் தூய்மையற்ற நிலை. கலக்கமில்லாதிருப்பதே தூய்மை பெற்ற நிலை. தன்னைத் தானே கட்டுப்படுத்திக்கொண்டு, தியானத்தினுல் ஒரு சாதகர் உள்ளத் தூய்மை பெறும் போது, கண்ணுடி போன்ற அவ்வுள்ளத்தில் பரம்பொருள் பிரதிபலிப்பதைக் கண்டு, தனது உண்மையான இறை இயல்பை உணருகிறுர். கண்ணுடியில் பார்த்து நமது முகத்தை நாமே தெரிந்து கொள்வதைப் போலத் தான் இதுவும்.

ஸமங்காய—சிரோ—க்ரீவம் தாரயன்—னசலம் ஸத்திர:
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசஸ்—சானவலோகயன்:

*6:13*

தலையும், கழுத்தும் ஆடாமல் நிமிர்ந்திருக்கும் வகையில் உடலை உறுதியாக அமர்த்திக் கொண்டு, இங்குமங்கும் பார்க்காமல், மூக்கு நுனியில் அவன் பார்வையைச் செலுத்துவானுக.

தியானத்தில் அமருவதற்கேற்ற இருக்கை தயாரித்துக் கொள்வதையும், சரியாக அதில் உட்காரும் முறையையும் தெரிவித்த பிறகு, அப்படி அமருபவரின் மனமும், அறிவும் என்ன செய்ய வேண்டுமென்று இங்கு கிருஷ்ணர் விவரிக்கிறுர். புலனேட்டத்தையும், கற்பனையையும் அடக்கி, மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டும் என்று அவர் ஏற்கனவே கூறி

விட்டார். இப்போது மேலும் சில விவரங்கள் எடுத்துரைக்கப்படுகின்றன. முதுகெலும்பு நேராகக் குத்திட்டு நிற்குமாறு உடலை உறுதியாக அமர்த்திக் கொள்ள வேண்டும். தலையும் கழுத்தும் நிமிர்ந்திருக்க வேண்டும். உடலை உறுதியாக வைத்துக் கொள்ள வேண்டுமென்று குறிப்பாகக் கூறியிருப்பதன் காரணம் அது தான்.

உறுதியாக இருக்கவேண்டுமன்று சொல்லியிருப்பதால், வில்லில் பூட்டிய நாண் போல விறைத்துக் கொண்டு உட்காரக் கூடாது. பக்கவாட்டிலோ, முன்பின்னாகவோ ஆடாமல், நிலையாக இருப்பதையே 'உறுதி'யாக என்று கூறப்பட்டிருக்கிறது. உடலை சுகமான நிலையில் வைத்துக் கொண்டு உட்கார வேண்டும்.

மூக்கின் நுனியைப் பார்க்கவேண்டும்—இதையும் வார்த்தைக்கு வார்த்தை பின்பற்றுவதாக நினைத்து கரு விழிகளுடன் போராடிக் கொண்டிருக்கக் கூடாது. பாதி மூடிய இமைகளின் மூலமாக, மூக்கின் நுனியைப் பார்க்க வேண்டும் என்று சிரமப்பட்டு கரு விழிகளை நகர்த்தும் பல சாதகர்களுக்கு தலைவலி, கிறுகிறுப்பு, உடல் ஓய்ச்சல் போன்ற பல துன்பங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இதைப் போன்ற இன்னல்களைத் தவிர்க்க வேண்டும். இதைப் பற்றி சங்கரர் எழுதியுள்ள கருத்துரையில் நமக்குச் சுலபமான சரியான வழி காட்டியிருக்கிறார். ''தியான காலத்தில் ஒருவருடைய பார்வை தமது மூக்கு நுனியைப் பார்ப்பது போல இருக்க வேண்டும்'' என்று அவர் விளக்கியிருக்கிறார். தமது யுக்தியைக் கொண்டு புதிய அர்த்தத்தை அதில் அவர் புகுத்தவில்லை என்பதை அவ்வரியில் அடுத்துள்ள வார்த்தைகளே தெளிவாக்குகின்றன.

அங்குமிங்கும் பார்க்காமல்—மூக்கு நுனியைப் பார்க்க வேண்டுமென்று தாம் கூறியது எந்தப் பொருளில் என்பது கிருஷ்ணருடைய இச் சொற்களில் வெளியாகிறது. தியானம் கலையக் கூடாது, மனம் சுற்றியிருக்கும் பொருள்களைப் பற்றிக் கொண்டு ஊசலாடக் கூடாது என்பதற்காகக் கிருஷ்ணர் அவ்வாறு கூறியிருக்கிறார். கண்கள் போகிற இடத்திற்கு மனமும் போகும். ஒருவன் குழப்பமடைந்திருக்கும் போது அவனுடைய பார்வை ஒரு நிலையில் இருக்காது. ''அவனைப் பார்த்தால் ஏதோ சற்று விசித்திரமான ஆசாமியைப் போல் தோன்றுகிறதே; சந்தேகப்படக் கூடிய முறையில் நடந்து கொள்ளுகிறானே—'' என்று நினைக்கிறோமே, அது ஏன்? அவனுடைய பார்வை ஒரு நிலையில் இல்லாமல் இருப்பதைக் கண்டு அவ்வாறு முடிவு கட்டுகிறோம். ஒரு பிரச்னையில் எவ்வித முடிவுக்கும் வர முடியாமல், உறுதியற்று இருக்கும் ஒருவனைப் பாருங்கள். அவனுடைய

கண்கள் அவன் குழப்பத்திலிருக்கிறுன் என்பதை நிச்சயமாக நமக்குத் தெரிவித்து விடும்.

ப்ரசாந்தாத்மா விகதபீர்--ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்த்தித:
மனஸ்—ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: 6:14

உள்ளத்தில் சலனமோ, பயமோ இல்லாமல், உறுதியான பிரம்மச்சரியத்திலே நிலேத்து மனத்தை அடக்கி, சமநிலேயுடன் என்னைப் பற்றிய நினைவாக என்னை அடைவதையே இறுதி இலட்சியமாகக் கொண்டு அவன் அமர்ந்திருப்பாஞக.

ஒரு சாதகர், குறிப்பிட்ட நேரத்திற்கு காலத்திற்கு இவ்வாறு செய்யும் தியான முயற்சிகளின் விளைவாக, மேலும் நுணுக்கமான அற்புத பேரமைதி அவருடைய உள்ளத்தில் வருகிறது. இவ்வனுபவத்தை சாதகரே உணரலாம். இதன் சிறப்பைக் காட்டும் முறையில் பகவான் இந்த அமைதியை ‘பிரசாந்தம்’ என்று குறிப்பிடுகிறுர். எல்லேயற்று கடல் போல் விரிந்து கிடக்கும் இப்பேரானந்த, பெருநிறைவுச் சூழ்நிலேயில், சாதகரின் உள்ளிருக்கும் ஆன்மா தனது இறையியல்பை வெளியிடும் வாய்ப்புத் தோன்றுகிறது. மெய்ப்பொருள் அவ்வாறு வெளியாகும் முறையில் சாதகருக்குப் பயிற்சி அளிக்கலாம்.

இறையுணர்வு தோன்றத் தொடங்கும் இக் காலத்தில் ஆகாய வெளியில் உடல் பறந்து கொண்டிருப்பது போல பயமாக இருக்கும். ஆனுல் முயற்சியைக் கைவிடாமல் தியானத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தால், மெது மெதுவாக யோகியின் உள்ளத்திலுள்ள பழைய வாசனைப்புண்கள் அறுகின்றன. தளேகளில் இருந்து விடுதலே அடைந்து எழும்பி, உலகத்திற்கு வெகு தூரம் அப்பாற்பட்டு வந்து விட்டதாகவும் விவரிக்க இயலா சூனியத்தில் கரைந்து கொண்டிருப்பதாகவும் ஒரு வகை பயம் உண்டாகும். குறுகிய எல்லேக்குள் அடங்கிக் கிடந்தே பழக்கப்பட்ட அகந்தைக்கு இவ்வாறு மகத்தான தெய்வீக, எல்லேயற்ற வாழ்வு ஒன்றை எட்ட முடியும் என்று நம்புவது கூட கஷ்டமாக இருக்கும். இதை விவரிக்கும்போது ஒரு கதை நினைவுக்கு வருகிறது. கூடை கூடையாக வைத்திருக்கும் மீன்களுக்கு நடுவிலேயே தூங்கிப் பழக்கப்பட்ட ஒரு மீனவப் பெண்மணி, ஒரு நாள் பூக்கடை ஒன்றில் தங்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது. நறுமணமிக்க மலர்க் குவியல்களுக்கிடையில் அன்றிரவு படுத்துக் கொண்டாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லே. அவள் கொண்டு வந்திருந்த மீன் கூடையை அருகில் கொண்டு வந்து வைத்த பிறகுதான் அவள் தூங்கிஞள். பழைய துயரங்களேக் கைவிட்டு, மட்டற்ற பேரானந்தத்தின் எல்லேகளில் காலடி எடுத்து வைக்கும்போது, அப்புதுமையே பயத்திற்குக் காரணமாகிறது.

ஆன்மிக முன்னேற்றத்திற்கு இந்தப் பயம் சாவு மணி அடித்துவிடும். ஓரளவு முன்னேற்றம் பெறத் தொடங்கியிருந்தால் கூட, அதையும் உதறி எறிந்துவிட்டு, இந்த வம்பே வேண்டாமென்று ஓடிவிடத் தோன்றும்—இந்த பயத்தினல் சாத்திரங்களே ஊன்றிப் படிப்பதன் மூலமாகவும், தியானத்தில் தொடர்ந்து ஈடுபட்டிருப்பதன் மூலமாகவும், பயம் அடியோடு மறைந்து, முழுமன அமைதி பெற்ற போதிலும், தியான இலட்சியத்தில் வெற்றி கிட்டாமற் போகலாம். பிரம்மச்சரியத்தில் வேரூன்றி நிற்கவில்லே என்ருல், சாதகரின் முயற்சிகள் வீணுகி விடக் கூடும்.

பிரம்மச்சரியமென்ற துறவு—உபநிடதங்களில் பிரம்மச்சரியமென்று சொல் அடிக்கடி உபயோகப்படுத்தப்படுகிறது. ஆனுல் அது கிருஷ்ணர் வாயிலாக வரும்போது—அதுவும் கீதைச் சூழ்நிலேயில் அவர் அச்சொல்லேப் பயன்படுத்தும் போது, மிக விரிந்த பொருளில் பயன்படுத்துவதாகத் தோன்றுகிறது. பொதுவாக பிரம்மச்சரியம் என்ருல் திருமணமாகாத நிலே, பாலுணர்ச்சியைக் கட்டுப்படுத்திய நிலே என்று பொருள் கொள்ளபடுகிறது. பாலுணர்ச்சியைக் கட்டுப்படுத்துவது மட்டுமின்றி, புலன் போக்குகளேயும், புலனின்ப வேட்கைகளேயும் அடக்கி வைத்தலேக் குறிப்பிடுவதற்குக்கூட சாத்திரங்கள் இச் சொல்லேப் பயன்படுத்துகின்றன. புத்திசாலித்தனமாகத் தன்னேச் சுற்றி ஓர் அரண் அமைத்துக் கொண்டாலொழிய, வெளியுலகப் பொருட் கவர்ச்சி, வெள்ளம்போல மனத்தினுள் பாயத் தொடங்கி, முடிவற்ற குழப்பங்களேத் தோற்றுவிக்கிறது. அதனுல் கலக்கமுற்ற உள்ளம் நிச்சயமாக பலவீனமடைந்து, அழிந்து விடுகிறது. இப்பொருளிலும் பிரம்மச்சரியமென்ற சொல்லேப் பொதுவாக நமது சாத்திரங்கள் உபயோகப்படுத்துகின்றன.

இது ஒரு நோக்கம் பற்றியது. மனம் வெளியுலகப் பொருள்களில் லயிக்காமல் தடுப்பதைக் காட்டும் பொருள். ஆனுல் இதைத்தவிர இச் சொல்லுக்கு ஆழ்ந்த மற்ருெரு அர்த்தமும் உண்டு. இச் சொல்லே பிரம்மசரியம் என்று இரு பகுதிகளாகப் பிரித்து, ''பிரம்மனே நாடும் பாதையில் செல்பவன்'' என்றும் பொருள் கொள்ளலாம். இடையருது ஆன்ம சிந்தனேயில் மூழ்கியிருந்தால்தான், வெளிப் பொருள்களிலிருந்து மனதை உள்ளிழுத்துக் கொள்ளலாம். இவ்வாறு பொருள் கொண்டால், கிருஷ்ணரின் அறிவுரை மேலும் கருத்துச் செறிவுள்ளதாக ஆகிறது.

மனம் ஏதோ ஒரு துறையில் இயங்கிக் கொண்டிருக்க வேண்டும். சும்மா இருக்க அதனுல் முடியாது. அதனுடைய இயக்கத்திற்கு அகத் துறையில் ஒன்றுமில்லா விட்டால், அதன்

வெளிப் பொருள் நாட்டத்தைத் தடுக்க முடியாது. 'பாலுணர்ச்சியை வேரறுக்கும் வேலை'யில் வெற்றி பெறுவதன் முழு இரகசியமும் அதுதான். இயற்கையில் பெரும் அதிசயப் பொருளைக் கண்டது போல வெற்றி பெற்ற யோகி ஒருவரைப் பார்த்து நாம் வியப்பை அடைய வேண்டியதில்லை. அவர் பெற்ற வெற்றியை நாமும் பெறலாம், புலனின்பங்களை முழுமையாக முறியடிக்கவும், அவ்வெற்றியில் தொடர்ந்து நிலைக்கவும் திட்டவட்டமான முறைகளைப் பற்றி மக்களுக்கு எதுவும் தெரியாது. அதனால்தான் இதைப் போன்ற முயற்சிகளில் அவர்கள் தோல்வி அடைகிறார்கள்.

அமைதி, பயமின்மை, பிரம்மச்சரியம் ஆகிய மூன்று தன்மைகளும் பெற்றவர்கள் இதன் மூலம் கிடைக்கும் அதிக சக்தியை, தன்னுணர்வு பெறுவதற்குப் பயன்படுத்துவது எளிது. பகுத்தறிவு அமைதியாக மெய்ப்பொருள் நாட்டத்தில் ஈடுபட்டவுடன் அறிவும் 'பிரசாந்த'மடைந்து விடுகிறது. பயமின்மையினால் மன வட்டத்தில் தோன்றும் சிந்தனைக் கொந்தளிப்புக்கள் அடங்கி விடுகின்றன. பிரம்மச்சரியத்தின் மூலம் புலனியக்கத்தை உள்ளிழுத்துக் கொள்வது, உடல் மட்டத்திலும் அமைதி உண்டாக்குகிறது. அறிவு, மனம், உடல் ஆகியவற்றை இவ்வாறு கட்டுப்படுத்துவதால், இதுவரை வீணாகிக் கொண்டிருந்த சக்தி ஒன்று திரட்டப்பட்டு சாதகரின் ஆன்மிக முயற்சிக்குப் பயன்படுகிறது.

இவ்வாறு கிடைக்கும் அதிக சக்தியைப் பயன்படுத்திக் கொண்டு, தமது நோக்கத்தில் சாதகர் மேலும் உறுதி பெற்று, நாற்புறமும் சிதறி ஓடும் மனத்தை உள்ளிழுத்துக்கொண்டு, சிந்தனையை எல்லாம் 'ஆன்மா'வாகிய என்மீதே நிலைக்கச் செய்ய முடிகிறது.

இந்த அத்தியாயத்தில் மிக முக்கியமான இச் செய்யுளில் கடைசியில் பகவான் கூறும் புத்திமதி: 'என்னையே உனது இறுதி இலட்சியமாகக் கொண்டு, யோகத்தில் அமருவாயாக'' என்பது தான். ஒரு சாதகன் தொடர்ந்து இம் முறையில் தியானம் செய்தால் விரைவிலேயே (அசிரேண) பலன் கிடைக்கும் என்று முந்திய அத்தியாயமொன்றில் அவர் தெரிவித்தார். அவ்வுறுதி மொழி இங்கு மீண்டும் வலியுறுத்தப்படுகிறது. மனத்தின் வலிமை பல்வேறு வகைகளில் வீணாவதைத் தடுத்து கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்த பிறகு, மெய்ப் பொருளிலும், அதன் நிரந்தர இயல்பிலும் மனத்தை ஒருமுகத் தியானத்தில் நிலைநாட்டும்படி இங்கு அறிவிக்கபடுகிறது. அதைத் தொடர்ந்து ''நானே இறுதி இலட்சியமாக, வேறு எதையும் நாடாமல் தியான நிலையிலிருக்குமாறு உத்தரவும் வருகிறது. உட்சந்தடிகள் அடங்கி அமைதி பெற்றதும் மனமும் அப்படியே வாடி உதிர்ந்து விடுகிறது. தானே எல்லையற்ற, நிரந்தர, பரமானந்த, பிரசாந்த இயற்கை—ஆன்மா—என்பதை சாதகன் கண்டு கொள்ளுகிறான்.

யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ நியதமானஸ:
சாந்திம் நிர்வாண பரமாம் மத் ஸம்ஸ்த்தா மதிகச்சதி
6:15

எப்போதும் உள்ளத்தைச் சமநிலையில் வைத்துள்ள யோகி தமது மனக் கட்டுப்பாட்டினுல் எனது தன்மையாகிய பேரமைதி நிலையை அடையும்போது பரிபூரண விடுதலைக்கு (நிர்வாணம்= மோட்சம்) அது இட்டுச் செல்லுகிறது.

உடலையும் மனத்தையும் தியானத்திற்கேற்றதாகச் செய்து கொள்ளும் முறையையும், அப்படிச் செய்வதால் இலட்சியத்தின் மீது ஒருவர் தமது முழு அறிவையும் நிலைநாட்டும் வலிமை பெறுகிறுர் என்பதையும் விவரித்த பிறகு, தியான முயற்சியின் கடைசிப் படியை இப்போது பகவான் தம்முடைய நண்பனுக்கு எடுத்துரைக்கிறுர். இவற்றைச் சிரத்தையுடன் எப்போதும் பயிற்சித்து வருபவர் அக, புற வாழ்க்கைகளில் தூய்மையும் மன வலிமைப் பெருக்கமும் பெற்ற மகானுகிறுர். மனத்தைக் கட்டுப் படுத்தி, எப்போதும் சலனமற்ற சாந்தி நிலையில் இருக்குமாறு செய்துவிட்ட ஒருவர் சுலபமாக, நிச்சயமாக, மெய்ப்பொருளை அடைகிறுர் என்று இங்கு சொல்லப்படுகிறது.

எப்போதும் இப்பயிற்சியில் இருக்க வேண்டுமென்ற பகுதியைப் படித்தவுடன், வீட்டு வேலைகளைக் கவனிக்கக் கூடாதென்றே, சமூகத்தில் எவ்விதப் பொறுப்புமின்றித் திரிந்து கொண்டிருக்க வேண்டுமென்றே பொருள் கொள்வது பெரும் தவருகும். எல்லாப் பொறுப்புக்களையும் தவருது நிறைவேற்றிக் கொண்டு வரவேண்டும். தியானத்தில் இருக்கின்றவரை அவருடைய உள்ளம் சந்தடியற்று, அமைதியுடன் இறை யுணர்வில் நிலைத்திருக்க வேண்டுமென்பதே அதன் பொருள். தியானத்தின் உச்சக்கட்டத்தை அடையும்போது சாதகரின் மனம் அசைவற்று அப்படியே நின்றுவிடுகிறது.*

அவர் தமக்குள் பரந்திருக்கும் சாந்திக் கடலில் திளைக்கத் தொடங்குகிறுர். ஆன்மா சாந்தி மயமானது. உடற் பரப்புக்கள், மனச் சலனங்கள், அறிவின் சிந்தனை அலைகள் ஆகியவைகளுக்கும் ஆன்மாவுக்கும் சம்பந்தமில்லை. உடல், மனம், அறிவு போன்ற பொருளுறைகளுக்கெல்லாம் ஆன்மா அப்பாற்பட்டது. ''எனது தன்மையாகிய பரம சாந்தி நிலையை சாதகர் அடைகிறுர்'' என்று கிருஷ்ணர் கூறும் சொற்கள் துவைதக் கொள்கையை ஆதரிப்பதைப்போல் சிலருக்குத் தோன்றலாம்.

இறைவனுக்குச் சில தன்மைகள் உண்டு என்று கூறுவதன்

* சுவாமி சின்மயானந்தரின் ''தியானமும் வாழ்க்கையும்'' என்ற நூலில் மேலும் விவரங்கள் காண்க.

மூலம் எல்லையில்லா நிரந்தரப் பொருளுக்கு எல்லைகள் உள்ள 'திரவிய' நிலை அளித்தவர்களாகிறோம். அது ஒரு புறமிருக்க, சாதகர் இறைவனிடமுள்ள அமைதியை அடைகிறார் என்றால், அடைபவர் வேறு, அடையப்படும் பொருள் வேறு என்று பொருள் படுகிறது.

கிருஷ்ணர் நுணுக்கங்களறிந்த மாபெரும் தத்துவ ஞானி. நாம் பேசும் மொழியிலுள்ள குறைபாடுகள் அவருக்குத் தெரியும். அவற்றைத் தவிர்ப்பதற்காக, ''ஒப்புயர்வற்ற விடுதலையில் இறுதியில் கலந்து விடுகின்ற அந்த அமைதி'' (நிர்வாண பரமம்) என்று கூறுகிறார். தியான காலத்தில் சாதகருடைய உள்ளத்தில் எல்லாச் சலனங்களும் அடங்கி விடுகின்றன. வெளியுலக நிலையில் அறிய முடியாத மகத்தான அமைதி தோன்றுகிறது. சுத்த சைதன்யத்தின் குணம்தான் அமைதி. அதில் சாதகர் சைதன்யத்துடன் இரண்டறக் கலந்து விடுகிறார். அமைதியை அனுபவிப்பதற்காகத் தோற்றமெழுப்பும் அகந்தையின் கடைசி மூச்சு அது. உண்மையான தெய்வ இயல்பின் வாசற்படியில் காலடி எடுத்து வைத்ததும் அகந்தை மறைந்து விடுகிறது. தியானத்தில் மூழ்கிய சாதகர், தாமே ஆன்மா என்று 'விழித்துக் கொள்கிறார்'. இந்த இரண்டறக் கலந்த 'அத்துவைத' நிலை கீதை முழுவதிலும் மீண்டும் மீண்டும் வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

தியான வாழ்வு மேற்கொள்ளும் ஒருவருடைய உணவு முதலியவற்றைப் பற்றிப் பின்கண்ட அறிவுரை கூறப்படுகிறது.

நாத்யஸ்னதஸ்து யோகோஸ்தி ந சைகாந்த—மனஸ்னத:
நசாதி ஸ்வப்னசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன

6:16

*மிதமிஞ்சி உணவு கொள்பவர்களுக்கோ, (உணவே இல்லாமல்) பட்டினி கிடப்பவர்களுக்கோ யோகம் கைகூடி வராது. அதிகமாகத் தூங்குபவர்களுக்கும், தூக்கத்தை அறவே கைவிட்டுக் கண்விழித்திருப்பவர்களுக்கும்கூட யோகம் சாத்திய மில்லை, அர்ஜுனா!*

யோக இலட்சியத்தையும், அதை அடையும் முறையையும் கிருஷ்ணர் விளக்குகிறார். ஆனால் அந்த முறையைப் பல ஆண்டுகள் தொடர்ந்து பயிற்சித்து வந்திருக்கும் சிலர், எவ்வித ஆன்மிக முன்னேற்றமும் காண முடியவில்லையே, ஏன்? இலட்சியத்தை அடைய முடியாது அவர்களுக்கு இடையூறாக இருப்பது எது? இதைப் போன்ற சந்தேகங்கள் சிலருக்கு வரலாம். சாதகத்தில் வெற்றிபெற என்னென்ன முன் ஜாக்கிரதை நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டு மென்பதையும் சொன்னாலொழிய அது முழுமையான

விஞ்ஞானக் கருத்தாக இருக்காது. தியான யோகப் பாதையில் செல்லும் ஒரு சாதகர் எந்தெந்த இடங்களில் தடுமாற்றத்திற்கு உள்ளாக நேரிடலாமென்பதையும் அடுத்துச் சில பாடல்கள் காட்டுகின்றன.

உடல், மன, அறிவு மட்டங்களில் ஒருவர் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் மிதமானவையாக இருக்க வேண்டும். இது அவசியமான, கட்டாயமான தேவை. அப்படி இருந்தால்தான் தியானத்தின் நோக்கம் நிறைவேறும். மிதமிஞ்சிய செய்கைகளின் விளைவாக, வீண் பரபரப்பு உணர்ச்சிக் குழப்பம் முதலியவை அலைஅலையாக வந்து நமது பொருளுறைகளைத் தாக்குகின்றன. சுருதி கூட்டிய வீணைபோன்று, ஒரு முக இசைவு பெற்றிருக்க வேண்டிய ஒருவர் சீர்குலைந்து விடுகிறார். எனவே உணவு, தூக்கம், ஓய்வு முதலியவற்றிலெல்லாம் மிதமாக இருக்க வேண்டுமென்று கண்டிப்பான கட்டளை பிறப்பிக்கப்படுகிறது.

அதிக உணவு கொள்பவனுக்கும், உணவை அறவே உட்கொள்ளாதவனுக்கும் யோகம் சாத்தியமில்லை—இங்கு 'உணவு கொள்ளுதல்' என்பதற்கு விரிவாகப் பொருள் கொள்ள வேண்டும். எல்லா வகையான புலன் நுகர்வுகளும், மன உணர்ச்சிகளும், அறிவின் இயக்கமும் அதில் அடங்குகின்றன. வாயின் மூலமாக உட்செல்லும் உணவு மட்டுமின்றி, எல்லா அகத்துறை அனுபவங்களையும், புலன்களின் மூலம் நாம் பெறும் உணர்ச்சிகளையும் சேர்த்தே 'உணவு' என்று இங்கு குறிப்பிடப் படுகிறது.

வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால், ''அனாவசியமாக உயிருலகத்திலுள்ள மற்ற இனங்களை உன்னுடைய தேவைக்காக நாசமாக்கிவிடாமல், கிடைத்ததைச் சாப்பிடு. வயிற்றில் உணவைப் போட்டு அடைக்காதே. தேவையான அளவு மட்டும் சாப்பிடு,'' என்று கூறலாம். தியானத்தில் வெற்றிகாண விரும்புகிறவர்களுக்கு இது பொன்னான புத்திமதி.

அதிகத் தூக்கத்தைத் தவிர்க்க வேண்டுமென்று கூறுவதும் மற்றொரு முக்கியமான எச்சரிக்கை. அதிகத் தூக்கம் நமது சக்திகளை மந்தமாக்கி விடுகிறது. இதனால் உடல் நிலையிலேயே நாம் இருந்துவிட நேரிடுகிறது. தூங்காமலே இருந்து விடுவதும் தவறு. ஆன்மிக முன்னேற்றம் காண விரும்புகிறவர்கள் எல்லாவற்றிலும் மிதமாக இருக்க வேண்டும்.

விவரமறியாதவர்களுக்கு இச்செய்யுளில் கூறியிருப்பதன் முக்கியத்துவம் தெரியாமல் போகலாம். ''அப்படியானால் யோகத்தில் எப்படி வெற்றி பெறுவது?'' என்று கேட்கலாம். பதில் பின்வருமாறு:

யுக்தாஹார—விஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு
யுக்த ஸ்வப்னவ போதஸ்ய யோகோ பவதி து:க்கஹா

6:17

உணவு கொள்வதிலும், பொழுதுபோக்கிலும், உழைத்துச் செயல்படுவதிலும், தூக்கத்திலும், கண் விழித்திருப்பதிலும் யாரொருவன் மிதமாக இருக்கிறனே, அவனுடைய துன்பங்களை யோகம் அடியோடு போக்கிவிடுகிறது.

யோக முயற்சியில் வெற்றி பெறுவதற்கேற்ற வாழ்க்கைத் திட்டமொன்று இங்கு அளிக்கப்படுகிறது. சாப்பாட்டிலும் பொழுதுபோக்கிலும் மிதமாக இருக்க வேண்டும். மிதமிஞ்சிய தூக்கத்தையும், ஓய்ச்சல் ஒழிவற்ற நடவடிக்கைகளையும் தவிர்க்க வேண்டும். யோகத்தில் வெற்றி வாய்ப்புப் பெறுவதற்குப் பகவான் கூறும் திட்டம் இதுதான்.

எதிலும் ஒரு அளவோடு ஈடுபட்டு, சுயக் கட்டுப்பாட்டுடன் வாழ்வது சிறந்த வாழ்வு. இதைச் சுட்டிக் காட்டுவதற்குக் கிருஷ்ணர் பயன்படுத்தியுள்ள சொற்களில் மிக விரிவான, பரந்த பொருள் தோன்றுகிறது. சுயநலமற்ற பணியினல் ஆன்மிக வாழ்வில் முன்னேற்றம் காணலாமென்ற கருத்தில் சிலர் புனித வேலைகளில் ஆழ்ந்துவிடுகிறர்கள். நாளடைவில் இத்தவறன போக்கின் காரணமாக அவர்கள் தங்களுடைய நடவடிக்கைகளுக்கே இரையாவதை நான் பார்த்திருக்கிறேன். செய்யும் வேலைக்கு நாமே அடிமைகளாகி, முக்கிய இலட்சியத்தை மறந்துவிடுகிறேம். இதைத் தடுக்கும் முறைகள் இங்கு எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன.

பணிபுரிய விரும்பும் துறையை ஒருவர் கவனத்துடன் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பது ஒருபுறமிருக்க, அதில் வேலை செய்வதிலும் மிதமாக இருக்க வேண்டும். (சேஷ்டஸ்ய). புனிதமான ஒரு வேலையை நாம் தேர்ந்தெடுப்பதாக வைத்துக் கொள்வோம். அதன் திட்டத்திலேயே கட்டுண்டவர்களாய், அதற்கு அடிமைகளாகிவிடுகிறேம். அப்படிச் செய்யப்படும் வேலை நமது பழைய வாசனைகளைப் போக்குவதற்குப் பதிலாக, மேலும் அதிக வாசனைகளையே பெரும்பாலும் தோற்றுவிக்கிறது. அளவுக்கு மீறி உழைப்பதால் உடல் அயர்ந்து பலவீனமடைகிறேம். இதன் விளைவாக மிருக உணர்ச்சிகள் மேலோங்கவும் இடமிருக்கிறது.

தூக்கமும், விழித்திருக்கும் நேரமும்கூட அளவோடு இருக்க வேண்டியதன் கட்டாயத் தேவையைக் குறிப்பிடுவதற்குப் பகவான் உபயோகிக்கும் சொற்கள் மிக முக்கியமானவை அகந்தையின் வாழ்வு முழுவதையும் மொத்தமாகச் சேர்த்து,

'ஸ்வப்ன' (கனவு) என்று அவர் கூறுகிறார். இது அகந்தையின் உலக அனுபவங்கள் எல்லாவற்றையும் உள்ளிட்டது. உபநிடதங் கள்கூட வாழ்க்கையின் அனுபவங்களை எல்லாம் தூக்க நிலை (பேருண்மை அறியா நிலை), கனவு நிலை (பேருண்மையைத் தவறாகப் புரிந்துகொண்ட நிலை) விழிப்பு நிலை என்று பிரித்து விளக்குகின்றன என்பது குறிப்பிடத் தக்கது.

இங்கு பயன்படுத்தப்பட்டிருக்கும் 'அவபோத' என்ற சொல் நமது சாத்திரங்கள் கூறும் மெய்யறிவு இலட்சியத்தின் எதிரொலியாக அமைந்திருக்கிறது. உபநிடதங்களை ஆழ்ந்து படித்து, புத்திசாலித்தனமாகப் புரிந்து கொண்டவர்களுக்கு அச்சொல்லில், இங்கு தோன்றுவதைப் போன்ற, ஒரு இரகசியப் பொருளும் பொதிந்திருப்பது தெரியவருகிறது. உண்மையைத் தவறாகப் புரிந்து கொண்ட வாழ்விலோ, ஆழ்ந்த தியான நிலையில் வரும் பரம மோன (அவபோத) நேரத்திலோகூட ஒருவர் அளவுக்கு மீறி இருந்து திளைக்கக் கூடாது என்ற பொருளும் தொனிக்கிறது. சாதகர்கள், தொடக்க நாட்களில், தங்களுடைய உள்ளனுபவங்களில் மிதமிஞ்சி ஆழ்ந்து விடக் கூடாது. மணிக் கணக்காகத் தியானத்திலிருக்க முயற்சித்து, உடலுக்கு அயர்வு ஏற்படுத்திக் கொள்வது தவறு. அகமோன நிலையை பலவந்தமாகத் தோற்றுவித்துக் கொள்ள முயலுவதும் கூடாது. இதைப் போன்ற கருத்துக்களையும் கிருஷ்ணர் மனத்திற் கொண்டு பேசுவதாகத் தோன்றுகிறது.

யோகப் பயிற்சிகளில் ஈடுபடுவது எதற்காக? ''எல்லாத் துயரங்களையும் அழிக்க வல்லது அது,'' என்று மிகச் சாதாரணமாக இருப்பதைப்போல் தோன்றும் மிக முக்கியமான வார்த்தைகளில், எல்லாக் காலத்தினருக்கும் பொருந்தும் முறையில், கீதை படிக்கும் மாணவர்களுக்குக் கிருஷ்ணர் கூறுகிறார்.

யதா வி்நியதம் சித்த—மாத்மன்யே—வாவதிஷ்ட்டதே
நி:ஹ்ப்ருஹ: ஸர்வகாமேப்ப்யோ யுக்த இத்யுக்யதே ததா
6:18

முற்றிலும் கட்டுப்பாட்டிற்கு உள்ளடங்கி, ஆன்மாவில் உறுதியாக நிலைபெறும் மனம், வேட்கைப் பொருள்களிடம் ஆவல் கொண்டு ஓடா நிலையில் இருக்கும்போது 'அவர் ஒருங்கிணைந்தவர்'' (யுக்த:) என்று கூறுகிறார்கள்.

இதுவும் அடுத்துள்ள ஐந்து செய்யுட்களும் யோகத்தினால் வரும் நன்மை பற்றிய அறிவுரை, தியானத்தில் ஈடுபட்ட ஒருவர் ஆன்ம உணர்வு நிலையிலிருக்கும்போதும், அதற்குப் பிறகும் எவ்வித அனுபவங்கள் பெறுகிறார், அந்த அனுபவங்களினால்

தமது வாழ்நாளில் அவர் பெறும் பயன் என்ன என்ற விவரங்களை இச்செய்யுட்கள் நமக்கு விளக்குகின்றன.

கீதையில் இதுவரை பகவான் உறுதியுடன் (யுக்த) இருப்பதன் அவசியத்தை மீண்டும், மீண்டும் வற்புறுத்தி வந்திருக்கிறார். ஈடுபாட்டிலும், யோகத்திலும் உறுதியாக இருப்பவருடைய இயல்பைப் புரிந்துகொள்வதற்குப் போதிய குறிப்புக்களை அவர் சிற்சில இடங்களில் அளித்துவந்த போதிலும், திட்டவட்டமாகவும், முழுமையாகவும் அச்சொல்லுக்கு விளக்கம் தரவில்லை. இங்கு அதற்கு ஏறக் குறையத் திட்டவட்டமான விளக்கம் கொடுக்கப்பட்டிருக் கின்றன.

மனம் முற்றிலும் நமது கட்டுப்பாட்டுக்கு உள்ளிருக்கும் போது, 'அது ஆன்மாவில் அமைதியாக நிலைபெறுகிறது' என்று இங்கு குறிப்பிடப்படுகிறது. ஆழ்ந்து சிந்தித்தால் இதன் உண்மையைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். உலகப் பொருள்களிடையில் தனது நிறைவை நாடி இங்குமங்கும் வெறி பிடித்தாற்போலத் தாவிக்கொண்டிருக்கும் மனத்தைக் கட்டுப் பாட்டுக்குள் கொண்டுவரப்படாத மனம் என்று கூறுகிறோம். எந்த அனுபவத்தையும் நாம் உணரும்படி செய்யும் தத்துவமாக இருப்பது மெய்ப்பொருள். அதுவே நமது ஆன்மா. அதில் உறுதியுடன் இணைந்து நின்றால்தான் மனம் மற்றப் பொருள்களை நாடிச் செல்லாமல் இருக்கும். எனவே, ஆன்மிகச் சிந்தனையில் முழுகிக் கரைந்துவிட்ட மனம் முற்றிலும் கட்டுப்பாட்டுக்குள் வந்ததாகத்தான் இருக்குமென்று சொல்ல வேண்டியதில்லை.

இக்கருத்து செய்யுளின் இரண்டாவது வரியில் உறுதி பெறுகிறது. ஒப்பிலா மெய்ப்பொருளில் மனத்தை நிலைநாட்டுவது எப்படி என்பதற்கு இங்கு ஒரு குறிப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. ''கோரிக்கைகளை நாடி ஏங்குவதைக் கைவிட்டு'' என்ற இக்குறிப்பைக் கீதை அடிக்கடி அழுத்தமாக எடுத்துக் காட்டி வந்திருக்கிறது. எல்லாக் கோரிக்கைகளையும் துறந்துவிடுமாறு இந்து மதம் கூறுகிறதென்றும், அதுதான் இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கை என்றும் சிலர் அவசர முடிவுக்கு வந்திருக்கிறார்கள். ஏதோ ஒன்று வேண்டுமென்று நாம் கோருவதற்கும் கோரிக்கைகளுக்காக நாம் மிதமிஞ்சி ஏங்குவ தற்கும் மிகப் பெரிய வித்தியாசம் இருக்கிறது. வெறும் கோரிக்கைகளால் மட்டும் மனிதன் கெட்டுவிடுவதில்லை. அவற்றிலிருந்துதான் எல்லாத் துயரங்களும் வருகின்றன என்று சொல்லும்போது நாம் கவனமாக இருக்க வேண்டும். கோரிக்கைகளைப் பிடித்துக்கொண்டு அளவுக்கு மீறி ஊசலாடிக் கொண்டிருப்பது தவறு. அவற்றிற்காக ஏங்கித் தத்தளித்துக்

கொண்டிருக்கும்போது தான் மனம் நரக வேதனையில் ஆழ்கிறது. விவரிக்க இயலாத துயரங்கள் வருகின்றன.

உதாரணமாக, தான் பணக்காரனாக இருக்க வேண்டுமென்று ஒருவன் விரும்புவதில் தவறில்லை. ஒரு வகையில் அது நல்லதென்றே சொல்லலாம். இந்தக் கோரிக்கையினால் மனம் சுறுசுறுப்பாக வேலை செய்கிறது. ஏதோ ஒன்றைச் சாதிக்க வேண்டும்; செல்வம் தேட வேண்டும்; சம்பாதிப்பதில் கொஞ்சம் சேமித்து வைக்க வேண்டும் என்ற முயற்சிகளுக்கு எல்லாம் அடிப்படையாக இருப்பது அந்தக் கோரிக்கை. ஆனால் அதுவே ஒரு பெரும் ஏக்கமாகி விட்டால்? பணக்காரனாக வேண்டுமென்ற விருப்பம் அவனை ஒரு பணப் பேயாக்கி விடுகிறது. இந்தக் கவலையினாலேயே அவனுடைய ஆக்க சக்தி அழிந்துவிடுகிறது. மனித கௌரவத்திற்குத் தகாத வேலைகளை மேற்கொண்டு பெரும் சாதனைகளைப் புரியும் வாய்ப்பை இழந்து விடுகிறான்.

ஒரு கோரிக்கை எழுவதால் மட்டும் மனத்தில் பெரும் புயல் வீசத் தொடங்கி விடுவதில்லை. ஆனால் அதே ஏக்கத்துடன் திரிந்து கொண்டிருக்கும்போது உள்ளக் கொந்தளிப்புக்கள் உண்டாகின்றன. இப்படி ஏங்கித் திரிய வேண்டாமென்றுதான் கீதை கூறுகிறது.

அறிவின் உதவி கொண்டு ஒவ்வொரு புலன் பொருளையும் சரியாக மதிப்பிட்டு, மனத்தைப் புலன் பொருட் சாக்கடைகளில் மூழ்கடித்து விடாமல் உள்ளிழுத்துக் கொண்டால், அவ்வாறு கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட மனம் தானாகவே நுணுக்கமான தெய்வீகப் பொருளில் சென்று நிலைக்கிறது. வரையறைக் குட்பட்டும், தோன்றி மறையும் தன்மையும் உள்ள, புலன் பொருள்களே மனக் கலக்கத்திற்குக் காரணமாகின்றன. எல்லையற்ற ஆன்மாவிலிருந்து அமைதியும் இன்பமுமே தோன்றுகின்றன. புலன் நாட்டங்களை உள்ளிழுத்துக்கொண்டு மனத்தை ஆன்மாவில் நிலைக்கச் செய்வதையே 'உறுதிநிலை' (யுக்த) என்று இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் வெற்றி பெற்றவர் முற்றிலும் ஒருங்கிணைந்த ஆளுமை பெறுகிறார்.

ஒரு யுக்தருடைய மன இசைவு பின்வருமாறு இருக்கும்:

யதா தீபோ நிவாதஸ்த்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா
யோகினோ யத—சித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மன:

6:19

'காற்று வீசாத இடத்தில் அசையாமல் எரியும் தீபச் சுடர்போல'—இதைத்தான் கட்டுப்பாட்டுக்கு வந்து ஆன்ம லயத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு யோகியின் மனத்திற்கு உவமையாகக் கூறுகிறார்கள்.

சிந்தனைகளை எல்லாம் குவித்துத் திரட்டி, ஆன்மாவில் நிலை நாட்டி, யோகத்தில் ஆழ்ந்திருப்பவருடைய உள்ளத்தைக் காற்றில் ஆடாமல் சீராக எரிந்துகொண்டிருக்கும் தீபச் சுடருக்கு ஒப்பிடுவதன் மூலம், முந்திய செய்யுளின் கருத்தை இச்செய்யுள் பூர்த்தி செய்கிறது. கீதையிலுள்ள பிரபல உவமைகளுள் இதுவும் ஒன்று. காற்றில் அசைந்தாடும் விளக்குபோல, மனமும் படபடத்துக்கொண்டே இருக்கிறது. அலைஅலையாகச் சிந்தனைகளைப் பார்த்த வண்ணமிருப்பதையே நாம் 'மனம்' என்று கூறுகிறோம். தீபச் சுடரின் நுனி எப்போதும் படபடத்துக் கொண்டுதான் இருக்கிறது. இப்படப்படப்பின் வேகம் மிக அதிக மாக இருப்பதால் (இதை ஒரு விஞ்ஞானக்கூடத்தில் நாமே சோதித்துத் தெரிந்து கொள்ளலாம்.) ஒளிச் சுடருக்குத் திடமான ஒரு உருவம் இருப்பதுபோல நாம் நினைக்கிறோம். மனமும் அப்படியே. கலக்கங்களும், பல்வேறு சிந்தனைகளும் எப்போதும் வேகமாகப் பாய்ந்த வண்ணமிருப்பதால் 'மனம்' என்ற திட மான, திட்டமான ஒன்று நமக்கு இருப்பதாகத் தோன்றுகிறது.

காற்றின் அசைவுகள் விளக்கை எட்டாதபடி ஒரு அணைப்பு வைத்துத் தடுத்து விட்டால், அதன் சுடர் ஆடாமல், பிரகாச மாக, மேல்நோக்கிச் செல்லுகிறது. அவ்வாறே கணம் கணமும் மாறிவிடும் புலன் கோரிக்கைகளை அடைப்பு வைத்துத் தடுத்து, மனத்தை ஆன்ம தியானத்தில், 'பிரம்மகரவிருத்தி'யில் ஈடு படுத்தியவுடன் நமது மனம் ஒளி பெற்று உயருகிறது. அதாவது பிரபஞ்சத்தில் அடிப்படைப் பொருளாகிய அழிவிலாப் பிரம்மனில் சிந்தனைகளை இடையறுது செலுத்துபவரே ஆன்மயோகி. (யோகமாத்மன:).

தியானத்தின் மூலம் இப்படி ஒருமுகமான ஆன்ம இலட்சியத்தில் மனத்தை நிலைநாட்டியபிறகு, எந்தெந்த படிகளைக் கடந்து முன்னேற்றம் பெறுகிறோம்? அடுத்து வரும் நான்கு செய்யுட்கள் இப்பிரசினைக்குப் பதிலளிக்கின்றன.

யத்ரோ பரமதே சித்தம் நிருத்தம் யோக ஸேவயா
யத்ர சைவாத்மனாத்மானம் பஸ்யன்—ஆத்மனி துஷ்யதி
6:20

யோக சாதகத்தின் மூலம் கட்டுப்பாட்டுக்குள் வந்துவிட்ட மனம் அமைதி அடைவதால் தன்னையே ஆன்மாவென்று தெரிந்து கொள்ளும் யோகி அவ்வான்மானுபவத்தில் திருப்தி அடைகிறான்.

ஸுக—மாத்யந்திகம் யத்தத் புத்தி—க்ராஹ்ய—மதீந்த்ரியம்
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதத்ஸ் சலதி தத்வத: 6:21

புலன்களுக்கு அப்பாற்பட்டு, (தூய) அறிவுக்கு மட்டுமே எட்டுகின்ற, எல்லையற்ற ஆன்ம இன்பத்தை உணர்ந்து, அதில் ஊன்றிக் கொள்ளும் யோகி, பேருண்மைப் பொருளிலிருந்து மாறுவதில்லை.

யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத:
யஸ்மின்ஸ்த்திதோ ந து:கேன குருணுபி விசால்யதே.
6:22

அதைப் பெற்றபிறகு, அதனினும் மேற்பட்ட நற்பயன் இருக்க முடியாதென்ற தெளிவு அவனுக்கு உண்டாகிறது. மிகப் பெரிய துயரமும் அவனை அந்நிலையிலிருந்து அசைக்க முடியாது.

தம் வித்யாத் து:க—ஸம்யோக
வியோகம் யோகஸம்ஜ்ஜிதம்
ஸ நிஸ்சயேன யோக்தவ்யோ யோகோ
நிர்விண்ண சேதஸா 6:23

துக்கத் தொடர்பிலிருந்து விடுபடுவதே யோகம் என்று அறிந்து கொள்வாயாக. இந்த யோகத்தை உறுதியுடன் சாதகம் செய்ய வேண்டும்; மனந்தளர்ந்து நம்பிக்கை இழந்துவிடக் கூடாது.

இந்த நான்கு செய்யுட்களையும் சேர்த்துப் படிக்கும்போது யோகம் பற்றிய முழுமையான சித்திரம் நம் உள்ளத்தில் உருவாகிறது. ஒவ்வொருவரும் இத்தியான யோகத்தை மேற்கொண்டு, பண்புமிக்க முறையில் முன்னேறி அவன் தன்னுயர்வு பெறவும் வழிகாட்டுவதற்காக, பகவான் இங்கு தியானத்தினுல் வரும் நலன்களை விவரிக்கிறுர். மனக் கட்டுப்பாடு மூலமாக அக அமைதி உண்டாகிறது. கலக்கச் சந்தடிகளற்ற அந்நிலையில் தன்னையே அது ஆன்மாவாகக் காண்கிறது. ஆன்மா வேறு, தான் வேறு என்ற மருட்சிகள் மறைந்துவிடுகின்றன.

தான் இறைத் தத்துவத்தைத் தவிர வேறில்லை என்று தன்னியல்பை மீண்டும் அறிந்து கொள்வது பரம ஆனந்தநிலை—ஆன்மப் பேரின்ப நிலை. தன்னைச் சூழ்ந்திருக்கும் வரையறைகளைத் தகர்த்தெறிந்து, உடல், மனம், அறிவுடன் ஒன்றியிருப்பதைக் கைவிடும் தனி அகந்தை, உடனே விழித்தெழுந்து தானே ஆன்மா என்ற உண்மையை உணருகிறது.

உலகத்தில் பெறும் இன்பத்தைப்போல் இப் பேரானந்தம் வெளியிலிருந்து கிடைப்பது அல்ல. இது 'புலன்களுக்கு அப்பாற்பட்டு நிற்கும் அனுபவம்' (அதி—இந்திரிய:). சாதாரணமாகப் புலனுறுப்புக்கள் மூலமே நாம் வெளியுலக அனுபவங்களைப்

பெறுகிறோம். எனவே ஆன்மானுபவம் பெற்ற மகான்கள், 'ஒருவர் தம்மைத் தாம் ஆன்மாவாக உணர்தலே பேரானந்த நிலை' என்று கூறும்போது, அதை ஒரு வெளியுலக இலட்சியத்தைப் போன்ற முறையில்தான் ஏற்கத் தோன்றுகிறது. ஆனால் ''ஆன்மிகப் பேரின்பம் புலன்களைக் கடந்து நிற்பது'' என்று சொன்னவுடன் சாதகர்களுக்கு மதம் அளிக்கும் வாக்குறுதியில் அவநம்பிக்கை ஏற்படக் கூடும். இதை எதிர்பார்த்துத்தான், 'தூய அறிவின் மூலமே ஆன்மானந்தத்தைப் பருக முடியுமென்று' செய்யுள் வலியுறுத்திக் கூறுகிறது.*

இங்கு ஒரு சந்தேகம் உண்டாகலாம். ஏறக்குறைய மனித சக்தியை மீறியதாகத் தோன்றும் இவ்வளவு முயற்சிகளையும் செய்து, பேரானந்தத்தை அனுபவிக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். வாழ்க்கையில் பெறற்கரிய அப்பெரும் பேறு, மின்னலடித்ததுபோல், ஒரு கணத்தில் தோன்றி மறைந்து விடலாம். அதை அனுபவிப்பதற்கு மீண்டும் அடியிலிருந்து செய்துவந்த கடு முயற்சிகளைச் செய்ய வேண்டியிருக்குமோ என்னவோ? ஒரு கண இன்பம் பெறுவதற்கு இவ்வளவு முயற்சியா என்று சிலர் நினைக்கலாம். இதைப் போன்ற சந்தேகம் வராமலிருப்பதற்காகவே ''அதில் வேரூன்றிவிட்டவர், உண்மையான தன்னியல்பிலிருந்து மாறுவதில்லை,'' என்று கூறப்படுகிறது. ஆன்மாவை உணர்ந்து அனுபவித்தவர் அந்த நிலையில் நிரந்தரமாக நிலைத்து விடுகிறார் என்று கீதை மறுபடியும் மறுபடியும் எடுத்துரைக்கிறது.

உலகத்தில் எல்லோருக்கும் இயற்கையாக வரும் தொல்லைகளும், துயரங்களும் எல்லையற்ற ஆன்மானுபவ ஆனந்தம் பெற்றவர்களுக்கு வராதா? சாதாரணமாக எல்லோரும் செய்வதைப்போல் பொருளைச் சேர்ப்பதிலும், அதைத் திரட்டிக் குவிப்பதிலும் முன்போலவே அவர்கள் சிக்கித் தவிக்க மாட்டார்களா? மற்றவர்களிடம் அன்பு காட்டவும், அன்பை நாடவும் மாட்டார்களா? முழுமை பெறாத ஒருவருடைய வாழ்க்கையில் புரையோடிய புண்களாக இருக்கும் இப்பரபரப்புக்களும், கலக்கங்களும் முழுமை பெற்ற ஒருவருக்கு இருக்காது. ஒப்புயர்வற்ற பேருண்மைப் பொருளை அடைந்த

* ரஜோ குணமும், தமோ குணமும் அகற்றப்படுவதன் மூலமாகத் தூய்மை பெறும் அறிவையே 'தூய அறிவு' என்று வேதாந்தம் கூறுகிறது. பேருண்மையை மறைத்து நின்றது (ஆவரணம்) தமஸ். கலக்கத்தை (விக்ஷேபம்) ஏற்படுத்துவது ரஜோ குணம். இவை இரண்டும் அகற்றப்படும் அளவுக்கு, சத்துவ குணம் அறிவில் மேலோங்குகிறது. தூய சத்துவ குண ஆதிக்கத்திற்கு நமது அறிவு முற்றிலும் உட்படும்போது, எல்லையற்ற பேரமைதி தோன்றுவதை உணர்கிறோம். அறிவைத் தாண்டிய இந்நிலையில் ஆன்ம உணர்வு தோன்றுகிறது.

பிறகு ''வேறு எந்தப் பயனையும் அதற்கு மேற்பட்டதாகவோ, சமமானதாகவோகூட யாரும் கருத மாட்டார்கள்,'' என்று செய்யுள் 22 கூறுகிறது.

இப்படி எல்லாவற்றையும் விளக்கிய பிறகு, ஒரு சந்தேகப் பிராணி எழுப்பக்கூடிய பிரசினையை பகவானே எழுப்பி, அதற்கு பதிலளிக்கிறார். வேதாந்தத்தை வெறும் அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்ள முயலும் மாணவனுக்கு ஒரு ஐயம் தோன்றலாம். ஒருவர் பெறும் இறையனுபவம் கஷ்ட நஷ்டங்களுக்கும், தொல்லைத் துன்பங்களுக்கும் ஈடு கொடுத்து நிற்குமா? அதாவது, சுகவாழ்வு நடத்தும் செல்வந்தர்கள் வேண்டுமானால், மதம், ஆன்மா என்று சொல்லிக் கொண்டு பொழுது போக்கலாம். கையாலாகாதவர்கள் மதம் தரும் 'மூட நம்பிக்கை'களைக் கொண்டு திருப்தி அடையலாம். உலகப் பிரசினைகளை எதிர் நோக்கச் சக்தியற்றவர்கள் தங்களுடைய பொறுப்புக்களைத் தட்டிக் கழித்து நழுவி விடுவதற்கு இது சுலபமான பகற்கனவாக இருக்கலாம். ஆனால் வாழ்க்கையின் சவால்களை நேரடியாக சந்திக்க வேண்டியவர்களுக்கு கஷ்ட, நஷ்டங்களும், துயரங்களும் நோயும், வறுமையும், பட்டினியும் வரும்போது, இவற்றை சமாளிப்பதற்கு மதத்தினாலும் அது கூறும் முழுமையினாலும் முடியுமா? பலருக்கு இந்தச் சந்தேகம் இன்றுகூட இருந்து வருகிறது. பகவான் இதற்கு ஆணித்தரமாக பதிலளிக்கிறார். ''அதில் நிலைபெற்றவர் மிகக் கொடிய துன்பங்கள் வந்தபோதும் கலங்குவதில்லை'' என்று கூறுகிறார்.

ஆக, இதுவரையில் கூறியவற்றை எல்லாம் சுருக்கி பின் வருமாறு சொல்லலாம். யோகத்தினால் மன அமைதி பெற்று, தாமே ஆன்மா என்ற உண்மையை மீண்டும் உணரும் ஒருவருடைய ஆனந்தம் ஒப்புயர்வற்றது. அதை புலன் உறுப்புக்களினால் அனுபவிக்க முடியாது. ஏனெனில் அது ஸ்தூலமானதல்ல. தூய அறிவினால்* அதை அனுபவித்து வாழலாம். அப்பேரின்ப நிலையை எய்தியவர்கள் அதிலேயே நிலைத்து விடுகிறார்கள். அதை அடைந்த பிறகு, அடைவதற்கு அதைவிட உயர்ந்தது வேறு ஒன்றுமில்லை என்று தெரிந்து கொள்ளுகிறார்கள். வாழ்க்கையில் மிகக் கொடிய துயரங்களினால் தாக்கப்பட்ட போதிலும் அவர்கள் அசையா உறுதியுடன் இருப்பார்கள். இச் சிறப்புமிக்க பேருண்மையைத்தான் ஆன்மா என்று கீதை குறிப்பிடுகிறது. விவேகமும், ஆன்ம நாட்ட ஆர்வமும் உள்ளவர்களின் இலட்சியமாக விளங்குவது இவ்வுண்மையே.

இவ்வான்மாவைத் தெரிந்து கொள்ள வேண்டும். இதைத்

---

* 'இதற்கு 'அறிவைக் கடந்த நிலையில்' என்று பொருள். சுத்த சத்துவமான அறிவு, இடம்—காலம்—காரணங்களின் கருவியாக இருக்க முடியாது.

தெரிந்து கொள்ளும் வழியும் அந்த அனுபவமும், கீதையில் 'யோகம்' என்று குறிப்பிடப்படுகிறது. (செய்யுள் 23) அச் சொல்லுக்கு மிக அற்புதமான புரட்சிகரமான விளக்கம் அச் செய்யுளில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

மகாபாரதகால இந்து சமுதாயம் இருந்த நிலையில், உபநிட உண்மைகளை புதிய முறையில் எடுத்துரைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது பற்றியும் அந்த மாபெரும் பணியை கீதை நிறை வேற்றியது என்பதையும் ஏற்கனவே பார்த்தோம்*

யோகமென்றால் ஆச்சரியகரமான சாதனை என்று அப்போதிருந்தவர்கள் நினைத்தனர். சாதாரண மக்கள் அதை மேற்கொள்ள முடியாது. அவ்வனுபவத்தைப் பெற முடியாது என்று கருதிய காலம் அது. கீதையில் அக் கருத்து கைவிடப்பட்டு, எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய முறையிலும், எல்லா உபநிடத உண்மைகளை உள்ளடக்கியதாகவும், உருமாற்றம் பெற்றிருக்கிறது. அதுவரை யோகம் என்பது மத அடிப்படையில் ஒருவர் முழு நிறைவு பெறும் வழியாகக் கருதப்பட்டு வந்ததுடன், குறிப்பிட்ட சிலரே அதைப் பின்பற்ற முடியுமென்ற நிலையிலும் இருந்தது. ஆனால் கீதை அதை பொதுமக்கள் உலவும் பூங்காவாக்கியது. இப்போது யார் வேண்டுமானாலும் யோக முறையை மேற்கொண்டு அவர்களால் இயன்ற அளவு முன்னேற்றம் பெறலாம். இந்த முறையில், இந்து மறுமலர்ச்சியில் புரட்சிகரமான மாறுதல்களைக் கொண்டு வந்த புனித நூல் கீதை என்று கூறுவது மிகையாகாது.

ஒரு அவதார புருஷருக்கு உள்ள தெய்வீக உரிமையுடன், புரட்சி வேகம் கூட கிருஷ்ணரிடம் நிரம்பியிருப்பதைக் காண்கிறோம். ஆன்மிக, கலாச்சாரத் துறைகளில் மாறுதல்களைக் கொண்டு வருவதற்காக இத் தெய்வீகப் புரட்சிக்காரர் 'யோகம்' என்ற சொல்லுக்கு சிறப்பான புதுமை விளக்கமொன்று அளிக்கிறார். ''துக்கத்துடன் கொண்டுள்ள தொடர்பை துண்டித்துக் கொள்வதே யோகம்'' என்று கூறுகிறார். இது ரத்தினச் சுருக்கமாக, பழமொழி போல் அமைந்திருப்பது ஒரு புறமிருக்க, எதிர்மறைச் சொற்களைக் கொண்டு பொருள் உருவாக்கம் பெற்றிருப்பது மேலும் உள்ளம் கவருவதாக இருக்கிறது. இதைப் படித்தவுடன் திடுக்கிட்டு எழுந்து மேலும் ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்குகிறோம்.

யோகம் என்ற சொல்லுக்கு 'தொடர்பு கொள்ளுதல்' என்று பொருள். முழுமை பெறா மனிதன் இன்றைக்கு நீர்க்குமிழி போல் தோன்றி மறையும் பொருள்களுடனேயே தொடர்பு கொண்டிருக்கிறான். அதனால் சிறுசிறு இன்பங்களை அனுபவிப்

* பொது முன்னுரையில் காண்க.

பதுடன் காலந்தள்ளி வருகிறுன். இப்பொருள்களுடன் அவன் கொள்ளும் தொடர்புகள் எல்லாமே உடல், மன, அறிவுக் கருவி களின் மூலம்தான். எனவே அவன் பெறும் இன்பமும் நிலையற்ற தாகிவிடுகிறது. இன்பத்தின் முடிவே துயரின் தொடக்கம். இதனுல் பொருட் சாதனங்களின் மூலம் நடத்தும் வாழ்க்கை முழுவதுமே ஒரு 'துக்கயோகம்' (துக்க சம் யோகம்) ஆகிறது.

இந்த துக்க சம்யோகத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு பொருள்களிலிருந்தும், அவற்றின் மூலம் நாம் பெறும் அனுபவங் களிலிருந்தும் நமது உறவுகளை அறுத்துக் கொள்ள வேண்டும். வெளியுணர்வு, உணர்ச்சி, சிந்தனை ஆகியவற்றிற்கான உடற் பகுதிகளை நாம் பயன்படுத்திக் கொண்டிருக்கும் வரையில், உலகத்திலிருந்து வரும் தூண்டுதல்களிலிருந்து முழுமையாகவோ அல்லது ஓரளவுக்கோ கூட நாம் விலகிநிற்க முடியாது. உணர்வு, உணர்ச்சி, சிந்தனைகளிலிருந்து விடுதலை பெற வேண்டுமென்ருல் 'துக்க யோக'த்துடன் நாம் கொண்டுள்ள எல்லா உறவுகளையும் துண்டித்துக் கொள்ளுவது ஒன்றே வழி. 'துக்க சம்யோக வியோகம்' என்று கிருஷ்ணர் குறிப்பிட்டிருப்பது இதைத்தான்.

பற்றுதல் இல்லையேல் மனமும் இல்லை. ஏதோ ஒன்றைப் பற்றிக் கொள்ளாமல் அது இருக்கவே முடியாது. ஒரு பொரு ளிலிருந்து அது தனது தொடர்பைக் கைவிட வேண்டுமென்ருல், வேறு ஒரு பொருளை இறுகப் பிடித்துக் கொண்டுதான் ஆக வேண்டும். உண்மையற்ற பொருள்களிலிருந்து மனம் தனது தொடர்பை துண்டித்துக் கொள்ளுவதற்கு, பேருண்மையின் இயல்பாகிய, பரமானந்தத்தை அது பிடித்துக் கொண்டால்தான் முடியும். இந்த வகையில் யோகத்தின் நோக்கம் கைகூட வேண்டுமென்ருல் ஒரு சாதகர் துக்க மார்க்கத்தில் போவதை நிறுத்தி, நேர் எதிர்புறம் திரும்பி, தன்னுள் இருக்கும் நிரந்தர, பேருண்மைப் பொருளை நோக்கி யாத்திரை தொடங்க வேண்டும். ஏனெனில் யோகமென்ருல், பேருண்மையை நாடி, அதை உறுதியாகப்பற்றிக் கொள்வதேயாகும். இதை பகவான் மிக அழகான சொற்களில் 'துக்க சம்யோக வியோகம்' என்று புதுமை தோன்றக் கூறுகிருர்.

இப்படிச் சொல்வதிலிருந்து இந்து மதத்தின் புனித நூல் களில் இலலாத ஒரு புதிய கருத்தை அவர் புகுத்துவதாக நினைத்து விடக் கூடாது. அது வரையில் இலட்சிய நோக்கிலிருந்து யோகத்திற்கு விளக்கம் கொடுக்கப்பட்டு வந்தது. அந்த இலட்சி யத்தை அடையும் வழிகளைப் பற்றி தெளிவாக எல்லோருக்கும் பயன்படும் முறையில் எடுத்துரைக்கப்படவில்லை. யோகத்தைப் பின்பற்றும் முறைகளையும் பயன்களையும் அறியாத சாதகர்கள் அதனுல் யோகம் என்ற சொல்லைக் கேட்டவுடனேயே மிரண்டு

ஓடத் தொடங்குகிறார்கள். யோக சாதகம் ஒரு விளங்காப் புதிராகவும், சிலரே பின்பற்றக் கூடிய இரகசியமாகவும் ஆயிற்று.

யோக சாதகத்தை உற்சாகத்துடனும், தளரா உறுதியோடும் செய்ய வேண்டுமென்று கிருஷ்ணர் குறிப்பாக சுட்டிக் காட்டுகிறார். கலங்கா உள்ளமும், நம்பிக்கையும் கொண்டு இம் முயற்சியை மேற்கொள்பவர்கள் தியானத்தில் நிச்சயமாக வெற்றி பெறுகிறார்கள். ''உண்மையில்லாததிலிருந்து முழுமையான வியோகம்'' பெற்றால்தான் ''உண்மையுடன் யோகம்'' பெறலாம்.

நெருப்புக்கு வெகு அருகில் உட்கார்ந்து, அதன் வெப்பம் தாங்காமல் தவிப்பவர் அதே இடத்திலிருந்வு விலகி சுகமான இடத்தில் அமருகிறார். அதே போல தோன்றி மறையும் பொருள்களுக்கு இடையில் வாழ்ந்து, அவை தரும் கண சுகத்தை அனுபவிப்பது, பிறகு துயரத்திற்கே வழி வகுக்கிறதென்று உணரும் ஒருவர் அவற்றை உதறிவிட்டு ஆன்மாவாகிய இன்ப உலகுக்கு வருகிறார். இதுதான் 'யோகம்.'

யோகத்தைப் பற்றி மேலும் சில விவரங்களை பகவான் கூறுகிறார்:

ஸங்கல்ப ப்ரபவான் காமான்ஸ்
　　த்யக்த்வா ஸர்வான ஸேஷத:
மனஸை—வேந்த்ரிய—க்ராமம்
　　வி நியம்ய ஸமந்தத: 6:24

சங்கற்பத்திலிருந்து எழும் எல்லாக் கோரிக்கைகளையும் மிச்சம் மீதியின்றி துறந்து, புலன்களின் கூட்டம் முழுவதையும் எல்லாப் பக்கங்களிலும் மனத்தினால் அணைபோட்டுக் கட்டுப்படுத்தி,

சனை: சனை—ருபரமேத் புத்த்யா த்ருதி—க்ருஹீதயா
ஆத்ம—ஸம்ஸ்த்தம் மன: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்
6:25

அவன் கொஞ்சம் கொஞ்சமாக அமைதி பெறுவானாக. அறிவின் உதவி கொண்டு ஆன்மாவில் உறுதியாக நிலைத்த மனத்துடன் அவன் வேறு எதைப் பற்றியும் சிந்திக்காமல் இருப்பானாக.

முந்திய பகுதிகளில் யோக சாதகத்தின் இலட்சியம் பற்றி எடுத்துரைக்கப்பட்டது. ஒருமுக தியானத்தில் அமருவதற்கேற்ற முறையில் மனத்தை முற்றிலும் கட்டுப்படுத்துவதுதான் யோகத்

தின் இலட்சியம். அவ்வாறு தியான நிலையில் இருக்கும் போது ஒருவர் பெறும் நிறைவும், இன்பமும் பிறகு படம் பிடித்துக் காட்டப்பட்டது. கருத்தளவில் அது நன்றாக இருந்த போதிலும், இச் சமநிலையை ஒரு சாதகர் ஏற்படுத்திக் கொள்வது எப்படி? இதற்கு வழிகாட்டினாலொழிய சுய முயற்சியினால் அவர் தியானத்தில் அமருவதற்கு முடியாமற் போய்விடலாம்.

இந்த இரண்டு செய்யுட்களில் நுணுக்கமான தியானக் கலை விவரிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, மனத்தை ஒருமுகப்படுத்துவது எப்படி, தியானத்தின் போது மனம் என்ன செய்கிறது, மெய்ப்பொருளை நாடும் உள்ளம் சுய முயற்சியினால் அதில் கலந்து விடுவது எவ்வாறு என்பவையெல்லாம் இங்கு தெளிவு படுத்தப் பட்டிருக்கின்றது.

மனத்தில் எல்லா (சர்வான்) வேட்கைகளையும் மிச்சம் மீதியில்லாமல் (அசேஷத) துறந்து, எல்லாப் புலனுறுப்புக்களையும் பொருளுலகிலிருந்து உள்ளிழுத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லும்போது இங்கு நாம் உபயோகித்துள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் விளக்கவுரை தருவது அவசியமாகிறது. ஏனெனில் ஒவ்வொரு சொல்லிலும் சாதகரின் நோக்கம் நிறைவேறுவதற்கான முக்கியக் கருத்துக்கள் பொதிந்திருக்கின்றன. கோரிக்கைகளை எல்லாம் கைவிடுவது மட்டும் அவற்றை முற்றிலும் துறப்பதாகாது. அவற்றை வேருடன் களைந்தெறியவேண்டும். சர்வான், அசேஷத: என்ற இரு சொற்களும் ஆழ்ந்த தியான காலத்தில் உள்ள மனச் சமநிலையின் தன்மையை ஆணித்தரமாக எடுத்துரைக்கின்றன. யோக முழுமை பெறவேண்டுமென்ற கோரிக்கைதானே இவ்வளவு முயற்சிக்கும் காரணமாக இருக்கிறது. அதையும் கடைசியில் துறந்துவிட வேண்டுமென்ற கருத்து அசேஷத: என்ற சொல்லில் அடங்கியிருக்கிறது.

கோரிக்கைகளைத துறக்க வேண்டியது மிக அவசியமும், முக்கியமானதுமாகும் என்று இங்கு கூறியிருப்பது உண்மைதான். ஆனால் இதை அரைகுறையாகப் படிப்பவர்கள் எந்த இலட்சியத்திற்காகவும் பாடுபடக் கூடாதென்றும் உயர்ந்த நோக்கங்களைக் கூட கைவிட்டு, வெறும் சோம்பேறிகளாக வாழச் சொல்லி சாத்திரங்கள் சொல்லுகின்றன என்றும், நமது புனித நூல்களையே பழிக்கும் வகையில், நடந்து கொள்ளுகிறார்கள். 'சங்கற்பத்திலிருந்து எழுகின்ற' என்ற சொற்கள் இருப்பது அவர்களுடைய கண்ணில் படுவதேயில்லை போலிருக்கிறது! மிச்சம் மீதியில்லாமல் முற்றிலும் துறந்துவிட வேண்டியவை. சங்கற்பத்திலிருந்து பிறக்கும் அக்கோரிக்கைகளையே. 'சங்கல்பம்' என்ற சொல்லுக்கு ஏற்கனவே, இந்த அத்தியாயத்தின் இரண்டாவது செய்யுளில் விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது.

எனவே, ''கலக்கத்திற்குப் பிறப்பிடமாகும் கோரிக்கைகளை எல்லாம் கைவிட வேண்டும்'' என்பதே இங்கு கூறப்படும் கருத்து.

கற்பனையில் தோன்றி, கலக்கங்களைக் கொண்டு வரும் அக் கோரிக்கைகளை முதலில் அகற்றிவிட்டால், ஒருவருடைய மனம் வலுவடைந்து, தாக்குதல்களைச் சமாளிக்கும் சக்தி பெறுகிறது. புலனுறுப்புக்களின் கொடுங்கோன்மையை அடக்கி, அவற்றை கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரும் திறன் உண்டாகிறது. பிறகு, எல்லா திசைகளிலிருந்தும் வரும் புலன் பொருட்களின் ஆதிக்கத்திலிருந்து புலனுறுப்புக்களைத் தடுத்து நிறுத்திவிட மனத்தினுல் முடிகிறது.

விஞ்ஞான பூர்வமாகப் பார்த்தால், நமது மனம் புலனுறுப்புக்களின் இயக்கத்தைக் கட்டுப்படுத்த முடிவதில்லை என்பது உண்மைதான். ஆனுல் இதற்குக் காரணமென்ன? தவருன வேட்கைகளிலிருந்து எழும் நிரந்தரக் கலக்கங்கள் மனத்தை பலவீனப்படுத்தி, சக்தியற்றதாக்கிவிடுகின்றன. கோரிக்கைகளைத் துறப்பதன் விளைவாக மனம் வலிமை பெறும்போது, எல்லாப் பக்கங்களிலும் புலன்கள் தறிகெட்டு ஓடுவதைத் தடுத்து அடக்கும் தெம்பு தன்னிடமிருப்பதை மனமே உணர்ந்து கொள்ளுகிறது. அவசரப்பட்டு சில நடவடிக்கைகளை மேற்கொண்டோ, கற்பனையினுலோ அல்லது மற்ற அதிசய, இரகசிய முறைகளைக் கடைப்பிடித்தோ மனத்தை அமைதியுறச் செய்வது இயலாத வேலை. ''புலன் பொருள் உலகிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக தன்னை உள்ளிழுத்துக் கொள்ளுவதன் மூலம் ஒருவர் அமைதி எய்த வேண்டும்'' என்று சாதகர்களுக்கு அழுத்தந்திருத்தமாக கீதை அறிவுரை கூறுவதிலிருந்தே அது நன்கு தெரிகிறது. மெது மெதுவாக (சனைஹ சனைஹ) மனம் இந்த முறையில் மேன்மேலும் அமைதி பெறுகிறது.

புலனுறுப்புக்கள் வெளியுலகப் பொருள்களை நோக்கி வெறி பிடித்து ஓடுவதை அணைபோட்டுத் தடுத்து விட்டால், ஓரளவு மன அமைதி கிட்டுகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனுல் இக் கட்டுப்பாட்டை மேலும் தீவிரமாக்குவதற்கு இங்கு சில வழிகள் கூறப்படுகின்றன.

''அறிவைக் கொண்டு, பொறுமையுடன், மனத்தை அடக்கி, அதை ஆன்ம சிந்தனையில் நிலைக்கச் செய்ய வேண்டும்''—சாதகர்களுக்கு இது முக்கியமான புத்திமதி. ''ஒருவர் தனது மனத்தை புலன் பொருள் உலகிலிருந்து உள்ளிழுத்துக் கொள்ளப் பழகிய பிறகு, தியான முயற்சியில் அடுத்துச் செய்ய வேண்டியது பற்றி ஒரு திட்டம் வகுத்துக் கொடுக்கிறது. தியானத்தில் ஆழ்ந்திருக்கும்போதுதான் வெளியுலகை ஒருவர் முற்றிலும் ஒதுக்கித் தள்ளிவிட முடியும்.

மனத்தை விட முக்கியமானது, நுணுக்கமானது அறிவு. மனம் ஓரளவு அமைதி அடைந்துவிட்டவுடன்,, அதைவிட மேலும் நுண்ணிய அறிவின் கட்டுப்பாட்டுக்குள் அதைக் கொண்டு வரவேண்டும். புலனுறுப்புக்களை மனம் அடக்குவது போல, மனத்தை அறிவு பரிபூரணமாகத் தனது கட்டு பாட்டுக்குள் கொண்டு வர வேண்டும். மனத்தின் கவனம் மற்ற வழிகளில் செல்லாமல், ஒரே குறியில் கொண்டுவந்து நிலைநாட்டினுலொழிய அதைக் கட்டுப்படுத்த முடியாது. மனம் என்பது சிந்தனைகளின் ஓட்டமே. அதை ஆன்மாவின் இயல்பு பற்றிய சிந்தனை ஓட்டமாக ஆக்குவதுதான் அறிவு செய்யக் கூடிய வேலை. அப்படி ஆன்ம சிந்தனையில் உறுதியாக நிலைத்த மனம் சலனமற்றிருக்கும்; தெய்வீக அமைதி நிலவப் பெற்றதாக இருக்கும். இதுதான் தியாக யாத்திரையின் கடைசிப் பகுதி. அறிந்து, சுய முயற்சி எடுத்து, ஒருவர் மேற்கொள்ளும் நட வடிக்கை (புருஷார்த்தம்) ஒரு சாதகரை இதுவரைதான் இட்டுச் செல்ல முடியும்.

உண்மையான எந்தச் சாதகரும் மேற்கொள்ளக் கூடிய முறையில் கிருஷ்ணர் அளித்த அறிவுரை இந்த இரண்டு செய்யுட் களுடன் முடிவடைகிறது. மனம் இறுதியில் சலசலப்பற்று, அமைதியுடன் இருக்கும் நேரத்தில் என்ன செய்யக் கூடாது என்று எச்சரித்துவிட்டு அறிவுரையை அவர் முடிக்கிறார். என்ன செய்ய வேண்டுமென்று அவர் சொல்லவில்லை. குழலூதும் இசை மாமணி, 'உள்ள அமைதி பெற்ற பிறகு வேறு எதையும் பற்றி சிந்திக்காமல் இருப்பானாக' என்று மட்டும் கூறுகிறார்.

மன அசைவுகளற்ற இந்த ''முற்றுப்புள்ளி நேரத்தில்'' * சாதகர் தாமாகச் செய்வதற்கோ, சாதிப்பதற்கோ ஒன்றுமில்லை. அவர் செய்ய வேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். ஏதேதோ கற்பனைகளில் இறங்கி, புதுக் குளறுபடிகளை ஏற் படுத்திக் கொள்ளாமல் இருப்பதுதான் அது. ''புதிய சிந்தனை அலைகளினால் உறுதிப்படுத்திக் கொண்டு சலசலப்புக்களை உண்டாக்கிக் கொள்ளாமல், உள்ள அமைதியை உறுதிப்படுத்திக் கொண்டு, அதிலேயே தொடர்ந்து ஆழ்ந்திருப்பானாக'' என்பதே நடைமுறையில் வெற்றி பெறுவதற்கு தியானக் கலை காட்டும் நெறி. ''கதவைத் தட்டு. உள்ளே போகலாம்'' என்பது நமக்கு அளிக்கப்பட்டுள்ள வாக்குறுதி. உன்னைப் பொறுத்தவரை, கதவைத் தட்டியாயிற்று. வெகு விரைவில் (அசிரேண) தெய்வ சந்நிதானத்தில் நிற்கும் வாய்ப்பு வரப் போகிறது.

இந்து மதத்திலுள்ள மற்ற நூல்கள் உள்பட, உலகத்தி லுள்ள எந்த ஆன்மிக இலக்கியத்திலும், இதைப் போன்று எளி தாகக் காணப்படும் இரண்டு செய்யுட்களில் சாதகர்களைத்

---

* சின்மயானந்தரின் ''தியானமும் வாழ்க்கையும்'' பார்க்க.

தூக்கிவிடும் இவ்வளவு கருத்துச் செல்வம் வாரி வழங்கப்பட்ட தில்லை. கீதையையே எடுத்துக் கொண்டாலும், இவ்விரண்டுக்கும் ஒப்பாக வேறு இரண்டு செய்யுட்களை எடுத்துக் காட்ட முடியாது. சாதகர்களுக்கு அவ்வளவு உதவியாக இருக்கும் செய்யுட்கள் இவை.

உறுதியற்ற, சஞ்சல உள்ளம் படைத்தவர்களுக்கு உதவி யாக இருக்கட்டுமென்று பின்வரும் புத்திமதியை சேர்த்துச் சொல்லப்படுகிறது.

யதோயதோ நிஸ்சரதி மனஸ்—சஞ்சல மஸ்த்திரம்
ததஸ்—ததோ நியம்யை ததாத்மன்யேவ வசம் நயேத்

6:26

காரணம் எதுவாக இருந்த போதிலும், உறுதியற்ற, நிலை கொள்ளாமல் அலையும் மனத்தை அடக்கி இழுத்துவந்து, ஆன்மா வின் ஆதிக்கத்தில் மட்டுமே இருக்கும்படியாக (சாதகன்) நிலைநாட்டுவானாக.

முந்திய இரண்டு செய்யுட்களின் கருத்தையும் விளக்க மாகத் தெரிந்து கொண்டு அதைப் பின்பற்ற முயற்சிக்கும் ஒருவர், தமது உள்ளத்தைக் கட்டுப்படுத்தி ஆன்ம சிந்தனையில் லயிக்கச் செய்ய முடியாததைக் கண்டு சோர்வடைந்து விடக் கூடும். மனக் கட்டுக்கடங்காமல் ஓடுவது பற்றி அவருக்குத் திகைப்பேற்படலாம். ஏதோ ஒன்றில், நிலைத்திருக்க அதனால் முடியாது. ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தாவிக் கொண்டிருப் பது அதன் சுபாவம். இதைத்தான் 'சஞ்சலம்' 'அஸ்திரம்' என்று இரு வார்த்தைகளின் மூலம் கிருஷ்ணர் சுட்டிக் காட்டுகிறார். தியான மார்க்கத்தைப் பின்பற்றும் ஒவ்வொரு சாதகனும் தன் மனத்துடன் நடத்த வேண்டியிருக்கும் போராட்டத்தை மறக்க முடியாதபடி படம் பிடித்துக் காட்டுகிறார். அர்ஜுனன் பிறகு சந்தேகம் கேட்கும்போது இதே சொற்களை உபயோகிக்கும் அளவுக்கு இவை அவனுடைய உள்ளத்தில் பதிகின்றன.

சாதக காலத்தில் ஒருவர் தமது புலன்களை பெரும்பாலும் அடக்கிவிட்ட போதிலும், மனம் பழைய அனுபவங்களை மறக்க முடிவதில்லை. அவை நினைவுக்கு வந்து, மீண்டும் புலன் பொருள் களை நோக்கியே மனம் செல்கிறது. இந்தத் தொல்லையினால் சாதகர்களுக்கு பெருத்த குழப்பம் உண்டாகிறது. மனம் அவ்வாறு கட்டுக் கடங்காமல் ஓடுவதற்குப் பல காரணங்கள் இருக்கலாம்—கடந்த கால நினைவுகள், உள்ளத்தைக் கவரும் பொருள்கள் அருகில் இருத்தல், சிந்தனைப் பின்னல்கள், விருப்பு வெறுப்புக்கள் போன்றவற்றினால் அந்த நிலை ஏற்படலாம்.

சாதகர் தமது ஆன்மிக முன்னேற்றத்தில் கொண்டுள்ள ஆவலே மனக் கலக்கத்திற்குக் காரணமாகக் கூடும். காரணம் எதுவாக இருந்த போதிலும் கிருஷ்ணர் இங்கு கூறும் ஆலோசனை எல்லா நிலைகளுக்கும் பொருந்தக் கூடியதாக இருப்பதுடன் எவ்வித ஐயப்பாட்டுக்கும் இடமில்லாததாகவும் இருக்கிறது. சஞ்சலமும், நிலையற்ற தன்மையும் உள்ள மனம் அடங்காமல் ஓடுவதற்குக் காரணம் எதுவானாலும் சாதகர்கள் மனம் தளர்ந்து விட வேண்டியதில்லை. தியான முறையின் நோக்கமே மனம் இவ்வாறு கட்டுக் கடங்காமல் ஓடுவதைத் தவிர்க்கத்தான் என்று பகவான் இங்கு குறிப்புணர்த்துகிறார்.

அதைத் திருப்பி இழுத்து வருபவனாக—பல்வேறு பக்கங்களிலும் சிதறிச் செல்லும் மனத்தை திரும்பவும் ஒருமுகப்படுத்த வேண்டும் என்று சாதகருக்கு ஆலோசனை கூறப்படுகிறது. பலவந்தமாக நாம் மனத்தை உள்ளிழுத்துக் கொள்ள முடியுமென்பது உண்மைதான். அப்படி நிரப்பிக் கொண்டு வந்தவுடன் மீண்டும் அது வேறு ஒரு சிந்தனைப் பாதையில் ஓடப் பார்க்கிறது. அதனுடைய இயற்கை அப்படிச் செய்வதுதான். மனம் என்பது சிந்தனைகளின் ஓட்டமே என்பதை சாதகர்களில் பலர் தெரிந்து கொள்வதில்லை. இயக்கமற்று உறுதியாக நிற்கும் மனம் மனமே அல்ல. ஆகையால் புலன் பொருள்களிலிருந்து அதை உள்ளிழுத்துக் கொள்ளும்போதே ஒரு சாதகர் தமது சுய முயற்சியினால் அதை ஆன்ம சிந்தனையில் ஈடுபடுத்துவதுதான் தியான முறை. ''ஆன்மாவின் ஆதிக்கத்தில் மட்டுமே இருக்குமாறு அதை ஒரு சாதகர் நிலைநாட்டுவாராக'' என்று கிருஷ்ணர் அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார்.

தியான யோகத்தினால் உண்மையான சாதகர்களுக்கு உண்டாகும் பயனை அடுத்த சில செய்யுட்கள் விவரிக்கின்றன.

ப்ரசாந்த—மனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம்
உபைதி சாந்தர ஜஸம்ப்ர ஹ்மபூத—மகல்மஷம் 6:27

மனத்தில் முழு அமைதி நிலவப் பெற்று உணர்ச்சிக் கொந்தளிப்புகள் அடங்கி மாசுகள் அறவே நீங்கி பிரம்மனாக ஆகிவிடும் இந்த யோகி ஒப்புயர்வற்ற பேரானந்தத்தை அடைகிறார்.

ஒருவருடைய உள்ளம் பொருளுலகத்தில் திரியாமல் அடங்கி ஆன்மாவில் நிலைத்த பிறகு மனத்தில் மேன்மேலும் அமைதி அதிகரிக்கிறது. சிந்தனை ஓட்டம் கடைசியில் நின்றுவிட்ட பிறகு, மனமும் அங்கு மறைந்து விடுகிறது. எனவே ஆன்மாவின் எல்லையற்ற இயல்பை அவர் அனுபவிக்கிறார். இவ்வாறுள்ள ஒரு யோகி ஒப்புயர்வற்ற பேரானந்தத்தை அடைகிறார்.

ஆழநது சிந்திக்கும் இயல்புள்ள சாதகர்களுக்கு இந்த இடத்

தில் நியாயமான சந்தேகம் ஒன்று தோன்றலாம். தனது சொந்த அபிப்பிராயங்களை மற்றவர்கள் ஏற்க வேண்டுமென்று நினைக்கும் உரிமை ஒரு விஞ்ஞானிக்கு இல்லை. கட்டுப்பாடுகளின் மூலம் அமைதியடையும் மனம் எப்படி, ஏன் ஆன்மாவைக் காணும் திறந்த ஜன்னலாகிறது என்பதற்கு, இரண்டாவது வரியில் காரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சந்தடியற்ற அமைதி நிலையிலிருக்கும் மனம், தனது பழைய வாசனைகளை எல்லாம் இழந்து விடுகிறது. அதில் படிந்துள்ள மாசு முற்றிலும் அகன்று விடுகிறது.. (அகல்மஷம்).

வேதாந்தத்தில் மன ''அசுத்தங்களை'' மலம் என்று கூறு கிறார்கள். ''ஆன்ம இயல்பை அறியாமை'' ஒரு அசுத்தம். அதி லிருந்து மனக் கலக்கங்கள் தோன்றுகின்றன. அறிவிலுள்ள மந்த (தமஸ்) குணத்தினல் உண்மையை ''மூடி மறைக்கும்'' (ஆவரண) தன்மை தோன்றுகிறது. அதன் விளைவாக மனத்தில் 'கலக்கம்' (விக்ஷேபம்) உண்டாகிறது. ரஜோ குணம் மிகுதியாக இருப்பவர்களிடம் இம் மனக் கலக்கத் தொல்லை உச்ச நிலை அடைகிறது. துயரப் படு குழியில் மனிதன் வீழ்ச்சியுற்ற காரணத்தை விளக்கும் இவ் வேதாந்தக் கொள்கையை பகவானு டைய இரண்டு சொற்கள் இங்கு எதிரொலிக்கின்றன. 1. உணர்ச்சிக் கொந்தளிப்புக்கள் அடங்கி (சாந்த ரஜஸம்) 2. ''மாசுகள் அறவே நீங்க'' (அகல்மஷம்).

எல்லாக் கலக்கங்களும் மறைந்து விடுவதால் ஆன்மிகப் பேருண்மையை மறைக்கும் ''அறியாமை''த் திரை அறுந்து விழுந்து விடுகிறது. கலக்கங்கள் இருக்கிறவரையில்தான் மனமும் இருக்கும். மனத்தை ஆன்மாவுடன் ஒருங்கிணைத்து மருட்சி ஏற் படுத்துவது அகந்தைதான். அதாவது தியானத்தில் ஈடுபடத் தொடங்கியுள்ள அந்த சாதகரேதாம். அவர் தமது மனத்தில் அமைதி நிலவுமாறு செய்து விட்டால், கலக்கங்கள் எல்லாம் ஒழிந்தவராகிறர். தான் தூய ஆன்மாவை த்தவிர வேறென் றில்லை என்று அவருடைய அகந்தை மீண்டும் கண்டு கொள்ளு கிறது. இரண்டறத் திகழும் இம் மெய்ப்பொருள் பற்றி பகவான் பகிரங்கமாக அறிவிக்கிறர். ஆன்ம உணர்வு பெற்றவர் 'பிரம்ம ஞக ஆகிவிடுகிறர்' (பிரம்ம பூதம்) என்று கூறுகிறர்.

தியான வழியில் உண்மையாகச் செல்லும் ஒருவருடைய சாதனையை எடுத்துரைத்த பிறகு, அதில் முழுமை பெற்றவரு டைய வாழ்க்கை தொடர்ந்து ஆன்மானுபவ அடிப்படை யிலேயே இருந்துவரும் என்பதையும் கிருஷ்ணர் பின்வரும் செய்யு ளில் தெரிவிக்கிறர்.

யுஞ்ஜன்—னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ:
ஸுகேன ப்ரஹ்ம—ஸம்ஸ்பர்சமத்யந்தம் ஸுக மச்னுதே
*6:28*

மனத்தை இவ்வாறு (இடையரு யோகப் பயிற்சியில்) ஈடு படுத்தும் யோகி, தமது பாவங்கள் எல்லாம் அகலப்பெற்று, பிரம்மன் உறவினால் வரும் எல்லையற்ற பேரானந்தத்தை அடைந்து இன்புறுகிறார்.

பரிணாம வளர்ச்சிக்காகவும், மனத்தைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவும் போராடும் ஒரு யோகி, ஆன்மீக அறியாமை போன்ற இருளடைந்த பகுதிகளிலிருந்து வெளியேறி, ஞான ஒளி வீசும் இன்பப் பகுதிகளுக்கு வருகிறார். சந்தடியோ, சலசலப்புக் களோ இல்லாத அவருடைய மனம், கொழுந்து விட்டு எரியும் தியானத்தில் இறங்கியவுடன் மாசுகள் எல்லாம் கருகிச் சாம்பலாகி, புடம் போட்ட தங்கம்போல ஆகிவிடுகிறது. இந்த நிலையைத்தான் ''எல்லாம் அடங்கிய முற்றுப்புள்ளி நேரம்'' என்று குறிப்பிடுகிறோம். * மனித முயற்சியினால் இதுவரையில் தான் மனத்தை உயர்த்திக் கொண்டு போக முடியும். மேலே மேலே போய்க் கொண்டிருக்கும் பலூன் மிக உயரத்திற்குப் போனவுடன் படாரென்று வெடித்து வெறும் ரப்பர் துண்டு களாக உதிர்ந்து விடுகிறது அல்லவா? அதே மாதிரியாக, தியானத் தின் உச்சக் கட்டத்தை அடையும்போது மனம் சிதறிச் சுக்கலாகி அகந்தையை உதிர்த்துவிட்டு பேருணர்வாகிய ப்ரம் பொருளுடன் இரண்டறக் கலந்து விடுகிறது. பலூன் வெடித்தவுடன் அதன் உள் வெளியும், புற வெளியும் ஒன்றாகிவிடுவதைப் போல, வரையறைகளுக்கு உட்பட்ட மனம் மறைந்தவுடன், அது ''பிரம்மனைப் பற்றிக் கொள்வதால் சுலபமாகப் பேரானந்தம் பெறுகிறது.''

ஓய்ச்சல் ஒழிவின்றி வினை—விளைவுத் தொடரிலேயே உழன்று கொண்டிருக்கும் அறிவுக்கு பதிலளிக்கும் வகையில், ''மனத்தை யும் அறிவையும் கடந்து விடுபவர்கள் வெறும் இயக்கமாக எங்கும் பரந்துள்ள இறைவனை அடைந்து இன்புறுகிறார்கள்'' என்று கிருஷ்ணர் கூறுகிறார். தாமே பேரின்பப் பொருள் என்று சாதகர் அப்போது உணர்ந்து கொள்ளுகிறாரென்று அவர் சொல்லியிருந்ததால் தற்போது தன்னிடம் எவ்வித இன்பமும் இல்லாதது கண்டு அர்ஜுனன் அவர் கூறியதை ஏற்கத் தயங்கி யிருக்கலாம். போதிய ஆன்ம பக்குவம் பெறாத அவனுடன் பேசுவதால் 'பிரம்மன் தொடர்பினால் எல்லையற்ற ஆனந்தத்தைச் சாதகன் அடைகிறான்' என்று சாதாரணப் பேச்சு மரபிலுள்ள சொற்களை அவர் பயன்படுத்துகிறார். உண்மையில், 'பிரம்மன் தொடர்பினால்' என்பதை ''ஆன்ம உணர்வு பெறுவதால்' என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஆன்மாவுடன் அல்லாது உலகப் பொருள்களுடன் தொடர்பு கொள்ளுவதால் நமக்குக்

---

* கீதையின் விளக்கவுரையில் மற்ற பகுதிகளிலும், சுவாமி சின்மயானந்தரின் ''தியானமும் வாழ்க்கையும்'' என்ற நூலிலும் காண்க.

கிடைக்கும் இன்பங்கள் நிரந்தரமானவை அல்ல. ஆன்மாவுடன் கொள்ளும் தொடர்பு நிரந்தரமானது என்று பொருள்படும் வகையில் கிருஷ்ணர் பேசுகிறார்.

யோகத்தின் பயன்பற்றியும், பன்மைத் தோற்றம் கொண்ட இவ்வுலகு, முழுமை பெற்ற யோகிக்கு ஒருமையாகத் தோன்றுவது பற்றியும் அடுத்து விளக்கப்படுகிறது.

ஸர்வபூதஸ்த்த—மாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன:

6:29

யோகத்தினால் மன இசைவு பெற்றவர் எல்லா உயிரினங்களிலும் ஆன்மா ஊடுருவி நிற்பதையும், ஆன்மாவில் எல்லா உயிரினங்களும் இருப்பதையும் காண்கிறார். எல்லா இடங்களிலும் அவருக்கு அதே பொருள் காணப்படுகிறது.

எல்லா மதங்களும் பெருமை வாய்ந்தவை என்பதில் சந்தேகமில்லை. ஆனால் மனிதன் முழுமை பெறுவதற்கு வழி காட்டும் விஞ்ஞானமே மதம் என்றால், அதற்கு வேதாந்தத்தைப் போல சிறப்புள்ளது வேறு எதுவுமில்லை. இறைவனைத் தன்னில் காண்பது ஒன்றே நிறைவின் அறிகுறியாகிவிடாது. படைப்பிலுள்ள எல்லா உயிரினங்களிலும் இறைப்பொருள் நிறைந்திருப்பதை உணர்ந்து, அதற்கேற்ப வாழ்க்கையில் நடந்து கொள்பவனே நிறைவுபெற்ற யோகி. கிருஷ்ணர் இதைத் தெளிவாக இங்கு அறிவிக்கிறார். நமது உணர்வும் எல்லா நாம ரூபங்களிலும் திகழும் பேருணர்வும் ஒன்றுதான். நமது அறிவிக்கும், அனுபவங்களுக்கும் எட்டுகிற உலகம் முழுவதற்குள் மூலப் பொருளாக விளங்குவது இத் தெய்வீகப் பேருணர்வே. தன்னிடமுள்ள ஆன்மாவை உணர்ந்தவன் எங்கும் நிறைந்த பரம்பொருளை இறுகப்பற்றியவனாகிறான்.

மெய்யுணர்வு பெற்றவர் எங்கும் கடவுளையே காண்கிறார். இந்து மதம் கூறும் பேருண்மை இது. தெய்வீகக் கருணை பொங்கி வழியும் போது கூட மெய்யுணர்வு பெற்ற ஒருவர் மற்றவர்களைப் பார்த்து, 'ஓ பாவிகளே' என்னும் வெறுக்கத்தக்க வார்த்தைகளைப் பிரயோகம் செய்ய மாட்டார். இந்து முனிவர்களில் ஒருவரான ராம தீர்த்தர் இதற்கு ஒரு சிறந்த உதாரணம். முழுமை பெற்ற அந்த மகான் உலகத்திலுள்ள எல்லா உயிரினங்களையும் ''ஓ பேரொளிச் சுடர்களே'' என்று அழைத்துப் பேசுகிறார். தியானத்தின் மூலம் தாமே பிரம்மன் என்ற உணர்வொளி ஒருவருக்கு வந்தவுடன் அவர் பரிபூரண நிறைவு பெற்றுவிடுகிறார். முழுமை பெற்ற இந்து மத முனிவர்கள் எல்லோரும் இந்த அனுபவத்தின் உண்மையை உறுதிப்படுத்துகிறார்கள்.

அழிவிலா பரம் பொருட் கடல்தான் பன்மைத் தோற்ற அலைகளாகத் தென்படுகிறது. அந்த அடிப்படை இல்லையென்றால் அலைகளே இல்லை. இவ்வுண்மையை கீதையில் ஏறக்குறைய எல்லா அத்தியாயங்களிலும் காணலாம். எல்லா நாம ரூபங்களிலும் உயிர்ப் பொருளாக ஊடுருவியும், உயர்ந்தும் நிற்பது ஆன்மா. எல்லாப் பானைகளிலும் உள்ள களிமண் போல் எல்லா பொன்னாபரணங்களிலும் இருக்கும் தங்கம் போல, எல்லா அலைகளிலுமுள்ள கடல் போல, எல்லா மின் விளக்குகளிலும் ஊடுருவிச் செல்லும் மின்சாரம் போல, பொருளுலகத்தின் சாராம்சமாகவும், அடிப்படையாகவும் இருப்பது ஆன்மாதான் என்று கீதை பறை சாற்றுகிறது.

ஊனுடல் மூலமாக நாம் வெளி உலகைத் தெரிந்து கொள்ளுகிறோம். நமது உணர்ச்சி மட்டத்திலிருந்து மற்றவர்களுடைய உணர்ச்சிகளைத் தெரிந்து கொள்கிறோம். நம் அறிவு மட்டத்திலிருந்து மற்றோருடைய கருத்துக்களுடன் உறவு கொள்ளுகிறோம். அறிவையும் கடந்த நிலையில் ஒருவர் தமது தெய்வீக இயல்பை மீண்டும் கண்டு கொள்ளுகிறார் என்பதையே முந்திய செய்யுள் அறிவுறுத்தியது. அந்த ஆன்மீக மட்டத்திலிருந்து வெளியுலகை நோக்கும்போது, எல்லா இடங்களிலும் ஆன்மா பரவியிருப்பது தெரிகிறது. தியானத்தில் வெற்றி பெற்ற ஒருவர், அறிவைக் கடந்தவராகி ஆன்ம நிலை எய்துகிறார். எல்லா இடங்களிலும் அவருககு ஆன்மாவைத் தவிர வேறு எதுவும் தென்படுவதில்லை. எல்லாப் பானைகளிலும் தான் இருப்பது களிமண்ணுக்குத் தெரிகிறது. பொன்னுக்கு தன்னைத் தவிர்த்த தங்க நகைகளே இல்லை என்று தெரிகிறது.

இதை கருத்திற்கொண்டு இச் செய்யுளை மீண்டும் படித்தால், 'எல்லா உயிரினங்களிலும் ஆன்மா ஊடுருவி நிற்பதையும், ஆன்மாவில் எல்லா உயிரினங்களும் இருப்பதையும் காண்கிறார் என்ற பகுதியின் பொருள் நன்றாக விளங்குகிறது. உலகத்தின் கோடானுகோடி மாறுபாடுகளை இணைத்து நிற்கும் ஒருமைப் பொருளைக் கண்டு கொண்டவரே நிறைவு பெற்றவர். அவருக்கு எல்லா சந்தர்ப்பங்களிலும், சூழ்நிலைகளிலும் சமநோக்கு இருக்கும். அவருக்கு 'மாண்புமிக்க பிராம்மணனும், பசுவும், யானையும், நாயும், பறையனும் ஒன்றுதான்

ஆன்மாவின் ஒருமைப்பாடு பற்றி அறிந்து கொள்வதால் வரும் பயன் பின்வருமாறு:

யோ மாம் பஸ்யதி ஸர்வத்ர ஸர்வஞ்ச மயி பஸ்யதி
தஸ்யாஹம் ந ப்ரணஸ்யாமி ஸ ச மே ந ப்ரணஸ்யதி

**6:30**

எல்லா இடங்களிலும் என்னையே கண்டு, என்னுள்

எல்லாப் பொருள்கள் இருப்பதையும் யாரொருவர் காண்கிருரோ, அவர் என்னிடமிருந்து பிரிவதில்லை; நானும் அவரிடமிருந்து பிரிவதில்லை.

தியான முறையை மேற்கொண்டு தமது இலட்சியத்தை அடைந்த ஒருவர் ''பிரம்மன் உறவினுல் வரும் எல்லையற்ற பேரானந்தத்தை அடைந்து இன்புறுகிருர்'' என்று முந்திய செய்யுள் ஒன்றில் பார்த்தோம். உபநிடதங்களில் கூறியுள்ளபடி மெய்ப்பொருளுடன் இரண்டறக் கலந்து விடுதலையே 'இறையுறவு கொள்ளுதல்' என்று கீதை கூறுகிறது. கிருஷ்ணரே அச்சொல்லுக்கு இங்கு விரிவுரை கூறுகிருர். தாமே ஆன்மா என்று கண்டுகொண்ட ஒரு யோகி உலகம் முழுவதிலும் ஆன்மாவையே காண்கிருர்.

என்னை எல்லாப் பொருள்களிலும், எல்லாப் பொருள்களும் என்னிடமிருப்பதையும் காண்பவர். 'நான்' 'எனது' என்று தன்மை ஒருமையை இங்கும் கீதையில் மற்ற இடங்களிலும் கிருஷ்ணர் உபயோகிக்கும்போது, அவர் பரமாத்மா என்ற முறையில் பேசுகிருர். இதை மனதிற் கொண்டு இதையும், இதற்கு முந்திய செய்யுளையும் படித்தால், ஈசாவாஸ்ய உபநிடத்திலுள்ள பிரபல மந்திரத்திற்கு இவை மேலும் சிறப்பான விளக்கமாய் அமைந்திருப்பது தெரியவரும்.

என்னை விட்டுப் பிரிவதில்லை—அறிவைக் கடந்துவிட்ட அகந்தைக்குத் தான் பரம் பொருளைப் பார்ப்பதாகவோ அல்லது தெரிந்துகொண்ட அனுபவமோ கூட ஏற்படுவதில்லை. ஆன்மாவுடன் அது இரண்டறக் கலந்து விடுகிறது. (சிவோஹம்) கனவிலிருந்து விழித்தெழுந்தவுடன் ஒருவன் விழித்தவனுகவே ஆகி விடுகிருன். கனவிலிருப்பவன் விழித்திருப்பவனைப் பார்க்க முடியாது. 'நான் வேறு, விழித்திருப்பவன் வேறு என்று தெரிந்து' கொள்வதுமில்லை.

நானும் அவரிடமிருந்து பிரிவதில்லை—ஜீவாத்மா, பரமாத்மா வென்று ஒன்றையே தனித்தனியாகக் கருதுவோர் தங்களுடைய மெய்யியல்பு எல்லையற்ற இறை நிலையே என்பதை ஒப்புக் கொள்ளத் தயங்குகிருர்கள். ஏனெனில் அகந்தை மையங்கள் என்ற முறையில் தத்தம் உடல்கள் செய்யும் தவறுதல்களைப் பற்றியும், தங்களிடமுள்ள குறைபாடுகள் பற்றியும் அவர்களுக்கே தெரிகிறது. மனிதனின் சாராம்சமான தெய்வீக இயல்பு பற்றி இச்செய்யுளில் இருப்பதைவிட விரிவாகவும், ஆணித்தர

மாகவும் எவரும் சொல்ல முடியாது. ஆன்மா அல்லாததிலிருந்து தம்மை தியானத்தின் மூலம் பிரித்துக் கொள்வதில் வெற்றி பெறும் யோகி எல்லையற்ற மெய்ப்பொருளாகி விடுகிறார் என்று கிருஷ்ணர் ஒளிவுமறைவின்றி, அப்பட்டமாகக் கூறுகிறார். இவ் வுண்மை திடுக்கிட வைப்பதாக இருக்கலாம். ஆனால் அது நூற்றுக்கு நூறு உண்மை. தயங்கி ஊசலாடிக் கொண் டிருப்பவர்கள் தங்களுடைய தெய்வீக இயல்பு பற்றி இதற்குப் பிறகும் கூட நம்ப முடியாமல் தடுமாறிக் கொண்டிருப்பதை யாரும் தடுக்க முடியாது. ஆனால் குரு பரம்பரையில் வந்த நம் நாட்டு மகான்களும், உலகத்தின் பல்வேறு பகுதிகளில் தோன்றிய முனிவர்களும் 'ஒருவரிடமிருக்கும் ஆன்மாவும் எங்கும் பரந்திருக்கும் ஆன்மாவும் ஒன்றுதான்' என்ற நம்ப முடி யாத அப் பேருண்மையை தங்களுடைய அனுபவத்தின் மூலமாக ஊர்ஜிதம் செய்திருக்கிறார்கள்.

இப்போது நம்மிடமிருந்து நாம் பிரிந்து நிற்கிறோம். சொந்த நாட்டிலிருந்து தன்னைத் தானே நாடு கடத்திக் கொண்டிருப்பவ னைப் போல, ஆன்மாவிலிருந்து அகந்தை தானாகவே பிரிந்து நிற் கிறது. உண்மையை மீண்டும் கண்டு கொண்டவுடன் அதே அகந்தை ஆன்மாவாகி விடுகிறது. இப்பேரானந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஆன்மாவுக்கும், அகந்தைக்கும், எவ்வித வேறுபாடும் இல்லை. கனவிலிருந்து விழித்துக் கொண்டவுடன், விழித் திருப்பவனும், சற்று முன் கனவு கண்டவனும் ஒன்றாகி விடு கிறார்கள். அது மட்டுமல்ல. கனவிலிருந்தவனையும், விழித் திருப்பவனையும் பிரிக்கவே முடியாது. திருமணமான பிறகு சிலர் விவாக ரத்து செய்து கொள்ளுகிறார்கள். ஆயினும் அவர் களிடையில் உணர்ச்சிபூர்வமான உறவுகள் ஓரளவு தொடர்ந்து இருந்து வருகின்றன. ஒரு சாதகர் தாமே ஆன்மாவென்று உணருவது மட்டுமல்ல. ''நான்'' என்ற அவருடைய அகந்தையும் ஆன்மாவும் இரண்டறக் கலந்து விடுகிறார்கள் என்று பகவான் இங்கு கூறுகிறார்.

வழி தவறிய கடவுளே மனிதன் என்பதை உணர்வு கொண் டால், சரியான வழி தெரிந்தவுடன் அவன் தன்னை மீண்டும் பரம் பொருளாகக் கண்டு கொள்ளுகிறான் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. பிச்சைக்காரனாக நடிப்பவன் உண்மையில் பிச்சைக் காரன் அல்ல. மேடையிலிருந்து வெளியேறியதும் அவன் தனது கந்தைத் துணிகளைக் களைந்து விட்டு சுய உருவத்தில் திகழ்கிறான். வேடம் தரித்திருந்தபோது கூட உண்மையில் அவன் ஒரு பிச்சைக் காரன் அல்ல. வேதாந்தம் தைரியமாக எடுத்துரைக்கும் இவ் வுண்மையைப் புரிந்து கொள்வது கஷ்டமல்ல. ஆனால் மருட்சியில் ஆழ்ந்திருப்போர் இதைக் கேட்டு திடுக்கிடுகிறார்கள். தங்க ளுடைய குறைபாடுகளை நினைத்து, இவ்வுண்மையை ஏற்க

மறுக்கிறார்கள். இறை வாழ்வு நடத்தும் பொறுப்பை மேற்கொள்ளுவதற்கு வேண்டிய தைரியம் அவர்களுக்கு இல்லை. இங்கு கிருஷ்ணர், அழுத்தமாகக் கூறும் சொற்களின் பொருள் என்னவென்பது பற்றி சந்தேகத்திற்கு இடமே இல்லை. உலகத்திலுள்ள எல்லா புனித நூல்களும், குறிப்பாக உபநிடதங்களும், கூறுகின்ற பேருண்மையைத்தான் கிருஷ்ணர் இங்கு வெட்ட வெளிச்சமாக்குகிறார்.

சுய கட்டுப்பாடு பெறுவதிலும், தியானத்திலும் வெற்றியடைந்து முழுமைநிலை எய்திய ஒருவர், ஆன்ம உணர்வு பெற்றவுடன் ஆன்மாவாக ஆகிவிடுகிறார் என்பதைப் பின்கண்ட செய்யுளும் உறுதியாக்குகிறது.

ஸர்வபூதஸ்த்திதம் யோ மாம்
பஜத்யேகத்வமாஸ்த்தித:
ஸர்வதா வர்த்தமானோபி
ஸ யோகீ மயி வர்த்ததே **6:31**

ஒருங்கிணைந்த நிலையில் உறுதிபெற்று, எல்லா உயிரினங்களுக்கும் உறைவிடமான என்னை வழிபடும் யோகி அவருடைய வாழ்க்கை முறை எப்படி இருந்தபோதிலும், என்னிடத்திலேயே வாழ்கிறார்.

ஒருமுகமான தியானத்தில் ஆழ்ந்து, ஒருமைப்பாடு பெற்றுவிட்ட ஒருவர் இடையறாது என்னையே—ஆன்மிகப் பரம்பொருளையே வழிபட்ட வண்ணம் இருக்கிறார் (பஜதி). உலகத்திலுள்ள எல்லா நாம ரூபங்களின் சாராம்சமாக விளங்குவது அந்த உயிர்ப் பொறிதான். இவ்வுறுதி பெற்றுவிட்டவர்கள் எவ்வகை வெளியுலக நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த போதிலும், அவர்கள் தொடர்ந்து ஆன்ம லயத்தில் இருப்பவர்களே. தாம் ஆன்மா என்ற உணர்வு அவர்களை விட்டு அகலுவதில்லை. ஆன்ம உணர்வு பெற்றவர்கள் இமய மலைக் குகை ஒன்றில் கண்காணா இடத்தில் உட்கார்ந்திருப்பார் என்று நினைப்பது தவறு. வாழ்வின் இன்ப துன்பங்களுக்கு இடையில் தெய்வீக உணர்வுடன் அவர் இருந்து கொண்டிருக்கலாம் என்று காட்டுவதே இச் செய்யுளின் கருத்து. ஒருவருக்கு உடல்நிலை கெட்டு விட்டால், தாம் செய்யும் வேலைகளை நிறுத்திவிட்டு, உடல்நல முன்னேற்ற விடுதியொன்றில் போய் ஓய்வெடுத்துக் கொள்ளுகிறார். உடல் நலம் பெற்ற பிறகும், அந்த விடுதியிலேயே அவர் படுத்துக் கொண்டிருக்க மாட்டார். அங்கிருந்து வீட்டுக்கு வந்து பழைய வேலைகளைக் கவனிக்கத் தொடங்குவார். முன்பு செய்ததைவிட இன்னும் அதிக சுறுசுறுப்புடன் வேலை செய்வார்.

அதைப் போலவே, ஆன்மீக வாழ்க்கையில் சீர்குலைவுற்ற

ஒருவர் தியான மருத்துவத்தின் மூலம் தமது பழைய தெய்வீக வலிமையைத் திரும்ப அடைகிறார். பழைய வேலையையே அவர் மறுபடியும் செய்யலாம். அத்துடன் ஆன்மீக மருத்துவம் காரணமாக ஏற்பட்ட பண்பாட்டு நிறைவும், இறைப் பேருணர்வும் சற்றும் குன்றாமலே அவர் வேலை செய்து வரலாம்.

பார்க்கப் போனால், ஒருவர் சிறப்பாகப் பணிபுரிந்து பயன் பெற வேண்டுமானால், அது ஆன்மாவில் நிலைத்த ஒருவரால்தான் முடியும். ஒருவர் சுய வளர்ச்சி பெறுவதற்கு தன்னையே அர்ப்பணித்துக் கொண்டு வேலை செய்வதே சிறந்த வழி. இதுதான் கீதை நமக்கு அளிக்கும் செய்தி.

முழுமையின் இலக்கணமாகத் திகழும் கிருஷ்ணர் தமக்குப் பின்னாலிருக்கும் அர்ஜுனனைவிட ஆபத்தான நிலையில் போர்க்களத்தில் நிற்கிறார். தேரோட்டியைத் துளைத்துக்கொண்டுதான் எந்த அம்பும் பின்னால் அமர்ந்திருக்கும் போர் வீரன் மீது பாயும். உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் புன்னகையைத் தவிர, கிருஷ்ணரிடம் ஆயுதம் எதுவுமில்லை. அப்படியிருந்தும் போர்க்களத்தில் அவரே அதிபதியாகத் தோற்றமளிக்கிறார். போரின் வெற்றி தோல்விகள் அவரைப் பொறுத்தவையாக இருக்கின்றன. இதிலிருந்து மிக முக்கியமான கருத்து ஒன்று வெளியாகிறது. இறையுணர்வு பெற்ற ஒருவர் எந்த நிலையிலும் எந்த வேலையையும் மேற்கொள்ளும் திறமை பெறுவதுடன், தமது தெய்வீக இயல்பு பற்றிய பேருணர்வு எல்லாவித வேலைகளுக்கு இடையிலும் நந்தா விளக்காக அவருடைய உள்ளத்தில் ஒளிபரப்பிக் கொண்டிருக்கும் என்பதையும் கிருஷ்ணர் நமக்கு உணர்த்துகிறார்.

இவ்விரிவுரையைப் படிக்கும்போது, இச்செய்யுளுக்கு இயல்பாக உள்ள பொருளைவிட, மேலும் அதிகக் கருத்துக்களை உற்சாக மிகுதியால் அதில் புகுத்துவதாக சிலருக்குத் தோன்றலாம். பகவான் எவ்வளவு விரிவான சொற்களை இங்கு உபயோகிக்கிறார் என்பதைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்குமாறு அவர்களை நாம் கேட்டுக் கொள்ளுகிறோம். ''ஒருவர் எவ்வித வாழ்க்கை நடத்துபவராக இருந்த போதிலும் (சர்வதா வர்த்தமானோபி) தியானத்தில் ஈடுபட்டிருக்கும். அவர் (யோகி) என்னுள்ளேயே வசித்து வருகிறார்'' என்று கிருஷ்ணர் கூறுகிறார். இது மிக விரிவான, பொருட்செறிவு மிக்க தைரியமான அறிவிப்பு அல்லவா?

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பஸ்யதி யோர்ஜுன
ஸுகம் வா யதி வா து:கம் ஸ யோகீ பரமோ மத: 6:32

எங்கும் நிறைந்துள்ள ஆன்மா ஒரே தன்மை கொண்டதாகையால் இன்பமோ துன்பமோ எதுவாக இருந்தாலும் எல்லாப் பொருள்களிலும் தன்னைக் காண்பவர் யோகிகளில் தலைசிறந்தவராக மதிக்கப்படுகிறார் அர்ஜுனா.

தியானத்தில் ஆழ்ந்த உண்மை சாதகர்கள், தங்களுடைய அறிவுத் தெளிவினுலும், ஆன்மிக அனுபவத்தினுலும் எல்லா இடங்களிலும் இறைவனையே காண்கிருர்கள். எல்லாப் பொருள்களிலும், வேலைகளிலும் ஆன்மாவின் மாட்சியே அவர்களுக்குத் தென்படுகிறது. தங்களுடைய உடல் இயக்கம்கூட ஆன்மாவின் அருளாலேயே நடக்கிறதென்ற உறுதி அவர்களுக்கு உண்டு. தெய்வானுபவத்தைத் தவிர அவர்களுக்கு வேறு அனுபவமே இல்லை. வெளியுலகிலும், சூக்குமமான உள்ளுலகிலும் நேரும் எல்லா நிகழ்ச்சிகளும் அழிவிலா ஆன்மாவிலிருந்தே தோன்றுகின்றன.

பிறருக்கு வரும் இன்ப, துன்பங்களை எல்லாம் தமக்கு வந்தவையாக நினைத்து—அதே உணர்வுடன் ஏற்று நடந்துகொள்பவர் தலைசிறந்த யோகி என்று கீதை கருதுகிறது. 'மற்றவர்கள் உன்னிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிருயோ, அப்படியே நீ அவர்களிடம் நடந்துகொள்' என்ற ஒழுக்க நெறி போதனை எல்லோருக்கும் தெரிந்ததுதான். சாதாரணமாக எல்லோரும் இதை ஒரு சங்கடமான கட்டளையாக நினைக்கலாம். சுயநலம் மேலோங்கி நிற்பதன் காரணமாக, மற்றவர்களையும் தன்னையும் ஒரே மாதிரியாகக் கருதி நடந்துகொள்ளுவதற்கு ஒருவனுடைய சுபாவம் இடம் கொடுப்பதில்லை.

சமுதாயத்திலுள்ள மற்றவர்களிடம் அன்பு செலுத்த வேண்டிய காரணம் முந்திய செய்யுட்களிலேயே இருக்கிறது. ஆன்மானுபவம் பெற்ற யோகி தாமும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஒன்றே என்று உணர்ந்து கொள்ளுகிருர். உடலிலுள்ள ஒவ்வொரு பகுதியும் முக்கியமானதுதான். உடலுடன் அந்த அளவுக்கு ஒருவன் தன்னை ஒருங்கிணைத்துக் கொண்டிருக்கிருன். சில சமயங்களில் நாக்கை நாம் கடித்துக்கொண்டு விடுகிருேம். அப்படிக் கடித்ததற்கு தண்டனையாக பற்களை நாம் உடைத்து விடுவதில்லை. ஏனெனில், நாக்கும் நானே, பற்களும் நானே. அவ்வாறே ஆன்ம உணர்வு பெற்ற ஒருவர், பற்பல நாம ரூபங்களில் திகழும் இப்பிரபஞ்சத்தைப் பார்க்கும்போது, 'எல்லா இடங்களிலும் நான் இருக்கிறேன்' என்ற உணர்ச்சி தோன்றுகிறது. ''கால இடவரையறைகளைக் கடந்த ஆன்மாவாக உள்ள நானேதான் புவனமெங்கும் ஊடுருவி நிற்கிறேன்'' என்ற உண்மை அவனுக்குப் புலப்படுகிறது.

இவ்வாறு பிரபஞ்சத்தைத் தன்னிடம் காணும் ஒருவர் தலைசிறந்த யோகி என்று கீதையின் ஆசிரியர் இங்கு கூறுகிருர். தனது உண்மை இயல்பை அறிந்த தீர்க்கதரிசி கருணையே உருவெடுத்தவராகிருர். அவர் சமுதாயத்திற்குச் செய்யும் பணி அதிகம். அதனிடமிருந்து அவர் பெறுவது மிகக் குறைவு. அழிப்பதைவிட ஆக்க வேலைகளே அவருக்கு அதிகம். அன்பு அவ

ருடைய மூச்சுக் காற்று, கருணையே வாழ்வு.

ஒரு முழுமையடைந்த யோகியை படம் பிடித்துக் காட்டுவதன் மூலம், நிறைவு பெற்ற மனிதனையும், உலக வாழ்க்கைக்கும், அவனுக்கும் உள்ள உறவையும் கிருஷ்ணர் சுட்டிக் காட்டுகிறார். ஆவலுடன் கேட்டு வரும் எந்த மாணவனும் அவர் தீட்டிய சித்திரத்தைக் கண்டு பிரமித்து நின்று விடுவான். ஆனால் அர்ஜுனன் உலக அனுபவமுள்ளவன். எனவே அவர் காட்டிய இலட்சியத்தை சாதாரண மனிதன் அடைய முடியாதென்று அவனுக்குத் தோன்றுகிறது. ஒரு கேள்வியின் மூலமாக அவன் தனது சந்தேகத்தை வெளியிடுகிறான்.

பகவான் இப்போது கூறிய ஞான யோகத்தை சாதாரணமாக எல்லோரும் பின்பற்ற முடியாததென்று கண்டு, அந்த யோகத்தில் வெற்றி பெறுவதற்கு நிச்சயமான வழி என்னவென்று அர்ஜுனன் தெரிந்துகொள்ள விரும்புகிறான்.

அர்ஜுன உவாச—

யோயம் யோகஸ்—த்வயா ப்ரோக்த:
ஸாம்யேன மதுஸூதன
ஏதஸ்யாஹம் ந பஸ்யாமி சஞ்சலத்வாத்
ஸ்த்திதிம் ஸ்த்திராம் 6:33

அர்ஜுனன் கூறினான்:

அமைதியற்ற (மன) சலசலப்புகளின் காரணமாக நீ கூறும் அமைதிச் சமநிலே யோகத்தில் தொடர்ந்து நீடிக்க முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை, மதுசூதனா.

அர்ஜுனன் ஒரு செயல் வீரன். நடைமுறைக்கு எது ஒத்து வரும்; எது வராது என்று நன்கறிந்த ஆரியப் பெருமகன். இனிய கவிதை நயம் எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது என்பதற்காக ஒரு தத்துவத்தை அவன் உடனே ஏற்க மாட்டான். அவன் நல்வாழ்வு வாழ விரும்புபவன். தியானத்தில் ஈடுபடுதல், புலன் வேட்கைகளை முறியடித்து வெற்றி பெறுதல் போன்ற தத்துவங்கள் எல்லாம் வெறும் சிந்தனை மட்டத்தில் உள்ளவையாக அவனுக்குத் தோன்றுமே தவிர, திட்டவட்டமாக அவற்றை வாழ்க்கையில் அமுல் நடத்த முடியுமென்ற எண்ணம் தோன்றாது. எனவே தியான தத்துவத்தை எதிர்த்து சில முக்கியமான பிரசினைகளை அர்ஜுனன் எழுப்புகிறான்.

யோகமென்பது துக்க சம்யோக வியோகம் (துக்கத் தொடர்பிலிருந்து விடுவித்துக் கொள்ளுதல்) என்று கிருஷ்ணர் விளக்கமளித்தார். அதில் வெற்றி பெற விரும்புவோர் வெளி

யுலகப் பொருள்களிலிருந்து மனத்தை உள்ளிழுத்துக் கொண்டு அதை தியானத்தில் ஈடுபடுத்த வேண்டுமென்று அவர் சூளுரைத்தார். ஆன்ம சிந்தனையிலேயே ஒரு முகமாக லயித்திருக்கும் மனம் பரிபூரண அமைதியடைந்து அறியாமையினுல் எழும் தவருன அகந்தை மையப் போக்குகளிலிருந்து விடுவித்துக் கொள்ளுகிறது என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட கருத்து அது.

எல்லாச் சூழ்நிலைகளிலும், வாழ்வின் சிக்கல்களுக்கிடையிலும், இந்த யோகத்தின் மூலமாக கலங்கா அமைதி பெறலாமென்று பகவான் கூறிய இலட்சியம் சிறந்ததுதான். ஆனுல் அதை அடைவதற்கு அவர் கூறிய வழியை பின்பற்ற முடியுமா என்பதுதான் அர்ஜுனனுக்கு வரும் சந்தேகம். கடைப்பிடிக்க முடியாத வழியை கிருஷ்ணர் காட்டுவதாக அவன் நினைக்கிருன். ஆன்ம உணர்வு பெறும் விஞ்ஞானத்தை அர்ஜுனன் உன்னிப்பாக கவனித்து வருகிருன். சங்கிலித் தொடர்போல் வந்து கொண்டிருந்த அக்கருத்தில் இப்போது ஏதோ ஒரு கருணை விட்டுப் போயிருப்பதாக அவனுடைய கூர்ந்த அறிவு கூறுகிறது. கிருஷ்ண தத்துவத்தை நடைமுறையில் கொண்டுவர முடியாதென்று காட்டுவதற்கு இது நல்ல வாய்ப்பு என்று கருதி ஒரு கேள்வியின் மூலம் கிருஷ்ணரை மடக்கிவிடப் பார்க்கிருன்.

எனவே, 'மன அமைதி பற்றி நீ சொல்லுவதெல்லாம் நன்ருகத்தான் இருக்கிறது. ஆனுல் அது நடக்கக்கூடியதாகத் தோன்றவில்லையே'' என்று சற்று குத்தலாகக் கேட்கிருன் அர்ஜுனன். அவனுடைய வாதமும், குருவையே நேருக்கு நேராகக் கேள்வி கேட்கும் உரிமையும், உண்மையான வேதாந்த மரபுக்கு ஒத்ததுதான். தூய ஆன்மிகத் துறையில் குருட்டு நம்பிக்கைகளுக்கு இடமில்லை. சாதகர்களுக்கு எழும் சந்தேகங்களைப் போக்கி, உண்மையை விளக்க வேண்டியது ஆசானுடைய கடமை. ஆனுல் ஒரு ஆசிரியருடைய கருத்தில் குறைபாடு இருப்பதாகக் கூறும் மாணவன், அது ஏன் ஒரு குறைபாடாகத் தனக்குத் தோன்றுகிறது என்பதை தர்க்க ரீதியாக எடுத்துரைக்க வேண்டும். மனத்தின் இயல்பு சலசலத்துக் கொண்டிருப்பதுதான் என்று சொல்லிய பிறகு, சலசலப்பற்று மனம் சமநிலை பெற வேண்டுமென்றும் கூறுவது போகாத ஊருக்கு வழி காட்டுவதே அல்லவா? இதுதான் அர்ஜுனன் எழுப்பும் ஆட்சேபணை.

கிருஷ்ண தத்துவத்தைத் தட்டிக் கூறும்போது அர்ஜுனன் மிக ஜாக்கிரதையாகப் பேசுகிருன். தியானத்தின் மூலம் மனச் சமநிலை பெற முடியாதென்று அவன் சொல்லவில்லை. அது ''உறுதியுடன் நீடித்த'' அனுபவமாக இருக்குமென்று தோன்றவில்லை என்றே கூறுகிருன். பல ஆண்டுகள் முயற்சித்து மனத்தை அடக்கி விடுகிறேம் என்று வைத்துக் கொண்டாலும், அதற்குப் பிறகு வரும் ஆன்மானுபவம் ஒரு கணத்தில் தோன்றி மறைந்து

விடலாம். எல்லையற்ற பரம் பொருளை ஒரு கண நேரமேனும் அப்போது அனுபவிக்கிறோம் என்பது உண்மைத்தான். ஆனால் அந்த அனுபவம் தொடர்ந்து இருக்காதே; மனத்தினால் ஒரு நொடி கூட சும்மா இருக்க முடியாதே—இதுதான் அர்ஜுனனுடைய கேள்வி.

தனது ஆட்சேபணையை இன்னும் சற்றுத் தெளிவாக ஆசானுக்குத் தெரிவிக்கும் நோக்கத்துடன் பின் கண்டதையும் அவன் சேர்த்துச் சொல்லுகிறான். ஆனால் அவன் கூறுவது அவனுடைய ஆட்சேபணையை பலவீனப்படுத்தி விடுகிறது.

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத்—த்ருடம்
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயொரிவஸுதுஷ்கரம்
6:34

கிருஷ்ணா, மனம் மிக சஞ்சல இயல்புள்ளது. கொந்தளித்துக் கொண்டிருப்பது, வலுவுள்ளது, வளைந்து கொடுக்காதது. அதை அடக்குவது, காற்றை அடக்குவதுபோல, அவ்வளவு கஷ்டமானதென்று எனக்குத் தோன்றுகிறது.

இக்காலத்தில் நம் நாட்டு சாத்திரங்களைக் குறை கூறுபவர்களுக்கும், ஒரு உண்மையான சாதகன் அச்சாத்திரக் கருத்துக்களை முழுமையாகத் தெரிந்து கொள்வதற்காகக் கேள்வி கேட்பதற்கும் எவ்வளவோ வித்தியாசமிருக்கிறது. 'கொந்தளிப்பும், வலிமையும், வளைந்து கொடுக்காத் தன்மையும் உள்ள மனத்தை அடக்கி வெற்றி பெறுவது எப்படி?' என்று தெரிந்து கொள்வதற்காக அர்ஜுனன் அவ்வாறு கேட்கிறான்.

அவன் இந்த மூன்று தன்மைகளையும் குறிப்பிடுவதில் ஒரு முக்கியத்துவம் இருக்கிறது. கொந்தளிப்பு என்பது சிந்தனையின் வேகத்தை மட்டும் குறிப்பிடவில்லை. கலக்கம், பரபரப்பு ஆகியவையும் இதில் அடங்கியிருக்கின்றன. சிந்தனை அலை அலையாக நாற்புறமும் சிதறி ஓடுகிறது. அது உடைப்பெடுத்த ஆறு போல வேகமாகச் சென்று புலன் பொருள்கள் மீது மோதுவதுடன் அவற்றை உறுதியாகப் பற்றிக்கொண்டு அசைக்க முடியாத வலிமையுடன் வேரூன்றிக் கொள்ளுகிறது. வேருடன் அதைத் தோண்டி அகற்றுவது மிகக் கடினமான வேலை. தான் போன போக்கிலேயே அது சென்று சென்று ஒரு வாய்க்கால் தோன்றிய பிறகு, அதை ''வளைத்துத் திருப்ப முடியாது''. புலன் பொருள்களிலிருந்து அதன் பற்றுதல்களை நீக்கி, ஒருமுக இலட்சியத்தில், அதை நிலைக்கச் செய்வது நடக்கக்கூடிய காரியமல்ல. ஆனால் தியான முறையைப் பின்பற்றுகிறவர்கள் அதைச்

செய்து தான் ஆக வேண்டுமென்று கிருஷ்ணர் சற்றுமுன் கூறினார்.*

மனத்தின் வலிமைக்கும், வேகத்திற்கும், வஞ்சனைக்கும் எங்கும் ஊடுருவி நிற்கும் இயல்புக்கும் காற்றைவிட நல்ல உவமையொன்றைத் தேர்ந்தெடுக்க முடியாது. அர்ஜுனன் இந்தப் பிரசினையை எழுப்புவதன் மூலம், கொந்தளிப்பும், வலிமையும், வளைந்து கொடுக்காத்தன்மையும் உள்ள மனத்தை முற்றிலும் கட்டுப்படுத்துவதற்கு அனுபவ சாத்தியமான முறையைச் சொல்லுமாறு கேட்கிறான். இதற்கு முன் 'மதுசூதனா' என்று கௌரவப் பட்டமளித்துப் பேசியவன் இப்போது 'கிருஷ்ணா' என்று அன்பும், சலுகையும் ததும்ப அழைத்துக் கேட்கிறான். கிருஷ்ணர் என்ற பெயர் 'கிருஷ்' என்ற அடிப்படையிலிருந்து வருகிறது. 'கிருஷ்' என்றால் 'சுரண்டி எறிதல்' என்று பொருள். ஆன்மாவையே இச்சொல்லால் குறிப்பிடலாம். ஏனெனில் ஒருவன் ஆன்ம உணர்வு பெற்றதும் அவனுடைய மனத்தில் பதித்துள்ள வாசனைகளும், மருட்சிகளும் அறவே 'சுரண்டி எறிய'ப் படுகின்றன அல்லவா?

தான் கொலை செய்ததாகக் கனவு கண்ட ஒருவன் விழித்தெழுந்ததும் கைகளைப் பார்த்துக் கொள்ளுகிறான். அதில் இரத்தக் கறை எதுவுமில்லை. சுத்தமாக இருக்கிறது. தன்னைக் கொலைகாரனென்று மற்றவர்கள் ஏசியதெல்லாம் கனவுடன் கனவாகப் போய் விடுகிறது. அதைப் போலவே மனமும் அதன் தாக்குதல்களும், வாசனைகளும் அவற்றின் கொடுங்கோன்மையும், அறிவும் அதன் நாட்டமும், உடலும் அதன் வேட்கைகளும்—இவை எல்லாமே ஒருவன் தனது ஆன்மீக இயல்பை அறிந்து கொண்டவுடன் மறைந்து விடுகின்றன. இதனால்தான் கவிஞரும் ஞானியுமாகிய வியாசர் ஆன்மீக மெய்ப்பொருளை குழலூதும் கிருஷ்ணராகச் சித்தரித்துக் காட்டுகிறார். கதையின் கருத்துக்கு ஏற்ற வகையில் ஒருவருடைய பெயரே அமைந்து விடுவது சமஸ்கிருத மொழியின் தனிச் சிறப்பு.

அர்ஜுனன் சொல்லுவது உண்மைதான் என்று ஏற்கும் கிருஷ்ணர், அடக்க முடியாததாகத் தோன்றும் மனத்தை அடக்குவதற்கு ஒரு வழியிருக்கிறதென்று பதிலளிக்கிறார்.

ஸ்ரீ பகவானுவாச—

அஸம்சயம் மஹாபாஹோ
மனோ துர்நிக்ரஹம் சலம்
அப்ப்யாஸேன து கௌந்தேய
வைராக்யேண ச க்ருஹ்யதே 6:35

* அத்—6, செய்யுள் 26.

பகவான் கூறுகிறார்:

புயவலி மிக்கவனே, மனம் சஞ்சலமுள்ளதுதான். அதைக் கட்டுப்படுத்துவது கஷ்டமென்பதில் சந்தேகமில்லை. ஆயினும், குந்தியின் புதல்வனே—அதை பயிற்சியினாலும், வைராக்கியத்தினாலும் அடக்கி விடலாம்.

அர்ஜுனன் எப்படிப்பட்டவன் என்று கிருஷ்ணருக்கு நன்றாகத் தெரியும். அவன் சிறந்த போர் வீரன். செயலீடுபாடு கொண்டவன். எவ்வித வீர தீரச் செயல்கள் புரிவதிலும் அவனுக்கு தயக்கமென்பது இல்லை. யதார்த்தவாதி. ஒரு கருத்தை அவனுடைய மதிப்பிற்குரிய மாபெரும் ஆசான் கூறிய போதிலும் அதைத் தன்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லையென்றால், சண்டப் பிரசண்டமாக அதை எதிர்க்கத் தொடங்கி விடுவான். தடுத்து நிறுத்த முடியாத எரிமலை உள்ளம். மிக நிதானத்துடன் இருந்து, அவன் போக்கிலேயே செல்ல விட்டு அப்புறந்தான் அதைத் திருப்ப வேண்டும்: மனத்தைக் கட்டுப்படுத்தி அமைதி பெறச் செய்துவிட்டால் ஆன்மானுபவம் தோன்றுகிறது. என்ற அற்புதமான தத்துவத்தை கிருஷ்ணர் உருவாக்கித் தருகிறார். மனம் அமைதி பெறப் போவதுமில்லை, ஒருவருக்கு ஆன்மானுபவம் கிட்டப் போவதுமில்லை. என்று அர்ஜுனன் வாதாடுகிறான்.

இப்படிப்பட்டவர்களுடைய எதிர்ப்பை சற்று நிதானமாகத் தான் சமாளிக்க வேண்டும். 'வளைத்து கொடுத்து வெற்றி பெறு' என்று ஆங்கில வழக்கு ஒன்று உண்டு. தத்துவ விவாதங்களிலும் வெறும் வெறுப்பு விருப்புகளின் அடிப்படையில் பேசுகிறவர்களிடம், இப்படி வளைந்து கொடுத்து வெற்றி பெறும் முறையைத் தான் கையாள வேண்டும். உளவியல் நிபுணரான கிருஷ்ணர் முதல் இரண்டொரு வார்த்தைகளிலேயே, மேலே அர்ஜுனன் பேச வழியில்லாமற் செய்து விடுகிறார். அவனுடைய தற்பெருமையைத் திருப்தி செய்யும் முறையில் ''புயவலி மிக்கவனே, நீ சொல்லுவதில் சந்தேகமில்லை,'' என்று தொடங்குகிறார். மனம் கொந்தளிப்புக்கள் மிக்கது. வலிவுள்ளது. அடங்காப் பிடாரியாக சலசலத்துக் கொண்டே இருப்பது. அதைக் கட்டுப்படுத்துவது மிகவும் கஷ்டம். எனவே முழுமையான, நீடித்த அமைதியை சுலபமாகப் பெற்றுவிட முடியாது என்று கிருஷ்ணர் ஒப்புக் கொள்ளுகிறார்.

கிருஷ்ணரே தான் கூறியதை ஒப்புக்கொண்டு விட்டாரே என்று அர்ஜுனனுக்குப் பெருமையாக இருக்கிறது. புயவலிமை மிக்கவன் என்று நினைவூட்டப்பட்டது அவனுக்குச் சற்று ஆறுதலளிக்கிறது. ஆனால் 'மற்றவர்களால் முடியாத, கஷ்டமான வேலைகளைச் செய்து காட்டுவதுதானே புயவலி பெற்றவர்களின் பெருமை!' என்று குத்திக் காட்டுவது போலவும் கிருஷ்ண

ருடைய சொற்கள் அமைந்திருக்கின்றன. ''தோட்டத்திலிருந்து நாலு பூக்களை பறித்துக்கொண்டு வந்து விட்டேனே, பார்த் தீர்களா?'' என்று சொல்லிக் கொள்பவன் ஒரு மாபெரும் வீரனா? எந்த அளவுக்கு எதிரி வலிமை மிக்கவனாக இருக்கிறானோ அந்த அளவுக்கு, அவனை வெற்றி கொள்வதால் தோன்றும் பெருமை யும் அதிகரிக்கிறது அல்லவா?

அடுத்து வரும் ஒவ்வொரு வார்த்தையையும் கிருஷ்ணர் அளந்து பேசுகிறார். ''ஆயினும் குந்தியின் புதல்வனே, மனத்தை அடக்கி நம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விடலாம்'' என்ற இதமான சொற்களுடன் செய்யுள் முடிவடைகிறது. பயிற்சியினாலும், பற்றுதல்களைத் துறப்பதாலும் முதலில் மனக் கொந்தளிப்புக்கள் சற்று குறைகின்றன. அம்முயற்சியை நாம் தொடர்ந்து செய்தால் கடைசியில் மனம் இயக்கமற்ற முற்றுப் புள்ளி நிலையை அடைகிறது. அழுத்தந்திருத்தமாக கொஞ்சமும் சந்தேகத்திற்கு இடமின்றி பகவான் கீதையில் கூறும் வழி இது தான்.

பற்றுதல்களைத் துறப்பது சந்நியாசம் என்று கீதை ஏற்கனவே எடுத்துரைத்திருக்கிறது. 1. உலகப் பொருள்களில் உள்ள பற்றுதல்களைக் கைவிடுவது. 2. தனது செயல்களின் பலனை அனுபவிக்க வேண்டுமென்ற ஆவலைத் துறப்பது— இவ்விரண்டையும் ஒருமித்துத் துறத்தலே சன்னியாசமென்று விளக்கப்பட்டது. சிந்தனைகளின் கலக்கத்திற்கும், சிந்தனை ஓட்டத்தை வெள்ளப் பெருக்காக அதிகரிப்பதற்கும், மனத்தை கட்டுக் கடங்காமல் செய்வதற்கும் இந்த இரண்டு பற்றுதல் களுமே முக்கிய காரணம். ஒரே பொருள் மீது மீண்டும் மீண்டும் கருத்தைச் செலுத்திக் கொண்டிருப்பதைப் பயிற்சி (அப்யாஸம்) என்று சங்கரர் கூறுகிறார். * தியானத்தில் தளரா உறுதியுடன் இப்படிக் கருத்தைச் செலுத்திக் கொண்டிருக்கும்போது, திடீரென்று எரிமலை வெடிதெழுவது போல் கோரிக்கைகள் சீறி எழுகின்றன. ஒவ்வொரு கணமும் தோன்றும் புதுப்புது கோரிக்கைகளினால் உந்தப்பட்டு, சிந்தனைகள். எங்கெங்கோ சிதறிச் சென்று விடுகின்றன. அகச் சமநிலை இதனால் சீர்குலைந்து, ஒருவருடைய உள் ஆளுமை அழிந்து போகிறது.

இந்த நோக்கில் பார்த்தால், பற்றுதல்களைத் துறப்பதற்கு (சன்னியாசத்திற்கு)ப் போதிய உறுதியை பழக்கம் (அப்யாஸம்) நமக்கு அளிக்கிறது. தொடர்ந்து பழகி வந்தால் பற்றின்மை (வைராக்கியம்) ஏற்படுகிறது. வைராக்கியத்தின் விளைவாக ஆழ்ந்த தியானப் பயிற்சி (அப்யாஸம்) அதிகரிக்கிறது. இப்படி ஒன்றையொன்று வலுவடையச் செய்வதன் மூலமாக ஆன்மிகத்

---

* சுவாமி சின்மயானந்தரின் 'தியானமும் வாழ்க்கையும்' பார்க்க

துறையில் மொத்த முன்னேற்றம் இடைவிடாது, சிறப்பாக நடைபெறுகிறது.

நமது சாத்திர நூல்களில் சொற்கள் எந்த வரிசைக் கிரமத்தில் வருகின்றன என்பது கூர்ந்து கவனிக்க வேண்டும். மிக முக்கியமான சொல் முதலிலும், அடுத்த முக்கியத்துவம் வாய்ந்தது பிறகும், படிப்படியாகக் குறைந்து கொண்டு வரும். பற்றுதல்களைக் கைவிடும் நிலை தானுகவே வரும் என்று காத்திருப்பதா, அல்லது அவற்றைத் துறப்பதற்கு பயிற்சி தொடங்கவேண்டுமா—இந்தப் பிரச்னை ஒவ்வொரு சாதகருக்கும் ஏதோ ஒரு சமயத்திலே வந்துதான் தீரும். வைராக்கியம் தானுகவே வரும் என்று வீண் எண்ணம் கொண்டு காத்திருப்பவர்கள் பெரும்பாலோர். இப்படி இருந்து இருந்து பார்த்துவிட்டு கடைசியில் அவர்கள் பயிற்சி (அப்யாஸம்) தொடங்குகிருர்கள். கீதை இங்கு சொல்லியிருப்பதை கவனத்துடன் படித்தால் 'பயிற்சி' என்ற வார்த்தை முதலில் வருகிறது. பிறகு 'வைராக்கியம்' என்ற சொல் வருகிறது. எனவே கடுமையான பயிற்சியில்லாமல் வைராக்கியத்தை எதிர்பார்ப்பது வெறும் கேலிக்கு இடமான வேலை. விதை விதைக்காமல் அறுவடை செய்ய முடியுமா?

வாழ்க்கையை ஆராய்ந்து பாருங்கள். அனுபவங்களை எல்லாம் அலசிப் பாருங்கள். உங்களுடைய செயல்களைப் பற்றி நீங்களே விவாதித்துக் கொள்ளுங்கள். வாழ்க்கையில் நாம் செய்யும் பணியின் அளவு என்ன? அதன் விளைவாக நாம் பெறும் பலன் எவ்வளவு? இதை எல்லாம் ஐந்தொகை கட்டிப் பார்த்தால், ஒவ்வொரு தடவையும் நஷ்டக்கணக்காக வருவது தெரியும். இன்னும் லாபகரமான முறையில் நல்வாழ்வு வாழ்வதற்கு அதை மாற்றி அமைத்துக் கொள்வது எப்படி என்று சிந்திக்கத் தொடங்குவீர்கள். சிந்திக்கும் நிர்ப்பந்தம் ஒவ்வொருவருக்கும் ஏற்படும். இனிமையும், மகிழ்ச்சியும் ததும்பும் பூங்காவாக வாழ்க்கையை ஆக்கிக் கொள்ளுவதற்கு அவர்கள் சாத்திரங்களைப் படிக்கத் தொடங்குவார்கள். ஒழுக்க நெறியின் உயர்வும், தன்னடக்கத்தினுல் வரும் இன்பங்களும், சுய வளர்ச்சி மேன்மையும், அதன் விளைவாக அகந்தை மையச் சிறு வாழ்வின் சிதைவும் உண்டாவது ஓரளவாவது அவர்களுக்குத் தெரியவரும்.

நமது வாழ்க்கையின் இயல்பு பற்றி உணருவதற்கு முயற்சி தொடங்கியவுடனேயே, நமது பயிற்சி (அப்பியாசம்) ஆரம்பமாகி விடுகிறது. இதன் விளைவாக தானுகவே ஒருவகை பற்றின்மை தோன்றுகிறது. அதுவே பிறகு வைராக்கியமாக மாறுகிறது. இது தான் உண்மையான, நிலைத்து நிற்கக் கூடிய வைராக்கியம். மற்றதெல்லாம் அசட்டுத்தனமான மறுப்புச் செயல்களைத் தவிர

வேறில்லை. இதைப் போன்ற தன் மறுப்புக்களால் மனிதனுடைய வளர்ச்சி குன்றுகிறது. அறிவில் வீண் குழப்பங்கள் தோன்றி மனம் தத்தளிக்கத் தொடங்குகிறது. அப்பியாசத்தின் மூலமாக வரும் வைராக்கியம் ஒன்றுதான் ஆன்மிக வளர்ச்சிக்கு உத்தர வாதமளிக்கின்றன. ஏதோ ஒன்றைக் கைவிட வேண்டுமென்ற பிடிவாதத்தினுல் நீங்களாகவே அம் முயற்சியில் இறங்குவது தவறு.

அறிவு வளர்ந்து உயர் மட்டத்தை எட்ட எட்ட, உலக மதிப்பீடு நமக்கு மாறிக் கொண்டே வருகிறது. வாழ்க்கை நிலவரம் நமக்கு நன்கு விளங்குகிறது. இந்த நிலையில் நமது பற்றுதல்கள் மறைய ஆரம்பிக்கின்றன. சரியான 'பயிற்சி' மூல மாக உறுதியான 'வைராக்கியம்' நமது அக வாழ்வில் தோன்றி விட்டால் மனம் நமது கட்டுப்பாட்டுக்குள் வந்து விடுகிறது. ஏனெனில் விருப்பம் போல ஓடித் திரிவதற்கு வசதியான பொருள்கள் மிக்க உலகம் பிறகு அதற்குக் கிடைப்பதில்லை. எங்கும் அதற்கு சமநிலை தோன்றுகிறது. உலகம் ஒரே தன்மை படைத்ததாகத் தென்படுகிறது *

அப்படியானுல் தன் உள்ளத்தைக் கட்டுப்படுத்த முடியாதவர்களுடைய கதி என்ன?

அஸம்யதாத்மனு யோகோ துஷ்ப்ராப இதி மே மதி:
வஸ்யாத்மனு து யததா சக்யோ வாப்து–முபாயத: **6:36**

சுய கட்டுப்பாடு பெறுதவனுக்கு யோகம் கை கூடுவது கடினமென்று நான் கருதுகிறேன். ஆனுல் தற் கட்டுப்பாட்டுடன் சரியான வழிகளில் முயற்சிப்பவர்கள் அதை அடைகிருர்கள்.

முந்திய செய்யுளில் கடுமையான முயற்சிக்கு மிக முக்கிய இடம் அளிக்கப்பட்டது. ஆனுல் அது என்ன முயற்சி (அப்பியாஸம்) என்று மறைமுகமாகக்கூடக் குறிப்பிடப்பட வில்லை. ஒரு விஞ்ஞான நூலில் செயல் விளக்கமோ, காரண காரியத் தொடர்பு விவரங்களோ திட்டவட்டமாகச் சொல்லப் படவில்லை என்ருல், அது விஞ்ஞான நூலே அல்ல. ஒப்பற்ற ஆன்ம விஞ்ஞானமாகிய கிருஷ்ணர் 'முயற்சி' என்ருல் என்ன என்று நேரடியாக இங்கு அறிவிக்கிருர்.

வேட்கைகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளாதவர்களுடைய சக்தி முற்றிலும் பாழாகிறது. அதனுல்தான் மதத் துறையில்

---

* அத். 5 செய். 19; அத். 6 செய். 32.

அவர்களால் போதிய விறுவிறுப்புடனும் உறுதியுடனும் முயற்சித்து ஆன்மானுபவ உயர் மட்டத்திற்குச் செல்ல முடியாது என்று கிருஷ்ணர் கூறுகிறார். ''சுய கட்டுப்பாடு பெறாதவனுக்கு யோகம் கை கூடிவருவது கடினம்'' என்று கருத்துத் தெரிவிக்கிறார்.

பலர் புலன் வேட்கைகளுக்கு அடிமையாகிவிட்டு, உடற் தேவைகளுக்குப் பூர்த்தி செய்து கொள்வதில் காலங் கழித்து விடுகிறார்கள். உணர்ச்சி நாட்டமென்னும் மரண கீதத்தில் மனத்தைப் பறி கொடுத்து வாழ்க்கையின் இலட்சியத்தைப் பலர் மறந்து விடுகிறார்கள். வேறு சிலர் அறிவின் கொடுங்கோன்மைக்கு இரையாகி, முடிவற்ற கருத்து நாட்ட வெறி பிடித்து வாழ்வை வீணாக்கி விடுகிறார்கள். ஆகையால் இவர்கள் எல்லோருமே தம்முள்ளிருக்கும் பேருண்மைப் பெருங் கோயிலுக்குச் செல்வதற்குத் தேவையான ஆன்ம பலத்தை இழந்து விடுகிறார்கள்.

புலனுறுப்புக்களைப் போதிய அளவுக்கு அடக்காதவரையில் 'மனக் கலக்கங்கள்' இருந்து கொண்டுதான் இருக்கும். மனம் கலக்க முற்றிருக்கும்போது எதையும் உற்றுக் கேட்கவோ, சிந்திக்கவோ அல்லது தியானத்தில் ஈடுபடவோ முடியாது. இந்த மூன்றும் இல்லாத நிலையில் உண்மையைத் திரை போட்டு மூடும் ஆவரண சக்தியைப் போக்குவதற்கில்லை. கலக்கமும் (விக்ஷேபம்) மூடு திரையும் (ஆவரணம்) செயலியக்க இயல்பிலிருந்தும் (ரஜஸ்) செயல்மந்த (தமஸ்) இயல்பிலிருந்தும் எழுகின்றன. இந்த இரண்டு குணங்களையும் கட்டுப்படுத்தினாலொழிய சத்துவக் குணம் மேலோங்க இடமில்லாமற் போய்விடுமென்பது ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது.

ஒரு விவாதத்தின் போது மற்றவர் சொல்லும் பல வாதங்களுக்கு நாம் நமது கருத்துக்களை எடுத்துரைத்து பதிலளித்தே ஆக வேண்டும். அப்படிச் செய்தால்தான் எதிராளியினுடைய விவேகம் நாம் சொல்லுவதிலுள்ள உண்மையையும் தர்க்க ரீதியான பொருத்தத்தையும் விளக்கமாக தெரிந்து கொள்ள முடியும். கிருஷ்ணர், இந்த சாதாரண முறையைத்தான் இங்கு கையாளுகிறார். தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாத ஒருவனுக்கு நேர்மாறாகக் கட்டுப்படுத்திக் கொண்டவன் எப்படி 'முயற்சியினாலும்' சரியான முறைகளைக் கையாண்டும் யோகத்தில் வெற்றி பெறுகிறான்'' என்று இங்கு சுட்டிக்காட்டுகிறார். புலனுறுப்புக்களை அந்தந்தப் பொருள்களிலிருந்து உள்ளிழுத்துக் கொள்வதன் மூலமாக ஒருவர் பெறும் சுயக்கட்டுப்பாடு ஆன்மிக வாழ்க்கையில் முதலாவது படி. நம் மனத்தை பேருண்மையை நோக்கிச் செலுத்தினாலொழிய இந்த முதற் படியில் கூட நமக்கு வெற்றி கிடைக்காது.

அன்றாட வாழ்க்கையிலேயே இதை நாம் பார்க்கலாம். ஒருவன் முக்கியமான ஒன்றை சாதிக்க விரும்பினால், பெரும் அளவுக்கு தனது சௌகரியங்களை அவன் விட்டுக் கொடுக்க வேண்டும். தேர்தல் களத்தில் ஒரு வேட்பாளர் எப்படி நடந்து கொள்கிறார்? தேர்வுகளுக்கு முன்னால் ஒரு மாணவன் என்ன செய்கிறான்? முதன்முதலில் அரங்கேற்றத்திற்கு முன்னால் ஒரு நடிகர் அல்லது நாட்டியக்காரரின் முயற்சிகள் எப்படி இருக்கின்றன? மற்ற எல்லா வேலைகளையும் ஒதுக்கிவிட்டு—அவையெல்லாம் இப்போது வேண்டாமென்று மறுத்துவிட்டு—அந்தந்தத் துறையில் வெற்றி பெற வேண்டுமென்று ஒரே ஆவலுடன் உழைக்கிறார் அல்லவா? சிறுசிறு வெற்றிகளுக்கே, பலவற்றை இவ்வாறு கைவிட வேண்டியிருக்கிறது என்றால், நிரந்தரமான எல்லையற்ற நிகரிலா ஆன்மிகப் பேரின்பத்தை அடைந்து என்றென்றும் அனுபவிப்பதற்கு இன்னும் எவ்வளவு தூரம் இவ்வுலக இன்பங்களைக் கைவிட வேண்டும்!

ஒரு சாதகர் புலன் பொருள்கள் எல்லாவற்றையுமே ஒதுக்கித் தள்ளிவிட வேண்டுமென்பதில்லை. இந்தியாவில் ஏறக்குறைய எல்லா சாதகர்களிடையிலும் இந்தத் தப்பு அபிப்பிராயம் இருந்து வருகிறது. மதம் அல்லது ஆன்மிகப் பயிற்சியின் பெயரால் பல சாதகர்கள் இத் தன்மறுப்புத் தண்டனையை, சில ஆண்டுகளாவது, அனுபவிக்கிறார்கள். பல கொடுமைகளுக்குத் தங்களை உள்ளாக்கிக் கொள்வதுடன், பல உடற் தேவைகளைக் கூட புறக்கணிப்பது, வெட்கங்கெட்ட முறையில் தங்களைத் தாங்களே அவமதித்துக் கொள்வதாகும். இது தற்கொலைக்கு ஒப்பான கொடுமை. அப்படிச் செய்பவர்கள் இதனால் உள்ளிருக்கும் கொடிய சக்திகள் வெடித்தெழுந்து தாண்டவமாடுவதற்கு இடம் செய்து கொடுத்தவர்களாகிறார்கள்.

கீதை படிக்கும் மாணவர்களும் கூட ஆன்மிகத்தை இப்படித் தப்பும் தவறுமாகப் புரிந்து கொண்டு விடக் கூடாதென்ற நோக்கத்துடன், சரியான முயற்சியில் ஈடுபட்டு அதை ஒரு சாதகர் அடையலாம் என்று பகவான் விளக்குகிறார். சினிமாவுக்குப் போகாமலும், விளையாட்டு மைதானத்தை எட்டிப் பார்க்காமலும் இருப்பதால் மட்டுமே ஒரு மாணவன் பரீட்சையில் தேறிவிடுவான் என்று சொல்லி விட முடியாது. அனாவசியப் பொழுதுபோக்குகளில் வீணாகும் காலத்தை, புத்திசாலித்தனமாகப் படிப்பதில் செலுத்த வேண்டும். அப்படிச் செய்தால்தான் தேர்வில் வெற்றி பெறலாம். நாளைக்குக் கணக்குப் பரீட்சை என்றால், இன்றிரவு எல்லாம் பூகோள நூலை வைத்துப் படித்துக் கொண்டிருந்தால் கணக்கில் அதிக மார்க்குகள் வாங்கிவிட முடியாது. அவன் 'சரியான முயற்சி'யில் ஈடுபட்டால்தான் உயர்ந்த வெற்றி பெறலாம்.

தனது சக்தி அனுவசியமாக வீணுவதை சுயகட்டுப்பாடு மூலம் தடுத்துப் பாதுகாத்து வைத்துக் கொள்ளும் சாதகன், அவற்றை சரியான வழிகளில் செலுத்தத் தெரிந்து கொள்ள வேண்டும். தன்னைப் பற்றித்தானே உருவாக்கிக் கொண்டுள்ள தவறான கருத்துகளிலிருந்து விடுவித்துக் கொண்டு, இறுதியில் தனது ஆன்மிக இயல்பை அறிந்து கொள்ளும் சரியான முயற்சியில் ஈடுபட வேண்டும். 'அவ்வாறு செய்பவர் அதை அடைகிறார்' என்று புன்னகை குன்றா கிருஷ்ண பரமாத்மா பதிலளிக்கிறார்.

அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு கிருஷ்ணருடைய விளக்கம் இந்த இரு செய்யுட்களிலும் அடங்கி இருக்கிறது. அவர் கூறிய விளக்கம் அர்ஜுனனுடைய சந்தேகத்தைப் போக்கிவிட்டது என்று, இதைத் தொடர்ந்து வரும் உரையாடலிலிருந்து நமக்குத் தெரிகிறது.

சுய கட்டுப்பாடு பெற்று, சரியான முறையில் முயற்சி செய்பவர்கள் கூட சில சமயங்களில் இலட்சியத்தை அடைய முடியாமல் போகிறது. அவருடைய நிலை என்னவென்பது பற்றி இதுவரை கிருஷ்ணர் ஒன்றும் சொல்லவில்லை. அர்ஜுனன் அதை இப்போது கேட்கிறான்:

அர்ஜுன உவாச—
அயதி: ச்ரத்தயோபேதோ யோகாஸ்—சலிதமானஸ:
அப்ராப்ய யோக—ஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி:
**6:37**

அர்ஜுனன் கூறினான்:

சிரத்தை இருந்த போதிலும், ஒருவன் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் போகிறான். அவன் மனம் யோகத்தில் நிலைக்காமல் எங்கெங்கோ செல்கிறது. அப்படி யோக நிறைவு பெறத் தவறிய ஒருவனுடைய கதி என்ன, கிருஷ்ணா?

இதிலும் இதற்கு அடுத்த இரு செய்யுட்களிலும் அர்ஜுனன் மூலமாக சில சந்தேகங்களை எழுப்பி, கிருஷ்ணர் வாயிலாக அவற்றிற்கு பதிலும் அளிக்கிறார் வேத வியாசர். மனித உள்ளத்திற்கு எல்லையற்ற நம்பிக்கையூட்டும் வேதாந்த தத்துவத்திற்கு மேலும் ஒளியூட்டுவதே இதன் நோக்கம். தெய்வீகப் பாதையில் முயற்சி மேற்கொள்ளும் எவரும் அழிந்ததில்லை. ஒருவர் சாதிக்க முடிந்தது எதுவாயினும் அது கணக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு இவ்வுலகிலும், மறு உலகிலும் அவருடைய நிலையை அது நிர்ணயிக்கிறது. நிகழ்ந்து வரும் ஒவ்வொரு நாளும் 'நேற்று' என்று பெயர் பெற்று, முடிவிலா காலத் தொடரின் ஒரு பகுதியாகிறது. கடந்த ஒவ்வொரு நாளும் ஒரு கரணையாகி அச்சங்கிலியில்

இணைவதால் காலச் சங்கிலியின் நீளம் அதிகரித்துக் கொண்டே போகிறது. மனிதனுக்கு நேரும் பல்வேறு நிகழ்ச்சிகளில் சாவும் ஒன்று. சாவுக்குப் பிறகு தற்செயலாக ''நாளை'' என்று புதிதாக ஒரு காலம் அவனுடைய விருப்பம் போலத் தொடங்கி விடு கிறதா? 'நேற்று' 'நேற்று' என்ற பெயரில் வந்து கொண்டிருந்த சங்கிலித் தொடரில் அதுவும் ஒரு கரணைதான். அதே 'நேற்று'த் தொடர், நமது இன்றைய வேலைகளினாலும், சிந்தனைகளினாலும் மாற்றி அமைக்கப்பட்டு மேலும் நீண்டு வருகிறது.

ஒருவருடைய சாதனை நிலவரம் பற்றி அர்ஜுனனுக்கு சரி யாக விளங்காததால், மிக ஜாக்கிரதையாகத் தன்னுடைய சந்தேகத்தைக் கிருஷ்ணருக்குத் தெரிவிக்கிறான். ஆழ்ந்த நம்பிக் கையுடன் ('சிரத்தை') முயற்சித்த போதிலும் கூட ஒருவருக்குக்குக் கூடத் தமது ஆயுட் காலத்தில் சுயக்கட்டுப்பாடு வரவில்லை என்று வைத்துக் கொள்ளுவோம். யோகத்தில் நிலைப் பதற்குப் போதிய கட்டுப்பாடு வராததால், யோகத்திலிருந்து அவர் நழுவி விழுந்து விடுகிறார். இதன் விளைவு என்ன? சுயக் கட்டுப்பாடு முயற்சியில் இறங்காதிருந்தால் இவ்வுலக இன்பங் களையாவது அவர் ஏதோ கொஞ்சம் அனுபவித்திருக்கலாம், இப்போது அதுவும் போச்சு. பேரின்பமும் இல்லை. ஆக இரண்டு விதத்திலும் அவருக்கு நஷ்டம் அல்லவா?

புலன்களைத் திருப்தி செய்வதிலேயே வாழ்நாட்களை வீணாக்கி விடக் கூடாது என்று கூறும் வேதாந்திகள், புலன் வாழ்க்கையில் சிறிதளவு இன்பமிருக்கிறது என்பதை மறுக்க வில்லை. எதையும் அவர்கள் தைரியமாக அலசி ஆராய்ந்து சிந்திப்பவர்கள். புலன் பொருள்களில் தோன்றும் இன்பம் (விஷய ஆனந்தம்) கூட பிரம்மானந்தத்திற்குக் கோடி காட்டும் குறியீட்டு ரேகைகளே என்று அவர்களுக்குத் தெரியும். தோன்றி மறையும் இச் சிறு இன்பத் துளிகளையும் இழந்து, எல்லையற்ற பேரானந்தத்தையும் அடைய முடியாமல் போனால் என்ன செய்வது என்ற ஐயப்பாட்டை அடிப்படையாகக் கொண்டதே அர்ஜுனனுடைய கவலை.

சுயக்கட்டுப்பாடு பெறும் பொருட்டு ஒரு சாதகன் வேண்டு மென்றே இவ்வுலக இன்பங்களிலிருந்து ஒதுங்கி நின்று, வாழ்நா ளெல்லாம் அம் முயற்சியில் கழிக்கிறான். தோன்றி மறையும் இன்பக் கவர்ச்சிகளை முற்றிலும் உதறித்தள்ளி சாதகத்தில் ஈடு படுகிறான். அப்படி அவன் செய்து கொண்டிருக்கும்போதே, காலக் கத்திரிக்கோல் கொண்டு மரணம் அவனுடைய ஆயுளைக் கத்திரித்து விட்டால், கிருஷ்ணர் கூறும் இலட்சியத்தை அவன் அடைய முடியாது. இது ஒருபுறம். மேலும், தன்னைப் போதிய அளவு கட்டுப்படுத்திக் கொள்வதில் ஒரு சாதகன் வெற்றி பெறா மலும் போய்விடலாம். யோகத்தில் வெற்றி கிடைத்து

விட்டால், அது அமோகமான வெற்றி என்பதில் சந்தேகமில்லை. ஆனல் புலன் வேட்கைகளின் தாக்குதல்களால் ஒருவன் யோகத்திலிருந்து வழுவி விட்டால், அவனுக்கு இவ்வுலகுமில்லை, மேலுலகுமில்லை. இந்தக் கொடுமைக்கு உள்ளாகாமல் இருப்பதற்குக் கிருஷ்ணர் காட்டும் வழி என்ன? அர்ஜுனன் இதை அறிய விரும்புவது இயற்கையே.

இச் செய்யுளிலும் சிரத்தை என்ற சொல் வருகிறது. குருட்டுத்தனமான ஏதோ ஒன்றைப் பின்பற்றுவதைக் குறிப்பிடும் சொல் அல்ல இது. இதை நினைவு வைத்துக் கொள்ளவேண்டும். ஆசிரியர்களும், சாத்திரங்களும் அறிவுறுத்தும் கருத்துக்களின் முக்கியத்துவத்தையும் உட்பொருளையும் சரியாக அறிந்து கொள்ளுவதற்கான உண்மை முயற்சியே சிரத்தை என்று அவர்கள் கருதுகிறுர். அக் கருத்துக்களைப் பற்றி திட்ட வட்டமாக சிந்தித்து எடுத்த முடிவுதான் உறுதியான நம்பிக்கை. ''மனப்பூர்வமான நம்பிக்கையினுல் மலைகளையும் அசைத்து நகர்த்தி விடலாம்' என்று ஒரு பழமொழி உண்டு. இந்த நம்பிக்கையிருந்தால் சுவர்க்கத்தை இவ்வுலகத்திற்கே கொண்டு வந்துவிடலாம்.

ஆன்மிக உயர்வு பெற்றே தீருவது என்ற ஆர்வத்துடன் முயற்சி செய்யும் ஒரு சாதகனுடைய தோல்வியைப் பற்றித் தன் சந்தேகத்தை மேலும் கவர்ச்சியுறச் செய்வதற்காக அர்ஜுனன் மேலும் அதை விவரிக்கிறுன்.

கச்சின்னேபய—விப்ப்ரஷ்ட்டஸ் சின்னுப்ர—மிவ நஸ்யதி
அப்ரதிஷ்ட்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி
6:38

இரண்டையும் இழந்த பிறகு, பிரம்ம வழியிலிருந்து (வீழ்ச்சியுற்று) அவன் ஆதரவற்று, குழப்பமடைந்து சிதறிய மேகம் போல் ஆகிவிடமாட்டானு, பெருவலிமை மிக்கவனே?

சுயகட்டுப்பாட்டை மேற்கொண்டு, தன்னை ஆன்மாவாகக் காணும் முயற்சியில் உண்மையாகவே ஈடுபட்டிருக்கிறவன் திடீரென்று இறந்து விட்டால் இலட்சியத்தை அவன் அடைய முடியாமல் போகிறுன். சுயக்கட்டுப்பாடு பரிபூரணமாக இல்லாத போதிலும், யோகத்தில் வீழ்ச்சியுற்று, இலட்சியத்தை அடைய முடியாத நிலை உண்டாகிறது. மிக அற்புதமான கவிதை உணர்ச்சி தோன்றும் வகையில் அர்ஜுனன் இதை எடுத்துக் காட்டுகிறுன். சமஸ்கிருத இலக்கியத்தில் வியாசருடைய கவிதா மேன்மைபற்றி பேசுவோர், சிறப்புமிக்க இச் செய்யுளை அதற்கு மேற்கோளாகக் காட்டுவது வழக்கம்.

கோடைக்காலத்தில் மலைத் தொடர்களுக்கு அப்பா லிலிருந்து பெருங்குடை போல மேகக் கூட்டமொன்று மிதந்து வரும். அப்போது ஒரு காற்றடித்தால் போதும்—இந்தப் பெரு மேகம் சிறுசிறு துண்டுகளாகச் சிதறி பல்வேறு பக்கங்களிலும் குறிப்பற்று பறக்கின்றன. மழைக்காகக் காத்திருக்கும் விவசாயி களையும் குடிதண்ணீருக்கு ஏங்கி நிற்கும் ஏழை மக்களையும் தத்தளிக்க விட்டுவிட்டு இம் மேகத் துணுக்குகள், கடைசியில் யாருக்கும் பயனில்லாமல் கரைந்து மறைந்து விடுகின்றன. ஒரு சாதகனின் இறை நாட்ட உள்ளமும் இப்படிக் கிழிந்து மேகம் போல் துண்டு துண்டாகச் சிதறி பரந்து கிடக்கும் இப் பிரபஞ்ச வெளிகளில் தடுமாறிப் போகாதா? என்று அர்ஜுனன் கேட் கிறான்.

இப்பிரசினையை அர்ஜுனன் கேட்பதன் நோக்கம் என்ன?

ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்து—மர்ஹஸ்ய சேஷத:
த்வதன்ய: ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே
*6:39*

கிருஷ்ணா, என்னுடைய இந்தச் சந்தேகத்தை முற்றிலும் தீர்த்து வை. ஏனெனில் உன்னைத் தவிர வேறு எவராலும் அதைப் போக்க முடியாது.

அர்ஜுனன் தனது சந்தேகத்தைத் தெரிவிக்கும் இப்பகுதி யின் இறுதிச் செய்யுளில் ''என்னுடைய இந்த ஐயப்பாட்டை நீ முற்றிலும் போக்க வேண்டும், கிருஷ்ணா'' என்று கேட்டுக் கொள்கிறான். அவன் உள்ளத்தில் தோன்றும் இந்த சந்தேகத்தைப் போக்கி அச் சந்தேகங்களிலிருந்து எழும் சஞ்சலங் களையும் அகற்றி, உள்ள அமைதியைத் தோற்றுவிப்பதற்குக் கிருஷ்ணர் ஒருவரால்தான் முடியுமென்பது அவன் கருத்து. இதற்கு முன் ''ஆன்ம அறிவு பெறுவது முடியாத வேலை. ஏனெனில் எப்போதுமே சலசலத்துக் கொண்டிருக்கும் மனத்தை அமைதியுறச் செய்ய முடியாது'' என்று தனது சந்தேகத்தைத் தெரிவித்தான். ஆனால் இப்போது அந்த ஐயம் நீங்கிவிட்ட தென்று இந்தப் பிரசினை தெளிவாகக் காட்டுகிறது. கிருஷ்ண ருடைய பதில் அவனுக்கு திருப்தியளித்திருக்கிறது.

ஒரு சந்தேகம் போனால், மேலும் இரண்டொன்று புத்தி சாலியாக உள்ள ஒவ்வொரு சாதகனுடைய உள்ளத்திலும் புதி தாகத் தோன்றுவதில் வியப்பில்லை. இந்த சந்தேகங்களை ஒவ்வொன்றாகப் போக்கிக் கொண்டு வருவதுதான் ''விசார முறை'' சத்சங்க நேரங்களில், தெரிந்தோ தெரியாமலோ, இதுவே நடைபெறுகிறது.

முன்னேறி வரும் ஒவ்வொரு சாதகருக்கும் மிக உயர்ந்த வாழ்வு ஒன்று மரணத்திற்குப் பிறகு நிச்சயமாக காத்துக் கொண்டிருக்கிறது. அதை கிருஷ்ணர் வகைபிரித்து பின்வருமாறு அர்ஜுனனுக்கு விளக்குகிறார். ஆன்மிக ஆவலும், முயற்சியின் தீவிரமும் எந்த அளவுக்கு ஒருவரிடம் இருக்கிறதோ, அந்த அளவுக்கு இவ்வுடலைக் கைவிட்ட பிறகு வரும் மறுவாழ்வின் சிறப்பும் அடைந்திருக்கும். தன்னையும் மீறிய புலன் வேட்கையொன்றுக்கு இரையாகியோ அல்லது எதிர்பாரா மரணத்தின் காரணமாகவோ யோக முயற்சிகள் வெற்றி பெறுமல் போகும் ஒருவருடைய வளர்ச்சிப் பாதையை அடுத்த ஐந்து செய்யுட்களில் கிருஷ்ணர் சித்திரித்துக் காட்டுகிறார்.

ஸ்ரீ பகவானுவாச—
பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ்—தஸ்ய வித்யதே
நஹி கல்யாணக்ருத் கஸ்சித் துர்க்கதிம் தாத கச்சதி
6:40

பகவான் கூறினர்:

பார்த்தா, இவ்வுலகிலோ அல்லது மறுஉலகிலோ அவனுக்கு அழிவென்பது இல்லை. நல்வழியில் செய்யும் முயற்சி எதுவும் எந்நாளும் தோல்வி அடைவதில்லை, என் மைந்தனே!

கிருஷ்ணர் எடுத்த எடுப்பிலேயே, அழுத்தந்திருத்தமாக, 'சரியான முறையில் வேலை செய்பவனுக்கு இவ்வுலகிலும் அழிவில்லை. மறுஉலகிலும் அழிவில்லை' என்று சொல்லுகிறார்.

வெறும் குருட்டு நம்பிக்கையில் உணர்ச்சி மேலிட்டுக் கூறியதல்ல இது. கிருஷ்ணர் கூறுகிறார் என்பதற்காக இதை அப்படியே தெய்வ வாக்காக எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. தன்னுடைய சுய அறிவையும் தர்க்க பூர்வமான சிந்தனையையும் தள்ளி வைத்துவிட்டு எந்தக் கருத்தையும் இந்துக்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அப்படி ஒப்புக் கொள்ளச் சொல்லும் உரிமை கடவுளுக்குக்கூட இல்லை என்பது அவர்களுடைய அபிப்பிராயம். வாழ்க்கை விஞ்ஞானமே மதம் என்றால், அது கூறும் ஒவ்வொன்றுக்கும் முழுமையாக காரணங்களை விளக்க வேண்டும்.

நமது கலாச்சாரத்தின் ஒப்பற்ற இப் பண்பையொட்டி, தாம் கூறிய தத்துவத்தின் அடிப்படையை கிருஷ்ணர் எடுத்துரைக்கிறார். 'நல்லது செய்யும் எவருக்கும், அன்புப் புதல்வனே, கடைசியில் துயர முடிவு ஏற்படுவதில்லை' என்கிறார். நிகழ்காலத்தில் சரியாக வேலை செய்து வருபவர்களுக்கு வருங்காலத்திலும் சரியான பலனும், விளைவும் கிடைக்கும். இது தர்க்க

ரீதியாக அசைக்க முடியாத ஒரு உண்மை. கடந்த, நிகழ் காலங்களின் தொடர்ச்சியே எதிர்காலம். இப்போதும், கடந்த நாட்களிலும் நன்மையையே ஒருவன் செய்து வந்திருந்தால், விளைவு மட்டும் கெட்டதாக இருக்குமா?

தமது யோகப் பாதையில் முன்னேற முடியாமல், அரைகுறையாக நின்றுவிட்ட உண்மை யோகி, இவ்வுலகு மறு உலகு ஆகிய இரண்டையுமே இழந்து, கிழிந்த மேகப் படலத்தைப்போல் ஆகிவிட்டால் என்ன செய்வது? இதுதான் அர்ஜுனன் கேள்வி. வாழ்க்கையின் நிகழ்ச்சித் தொடரை சரியாகப் புரிந்து கொள்ளாததால் அவனுக்கு ஏற்பட்ட கவலை இது. பிறப்பு என்று தற்செயலாக ஏற்படும் ஒரு நிகழ்ச்சி. மரணத்துடன் முடிந்து விடுகிறது என்று நினைப்பதைப் போன்ற அசட்டுக் கொள்கை வேறு எதுவுமில்லை. இதை தத்துவமென்றே சொல்ல முடியாது.

வாழ்க்கையின் விதிகளையும், பிரபஞ்சத்தின் உட்பொருளையும் தெரிந்து கொள்ள வேண்டுமென்று முயற்சி எடுத்துச் சிந்தனை செய்பவர்களுக்கு ஒரு விஷயம் தெளிவாகத் தெரிய வேண்டும். இப்போது குறிப்பிட்ட ஒரு உருவாக்கம் பெற்று வாழும் ஒவ்வொன்றும், மெய்ப்பொருளை அலங்கரிக்கின்ற எழில் கொழிக்கும் முத்துச்சரத்திலுள்ள தனித்தனி முத்துக்கள் என்று அவர்கள் ஒப்புக் கொள்ளாமலிருக்க முடியாது. கடந்த காலத்தின் தொடர்ச்சிதான் நிகழ்காலம். இன்றைக்கு நாம் சிந்திக்கும் ஒவ்வொரு கருத்தும், செய்யும் ஒவ்வொரு செயலும், சேமிக்கும் ஒவ்வொரு அறிவுத் துளியும் நமது எதிர்கால வாழ்வுக்கு இப்போதே நாம் தயாரித்துக் கொண்டிருக்கும் திட்டத்தின் பகுதிகளாகும். இதனால்தான் முன் பிறவியிலும், அடுத்த பிறவியிலும் இந்துக்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. மறு பிறவிக் கொள்கை என்பது இதுதான்.

கிருஷ்ணர் அர்ஜுனனை 'என் மைந்தனே' என்று விளித்துப் பேசுகிறார். இது உபநிடத மரபு என்பது ஒருபுறமிருக்க, சிறப்பான வேறொரு காரணமும் இதற்கு இருக்கிறது. எவ்வளவுதான் ஒருவன் மற்றவர்களை ஏமாற்றித் திரிபவனாக இருந்த போதிலும், நயவஞ்சகக்காரனாக இருந்த போதிலும், கொடியவனாக இருந்த போதிலும், அவன் தன்னுடைய மகனுக்குத் தவறாக வழி காட்ட மாட்டான். ஒரு தந்தையின் அன்பும், அனுபவ ஞானமும் கொண்ட கிருஷ்ணர்'' வளர்ச்சிப் பாதையில் முயற்சித்து வரும் ஒருவனுக்கு உண்மையான வீழ்ச்சி என்பதே இல்லை'' என்று சொல்லுகிறார். கலாச்சார முன்னேற்ற ஏணியில் ஒருவன் முன்னோக்கி எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடியும் முழுமை நிறைவை நோக்கி அவனை இட்டுச் செல்லுகிறது.

யோக யாத்திரையை இடையிலேயே கைவிட நேரும் ஒருவனுடைய நிலை என்ன ஆகிறது? சாதக முடிவு பெறாமல் இறந்து விடும் ஒருவனுக்கு நடப்பது என்ன?

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகான்
உஷித்வா சாச்வதீ: ஸமா:
சுசீனும் ஸ்ரீமதாம் கேஹே
யோகப்ரஷ்டோ பிஜாயதே 6:41

யோகத்தில் தவறிய ஒருவர், புண்ணிய சீலர்கள் செல்லும் உலகங்களுக்குப் போய் நெடுங்காலம் வாழ்ந்து பிறகு தூயவர் களாகவும், செல்வந்தர்களாகவும் உள்ளவர்களுடைய இல்லத் தில் மீண்டும் வந்து பிறக்கிறார்.

ஒருவர் இங்கு செய்யும் செயல்களையும் நோக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டு அவருடைய எதிர்காலம் அமை கிறது. பொதுவாக வாழ்க்கையில் நமது செயல்களை எல்லாம் நல்லவை, கெட்டவை என்று பிரிக்கலாம். கெட்டவை செய்தவர்கள் வளர்ச்சியின் உயர்படிகளுக்குச் செல்லாமல், நழுவி கீழே வருகிறார்கள். நல்ல செயல்களில் ஈடுபட்டவர் மட்டுமே ஆன்மிக கோபுரத்தின் உச்சியை நோக்கி முன்னேறு கிறார்கள். இதையும் கூட நமது சாத்திரங்கள் இரண்டு வகை களாகப் பிரிக்கின்றன. 1. கோரிக்கைகளுடன் செய்யப்படும் நற் செயல்கள் 2. அவற்றை ஒருவித வழிபாடாகக் கருதி சுயார்ப்பண உணர்ச்சியுடனும் தெய்வீக அன்புடனும் செய்யும் நற்செயல்கள். ஒரு செயலின் விளைவுகள் அதன் நோக்கத் திலிருந்தே எழுபவையாக இருக்கும். ஆகையால், சுயநலச் செயல்களின் பலனும், சுயநலமற்ற செயல்களின் பலனும் வெவ்வேறு மாதிரியாகத்தான் இருக்கும். முழுமையின் எல்லைக்கு இவை நம்மை வெவ்வேறு பாதைகளின் வழியாக இட்டுச் செல் வதில் ஆச்சரியமில்லை. இவற்றை எல்லாம் இப் பகுதி குறிப்பிடுகிறது.

சொர்க்க இன்பங்களுக்காக கடவுளை வழிபட்டு வந்தவர்கள், இறந்த பிறகு, அக்கோரிக்கைகளை அனுபவிப்பதற் கேற்ற உணர்வு மட்டங்களை அடைகிறார்கள். அவற்றை அனுப வித்து முடித்த பிறகு ''தூயவர்களாகவும், செல்வந்தர்களாகவும் இருப்பவர்களுடைய இல்லங்களில் மீண்டும் வந்து பிறக்கிறார் கள். அதாவது கொழுந்து விட்டு எரியும் கோரிக்கையும், அதற் கேற்ற தீவிரச் செயலீடுபாடும் ஒருவரிடமிருந்தால், அக் கோரிக்கை நிச்சயமாக நிறைவேறிய தீரும் என்பதில் ஐயமில்லை.

சுயார்ப்பண உணர்வுடன், தன்னலமற்ற நற்பணி செய்துவரும் ஒருவருடைய நிலை என்ன?

அதவா யோகிநு—மேவ குலே பவதி தீமதாம்
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீத்ருசம்
6:42

அல்லது ஞானச் சிறப்புள்ள யோகிகளின் குடும்பத்தில் அவன் பிறக்கிறுன். இதைப் போன்ற பிறவி இவ்வுலகில் கிடைப்பது உண்மையில் மிகவும் கடினமானது.

கடந்த காலத்தின் தொடர்ச்சி தெளிவாகவும், நேரடியாகவும் தென்படும் மற்றொரு வகை மாந்தரைப் பற்றி இச் செய்யுள் கூறுகிறது. தன்னலமற்று உபாசனை செய்பவர்கள் முழுமையான அக ஒருமைப்பாடு பெறுகிறுர்கள். அதனுல் ஒப்பற்ற தியானத்திற்குத் தகுந்த உணர்வு வேகம் அவர்களிடம் தோன்றுகிறது. ஒருவருடைய ஆளுமையின் ஒருங்கிணைப்பு அதிகரிக்க அதிகரிக்க, அவருடைய ஆன்மீக முன்னேற்றமும் அதிகரிக்கிறது. அப்போது அவருடைய உடல் மறைந்து விட்டால், அவருடைய முயற்சி நிறைவு பெறுவதற்கான வாய்ப்பை அவருக்கு அளிக்க வேண்டும். அது சொர்க்கத்தில் வராது. சொர்க்கமென்பது இன்பநிலை. கடந்த பிறவியில் விட்ட குறையை கடுமுயற்சியின் மூலம் தொடர்ந்து இறுதியில் இலட்சியத்தை அடைவதற்கு, மறுபடி இவ்வுலகிற்கு வருவதைத் தவிர வேறு வழியில்லை. அந்நிலையில் ஒருவருடைய அகந்தை மையம் (ஜீவன்) ஒரு உருவாக்கத்தைக் கைவிட்டவுடன், தான் செய்து வந்த யாத்திரையை தங்கு தடையின்றி மேலும் தொடருவதற்குகந்த சூழ்நிலையில், வேறொரு உருவெடுத்து வந்து சேருகிறது. முழுமை பெறும் முயற்சியில் முழு மூச்சாக ஈடுபட்டிருந்தால் அது தவ வலிமிக்க ஞானிகளின் குடும்பத்தில் பிறக்கிறது.

இக்காலத்தில் சூழ்நிலைக்கு நாம் அளவுக்கு மீறிய முக்கியத்துவம் அளித்து வருகிறோம். பெரும்பாலோர் சூழ்நிலையையே மாற்றி அமைக்க வேண்டுமென்று சொல்லுகிறுர்கள். சூழ்நிலையும் கூட ஒருவ்ருடைய தன்மையை உருவாக்குகிறது என்று சொல்வது ஓரளவு உண்மைதான். ஆனுல் தத்துவ நோக்கிலிருந்து ஆராயும்போது மேலும் சில உண்மைகள் நமக்குத் தெரிய வருகின்றன. கடந்த காலத்தில் அவர்கள் செய்த செயல்களின் விளைவாக இன்றைய சூழ்நிலை அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அதாவது, தாங்களாகவே, இதைத் தங்களுக்கு அவர்கள் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறுர்கள். சூழ்நிலையை மாற்றுவதால் மட்டும் ஒருவர் முன்னேற்றம் பெற்று விடுவதில்லை. வழக்கமாக மதுவருந்தும் ஒருவரை, மதுவிலக்கு அமுலிலுள்ள இடத்திற்குக் கொண்டுவந்து, மது பானமே செய்யாதவர்

கள்ளுக்கடையில் குடியேற்றினுல் உடனே அவர் தமது வழக்கத்தைக் கைவிட்டு விடுவாரா? திருட்டுத்தனமாகக் குடித்துக் கொண்டிருப்பார்.

சங்கரர், ஏசுநாதர், புத்தர் போன்றவர்களுடைய வாழ்க்கை இங்கு கூறப்பட்டுள்ள தத்துவக் கருத்தை உறுதிப் படுத்துகிறது. அந்த மகா மேதைகள் தங்களுடைய இளம் பிராயத்திலிருந்தே அசாதாரண அறிவுத் திறனும், தெய்வீக ஞானமும் கொண்டவர்களாக திகழ்ந்தார்கள். அப்படிப்பட்டவர்களைக் காண்பது அரிது என்று கிருஷ்ணரே கூறுகிறுர். ஒரு அகந்தை (ஜீவன்) சொர்க்கத்தில் குறிப்பிட்ட காலம் இருந்துவிட்டு, பிறகு மறுபிறவி எடுப்பது பற்றி முந்திய செய்யுளில் எடுத்துரைக்கப்பட்டது. ஒரு உயிர் தன் உடலைக் கைவிட்டவுடனேயே இவ்வுலகில் மீண்டும் வேறு ஒரு உடலை ஏற்று, முழுமை நிறைவு யாத்திரையைத் தொடங்கி விடுகிறது என்று இந்தச் செய்யுள் விளக்குகிறது.

யோக நிறைவு பெருத நிலையில் பூத உடலை நீத்த ஒரு யோகி தமது முன்னேற்றத்தைத் தொடருவதற்கான சூழ்நிலையில் மறுபிறவியெடுத்தவுடன், விட்ட இடத்திலிருந்து மீண்டும் ஆன்மீக வாழ்வு தொடங்குவார் என்று எப்படிச் சொல்ல முடியும்?

தத்ர தம் புத்தி—ஸம்யோகம்
லபதே பௌர்வ—தேஹிகம்
யததே ச ததோ பூய:
ஸம்ஸித்தௌ குருநந்தன 6:43

அங்கு அவர் முற்பிறவியில் பெற்ற அறிவுடன் இணைந்து கொண்டு முழுமை பெறுவதற்கு முன்னைவிட அதிக முயற்சி செய்கிறுர், குரு நந்தனு!

ஒருவர் இவ்வுடலைக் கைவிட்டு மறுபடி பிறந்தால், அவர் சாத்திரங்களை மீண்டும் படிக்கத் தொடங்கி, ஆன்மிக சாதகத்தையும் மறுபடி அடியிலிருந்து தொடங்க வேண்டியிருக்குமோ, என்னவோ என்று சிலர் நினைக்கக் கூடும். அவ்வாறு பயப்பட வேண்டியதில்லை என்பதற்காகவே, 'முற்பிறவியில் பெற்ற அறிவுடன் இப்போது மறுபிறப்பு எய்தியுள்ள அவர் இணைந்து கொள்ளுகிறுர்' என்று கிருஷ்ணர் அறிவுறுத்துகிறுர். இவ்வாறு பிறக்கும் ஒருவர் மற்றவர்களை விடச் சுலபமாக சாத்திர அறிவு பெறுகிறுர். அவரைப் பொறுத்தவரை அது புதிதாகத் தொடங்கும் கல்வியல்ல. ஏற்கெனவேகற்ற நூல்களைச் சற்றுப் புரட்டிப் பார்த்து நினைவுபடுத்திக்கொள்கிறுர் என்று தான் சொல்ல வேண்டும். எல்லா அறிவும் தம்முள்ளிருந்து

ஊற்றுப் பெருக்காக வந்துகொண்டிருப்பதை வெகு விரைவி லேயே அவர் உணர்ந்து கொள்ளுகிறார். அவருடைய உள்ளத்தில் ஊறிக் கிடக்கும் அறிவு இப்போது வெளியாகிக் கொண்டிருப்பது அவருக்குத் தெரியாது.

அது மட்டுமல்ல. சுய முயற்சிக்கும், இலட்சியத்தை நோக்கி முன்னேறுவதற்கு வேண்டிய சக்தியும், உற்சாகமும், ஆன்மீக வேகமும், கூட தம்மிடமிருப்பதை அவர் சுலபமாகக் கண்டு கொள்ளுகிறார். ஒரு சாதகருக்கு சாத்திர அறிவு மட்டும் இருந் தால் போதாது. அது பெரும் சுமை. அதை நடைமுறையில் கொண்டுவர வேண்டும். முற் பிறவியில் யோக நிறைவு பெறாதவர், சரியான சூழ்நிலையில் மறுபடியும் பிறக்கிறார் என்று கிருஷ்ணர் உறுதியளிக்கிறார். பழைய அறிவை எல்லாம் மறுபடி பெறுவதுடன், ''முழுமை பெறுவதற்கு அவர் முன்னைவிட அதி தீவிரமாக முயற்சிக்கிறார், குருநந்தனா'' என்றும் கிருஷ்ணர் சொல்லுகிறார்.

முற்பிறவியில் மபறற அறிவு இப்பிறவியில் ஒருவருக்கு எப்படி வருகிறது? கிருஷ்ணர் விளக்குவதைக் கேளுங்கள்.

பூர்வாப் யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவஸோபிஸ:
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்த்ததே
6:44

அந்த (முற்பிறவி) சாதகத்தினாலேயே, அவர் வேண்டா மென்றாலும் கூட, இப்போது முன்னேற்றப் பாதையில் அவர் இழுத்துச் செல்லப்படுகிறார். யோகம் பற்றி அறிந்துகொள்ளும் விருப்பம் தோன்றியவுடனேயே சப்தப் பிரும்மத்தைக் கடந்த உயர்நிலை எய்துகிறார்.

பாங்க் பதிவேடுகளைப் பார்த்து நம் கணக்கில் இன்னும் மிச்சப் பணம் எவ்வளவு இருக்கிறது என்று தெரிந்துகொள்ள லாம். நமது சேமிப்பைவிட அதிகமாகவோ அல்லது குறைத்தோ பாங்க் நமக்குக் கொடுக்காது. ஏறக்குறைய அதைப் போலவே, நமது மன—அறிவு சாதனம் சேமித்த பண்பாட்டுச் செல்வத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ எந்தக் கடவுளாலும் முடியாது. நம் கணக்கில் உள்ளதை, எவ்வித ஏற்ற தாழ்வுகளுமின்றி அப்படியே நம்மிடம் சேர்ப்பிக்க மட்டுமே முடியும். காரண காரியத் தொடர்புகள் மாறாமல் அன்றாட நிகழ்ச்சிகள் நடந்து வருவதைப் பார்க்கிறோம் அல்லவா? அப்படியே ஒவ்வொரு பிறப்பும் அதற்கு முந்திய பிறவியின் விட்ட குறை, தொட்ட குறை, நேற்றைய தொடர்ச்சிதான் 'இன்று' ஆகிறது. நாம் வாழ்க்கையில் காணும் இவ்விதியை நினைவில் கொண்டு கிருஷ்ணர் கூறியுள்ளதை

மீண்டும் படித்துப் பார்த்தால் உடனே இதிலுள்ள உண்மை விளங்கும்.

இறக்கு முன் யோக முயற்சியில் ஈடுபட்டிருந்த ஒருவர் ''அந்த சாதகத்தினுலேயே (இப்பிறவியிலும்) முன்னேற்ற பாதையில் இழுத்துச் செல்லப்படுகிருர்.'' நல்லறிவு பெற்றவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பார்த்தாலே இதன் உண்மை கண் கூடாகத் தெரிந்துவிடும். அவருடைய பண்பு, கண்ணியம் ஆகியவை, அவரே வேண்டாமென்ருலும் கூட, தாமாகவே வெளியாகின்றன. கலாச்சார உயர்வு பெற்றவர் காட்டு மிராண்டியைப் போல் நடந்துகொள்ள மாட்டார். அப்படி நடிக்கப் பார்த்தாலும், விரைவிலேயே உண்மை வெளியாகி விடுகிறது. கெட்டவன் சுபாவமும் அப்படியே. இவ்விரு வகையினரும் பேச்சு, கருத்துக்கள், செயல்கள் மூலமாக தங்கள் தங்களுடைய சுய ரூபத்தை வெளியாக்கிக் கொண்டு விடுகிருர்கள்—அவர்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும்.

புலனடக்கம், சாத்திர அறிவு, சாதகம் முதலியவற்றில் ஊறிய நிலையில் மரணமடைந்தவர் இம்முயற்சிகளுக்குப் பாதகமான சூழ்நிலையில் பிறகு பிறந்தாலும்கூட, சமநிலை தவருப் பண்பும், அமைதியாக நடந்துகொள்ளும் திறனும் தாமாகவே அவருக்கு வருகின்றன. வாழ்க்கை பற்றிய அவருடைய நோக்கு, மற்றவர்களிடம் அவர் கண்ணியமாக நடந்துகொள்ளும் திறன் ஆகியவற்றிலிருந்தே அவருடைய கடந்த காலப் பண்பாடு நமக்கு நன்ருகத் தெரிகிறது. அவர் இவற்றையெல்லாம் தாமே பறைசாற்றிக்கொள்ள விரும்பாதவராக இருக்கலாம். அவரிடம் தோன்றும் பண்பும், சம நிலையும் அவருக்கே கூட சில சமயங்களில் அதிசயமாக இருக்கலாம். ஆனுல் அப்பண்பாடுகள் மறைவதில்லை.

இத்தத்துவ உண்மையை வெளியிட்ட பிறகு, இவ்வாறுள்ள யோக உயர்வை அழுத்திச் சொல்ல வேண்டுமென்று கிருஷ்ணருக்கு தோன்றுவது இயற்கையே. ''யோகத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் விருப்பம் அவருக்குத் தோன்றியவுடனேயே அவர் வேத கர்மங்களுக்கு அப்பாற்பட்ட உயர்நிலையை எய்துகிருர்'' என்று கூறுகிருர். சப்தப் பிருமம் என்ற சொல்லுக்கு ''வேத வாக்கியங்கள்'' என்று சங்கரர் பொருள் கூறுகிருர். வைதிகக் கருமங்களைப் பற்றிக் கூறும் பகுதிகளையே அவர் இதில் குறிப்பிடுகிருர். எனவே வேதச் சடங்குகளின் மூலம் பயன் அடைவதை விட உயர்ந்த நிலையை ஒருவர் எட்டி விடுகிருர் என்பது சங்கரர் கருத்து. இது சற்று நீட்டிப் பெற்ற பொருளாகத் தோன்றினுலும், இவ்விளக்கத்தின் அடிப்படை உண்மையானதுதான் என்பதில் சந்தேகமில்லை. புலனடக்கம், சாத்திர ஞானம், தியானம் ஆகியவற்றில் முற்பிறப்பில் ஊறிய ஒருவர் வேத கர்மங்

களினுல் வரும் உலக இன்பங்களைக் கூட பொருட்படுத்த மாட்டார். இவ்வாறு பொருள் கூறுவது இந்த இடத்திற்குப் பொருத்தமாக இருந்த போதிலும், இது சற்று நீட்டிப் பெற்ற பொருளாகவே தோன்றுகிறது.

இது நடைமுறையில் இல்லாத வெறும் வரட்டுக் கொள்கையல்ல. திரும்பிய இடமெல்லாம் இதிலுள்ள உண்மை நிரூபிக்கப் படுகிறது. எந்த சமுதாயத்திலும், பணித் துறையிலும் இதைச் சோதித்துப் பார்க்கலாம். ஒருவர் குறிப்பிட்ட ஒரு வேலையில் இருக்கலாம். ஆனுல் அவருடைய இயல்பு அவரை வேறு பக்கம் இழுத்துக் கொண்டேயிருக்கும். குறிப்பாக ஒருவருடைய பரிணும வளர்ச்சியின் அடிப்படையில் தோன்றும் இயல்புகள் மிக வன்மையுடன் அவரை அந்தப் பக்கம் இழுக்கின்றன. தம்மையும் மீறி அவர் தமது மனதிற் கிசைந்த வேலையில் ஈடுபடுகிருர். ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன் திடீரென்று மிகச் சிறந்த யோகியாகவும், நாடு பெருமைப்படக்கூடிய கவிஞுகவும் மாறி விடவில்லையா? வால்மீகியின் வரலாறு எல்லோருக்குமே தெரியும். இந்த மாறுதலுக்கு ஒரே ஒரு காரணம்தான் சொல்ல முடியும். முற்பிறவியில் அவர் செய்த செயல்களின் காரணமாக, அவருடைய மன—அறிவுச் சாதனம் அவருடைய உடலை அவ்வாறு உபயோகித்துக் கொண்டது. தன்னையும் மீறி இறுதியில் அவர் சுய இயல்பு பெற்ருர். சமீப கால வரலாற்றிலும், இன்றும் கூட இதற்கு நூற்றுக்கணக்கான உதாரணங்கள் இருக்கின்றன.

ஒருவர் யோகியாக இருந்து, அவருடைய இலட்சியம் முற்றுப் பெருமலே இறந்து விட்டால், அவர் மீண்டும் இவ்வுலகில் பிறந்து, தம்மையும் மீறி அமைதியையும் தியான வாழ்வையும் நோக்கி இழுத்துச் செல்லப்படுகிருர். மேலும் அதிக சுய கட்டுப்பாட்டுடன் இறை நாட்ட முயற்சியை மேற்கொள்ளுகிருர். அவர் ஒரு அரசராகப் பிறந்திருந்தாலும், சந்தை இரைச்சலிடையில் இருந்தாலும், சாக்கடையருகில் வசிக்க நேரிட்ட போதிலும், சிறப்புயர்மிக்க அவருடைய இதயம் மட்டும் எப்போதும் இலட்சியக் குறியிலேயே இருக்கிறது. அளவற்ற செல்வமும், அதிகாரமும் அவர் கையில் இருந்த போதிலும், தெய்வீக நெறியிலிருந்து அவர் விலகவே மாட்டார். உலகமே அவருடைய சுபாவத்தைக் கண்டு வியப்படையலாம். ஆனுல் தம்முடைய இயல்பைக் கண்டு அவரே இன்னும் அதிகம் வியப்படைகிருர். முற்பிறவியிற் செய்த சாதகத்தினுல், தம்மையும் மீறி அவர் இவ்வாறு நடந்து கொள்ளுகிருர்.

தியானப் பாதை மற்ற எல்லா வழிகளையும்விட சிறந்ததென்று ஏன் சொல்லுகிருர்கள்? கிருஷ்ணர் பின்வருமாறு பதிலளிக்கிருர்.

ப்ரயத்னுத்யத மானஸ்து
யோகீ ஸம்சுத்தகில்பிஷ:
அனேகஜன்மஸம்ஸித்தஸ்:
ததோ யாதி பராம்கதிம் 6:45

ஆனல் கடுமையாக முயற்சித்துப் பாவங்களிலிருந்து விடுபட்டு, பல பிறவிகளின் மூலம் (படிப்படியாக) தூய்மை பெறும் யோகி, இறுதியில் அதியுன்னத நிறைவு அடைந்துவிடுகிருர்.

முற்பிறவிகளில் செய்த செயல்களினுல் உள்ளத்தில் ஏற்பட்டுள்ள தடங்களுக்கு ஏற்ப உலகில் ஒருவருடைய மன அறிவுச் சாதனம் இவ்வுடலைப் பயன்படுத்திக் கொள்ளுகிறது என்பதை முன்பே பார்த்தோம். மனவெளியில் வெட்டிய இக்கால்வாய்கள் ஒருவருடைய சிந்தனைப் போக்கையும் இப்போதைய செயல்களின் தன்மையையும் நிர்ணயிக்கின்றன. சூக்கும உடலில் நாம் ஏற்படுத்திக் கொள்ளும் புண்களைத்தான் வேதாந்தத்தில் 'பாவங்கள்' என்று சொல்லுகிருர்கள். உள்ளிருக்கும் அழுக்கு அது. சுயநலமற்ற நற்பணிகளின் மூலம் அந்த அசுத்தம் அகன்று, உட்புண்கள் ஆறுகின்றன.*

மனத்தில் ஏற்படும் இத்தவருன எதிர்மறைப் போக்குகளை அகற்றி, அதிலுள்ள புண்களை ஆற்றுவது வேலையின் ஒரு பகுதிதான். நாம் ஒரு புறம் இதைச் செய்யும்போது ஆக்கப்பூர்வமான தெய்வீக இயல்புகளை மனத்தில் புதிதாகப் பதிப்பித்துக் கொண்டு வரவேண்டும். இவற்றையே புண்ணியம் என்று கூறுகிருேம். இந்த நல்ல 'வாசனைகள்' கூட தியானத்தில் ஈடுபடும்போது ஒருவருடைய முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கலாம். உள்ளத்திலுள்ள புலனின்ப நாட்டங்களையும், ஒழுக்கமற்ற போக்குகளையும் அறவே களைந்து ஒழித்த பிறகு ஒருவர் தியானத்தில் ஈடுபட வேண்டும். பரிபூரண உள்ளமைதி தோன்றும்போது, அந்த சந்தடியற்ற சாந்த சூழ்நிலையில், மனத்திலுள்ள நற்தடங்களும் அடியோடு மறைந்து விடுகின்றன. எனவே இப்போது அதில் 'நல்ல' 'வாசனை'களும் இல்லை, தீய 'வாசனை'களும் இல்லை. வாசனைகளற்ற இந்த நிலையே மனத்தின் முடிவு. ஏனெனில் மனம் என்பது வாசனைகளின் மூட்டையே அல்லவா? மனம் ஓய்ந்தவுடன் அகந்தையும் முடிந்து விடுகிறது. 'அப்போது அதியுன்னத இலட்சியத்தை அது எட்டி

---

* பொது முன்னுரை பார்க்க.

விடுவதால் அதாவது தன்னை ஆன்மாவாக மீண்டும் கண்டு கொள்வதால் பிறகு மருட்சியுற்ற அகந்தைக்கு இட மில்லாமற் போகிறது.

இக்கொள்கையை எடுத்துச் சொல்லுவதற்கு அரைப் பக்கம் போதும். ஆனுல் நடைமுறையில் இதைக் கடைப் பிடித்து வெற்றி பெறுவதற்கு ஒருவர் எத்தனையோ பிறவிகள் எடுத்து, விடாப்பிடியாக முயற்சி செய்ய வேண்டி யிருக்கலாம். ''பல பிறவிகளின் மூலம்'' என்ற வார்த்தைக் கோவை உபநிடதங்களில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. நமது முனிவர்கள் 'வாழ்க்கை விஞ்ஞா'னத்தை அலசி ஆராய்ந்த நிபுணர்கள். அவர்கள் ஆராய்ச்சியில் கண்டநேர்மையுடன் நமக்கு எடுத்துரைத்திருக்கிருர்கள். அவர்கள் கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. பரிணும வளர்ச்சி என்பது திடீரென்று தோன்றிய நிகழ்ச்சியல்ல. அது யுக யுகாந்தரமாக நடந்துவரும் முன்னேற்றம் என்று நமக்குத் தெரியும்.

வாழ்க்கையின் அடிப்படையைப் புரிந்துகொண்டு முழுமை பெற விரும்பும் ஒருவனை மாந்தருள் ஒரு மாணிக்கமாகக் கருத வேண்டும். புலன் வாழ்வு அர்த்த மற்றது என்று அவனுக்குத் தெரிகிறது. உலகத்தில் தோன்றிய தீர்க்கதரிசிகளின் அடிச்சுவடுகளைப் பின்பற்றிச் செல்லும் தைரியம் அவனுக்கு இருக்கிறது. எல்லையற்ற அமைதியை அவன் ஆவலுடன் நாடுகிருன். என்ன வந்த போதிலும் நீதிமுறை, நல்லொழுக்கம் போன்ற பண்புகளை அவன் கை விடுவதில்லை. ஒப்புயர்விலா இலட்சியத்தை அடைவதற்கு அவன் எதையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிருன். அவ்வாறுள்ள ஒருவனை வெறும் உலோகச் சேர்க்கையாகவோ, தாவர இனமாகவோ, விலங்கின் வளர்ச்சியாகவோ கருத முடியாது. இவ்வுலகில் தோன்றிய மகோன்னதப் படைப்பு அவன். பேருண்மையின் வாயி லுக்கு வந்துவிட்ட முழு நிறை மனிதன். நடமாடும் கடவு ளாக, அவன் பரம் பொருளின் மூலத் தலத்திற்கே செல்லும் உரிமை பெற்றுத் திகழ்பவன்.

நாமும் தியான வாழ்வில் தீவிரமாக ஈடுபட்டு, தெய்வீக வாழ்வு வாழத் தீர்மானித்து, இறை நாட்டத்தில்

ஆழ்ந்து விட்டால், இங்கேயே இப்போதிருக்கும் இதே பிறவிதான் நம்முடைய கடைசிப் பிறவி.

கீதையை ஆழ்ந்து படித்திருப்பவர்களுக்கு இங்கு கூறப் பட்டிருப்பதில் புதுமை தோன்ற இடமில்லை.

''பல பிறவிகள் எடுத்த பிறகே மனிதன் விமோசனம் அடைகிறான்— இந்தக் கணத்திலேயே அல்ல— என்று கீதையே கூறுகிறது, பார்த்தீர்களா'' என்று இங்கு கூறப் பட்டிருப்பதை சில பிரசாரகர்கள் திரித்துச் சொல்லலாம். இதுவரை நம்பிக்கையையும் தைரியத்தையும் மனித குலத் திற்குப் பறைசாற்றி வந்த இப்புனித கீதை திடீரென்று வேறு பாட்டைப் பாடத் தொடங்கிவிட்டதாக நினைப்பதை விட முட்டாள்தனம் வேறில்லை. பகவத் கீதையை நன்றாகப் படித்தவர்கள் இந்தச் செல்லாக் காசுப் பிரசாரகர்களைக் கேட்டு ஏமாந்துவிடப் போவதில்லை. ஆகையால்—

தபஸ் விப்யோதிகோ யோகீ
    ஞானிப் யோபி மதோதிக:
கர்மிப்யஸ்—சாதிகோ யோகீ
    தஸ்மாத் யோகீ பவார்ஜுன **6:46**

தவம் செய்வோரையும், ஞானி (கற்றறிந்தோர்)களையும் விட, யோகி மேம்பட்டவராகக் கருதப்படுகிறார். செயலிற் சிறந் தோரைவிட அவர் உயர்ந்தவர். ஆகையால் யோகியாக இரு, அர்ஜுனா.

ஆன்மிக விஞ்ஞானத்திலுள்ள எல்லா வழிகளிலும் தியான வழியே சிறந்ததென்று காட்டுவதற்காக, பல்வேறு பாதைகளைப் பின்பற்றும் சாதகர்களின் பட்டியல் ஒன்று இங்கு தயாரித் தளிக்கப்பட்டிருக்கிறது. உடற்தேவை மறுப்புகளில் இறங்கி அர்த்தமில்லாமல் போராடிக்கொண்டிருப்பவர்களைவிட (தவம் செய்பவர்களைவிட) தியான மார்க்கத்தில் ஈடுபட்ட யோகி உயர்ந்தவர்.

சிறந்த சாத்திரக் கல்வி கற்று, எல்லாப் புனித நூல்களையும் நினைவிலிருந்து சொல்லக்கூடிய பண்டிதர்களைவிட, தியானத்தில் மூழ்கிய யோகி சிறந்தவர்.

முழுமை பெறுவதற்கு பலர் இவற்றைத் தவிர வேறு சில முறைகளையும் கையாளுகிறார்கள். வேள்வி உணர்ச்சியுடன் சுய

நலமற்று பணிபுரிவதும் (கர்ம மார்க்கம்) இவற்றில் ஒன்று குறிப்பிட்ட தெய்வங்களை வழிபடுதல் (உபாசனை) மற்றொரு வகை. உலக நடவடிக்கைகளிலோ, சமயத் துறையிலோ சம்பிரதாயமாக நடத்த வேண்டிய சடங்குகளைச் செய்து பரம் பொருளை அடையலாமென்பது இவற்றில் ஈடுபட்டிருப்போரின் நம்பிக்கை.

தம்மை உடல், மனம், அறிவு. ஆகியவற்றுடன் தவருக இணைத்துக்கொள்ளாமல், அமைதியாகவும், மௌனமாகவும் ஆன்மாவின் இயல்பு பற்றியே தியானித்துக்கொண்டிருக்கும் ஒரு யோகி, மற்ற எல்லா வகையான சாதகர்களையும்விட உயர்ந்தவர் என்று கிருஷ்ணர் முடிவு கூறுகிருர்.

மூன்று வகை சாதகர்களை கிருஷ்ணர் இங்கு ஒரு யோகியுடன் ஒப்பிடுகிருர். 1. உடற் தேவைகளை முற்றிலும் மறுத்து தவத்தில் ஈடுபடுவோர். 2. சாத்திரங்களில் மிகத் தேர்ச்சி பெற்று உண்மை நாடுவோர். 3. புனித நூல்கள் கூறும் சடங்குகளை தவருது செய்து வருபவர்கள்—இம் மூவகையின ரையும்விட ஒரு யோகி இறைவனை மிக நெருங்கியிருக்கும் காரணத்தினுல், தியான முயற்சியை மேற்கொண்டு முயலும் 'ஒரு யோகியாக இரு, அர்ஜுனு' என்று கிருஷ்ணர் புத்திமதி சொல்லுகிருர்.

தியானம் செய்வோரிலும் பல வகையினர் இருக்கிருர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு குறிக்கோளை மனத்தில் நிலை நாட்டிக்கொண்டு தியானிக்கிருர்கள். இவர்களில் சிறந்த வகை தியானி யார்? இதற்குப் பகவான் கூறும் பதி பின்வருமாறு:

யோகினுமபி ஸர்வேஷாம் மத்கதேனுந்தராத்மனு
ச்ரத்தாவான் பஜதேயோ மாம் ஸ மே யுக்த தமோமத
6:47

என்னுடன் இரண்டறக் கலந்துவிட்ட உள்ளத்துடன் சிரத் தையுடன் என்னை வழிபடுபவர் மற்ற எல்லா யோகிகளிலும் சிறந் தவர் என்பது என் கருத்து.

ஆன்மிகத்துறையில் வெற்றி பெறுவதற்கான பல்வேறு வழிகளை ஒப்பிட்டு, அவற்றில் தியான முறையே உயர்ந்ததென்று முந்திய செய்யுள் சுட்டிக்காட்டிற்று. அவ்வாறு தியானமுறை மேற்கொள்பவர்களிலும் எவ்வகை தியானத்தை மேற் கொள்பவர் சிறந்தவர் என்பது இந்தச் செய்யுளில் விளக்கப் படுகிறது. ஒருவர் தாமே ஒரு சின்னத்தை தேர்ந்தெடுத்து, முழு சிந்தனையையும் அதன்மீது செலுத்துவதே தியானம். தொடக் கத்தில் தியானமுறை இவ்வாறுதான் ஆரம்பமாகிறது. மனம் பல்வேறு திசைகளில் சிதறி ஓடாமல் கட்டுப்படுத்துவதன் மூலம் தியானம் மேலும் தொடருகிறது. எனவே ஒருபொருள் அல்லது

குறிக்கோள்மீது மனத்தை நிலைநாட்டும் முயற்சி தியானத்தில் மிகவும் அவசியமாகிறது. எந்தப் பொருளை மையமாக வைத்து தியானம் செய்கிறோம். மனம் சிதறி ஓடாமல் நிலைப்பதற்கு எக் கொள்கையைப் பின்பற்றுகிறோம் என்பதையெல்லாம் வைத்து தியானக் கலையையும் பலவகைகளாகப் பிரிக்கலாம்.

ஒரு பொருள் அல்லது தெய்வ தத்துவத்தை உருவகப் படுத்தும் ஒரு உருவம், குரு, குண்டலினி, பிரபஞ்ச மூலப் பொருள்களில் ஒன்று, புனித சாத்திர வாக்கியங்கள் இப்படியாக குறிப்பிட்ட ஏதோ ஒன்றை மனதிலிருத்தி பலர் தியானம் செய்து வருகிறார்கள். இவ்வாறு தியானிப்பவர்களில் மிக வெற்றிகரமாக செய்யக்கூடியவர் யார் என்று கிருஷ்ணர் இங்கு குறிப்பிட விரும்புகிறார்.

அத்தியாயத்தின் கடைசிச் செய்யுள் இது. ''தமது மன–அறிவுச் சாதனமாகிய உள்ளத்தை ஆன்மாவுடன் இரண்டறக் கலந்து நிற்குமாறு செய்து, சிரத்தையுடன் ஆன்ம வழிபாட்டில் ஆழ்ந்து விடுகிறவரே எல்லா தியானிகளிலும் உறுதியான, ஈடுபாட்டுச் சிறப்புள்ளவர்'' என்று பகவான் இங்கு குறிப் பிடுகிறார். யோக சாத்திரம் முழுவதையுமே அவர் இந்த இரண்டு வரிகளில் அடக்கி விடுகிறார். அவர் இங்கு கூறியுள்ளவற்றை விளக்கவேண்டுமென்றால் புத்தகம் புத்தகமாக எழுதிக் கொண்டே போகலாம். அதனால்தான் மந்திரம் போல் அமைந் துள்ள இச் செய்யுளை விளக்குவதற்கு அடுத்த அத்தியாயம் முழுவதையுமே ஒதுக்கீடு செய்கிறார்.

இப்போதைய நோக்கத்தைப் புரிந்துகொள்ளுவதற்கு ஒரே ஒரு கருத்தை தெளிவாக நினைவு வைத்துக்கொண்டால் போதும். தியானத்தின் சாராம்சம் மனத்தை ஒருங் கிணைப்பதைவிட, நமது உள்ளத்தை (அந்தக்கரணத்தை) ஆன்மாவில் கலந்துவிடச் செய்து, நாம் இறுதியாக ஆன்மானு பவம் பெற்றுத் திகழ்வதுதான். சிரத்தையுடன். ஆன்மாவை முறை தவறாமல் பஜனை செய்பவரே இம்முயற்சியில் வெற்றி பெற முடியும் என்று அன்புப் பிரகடனம் செய்கிறார்.

பஜனை என்று சொன்னவுடன் பலத்த இரைச்சலையும், பல வகை மூட நம்பிக்கைகளையும், அதனுடன் சேர்த்து பலர் குழப்பிக்கொள்ளுகிறார்கள். பூசாரியொருவர் விளங்காச் சடங்கு கள் செய்து கொண்டிருப்பார். அவர் செய்வதன் வேடிக்கை தெரியாது சுற்றி நிற்பவர்கள் அதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஜால்ராக்களும், பக்க வாத்தியங்களும் முழங்க, பயங்கரக் குரலெடுத்து பலர் பாடுவார்கள். கூட்டத்தி லுள்ள எல்லோரும் இனம் புரியா உணர்ச்சிக் கொந்தளிப்பில் அவர்களுடன் சேர்ந்து கூச்சல் போடுவார்கள். இந்த

ஆரவாரத்திற்லும் பெயர்தான் பஜனை என்று பெரும்பாலோர் நினைத்துக்கொண்டிருக்கிறனர். இதைப் போன்ற 'பஜனை களுக்குப் பிறகு உடல் அயர்வும், வெறும் உள்ளக் கிளர்ச்சியும் தான் ஒருவர் காணும் பலன்; அற்புதமான ஆன்மிக அனுபவத்தின் அருகில்கூட அவர் போவதில்லை. பேருண்மைத் தத்துவத்தை நினைத்து ஏங்கும் அகந்தை, தனது நிலைமை நினைத்து உருகி, தன்னைத் தானே வெளிப்படுத்திக்கொள்ளும் செயலையே 'பஜனை' என்று வேதாந்த நூல்கள் குறிப்பிடுகின்றன. உண்மையான பஜனை மூலம் தெய்வ ஈடுபாடுகொண்ட ஒருவர் தமது மன—அறிவுச் சாதனங்களின் சந்தடிகளுக்கு அப்பாற் சென்று ஆன்மாவில் இரண்டறக் கலந்துவிடுகிறார்.

இவ்வாறு தியானத்தில் ஈடுபட்டுள்ள ஒருவர் உடல், மனம், அறிவு, போன்ற பொருள் உறைகளுடன் கொண்டுள்ள எல்லாப் பொய்யுறவுகளையும் கைவிட்டு, தமது உண்மை இயல்பை—தாமே ஆன்மா என்ற உண்மையை—உணர்ந்து கொள்ளுகிறார். இது வேதாந்த தத்துவத்தை நன்கறிந்த எல்லோருக்குமே தெரியும். ஆயினும் புத்துணர்வு பெற்ற இந்துமதத்தின் குரலாகத் திகழும் கிருஷ்ணர், நமது மரபுக்கே இயல்பான அடக்கத்துடன், 'இது என் சொந்தக் கருத்து' என்று கூறுகிறார்.

(சாந்தி வாக்கியம்)

உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், கீதை ஆகிய மூன்றையும் 'பிரஸ்தானத்ரயம்' என்று கூறுவார்கள். இவற்றையும், மற்ற ஏராளமான சாத்திர நூல்களையும் எடுத்துக்கொண்டாலும், தியானத்தைப் பற்றி இவ்வளவு விரிவாக, நுணுக்கமாக, முழுமை யாக வேறு எந்த இடத்திலும் விவரிக்கப்படவில்லை. தியானத்தை மேற்கொள்ளும் விதத்தைக் காட்டுவது மட்டுமின்றி, அதில் தவறிவிடக்கூடிய இடங்கள், அவற்றிலிருந்து தப்புவதற்கான வழிகள் ஆகியவற்றையும் இந்த அத்தியாயம் விளக்குகிறது. தியான மார்க்கத்தைப் பின்பற்றி, அவற்றிலிருந்து தப்புவதற் கான வழிகள் ஆகியவற்றையும் இந்த அத்தியாயம் விளக்குகிறது. தியான மார்க்கத்தைப் பின்பற்றி, வாழ்வின் மிக உயர்ந்த இலட்சியத்தை அடைகிறோமென்பதைப் பொதுவாக எல்லா புனித நூல்களுமே எடுத்துரைக்கின்றன. ஆயினும் தியான மார்க்கம் முழுவதையும் அலசி ஆராய்ந்து, இவ்வளவு விவரமாக அவை விரித்துரைக்கவில்லை. உண்மையான ஒரு சாதகர் கீதை யின் ஆறுவது அத்தியாயத்தை ஆழ்ந்து படித்து சிந்தித்து, செயலாற்றினால் அவருக்கு வேண்டிய எல்லா விளக்கங்களும் அதில் கிடைக்கும். தியானத்தின்மூலம் ஆன்மானுபவம் பெறு வதற்கு அதுவே வழிகாட்டியாக இருக்கும். எனவே இந்த அத்தியாயத்திற்கு 'தியானயோகம்' என்று தலைப்பிட்டிருப்பது மிகப் பொருத்தமாக இருக்கிறது.

# ஞான விஞ்ஞான யோகம்

7

## முன்னுரை

கீதையின் பதினெட்டு அத்தியாயங்களேயும், அவற்றிலடங்கிய கருத்துக்களின் அடிப்படையில், ஆறுறு அத்தியாயங்கள் கொண்ட மூன்று பாகங்களாகக் கொள்ளலாம். இது கீதை ஆய்வாளர்களின் கருத்து. வேதக் கோட்பாடுகளுடன் சாரத்தை தனது விவாதங்களில் விளக்குகின்ற திவ்வியப் பாடலான கீதை, 'தத்வமஸி' என்ற மகா வாக்கியத்தின் உட்பொருளே விளக்குகின்றது எனவும் அவர்கள் கருதுகின்றனர்.

மகா வாக்கியங்கள் நான்கு. *இவை நான்கும் நான்கு வேதங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. இவை நான்குவித திட்டவட்டமான வழிகாட்டிகளாக விளங்கிஞலும், வேதங்கள் வேறுபாடின்றி வெளியிடும் புனிதமான ஒரே சத்தியத்தையே குறிப்பிடுகின்றன. இவற்றில் 'தத்வமஸி' என்ற மகா வாக்கியம் உபதேச வாக்கியமெனக் கருதப்படுகிறது. சுருக்க

* 'பிரக்ஞானம் ப்ரஹ்ம,' 'தத்வமஸி,'
'அயம் ஆத்மா ப்ரஹ்ம,' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பவையே நான்கு மகா வாக்கியங்கள் ஆகும்.

மான இவ்வாக்கியம் பழைய வேதக் கதைகளையும், வேதத்தின் தத்துவத்தையும் முழுமையாக விளக்குகிறது. எனவே மூன்று சொற்களடங்கிய உண்மையில் இவ்வாக்கியத்திலுள்ள ஒவ்வொரு சொல்லின் உட்பொருளையும் விளக்க நீண்ட விரிவுரைகள் தேவை.

இத் திவ்விய நூலின் முதல் பாகமான ஒன்றிலிருந்து ஆறு வரையிலான அத்தியாயங்கள் 'த்வம்' என்ற சொல்லின் உட்பொருளை விளக்குகின்றன என்று கீதையை நன்கு கற்றறிந்த பலர் கூறுகின்றனர். ஏழாவது அத்தியாயத்திலிருந்து பன்னிரண்டாவது அத்தியாயத்தில் முடியும் இரண்டாவது பாகம் அதே வாக்கியத்திலுள்ள ''தத்'' என்ற சொல்லின் உட்பொருளை விளக்குகிறது. ஆகவே இந்துக்களின் கலாச்சாரக் கோட்பாடுகள் குறிப்பிடும் தெய்வீக மார்க்கத்தின் முடிவை இந்த அத்தியாயத்திலிருந்து காண முடியும். கடைசி ஆறு அத்தியாயங்கள் 'அஸி' என்ற சொல்லின் பொருளை விளக்கி, ''தத்' என்ற சொல்லின் சாரத்திற்கும் 'த்வம்' என்ற சொல்லின் உட்பொருளுக்கும் உள்ள ஒருமையை எடுத்துரைக்கின்றன.

முந்திய அத்தியாயம் தீவிர கவனத்தினாலும் தியானத்தினாலும் தன்னைத்தான் அறிந்து கொள்வது எப்படி என்பதைப் பற்றிக் கூறுவதுடன், வெவ்வேறு பாதைகளில் உண்மை முடிவைத் தேடுபவர்களில் சிறந்தவன் எவன் என்பதைப் பற்றிய கிருஷ்ண பகவானின் சொந்த அபிப்பிராயத்தையும் முடிவுரையாகக் கூறுகிறது. புலன்களால் வரும் போகத்தைத் துறந்த முனிவனை விட, அல்லது வேத இலக்கியங்களை ஆழ்ந்து ஆராயும் ஞானியை விட, அல்லது சமுதாயச் சேவைக்காகத் தன்னலமற்று தம்மை அர்ப்பணித்துக் கொண்ட கர்மயோகிகளைவிட, தியானத்தின் மூலம் ஆத்மாவின் மேல் லயித்திருப்பவனே மிகச் சிறந்தவன் என்று பிருந்தாவனத்து நந்தகுமாரன் கருதுகின்றான். தியானத்தில் ஈடுபடுபவர்களிலேயே சிறந்தவன் எவன் என்பதைக் குழலூதும் கண்ணன் மீண்டும் கூறுகின்றான். முந்திய அத்தியாயத்தின் கடைசி சுலோகத்தில் எவனொருவன் ஒருமுகப்படுத்தப்பட்ட ஆத்ம தியானம் என்னும் முறையின் மூலமாய்த் தனது மனத்தை ஆன்மாவோடு இணைக்கின்றானோ, அவனே உயர்ந்த சாதகனாகவும் கடவுளுக்கு மிகப் பிடித்தவனாகவும் திகழ்கிறான்.

அழியக் கூடிய ஒரு ஜீவனின் சிறு அநித்யமான சிற்றறிவும் மனமும் ஆதியும் அந்தமும் அற்ற பரம்பொருளை எவ்வாறு காணவும் உணரவும் முடியும் என்ற சந்தேகம் அர்ஜுனனுக்குத் தோன்றுவது சகஜம். கிருஷ்ண பகவான் இந்த சந்தேகத்தை இவ்வத்தியாயத்திலே போக்குகிறார். முழுத் தத்துவத்தையும், ஞானத்தின் மூலமாகவும், விஞ்ஞானத்தின் மூலமாகவும் அர்ஜுனனுக்கு விளக்கி அவன் சந்தேகங்கள் அனைத்தையும்

நீக்குவதாய்த் தரும் வாக்குறுதியே, இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும். எல்லா வழிகளிலும் ஆராயும் நெறியிலும், அணு அணுவாக விளக்கும் முறையிலும் கீதைக்குச் சமமான வேறொரு சமயநூல் இவ்வுலகில் இல்லை. இந்தக் காரணத்தினால் உலகநூல்கள் கீதையை தத்துவ விளக்கப் பாட நூலாக மட்டும் கருதாமல், கவிதை நயமும், கருத்தாழமும் கொண்ட இலக்கியச் சிகரமாகக் கருத வேண்டும்.

ஸ்ரீ பகவானுவாச:
மய்யாஸக்தமனா: பார்த்த யோகம் யுஞ்சன் மதாச்ரய:
அஸம்ஸயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்ச்ருணு
7:1

பகவான் கூறினார்:

என்பால் செலுத்திய மனமுடையவனாய், என்னைச் சரணடைந்து யோகத்தில் நிலைத்து என்னை முற்றிலும் எவ்வாறு உணர்வது என்பதைக் கேள்.

தியானத்தை மேற்கொள்வதற்கு முன்பு, சாதகர்கள் அனைவருக்குமே, சிற்றறிவினால் தோற்றமும், முடிவும் அற்ற பரம் பொருளைக் கண்டுணர்வது எவ்வாறு முடியும் என்னும் சந்தேகம் வருவது இயற்கையே. வேதாந்தத்தின் தத்துவத்தை, அறிவுக் கண் கொண்டு மட்டுமே அனுபவிக்க விரும்பும் சாதகர்களுக்கு இத்தகைய சந்தேகம் எழும். எல்லா சாதகர்களும் தொடக்கத்தில் வேதாந்தத்தைக் கற்றுத் தேர்ந்த இலக்கிய மாணாக்கர்களாகவே இருப்பார்கள். ஞான மார்க்கத்தில் இது பிரச்னையை தவிர்க்க முடியாத ஒரு நிலையாகும். வேதாந்த தத்துவம் இந்தப் பிரச்னையை முழுமையாக ஆராய்ந்து, ''சிற்றறிவானது பேருண்மை பொருளைத் தியானிக்கும் போது, சிற்றறிவின் எல்லையைக் கடந்து, பரம் பொருளை அறிந்து அனுபவிப்பது எப்படி?'' என்பதை விளக்குகிறது.

அடுத்து வரும் ஆறு அத்தியாயங்களில் ஆராயப் போகும் கருத்துக்களைப் பற்றிக் குறிப்பிடும் போது, பகவான் கிருஷ்ணன், விஞ்ஞானத்தையும், விஞ்ஞான நுட்பத்தையும் முழுவதும் விளக்குவதாய் வாக்களிக்கிறார். இவ் விளக்கம், ஒரு தியானி, ஆத்ம தத்துவத்தில் ஒருமுகப்படுத்திய மனத்தினால் பரம் பொருளை அடைய முடியும் என்பதைத் தெளிவாக்குகிறது. இந்த அத்தியாயத்திலிருந்து, மனம் என்பது ஒருநிலைப்படாத, அலை பாயும் மனத்தைக் குறிப்பிடாமல் பகுத்தறிவின் ஆணைக்குட்பட்டு முறையாக செயல்பட பழகிவிட்ட ஒருமுகப்பட்ட மனத்தைக் குறிக்கிறது. தெய்வீக சக்தி பெற்ற ஆன்மிகப் பொருளின் மீது அந்த மனம் முழுமையாக லயிக்கும்போது, சாதகன்

துரிதமாக முன்னேறுகிறான். ஆத்ம வளர்ச்சியின் நெறியை விளக்குவதே இவ்வத்தியாயத்தின் குறிக்கோளாகும்.

நான் இனி சொல்லப் போவதைக் கவனத்துடன் கேள், இந் நெறியைக் கடைப் பிடித்தால் நீயும் எல்லேயற்ற புகழும், சக்தியும் அருளும் மற்றுள்ள குணங்களும் கொண்ட என்னை சந்தேகமற்ற முறையில், முழுமையாக அறிந்து கொள்வாய்.

ஞானம் தேஹம் ஸவிஞ்ஞானம் இதம் வக்ஷ்யாம் யசேஷத:
யஞ்ஞாத்வா நேஹ: பூயோந்யத் ஜ்ஞாதவ்ய மவசிஷ்யதே
7:2

ஆத்மாவைப் பற்றி அறியக் கூடிய முறையையும் கூடவே அதன் அனுபவத்தைப் பற்றியும் கூறுகிறேன். அதை அறிந்த பின் நீ அறிய வேண்டியதொன்றும் இராது.

ஆதி சங்கரரின் கருத்துப்படி பரம்பொருளைப் பற்றிய அனுமான அறிவே ஞானம். அனுபவ அறிவே விஞ்ஞானம். தெய்விக வாழ்வு என்னும் அலேயின் அனுமான அறிவைத் தருவதுடன்; தன் விளக்கத்தில் தனது சத்திய நிலேயை மீண்டும் கண்டு கொள்ளும் உயர்நிலேக்கு அவனை அழைத்துச் செல்வதாக உறுதி கூறுகிறார். இது நம்ப முடியாததாகத் தோன்றக் கூடும். அது நேரடியான நெறிமுறை; சாத்திரங்களேக் கற்ற பிறகு, ஒரு தகுதி வாய்ந்த சாதகன், அதைத் தன் வாழ்வில் கடைப்பிடிப்பதற்கும் உயர்ந்த நிலேயை அனுபவிப்பதற்கும் காட்டைத் தேடிச் செல்ல வேண்டிய அவசியமில்லே.

போதனை நடக்கும் போதே, தக்க மனப்பக்குவம் உள்ள சாதகன், தன் குருவோடு சேர்ந்து படிப்படியாக முன்னேறி, அவர் தரும் விளக்கங்களின் நியாயத்தையும், சிறப்பையும் கவனத்துடன் புரிந்து கொள்ளுகிறான். அப்போதே அவனிடம் அனுபவத்தின் கூறுகள் தோன்றி விடுகின்றன. இதனால் தான் அறிவுக்கப்பால் உள்ள அனுபவ நிலேக்குச் செல்லும் பக்குவம் பெற்ற மாணக்கனுக்கு மட்டுமே, வேதாந்தம் போதிக்கப் பயன் படுகிறது.

அந்தக்கரண ஒருமைப்பாட்டை எந்த மாணக்கன் பெறுகிறானே, பரம்பொருளின் அனுபவத்தையும் பெறும் தணியா வேட்கையை எவன் பெறுகிறானே, அவன் குருவின் உபதேசத்துடனும் அதன் உட்பொருளுடனும் தன்னை ஐக்கியப் படுத்திக் கொள்ளும் பொழுது வேதாந்தம் சொல்லும் குறிக்கோளான பரம்பாருள் அனுபவத்தை நுகர முடியும். குரு சீடனுக்கிடையே நடைபெறும் உரையாடலினல் பெறும் மறை நூற் பொருளே அறிதலும் உணர்தலும் ஒரு கணத்தே ஆத்மானுபவத்தை உண்டாக்குகிறது.

இவ்வகையில், வேதாந்தம் என்பது பூரணமான விஞ்ஞானம் என்றால், குரு சீடன் உரையாடலின்போதே ஆத்மானுபவம் ஏற்படும் என்றால், ஆத்மானுபவம் பெற்ற ஆச்சாரியர்கள் ஏன் அரிதாக இருக்கிறார்கள்? இதைக் கவனிப்பாயாக.

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித் யததி ஸித்தயே
யததாமபி ஸித்தானாம் கஸ்சின் மாம் வேத்தி தத்வத:

7:3

ஆயிரமாயிரம் மக்களில் ஒருவன் முக்தியைப் பெற முயல்கிறான். அப்படி முயல்பவருள் ஒருவன் என்னை உள்ளபடி அறிபவனாகிறான்.

வேதாந்த அனுபவமும், ஞானமும் ஒரு சிலருக்கு மட்டுமே சிந்திக்க முடியும் என்ற கருத்து, இந்திய வேதாந்த இலக்கியங்களில் வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு ஆசிரியர்களால், வெவ்வேறு விதமாகத் திரும்பத் திரும்ப வலியுறுத்தப்பட்டுள்ளது. வேதாந்த தத்துவங்கள் கேட்பதற்கும், புரிந்து கொள்வதற்கும் வியப்பளிப்பதாகும் * உபநிடதங்களிலும் இதே கருத்து ரிஷிகளால்** மிகத் தெளிவகாவும், அழகாகவும் கூறப்பட்டுள்ளது.

ஆனால் இவ்விடத்தில் கிருஷ்ணன் பரமாத்மாவை அறிந்து கொள்ளாததற்கான முழுப் பொறுப்பையும் சாதகனின் மேலும் அவனுடைய முயற்சியின்மையின் மேலும் சுமத்துகிறார். தன்னை உணர்த்துகின்ற விஞ்ஞானமாக வேதாந்தம் விளங்குவதால், நாம் நமது ஆத்ம சத்தியை வளர்த்துக் கொள்வது எவ்வாறு என்பதையும் அறிந்தால் மட்டும் போதாது. அத்துடன் நாம் அக்குறிக்கோள்களுக்குத் தகுந்தவாறு நடக்கவும், நம்மில் தேவையான மாற்றங்களை ஏற்படுத்திக் கொள்ளவும் முயற்சிக்க வேண்டும். இம்முன்னேற்றத்திற்கு மிக அவசியமான ஊக்கம் பெற்றவர்கள் சிலரே.

வேதாந்த நூல்களையும் அதன் தத்துவங்களையும் அறிவாற்றலோடு கேட்டுப் புரிந்து கொள்ளும் ஆயிரக் கணக்கானவர்களில் வெகு சிலரே வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கையை அமைத்துக் கொள்ள உண்மையாக முயற்சி செய்கிறார்கள். அவ்வாறு முயற்சிக்கும் ஆயிரக் கணக்கானவர்களில் மிகச் சிலரே ''என்னையும் எனது உண்மையான நிலையையும் அறிந்து கொள்கிறார்கள்.''

வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்

---

* அத்தியாயம் *II*- 29 பார்க்க
** சுவாமிஜியின் கதோபனிஷத் உரையைப் பார்க்க *I (ii)7*

கையைப் பற்றி ஒரு சத்குரு கூறுவதை உற்சாகத்துடனும், நேர்மையோடும், முழு கவனத்தோடும் கேட்பது போல் தோன்றும் மாணுக்கன் உண்மை என்னும் கோயிலின் வாயிற் கதவுகளேயே அடைய முடியும். ஆனுல் கர்ப்பக்கிருகத்தை அடைய முடியாதபடி தன்னேத்தானே தடுத்துக் கொள்ளக் கூடும். தன்னே அறியாமல் எழும் தற்பெருமையோ, ஆசையோ ஓரளவு அவனிடமிருப்பினும் அதுவே அவனே அங்கிருந்து வெளியேற்றப் போதுமானது. ஒரு ஒட்டகம் ஊசியின் கண் வழியாக நுழைந்தாலும் நுழைந்து விடலாம். ஆனுல் ஒரு பணக்காரன் சுவர்க்கத்தின் வாயிற் கதவுகளேக் கடந்து உள்ளே செல்வது மிகக் கடினம் என்று ஏசுநாதர் கூறியுள்ளது, இக் கண்ணேட்டத்தில் ஆழ்ந்த கருத்துள்ளதாகும். இவ்விடத்தில் செல்வம் என்று இங்கு குறிக்கப்பட்டது, உலகத்தார் உடைமைகளான செல்வம் அன்று. அது ஒரு மனிதனுடைய மனத்தின் 'வாசனேகள்' என்னும் செல்வமாகும். மனம், முற்றும் துறந்த நிர்வாண நிலேயை அடைந்தாலொழிய சச்சிதானந்தமாகிய பரம்பொருளே அணுக முடியாது.

கிருஷ்ணன் கூறும் கருத்தை மனத்தில் கொண்டு இச் செய்யுளே நோக்கும் பொழுது, நேர்மையாகக் கற்று வேதாந்த இலக்கியத்தை உண்மையாக அறிந்துணர்ந்தவர்கள் மிகச் சிலரே என்பதையும் அவர்களிலும் குறைந்த விகித மக்களே சத்தியமான புனித வாழ்வை வாழ்வதற்கான மனேதிடமும், அறிவின் அகண்ட பார்வையும், எதையும் தாங்கும் பொறுமையையும் தாமே கண்டு கொள்ளக் கூடும். அருச்சுனனும் கீதையின் மற்ற எல்லா மாணுக்கர்களும் இத்தகைய அருமையான ஆத்மாக்களானகையால் அவர்கள் முன்னேறிவரும் வகையைச் சார்ந்தவர்கள் ஆவர். பகவான் கிருஷ்ணன் தனது திவ்வியப் பாடலின் மூலம் ஆராய்ச்சிக்கு உட்படுத்தக் கூடிய வேதாந்த தத்துவங்களேத் தருவதோடு மட்டுமல்லாமல், வாழ்வின் மிக முக்கியமான கணங்களேத் தெளிந்த ஆத்மானுபவத்தோடு நடைமுறையில் ரசிப்பதற்கான சந்தர்ப்பத்தையும் அளிக்கின்றுர்.

இதைச் செவியுற்ற மாணுக்கனேத் தனது பாடத்திற்குச் சரியான முறையில் தயார் செய்து அதனேக் கற்பதற்காக அவனிடம் ஒரு ரசனேயை ஏற்படுத்திய பிறகு பகவான் பின்னும் தொடருகின்றுர்.

பூமிராபோனலோ வாயு: கம் மனே புத்திரேவச
அஹங்கார இதீயம் மே பின்னு ப்ரக்ருதிரஷ்டதா 7:4

என்னுடைய இயற்கை எட்டு வகையாகப் பிரிந்துள்ளது. அவையாவன: நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு, மனம், புத்தி, அகங்காரம் என்பவை.

வேத காலத்தின் உயர்ந்த ஆலோசகர்கள் தமது தத்துவ நுண்ணறிவை, ஜடப் பொருளுக்கும், பரம்பொருளுக்கும் ஏற்படும் பந்தமே வெளியுலகம் என்று விளக்க முயற்சித்தனர். அம் முயற்சி நமக்கு சாங்கியத் தத்துவத்தை வழங்கியது. ஜடப் பொருளை அனைத்து ஆளும் ஆத்மா (புருஷ) அப்பொருளுக்கு சக்தியை அளித்து, உணர்வில்லாத அதற்கு சைதன்யத்தைக் கொடுத்து, அதனை அறிவுத் திறன் உடையதாகவும் உயிருள்ளது போல் செயல்படவும் செய்கிறது என அவர்கள் கருதுகின்றனர். நவீன உலகத்திலிருந்து நாம் ஒரு உதாரணம் எடுத்துக் கொண்டால் இக் கருத்து நன்றாக விளங்கும்.

எஃகும், இரும்பும் சேர்த்து செய்யப்பட்ட ஒரு நீராவி இயந்திரம், அதிக அழுத்தத்துடன் செலுத்தப்படும் நீராவியினால் செயல்படுகிறது. நீராவி மட்டும் தனித்திருக்கும் போது இத் தகைய ஆற்றலையும், ஒரு யந்திரத்தை இயக்கச் செய்யும் தன்மையையும் பெற்றிருக்க முடியாது. ஆனால் அதே நீராவி அதற்குரிய யந்திரத்துள் செலுத்தப்பட்டு அதை செயல்பட வைக்கும்பொழுது வெறும் இரும்பினால் செய்யப்பட்ட அவ்வியந்திரம் செயல் திறன் மிக்கதாக மாற்றப்படுகிறது.

இவ்விதம், அழிவில்லாத பரிபூரண ஆத்மாவானது உயிரற்ற பொருள்களை அனைத்து பலவாகத் தோன்றும் இவ்வுலகமாக தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. என்று வேதாந்தசாரியர்களில் ஒரு வகையினர் விளக்குகின்றனர். ஆத்மாவிற்கும், ஜடப் பொருளுக்கும் உள்ள சம்பந்தத்தையும் இது விவரிக்கிறது. வேதாந்தத்தில் ஜடப் பொருளுக்கு ''புருஷ'' என்ற சொல்லும் தத்துவ ரீதியில் தரப்பட்டு விவரிக்கப்பட்டுள்ளன.

இந்தச் சுலோகத்திலும் இதற்கு அடுத்து வருவதிலும் கிருஷ்ணன் ஜடப் பொருளும் ஆத்மாவும் எவ்வெப் பொருளைப் பெற்று விளங்குகின்றன என்பதைப் பற்றிக் கூறுகிறார். ஒரு மனிதன் ஜடப் பொருளுக்கும் ஆத்மாவுக்கும் உள்ள வித்தியாசத்தை நன்கு உணர்ந்து கொண்டால், ஜடப் பொருளும் ஆத்மாவும் ஒன்றாகக் கலந்த நிலையே, அதன் துன்பங்கள் அனைத்துக்கும் காரணம் என்பதையும், அதை விடுத்துத் தனித்து நிற்கும் ஆத்மாவே தனது உண்மையான முழுத் தன்மையையும் ஆனந்த நிலையையும் திரும்ப அடைகிறது என்பதையும் புரிந்து கொள்வான். ஜடப் பொருளுடன் இணைந்து அதன் சுக, துக்கங்களில் பங்கு கொள்ளும் ஆத்மாவே 'நான்' என்னும் அகங்காரமாகும். இவ்வகங்காரம்தான், பொருளை ஆளும் ஆத்மாவிலிருந்து தான் வேறுபட்டதில்லை என்பதைத் திரும்ப உணர்கிறது.

திவ்விய சக்தியையும் வைபவத்தையும் உடைய ஆத்மாவைப் பற்றிய விளக்கத்தினால் அர்ஜுனனுக்கு

உண்மையை உணரச் செய்வதற்காக பகவான் கிருஷ்ணன் ஜடப் பொருளின் தன்மை, உண்மையான ஆத்மாவிலிருந்து வேறுபடு கிறது என்னும் கருத்தை விளக்க முற்படுகிறுர்.

பஞ்ச பூதங்களும், மனதும், புத்தியும் அகங்காரமும் சேர்ந்த, பிரக்ருதியின் எட்டு அங்கங்களும் அஞ்ஞான உருப் பெற்று சத்தியத்தை மூடி மறைக்கிறது என்று கீதை கருது கின்றது. ஒரு மனிதனிடம் காணப்படும் ஐம்புலன்கள், பஞ்ச பூதங்களின் பிரதிநிதிகளாகப் பிணடத்தில் விளங்குகின்றன. இப்படியாகப் பிரக்ருதியினுடைய பல அங்கங்களையும் பிணைத்து, சூட்சும சரீரமும் அதன் உபகரணங்களாக விளங்கும். ஐம்புலன் களும் ஒன்று சேர்ந்ததே ஆகும். வெளியுலகத்தின் தூண்டுதல் கள், ஐம்புலன் கருவிகளின் வழியாக உள்ளே செல்கின்றன. அப்புலன்கள் உள்ளே குவியும் இடமே 'மனம்' என்று கூறப்படு கிறது. மனத்திடம் சேரும் வெளியுலக உணர்வுகள், நியாயமான முறையில் பகுக்கப்பட்டு, ''ஞானம்'' என்ற பெயருக்கேற்றவாறு வரிசைப்படுத்தப்பட்டு புத்தியை அடைகின்றன. உணருதல், ஏற்றுக் கொள்ளல், அறிவுத் தன்மையாதல் என்ற இம் மூன்று காரியங்கள் நடைபெறும்போதும் தொடர்ந்து இருந்து வருவதே 'தான்' என்ற அகந்தை ஆகும். வாழ்க்கையினுல் உந்தப்படும் இந்த உறுப்புக்களின் மூலமாக மனிதன் அறிவுள்ளவனுக செயல் படுகிறுன்.

இவ்வாறுனுல், எனது உயர்ந்த இயல்பு என்ன என்பதைக் கவனிப்பாயாக—

அபரேய மிதஸ்த்வன்யாம்
பரக்ருதிம் வித்தி மே பராம்
ஜீவபூதாம் மஹாபாஹோ
யயேதம் தார்யதே ஜகத் 7:5

இது என் கீழியற்கை. இதனின்றும் வேறுபட்ட இவ்வுலகம் முழுவதும் தாங்குவதாகிய என் மேலியற்கையைப் பற்றி கூறு கிறேன் கேள்.

மேல் வந்துள்ள செய்யுளில் ஜீவாத்மாவின் இயல்பினை விளக்கிய பிறகு, பகவான் கிருஷ்ணன் இந்த விளக்கமே ஆன்மாவின் முழு இயல்பினையும் விளக்குவதாக ஆகாது என்று கூறுகிறுர். ஆன்மா, வேறுபட்ட கருவிகளோடு கூடியது மட்டு மின்றி, அது தூய, அறிவு மயமான உயர்ந்த இயல்பையும் பெற்றுள்ளது. உண்மையில் ஆன்மாவின் இந்த சைதன்ய

தன்மையே ஜடத்தன்மையான உடல், மனம், புத்தி முதலான வற்றை சைதன்ய தன்மை உடையது போல் இயங்கச் செய் கிறது.

உடல் முதலான கருவிகள், உண்மையில் பரமாத்ம சைதன்யத்துடன் தொடர்பு கொள்வதால்தான் இயங்குகின்றன. இச் சைதன்ய தொடர்பு இல்லையேல் இக் கருவிகள் உயிரற்ற ஜடப்பொருள்களாகவே இருக்கும். இந்த பரமாத்ம சைதன்யம் நம்மில் இல்லையெனில் நம்மால் வெளி உலகையோ அல்லது நம்முள் இயங்கும் உலகையோ அனுபவிக்க முடியாது. இப் பரமாத்ம சைதன்யமே நமக்குள் உள்ள சக்திகளை இயக்குகிறது. போஷிக்கிறது. நிலையுறுத்துகிறது. நமக்குள் இயங்கும் இந்த சைதன்ய பேரொளியுடன் தொடர்பில்லை யெனில் வெறும் ஜடத்தன்மையைக் காட்டிலும் நாம் அதிக அறிவையோ, ஆன்மிக சக்தியையோ பெற்றிருக்க முடியாது.

சாதாரண உலகியல் நோக்கிலும் கூட இந்த செய்யுளில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை தர்க்க ரீதியாக ஒப்புக் கொள்ள லாம். நான் நிற்கும் பொழுது எனக்கு ஆதாரம் என் வீட்டின் தளம்; வீட்டிற்கு ஆதாரமாக நிலப் பகுதி உள்ளது; நிலப் பகுதிக்கு ஆதாரம் மாநிலம்; மாநிலமோ தேசத்தை ஆதார மாகக் கொண்டது. தேசம் உலகை ஆதாரமாகக் கொண்டுள்ளது; உலகிற்கு ஆதாரம் முழுவதும் சூழ்ந்துள்ள கடல், கடலுக்கு ஆதாரம் காற்று மண்டலம்; காற்று மண்டலமோ கிரக மண்டலத்தின் ஒரு பகுதியாகும். கிரக மண்டலம் பிரபஞ்சத்திற்கு உட்பட்டது. பிரபஞ்சம் ஆகாசத்தில் நிலைபெற்றுள்ளது. இந்த ஆகாசமோ நம் மனத்தால் உணரப் படும் அகண்ட வெளித் தத்துவத்தில் நிலைப்பேறு கொண்டுள்ளது. மனம் புத்தியின் விவேகத்தைச் சார்ந்துள்ளது. புத்தியின் விவேகம் நம்முள் உள்ள சைதன்யத்தால் அறிந்து உணரப்படுவதால் பரம்பொருளே உண்மையில் நிலையில்லா, மாறும் தன்மையுடைய உலகம் முழுமைக்கும் அடிப்படை ஆதாரமாக உள்ளது.

தத்துவ ரீதியில் 'ஜகத்' என்பது நம் ஐம்புலன்களால் உணரப்படும் வெளி உலகை மட்டும் குறிக்காது; ஜகத் என்பது, மனத்தாலும், புத்தியாலும் அனுபவிக்கப்பட்டு உணரப்படுகின்ற உள் உலகையும் குறிப்பிடுகிறது.

எனவே காணப்படும் வெளி உலகம், உணர்வுகளால் ஆன உலகம், எண்ணங்களாலான உலகம் இவையனைத்துமே 'ஜகத்' என்று கூறப்படுகிறது. இந்த ஜகத்தானது எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளின் சைதன்யத்தின் அருளால் தாங்கப்படுகிறது. 'எதனுல் அனுபவத்திற்குள்ளாகும் சுகம் முழுவதும் நிலைபெறு

கிறதோ அதுவே சைதன்ய தத்துவமான உயர்ந்த பிரகிருதி' என்று பகவான் கிருஷ்ணர் கூறும் கருத்துக்கள் இந்தக் கண்ணோட்டத்திலும் விஞ்ஞான ரீதியாக உண்மையாகின்றன.

ஆன்மா எவ்வாறு உலகைப் படைத்து, காப்பாற்றி, அழிக்க வல்லதாகிறது என்பதை இனிக் கேள்.

ஏதத் யோனீனி பூதானி ஸர்வாணீத்யுபதாரய
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா 7:6

இந்த இரு இயற்கைகளும் எல்லா உயிர்களையும் தரித்துள்ள கருப்பை என்று அறிவாயாக. நான் இவுலகப் படைப்பிற்கு ஆரம்பமும், முடிவும் ஆகிறேன்.

மேற்கூறப்பட்டவையும், ஒன்றை ஒன்று சார்ந்து இயங்குவதுமான, பிரக்ருதியின் உயர்ந்த இயல்பும், தாழ்ந்த இயல்புமே வெளியில் காணப்படும் உலகின் பல்வேறு தோற்றங்களுக்கு ஆதி காரணமாக உள்ளன. ஜடமான இப் பிரக்ருதி இல்லையெனில் ஆன்மாவின் உள்ளடங்கியுள்ள சைதன்ய தன்மை, தான் வெளிப்பட்டு விளங்குவதற்கு ஒரு வழியையும், இடத்தையும் காண முடியாது. சக்தியைக் கொடுத்து இயக்குவதற்கு ஆன்மா இல்லையேல், ஜடத்தன்மையான பிரக்ருதி தன் ஜடத்தன்மையில் ஒருவிதமான சைதன்ய சார்பினையும் பெற முடியாது; அதனை வெளியிட முடியாது. மின்சாரமானது பல்பினுள் உள்ள சிறு கம்பியின் மூலம் தன்னை வெளிபடுத்தி ஒளியைக் கொடுக்கிறது. பல்பு இல்லாமல் மின்சாரத்தில் உள்ள ஒளியானது தானே வெளிப்பட்டு விளங்காது. அவ்வாறே கண்ணில் பாயும் மின்சாரத்தின் ஓட்டம் இன்றி பல்பும் ஒளிவிட்டுப் பிரகாசிக்காது. மின்சாரம் தன்னை ஒளியாக வெளிப்படுத்திக் கொள்வதற்கு பல்பு என்பது ஒரு கருவியாகிறது. இவ்வாறே ஆன்மாவும் ஜட உலகின் ஐந்து விதமான கோசங்களின் மூலம் செயல்பட முனைகிற போதுதான் அது தன் சக்திகளை வெளிப்படுத்துவதற்காக வேண்டிய ஒரு வழியை, இடத்தை பெறுகிறது.

இந்தக் கருத்தை மனதில் கொண்டுதான் பகவான் கிருஷ்ணன் இங்கே கூறுகிறார்: 'இந்த இரண்டுமே எல்லா பூதங்களின் பிறப்பிடமாகும்.' உண்மையில் இவ்வாறு கூறுவதன் பொருள் பொருள் என்ன என்று தெரிந்து கொள்வதில் அறிவு கூர்மை உடைய மாணவனுக்கு கஷ்டம் ஏதும் இல்லை. காணப்படும் பல்வேறு விதமான உலகம், உணர்வுகள் எண்ணங்கள் ஆகிய யாவும் ஆன்மாவிடமிருந்து தோன்றி நிலை பெறுகின்றன என்பது மட்டுமின்றி அவை அதனிடம் பரத்துவத்தை அடைவதற்காக வேண்டி ஒடுங்கவும் செய்கின்றன. இவ்வாறு அபரத்துவம் (தாழ்ந்த தன்மை; பரத்துவத்தின் கீழியல்பு) என்பது அடிப்

* சுவாமிகளின் ''தியானமும் வாழ்க்கையும்'' என்ற நூலில் காண்க.

படை அமைப்பில் பரத்துவத்தைக் காட்டிலும் வேறன்று. பரம் பொருள், தனக்குரிய தெய்வத் தன்மைய மறந்து, பரமல்லாத தோடு ஒன்றிவிடுகிறது. இவ்வாறு ஒன்றி அகங்காரத்தை மைய மாகக் கொண்டு தோன்றும் துன்பங்களுக்கும், பக்குவமற்ற ஒழுங்கீனங்களுக்கும், முழுமையற்ற தன்மைகளுக்கும் ஆட்படு கிறது. பரம்பாருள் இந்நிலையில் தனது பரமல்லாததான ஒன்றின் மருட்சிகளாலும், தொல்லைகளாலும் துன்புறுவது போல் தோன்றுகிறது. தனது இயல்பான தெய்வ சக்தியை மீண்டும் அடைதலே ஜடப்பொருள்களின் மீட்பு (விடுதலை) என்பதாகும். பரம் அல்லாத ஒன்று பரத்திலிருந்து தோன்றுகிறது என்பதை (களி) மண்ணிலிருந்து பல்வேறு வகைப்பட்ட வடிவங்களையும், நிறங்களையும் கொண்ட பானைகள் உருவாகின்ற செயலோடு பொருத்திக் காணலாம். எல்லாப் பானைகளிலும் மண் ஒன்றே உண்மையாக இருப்பது போன்று, பரமல்லாததால் உருவாக்கப் படும் இந்திரியங்களாலும், பரமல்லாததால் உருவாக்கப்படும் படும் இந்திரியங்களாலும், மனதாலும், புத்தியாலும் உணரப் படும் எல்லாவிதமான நாம ரூபங்களிலும் பரம்பொருள் ஒன்றே அடிப்படை உண்மையாக விளங்குகிறது. எனவேதான்:

மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய
மயிஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ 7:7

என்னைக் காட்டிலும் உயர்ந்த பொருள் வேறெதுவும் இல்லை, தனஞ்சயா! இவை நூலில் கோக்கப்பட்டுள்ள மணிகளைப் போல் என்னில் கோக்கப்பட்டுள்ளன.

மேற்கூறிய தத்துவம் ஏற்றுக் கொள்ளப்பட்டால் வாழ்க்கையை அறிந்து கொள்ள இரண்டு முறைகள் உள்ளன. கீழ்நிலையிலிருந்து காணும் முறை ஒன்று; இதிலிருந்து முற்றிலும் வேறுபட்ட, மேல்நிலையிலிருந்து காணும் முறை ஒன்று.

பானையில் இருக்கும் வடிவமும், வண்ணமும் மண்ணிலே இல்லை. அதைப் போலவே பரம்பொருளில், உருவத்தின் உலகம், உணர்ச்சியின் உலகம், எண்ணத்தின் உலகம் ஆகியவை இல்லை. ''என்னைத்தவிர எதுவும் இல்லை''.

விழித்து எழுந்த ஒருவனுக்கு, அவன் கனவில் கண்டவற்றை நனவில் (விழிப்பில்) காண முடிவதில்லை. கடலிலிருந்து மேலெழும் எண்ணற்ற அலைகளில், கடலைத் தவிர வேறெதுவும் இல்லை. எந்த ஓர் அலைக்கும், எழுவது, அலைவது, முடிவது ஆகிய அனைத்தும் கடலிலேயே நிகழ்கின்றன. சுருங்கச் சொன்னால், எதுவும் தன் இயல்புக்கு முற்றிலும் மாறான நிலையில் எப்போதும் இருக்க முடியாது.

பரம்பொருளைச் சார்ந்ததான, ஜீவாத்மா என்னும் கீழ்நிலைத் தன்மை நம் ஒவ்வொருவரிடமும் உள்ளது என்று முதல் வரி கூறுகிறது, என்றாலும் கீதையைக் கற்கும் சாதகனுக்கு 'என்னிடம் உள்ள பரமாத்மா, பிறரிடமுள்ள பரமாத்மாவிலிருந்து வேறு பட்டிருக்கிறதே' என்னும் சந்தேகம் எழலாம். இந்தக் கருத்தின் விளைவாக, 'உலகத்தில் எத்தனை சரீரங்கள் உள்ளனவோ அத்தனை பரமாத்மாக்கள் உள்ளனர்' என்றும் முடிவு தோன்றக் கூடும்.

எல்லா சரீரங்களிலும் உள்ள பரமாத்மா ஒரே பரமாத்மா தான் என்பதைக் காட்டுவதற்காகவே, இறைவனுடைய படைப்புகள் யாவிலும் உள்ள பொதுத் தன்மை பரமாத்மாவே என்று கூறப்படுகிறது. மாலையிலுள்ள மணிகளையெல்லாம் ஒரு நூல் தாங்கி நிற்பது போல, பரமாத்மா எல்லா ஜீவன்களையும் காத்து நிற்கிறார். இச்செய்யுளின் சொற்கள் ஆழ்ந்த கருத்துடையவை. இவை கவியழகு பெற்றிருப்பதோடு முழுமையான தத்துவமும் பெற்றவை. மணிமாலையிலுள்ள முத்துக்கள் யாவும் ஒரே தரமானவையாகவும் ஒரே வடிவம் கொண்டவையாகவும் உள்ளன. மாலைக்குள் மறைந்து நிற்கும் நூல் ஒவ்வொரு முத்து மணியின் நடுவில் உள்ள வட்டுளையில் சென்று, பெரியவையும் சிறியவையுமான அவற்றுக்கு ஒரு சீரான அழகிய ஆபரணத்துக்குரிய அமைப்பைத் தருகிறது.

முத்துக்களை உருவாக்கிய அடிப்படைப் பொருள் வேறு; நூலை உருவாக்கிய அடிப்படைப் பொருள் வேறு, ஆனால் பரம்பொருளினால் ஒருங்கிணைக்கப்பட்டு, முழுமையைப் பெற்று எண்ணற்ற பெயர்களாலும் வடிவங்களாலும் உருவானதே இந்த உலகம். ஒரு தனி மனிதனை எடுத்துக் கொண்டாலும் சரீரம், மனம், புத்தி ஆகிய வெவ்வேறு வகையான யாவும் ஒருங்கிணைந்து செயல்பட்டு, வாழ்க்கை விளக்கை ஒளிவிடச் செய்கின்றன. ஏனெனில் ஒரே பரம் பொருள்தான் எல்லா வகையான வேறுபட்ட, மாறுபட்ட பொருள்களை இயக்குகிறது.

இச் செய்யுளின் கவிதைத் திறத்தின் மூலம் வேத வியாசர் உலக மகா கவி, ஞானியாகத் திகழ்கிறார் என்பது தெரிகிறது. இது அருமையான கவிதையாகவும் அற்புதமான தத்துவமாகவும் விளங்குகிறது. மேலும்—

ரஸோகமப்ஸு கௌந்தேய
ப்ரபாஸ்மி சசிஸூர்யயோ:

ப்ரணவ: ஸர்வ வேதேஷு
சப்த: கே பௌருஷம் ந்ருஷு 7:8

புண்யோ கந்த: ப்ருதிவ்யாஞ்ச
தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ
ஜீவனம் ஸர்வ பூதேஷு
தபஸ்சாஸ்மி தபஸ்விஷு 7:9

தண்ணீரில் நான் சுவை. குந்தி மகனே! நான் சூரிய, சந்திரனில் ஒளி. வேதங்களில் நான் பிரணவம். வானில் ஒலி. மனிதர்களில் ஆண்மை.

மண்ணில் நறு மணம். நெருப்பில் சுடர். எல்லா உயிர்களிலும் உயிர்த் தத்துவம் நான். தவம் செய்வோரின் தவம் நான்.

இவ்விரண்டு செய்யுள்களிலும் எவ்வாறு 'பரமாத்மா' என்ற நூலில் பல்லாயிரக்கணக்காக உள்ள தனித்தனி ஜடப் பொருள்களை ஒரு மாலையாக அமையுமாறு ஒன்று சேர்த்து கோக்கப்பட்டுள்ளது என்பது விளக்கப்பட்டுள்ளது. என்னுடைய மேலான பிரக்ருதியும், சைதன்யமும்தான் எல்லா உயிரினங்களுக்கும் கருவூலமாகும். ''எனக்கும் மேலாக வேறு எதுவும் கிடையாது,'' என்பது முன்னரே கூறப்பட்டிருக்கிறது. எல்லாவற்றிலும் பொதுவாக உள்ளதாக இருப்பினும், எல்லோரும் சுலபமாக தெரிந்துக் கொள்ள முடியாததான இந்த அழிவில்லாத, நித்தியமான பொருள் என்ன என்பது இங்கு தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

எது ஒரு பொருளில் முதலிலிருந்து கடைசி வரை எப்போதும் இருந்து கொண்டிருக்கிறதோ, எது இல்லாவிட்டால் அந்தப் பொருள் தன் தனித்தன்மையை இழந்து விடுகிறதோ அதுதான் அப்பொருளின் தர்மம்—அதனுடைய இருக்கையின் விதி எனப்படும். தண்ணீரின் நனைக்கும் தன்மை, சூரிய சந்திரர்களில் உள்ள பிரகாசம், வேதங்களில் ஓங்காரம், ஆகாசத்தில் ஒலி, மண்ணின் வாசனை, நெருப்பில் உள்ள ஒளி மனிதனின் ஆண்மை, முனிவர்களின் தவம் முதலிய உதாரணங்கள், பரம்பொருள்தான் ஒவ்வொரு பொருளுக்கும் உள்ள அதன் தனித் தன்மையைக் கொடுக்கிறது என்பதைத் தெளிவாக்குகிறது.

இந்தப் பாடல் கூறுவதைச் சுருங்கச் சொன்னால் பரம்பொருளே எல்லா உயிரினங்களிலும் உள்ள உயிர்த்தன்மை.

நுண்ணறிவற்றவர்களுக்காக இதையே மேலும் விரிவாக விளக்கி பின்வரும் உதாரணங்களைத் தருகிறார்.

பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸனாதனம்
புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்வினாமஹம்
7:10

எல்லா உயிர்களுக்கும் நான் என்றுமுள்ள மூல வித்தாக இருக்கிறேன் என்று தெரிந்துகொள், பார்த்தா. அறிவாளிகளின் அறிவு நான். (பொருள்கள், உயிரினங்கள் ஆகியவற்றின்) சிறப்பிலுள்ள சிறப்பு நான்.

மேற்கூறப்பட்ட விளக்கத்தின் உட்பொருள் பக்குவப்பட்ட மனநிலையும் அறிவுக் கூர்மையும் உடையோர்க்கே நன்கு விளங்கும். எனவே இந்த விளக்கத்தோடு திருப்தி அடையாமல் பகவான் கிருஷ்ணன் இந்த உண்மையை மேலும் தெளிவான உதாரணங்களோடு விளக்க வேண்டியதன் அவசியத்தை உணர் கிருர். அவர் இந்த சுலோகத்தில் ''நான் எல்லா உயிரினங்களுக்கும் பீஜமாக (மூல காரணமாக) உள்ளேன்'' என்று கூறுகிருர். கலைஞன் ஒருவன் தனது ஓவியத்தை அழகுபடுத்த மேலும் மேலும் அதில் நிறங்களைக் கூட்டி தான் வெளியிட விரும்புகின்ற உட்கருத்தைப் பார்ப்பவர் நன்கு விளங்கிக் கொள்ளும்படிச் செய்வது போன்று பகவான் கிருஷ்ணரும் தாம் கூறிய கருத்தினை அழகான நிகழ்ச்சிகளோடு பொருத்திக் கூறுகிருர். தூல வடிவமானதும் கண்ணுல் காண இயல்வதுமான ஜடப்பொருளுக்கும் சூக்ஷ்மமானதும், ஐம்புலன் களுக்கும் எட்டாததுமான பரம்பொருளுக்கும் உள்ள தொடர்பினை நாம் நன்கு அறிந்து கொள்ளவே அவர் மேலும் இரண்டு உதாரணங்களைக் கூறுகிருர்.

''நான் அறிஞரின் அறிவாக இருக்கிறேன்'': அறிவுள்ள ஒருவன் தன் கருத்துக்களிலும், உணர்வுகளிலும் பெருமள விற்குத் தெய்விகத் தன்மையைத் தொடர்ந்து வெளிப்படுத்து கிருன். அந்த அறிவுடையோனிடத்தில் பரமாத்மாவே அறிவுத் தன்மையாக திகழ்கிருர். சூக்ஷ்ம சக்தியாக உள்ள அந்தப் பரம் பொருளாலேயே தனிப்பட்ட ஞானி ஒருவன் இத்துணை அறிவு விளக்கத்தை வெளியிட முடிகிறது. இவ்வாறே பரமாத்மா அழகின் மூலமாகவும் சக்தியின் வாயிலாகவும் தனது சைதன்யத் தன்மையை வெளிப்படுத்துகிருர் என்றும் கூறப்பட்டது.

வேறு விதமாகக் கூறினுல் நம்முள் உள்ள ஞானசக்தியே புத்தியாகிய அருவியின் மூலம் அறிவுள்ள தனி மனிதனுகத் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொள்கிறது. இதற்கு இணையாக நாம் பல்பினுள் உள்ள ஒளியாகவும், வெப்பமூட்டும் கருவியின் வெப்பத் தன்மையாகவும் வானெலிப் பெட்டியில் வரும் இனிய இசையாகவும் மின்சக்தி விளங்குவதைக் கூறலாம்.

கீழ்வரும் பாடலில் மேலும் ஓர் உதாரணம் கொடுக்கப் படுகிறது.

பலம் பலவதாமஸ்மி காமராக விவர்ஜிதம்
தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப 7:11

வேட்கைகளோ, பற்றுதலோ இல்லா வலிவாக நான் வலியோரிடத்திலிருப்பது; தருமத்திற்கு மாறுபடாத ஆவலாக உயிரினங்களில் இருப்பதும் நான்தான், மக்களில் சிறந்தோனே!

இவ்வாறு சாதாரண அறிவுத்தன்மையும், மந்தத் தன்மையும் உடைய சாதகர்க்கு விளங்க வேண்டி உதாரணங்களோடு விளக்கிய பகவான், இச்சுலோகத்தில் இப்படிப்பட்ட தத்துவச் செறிவு வாய்ந்த கருத்துக்களை, சிந்தித்து உணரவல்ல பேரறிவுடைய சாதகர்க்கு, அழியாப் பரம் பொருளைச் சுட்டிக் காட்ட முயல்கிறார்.

'பலசாலியிடம் உள்ள பலம் நானே': இக்கூற்று முன்னே தரப்பட்ட உதாரணத்தைப் போல மிக எளிதானது. இங்கே பலம் என்பதற்குப் பகவான் தரும் அடை மொழிகளினால் இந்தக் கூற்று முன்னே தரப்பட்ட உதாரணங்களைக் காட்டிலும் சிறப்பு உடையதாகிறது. ஒருவன் பொதுவாக பற்று பாசங்களின் தூண்டுதலினால்தான், தன்னுடைய ஆற்றலையும் பலத்தையும் வெளிப்படுத்துகிறான்.

மேற்குறித்த இரண்டு தூண்டுதல்கள் இல்லாவிடில், நம்மால் ஆற்றலையும் பலத்தையும் வெளிப்படுத்த முடியாது. வேத இலக்கிய மாணாக்கர்கள் பொதுவாக காமம், ராகம் (பற்று, பாசம்) ஆகிய இரண்டையும் ஒரு பொருள் கொண்ட இரு சொற்களாகக் கருதுவார். ஆனால் சங்கரர் இவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தைத் தம் விரிவுரையில் மிகக் கவனத்தோடு விளக்கியுள்ளார். தன்னிடம் இல்லாத ஒன்றை விரும்புவதை 'காமம்' என்றும், தன்னிடம் ஏற்கனவே உள்ள ஒன்றிடம் கொண்டுள்ள விருப்பத்தை ராகம் (பற்று) என்றும் கூறுகிறார். இவ்விரு உணர்ச்சிகளினால் தூண்டப்பட்டு, தனி நபர்கள் அல்லது கூட்டம், சமுதாயங்கள் அல்லது நாடு, பொதுவாக தமது ஆற்றலையும், பலத்தையும் வெளிப்படுத்துகிறார்கள். கலகமும், போராட்டங்களும், சண்டைகளும், பெரும் போர்களும், எப்போதும் இவ்விரண்டு ஆபத்தான உணர்வுகளாலேயே தூண்டப்படுகின்றன. பரம்பொருளின் சூக்ஷ்ம விளக்கத்தில், சாதகனின் தியானத்தை ஊக்குவிப்பதற்காக புதுமையான கொள்கையை பகவான் இங்கே தருகிறார். பரம்பொருள் பலசாலிகளின் பலம் என்று கூறுகையில், தான் வேட்கையும், பற்றுதலும் இல்லாத பலம் என்றும் பகவான் கூறுகிறார்.

தன்னுடைய மேற்கூறிய விளக்கம் போதுமானதல்ல என்ற பாணியில் அதைத் தெளிவாக்க மற்றுமொரு உதாரணத்தையும் தருகிறார். ''தர்மத்திற்கு விரோதமற்ற உயிரினங்களிலுள்ள ஆசையே நான்'' என்றும் கூறுகிறார். தர்மம் என்பது—ஒரு

பொருளின் 'இருப்புத் தன்மை' (அடிப்படைக் குணம்) என முன்பே கூறியுள்ளோம். மனிதனின் அடிப்படைத் தன்மை பரம்பொருளின் சைதன்யமே ஆகும். தன்னுடைய தெய்விக இயல்பிற்கு மாறுக இல்லாத அவனுடைய செயல்களும் எண்ணங்களும் கருத்துக்களுமே அவனது தர்மமாகும். தன்னுடைய ஆன்ம வளர்ச்சிக்கு உதவி தன்னுடைய தெய்விக இயல்பை உணரச் செய்யும் எல்லாச் செயல்களும், எண்ணங்களும் அறச் செயல்களாகும் (தர்மம்). தன்னே விலங்கைப்போல், தெய்விகத் தன்மையிலிருந்து விலக்கிக் கீழ்த்தர நிலைக்குத் தள்ளிவிடுகிற அந்தக்கரணத்தினுல் ஊக்கு விக்கப்பட்ட எல்லாச் செயல்களும் தீய செயல்களாகும். (அதர்மம்)

இப்படி 'தர்மம்' என்ற சொல்லுக்குப் பொருள் கொடுத்தால், பாடலில் இரண்டாவது அடி நன்கு விளங்கும்.

எனவே மேன்மையான ஊக்கத்தினுல் ஏற்படும் ஆன்ம வளர்ச்சியை விரும்புபவர்கள், தமது மனத்தின் பலவீனங்களிலிருந்து வீரத்துடன் விடுபடவும், ஆத்ம முன்னேற்றமெனும் ஊக்கத்தை முழுநிறைவாக்கி, ஆன்மாவின் பரிபூரணநிலையை உணரவும் முயலுகின்ற தன்மையான இச் செயல்களே 'தனது தர்மத்திற்கு மாறுபடாத வகையில் ஒருவன் கொள்ளும் ஆசைகள்' எனப்படும். இங்கே இது நுண் சக்தியையே குறிக்கிறது. 'நான் சாதகனல்ல, ஆனல் அவனிடமுள்ள மாற்றமடையாத ஆன்மாவைத் தேடிச் செல்லும் தீவிர ஆர்வமாவேன்' என்று பகவான் கூறுகிருர்.

மேற்கூறிய உதாரணங்களால் ஜடப்பொருள் பரம் பொருளைப் பிடித்துச் சிறையிலிட்டிருக்கிறது என்று கொள்ளலாமா? கட்டுக்கு அடங்கிய ஒன்று கட்டுக்கடங்காததை எப்படிக் கட்டுப்படுத்தும் என்பதை இனி கேட்பாயாக.

யே சைவ ஸாத்விகாபாவா ராஜஸா தாம ஸாஸ்ச யே
மத்த ஏவேதி தான் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி 7:12

ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களினுலுண்டான உயிரினங்களும், பொருள்களும் என்னுலேயே உண்டானவை, நான் அவைகளில் இல்லை, என்னிடத்தில் அவைகளிருக்கின்றன.

பகவான் தான் தேர்ந்தெடுத்துக் கொண்ட 'இவை எல்லாம் நூலில் கோக்கப்பட்டுள்ள முத்துக்கள் போல் உள்ளன' என்று தொடங்கிய கருத்தை இந்தப் பாடலில் முடிக்கிருர்.

உயிரினங்களின் மனத்தையும், புத்தியையும் இயங்கச் செய்யும் பல்வேறு புறத் தூண்டுதல்களே வேதாந்த

இலக்கியத்தில் கூறப்படும் 'மாயை' ஆகும். உயிரினங்களின் இதயத்தில் தோன்றும், பல்வேறு விதமான எண்ணற்ற எண்ணங்களையும், கருத்துக்களையும், நன்கு கவனித்து மூன்று வகை மனநிலைகளின் ஆளுகையில்தான் உணர்வுகளின், எண்ணங்களின், செயல்களின் உறுப்புகள் தத்தம் வேலைகளைச் செய்கின்றன. சூக்ஷ்ம சரீரத்தின் நித்தியமான இம் மூன்று மனநிலைகளின் இயல்புகளையே 'நிஷ்கர்மம் (ஸத்வம்), கர்மம் (ரஜஸ்) அகர்மம் (தமஸ்) என்று சொல்கிறார்கள்.

மேற்கூறிய மூன்று குணங்களின் பொருளை வைத்துக் கொண்டு பார்த்தால், இந்தப் பாடல் எளிதாகப் புரிந்துவிடும்.

மனோ புத்தியின் இம்மூன்று சுய இயல்புகளுக்கு உரித்தாகும் மனநிலைகள் அனைத்துமே ஆன்மாவிலிருந்து எழுந்தவை. முன்பு விளக்கிய கருத்தே இங்கு வேதாந்த பரிபாஷையில் மீண்டும் விளக்கப்பட்டுள்ளது. அழிவில்லாத ஆத்ம சைதன்யமே ஆன்மா எனப்படும் பரம்பொருள். அதன் கீழ் நிலையாகும் ஜடப்பொருளே ஆன்மாவின் வெளித்தோற்றமும் அனுபவமுமாகும். கடலிலிருந்து எல்லா அலைகளும் தோன்றுவதைப் போல, மண்ணிலிருந்து எல்லா மட்பாண்டங்களும் தோன்றுவதைப் போல பொன்னிலிருந்து எல்லாப் பொன் ஆபரணங்களும் தோன்றுவதைப்போல பரம்பொருளிலிருந்து எல்லா ஜடப் பொருள்களும் தோன்றுகின்றன.

இந்தப் பாடல், ஒரு புதிர் போலத் தோன்றும் அருமையான கூற்றுடன் முடிவு பெறுகிறது. எவரையும் கவரும் இத்தகைய சொற் பிரயோகம், இந்து தத்துவ நூலாசிரியர்கள் அறிந்தே பயன்படுத்துவதாகும். ஒரு மாணுக்கன் குருவின் துணையின்றி, தனித்து மேற்கொள்ளும் அறிவாராய்ச்சியினை முன் சொன்ன கூற்றிலே மேற்கொள்ளுமாறு, அக்கூற்று அவனைக் கவர்ந்திழுத்து, 'எனினும் அவைகளில் நான் இல்லை. என்னில் அவைகள் இருக்கின்றன' என்பதன் உண்மையான, சுவை மிகுந்த பொருளைக் காணச் செய்கிறது. பொதுவாக மேற்குறித்த கூற்று பொய்யாகத் திகழ வேண்டும். ஏனெனில், 'அ' என்பது 'இ' என்பதில் இல்லையென்றால், 'இ' என்பதும் 'அ'வில் இருக்க முடியாது. 'நான் அவைகளிலில்லை என்றால் அவை என்னில் இருக்க முடியாது'. இந்தச் சுவையான புதிர், பரம் பொருளுக்கும், ஜடப்பொருளுக்கும் உள்ள தொடர்பு, காரண காரியத் தொடர்புடையதன்று; அது பரம் பொருளின் மேல் படர்ந்து மறைக்கும் ஜடப்பொருளின் செய்கையாகும் என்பதைக் கூறுகிறது. விளக்குக் கம்பத்தைக் கண்டு, பேய் எனச் சந்தேகிக்கும் ஒருவரிடம், 'இந்த விளக்குக் கம்பம் உன் கண்ணுக்குத் தெரிந்த பேய்த் தோற்றம். என்னிடமிருந்து பிறந்தது. அத் தோற்றம் பிறப்பதற்கு அடிப்படை நானே.

விளக்குக் கம்பமாக விளங்கும் நான் பேயில் இல்லை'' என்று கூறலாம். இதைப் போலவே கடலும் கூட, 'அலைகள் என்னிடமிருந்து பிறந்து எழுந்து ஒன்ருய்க் கலக்கலாம். ஆனுல் நான் அலைகளில் இல்லை' என்று முழங்கலாம்.

ஜடப் பொருள் தன் இருப்பிற்காக, பரம்பொருளையே அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், பரம்பொருள் எந்த விதத்திலும் ஜடப்பொருளால் பாதிக்கப்படுவதில்லை என்று பரம் பொருள் இங்கே கூறுகிறது. இதுவே சங்கரரின் கருத்து—ஜடப் பொருளின் அடிப்படைக்காரணமே பரம்பொருள். எனினும் பரம்பொருள் எந்தவிதத்திலும், எப்பொழுதும் இந்த பக்குவ நிலையை அடையாத, துன்பம் நிறைந்த ஜடப்பொருள்களினுல் கட்டுப்படுத்தப்படுவதில்லை, பாதிக்கப்படுவதில்லை, பிணிக்கப் படுவதும் இல்லை.

இந்த உலகம் தன்னுடைய உண்மை நிலையைப் புரிந்து கொள்ளவில்லையே என்று பகவான் கிருஷ்ணர் கீழ்வரும் பாடலில் வருந்துகிருர்.

த்ரிபிர் குணமயைர்ப்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத்
மோஹிதம்—நாபி ஜாஞதி மாமேப்ய: பரமவ்யயம் 7:13

ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களால் உண்டாக்கிய மாறுபட்ட இயல்புகளால் மயங்கிய இவ்வுலகு அதனின்றும் அழியாதொன்ருக இருக்கும் என் பயல்பினை உணர்ந்து கொள்ள வில்லை.

அழிந்து போகக்கூடிய இந்த சாதாரண மனிதர்களின் அறிந்து கொள்ளும் தன்மைக்கு அப்பால், இப்படி ஒரு தெய்விகமான ஒன்று இருக்குமாயின் எப்படி அவர்கள் இந்த மகத்தான உண்மையை முழுவதும் உணராமல் போனுலும், ஓரளவுக்காகவது தெரிந்துகொள்ள முடியாமல் இருக்கிருர்கள்? இந்தக் கேள்விக்கு பதில் இந்தப் பாடலில் கூறப்பட்டிருக்கிறது. 'மூன்று குணங்களின் விகாரங்களினுல் மோகிக்கப்பட்டு' உயிரினங்கள் தங்களுக்குள் இருக்கும் இந்தத் தெய்விகத் தன்மையை அறிய முடியாமல் குருடர்களாகி ஸ்தூலமான உபாதிகளை மட்டுமே தெரிந்து, அறிந்து கொள்ளும் வாழ்க்கையை வாழ்கிருர்கள். மாயையில் ஆழ்ந்தவர்களுக்குக் கம்பம் கூட ஒரு பேய் உருவத்தினுல் மறைக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பேய் உருவத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் வரையில், அந்தக் கம்பத்தின் ஒரு பகுதிகூட அவர்களுடைய புலன்களுக்குத் தெரியாது என்பது நிச்சயம்.

அதே மாதிரி, பரம் பொருளானது மாயையின் உபப் பொருள்களோடு தன்னை ஐக்கியப் படுத்திக்கொண்டு அகந்தை

அல்லது ஜீவன் என்ற பாத்திரத்தை ஏற்று வருகிறது. அந்த ஜீவன் தன்னுடைய வெளியுலக நினைவுகளிலும் வீணன கற்பனைகளிலும் ஆழ்வதால், தன்னைப் பற்றிய உண்மையான நிலையை அறிந்துகொள்ள முடியாமல் இருக்கிறது. நமக்குள் நாமே நம்மோடு விளையாடும் மாயை என்னும் இந்தக் 'கண்ணுமூச்சி' விளையாட்டுத்தான் உலகத்திற்குப் பொதுவான சோகத்திலும் முடிவிலாத மனச் சோர்விலும் இந்த ஜீவன் விளையாடும் ஆச்சரியமான, மர்மமான விளையாட்டாகும்.

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே 7:14

முக்குணங்களால் ஆக்கப்பட்ட என் தெய்விக மாயை கடத்தற்கு அரியது. என்னைச் சரணமென்று அடைத்தவர்களே இந்த மாயையைத் தாண்டக் கூடியவர்கள்.

''என் மாயையால்'' உருவாக்கப்பட்ட மயக்கத்திலிருந்து தானுக விடுபட எந்த ஜீவாத்மாவாலும் முடியாது என்று கிருஷ்ண பரமாத்மா கூறுகிறுர். ஒரு மருத்துவர் ஒரு நோயாளியின் நோயைப் பரிசீலித்து, அந்த நோய்க்கு மருத்துவம் இல்லை என்று கூறினல், அந்த மருந்துவரின் மேல் யாருக்கும் நம்பிக்கை இருக்காது. அதே போல் கிருஷ்ண பரமாத்மா இங்கு உலகத்தின் துயர்களுக்கும், தொல்லைகளுக்கும் காரணம் ''மாயை'' என்று கூறி, அந்த மாயையைக் கடத்தல் மிக அரிது என்று கூறினல் எவரும் இப்பிரபஞ்ச மருத்துவம் கூறுகின்ற நம்பிக்கைக்கே இடமில்லா இத்தத்துவ நெறியை கடைப்பிடிக்க மாட்டார்கள்.

இந்தச் சிக்கலை நன்குணர்ந்த கிருஷ்ண பரமாத்மா, கீதையின் மாணுக்கர்களின் மனத்தில் எழக்கூடிய இம்மாதிரியான தவருன கருத்துக்களை உடனே நீக்குகிறுர். சில சமயங்களில், தீராத நோயின் மோசமான தன்மையை உணர்த்த, நோயாளியிடம் மருத்துவர் கடினமான சொற்களைச் சொல்ல வேண்டிவரும். அதேபோல், இவ்விடத்தில் கிருஷ்ணர், கருணையற்ற, நேர்முகமாக பரம்பொருள் எப்படி மிகத் தீவிரமான மனச் சோகத்தில் ஆழ்ந்தது போல் தோன்றி, ஒரு குறிப்பிட்ட வரையறைகளுக்குப்பட்ட, அழியும் தன்மையுடைய அகங்காரமாக மாறுகின்றது என்பதை விளக்குகிறுர். நோயின் தீவிரத்தைப் பற்றிப் பறை சாற்றிய பின், அந் நோய்க்கான மருந்தினையும் கொடுத்த பகவான் கஷ்டத்தைக் கொடுக்கும் நோயிலிருந்து முழுவதுமாகக் குணமடைய முடியும் என்பதை வலியுறுத்த விரைகிறுர்.

''என்னிடத்தில் மட்டுமே தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்'' கவலைகளும் குறைபாடுகளும் நிறைந்த வெளி

யுலகத்தைத் தனக்குத் தானே உருவாக்கிக் கொள்கின்ற மன மயக்கத்தைக் கடந்து செல்வர். முந்திய அத்தியாயத்தில் தியானத்தின் முறையைப் பற்றி விளக்கும்போதே இதையும் செய்வது எப்படி என்பது விளக்கப்பட்டிருக்கின்றது. ஒரு நிலைப் படுத்தப்பட்ட மனத்தோடு ஆத்மாவை தியானிப்பதே நேர்வழி யாகும். இக்குறுகிய வழியில் செல்வதற்காக மனத்தை ஒரு நிலைப் படுத்தப்படவும் செறிவாக்கவும் வேண்டிய வழிகள் ஏற்கனவே விவாதிக்கப்பட்டுள்ளன.

''பின், நின்னை தியானம் செய்பவர்கள் எல்லோருமே ஏன் நின் உன்னதத் தன்மையை அனுபவிப்பதில்லை?''

நமாம் துஷ்க்ருதினோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:
மாயயாபஹ்ருத ஞானா ஆஸுரம் பாவமாச்ரிதா: 7:15

தீயன செய்பவர், மருட்சியில் ஆழ்ந்தவர்கள், மனிதர்களில் கடைப்பட்டோர் ஆகியவர்கள் என்னைத் தேடுவதில்லை. அவர் களுடைய புத்தி அவர்களுடைய மயக்கத்தால் மூடப்பட்டிருப்ப தால் அவர்கள் அரக்கர்களின் வழியைப் பின்பற்றுகிறார்கள்.

முந்திய பாடல், தன்னைப் பற்றித் தானே கொள்ளும் மருட்சியை வெற்றிகரமாகக் கடப்பவர்களைப் பற்றிக் கூறியது. இவ்விடத்தில் கிருஷ்ணர், மோக மாயையை வெற்றி கொள்ளத் தெரியாமல், தம்மில் உள்ள தெய்வத் தன்மையை உணராமல் உழலும் மனிதர்களிடம் உள்ள வேண்டாத தன்மைகளைப் பற்றி விளக்க முற்படுகிறார். ஒரு மாணாக்கனுக்கு அதிர்ச்சி தரத்தக்க கருத்துக்களை அளித்தாலொழிய, மோகத்தின் உண்மையான அறிகுறிகள், மனத்தின் இயல்புகளும் இச்சைகளுமே என்பதைச் சரியாக அறிந்து கொள்ள முடியாது.

மோகத்தில் மூழ்கி, பாவச் செயல்களில் தங்களை ஈடு படுத்திக்கொண்ட பாமர மக்கள் அரக்கர்களின் வழி நடப்பவர் களாவர். இதனால் அவர்கள் பகுத்தறிவை இழக்கின்றனர். நல்லது, கெட்டது, உயர்ந்தது, தாழ்ந்தது; நேர்மையானது, நேர்மையல்லாதது ஆகியவற்றைப் பகுத்துப் பார்க்கும் துல்லிய மான புத்தியே ஒரு மனிதனில் முன்னேற்றத்தைக் குறிக்கும் அறி குறியாகும். கனவெனும் நிறைவுறா நிலையிலிருந்து வரம்பற்ற தெய்வத் தன்மையே தமது இன்றியமையாத சுபாவம் என்ற நிலைக்கு விழித்துக் கொள்ளச் செய்யும் இந்த சூட்சுமமான கருவி தான் பகுத்துணரும் விழிப்புணர்வு ஆகும்.

புலன்களின் தூண்டுதலால் பாதிக்கப்படாத நெஞ்சில் மட்டுமே இவ்வினைத்திறன் பயன்தரும் முறையில் செயல்படும். ஒரு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகத் தன்னைச் சதைப் பிண்டமெனக் கருதி, தனது திருப்திக்காகப் புலன்களை

மகிழ்விக்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக ''பாவி'' எனக் கருதப்படுகின்றான். இவ்விடத்தில் ''பாவம்'' என்ற சொல் மேம்பட்ட முன்னேற்றத்தினால் பெற்ற நிலைக்கு இழுக்கைத் தரும் செயல் என்று பொருள்படுகின்றது. வெறும் சதைப் பிண்டங்கள் என்ற மோகத்தில் தம்மை ஆழ்த்திக்கொண்டவர் களும், தமது உணர்ச்சிகளைத் திருப்தி செய்ய வேண்டுமென்று இச்சை கொண்ட மனத்தை உடையவர்களும், தமது கருத்துக் களை மட்டுமே வெளியிட்டு உறுதிப்படுத்த நினைக்கும் புத்தியை உடையவர்களும், பாவத்தைப் பெருக்குபவராவர். இத்தகைய மக்கள் 'மோகம் கொண்ட மூடர்கள்,' என்று கீதை கூறுகிறது.

மோகமுற்ற மனிதனின் வாழ்க்கை முறையும், அதற்கு எதி ரான மனிதனின் நல்ல சுபாவங்களும் கீதையின் பின்வரும் பகுதியில் விரிவாக விளக்கப்படுகின்றன.*

சதுர் விதா பஜந்தே மாம்
ஜனா: ஸுக்ருதினோர் ஜுன
ஆர்தோ ஜிஜ்ஞாஸு ரர்த்தார்த்தீ
ஞானீ ச பரதர்ஷப 7:16

பரதரில் சிறந்தவனே. புத்தியில் சிறந்தவர்கள் நான்கு விதங்களில் என்னை வழிபடுகிறார்கள், அர்ஜுனா. கஷ்டப்படுபவர், முறையாக அறிவைத் தேடுவோர், செல்வத்தை நாடுவோ, ஞானிகள் என நால் வகையினர்.

வாழ்க்கைக்கும், ஆற்றலுக்கும் மூலத் தத்துவமாக ஆன்மா விளங்குவதால், ஜடப் பொருள்களில் வெளிப்படையாகத் தெரியும் எல்லாச் செயல்களுமே, உயர்ந்த, சிறந்த தூண்டுதலு டைய பரமாத்மாவினாலேயே வெளிவருகின்றன. இரயில் இயந் திரத்தின் ஒவ்வொரு பகுதியும் வெறும் இரும்பினால் செய்யப்படு கிறது. அத்தகைய இயந்திரம், நிறைந்த பயணிகளுடனும், பொருட்களுடனும் உள்ள பல பெட்டிகளை இழுத்துக்கொண்டு செல்ல வேண்டுமென்றால், அவ்வியந்திரத்திற்கு இரும்பைத் தவிர ஓடுவதற்கான சக்தியை அளிக்கும் வேறு ஒன்றும் இருக்க வேண்டும். அதேபோல், தான் என்னும் அகங்காரம் கொண்டு மருட்சியில் மூழ்கிய மனிதர்கள் தங்களை உடலென்றோ, மன மென்றோ; புத்தியென்றோ கருதி வெளியுலகில் செயல் புரிந்தாலும் தமது ஜடப்பொருள் கருவி மூலமாகவே செயலாற்றலை வெளிப்படுத்துகின்றனர். உண்மை என்னும் அரண்மனைக்கு வெளியே, ஜடப் பொருள் உலகத்தின் புற எல்லையில் வசிப்பவர்கள், தமது இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்வதில் திருப்தியும், ஆனந்தமும் தேடினாலும், அவர்களும் ஆத்ம சக்தி தரும் ஊக்கத்தினால் செயல்படுகின்றனர்.

* கீதை 14வது அத்தியாயம் 3வது சுலோகம்.

ஆயினும் மருட்சியுற்ற அகந்தை, அறியாமையும், துன்பங் களும் நிறைந்த மட்டத்தில் வாழ விரும்பும்போது, கட்டாய மாகத் தமக்குத் தேவையான சக்தியையும், புலனறிவையும் ஆத்மா எனப்படும் பரிசுத்தமான உளச் சான்றிடமிருந்தே பெற வேண்டும். துன்பம் நேர்கையில் ஆறுதல் தேடுபவர்களாகவோ, அல்லது உடலின் தேவைகளுக்கும், மனத்தின் இச்சைகளுக்கும், புத்தியின் கேள்விகளுக்கும் தேவையான திருப்தியைத் தேடுபவர் களாகவோ, அல்லது தமது ஆசைகளைப் பூர்த்தி செய்யவோ உணர்ச்சிகளைத் திருப்தி செய்யவோ கஷ்டப்பட்டு முயலுகின்ற, ஆசைகள் நிறைந்த மனிதர்களாகவோ விளங்கினுலும்கூட, அவர்களுக்கும் செயல்புரியத் தேவையான சக்தியும் திறனும் உணர்வு ஆற்றலும் தேவைப்படுகின்றன. ஆன்மாவினுல் ஊக்கு விக்கப்பட்டு தொடர்பு கொள்ளப்பட்டால்தான், இந்த ஆற்றலைத் தூண்டும் அடிப்படைத் திறன் ஜடப்பொருளை அடைந்து அதனை உயிர்ப்பிக்கும்.

தேவைப்படும் வகையான சக்தியை, குறிப்பிட்ட பாதையில் செலுத்தி செயல்படவைக்கும் வேண்டுதலே வழிபாடு அல்லது பிரார்த்தனை என்று வழங்கப்படுகிறது. உண்மையான எல்லா வழிபாடுகளிலும் அகந்தையானது குறிப்பிட்ட செயல் திட்டத்தில் தோன்றிச் செயல்படுவதற்காக ஆன்மாவை வேண்டிக்கொண்டு, அதனிடம் சரணடைகின்றது. உதாரணத் திற்கு நாம் சுவரிலிருக்கும் மின்சார முனையை எடுத்துக்கொள்ள லாம். மின்விசிறி, வெப்பமளிக்கும் கருவி, குளிர்பதனப் பெட்டி போன்ற சாதனங்களெல்லாம் வெறும் இரும்பு அல்லது எஃகிலாலான கருவிகளாகும். தானுகவே இயங்கும் சக்தி இச் சாதனங்களுக்குக் கிடையாது. இச் சாதனங்களில் மின்சாரம் பாயும்போது மட்டுமே இவை மக்களுக்கு உபயோகமாகின்றன.

சுவரில் விளக்கைப் பொருத்துவதற்கான துளைகளில் மின்விசிறியின் விளக்கை நான் வைத்தால் அச் செயல் மின்விசிறி சுழலுமாறு மின்சாரத்தை வேண்டி அதை அதனில் தொடர்பு படுத்தினுல், நான் எனக்கு தேவையான பயனைப் பெறுகிறேன். குளிர் காலத்தில் நான் மின் விசிறியைச் சுழலச் செய்துவிட்டு, மின்சாரம் எனக்குப் பாதகமாக செயல்படுகிறது என்று கூறக் கூடாது.

அறிவீனமாக, நான் எனது தவருன இயல்புகளினுல் பாதிக்கப்பட்ட மனத்தின் வழியே ஆன்மா செயல்படுமாறு பிரார்த்தித்தால், எனது குறையுள்ள மனத்தின் வழியே செயல் படும் ஆன்மா எனக்குப் பெருந் துன்பங்களையும் மற்றவர் களுக்குத் தொல்லைகளையும் தரும். இந்த வேதாந்தக் கருத்தின் படி, வாழ்வின் உயிர்த் தன்மைக்கு முழுப் பொறுப்பாளியான ஆன்மா இருப்பதால், சுறுசுறுப்புள்ளவனே, கோழையோ,

வீரனோ—யாராக இருந்தாலும் அவன் என்னைப் பிரார்த்தனை (பஜனை) செய்ய வேண்டும்; பரம் பொருளாகிய நான், தனி நபரின் மனத்தின் தரத்திற்கேற்ப மேற்சொன்ன குணங்களைப் பெற்றவனாய்ச் செயல்படுவேன். ஒவ்வொரு தனி மனிதனும், புத்தியால், மனத்தால், உடலால் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் முன், அறிந்தோ அறியாமலோ, என்னைப் பிரார்த்திக்க வேண்டும்.

இப்படி, எல்லோரும் தம்மையே வெளிப்படுத்திக் கொள்ளும்போதோ அல்லது தமது எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் நிறைவேற்றும் போதோ ஆத்மாவிடம் பிரார்த்தித்தால், அவரனைவருமே பரம்பெருளின் தர்மம் நிறைந்த புனிதமான பக்தர்கள் ஆவர். இவ்விடத்தில் ஆத்மாவாகிய கிருஷ்ண பகவான் எண்ணற்ற பிரார்த்தனைகளுடன் தன்னை வந்தடையும் மனிதர்களை எப்படி நான்கு வகைகளாகப் பிரிக்கலாம் என்பதை விளக்குகின்றார்.

1. வாழ்க்கையில் கஷ்டப்படுகிறவர்கள் (ஆர்ந்தர்கள்) தம்முள் இருந்துகொண்டு தம்மையே பயமுறுத்தும் வேதனையை எதிர்த்துப் போராடுவதற்காகவும், அதனின்று முழுமையாக விடுபடுவதற்காகவும் தம்மில் உள்ள உயிர்ச் சக்தியை உபயோகித்துக் கொள்ளுகிறார்கள். இவர்கள் அதிபதியான என்னை நோக்கி வருகிறார்கள்.

2. அறிவு நாட்ட ஆர்வத்தினால் உந்தப்பட்டு என்னுடைய தன்மையைப் பற்றிக் கற்றறிந்து புரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் (ஜிக்ஞாசு) பரம்பொருளின் முடிவில்லாத அருளை நாடுகின்றனர்.

3. எல்லா மனிதர்களும் ஆசைகளால் தூண்டப்பட்டு தமது வாழ்நாள் முழுவதையும் ஏதாவது ஒரு வகையில், தவிர்க்க முடியாமல், செயலாற்றித் தமது சக்தியையெல்லாம் செலவழித்து விடுகின்றனர். ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்ற ஊக்கத்தினால் இவ்வுலகத்தில் வாழும் ஒவ்வொரு மனிதனும் இடையறாது செயல்படுகிறான். (அர்த்தார்த்தி).

4. எதையும் எதிர்பார்க்காமல், எதையுமே கேட்காமல் தம்மையே அர்ப்பணிப்பதற்காக ஆன்ம கோயிலின் கர்ப்பக் கிருகத்தை நோக்கிச் செல்பவர்கள் மிகச் சிலரே. அன்பினால் ஊக்குவிக்கப்பட்டு முழுவதுமாகச் சரணடைபவர்கள் தம்மையே அர்ப்பணப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர் ஞானிகள். பரம்பொருளை நாடும் நான்காவது; வகையினர். ஞானிகள் ஆவர். மெய்ப் பொருளிடமிருந்து தாங்கள் பிரிந்து நிற்கும் உணர்வைப் போக்கி, கடவுள் தங்களை அரவணைத்து அருள வேண்டுமென்ற

இதயத்துடிப்பு ஒன்றே அவர்களிடமிருக்கிறது. இந்த நான்கு வகையிலும் சிறந்தவர் யார்?

தேஷாம் ஞானீ நித்யயுக்த ஏக பக்திர்விசிஷ்யதே
ப்ரியோ ஹி ஞானினோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:
7:17

இவர்களில் ஞானி சிறந்தவன். அவனுக்கு நான் மிகமிகப் பிரியமானவன், எனக்கு அவன் மிகவும் வேண்டியவன்.

மேற்கூறப்பட்ட நான்கு வகையான சாதகர்களின் தன்மைகளுக்கு இடையே உள்ள ஒற்றுமைகளையும், மாறுபாடுகளையும் அறிந்த பகவான் இந்த சாதகர்களுக்குள் ஞானியே தலை சிறந்தவன் எனத் தெளிவுபடுத்துகிறார். ஒருமுகமான மனத்தோடு பரம்பொருளிடம் உறுதியுடன் சரண் புகும் ஞானியின் உள்ளத்தில் முழுமையான ஈடுபாடு மட்டுமே நிறைந்துள்ளது. அது வேறுவிதமான பற்றுதல்களால் மாசுபடுத்தப்படாதது. எனவே சாதகர்களுக்குள் ஞானியே சிறந்தவனாகிறான். தியானிப்பவரின் இலட்சியம் நிலைத்து, உறுதி பெற்ற பொழுதே ஒருமுகமான மனநிலை உண்டாகிறது. ஒருவர் தமது உண்மை இயல்பாகிய ஆன்மாவுடன் ஒன்றுபட வேண்டுமென்ற உறுதியான, முழுமையான, இடையறா ஆன்ம வேட்கையையே 'ஒரு முக வழிபாடு' என்று கூறுகிறோம்.

இந்த ஏகாக்ர (ஒரு நிலைப்பட்ட) பக்தி என்பது ஒருவன் தன் கீழ்த்தரமான மற்றைய புறப்பற்றுகளினின்று முழுமையாக விடுபடும்போதுதான் ஏற்படுகிறது. ஞானியைப் பொறுத்த வரையில், ஆன்மிக வேட்கை என்பது மற்றைய சித்திகளைப் பெறுவதற்காக எழுவதில்லை. அவனது ஆன்மிக சித்திக்கு வடிகால்களாக உள்ளனவற்றையே—ஆன்ம இயற்கையை அழிக்க வல்லனவற்றையே ஒடுக்குவதற்காகத்தான் ஞானி பரம் பொருளை ஏகாக்ர சித்தத்தோடு நாடுகிறான். எனவே, இயல்பாகவே பகவத் கீதை, 'உண்மையின் அன்பைத் தமது தனிப்பட்ட தேவைகளோடும், ஆசைகளோடும் அடைந்து தமது ஆன்மாவிலேயே முடிவாக மூழ்கிக் களிக்கும் ஞானியரே மாந்தரில் உயர்ந்தவர் என்றும் சிறந்தவர்' என்று முழங்குகிறது.

உண்மையான ஞானியர்க்கு 'நான் மிகவும் நெருங்கியவனாக உள்ளேன்'. அன்பு செய்வோர், அன்பு செய்யப்படுவோர் என்பவர்க்கிடையே உள்ள ஐக்கியத்தைக் கொண்டே அன்பின் ஆழம் அளக்கப்படுகிறது. தன்னை முழுதும் அர்ப்பணித்தல் என்ற பண்ணில்தான் அன்புக் கீதம் இசைக்கப்படுகிறது. தன்னலமற்ற தன்மை அன்புக் கீதம் இசைக்க ஆதார சுருதியாக உள்ளது. கைம்மாறு எதையும் கருதாது எல்லாக் காலங்களிலும், எல்லாச்

சூழ்நிலைகளிலும் வழங்குதல் என்பதையே அன்பு என்று கருதுகிறது. உண்மையான அன்பின் தன்மையை இவ்வாறு உணர்ந்து கொண்டு பரமாத்மாவைக் குறித்து ஞானியின் மனநிலையை ஒருவர் உணர முற்படும்போதுதான் ஞானி மட்டுமே முழுமையாகவும் ஈடுபாட்டுடனும் அன்பு செலுத்த முடியும் என்பது உண்மையாக விளங்கும்.

ஒருதலைப்பட்ட அன்பு ஒருபோதும் நிறைவு பெற்றதாகாது. மனிதன் தனக்குள்ளேயே உள்ள ஆன்மிக சக்தியைத்தான் விவேக ஞானத்தால் அணுக முடியும். அவ்வாறு அணுகும் பரம் பொருளிடம் தன் அனைத்துவிதமான ஆசைகளோடும், அன்போடும் சரண்புக முடியும். ஆனால் அவனது அன்பிற்குப் பிரதியாகப் பரம்பொருளின் அன்பு என்பது ஏற்படாவிட்டால் அந்த அன்பு தனது உருவத்தையே நீரில் பார்த்துக் காதல் கொண்டு ஏமாந்த கிரேக்கச் சிறுவனது கதையைப் போல் துயரமாக முடியும். இங்கே, கிருஷ்ணன் 'ஞானி எனக்கு மிகவும் நெருக்கமாக உள்ளான்' என்று கூறும்பொழுது, ஒரு பெரிய மனோதத்துவ ரீதியான உண்மையும் வெளிப்படுத்தப்படுகிறது. அன்பு என்பது தனது நிறைவைக் கொடுப்பதோடு மட்டுமின்றி தனது அமைதியான தூண்டுதலாலும், ஆச்சரியமான இயல்புகளாலும் அற்புதமானவற்றைப் புனிதப்படுத்தவும் செய்கிறது என்பது நிலையான விதியாகும்.

விஞ்ஞானக் கண்ணோடு பார்க்கும்போது துயரம், வெறுப்பு, பொறாமை, அன்பு, பரிவு போன்ற ஏதோ ஒரு உணர்ச்சியினால் நிறைந்திருக்கும்போது மனமானது தன்னை அணுகும் இதயத்தில் பரிவிரக்கத்தின் அலைகளை உண்டாக்குகிறது என்பது தெரிய வரும். மனத்தில் வெறுப்பு நிறைந்த மனிதன் ஒருவன், நம்மை நோக்கி வரும்போது, அவன் நம் இதயத்தை இயக்கி அதை வெறுப்பு நிறைந்ததாகச் செய்ய முடியும். அதேபோல் ஆசையினாலும் தன்னலத்தினாலும் ஊக்குவிக்கப்படாமல், புனிதமான, உண்மையான அன்பு தேவையான அளவில் செலுத்தப்பட்டால், தமது மனத்தில் பகைமையைக் கொண்ட வெறுக்கத்தக்க பகைவர்கள் கூட நம்மிடத்தில் அன்பு காட்ட முடியும் என்பது உறுதி. உண்மையின் எல்லா வகையான பொருள்களும், தன்னலமின்றி, புனிதமான ஏக பக்தியுடன் தியானிப்பவனால் எல்லையற்ற பரம்பொருளும், முடிவில்லாத உண்மையும் கவரப்படுகின்றன என்று கீதையின் விளக்கத்திலே மிகத் தெளிவாக அறிவிக்கப்படுகின்றது.

அப்படி என்றால் ஞானிகளைத் தவிர முற்கூறிய, மற்ற மூவகையினர்களும் வாசுதேவனுக்குப் பிரியமானவர்கள் இல்லையா? விளக்கம் தொடர்கிறது.

உதாரா: ஸர்வ ஏவைதே ஞானீ த்வாத்மைவ மே மதம்
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம்
7:18

அவர்களெல்லாரும் நல்லவர்களே. ஆனாலும் ஞானியை நான் யானாகவே மதிக்கிறேன். உறுதியான மனத்துடன் அவன் என்னையே லட்சியமாகக் கொண்டு நிலைத்திருக்கிறான்.

பரந்த உள்ளத்தோடு கிருஷ்ண பரமாத்மா இவ்விடத்தில் தாங்களறிந்த வழியிலேயே தங்களுக்கு வேண்டிய ஆற்றலை எல்லையற்ற பரம் பொருளிடமிருந்து மட்டுமே பெற்று, அறிவாற்றலோடு விழைந்து, அயராது முயன்று வாழும் எல்லா உயிர்களும், பரம் பொருளின் ஆசியைப் பெறுகின்றன என்பதை அறிவிக்கின்றார். ஒரு சிலர் தமது. அவலம் மங்கி மடிவதற்கும், ஆசைகள் நிறைவேறவும், சாசுவதமான ஆன்ம வலியை இறைஞ்சினாலும், ஏதோ ஒரு காரணத்திற்காக பரமாத்மாவையே அணுகுகிறார்கள். எனவே அவர்கள் ஜடப் பொருள்களைக் காட்டிலும் மிகுந்த தெய்விகத்தை உடையவர்களே. இருப்பினும் அவர்களை ஞானிகளோடு ஒப்பிட்டும் வேறுபடுத்தியும் நோக்கும்போது 'ஞானியை என்னுடைய ஆத்மாவாகவே கருதுகின்றேன்' என்று பகவான் கூறுகிறார்.

ஒருவன் அமைச்சரோடு நட்பு கொள்வதற்கும் தாமே அமைச்சராவதற்கும் இடையே மிகுந்த வித்தியாசம் உண்டு என்பது யாவரும் அறிந்ததே. அமைச்சரின் நட்பு சமூகத்தில் ஓரளவுக்கு செல்வாக்கையும் அதிகாரத்தையும் தரும் என்பது உண்மையே. ஆனால் ஒரு மனிதன் தானே அமைச்சராகும்போது எல்லாப் புகழும் அதிகாரமும் அவனையே சென்று அடைகின்றன. அதே போல ஆன்ம வலியை இறைஞ்சி வழிபடுவது நிச்சயமாக தெய்விகச் செயல்தான். ஆனால் ஞானியோ பரம்பொருளோடு இரண்டறக் கலந்த உள்ளத்தோடு தனது காதலையும் வெளிப்படுத்துவதால், தனது மனத்தையும், புத்தியையும் வெற்றிகரமாகக் கடந்து சென்று தனது 'அகந்தை'யானது ஆத்மாவைத் தவிர வேறெதுவும் இல்லை என்பதை உணர்ந்து கொள்கிறான். எனவே அதனுடன் ஒன்றுகிறான்.

இப்படிப்பட்ட ஞானி பிறகு எக்காலத்திலும் பரம் பொருளோடு இரண்டறக் கலந்த தெய்வ நிலையிலேயே இருக்கிறான். ஞானியின் நிலைக்குத் தனது விருப்பத்தை சிறிது அதிகமாகவே வெளிப்படுத்துவது தன் சொந்த அபிப்பிராயமாகும் என்று கிருஷ்ணன் கூறுகிறார்.

பஹூனாம் ஜன்மனாமந்தே ஞானவான்மாம் ப்ரபத்யதே
வாஸுதேவ: ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப: 7:19

பல பிறவிகள் எடுத்தபின் ஞானியானவன் இறுதியில் எல்லாம் வாசுதேவனே எனக் கருதி என்னைச் சரணடைகிறான். அவ்வித மஹாத்மா கிடைத்தற்கரியவன்.

இப்படிப்பட்ட தூய ஞானிகள் உலக சரித்திரத்தில் மிகச் சிலரே என்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இந்து மதம் சீர்க்கெட்டிருந்த அக்காலத்தில் அவநம்பிக்கை தரும் இக்கருத்து நிலவி வந்ததென்று நமக்குத் தெரியும்* சற்று சிந்தித்தால் அவ்வாறு அவர்கள் மிகைப்படுத்தியதில் உள்ள தவறு நமக்குத் தெரியும். உலகத்திலுள்ள உயிருள்ள வர்க்கங்களுக்குள் மனிதகுலம் முழுவதுமே ஒரு மிகக் குறைந்த சிறிய பகுதியாகும். மனித குலத்திலும் சரியான சிந்தனையும், தெய்வ உணர்வும் எல்லோரிடத்திலும் முழுமையாக வளரவில்லை.

மனம், புத்தி ஆகிய இரண்டின் ஆற்றலை முழுமையாக வளர்த்துக் கொண்டவர்களில் கூட வெகு சிலரே சாத்திரங்களைக் கற்க தீவிர முயற்சி மேற்கொள்கின்றனர். சாத்திரங்களைக் கற்பவர்களெல்லாம் அதன்படி நடப்பதில்லை. அவ்வாறு கற்றவர்களும் வாழ்க்கையில் அவற்றைக் கடைப்பிடிப்பதில்லை. எனவே அரியதொரு சிலரே தமது குறிக்கோளான முன்னேற்றத்தையும், பரிபூர்ணமான பரம்பொருளின் தெய்விகத் தன்மையையும் உணருவர் என்பது தெரியவருகிறது.

தற்காலத்தில் டார்வின் முதலியவர்களைப் போல, பண்டைய முனிவர்களும் தமது காலத்திலேயே, முழுமை அடையாத பொருட்கள், காலமெனும் வெள்ளத்தில், பலவித சூழ்நிலைகளால் தேய்ந்து மெருகேற்றப்பட்டபின் சிறந்த உருவத்தையும், அழகையும் பெறுவதால் முன்னேற்றம் ஏற்படுகிறது என்பதைக் கண்டறிந்தனர். ஒரு நுண்ணுயிர், குறிப்பிட்ட ஒரு உருவாக்கத்திலிருந்து உயர்ந்த மற்றொரு வகை உயிரினமாக முன்னேறுவதற்குப் பல பல கோடி வருடங்கள் ஆகின்றன. அதே போல் பகுத்தறிவுப் பெற்ற சூக்ஷ்மமான திறமையையுடைய ஓருயிர் தனது அஞ்ஞானத்தை அழித்து, ஞானமென்னும் முழுமை உலகை அடைவதற்கு பல்வேறு விதங்களில் கணக்கிட முடியாத பிறவிகளை எடுக்க வேண்டியதாகிறது.

இப்படி கூறியுள்ளதால் நம்மில் எவருமே கஷ்டப்பட்டு முயற்சித்தபின் இப்பிறவியிலேயே நமது வாழ்வின் குறிக்கோளை அடைய முடியாது என்பதல்ல. கீதையில் பகவான் நம்பிக் கையைக் கைவிட்டு, மனக் கசப்புடன் இதைக் கூறவில்லை. மாறாக, உயர்ந்த வாழ்விற்காக எடுத்துக் கொள்ளப்படும் உண்மையான முயற்சியின் முக்கியத்துவத்தை சீடனுக்கு உணர்த்தவே இவ்விதம் கூறியுள்ளார். சாதகன் தற்போதைய

* அத்தியாயம் 6, செய்யுள் 45 பார்க்க.

வாழ்வில் அதிருப்தியைக் காண்பதும், உபநிடத கதைகளின் சூக்குமமான கருத்துக்களை ஆமோதித்து அறிந்து கொள்ளும் புத்தி கூர்மையைப் பெற்று விளங்குவதும், அச் சாதகன் ஆன்மக் கோயிலின் வாயிலை அடைந்து விட்டதைக் குறிக்கின்றன. இன்னும் சிறிது உண்மையான, ஒருமுகப் பயிற்சி அவனை முன்னேற்றத்தின் மிக உயர்ந்த நிலைக்குக் கொண்டு சென்றுவிடும். இப்பொழுது, மக்கள் 'பரமாத்மா அல்லது வாசுதேவன்தான் எல்லாம் என்பதை ஏன் புரிந்துகொள்ளாமல் இருக்கிறார்கள்?' என்பது அடுத்து விளக்கப்படுகிறது.

காமைஸ் தைஸ்தைர் ஹ்ருத ஞானா:
ப்ரபத்யந் தேன்ய தேவதா:
தம்தம் நியமமாஸ்த்தாய
ப்ரக்ருத்யா நியதா ஸ்வயா. 7:20

எவனுடைய அறிவு ஆசையினால் கவரப்பட்டுள்ளதோ, அவன் அவ்வாசையின் தூண்டுதலால் வெவ்வேறு சடங்குகளின் மூலம் தனது இயல்புக்கேற்ப மற்றைத் தெய்வங்களை வழிபடுகிறான்.

மனித புத்தியின் பகுத்தறிவு ஆற்றல்களைச் சூழ்ந்து கொள்பவை உலகப் பொருள்களின் மீது கொள்ளும் புலனாசையும், அவ்வாசையைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு ஒருவன் செய்யும் செயல்களுமே ஆகும். சக்தியும், உறுதியும் வாய்ந்த பகுத்தறிவுள்ள ஒரு மனிதன் தனது ஆத்மாவை அறிந்து கொள்ளாமல் இருக்க முடியாது.

முன்னர், எந்த தேவதையின் திருப்திக்காக நாம் வேள்வி செய்கிறோமோ, அத் தேவதை, உற்பத்தியை அளிக்கும் ஒரு குறிப்பிட்ட செயல்துறையின் உட்பொதிந்த ஆற்றலே ஆகும் என்பது கூறப்பட்டது. இப்பொருளில் இந்தப் பாடலைக்காணும்போது இங்கு குறிப்பிடப்படும் தேவதை, ஆசைகளினால் தாக்கப்பட்ட மனிதன் அவ்வாசைகளை முழுவதுமாகத் தீர்த்துக்கொள்வதற்காகச் செயல்படும்போது புலன்களுக்கான உலகிலிருந்து அவனுக்குக் கிடைக்கும் புலனின்பத்தையே குறிக்கின்றது.

ஆசைகள் ஊற்றுகளாக ஊறி எழுந்து எண்ணங்களைக் கிளர்ந்தெழச் செய்து, மனத்தை வெள்ளக்காடாக்கி உண்மை அதில் பிரதிபலிக்க முடியாமல் செய்து விடுகின்றன. மனம் இப்படி பாதிக்கப்படும்போது புத்தியின் பகுத்தறிவுத் திறன் மங்கி விடுகின்றது. இதனால் மனிதன் பேருண்மையையும், அது அல்லாத மற்றவைகளையும் பாகுபடுத்திப் பார்க்கின்ற திறமையை இழக்கின்றான். மனித புத்தி என்னும் ஒளி, ஆசை என்னும் நீராவியினால் மூடி மறைக்கப்படும்போது, புறம்பாக

நினைக்கும் தன்மை, பொய்யான ஈடுபாடுகள் ஆகிய ஆந்தைகள் மனமென்னும் காட்டிலே அலற அல்லது கூப்பாடுபோட ஆரம் பித்துவிடுகின்றன.

மனத்தில் ஆசைகள் தோன்றுவது மட்டுமே ஒரு மனிதனு டைய வீழ்ச்சிக்குக் காரணமாகாது. எந்த மனிதனும், தன் மனதில் எழுகின்ற ஆசைகளின் தவிர்க்க முடியாத அழகை எதிர்க்க முடியாது. ஆனல் அவன் அவ் வாசைகளுடன் ஒன்று பட்டு இயங்கத் தொடங்கும்போது, அவனுள் எழும் எண்ணங்கள் அவ்வாசைகளாலேயே ஆளப்படுகின்றன. எப் போது ஒருவன் தனது ஆசைகளுடன் ஒன்றிவிடுகிருனே அப் போது அவன் தன்னுள் பொங்கிவரும் எண்ணங்களுக்குத் தன்னை அறியாமலே கட்டுப்பாடில்லாத சக்தியை வழங்கி விடுகிருன்.

எண்ணங்கள் வெறும் ஜடப்பொருள்கள்தான். ஏனென்ருல் அவை உட்கொள்ளப்படும் உணவின் சூக்குமமான தன்மைகளைக் கொண்டு விளங்கும் உற்பத்திப் பொருட்களாகும். மனிதன் தனது ஆசைகளுக்குக் கொடுக்கும் உற்சாகமான வரவேற் பானது, ஆத்மாவிடமிருந்து சக்தியையும், தீவிரத்தையும் பெற்றுக்கொண்ட ஜடமான எண்ண அலைகளை வேகத்துடனும், பயந்துடனும் பாயச் செய்கிறது. எண்ணங்களின் உந்துதலே காரியத்தின் நன்மையை நிர்ணயிக்கிறது. செயல் களத்தில் இறங்கிவிட்ட ஒருவன், அச் சமயத்தில் தான் செய்யப் போகும் செயல் தனக்கு நிரந்தரமான திருப்தியை அளிக்குமா என்பதைப் பகுத்தறிந்து தெரிந்து கொள்வதற்கான நிலையில் இல்லை. அப்போதைக்காவது திருப்தியடைய வேண்டும் என்ற தனது யோசனையின் போதைக்கு உட்பட்டு 'உற்பத்தியை அளிக்கும் ஒரு குறிப்பிட்ட செயல் துறையின் உட்பொதிந்த ஆற்றலை' (தேவதையை) தொழுது வேண்டுவதற்காகவும், திருப்திப் படுத்துவதற்காகவும் மிகவும் கஷ்டப்பட்டு, தீவிர முயற்சி எடுத்துக் கொள்கிருன்.

இப்படி, ஒரு குறிப்பிட்ட செயல் துறையின் தேவதையைச் சரியான, முறையான பாணியில் வணங்குதல், ஒரு மனிதனுக்கு அவசியமாகிறது.

ஆத்மாவை, ''வாசுதேவனே இவையெல்லாம்'' என்ற கண்ணேட்டத்தோடு பார்த்துப் புரிந்து கொள்வதற்கு முயற்சிக்காமல், அதை மட்டும் விட்டு விட்டு, வெவ்வேறு மனிதர் கள் வெவ்வேறு முறைகளில் கஷ்டப்படுவதற்குக் காரணமென்ன என்பது சுலோகத்தின் இரண்டாவது வரியில் விவரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு மனிதனும் நிலையில்லாத மயக்கங்களைத் தரும் மாறுபட்ட களங்களிலே முன்னமேயே செயல்களி

லிருந்தும் எண்ணங்களிலிருந்தும் சேகரிக்கப்பட்ட மனக் கருத்துக்களின் தூண்டுதல் மூலம் தன்னையும் மீறி செயல் படுகிறான். 'படைப்பவனே ஒருவன் நல்லவனாகவோ, தீயவனாகவோ திகழ்வதற்கான கருத்துகளை ஒவ்வொருவரிலும் படைத்து விடுகிறான்' என்னும் எண்ணம், தோல்வி மனப் பான்மையும் தளர்ச்சியும் செயல் திறனும் இல்லாத மனிதரு டைய தத்துவமாகும். அறிவு முதிர்ச்சி பெற்ற செயல் வீரர் களுக்கு மற்றவர்களுடைய இயல்பும், அவர் நடவடிக்கைகளின் இரகசியங்களும் நன்றாகத் தெரிகிறது. அதனால் ஒவ்வொருவனும் தனது முந்தைய செயல்களினால் தனக்குத் தானே நிர்ணயித்துக் கொண்ட திட்டப்படி செயல்புரிகின்றான் என்ற தைரியமான முடிவுக்கு வருகின்றனர்.

சுருங்கக் கூறினால், மதி மயங்கிய மனிதர்கள், கானல் நீரைப் போன்றதான புலளின்பத்தை நாடி, அதன் மூலம் பயனும், முடிவிலாத திருப்தியும் அடைய வேண்டுமென்று வீணாகக் கஷ்டப்படுகின்றனர். மற்றொரு வகையினர், புலனின் பத்திற்காக அலைவதில் சூனியத்தையும், மனிதனின் பொன்னான நேரம் வீணாக்கப்படுவதையும், தமது சூக்குமமான பகுத்தறி வினால் அறிந்து கொள்கின்றனர். இந்த இரண்டாவது வகை யினர் இறுதியில் வீணாகிவிடும் செயல் களத்திலிருந்து நீங்கி, நம் பிக்கையுடன் பரம்பொருளிடம் இட்டுச் செல்லும் நல்வழியை நாடுகின்றனர்.

'அப்படியென்றால், நம் ஒவ்வொருவருக்கும் காப்பு தேவதை யாக விளங்கும் ஆத்மாவின் செயல் என்ன?'

யோ யோ யாம் யாம் தனும் பக்த:
ச்ரத்தயார்ச்சிது மிச்சதி
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம்
தாமேவ வித்தாம் யஹம் 7:21

யார், யார் எந்தெந்த வடிவத்தில் என்னை சிரத்தையுடன் வழிபட விரும்புகிறார்களோ, அந்தந்த தளரா நம்பிக்கையை நான் பலப்படுத்துகிறேன்.

ஆன்மா, ஆன்மா அல்லாதது இவ்விரண்டையும் இந்த அத்தியாயத் தொடக்கத்தில் பாகுபடுத்திக் கூறப்பட்டது. பல்வேறு நாம ரூபங்களில் திகழுகின்ற இறைத் தத்துவங்களை எல்லாம் ஒருங்கிணைத்து நிற்கும் பேருண்மையே கிருஷ்ணன் என்றும் அங்கு தெளிவாக்கப்பட்டது. ஒவ்வொருவரிடமும் மூன்று இயல்புகள் (குணங்கள்) கலந்திருக்கின்றன அல்லவா? தம்முள் இருக்கும் இறைவனை ஒருவர் தெரிந்துக்கொள்ள முடியாதபடி 'தெய்விக மருட்சி' காட்டி ஏமாற்றுவது, அவரிட

முள்ள இந்த முக்குணங்களுமே. உடல் மனம், அறிவு போன்ற கருவிகள் ஆன்மாவை சுற்றி, சுவரெழுப்பியதைப் போல் மூடியிருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் அப்படி மூடியிருப்பவைகளுக்கு இயக்கம் அளிப்பதும் இறைப் பொருளாகிய ஆன்மாவேதான்.

எல்லோரும் ஒரே உருவத்தில் இறைவனை வணங்குவதில்லை என்பது தெரிந்ததே. அவரவர்களுக்கு விருப்பமான உருவங்களில் வணங்குகிறார்கள். கோயில்களிலும், மசூதிகளிலும், குடிசை களிலும், குகைகளிலும்—அங்கிங்கெனாதபடி எங்கும் சிரத்தை யுடன் வழிபடுவார்கள். யாராயிருந்தாலும், அவர்களுடைய சிரத்தையை 'நான்' கலங்கா உறுதி பெறச் செய்கிறேன்' என்று கிருஷ்ணர் கூறுகிறார். கீதையின் கருத்தை உண்மையாகப் பின் பற்றுபவர்களுக்கு குறுகிய மத வேற்றுமைகள் இருக்க முடியாது. வேறு உருவங்களில் கடவுளைத் தொழுபவர்களைக் கண்டு ஆத்திரங் கொள்ள மாட்டார்கள். எந்த உருவத்தில் சிரத்தை யுடன் இறைவனை தொழுதாலும், அவருடைய ஈடுபாட்டைத் தாம் மேலும் வளர்ப்பதாகக் கிருஷ்ணன் அறிவிக்கிறார். ஒவ் வொருவரும் தமது இதயத்தில் செய்யும் தனி வழிபாட்டுக்கு இந்த அறிவிப்பை பொருத்திப் பார்த்தால் பரந்த சுலோகத்தின் உட்கருத்து நமக்கு நன்கு விளங்கும்.

ஒரு பொருளையோ அல்லது கருத்தையோ பற்றி மனதில் நாம் இடைவிடாது நினைத்துக்கொண்டேயிருந்தால் நாள டைவில் அது நமது உள்ளத்தில் உறுதியாக நிலைத்துவிடுகிறது. மீண்டும், மீண்டும் அந்த எண்ணம் தோன்றுவதால், நாளடைவில் அது ஆழ்ந்த ஒரு கருத்துக் கால்வாயாகவே ஆகிறது. அது மனமென்ற பள்ளத்தாக்கில் பாயும் நேரத்தில் பல் வேறு விருப்பக் கோலங்கள் தோன்றுகின்றன. இதன் அடிப் படையாயுள்ள விதியைக் கூர்ந்து நோக்கினால், ஆன்மிக பேருண் மையும், எல்லையற்ற அதன் அற்புத சக்தியும் நமக்குப் புலனாகும்.

சுருங்கக் கூறுமிடத்து, 'சிந்தனை எப்படியிருக்கிறதோ அப் படியே நாம் மாறுகிறோம்' என்று பகவான் கூறுகிறார். நம்மில் மாற்றம் அதிகரிக்க, அதிகரிக்க குறிப்பிட்ட அதே வகையான கோலத்தில் நமது எண்ணங்களும் செல்கின்றன. இது உளவியல் காட்டும் உண்மை. நாம் ஏன் குறிப்பிட்ட வழக்கங்களுக்கு அடிமையாகிறோம் என்பதும், நம் சிந்தனைப் போக்கை ஏன் சுல பமாக மாற்றிக்கொள்ள முடிவதில்லை என்பதும் இதிலிருந்து தெரிகிறது. அதற்காக புலனின்ப நாட்டங் கொண்டவர்களை இகழ வேண்டியதில்லை. அதே போல் 'தெய்வீக' புருஷர்களை புகழவும் வேண்டாம். அந்த இருவரின் வெவ்வேறு சிந்தனை என்பது இயற்கை (பிரகிருதி)யிலிருந்து தோன்றுவது. சிந்தனைகளே அவற்றின் மூலாதாரமாக இருக்கும் இறைப்

பொருள்(புருஷ) உலகமென்ற நாடக மேடையையும், அதற்கான தேவைப் பொருள்களையும் ஏற்பாடு செய்து தருகின்றன.

இவ்வாறு பெருகி வரும் சிரத்தையின் மூலம் இவ்வுலகில் வாழும் மனிதன் எவ்வாறு குறிப்பிட்ட விருப்பத்தைப் பெறுகிறான்?

ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ் தஸ்யாராதன மீஹதே
லபதே ச தத: காமான்மயைவ விஹிதான்ஹி தான் 7:22

அவ்வாறு (உறுதியாக்கி) அளிக்கப்படும் சிரத்தையினால் குறிப்பிட்ட அந்த தேவதையின் வழிபாட்டில் அவன் ஈடுபடுகிறான். அதிலிருந்து அவனுடைய விருப்பங்கள் நிறைவேறுகின்றன. உண்மையில் இவை எல்லாம் என்னால் தான் நிர்ணயிக்கப்படுகின்றன.

ஒருவருக்கு அளிக்கப்பட்ட சிரத்தையினால் அவர் தமது இஷ்ட தேவதையை வணங்கி, கோரிக்கைகளை பெறுகிறார். 'உண்மையில் நான்தான் இவ் விருப்பங்களை அளிக்கிறேன்' என்றும் பகவான் கூறுவது குறிப்பிடத் தக்கது. இயங்குவதும், பயன் பெறுவதும், கோரிக்கைகளைப் பூர்த்தி செய்து கொள்வதும், மனமுடைந்து நிற்பதும்—இவ்வளவுக்கும் காரணமாக இருப்பதும் உட்பொருளாக விளங்கும் ஆத்மாவாகும். இன்பதுன்பங்கள், வெற்றி தோல்விகள் போன்ற உணர்ச்சிகள் எல்லாம் மனமட்டத்தில் தோன்றும் எண்ண அலைகளைத் தவிர வேறொன்றுமில்லை. இவற்றையெல்லாம் தோன்றச் செய்யும் உணர்வுப் பொருளாகிய இறைவன் இல்லையேல் முன் கூறிய எந்த அனுபவமும் நமக்கு ஏற்படாது.

சிரத்தையுடன் வேலை செய்தால் எந்தத் துறையிலும் வெற்றி கிடைக்கிறது. ஆனால் அந்தத் துறை இருப்பதும், வேலை செய்யும் சக்தி அமைவதும், எந்த முயற்சியையும் தொடர்ந்து வரவேண்டுமென்ற சிரத்தை மிக்க ஆர்வம் இருப்பதும்—இவை எல்லாமே மாறாத, சலனமற்ற ஆதியந்தமில்லாத நிர்குணமான ஆன்மாவினாலேயே கயலுகின்றது. இப்பிரபஞ்சத்தின் ஆன்மீக மையம் தாமே என்ற முறையில் 'எல்லா நடவடிக்கைகளிலும் சிரத்தை வளரச் செய்வது நான்தான்' என்று அழுத்தத் திருத்தமாக கிருஷ்ணன் பிரகடனம் செய்கிறார். நடவடிக்கை விதிகளை இம்மியளவும் தவறாது பின்பற்றி, ஆழ்ந்த சிரத்தையுடனும் நடைமுறையில் பிழையின்றியும் வேலை செய்து முடித்தவுடன் அதற்கேற்ற சரியான பலனை அளந்து கொடுப்பவரும் அவரே என்ற உண்மை இதில் தெளிவாகிறது.

ரேடியோவை சரியாகத் திருப்பி வைத்து மின்சாரத் தொடர்பும் இணைத்துவிட்டால் 'நிகழ்ச்சியை நீங்கள் கேட்குமாறு செய்வது நானே' என்று அந்த மின்சாரம் கூறுகிறது.

மருட்சியில் ஆழ்ந்தவர்கள் வரையறைக்குட்பட்ட புலன் பொருள்களையே நாடுகிறார்கள். ஆகையால் அவர்களுக்கு பரிபூரண திருப்தியளிக்கும் அமைதி கிட்டுவதில்லை. எனவே கிருஷ்ணர் பின் வருமாறு கூறுகிறார்:

அந்த வத்துபலம் தேஷாம் தத்பவத்யல்ப மேதஸாம்
தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி
7:23

சிற்றறிவு படைத்தவர்களுக்குக் கிடைக்கும் பலன் உண்மையில் வரையறைக்கு உட்பட்டது. தேவர்களை வணங்குபவர்கள் தேவர்களிடமே போகிறார்கள். என் மீது ஈடுபாடு கொண்டவர்கள் என்னிடம் வருகிறார்கள்.

உண்மை நிலவரத்தை அறிந்து கொள்ளாதவர்களின் செயல்களுக்குக் கிடைக்கும் பலன் மிகக் குறைவு. நிலையில்லாப் பொருள்கள் மீது தோன்றும் கோரிக்கைகள் நிறைவேறிய போதிலும், அதனால் கிடைக்கும் பலன் நிரந்தரமானதான இருக்காது. தங்கத்தினால் செய்யப்படும் பண்டம் கசக்காது. ஒரு பொருளின் தன்மை அதன் உற்பத்திக்குக் காரணப் பொருள்களாக இருப்பனவற்றையே முற்றிலும் பொறுத்தது.

குறுகிய துறைகளில் சிறப்பான கருவிகளின்றி மேற்கொள்ளப்படும் குறுகிய செயல்கள் குறுகிய பயனுள்ளவையாகவே இருக்கும். மகிழ்ச்சி, துயரம், ஆகிய இரு துறைகளிலும் இவ்வாறு நடப்பதைப் பார்க்கலாம். இன்பத்திற்குத் தடையாகவோ அல்லது அதன் முடிவிலோ வருவது துயரம். எனவே புலன் வேட்கைகள் நிறைவேறும் போதெல்லாம், ஒரு வகை மகிழ்ச்சியும், மன நிறைவும் ஏற்பட்ட போதிலும், அது வெகு விரைவில் அழுகிப் போய் அதிருப்தியும் வெறுப்பும், துயரக் கசப்புமே எஞ்சி நிற்கின்றன.

தேவர்களை வணங்குபவர்கள் தேவர்களை அடைகிறார்கள் என்ற பொது விதி, இங்கு பகவான் கூறுவதற்கு ஆதாரமாக இருக்கிறது. எந்தத் துறையிலும் 'லாப சக்தி'யைத் தொழுபவர்களுக்கு, அவர்கள் அதில் முழு வெற்றி பெறுவதாக இருந்தபோதிலும், அந்த வகை லாபம்தான் கிடைக்கிறது.

'என்னிடம் ஈடுபாடு கொண்டவர்கள் என்னிடம் வருகிறார்கள்' என்று பகவான் கூறும் தத்துவ உண்மையுடன் மேலே கூறப்பட்டுள்ளதை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். புலன் பொருள் உலகில் இன்பத்தை நாடுவோர், பல்வேறு வகைத் தொல்லைகளை அனுபவித்த பிறகு, புலனின்பத் துறையில் ஏதோ கொஞ்சம் வெற்றி பெறுகிறார்கள். அந்த அளவுக்கு அவர்கள் ஆக்க பூர்வமான உயர்நிலை வாழ்வுக்காகப் போராடியிருந்தால்,

தாமும் தம்முள் இருக்கும் இறைவனும் ஒன்றுதான் என்ற பேருணர்வு பெற்றிருக்கலாம். மருட்சியில் ஆழ்ந்த அகந்தை தனது வெளிநாட்டப் போக்கினுல் குறுகிய பொருள் உறைகளுடன் தன்னை இணைத்துக்கொள்ளுகிறது. எண்ணற்ற பொருள்களைக் கொண்ட 'ஜகத்'தில் இன்பம் காண்கிறது.

விவேகமும், விழிப்புணர்ச்சியும் உள்ள சாதகர்கள், தற்காலிக இன்பங்கள் பயனற்றவை என்று விரைவில் கண்டு கொண்டு அவற்றிற்காக நடத்தும் அகந்தை மைய வாழ்விலிருந்து தங்களை விடுவித்துக் கொள்வார்கள். முந்திய அத்தியாயத்தில் கூறியதைப் போல், அவர்கள் தங்களுக்குள் இருக்கும் ஆன்மிகப் பொருளையே தியானித்து, தங்களுடைய உண்மை இயல்பை அறிந்து மகிழ்வுறுவார்கள். உடல், மனம், புத்தி மட்டங்களில் நாம் சுற்றி சுற்றி வரும் கரடு முரடான பகுதிகளுக்கு அப்பாலுள்ள பேரின்பப் பிரதேசத்தில் அவர்கள் ஆனந்தமாக உலவுவார்கள்.

கீதையில் பகவான் தன்மை ஒருமையைப் பயன்படுத்தும் போதெல்லாம் எல்லையற்ற பரம் பொருள் என்ற நிலையிலிருந்து பேசுகிறுர். இது முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கிறது. தனி மனிதர் வாழ்வுக்கும், உலக இயக்கத்திற்கும் அடிப்படையான மூல சக்தி என்ற முறையில் பேசுகிறுர். எனவே 'என்னை வழிபட நினைப்பவர்கள் என்னிடம் வருகிறுர்கள்' என்பது வரலாற்றிலுள்ள தேவகியின் மைந்தனுடைய வார்த்தைகள் அல்ல. கீதை இசைத்த பெருமகன் தெய்வீக ஆவேசத்தில் தன்னை சுத்த சுயம் பிரகாசப் பரம்பொருளாக உணர்ந்து பேசுகிறுர். மனம்—புத்தி கருவியினுல் பற்பலவாகத் தோன்றும் இக் கனவுலகின் உள்ளுறைப் பொருள் என்ற முறையில் அர்ஜுனனுக்கு ஆலோசனை கூறுகிறுர். அவர் கூறுவதை இவ்வாறு புரிந்து கொண்டால்தான் கீதை நமக்கு விளங்கும். ஆன்ம நாட்டம் கொண்டவர்கள் தேடித் தேடி, கடைசியில் தாமே ஆன்மா என்பதைக் கண்டு கொள்ளுகிறுர்கள். உலக மக்கள் யாவருக்கும் இப்புனித நூல் எடுத்துக்காட்டும் உண்மை இதுதான்.

அப்படியானுல், பொதுவாக, பெரும்பாலோர் ஆன்மிக உணர்வு பெறுவதில்லையே ஏன்? இதற்குப் பகவான் பதிலளிக்கிறுர்.

அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய:
பரம் பாவமஜானந்தோ மமாவ்யய மனுத் தமம் 7:24

தோற்றம் காட்டாத எனது மேலுயர்ந்த, மாருத,

நிகரில்லாத் தன்மையை அறியாத முட்டாள்கள் நான் உருவம் எடுத்தவனாக நினைக்கிறார்கள்.

பன்மையாகத் தோன்றும் இவ்வுலகிலும், அதனூடேயும் சூக்குமமாக விரவி நிற்கும் நுணுக்கப் பேருண்மையை உணரும் விவேகமில்லாதவர்கள், பரம்பொருள் மாறாதது, நிகரில்லாதது, தோற்றமற்றது என்று அறிந்துகொள்வதில்லை. கணம் கணமும் மாறிவரும் பிரகிருதியின் பெருமையில் மனத்தைப் பறிகொடுத்த வர்கள், 'இவ்வளவு மாற்றங்களுக்கிடையில் முத்துச் சரத்தின் சரடுபோல, நானே இப்பன்மையைக் கோத்து நிற்கிறேன் என்று தெரிந்து கொள்ளவில்லை.

ஒளிக் கதிரில் மிதக்கும் தூசியைப் போல், கோடானு கோடி பிரபஞ்சங்களின் சுழற்சியை ஏந்திச் செல்லும் அடிப் படைப் பேருண்மையே 'வெளியாகாதது.' இச் சொல்லை தத்துவ பூர்வமான கருத்தில் புரிந்துகொள்ள வேண்டும். புலனறிவுக்கோ மனத்தின் உணர்ச்சிகளுக்கோ அறிவின் சிந்தனைக்கோ எட்டுவது 'வெளிப்படுவது'. இவற்றிற்கு எட்டாதது 'வெளியாகாதது.'

எனவே ஆன்மிக உட்பொருளை 'வெளியாகாதது' என்றே சொல்ல வேண்டும். ஏனெனில் புலன் உறுப்புக்களுக்கு உயிர்ச் சக்தியாகவும், மனத்திற்கு உணரும் தன்மை அளிப்பதாகவும், அறிவுக்கு ஒளியூட்டும் ஜோதியாகவும் அது விளங்குகிறது. ஆனால் அது வெளித் தோன்றுவதில்லை.

வெளிநாட்டமே கொண்ட தலைகீழ் அறிவாளிகள், ஒரு தீர்க்கதரிசியையோ அவதார நாயகனையோ முடிவிலா இறை வனாகக் கருதுகிறார்கள்.

சிந்தனைக் கதிர்கள் குவியும் ஒரு இடத்தை (உபாஸ்ய) தான் நாடும் பேருண்மையின் உருவகமாக ஒருவர் வைத்துக்கொள்ள லாம் என்பது உண்மைதான். ஆனால் அது அறிகுறியே. அதுவே பேருண்மையாகிவிடாது. அது இறைப் பொருளானால், ஒரு உரு வத்தைச் செய்துவிட்டு கடவுளை அடைந்து விடலாம்; ஒரு குருவை அடைந்தவுடன் இறைவனையே அடைந்ததாகி விடுமே. கடவுளின் உருவம் நமது சிந்தனைக் கதிர்களை ஒருங்கு திரட்டுவதற்கான ஒரு வசதி. அதைப் பயன்படுத்திக் கொண்டு ஆன்மிக வெளியில் பறக்கத் தொடங்கினால் இந்த உணர்வைப் பெறலாம். பரம்பொருள் தம்மிடமே இருப்பதைக் காண முடியும்.

மருந்தையும், மருந்து புட்டியையும் சேர்த்துக் குழப்பிக்கொள்ள வேண்டாமென்று இச் செய்யுள் அறிவுறுத்துகிறது. குருவின் உடலுருவம் வேறு, அவர் செய்யும் உபதேசம் வேறு. இறைசக்தியும் கண் முன்னுள்ள மூர்த்தியும்

வெவ்வேறுனவை. வெள்ளையாக இருக்கும் கட்டை எல்லாம் சந்தனக் கட்டையாகி விடுமா? ஆகாயத்தில் தோன்றும் வெளிச்சம் ஒவ்வொன்றும், அது எவ்வளவு ஒளிமிக்கதாக இருந்த போதிலும், நட்சத்திரம் ஆகிவிடாது. ஒரு கோபுர உச்சியிலிருந்து வரும் பிரகாசமான ஒளியை சூரியன் என்று வடிகட்டின முட்டாள்தான் சொல்லுவான். அவனுடைய சொல்லை புத்தியுள்ள எவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். கடவுளுடைய அவதாரம் பற்றிய கருத்தை இந்துமதம் ஒப்புக் கொள்கிறது. அதே இந்துமதக் கொள்கை நாம் ஒவ்வொருவரும் ஓரளவுக்கு ஒரு அவதாரம்தான் என்றும் கூறுகிறது. உலகெங்கும் விரவிய பேருண்மைப் பொருள் ஒவ்வொருவரிலும் இருக்கிறது. அது மனம் அறிவு என்ற திரைகளின் மூலம் வெளியாகிறது. மனம் தெளிவாகவும், அறிவு தூய்மையுள்ளதாகவும் இருந்தால், இன்னும் அதிகமாக அத் திரைகளுக்கும் மேல் தெய்விகப் பேரொளி வீசிப் படரும்.

ஒருவருள் இருக்கும் ஆன்மிகப் பொருள் தூய்மையும் உறுதியும் பெற்ற அவருடைய மனதிலிருந்தும், அறிவிலிருந்தும் வெளிவந்து வீசும்போது அவருடைய கீழ் இயல்பு (பிரகிருதி) மறைந்து, அவர் ஓர் தீர்க்கதரிசியோ அல்லது முனிவரோ ஆகிறுர். கிருஷ்ணன், ராமன், கிறிஸ்து, அல்லா, புத்தர், மகாவீரர் ஆகியோர் இதற்கு உதாரணம். தம்முள் இருக்கும் இறைப் பேருண்மையை அறிந்து கொண்ட இப்பெரியோர் தமது வாழ்நாளில் ஒவ்வொரு கணமும் ஆன்மிக உணர்விலேயே மூழ்கி யிருந்தனர். எல்லோருடைய ஆன்மாவாகவும் வாழ்ந்தனர். அவர்களுடைய உடற்கட்டையோ, உள்ளத்தின் எஞ்சியுள்ள சுவடுகளையோ அல்லது அறிவுயர்வுச் சின்னங்களையோ பார்த்து, 'இதுதான் பேருண்மையின் சாரம்' என்று நினைப்பது தவறு. அவர்கள் இறையுணர்வு பெற்றவர்கள் என்பதை மறுக்க முடியாது. ஆனல் அவர்களே கடவுள் என்று நினைத்து விடக் கூடாது. கடலிலிருந்து தான் அலைகள் எழுகின்றன, அலைகளே கடல் என்று சொல்லுகிறேமா?

எனவே மூட நம்பிக்கையால் உண்மையைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் அறியாமையில் மூழ்கியுள்ளவர்களைக் குறிப்பிடுவதற்கு 'முட்டாள்கள்' (அபுத்தய) என்ற கடுமையான சொல்லைக் கிருஷ்ணர் உபயோகிக்கிறுர்.

உண்மை இயல்புபற்றி பொதுவாக இதைப் போன்ற அறியாமை நிலவுவதற்கு என்ன காரணம்?

நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத:
மூடோயம் நாபிஜாநாதி லோகோ மாம ஜமவ்யயம்

7:25

தெய்விக 'மாயை'யைப் போர்த்தியிருப்பதால் நான் (எனது உண்மை இயல்புடன்) எல்லோருக்கும் வெளியாகாமல் இருக்கிறேன். பிறத்தலும், அழிவுறுதலும் இல்லாத என்னை மருட்சிமிக்க இவ்வுலகத்திற்குத் தெரியாது.

எல்லாவற்றிற்கும் உயிர் மையமான 'பெருமைமிக்க' பேருண்மைச் சாரமொன்று இருக்குமானால், அதை ஏன் சுலபமாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை? ஒவ்வொருவரும் எப்போதும் அதை அனுபவிக்க முடியவில்லையே, ஏன்? எனக்கும் இறைப் பொருளுக்கும் இடையிலிருப்பது என்ன? நாம் எல்லோரும் குறுகிய அகந்தை மைய மனிதர்களைப் போல் நடந்து கொள்கிறோம். உண்மையில் நாம் எல்லையற்ற 'நிரந்தரமான' இறைவனின் பகுதிகளானால், அப்படி நம்மை உணர விடாமல் செய்வது எது? இந்த ஐயப்பாடு இறை நாட்டம் கொண்ட ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் எழுவதைத் தடுக்க முடியாது, இலட்சியத்தை அடையும் முயற்சியில் அவன் போராடிக் கொண்டிருக்கும்போது, வேதாந்தம் கூறும் இவ்வுண்மை அவனைத் திடுக்கிட வைக்கிறது.

மருட்சியில் ஆழ்ந்துள்ள உலகத்திற்கு பிறத்தலும், அழிதலுமில்லாத என்னைத் தெரியாது'—இதற்குக் காரணம், மூன்று குணங்களிலிருந்து பிறந்த மருட்சி என்னை மூடிக் கொண்டிருக்கிறது.' வேதாந்தக் கல்வியில் தொடக்க நிலையி லுள்ளவர்களுக்கு 'மாயை'யை விளக்குவது மிகவும் கஷ்டமான வேலை. வாழ்வின் இக்கலையை அறிவு மட்டத்தில் மட்டும் ஏற்றுக் கொள்பவர்களுக்கு இது சரியாக விளங்காது. கற்றதைத் தன்மீதே சோதனை செய்துகொள்ள முயற்சி செய்யத் தொடங் கியவுடன் ஒருவனுக்கு இக்கொள்கையின் விளக்கம் தெரிந்து விடுகிறது. குரு, வாய் வார்த்தையாகச் சொன்னவை எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவாவதை அவர்கள் உணருவார்கள். மாயை என்பது பேருண்மையைத் திரித்துக் காட்டும் திரை. அதன் மூலம் காணும்போது, பிரிக்க முடியா ஒருமையாகத் திகழும் பேருண்மை, பன்மைமிக்க பிரபஞ்சமாகத் தோற்றமளிக்கிறது.

தனிமனிதனில் உள்ள மாயையே 'அறியாமை'. இதை அவித்யை என்றும் கூறுகிறார்கள். இந்த உலகம் மாற்றங்களுக்கு உள்ளாவது, அரை குறையானது, துன்பங்கள் நிறைந்தது என்றெல்லாம் தோன்றும் மருட்சிகள் மாயையினால் தான் வருகின்றன. இந்த அக நோயை ஆழ்ந்து நோக்கி ஆராய்ந்த புராதன முனிவர்கள், மனிதனிடமுள்ள சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களினால் மாயை உண்டாகிறது என்று கூறியிருக்கிறார்கள். இம்மூன்று குணங்களும் சேர்ந்து முப்பட்டைக் கண்ணாடிகளினால் ஆன விளையாட்டுக் கருவியைப்

போன்றது. அதனுள் பார்த்துக் கொண்டே அதை அசைத்தால், வண்ண வண்ணக் கோல அமைப்புகள் புதிது புதிதாகத் தோன்றுவது தெரியும். ரஜோ குணம் மனச் சலசலப்புகளை (விக்ஷேபம்) தோற்றுவித்தும், தமஸ் ஒருவருடைய அறிவுக்குத் திரைபோட்டு மறைத்தும் அமைதியைக் குலைக்கின்றன.

இம்மூன்று குணங்களின் காரணமாக மனம் குழப்ப மடைகிறது. நேரடியாக ஆன்மிக அனுபவம் பெறுவதற்கு இக் குழப்பம் தடையாகிறது. அதைப் போக்குவதற்கு ஒரு குரு கூறுவதைக் கேட்டும், அவர் கூறும் முறையை ஊக்கத்துடன் பயிற்சி செய்தும் வந்தால்தான் தனது உண்மையான இயல்பு பற்றி மாணவனுக்கு விளங்கும். காட்டில் வாழும் ஒருவன் நகரத்திற்கு வருகிறான். மின்சார விளக்கை அவன் இதுவரை பார்த்ததே இல்லை என்று வைத்துக் கொள்வோம். எரியாமலிருக்கும்போது அதைக் காட்டி, மின்சாரம் என்று ஒரு சக்தி இருக்கிறதென்றும், அதனால் விளக்கு எரிகிறதென்றும் சொன்னால் அவனுக்கு ஒன்றுமே புரியாது. ஏனெனில் மின்சாரம் அதில் வெளிப்படாமல் இருக்கிறது. முதலில் மின்சாரத்தைப் பற்றிய விவரங்களைச் சொல்லி, பிறகு மின்சாரத்தின் மூலம் விளக்கு எரிவதைக் காட்டினால், உடனே அதன் இயல்பு அவனுக்குத் தெரிந்துவிடும். பிறகு விளக்கு எரியாவிட்டாலும் கூட தனக்குப் புலப்படாத ஒளியாக வெளியாகாத, சக்தி ஒன்று அங்கே இருக்கிறதென்று அவனுக்குத் தெரியும்.

அதைப் போலவே புலனடக்கம், பெரியோர் சொல்லுவதைக் கேட்டல், சுய சிந்தனை, தியானம் ஆகியவற்றின் மூலம் மனத்தின் சலசலப்பு அடங்கும். உள்ளொளியை மூடியிருக்கும் திரைகள் எல்லாம் இவ்வாறு அகன்ற பிறகு, ‘பிறப்பும் மாறுதலுமில்லா என்னை இறை நாட்டம் கொண்ட ஒருவர் தெரிந்து கொள்ளுகிறார்’ என்று பகவான் கூறுகிறார். ஒருவர் தம்மையே ஆன்மாவாக உணரும் வரை மனச் சலசலப்புகள் அறிவை மறைக்கின்றன. தனி அகந்தை (ஜீவன்) தன்னைப் பூர்த்தி செய்துகொள்ளத் துடிக்கிறது. ஆனால் புலனின்பப் பொருள்களாகிய சாக்கடையில் போய் எல்லையிலாப் பரம்பொருளைத் தேடுகிறது.

இவ்வாறு பரபரப்புள்ள உள்ளங்களில் வேட்கைகளே நிறைந்திருக்கும். ஏமாற்றங்கள் தோன்றும். அதிருப்தியும், சுய அழிவு பற்றிய கவலைகளும் சுமை சுமையாக இருக்கும். அப்படிப் பட்டவர்கள் அமைதியாகத் தன்னுணர்வில் மூழ்கி, தூய மெய்ப் பொருளை அனுபவிக்க முடியாது. ‘மருட்சிமிக்க உலகத்திற்கு என்னைத் தெரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் அது மூன்று குணங்களிலிருந்து தோன்றிய மாயையில் ஆழ்ந்திருக்கிறது’ என்று கிருஷ்ணன் கூறுவதன் பொருள் அதுதான். நாம

ரூபங்களினுலான இந்தப் பிரபஞ்சமும் ஆன்மாவின் ஆக்கமே. ஆனுல் இப் பிரபஞ்சமே பரம்பொருளைத் திரைபோட்டு மறைத்து விடுகிறது. இருளில் ஒரு மரத்தைப் பார்த்து பேய் என்று நினைத்து விட்டால் நம் கண்முன் பேய் தான் இருக்கும். மரத்தை பேய் மறைத்து விடுகிறது. கானல் நீர் பாலைவனத்தை மறைத்து விடுகிறது. அலைகள் கடலை மறைத்து விடுகின்றன.

குறுகிய அகந்தைக்கு இந்த அறியாமை நிலையில் ஏற்படும் குழப்பம் பின்கண்ட சுலோகத்தில் மேலும் தெளிவாக்கப் பட்டிருக்கிறது, அறிவின் உண்மை இயல்பான ஆன்மிகப் பொருளையும், 'அறியாமை'க் குழப்பத்தில் அகப்பட்டுத் தத்தளிக்கும் அகந்தையையும் அடுத்தடுத்து வைத்துக் காட்டுகிறது.

வேதாஹம் ஸமதீதானி வர்தமானுனி சார்ஜுன
பவிஷ்யாணிச பூதானி மாம்துவேத ந கஸ்சன 7:26

அர்ஜுனு, கடந்த கால இப்போதுள்ள, எதிர்காலத்திய எல்லோரையும் (எல்லாவற்றையும்) எனக்குத் தெரியும் ஆனுல் என்னை எவருக்கும் தெரியாது.

உலகத்திலுள்ள எல்லா மதங்களும், கடவுள் எல்லாம் அறிந்தவர் என்பதை ஒப்புக் கொள்ளுகின்றன. ஆனுல் வேதாந்தத்தில் மட்டுந்தான் அதற்குத் திருப்திகரமான காரணம் கூறப்பட்டிருக்கிறது. இந்து மதத்தின் தலை சிறந்த புனித நூல்களில் கீதையும் ஒன்று. உபநிடதங்களைப் படிப்பவர்கள் உடனுக்குடன் குறிப்புப் பார்த்துக் கொள்வதற்கு கையடக்கமாக அமைந்த நூல் இது. கடவுளுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை என்று கூறுவதன் பொருளை சற்று விரிவாகவே கீதை குறிப்பிடுகிறது.

தனிப் பெரும் உள்ளுணர்வாகிய இறைவன் எல்லாவற்றிற்கும் ஒளியூட்டும் தத்துவம். மனத்திற்கும், அறிவுக்கும் உட்பட்ட அவ்வளவையும் தமது உணர்வு வட்டத்திற்குள் அவர் கொண்டு வருகிருர். பொருள் உலகம் நமக்கு புலனுகுமாறு செய்பவரும் அவரே. அப் பரம் பொருள் நமது புலனுறுப்புகள் வழியாக உட்புகுந்து, மன ஏரியை அடைந்து, அதற்குச் சுபாவமான சிந்தனை அலைகளை எழுப்புகிறது. சிந்தனை அலைகள் அறிவைத் தட்டி இயக்குகின்றன. அறிவு அவற்றைப் பாகுபாடு செய்து முடிவு எடுக்கிறது. மன, அறிவு மட்டங்களில் ஏற்படும் இந்த இயக்கம், எப்போதும் விழிப்புடனிருக்கும் இறைப் பொருளின் ஒளியினுல் நமக்குத் தெரிகிறது.

சூரியன் எல்லாப் பொருள்களுக்கும் ஒளியூட்டுகிறுன். என்

கண்களோ, காதுகளோ ஒரு குறிப்பிட்ட உருவத்திற்கு அல்லது ஓசைக்கு ஒளியூட்டும் போது நான் அதைப் பார்க்கிறேன் அல்லது கேட்கிறேன். ஒரு பொருள்பற்றி உணர்வு கொள்ளுதலே, 'தெரியும்' என்று குறிப்பிடுகிறோம் அல்லவா? தெரிந்து கொள்வதே ஒளியூட்டுதல், சூரியன் இருப்பதால்தான் நாம் பொருள்களைப் பார்க்கிறோம். அதனால் அதை 'உலகத்தின் கண்' என்று கூறுகிறார்கள். அது இல்லையென்றால் இரு கண்களும் இரண்டு வெறும் குழிகளாகவே இருக்கும். அவ்வாறே இறைவன் எல்லாமறிந்தவர், எல்லாப் பொருள்களிலும், எக் காலத்திலும், எல்லா இடங்களிலும் இருப்பவர். 'கடந்த காலத்திய, இப்போதைய, மற்றும் எதிர்காலத்திய எல்லோரையும் எனக்குத் தெரியும்' என்று கிருஷ்ணர் கூறும்போது 'இறைவன் எல்லாம் அறிந்தவர்' என்பது வெகு அழகாகக் குறிப்பிடப்படுகிறது.

இதில் கவனிக்க வேண்டியது ஒன்று இருக்கிறது. அழிவிலாப் பேருணர்வு இப்போது மட்டுமல்ல, படைப்பின் தொடக்கமிலாத் துவக்க காலத்திலிருந்தே பொருள்களுக்கும், உணர்ச்சிகளுக்கும், சிந்தனைகளுக்கும் ஒளியூட்டி வந்திருக்கிறது. காலத்தின் முடிவற்ற முடிவுவரை 'எனக்குத் தெரியும்' என்ற உணர்வை அளிக்கும் உயிர்த் தத்துவமும் அப் பரம்பொருள் தான்.

விசிறி மின்சாரத்தினால் சுழல்கிறது. ஆனால் அது மின்சாரத்திற்கு விசிற முடியாது. நட்சத்திரத்தைப் பார்ப்பதற்குத் தொலைக்காட்சிக் கண்ணாடியை நாம் பயன் படுத்துகிறோம். ஆனால் கண்ணாடி நம்மைப் பார்ப்பதில்லை. மனமும், அறிவும் உணவினால் வளருபவை, ஜடப்பொருள்களால் உண்டான விசை உணர்ச்சியும் அறிவும் சக்தியும் அளிப்பது பரம் பொருள். அதன் சக்தியினாலன்றி வேலையைச் செய்ய முடியாது. வெறும் பயனற்ற பகுதிகளாக விளங்கும். அவ்வாறு இயங்கும் பொருள், இயக்கப் பொருளையே காண முடியுமா? அதனால்தான் எக்காலத்திலும், எந்த இடத்திலும் தம்மைத் தெரிந்து கொண்டது எதுவுமில்லை என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

கண்டிப்பாகவும், தர்க்கரீதியாகவும் பேசும்போது, சூரியன் உலகத்திற்கு ஒளி அளிக்கிறான் என்று கூறுவது தவறு. வேதாந்தத் தத்துவத்தின்படி, மெய்ப்பொருள் எல்லாவற்றையும் தெரிந்து கொண்ட ஒன்று என்பதும் தவறுதான். நமது நிலையிலிருந்து அப்படிச் சொல்லுகிறோம். இருள் சூழ்ந்திருந்த நேரத்தில் நமக்கு எதுவும் புலப்படவில்லை. விடிந்ததும் எல்லாப் பொருள்களும் கண்களுக்குத் தென்படுகின்றன. எனவே சூரியன் எல்லாவற்றிற்கும் ஒளியூட்டுகிறது என்கிறோம். சூரியனைப் பொறுத்தவரை, அது எப்போதும் பிரகாசித்துக்

கொண்டிருக்கிறது. ஒளி வீசாத நேரமே இல்லை. 'நான் மூச்சு விடுவதில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறேன். இப்போது என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்' என்பது எவ்வளவு அர்த்தமில்லாத வார்த்தைகளோ, அப்படித்தான் 'சூரியன் பகலில் பொருள்களுக்கு ஒளியூட்டுகிறது' என்று கூறுவதும்.

மருட்சிக்குக் காரணமான மாயையிலும், மாயை மூலமாகவும்* இயங்கும் இறைப் பொருளுக்குத் 'தெரிந்து கொள்ளும் தன்மை' வருவதே இந்த மாயையினால் தான். வேதாந்த நூல்களில் இறைப் பொருளை ஈசுவரன் என்று கூறுகிறார்கள். இங்கு கிருஷ்ணரை ஈசுவரனின் அவதாரமாக வியாசர் சித்திரிப்பதால், எல்லாக் காலங்களிலும் எல்லாவற்றையும் அறிந்தவராகத் தம்மைப் பற்றி கிருஷ்ணர் சொல்லிக் கொள்வது முற்றிலும் சரியாகவும் பொருத்தமாகவும் இருக்கிறது.

ஆனால் மனிதன், தனது அகந்தை மையத்திலிருந்து சின்னஞ் சிறு மனபுத்தி கருவியின் மூலம் விசாலமான பிரபஞ்சத்தை நோக்குகிறான். எனவே விரிந்து பரந்திருக்கும் மகா பிரபஞ்சத்தின் இசைவு லயம் அவனுக்குத் தெரியவில்லை. தானாக மாட்டிக் கொள்ளும் அறியாமைத் தளைகளை உடைத்தெறிந்து விட்டு, பிரபஞ்ச லயத்தில் இசைந்து வாழக் கற்றுக்கொண்டால் கிருஷ்ண—நோக்கை எவரும் பெறலாம். மொத்த உலக உள்ளத்திற்கு ஏற்ப நடந்து கொள்வதில் வெற்றி பெறும் ஒருவர் உடனே அக்காலத்திய கிருஷ்ணராகி விடுகிறார். பிறகு எல்லாக் காலத்திற்கும் அவர் கிருஷ்ணராக விளங்குகிறார்.

நமது ஆன்மா எப்போதும், எல்லாமறிந்த மெய்ப் பொருளானால், அடிப்படையான இந்த இயல்பை நம்மிடமிருந்து திரைபோட்டு மறைப்பது எது?

இச்சாத்வேஷஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத
ஸர்வ பூதானி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப

7:27

பாரதா, வேட்கையிலிருந்தும் வெறுப்பிலிருந்தும் எழும் எதிரெதிரான இரட்டைகளின் மருட்சியினால் எல்லோரும் பிறவியிலேயே மருட்சிக்கு உட்பட்டவர்களாகிறார்கள், பரந்தபா (எதிரிகளை எரித்து ஒழிப்பவனே).

விஞ்ஞான பூர்வமாகவும், மிக நுணுக்கமாகவும் உள்ள தத்துவக் கருத்து இச் செய்யுளில் குறிப்புணர்த்தப் படுகிறது.

---

* சத்துவம் மேலோங்கி நிற்கும் முக்குணக் கலப்பு:
சத்வகுண பிரதான மயோ பிஹித பிரம்மன், ஈசுவரன்.

மனிதனுடைய அகந்தை மைய ஆளுமை ஏன் அவனுடைய முழுமை இயல்பைத் தெரிந்து கொள்ள முடியவில்லை? அந்த இயலாமை எப்படி வருகிறது? இந்தப் பிரசினைகளுக்குப் பதிலளிக்கும் போது, கிருஷ்ணர் தற்கால உயிரியல் விஞ்ஞானிகள் கண்டுபிடித்து எழுதிவரும் பரிணும உண்மைகளை அப்போதே சுட்டிக் காட்டுகிறுர். ஒருவருடைய தனி அகந்தைக்கு ஊட்டச் சக்தியாக இருப்பது எது? மாறி வரும் தன்மை கொண்ட தனது வாழ்வு அழிந்து விடாமல் தொடர்ந்து நீடிக்க வேண்டுமென்ற உணர்வுதான் அதற்கு வலிவூட்டும் மாபெரும் ஊக்கச் சக்தி. அழிவிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளும் இவ்வுணர்வு, அறிவு மட்டத்தில் வெளியாகும் போது இன்பப் பொருள் வேட்கையாக மாறுகிறது.

இவ் வேட்கை நிறைவேறுவதற்கு இடைஞ்சலாக யாரோ ஒருவர்—அல்லது ஏதோ பொருள்—குறுக்கே வந்துவிட்டால், வேட்கை பற்றிய எண்ணங்கள் அவர் மீது முட்டிச் சிதறுகின்றன. இவ்வாறு சிதறும் சிந்தனைகளே வெறுப்பாக உருவாகிறது.* விருப்பத்துக்கும் வெறுப்புக்குமிடையில் அகப்பட்டுக் கொண்டு அகந்தை படும் துன்பம் இவ்வளவு அவ்வளவு அல்ல. அது கோரும் பொருட்களில் மனமும், அறிவும் மும்முரமாக ஈடுபடுகின்றன. அது வெறுக்கும் பொருட்களைத் தவிர்க்க விரும்புகின்றன. அகந்தை மைய ஆளுமையுள்ள ஒருவருடைய நேரமெல்லாம் இந்தப் போராட்டத்திலேயே கழிந்துவிடுகிறது. அவர் எல்லையில்லாக் குழப்பத்தில் ஆழ்ந்து சோர்வுறுகிறுர். மனத்திலும் அறிவிலும் அமைதியே இருப்பதில்லை. இவை அதிகரிக்க அதிகரிக்க ஒருவர் கலக்கமே உருவெடுத்தவராகிறுர். அமைதியற்று இப்படி அலை பாய்ந்து கொண்டிருக்கும் தன்மையே பேருண்மையை நேரடியாகத் தெரிந்து கொள்ளமுடியாத திரை (ஆவரணம்) ஆகிறது.

எனவே அமைதியையும், சமநிலையையும் மீண்டும் பெற்று நமது நிரந்தரமான ஆன்மிக இயல்பை அறிந்து கொள்வதற்கு, நம் உள்ளக் கலக்கங்களை அடக்கி நிறுத்தி வெற்றி கொள்வது அவசியம். ஒரு கணமேனும் மனம் பரிபூரண அமைதி பெற்று விட்டால் அது மாபெரும் வெற்றி. அதை அடைவதற்கான வழிமுறைகளையே உலகத்திலுள்ள எல்லா மதங்களும் கூறுகின்றன. அவ்வாறு அமைதிபெறும் நேரத்தில் உள்ளத்தில் தோன்றும் பேரொளி நமது இறை இயல்பை பளிச்சென்று எடுத்துக் காட்டுகிறது. நாமே மெய்ப் பொருள் என்று அறிந்து நிறைவு பெறும் சுப வேளை அதுதான். ஆனுல் துரதிருஷ்ட வசமாக, பிறவியிலேயே எல்லோரும் மருட்சிக்கு உள்ளாகிறுர்கள் என்று துயரம் ததும்பக் கூறுகிறுர் கிருஷ்ணர்.

* அத்தியாயம் 2, செய்யுள் 52, 53 பார்க்க.

மருட்சியிலிருந்து விடுபட வழியில்லை என்றும், விதியை நொந்து கொண்டு தலை வணங்கிப் போக வேண்டியதுதான் என்றும் கிருஷ்ணர் கை விரித்து விடுவதாக யாரும் நினைக்கக் கூடாது. மனிதனை பாவத்தின் பாலகனுகக் கருதுவது ஏசுநாதரின் மதம். கிருஷ்ண மதம் அப்படிப்பட்டதல்ல. யமுனைக் கரையில், குதித்துக் களிநடனம் புரியும் கிருஷ்ணன் நம்பிக்கையின் உருவகம். அவர் இங்கு தத்துவ உண்மை ஒன்றை எடுத்துக் காட்டுகிறுரே தவிர, தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்துவிடச் சொல்லவில்லை. தனது ஆழ்ந்த விருப்பங்களையும், வெளியிடா வேட்கைகளையும் பூர்த்தி செய்து கொள்வதற்கான திட்டம் வகுத்துக்கொண்டு, குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒருவன் பிறக்கிறுன் என்பதே அவர் கூறும் தத்துவ உண்மை.

இதைப் போன்ற மருட்சிகளிலிருந்து விடுபட்டு, சரியான உணர்வு பெறுவதுதான் வாழ்க்கையின் புனித லட்சியம். குழப்பச் சூழல்களில் சிக்கித் தத்தளிப்பவர்களைக் கரைசேர்த்து நிறைவுப் பாதையில் அனைவரையும் இட்டுச் செல்லும் ஆன்ம—கீதமே பகவத் கீதை.

கடவுளை நாடுவோரிடம் இருக்க வேண்டிய தன்மைகள் என்னென்ன? இதைப் பின்கண்ட சுலோகம் விளக்குகிறது.

யேஷாம் த்வந்தகதம் பாபம்
ஜனனும் புண்ய கர்மணும்
தே த்வந்த்வ மோஹநிர் முக்தா
பஜந்தே மாம் த்ருடவ்ரதா: 7:28

ஆனுல் நற்செயல்களின் மூலம் தங்களுடைய பாவங்களைப் போக்கிக் கொண்டு, எதிரெதிர் இரட்டைகளின் மருட்சியினின்று விடுபட்டு, விரதங்களில் உறுதியாக நிற்போர் என்னை வழிபடுகின்றனர்.

நற்செயல்களில் ஈடுபட்டவர்கள் தங்களுடைய செயல்களின் காரணமாகத் தமது பாவ இயல்பைப் போக்கிக் கொள்கின்றுர்கள் என்று பகவான் இங்கு கூறுவதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். மனிதன் இயற்கையாகவே பாவம் செய்பவன் என்று இங்கு சொல்லப்படவில்லை. வேதாந்தத் தத்துவத்தில் பாவம் என்பது ஒரு கறை. உண்மையை சரியாகத் தெரிந்துகொள்ளாமல் செய்யும் முடிவுகளின் விளைவு அது. ஆன்மிகப் பேரொளி இதைப் போன்ற கறைகளினுல் மங்கி விடுகிறது. வெளியுலக இன்பங்களை நாடும்படி மனமும், அறிவும் தூண்டுகின்றன. மேலான மதிப்புக்களைக் கைவிட்டு, மாறுன மதிப்புக்களை மனிதன் நாடுவதற்கு இத் தூண்டுதல்களே காரணம். இந்தத் தூண்டுதல்களுக்கு இரையாகி நாம் செய்யும்

செயல்களின் விளைவு, பாவம். ஒருவன் தன் உடலின்பத்தைக் கவனிப்பதிலேயே பெரும்பாலும் காலம் கடத்திக் கொண்டிருந்தால், அப்படி இருப்பவனைப் பாவம் செய்பவன் என்று சொல்லுகிறார்கள். உடல்தான் அவனுக்கு முக்கியமே தவிர ஆன்மா பற்றி அக்கறையில்லை. புலன் வேட்கைகளைத் தீர்த்துக் கொள்வதிலேயே ஒருவனது வாழ்நாள் முழுவதும் கழிந்து விடுமானால் அது பாவமிக்க வாழ்க்கை.

வேட்கைகள் நிறைந்த மிருக வாழ்வின் பயனாக ஒருவருடைய, உள்ளத்தில் ஆழ்ந்த தடங்கள் (வாசனைகள்) தோன்றுகின்றன. அவை அவரது சிந்தனைப் போக்கை நிர்ணயிக்கின்றன. சிந்தனையைப் போலவேதான் செயலும் இருக்கும். எனவே மீண்டும் அவருடைய செயல்கள் 'வாசனை'களை ஆழப் பதிப்பவையாக ஆகின்றன.

வாசனை—சிந்தனை—செயல் என்ற வட்டத்தில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தால், மனிதனுக்கு அமைதியும், நிம்மதியும் எங்கிருந்து வரும்? இந்த வட்டத்திலிருந்து வெளியேற, பாவச் செயலுக்கு நேர்மாறான நற்செயல்களில் ஈடுபடுமாறு கிருஷ்ணர் கூறுகிறார். தெய்விகச் சார்புள்ள வேலைகளும், உணர்ச்சிகளும், சிந்தனைகளுமே 'நற்செயல்'. 'நான் ஆன்மா' என்ற உணர்வுடன் மேற்கொள்ளப்படும் எல்லா நடவடிக்கைகளும் புதிய வகைத் தடங்களை ஏற்படுத்துகின்றன. நாளடைவில் பாவத் தடங்கள் மறைந்து, தெய்விகபரமான கோலங்கள் அமைகின்றன.

இந்த முறையில் பண்பட்ட மன—அறிவு அமைப்பிலிருந்து எதிர்மறைகள் எல்லாம் அகலுகின்றன. பிறகு எதிர் மறைகள் இரட்டைகளின் மருட்சிக்கு அங்கு இடமில்லை. ஆகையால் மனம் உறுதி பெற்று தியானத்திற்கு ஏற்ற கருவியாகிறது.

தெய்விகபரமாக வாழ்ந்து மனம் திருந்திய பிறகு மேலும் இறைவனைத் தியானிப்பதன் நோக்கம் என்ன?

ஜரா—மரண—மோக்ஷாய
மாமாச்ரித்ய யதந்தி யே
தே ப்ரஹ்ம தத்—விது: க்ருத்ஸ்னம்
அத்த்யாத்மம் கர்ம சாகிலம் 7:29

முதுமையிலிருந்தும், மரணத்திலிருந்தும் விடுதலை பெற முயற்சிப்பவர்கள் என்னைத் தஞ்சமடைவதால் பிரம்மனையும் தனது ஆன்மா பற்றிய முழு அறிவையும் அடைந்தவர்களாகி எல்லாச் செயல்களையும் நிறைவேற்றியவர்களாகிறார்கள்.

தங்கள் மனத்திலுள்ள தவறான போக்குகளை அகற்றுவதற்கும் தூய உள்ளத்துடன் ஆன்மிகப் பொருளை

தியானிக்கவும் முயற்சிப்பவர்கள் முதுமை, மரணம் முதலியவற்றிலிருந்து விடுதலை பெறுவதற்காகவே அவ்வாறு செய்கிறார்கள். ஆனால் இன்றைய உலகத்தில் கூட முதுமையையும், மரணத்தையும் தவிர்ப்பதற்கான முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் இங்கே கூறப்படுவது நைந்து போன உடலை வைத்துக் கொண்டு மேலும் கொஞ்சம் காலந் தள்ளுவது எப்படி என்பதைப் பற்றி அல்ல. ஆன்மிக வளர்ச்சி பற்றிய விஞ்ஞான நூல் இது.

பிறப்பு, வளர்ச்சி, நோய், முதுமை, மரணம் ஆகியவை ஒவ்வொருவருக்கும் இயற்கையில் வருபவை. இந்த மாறுதல்களே எல்லாத் துயரங்களுக்கும் காரணம். மாறுதல் இல்லையென்றால், வாழ்க்கை முழுவதுமே இடையறா மகிழ்ச்சி நிலவும் வாய்ப்பு இருக்கலாம். மாற்றங்களை இயல்பாகக் கொண்ட உலகுடன் இணைந்து நிற்பதை இறை நாட்டம் கொண்டவர்கள் முற்றிலும் அறுத்துக் கொள்ள வேண்டும். தியானத்தின் நோக்கம் அது தான். உலகத்திலுள்ள எல்லா மாறுதல்களையும் சேர்த்துக் குறிப்பிடுவதற்காக, சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த 'முதுமை' 'மரணம்' என்ற இரு சொற்கள் உபயோகிக்கப்படுகின்றன.

ஆழ்ந்த தியானத்திலிருக்கும்போது ஒருவர் தாமும், தம்மிடமுள்ள உணர்வுப் பொருளும்—ஆன்மாவும் —ஒன்றே என்று தெரிந்து கொள்ளுகிறார். ஒவ்வொருவரிடமுள்ள ஆன்மாவே அழிவில்லாப் பரம்பொருள், பிரபஞ்சம் முழுவதற்கும் அடிப்படையாக உள்ள பிரம்மன். ஒருவருள் இருக்கும் ஆன்மாவே எல்லோரிடமும் இருப்பதால், ஆன்ம உணர்வு பெறுவதும் பிரம்மனாவதும் ஒன்றுதான். இறைவனின் இந்த இரண்டிலாத் தன்மை இந்தப் பாடலில் வெளியாகிறது. 'ஆன்மாவாகிய என்னை தியானித்து பிரம்மனை உணருகிறார்கள்' என்று கூறுவதன் பொருள் அதுதான்.

எனவே பிரம்ம உணர்வு பெற்ற ஞானி, உலக நடவடிக்கைகளில் கையாலாகாத முட்டாளல்ல. இதையும் இந்தப் பாடல் தெளிவாக்குகிறது. 'முற்றுமுணர்ந்து முழுமை பெற்ற ஒருவர் எங்கும் பரந்துள்ள பரமாத்மாவை உணர்வது—மட்டுமின்றி தம்மிடமுள்ள மனோசக்திகளைக்கூட (அத்யாத்மம்) அறிந்தவராகி, எல்லாச் செயல்களிலும் சிறந்து விளங்குகிறார்' என்று கிருஷ்ணர் கூறுகிறார். உலக மக்களின் மனோதத்துவத்தை முற்றிலும் அறிந்து கொண்டவன், தன்னுடைய மனதையும் உறுதியாகக் கட்டுப்படுத்தத் தெரிந்து கொள்வதுடன் அவன் உலகத்திற்கு நன்மை செய்ய முடியும். இது அனுபவமுள்ள எல்லோருக்கும் தெரியும். முழுமையும், மன இசைவும் கொண்ட ஒருவரே பேருண்மையின் ஒளி விளக்காகத் திகழ முடியும்.

ஞானி எல்லா அறிவும் பெற்றவர், எல்லா வேலைகளையும் திறனுடன் செய்பவர் என்ற கருத்தை கிருஷ்ணன் மேலும் விரித்துரைக்கிறார்.

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியக்ஞம் ச யே விது:
ப்ரயாணகாலேபி ச மாம் தே விதுர்—யுக்த—சேதஸ:

7:30

தாங்கள் இறக்கும் தருவாயிலும் என்னை அதிபூதத்துடனும், அதிதைவத்துடனும், அதி யக்ஞத்துடனும் கலந்து நிற்பவனாகக் காணும் உறுதி பெற்றவர்கள் என்னை அறிகிறார்கள்.

மெய்யுணர்வு பெற்றவருக்கு மனதின் தான்தோன்றித்தனமான போக்கும், செயல்களின் இயல்பும் மட்டுமே தெரியுமென்று நினைப்பது தவறு. பொருளுலக முழுமையும் (அதிபூத) புலன், மனம், அறிவு ஆகிய கருவிகளை இயங்க வைக்கும் இரகசிய சக்திகளும் (அதிதைவ) உடல், மனம், அறிவு ஆகியவற்றையும் உள்ளிட்ட எல்லா உணர்வுப் போக்குகளும் (அதிஞான) ஞானிக்கு மிக நன்றாகத் தெரியும்.

தெய்வபாரமாக இருப்பவர் நடைமுறை உலகத்துக்கு ஒத்தவரல்லர் என்ற கருத்து பொதுவாக இருந்துவருகிறது. உலக வாழ்வில் வெற்றி பெறுவதற்கு வேண்டிய திறன் அவரிடமில்லை என்று நினைக்கிறார்கள். கடவுளைக் குறிப்பிட்ட ஒரு உருவத்தில் வழிபடுகிறவரையோ, ஒரு தீர்க்கதரிசியைக் கடவுளாக நினைத்து பின்பற்றுகிறவரையோ, பொறுத்தவரை அது உண்மையாக இருக்கலாம். தமது உணர்ச்சிகளிலும், சிந்தனைகளிலும் மூழ்கியிருப்பவரை 'உபாசகர்' என்று சொல்வார்கள். கடவுளின் குறிப்பிட்ட ஒரு உருவத்தை மனதில் வைத்து அதே நினைவாக அவர் இருந்து விடுகிறார். உலகத்தின் போக்கைத் தெரிந்து கொள்ளுவதற்கு வேண்டிய அக்கறையோ, சக்தியோ அவருக்கு இருப்பதில்லை. ஆனால் வேதாந்தத்தில் கூறப்படும் முழுமை பெற்ற மனிதர் அப்படியல்ல. ஆன்ம (உலக) அனுபவம் பெறுவது மட்டுமின்றி எக்காலத்திலும், எல்லாச் சூழ்நிலைகளிலும் தன்னை அடக்கியாளும் சக்தி பெற்றவர் அவர். அவரிடமுள்ள இயக்க வேகத்தை யாரும் குறைத்து மதிப்பிட்டு விடமுடியாது.

தமது உள்ளத்தையும், எல்லா உயிரினங்களுடைய உள்ளத்தையும் ஒருமித்துக் கட்டுப்படுத்தியவராகையால், உலகத்திற்கே அவர் தலைவராக விளங்குகிறார். அப்படிக் கட்டுப்படுத்தும் சக்தி பெற்றபிறகு, எல்லாமே அவருக்குத் தெளிவாகத் தெரிகிறது. முழுமை பெற்றவர்— அறிவில் கடவுளைப் போல, உள்ளுலகும், வெளியுலகுகளும் நன்கறிந்து வாழ்க்கை நடத்துகிறார். (சுருங்கச் சொல்லுமிடத்து, 'என்னைக்

கண்டு கொண்டவர்களுக்கு எல்லாம் விளங்கும்' என்பதே இதிலுள்ள கருத்து. உலகத்தின் எதிர்காலத்தையும், நிகழ் காலத்தையும் நிர்ணயிக்கும் சக்தி படைத்தவர் அவர். கிருஷ்ணரே அப்படிச் செய்து காட்டினுர் அல்லவா?

இந்த அத்தியாயத்தின் இறுதியில் வரும் இரண்டு பாடல்களில் புதிய கருத்துக்கள் தோன்றுகின்றன. அவற்றின் முழு விளக்கமும் அப்பாடல்களில் இல்லே. ஏனெனில் அவை அடுத்த அத்தியாயத்தில் கூறப்படும் கருத்துக்களின் சுருக்கம். சாத்திர நூல்களில் இரண்டு அத்தியாயங்களே இணைக்கும்போது இப்படிச் செய்வது மரபு. மந்திர உருவத்தில் கடைசியாக வரும் இவ்விரு பாடல்களும் அடுத்து வரும் கருத்துக்களேச் சுட்டிக் காட்டுகின்றன.

(சங்கல்ப வாக்கியம்)

ஓம் தத்ஸத் இதி ஸ்ரீமத் பகவத் கீதா ஸூபனிஷத்ஸு
ப்ரம்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணர்ஜுன ஸம்வாதே
ஞான விஞ்ஞான யோகோ நாம
ஸப்தமோத்யாய:

இங்ஙனம் உபநிடதமும் பிரம்ம வித்தையும் யோக சாத்திரமும் ஸ்ரீ கிருஷ்ணர்ஜுன ஸம்வாதமும் ஆகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் ஞானவிஞ்ஞான யோகமென்னும் ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

ஞான விஞ்ஞான யோகம்

உபநிடதங்கள் கூறும் வேதாந்தக் கொள்கைகள் வியாசர் காலத்தில் நலிவுற்ற நிலேக்கு வந்துவிட்டன. வாழ்க்கைக்குச் சம்பந்தமில்லாத கற்பனேக் கவிதைகளாக ஆகியிருந்தன. அக்காலத்திய இந்துக்களுக்குத் தங்களுடைய கலாச்சாரத்தின் வலிமையும், பெருமையும் தெரியவில்லே. அவற்றை மீண்டும் அவர்களுக்கு எடுத்துரைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருந்தது. வேதாந்தம் கூறும் முழுமையைப் பெற்று, அதை வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் முறையை கிருஷ்ணர் இங்கு சந்தேகத்துக்கு இடமின்றி விளக்கியிருக்கிறுர். எனவே இந்த அத்தியாயத்திற்கு 'ஞான விஞ்ஞான யோகம்' என்று மிகப் பொருத்தமான தலேப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அறிவு மட்டும் இருந்தால் போதாது. அறிவு ஒருவருக்கு அளிக்கும் ஒளிதான் ஞானம். அவர் ஞானியாக மாறும்போது தான் அறிவின் நோக்கம் நிறைவேறுகிறது. அறிவைப் புகட்டலாம், ஞானத்தைப் புகட்ட முடியாது. எல்லா

மதங்களிலும் அறிவைப் புகட்டுவதற்கு தத்துவப் பகுதிகள் இருக்கின்றன. அவ்வாறு அளிக்கப்படும் அறிவு, வாழ்க்கைக்குப் பயன்படுவதாக ஆக வேண்டுமென்றுதான் நடைமுறைப் பகுதிகளும் மத நூல்களில் இடம் பெறுகின்றன. வாழ்க்கையில் நிறைவுபெற்று, தங்கள் மதத்தின் பெயரை நிலைநாட்டுவதுடன் மக்களுக்கும் நன்மை செய்பவர்களாக ஞானிகள் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட மாந்தரை உருவாக்குவதே எல்லா மதங்களுடைய இலட்சியமுமாகும்.

# அக்ஷரப்ரம்ம யோகம்

8

## முன்னுரை

அழிவிலாப் பரம்பொருளை இருமட்டங்களில் பகுத்துணர்ந்து கொள்ளலாம். வரையற்ற, உருவமற்ற எங்கும் பரந்த அதன் இயல்பை உயர்நிலை இயல்பு என்று கொண்டால், பல்வேறு உருவகங்களாக அது இயங்கும் மட்டத்தை கீழ்நிலை இயல்பு என்று குறிப்பிடலாம். இறைப் பொருளின் இந்த இருமட்ட இயக்கத்தைப் பகுத்துணர்ந்து, அதன் உயர்நிலை இயல்புடன் தம்மை ஒழுங்குபடுத்திக் கொண்டு, கீழ்நிலை உலகாகிய பல்வேறு உருவாக்கங்களுக்கிடையிலும் விருப்பம் போல ஆனந்தமாக, சுதந்திரமாக இருந்து வருபவன் ஞானி. அவரை நடமாடும் தெய்வமாகக் கருதலாம். தோன்றி மறையும் இவ்வுலகத்தின் துன்பங்களும், ஆபத்துக்களும் அவருக்கு இல்லை. இவைகளிலிருந்து அவர் முழு விடுதலை பெற்றவர். சாதாரண மனிதர்களை இப்படிப்பட்ட ஆனந்தமிக்க விவேகிகளாக

உருவாக்குவதே வேதாந்தத்தின் நோக்கமாகும். எனவேதான் முந்தைய அத்தியாயத்தில் 'அறிவு' 'ஞானம்' என்னும் சொற்கள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

முந்திய அத்தியாயத்தில் கூறப்பட்ட கருத்தின் தொடர்ச்சி யாக கிருஷ்ணர் ஞானிக்கு புகழுரை அளிப்பதுடன் இந்த அத்தியாயத்தை தொடங்குகிறார். ஆத்மாவை அறிந்து அனுபவிப்பதில் மட்டுமே ஒருவன் முழுமை பெற்ற ஞானியாகிவிட முடியாது. வாழ்வின் எல்லா நிலைகளிலும், உலக பந்தங்களிலும் ஒருநிலைப்பட்ட மன—புத்தி உடையவனே முழுமை பெற்றவனாவான். எல்லாச் சந்தர்ப்பங்களிலும், எந்நிலைகளிலும், எல்லாவிடத்திலும் எச்சமயத்திலும் நான் கடவுளுக்கே உரித்தான திறனையும் சமநிலையையும் பெற்றவன் என்பதை அவன் அனுயாசமாக நிரூபிக்கின்றான்.

'வேதாந்தம்' என்ற சொல்லுக்கு உபநிஷத இலக்கியங்களில் கொடுக்கப்பட்டுள்ளதைப் போன்ற அறிவார்ந்த விளக்கங்கள் மட்டுமே அருச்சுனனைப் போன்ற செயல்வீரர்களுக்கு அதன்படி வாழ்வதற்கான ஊக்கத்தை அளிக்காது. எனவே சரியான பயிற்சி மூலம் ஆன்ம உணர்வு பெற்று, ஆன்மிக மார்க்கத்தில் இடைவிடாது செயல்படும் ஒருவன்—அவன் போர்களத்திலிருந்தாலும், எதிரிகளின் பாசறை யிலிருந்தாலும், யமுனை நதிக் கரையில் மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தாலும் கோபியர்களை திருப்திப்படுத்திக் கொண்டிருந்தாலும், கம்சனது கழுத்தை நெரித்துக் கொண்டிருந்தாலும்—எல்லாவிதமான செயல்துறைகளிலும், எப்படி வெற்றிகரமாகச் செயல்பட முடிகிறது என்பதற்கான விளக்கம் தேவைப்படுகிறது.

முந்தைய அத்தியாயத்தில் வேதாந்தத்தின் இலக்கியச் சாரமான விளக்கத்துடன் அதன் செயல்முறையும் முக்கிய இடத்தைப் பெறுகிறது என்பது கூறப்பட்டிருக்கிறது. ஆனால் வேதாந்த நோக்கங்களை நடைமுறைக்குக் கொண்டு வரும் வழிமுறைகள் எதுவும் சுட்டிக்காட்டப்படவில்லை. எனினும் அச் செய்முறை இங்கு முழுமையாக விளக்கப்படுகிறது. எல்லை யில்லாப் பரம் பொருளுக்கும், கானலைப் போன்ற பிரகிருதியின் நாம ரூபங்களுக்கும் இடையே உள்ள உறவு தெள்ளத் தெளிவாகச் சுட்டிக்காட்டப்படுகிறது. விளக்கங்களில் சிறைப்படுத்தப்படமுடியாத நிகரில்லா உண்மைப்பொருள், இங்கு இவ்வத்தியாயத்தில் வர்ணிக்கப்படுகிறது.

ஒன்றுமே அறியாத அப்பாவியாய் சுத்த பகுக்கும் நிலை ஆகிய மார்க்கத்தை வீணாகப் பின்பற்றுவார் இவ் வத்தியாயத்தில் கிடைக்கப் பெறும் ஆனந்தத்தையும், பரம் பொருளினால்

கிடைக்கும் ஊக்கத்தையும் உணர முடியாமல், உந்தப்படாமல், ஒன்றுமில்லாமல் உழன்று கொண்டிருப்பான்.

முந்தைய அத்தியாயம் ஒரு ஞானி அந்த பரம சத்து ஒன்றே இவ்வுலகைத் தாங்கி, உலகப் பொருட்களுக்கும், புலன்களுக்கும், புலன் கருவிகளுக்கும் பகுத்துணரும் சக்திக்கும் அரசனாக இருந்து ஒருவனை சிறந்த செயல்வீரனாக தனது செயல்களில் எல்லாம் வெற்றி பெறுபவனாக ஆக்குகிறது. 'கடலைப் பற்றி நாம் அறிந்தபிறகு, பேரலை, சிற்றலை, சீறி வரும் நுரை ஆகிய யாவற்றையும் பற்றியும் தானாகவே அறிந்து கொண்டிருப்போம்.' இத்தகைய உதாரணத்தின் மூலம் முன் கூறப்பட்ட கருத்து தெளிவாகவும், விரிவாகவும் கிருஷ்ணனால் விளக்கப்படுகிறது. அதே முறையில் பரம்பொருளாகிய ஆத்மாவிலேயே எல்லாக் காரியங்களும் காரியக்கரணங்களும், புலன்களின் உலகமும் அடங்கி விடுகின்றன. எனவே ஆத்மாவை உணருவதன் மூலம் எல்லாவற்றையுமே உணர்ந்து விடலாம்.*

## அழிவிலாப் பிரம்மன்

*அர்ஜுன உவாச—*

கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம
அதிபூதஞ்ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே

*8:1*

அதியஜ்ஞ: கதங்கோத்ர தேஹேஸ்மின் மதுஸூதன
ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோஸி நியதாத்மபி:

*8:2*

அர்ஜுனன் கேட்டான்:

(நீ கூறும்) அந்த பிரம்மன் எது? அத்தியாத்மம் என்றால் என்ன? எது கருமம்? அதிபூதமென்று எதைக் குறிப்பிடுகிறாய் புருஷோத்தமா? அதி தெய்வமென்றால் என்ன?

இவ்வுடலிலுள்ள அதியக்ஞன் யார்? எப்படி? தற்கட்டுப்பாட்டுடன் வாழ்ந்த ஒருவர் மரணத் தறுவாயில் உன்னை எப்படி அறிந்து கொள்வது மதுசூதனா?

புதுப்புது வேதாந்தச் சொற்களை திடீரென்று, கடந்த அத்தியாய இறுதியில், கிருஷ்ணர் உபயோகித்தார். 'என்னை

---

* ஸ்வாமிஜியின் 'முண்டகோபனிஷத' விளக்க உரைகளைப் பார்க்க—சிஷ்யன் சௌனகன் குருவாகிய அங்கிரஸரிடம், 'என் ஐயனே, எதனை உணர்ந்து கொண்டால் மற்ற இவ்வனைத்தும் உணர்ந்து கொண்டபடியாகும்' என வினவுகிறான்.
*(கஸ்மின்னு பகவோ விஞ்ஞாதே ஸர்வமிதம் விஞ்ஞாதம் பவதி)*

அதிபூதமாகவும், அதி தெய்வமாகவும், அதியக்ஞமாகவும் அறிந்து கொண்ட விவேகி* மரணத்தறுவாயிலும் கூட உள்ள உறுதியினுல் என்னைத் தெரிந்து கொள்ளுகிறார்' என்றார் கிருஷ்ணர்.* இந்தப் புதிய வார்த்தைகள் அர்ஜுனனுக்கு விளங்கவில்லை; குழப்பமளிப்பவையாக இருந்தன.

அவர் உபயோகித்த ஒவ்வொரு சொல்லையும் விளக்குமாறு அர்ஜுனன் ஆசானைக் கேட்பதுடன் இந்த அத்தியாயம் தொடங்குகிறது. சொற்களை விளக்குவதுடன், இடையறு ஆன்மிக வாழ்வு நடத்தி சுய கட்டுப்பாடு பெற்றவர், தமது மரண நேரத்தில் எவ்வாறு ஆன்மிக உணர்வு பெறுகிறார் என்பதையும் விளக்க வேண்டுமென்று அவன் கோருகிறான்.

பகவான் அவை எல்லாவற்றிற்கும் விரிவாக பதிலளிக்கிறார்.

ஸ்ரீ பகவானுவாச:
அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோத்யாத்ம—முச்யதே
பூதபாவோத்பவகரோ விஸர்க்க; கர்மஸம்ஜ்ஜித: 8:3

பகவான் கூறினார்:

பிரம்மன் அழிவிலாதது, நிகரற்றது. அவருடைய அடிப்படை இயல்புதான் அத்தியாத்மம். உயிரினங்கள் உருவாக்கம் பெற்றுத் திகழுவதற்குக் காரணமாக உள்ள அப்படைப்பு சக்தியை—வேள்வியை—'கருமம்' என்று சொல்லு கிறோம்.

அதிபூதம் க்ஷரோ—பாவ: புருஷஸ்—சாதிதைவதம்
அதியஜ்ஞோஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம்—வர
8:4

மாந்தரில் சிறந்தோனே, எனது இயற்கையின் அழியும் பகுதிகளே அதிபூதம் (பொருள் மூலங்கள்). உள்ளுறையும் ஆன்மிக சத்தைத்தான் அதிதெய்வமென்று குறிப்பிடுகிறோம். உடல்பெற்று இங்குள்ள நானே அதியக்ஞன்.

பிரம்மன் அழிவிலாதது, நிகரற்றது—தோன்றி மறையும் இவ்வுலகத்தில் மாறுதலோ அழிவோ இல்லாத ஒன்றையே 'பிரம்மன்' என்ற சொல் குறிப்பிடுகிறது. ஆன்மாவும் அதுதான்.

---

* வெவ்வேறு வகைகளில் இறைவனை வழிபடுவோருக்கு வெவ்வேறு விதமான அறிவு முறைகளும், உணர்வு மட்டங்களும் அருளப்படுவதாக, சிலர் விளக்க உரைகள் எழுதியிருக்கின்றனர். இவற்றைப் படிக்கும்போது தங்கள் தங்களுடைய சித்தாந்தத்திற்கு கீதையைப் பயன்படுத்திக் கொள்ளப் பார்ப்பது போலவும், இல்லாத பொருளை இச் சொற்களில் திணிப்பது போலவும் இருக்கிறது.

பிறந்தது முதல் இறக்கும்வரை உடலுக்கும், மனதிற்கும், அறிவுக்கும் ஒளியூட்டி இயங்கச் செய்யும் உயிர்த்தத்துவமும் அதுதான்.

அது தனிப்பட்டோரின் உடலில் இருந்து இயங்கும்போது அதற்குப் பெயர் அத்தியாத்மம்—ஆன்மா உருவமற்றதும் சூக்குமமானதுமாகும். எனவே அது எங்கும் நிறைந்துள்ளது. உருவமில்லாவிடினும், அதனுடைய பெருமையையும், வலிமையையும், சக்தியையும், அருளேயும் நாம் உணர்ந்து அனுபவிக்க முடிகிறது. ஒருவர் உயிர் வாழ்வது இதனுல்தான். உருவாக்கத்தின் நிர்ப்பந்தங்களுக்கு உட்பட்டிருப்பதுபோல் தோன்றினுலும் அது தனித்தே இருக்கிறது. குறிப்பிட்ட ஒரு உடலே இவ்வாறு இயக்கிக் கொண்டிருக்கும் ஆன்மாவே அத்தியாத்மா. சங்கரர் இதை மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறுர். 'எல்லா உடல்களிலும் அதனதன் சாரமாக இருந்து அருள் புரியும் தத்துவமே அத்தியாத்மா' என்று கூறுகிறுர்* .

வேலே (கருமம்) என்றுல் வெறும் உற்பத்தி மட்டுமலல. யந்திரங்கள் கூடத்தான் உற்பத்தி செய்கின்றன. வேலே என்ற சொல் இன்னும் ஆழ்ந்த சூக்குமமான, தெய்வீகப் பொருள் கொண்டது ஒவ்வொரு அறிவுக்கும் பின்னுல் அதைச் சிறப்பாக ஊக்குவிக்கும் சக்தி ஒன்று இருக்கிறது. பொருள்களேயும், உடலாக்கங்களேயும் தோற்றுவிப்பதன்மூலம் அப்படைப்பு—சக்தி— தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ளுகிறது. சூக்குமமான அந்த ஆன்மிக வலிமைக்குப் பெயர்தான் 'கர்மா'. மற்றதெல்லாம் வெறும் உழைப்பு.

அழியும் பகுதிக்குப் பெயர் அதிபூதம். அழியா அழியா (அக்ஷர) பரம்பொருளுக்கு மாறுக, பிரகிருதியினுலான இவ்வுலகம் அழியும் (க்ஷர) தன்மையுள்ளது. அழியும் இப்பகுதியின் மூலமாகத்தான் எல்லேயற்ற ஆன்ம சக்தியின் இயக்கக் கரு, உயர்வு, மேன்மை ஆகியவை வெளியாகின்றன. க்ஷரம், அக்ஷரம்—இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் நீராவி இயந்திரத்திற்கும், நீராவிக்கும் இருப்பதைப் போன்றது. ஓடும் மோட்டார்காருக்கும் அதிலுள்ள பெட்ரோலின் ஓட்டும் சக்திக்கும் உள்ளதைப் போன்றது; பாடும் ரேடியோவுக்கும் அதைப் பாட வைக்கும் மின்சார சக்திக்கும் இருப்பது போன்றது. வெளியில் நம் புலன்களுக்குத் தென்படும் உலகம் முழுவதும், அகத் துறையில் மன அறிவுக் கருவிகளும் இந்த 'அழியும் தன்மையுள்ள' (க்ஷர) என்ற சொல்லில் அடங்குகின்றன என்று சொல்லிவிடலாம்.

---

* சுபாவமே 'அத்யாத்மா' என்று கூறப்படுகிறது.

உள்ளுறைவோனே அதி தெய்வம் — இங்கு 'உள்ளுறைவோன்' என்று கூறப்பட்டிருப்பதற்கு, உயிர் (புருஷ) பெற்றுத் திகழும் இனங்களின் சிந்தனை, செயல் போன்ற ஒவ்வொரு திறனையும் இயக்கும் 'சிறப்புச் சக்தி' என்று பொருள் கொள்ளவேண்டும். புலன் உறுப்புக்கள், மனம், அறிவு ஆகியவை இயங்குவதற்குக் காரணமாக இருக்கும் சக்திகளை 'தேவதை'கள் என்று சொல்லுகிறார்கள். எந்தச் சக்தியினால் கண்கள் பார்க்கின்றனவோ, காதுகள் ஒலிகளைக் கேட்கின்றனவோ, மூக்கு மணத்தைத் தெரிந்து கொள்ளுகிறதோ அந்தச் சக்திக்கு ஒவ்வொன்றுக்கும் ஒரு 'தேவதை' என்று குறிப்பிடப்படுகிறது.

இங்கு இந்த உடலிலிருக்கும் நானே அதியக்ஞன்: உணர்ச்சி, சிந்தனை போன்ற செயல்களைத்தான் 'யக்ஞம்' (வேள்வி) என்ற சொல் குறிப்பிடுகிறது. இதை நாம் ஏற்கனவே பார்த்தோம். சாதாரண வேள்விகளைப் போலவே இங்கும் கூடப் பொருட்கள் வேள்விக் குண்டத்தில் இடப்படுகின்றன. அதாவது, புலன் உறுப்புகளை வேள்விக் குண்டமென்றும், அதனுடன் தொடர்பு கொள்ளும் புலன் பொருள்களை வேள்விப் படைப்புகள் என்றும் முதலில் தெரிந்து கொள்வோம். இப்படைப்புகளால் கண், காது போன்ற புலன்களின் 'தேவதை'கள் மகிழ்ச்சியுற்று, நமக்குப் பலன் அளிக்கின்றன. அந்தப் பலன்கள்தான் நாம் தொடர்பு கொள்ளும் பொருள் பற்றிய அறிவு. அகத் துறையில் நடக்கும் இந்த வேள்விச் செயலில் —இந்த அதியக்ஞத்தில் —எல்லாப் படைப்புகளை ஏற்றுக் கொள்ளும் ஒரே யக்ஞ புருஷனாக இருப்பது உயிர்த் தத்துவமாகிய ஆன்மாவைத் தவிர வேறு எதுவாக இருக்க முடியும்? பகவான், 'இவ்வுடலிலிருக்கும் நானே அதியக்ஞன்' என்று கூறுகிறார்.

இந்த விளக்கங்களின் மூலமாக அழியா ஆன்மிகப் பொருள் ஒன்றே மெய்ப்பொருள் என்றும், மற்றவை எல்லாம் நாமாக அதன்மீது சுமத்தும் மருட்சிக் கருத்துக்கள் என்றும் குறிப்புணர்த்துகிறார். எனவே ஆன்மாவைத் தெரிந்து கொண்டவுடன் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டவர்கள் ஆகிறோம்.

அழிவிலாத் தன்மை நமது மெய்யியல்பு என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு ஒருவர் எந்த அனாத்மிகத் துறையிலாயினும் சரி, வேலை செய்யலாம் அல்லது வேலை செய்யாமல் போகலாம்.

இவ்வாறு இறைப் பேருணர்வு பெற்ற ஒருவர் உலக நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் ஒரு தெய்விக சாட்சியாக விளங்குகிறார். உடல், மனம், அறிவு ஆகிய எல்லா மட்டங்களிலும் தானாகத் தேர்ந்தெடுத்துக்கொண்ட ஒவ்வொரு பொருளுலகத் தொடர்பையும் மரணம் படிப்படியாகக் கத்தரித்

துக் கொண்டு வருகிறது என்பதை அவர் ஒதுங்கி நின்று ஒரு சாட்சியைப் போல் பார்க்கிறார்.

ஆன்மப் பேருணர்வுடன் இவ்வுடலைக் கைவிடும் ஒருவர் என்ன ஆகிறார்?

*அந்த காலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா கலேவரம்*
*ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்—யத்ர ஸம்சய:*

8:5

இறுதி நேரத்தில் என்னையே நினைவிற் கொண்டு தமது உடலைக் கை விடுபவர் என்னை வந்து அடைகிறார். இதில் சந்தேக மில்லை.

தான் விரும்பும் அனுபவங்களைப் பெறுவதற்குத் தேவை யாக இருக்கும் வரையில்தான் குறிப்பிட்ட உடலை, ஒரு தனி அகந்தை உபயோகித்துக் கொள்ளுகிறது. இந்த அடிப்படையான வேதாந்த தத்துவங்களை வியாசர் சளைக்காமல் வற்புறுத்திக் கொண்டே வருகிறார். ஒரு அகந்தையின் நோக்கம் நிறைவேறிய வுடன், அது தான் தரித்திருந்த உடலை உதறி எறிந்து விட்டுப் புறப்பட்டு விடுகிறது. உடலுடன் இருந்தபோது தான் கொண்டாடிய தற்பெருமைகள், உறவுகள், கடமைகள்—இவை எல்லாவற்றையும் அறவே மறந்து விட்டு, அடுத்த பயணத்தைத் தொடங்குகிறது. இறக்கும் நேரம் வரையில் இருந்த ஆவல் களுக்கும், வேட்கைகளுக்கும் ஏற்றாற் போலத்தான் அதன் எதிர் கால இலட்சியமும் இருக்கும் என்பது எதிர்பார்க்கக் கூடியதே. எனவே அப் பிரிவுகால இலட்சியம் புனிதமானதாக இருக்க வேண்டும். இதற்காகவே தியான வழிபாடு முறைகள் நமக்கு வழி வழியாக வகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைப் பயிற்சி செய்து வருவதன் காரணமாக மரணத் தறுவாயில் ‘என்னையே நினைவிற் கொண்டு தமது உடலைக் கைவிடும்’ பண்பு ஒரு சாதகருக்கு வருகிறது.

இறுதி நேரக் கருத்தினால் இவ்வாறு உருவாக்கப்படும் வலுவான கடைசிப் பேருறுதி அவ்வகந்தையின் எதிர்கால நிலையை நிர்ணயிக்கிறது. ஒருவன் தனது உடல் வேட்கைகளை யும், மிருக இச்சைகளையும் பூர்த்தி செய்து கொள்ளும் வீண் பெருமையிலேயே தனது வாழ்நாளைக் கழித்திருப்பதாக வைத்துக்கொள்வோம். அவ்வகந்தை இப்புலன் ‘வாசனை’ களையே சேமித்து வைத்துக் கொண்டிருக்கும். எனவே அவற்றிற் கேற்ப உருவத்தையே அடைகிறது. தான் தேடிக் கொண்ட மிருக இயல்புகளை முழுமையாக அனுபவித்துத் தீர்ப்பதற்காக அது பரிணாம ஏணியில் கீழ்நோக்கிப் போவதில் வியப்பு ஒன்றுமில்லை.

ஆனுல் கீழ்த்தரமான புலனின்ப வாழ்வினுல் பயனில்லை என்று விவேகம் பெற்றுவிட்ட பிறகு, ஒருவர் இவ்வுடலின்ப அடிமைத் தளத்திலிருந்து விடுதலை பெற விரும்புகிருர். அந்த நோக்கத்துடன் அவர் செய்திருக்கும் முயற்சிகளினுல் இவ்வுடலைக் கைவிட்டவுடன், பரிணும வளர்ச்சியில் அவர் மேலும் ஒருபடி உயருகிருர். இக் கொள்கை தர்க்க ரீதியாகவும், நம் அறிவுக்கு ஒத்ததாகவும் இருக்கிறது. இதையொட்டியே இறக்கும் தறுவாயில் ஒருவருக்கு வரும் இறுதிச் சிந்தனைகளே அவருடைய அடுத்த பிறவியையும், அப்பிறவியின் சூழ்நிலைகளை யும் நிர்ணயிக்கின்றன என்று வேதாந்த விஞ்ஞானம் வலியுறுத்து கிறது.

கிருஷ்ணரும் அதைத்தான் இங்கு சொல்லுகிருர். உயிர் பிரியும் நேரத்தில் தனது உள்ளத்தை ஆன்மாவின் மீது செலுத்தியவனுக இருந்து இவ்வுடலைக் கைவிடுபவன் இறைவனை அடைகிருன் என்று கூறுகிருர். இவ்வாறு ''இணையிலா வீடு பெற்றவன் அங்கிருந்து திரும்புவதில்லை.''*

இவ்வாறு உறுதியாகக் கூறுவதற்கு வேறு காரணங்கள் இருக்கின்றனவா?

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்—யந்தே கலேவரம்
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவ—பாவித:
**8:6**

இறுதிக் காலத்தில் ஒருவர் எதை நினைத்த வண்ணம் இவ்வுடலைக் கைவிடுகிருரோ, அவர் தாம் நினைத்ததையே சென்று அடைகிருர், குந்தியின் புதல்வனே, அவர் தொடர்ந்து அதைப்பற்றி சிந்தித்து வந்திருப்பதே அதற்குக் காரணம்.

சிந்தனைக்காகவே தங்களை அர்ப்பணித்துக் கொண்ட இந்திய முனிவர்களின் முடிவான கருத்தை இங்கு கிருஷ்ணன் எடுத்துரைக்கிருர்—''இவ்வுடலைக் கைவிடும் போது எப்பொருளை ஒருவர் நினைக்கிருரோ, அப்பொருளாகவே அவர் ஆகிருர்'' நாயைப் பற்றி நினைத்தால் நாயாகிருர்; இறைவனைப் பற்றி நினைத்த வண்ணம் உயிர் நீத்தால் அவர் இறைவன் ஆகிருர்.

இதற்கு பெரிய தத்துவ ஆசிரியர்களின் விளக்கம் தேவை யில்லை. சிந்தனைக்கு ஏற்றபடியே நாம் ஆகிருேம் என்ற கொள்கை புத்திசாலிகள் எல்லோருக்கும் தெரிந்ததுதான். செயல்களுக்குக் காரணமாக இருப்பவை சிந்தனைகள். ஒருவர் தமது வாழ்நாளெல்லாம் ஏதோ முறையில் சிந்தித்து வந்திருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்த எண்ணங்களும், அதிலிருந்து

* கீதை, அத். 8, செய்யுள்—21 காண்க

எழும் நடவடிக்கைகளும் அவர் உள்ளத்தில் ஒரு கால்வாயைப் போல பதிந்திருக்கும். குறிப்பிட்ட ஒரு உடலுடன் தனது ஒருங்கிணைப்பைப் பிரித்துக் கொள்வதற்காக ஒரு உள்ளம் முயற்சித்து வந்திருக்கிறது என்ருல், அழிவிலாப் பேருண்மை நாட்டத்திலேயே மூழ்கியிருந்திருக்கிறது என்ருல், இறைநாட்டம் (அத்தியாத்ம சம்ஸ்காரம்) என்ற கால்வாயே அவருடைய உள்ளத்தில் ஆழப் பதிந்திருக்கும். உடலிலிருந்து உயிர் பிரியும் தருணத்தில், ''எந்தப் பக்கம் போகலாம்?'' என்று திட்டமிடவோ, முடிவு செய்யவோ முடியாது. ஏற்கனவே வெட்டி வைத்திருக்கும் கால்வாய்களில்தான் அவருடைய சிந்தனை செல்லும். அதே நேரத்தில் தோன்றும் சிந்தனைகள், அகந்தை மேற்கொள்ளும் பிரயாணத்தின் திசையை நிர்ணயிக்கின்றன.

இக் காரணத்திஞல்—

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்த்யச
மய்யர்ப்பித மனே புத்திர்—மாமே வைஷ்யஸ்—யஸம்சய:
8:7

ஆகையால் எப்பொழுதும் என்னையே நினைவிற் கொண்டு மனத்தையும், புத்தியையும் என்மீதே நிலைநாட்டி போர் செய். நீ என்னையே வந்து அடைவாய் என்பதில் சந்தேகமில்லை.

அன்ருட வாழ்வில் ஒருவன் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று ஒரு மதம் சொல்லவில்லை என்ருல், அப்படிப்பட்ட சமய முறையினல் அச் சமுதாயத்தில் உள்ளவர்களுக்கு எவ்விதப் பயனுமில்லை. இங்கு கூறப்படும் ஆலோசனை ஆன்மீக வாழ்வுக்கு இன்றியமையாதது போலவே, மற்ற துறைகளிலும் பயனளிப்பதாக இருக்கிறது. வாழ்க்கைத் தரத்தையும், வாழ்வுத் தரத்தையும் உயர்த்தும் எளிய முறை இது.

வாழ்க்கைக்கும் மதத்திற்குமிடையே மனத்தைப் பிரித்து வைக்கும் முறை, இரண்டிலுமே தோல்வியடைவதற்கு வழி வகுப்பதாகும் என்று சிலர் வாதிக்கிருர்கள். இது புத்தியில்லாத பேச்சு. நமது கைகள் வேலை செய்து கொண்டிருக்கும் போது நம் மனமெல்லாம் கை மீதே இருக்கிறதா? சொல்லப் போனல், ஏதேதோ இனம் புரியாத அச்சத்திலும், பொருமையிலும், வெற்றி—தோல்வி கற்பனைகளிலும் மனம் திரிந்து கொண்டே இருக்கிறது. மனத்தின் சக்தி இவ்வாறு வீணுகாமல் இருப்பதற்கு கிருஷ்ணன் ஒரு ஆலோசனை கூறுகிருர். உலக வாழ்க்கையிலும் சரி, அகவாழ்விலும் சரி, உன்னத நிலையை எட்டிப் பிடித்து வெற்றி பெற விரும்பும் ஒருவன் என்ன செய்வான் தெரியுமா? இறைவனின் திருவடிகளில் உள்ளத்தை உறுதியாக நிலைக்கச் செய்து வேலையில் தனது திறன் முழுவதையும் செலுத்தி வெற்றி

பெற்று இவ்வுலகிலும் மறு உலகிலும் நிகரற்றவனுகத் திகழ்வான் என்று பகவான் சொல்லுகிருர்.

இந்து மயத்தில் சமயமும் வாழ்க்கையும் வெவ்வேருனவை யல்ல. அப்படிப் பிரித்தால் இரண்டுமே மடிந்து விடும். உடலி லிருந்து தலேயை மட்டும் தனியாகப் பிரித்து எடுத்து வைத்தால் எப்படியோ அதே கதிதான் மதத்திற்கும், வாழ்க்கைக்கும் ஏற் படும். வாழ்க்கையின் ஆயிரமாயிரம் சிக்கல்களுக்கிடையிலும் கூட, தமது உண்மை இயல்பில்—உலகத் தோற்றத்திற்கு முழுமுதற் காரணமான மெய்ப்பொருளில்—மனம் லயித்து, சிறப்பு மிக்க சாதகர்கள் தமது கடமைகளேச் செய்து வருவார் கள். இது கஷ்டமானதென்ருே, நடைமுறைக்கு ஒவ்வாத தென்ருே சொல்ல முடியாது.

ஒரு நடிகர் ராஜாவாக நாடக மேடைமீது தோன்றுகிருர். அவர் நடிக்கும்போது கூட, வீட்டில் மனேவியும், குழந்தைகளும் தமக்காகக் காத்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதை மறந்து விடுவதில்லே. தமது சொந்த நிலேயை மறந்து விட்டு நாடகம் முடிந்த பிறகும் ''நானே இந் நாட்டு மன்னன்'' என்று சொல்லிக் கொண்டு திரிந்தால், அவரை உடனே பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் போட்டு இழுத்துப் பூட்டி விடுவார்கள். தாம் உண்மையில் யார் என்பதை நினேவு வைத்துக் கொண்டிருப்ப தால்தான் அவர் நல்ல நடிகர் என்று புகழ் பெறுகிருர். அதே மாதிரி தமது தெய்வீக இயல்பு பற்றி இடைவிடாது உணர்வில் இருந்தால்தான் நாம் சிறப்பாக உலகத்தில் வாழ முடியும். நமது சாதனேகளும் உயர்ந்து விளங்கும். வாழ்க்கையில் ஏற்படும் ஏமாற்றங்களும்கூட நம்மை அவ்வளவாக பாதிக்காது.

உண்மையான கல்வி கற்ற ஒருவன் தனது கல்வியை மறப்ப தில்லே. அது அவனுடைய இயல்பின் ஒரு பகுதியாகவே ஆகி விடு கிறது. அவன் பேசும் ஒவ்வொரு வார்த்தையிலும், நடவடிக்கை யிலும் சிந்தனேயிலும் அக் கல்வி மணம் வீசுகிறது. பேருணர்வில் சதா மூழ்கியிருப்பவரும் இவ்வுலகில் அவ்வாறே நடந்து கோள்ளு வார். அவருடைய நடவடிக்கைகளில் சுயநலத்தின் சாயலே இருக்காது. சிந்தனே அன்பில் ஊறியிருக்கும் உணர்ச்சிகளில் கருணேயே மேலோங்கி நிற்கும். இதனுல்தான் வேதகால நாகரீகம் அப்போதிருந்த மக்களே உயர்ந்தவர்களாக்கியது. இப்போதிருப்பவர்களே பெருமிதம் கொள்ளச் செய்கிறது. குற்ற மற்ற பயன்பெறும் நோக்கத்துடன், இறைவனே இடையருது உள்ளத்தில் கொண்டு, இவ் வாழ்க்கைப் போராட்டத்தை ஒருவர் நடத்தினுல், அவருடைய 'மனமும், புத்தியும் என்னிடமே லயித்து விடுகின்றன' என்று கிருஷ்ணர் தெளிவாக்குகிருர். 'சிந்தனே எப்படியோ நாம் ஆவதும் அப்படி' என்று முற்கூறிய *

கொள்கையின்படி, நாமும் இறைவனுடன் இரண்டறக் கலந்து விடுகிறோம். நமது உட்கருவியாகிய மனம், மற்றவைகளை எல்லாம் மறந்து எப்போதும் ஆன்ம நினைவாகவே இருப்பதன் மூலம் ஆன்மாவுடன் கலந்து விடுவதால், ''நீ என்னையே வந்து அடைகிறாய்,'' என்று பகவான் சந்தேகத்திற்கு இடமில்லாமல், அழுத்தமாகக் கூறுகிறார்.

அப்யாஸ—யோக—யுக்தேன சேதஸா நான்யகாமினா
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானு சிந்தயன்
8:8

ஒருவருடைய மனம், மற்ற பொருள்கள் மீது செல்லாமல், தியானப் பயிற்சியில் ஊறி ஒளிமயமான பரமபுருஷனைப் பற்றிய உறுதியான சிந்தனையுடனிருந்தால், அது இறுதியில் (இறைவனிடமே) செல்லுகிறது.

இங்கு குறிப்பிடப்படும் மரணம் இவ்வுடலின் மறைவைப் பற்றி மட்டும் குறிப்பிடுவதல்ல, அகந்தையின் மரணமும் கூட இதில் சேர்ந்திருக்கிறது. தியான முறையை உறுதியாகப் பின் பற்றி, பயிற்சித்து வந்தால், அகந்தை மடிந்து விடுகிறது. தனிச் சிறு அகந்தையை உயர்த்துவதன் மூலம் முழுமையான இறையுணர்வுடன், விடுதலை பெற்ற தெய்வ மனிதனாக, இவ் வாழ்க்கையிலேயே ஒருவர் உயர்ந்து தெய்வீக நிலையை அடைய முடியும்.

அவ்வாறு வாழ முயலுபவர் இவ்வுலகத்தைத் தமது சொந்த இடமாகக் கருதுவதில்லை. ஒரு வழிப்போக்கன் இடையிலுள்ள ஒரு சத்திரத்தில் தங்கி, சற்று இளைப்பாறிக் கொண்டு மீண்டும் தனது யாத்திரையைத் தொடங்குவது போல, இடையறா ஆன்ம தியானத்திலேயே மனத்தை நிலைநாட்ட முயற்சிப்பவரும் இவ்வுலகத்தை ஓர் வழியிடைச் சத்திரமாக நினைக்கிறார். தொடர்ந்து மனத்திற்கு இவ்விதம் பயிற்சியளிப்பதால், அது ஒருமுகமான ஆன்ம தியானத்தில் நிலைக்க முடிகிறது. பிரார்த்தனை, உபாசனை முறைகளைக் குறித்து வேதங்கள் விரித் துரைக்கின்றன. பக்தியும், சரணாகதியும் எவ்வளவு முக்கிய மானவை என்று புராணங்கள் விளக்குகின்றன. ஆன்ம உணர்ச்சி பெறுவதற்கான இம் முறைகளுக்கு புரட்சிகரமான புது விளக்கம் இச் சுலோகத்தில் கொடுக்கப்படுகிறது. செயல் துறையில் ஈடு பட்ட சாதாரண மக்கள் அன்றாட வாழ்க்கையில் எதைச் செய் தாலும் துறவி போன்ற மனப்பான்மையுடன் செயலாற்ற வேண்டுமென்பது முந்திய செய்யுளின் கருத்து. வேத, புராணக் கருத்துக்களுக்கு இந்த அடிப்படையில் இப்போது புது விளக்கம் தரப்படுகிறது.

இந்த சாதக முறையினல் மனமும் புத்தியும் ஒன்றுபட்டு சிறப்பாக வேலே செய்வதால் ஆன்ம உணர்வு பெறுவது கஷ்டமில்லே—'பேரொளி மிக்க பரம புருஷன் நினேவாகவே இருப்பவருக்கு அப்பரம்பொருள்—நினேவு இறுதி நேரத்தில் வருகிறது. பார்த்தா, மனமும், அறிவும் ஒருமித்து ஒருவர் எதை சதா ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருக்கிருரோ, அதை அவர் விரைவில் அடைந்தே தீருகிருர். எனவே பதவுரையில் கூறியதைவிட மிக விரிவாகப் பொருள் கொள்ள இச் சுலோகம் இடமளிக்கிறது. போதிய அளவு ஒருவர் தமது மனத்தையும், அறிவையும் பயன் படுத்திக் கொண்டால், அவர் ஆன்ம உணர்வு பெற்று 'ஒளிப் பிழம்பாக இருக்கும் என்னே இந்த வாழ்க்கையிலேயே உணர முடியும்.' முழு ஆன்ம ஈடுபாடு கொண்ட ஒருவரையே ''அனுசிந்தயன்'' என்று இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒரே மாதிரியுள்ள சிந்தனேகள் குறிப்பிட்ட இலட்சியத்தை நோக்கி ஜீவ நதியாகப் பாய்ந்து கொண்டிருப்பதே தியானம். குறிப்பிட்ட லட்சியத்தை நோக்கி உள்ளக் கால்வாயில் செல்லும் சிந்தனே ஓட்டம் முற்கூறிய சொல்லிலுள்ள 'அனு' என்ற முக்கியப் பகுதி யின் மூலம் குறிப்பிடப்படுகிறது.

நாம் இடைவிடாமல் தியானிக்க வேண்டிய இந்த மகா புருஷருடைய தன்மைகள் என்ன?

கவிம் புராண—மனுசாஸிதார—
மணோரணீயாம்ஸ—மனுஸ்மரேத்—ய:
ஸர்வஸ்ய தாதார—மசிந்த்யரூப—
மாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் 8:9

எல்லாமறிந்த, புராதனமான (உலகெலாம்) ஆட்சி புரிகின்ற, அணுவினும் சிறிய, எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ள உலகத்தில் கற்பனேக்கும் எட்டாத, கதிரவனேப்போல் ஒளி வீசுகிற (அஞ்ஞானமாகிய) இருளுக்கு அப்பாற்பட்ட பரம் பொருளே ஆழ்ந்து நினேத்த வண்ணம் இருப்பவர்—

இடையரு ஆன்ம சிந்தனேயில் ஆழ்ந்திருந்து வரும் சாதகர் களுக்கு, மரண நேரத்தில், தெய்வ நினேவு தானுகவே வருமென்றும், இந்த சக்தி வாய்ந்த தெய்வீக இயல்பை ஒருவர் தாமே வளர்த்துக் கொள்ள முடியுமென்றும், இவ்வுடலுடன் இருக்கும் போதே அகந்தை மைய வாழ்வுக்கு அடியோடு முடிவு கட்டி விடலாம் என்பதை மிக நுணுக்கமாக, கடந்த இரு சுலோகங்களில் குறிப்புணர்த்தப்பட்டது.* பொய்யான பொருளுறைகளிடமிருந்து மனத்தை இடையரு ஆன்ம சிந்தனே மூலம் விடுவித்துக் கொள்ளுபவர்களே, அறியாமையிலிருந்து

* அத். 8, செய்யுள் 5, 6

எழும் தாறுமாருன கருத்துக்களேயும், வீண் பெருமைகளேயும் வேருடன் சுட்டெரிக்க முடியும்.

முந்திய சுலோகத்தில் ஆன்மாவை 'ஒப்புயர்வற்ற பேரொளிமிக்க புருஷனுக'க் கருதி தியானிக்க வேண்டுமன்று கிருஷ்ணன் குறிப்புணர்த்தினுர். 'ஆக்ஸிஜெனிலிட்டீன்' பற்றி சிந்தித்துப் பார்க்கும்படி யாராவது என்னிடம் கேட்டுக் கொண்டால், நான் எவ்வளவுதான் கெட்டிக்காரனுக இருந் தாலும் அது முடியாது, அது என்னவென்று தெரிந்தால்தானே அதைப்பற்றி நினேத்துப் பார்க்க முடியும்? வெறும் வார்த்தையை வைத்துக் கொண்டு என்னவென்று சிந்திப்பது ஆக்ஸிஜெனி லிட்டீன் என்பது பல எழுத்துக்களேக் கொண்ட ஒரு வார்த்தை யாக ஒலிக்கிறதே தவிர அதற்கு என்னேப் பொறுத்த வரையில் எவ்விதப் பொருளும் இல்லே. அதைப் போலவே ஒப்புயர்வற்ற பேரொளி மிக்க ஆன்மா பற்றி சிந்திக்கச் சொல்லுவது ஆக்ஸிஜெனிலிட்டீன் சிந்தனே மாதிரி ஒரு பயனற்ற வேலே.

வேதாந்தத்தை வாழ்க்கையில் பின்பற்றுவதற்கு வழி வகுத்துக் கொடுக்கும் ஒரு பாடப் புத்தகத்தில், அர்ஜுனன் மேற் கொள்ளவேண்டிய தியானமுறையை கிருஷ்ணர் விளக்கித்தான் ஆக வேண்டும். எனவே அவர் கூறியதை நடைமுறையில் கடைப் பிடிப்பதற்கான திட்டமொன்று இப்போது நாம் படிக்கும் இரு சுலோகங்களிலும் விவரிக்கப்படுகிறது.

இச் சுலாகத்தில் வரும் பல்வேறு அடைமொழிகள், பேருண் மைப் பொருள் என்ருல் என்னவென்று விளக்கவில்லேயானுலும் அதைக் குறிப்புணர்த்துகின்றன. அப் பேருண்மையே நிலேயற்ற ஜடப் பொருளுக்கு உயிர் சக்தியளிக்கிறது. ஒரு குறிப்பிட்ட அடைமொழி மட்டும், தனியாக நின்று, அப் பரம்பொருளே விவரிப்பதாக நினேத்துவிடக் கூடாது. கணித சாத்திரத்தில் இரு நிலவரங்களேக் கொண்டுதான் ஒரு புள்ளியிட்ட இடத்தை விவரிக்க முடிகிறது. அவ்வாறே வார்த்தைகளில் சிக்காத பேருண்மைப் பொருளே இங்குள்ள சொற்களின் தொகுதி ஏறக் குறைய திட்டவட்டமாக எடுத்துக் காட்டுகிறது.

உள்நோக்கும் புத்தியுடன் ஒருங்கிணேந்த மனமும் பெற்ற ஒருவர் இச் சுலோகத்தில் மறைந்துள்ள பொருளேப் பற்றி ஆழ மாகவும், முழுமையாகவும் சிந்திக்கத் தொடங்கினுல் எல்லேயற்ற பேரானந்தத்தில் திளேக்கும் மனப்பக்குவம் அவருக்கு வருகிறது.

எங்கும் நிறைந்துள்ள ஒன்றுதான் தனி உருவாக்கத்தின் உடலில் ஆன்மாவாகத் திகழ்ந்து அவருடைய சிந்தனேகளுக்கு ஒளியூட்டுகிறது. அது எங்கும் இருப்பதால், எல்லா உருவாக்கங் களும், எல்லாக் காலங்களிலும் அதன் பேரொளியில் மூழ்கியிருக் கின்றன. உலகில் எல்லாப் பொருள்கள் மீதும் சூரிய வெளிச்சம்

படுவதால், ''கதிரவன் எல்லாவற்றையும் பார்க்கிறுன்'' என்று சொல்லுகிறேம். பேருணர்வு என்ற மெய்ப் பொருளின் இயல்பும் அதுதான். அப் பேருணர்வு நம்மிடம் இல்லையானுல், நாம் எந்தப் பொருளையும் அறிந்து கொள்ள முடியாது. உலக வழக்கின் அடிப்படையில் பேச வேண்டுமென்ருல், ஆன்மா என்பது முற்றும் உணர்த்த (கவி) முழுவதற் பொருள் என்று சொல்ல லாம். அத் தெய்வீகப் பொருளின் ஆதரவின்றி எதைப் பற்றியும் யாருக்கும் எவ்வித அறிவும் இருக்க முடியாது.

புராதனமான (புராண):ஆன்மா மிகப் புராதனமானது என்று ஏன் சொல்லுகிறேம். இப் பிரபஞ்சம் தோன்றுவதற்கு முன்னுலிருந்தே அந்த அழிவிலா மெய்ப்பொருள் இருந்து வரு கிறது. உலகம் உள்ளளவும் அதுவும் இருக்கும். பன்மைத் தோற்ற மிக்க இவ்வுலகின் முடிவுக்குப் பிறகு அது நிரந்தரமாக இருக்கும். எனவே அதன் நிரந்தரமான, மாற்றங்களின்றி எங்கும் பரந்து நிற்கும் தன்மையயும், காலம் என்ற கருத்தே அதி லிருந்துதான் எழுகிறது என்பதையும் குறிப்பிடுவதற்காக 'அது புராதனமானது' என்று பேச்சு வழக்கில் கூறுகிறேம்.

உலகெலாம் ஆட்சி புரிகின்ற (அனுஸா சிதா):ஆன்மா என்ருல், உலகத்தை விருப்பம் போல் ஆட்டிப் படைத்து கொடுங்கோல் செலுத்தும் சக்தியோ, சுல்தானே அல்ல. உடல், மனம், அறிவு ஆகியவை இசைந்து இயங்கி வாழ்வதற்கு வகை செய்யும் பேருணர்வு அது. இந்தப் பொருளில்தான் 'உலகாளும் சக்தி' என்று ஆன்மா இங்கு குறிப்பிடப்படுகிறது.

எதையும் அறிந்து கெள்ளும் ஆற்றலே அது நமக்குத் தருவதால் அது உலகாளும் சக்தி. வாழ்க்கை என்பது அனுபவங் களின் தொகுப்பு. நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளும் ஆற்றல் உயிரினங்களுக்கு இல்லை என்ருல், எவ்வித வாழ்க்கையும் இருக்க முடியாது. களிமண் இல்லை என்ருல், பானை இல்லை. பானை உலகை 'ஆட்சி புரிவது' களிமண். எல்லா நகைகளிலும் தங்கம் இருப்பது போல, எல்லா அலைகளிலும் கடல் இருப்பது போல, எல்லா கற்கண்டிலும் இனிப்பு இருப்பது போல, நாம ரூபங்களு டன் விளங்கும் இப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றிலும் ஆன்மா ஊடுருவி நிற்கிறது. இந்த அர்த்தத்தில் ஆன்மா 'உலகெல்லாம் ஆட்சி புரிகின்ற' இயக்கப் பொருளாக விளங்கு கிறது. இரும்பால் செய்த ஒன்றும், தங்கத்தினுல் செய்த ஒன்று மாக, இரண்டு சாவிகளை வைத்துக் கொண்டு நிற்கும் முரட்டுப் போலீஸ்காரனுக சிலர் கடவுளைச் சித்திரிக்கிறுர்கள். தங்கச் சாவி யினுல் சொர்க்கத்க் கதவைத் திறந்து நல்லவர்களை அங்கு அனுமதிப்பதும், இரும்பு சாவி கொண்டு நரகத்தின் கதவுகளைத் திறந்து கெட்டவர்களை அங்கு போகச் சொல்லுவதும் அவரு

டைய வேலையாம்! கடவுளை இப்படிச் சித்திரிப்பது காட்டுமிராண்டித் தனமாகத் தோன்றுகிறது. விழிப்புணர்ச்சி பெற்ற சிந்தனைக்கு இந்த போலீஸ்காரர் சித்திரம் அவ்வளவு கவர்ச்சிகரமாக இருக்காது.

அணுவைக் காட்டிலும் நுணுக்கமானது (அணோரணியான்): ஒரு தனிமப் பொருளின் மிக மிகச் சிறிய பகுதிக்குப் பெயர் அணு. சாதாரணமாக அது கண்ணுக்குக் கூடத் தெரியாது. அவ்வளவு நுணுக்கமானது. ஆன்மா நுணுக்கத்திலும் நுணுக்கமானது என்று இங்கு சொல்லப்படுகிறது. நுணுக்கமாக ஒரு பொருளின் பரவி நிற்கும் தன்மையும் அதிகரிக்கிறது. பனிக் கட்டியை விட நீர் நுணுக்கமானது. நீரைவிட நீராவி நுணுக்க மானது. ஏனெனில் நீராவி இன்னும் அதிகமாகப் பரவி நிற்கக் கூடியது. பரவி நிற்கும் இயல்பைக் கொண்டுதான் ஒரு பொருள் எவ்வளவு நுணுக்கமானது என்று நிர்ணயிக்கிறோம். ஆன்மா நுணுக்கத்திலும் நுணுக்கமானது என்று உபநிடதங்கள் கூறும் நோக்கம், ''இது இல்லாத இடமே இல்லை; எல்லா இடங்களி லும் பரவி நிற்கிறது, அதனுள் ஊடுருவி நிற்க்கக்கூடியது எதுவு மில்லை'' என்பதைத் தெளிவாக்குவதுதான்.

எல்லாவற்றிற்கும் ஊட்டம் அளித்து ஆதரிப்பது (சர்வஸ்யதாதார): ஊட்டம் அளிப்பது என்றால், ''எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பது என்ற பொருளில் அச் சொற்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒரு சினிமாக் கொட்டகையினுள் போனால், எதிரில் வெள்ளைத்திரை தொங்குகிறது. படங்கள் அதன்மீது தோன்றி மறைகின்றன. அந்தத் திரை இல்லை என்றால் என்ன படம் என்றுகூட நமக்குத் தெரியாது. நாம் படம் பார்க்க அந்தத் திரை ஆதாரமாக இருககிறது. இந்த வகை யில் படத்திற்கே 'ஊட்டமளித்து' நிற்பது அதுதான். மிக அற்புதமான கருத்தை, சிறப்பு மிக்க சித்திரக்காரர் ஒருவர் ஓவியமாகத் தீட்டியிருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். சித்திரம் வரைவதற்கு அவர் உபயோகித் துள்ள துணி வண்ணங்களின் ஈரத்தில் நைந்து விழுந்து விட்டால், அவர் காட்ட நினைத்த கருத்தின் கதி என்ன? அதை நினைவு கொண்டு பேசினால், துணியின் உறுதியே அச் சித்திரத்திற்கும், அது குறிப்பிடும் கருத்துக்கும் 'ஊட்டம் அளிக்கிறது' என்று சொல்லலாம் ·இல்லையா? அவ்வாறே பிறப்பு முதல் மரணம் வரை, எல்லா நிலைகளிலும் நம்மைச் சூழ்ந்திருக்கும் பொருள்களுக்கும், நடந்து கொண்டிருக்கும் நிகழ்ச்சிகளுக்கும் ஒளியூட்டுகிற பேருணர்வுச்சக்தி என்று இல்லை என்றால், வாழ்வு என்பதே இல்லை. வாழ்க்கையில் அது என்னைப் பாதித்தது அல்லது மகிழ்வித்தது என்று

சொல்லிக் கொள்வதற்கு ஒன்றுமே இருக்க முடியாது.

சிந்தனைக்கு எட்டாதது (அசிந்த்ய ரூப): எல்லாமறிந்த, புராதன உலகெலாம் ஊடுருவி அதற்கு மேலுமிருந்து ஆட்சி புரிகின்ற, அணுவினும் நுணுக்கமான, எல்லாவற்றிற்கும் ஊட்ட சக்தியாகி ஆதரிக்கின்ற ஒன்று இருக்கிறது என்றும், அதை ஆழ்ந்த தியான மூலமாக தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் சொன்னால் நமக்குக் குழப்பம் தோன்றுகிறது. ''சரிதான், ஆன்மாகூட மற்ற பொருள்களையோ, கருத்தையோ அறிவது போல புரிந்து கொள்ளக்கூடிய ஒன்றுதான் போலிருக்கிறது,'' என்று நாம் தவருக நினைத்து விடலாம். புலன்கள், மனம், அறிவு முதலிய குறுகிய சாதனங்களினுல் அதைப் புரிந்து கொள்ள முடியாது. இச் சாதனைகளைக் கடந்த நிலையில்தான் இறை யுணர்வு நமக்குத் தோன்றும் என்பதை வலியுறுத்துவதற்காகவே 'ஒரு உருவமென்ற வகையில் நாம் அதை அறிந்து கொள்ள முடியாது' என்று பகவான் இங்கு கூறுகிறார். குறுகிய அறிவுக் கருவிகளுக்கு அப்பாற்பட்டதாக இருப்பினும் அதாவது மேற் கூறிய சாதனங்களைத் தான் தாண்டிய நிலையில் ஆன்மிகப் பொருள் தனது அடிப்படை இயல்பாக இருக்கும் தெய்வீக விழிப்புணர்வுதான் நம் ஒவ்வொருவருள்ளும் ஏற்படுகிறது. என்பதில் சந்தேகமில்லை.

கதிரவனைப் போன்று பிரகாசித்து நிற்பது (ஆதித்யவர்ண): சிந்தனைக்கு எட்டாதது என்பது உண்மை யானல் புத்திசாலியாக உள்ள எந்த சாதகருக்குமே அதை அடைய முடியுமா என்ற சந்தேகம் வரும். மனம், அறிவு என்ற எல்லைகளுக்கு உட்பட்டுத்தான் சாதகர்கள் எல்லோரும் முயற் சித்து வருகிறோம். நிமிஷத்திற்கு நிமிஷம் நமது புலன்கள் கொண்டுவரும் அனுபவக் குப்பைகளை சேர்த்துக் குவித்து வைத்துக் கொள்கிறோம். முதலில் சாதகம் தொடங்கும்போது நாம் எல்லோருமே புலன்களுடன் உறுதியாக இணைந்து நிற்பவர் களாதலால், ஆன்மீக முன்னேற்ற முயற்சியில் ஒரு நிலையை அடைந்தவுடன் அப்படியே திகைத்துப்போய் உட்கார்ந்து விடு கிறோம். அறிய முடியாத ஒன்றை அறிய முயற்சிப்பது வீண் வேலை என்று தோன்றிவிடுகிறது. அனுபவிக்க முடியாததை அனுபவிக்க முயலும் பைத்தியக்காரத்தனத்தைக் கைவிட்டு விடலாமா என்ற நினைப்புகூட வருகிறது.

ஆன்மா 'அறிந்து கொள்ள முடியாதது' அல்லது 'கற்பனைக்கு எட்டாதது' என்று கூறும்போது, சாதாரணமாக மற்ற பொருள்களை அறிந்து கொள்ள உதவும் கருவிகளின் மூல மாக ஆன்மாவை அறிய முடியாதது என்ற பொருளிலேயே சொல்லப்படுகிறது. உடல், மனம், அறிவு ஆகியவை இயங்கு

வதற்குக் காரணமான ஆன்மாவை, அந்தக் கருவிகளைக் கொண்டே பார்க்க முடியுமா? என் கையில் துப்பாக்கி ஒன்று இருப்பதாகக் கனவு காண்கிறேன். எதிரிகளையெல்லாம் சுட்டு வீழ்த்துகிறேன். ரத்தம் பீறிடும் அவர்களுடைய உடல்களைத் தூக்கி எறிந்ததில் என் கையெல்லாம் ரத்தக் கறையாக இருக்கிறது. அப்போது தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்கிறேன். பார்த்தால், கையில் துப்பாக்கியுமில்லை, துரும்புமில்லை. கழுவிச் சுத்தம் செய்து கொள்வதற்கு கையில் ரத்தக் கறை எதுவுமில்லை. உடல், மனம், அறிவுக் கருவிகளுடன் ஒருவர் தம்மை இணைத்துக் கொள்ளும் வரை தாமே தோற்றுவித்துக் கொள்ளும் பலவகை மருட்சிகளில் சிக்கிக் கொள்ளுகிறார். அவருக்கு ஆன்மா 'அறிய முடியாதது' அல்லது 'அனுபவத்திற்கு எட்டாதது' ஆகிறது. ஆனால் அக் கருவிகளிலிருந்து விடுவித்துக் கொண்டு, உறுதியான ஆன்ம சிந்தனையில் மூழ்கி விடுபவருக்கு தமது உண்மை இயல்பு பற்றிய விழிப்புணர்ச்சி ஏற்படுகிறது.

வேதாந்தத்தின் இந்த அடிப்படைக் கருத்தை அறிந்தவர்கள், சூரியனை இங்கு ஆன்மாவுக்கு ஒப்பிட்டிருப்பதன் பொருத்தத்தை தெளிவாகக் கண்டு மகிழ்வார்கள். வேறொரு ஒளியின் உதவி கொண்டா சூரியனைப் பார்க்கிறோம்? ஒளியின் 'அடிப்படை'யே சூரியன்தான். எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் பிரகாசப் பொருள் கதிரவன். அது சுய ஒளியுடன் திகழ்வது உலகத்திற்கு தானாகவே தெரிகிறது. அவ்வாறே சுத்த ஞானமயமான ஆன்மாவை தெரிந்து கொள்ள வேறு ஒரு ஞானம் தேவையில்லை. விழித்திருப்பவனைப் பற்றி கனவிலிருப்பவனுக்கு ஒன்றும் தெரியாது. விழிப்பு வந்தவுடன் கனவிலிருந்தவன் மறைந்து விடுகிறான். ஆனால் ''நான் விழிப்பு நிலையில் இருக்கிறேன்'' என்று எப்படித் தெரிந்து கொள்வது? விழித்தவனாக ஆகிவிடுதலே விழித்துக் கொண்ட நிலையைத் தெரிந்து கொள்வதாகும். அகந்தை மைய வாழ்வுக்கு முடிவு கட்டிவிட்டு, ஆன்மிக வாழ்வில் விழித்தெழுந்தவுடன், ''நானே ஆன்மா'' என்று மின்னலடித்ததைப் போல் ஒருவர் கண்டு கொள்கிறார். இவ்வளவு காலம் எங்கெங்கோ திரிந்து கொண்டதை நினைத்துத் துடிதுடித்த அகந்தை தனது உண்மை இயல்பை ''அறிந்து கொள்கிறது'' எப்போதுமே தான் வேறு எதுவாகவும் இருந்ததில்லை என்பதை அகந்தைக்கு விளங்குகிறது. கடுகைத் துளைத்து அதில் கடலைப் புகுத்தியதைப்போல், இவ்வளவு கருத்துக்களும் ''கதிரவனைப்போல் ஒளி வீசுகிற'' என்ற ரத்தினச் சுருக்கமான வார்த்தைகளில் அடங்கியிருக்கின்றன.

இருளுக்கெல்லாம் அப்பால் (தமஸப்பரஸ்தாத்): ஆன்மாவின் இயல்பை விளக்குவதற்கு சூரியனை உதாரணமாகக் கூறியது நன்றாக இருக்கிறதென்றாலும், சிலருக்கு இதிலும்

சந்தேகம் எழ இடமிருக்கிறது. சூரியன் ஆகாயத்தில் ஜகஜ்ஜோதி யாகப் பிரகாசிப்பது உண்மைதான். ஆனல் பகல் நேரத்திலேயே அவ்வாறு இருக்கிறது. பகலிலும் கூட ஒளி சில நேரங்களில் மிக அதிகமாகவும், சில நேரங்களில் குறைந்தும் இருப்ப தாகத்தோன்றுகிறது. ''ஆன்மா கதிரவனைப் போல் பிரகாச மானது'' என்ற பகவான் கூறியவுடன், 'ஓ, சரிதான்—ஆன்மா வும் மாலையில் அஸ்தமித்து விடும் போலிருக்கிறது, அதன் ஒளி சில சமயங்களில் அதிகமாகவும், சில சமயங்களில் குறைந்தும் இருக்கும் போலிருக்கிறது என்று அதன் இயல்புபற்றி சிலர் குழப்பிக் கொள்ளலாம். அதைப்போக்குவதற்காகவே கிருஷ்ணர் இதையும் சேர்த்துச் சொல்லுகிருர். அறியாமை அல்லது மாயை என்ற ''இருளுக்கு ஆன்மா அப்பாற்பட்டது'' என்று கூறுகிருர்; சூரியனுக்கு இருப்பது போன்று இரவு—பகல் வரையறைகள் ஆன்மாவுக்கு இல்லை என்று தெளிவுபடுத்துகிருர்.

எல்லாமறிந்த புராதனமான எல்லாவற்றையும் ஆளுகின்ற மிக நுணுக்கமான உயிரியக்கம் அளிக்கும் சத்துப் பொருள, க, கற்பனைக்கும் எட்டாத, சூரியனைப் போன்று சுயம் பிரகாசமான அறியாமைக்கு அப்பாற்பட்ட ஒன்ருக உணர்ந்து ஆன்ம வழி பாட்டில் ஈடுபடுபவர் 'ஆன்மாவை அடைகிருர்'.

ப்ரயாணகாலே மனஸாசலேன
பக்த்யாயுக்தோ யோகபலேன சைவ
ப்ருவோர்—மத்யே ப்ராண—மாவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷ—முபைதி திவ்யம் 8:10

இறுதி நேரத்தில் தளரா உள்ளத்துடன் பக்தியில் லயித்து, யோக பலத்தினல் தனது இரு புருவங்களுக்கும் நடுவில் பிராணனை நிறுத்துபவன், இணையற்ற ஒளியுடன் திகழும் பரம புருஷனை அடைகிருன்.

இச் சுலோகத்தின் பதவுரையுடன் நிறுத்திக் கொள்பவர் கள் கருத்தைத் தவருகப் புரிந்து கொள்வது மட்டுமின்றி மற்றவர் களையும் குழப்பத்தில் ஆழ்த்தி விடுகிருர்கள். ஆன்மத் தியானத்தில் ஆழ்ந்து, அதில் உறுதியாக நிலைப்பதைப் பற்றிக் கூறும் பகுதி இது. எனவே, ''இறக்கும் நேரத்தில்'' என்ருல், ''அகந்தையானது மடியும் நேரத்தில்'' என்று பொருள் கொள்ள வேண்டும். உடல், மனம், அறிவு ஆகியவற்றுடன் இணைத்துக் கொள்வதை அடியோடு அறுத்துக் கொண்டு, அகச் சந்தடி முற்றி லும் அடங்கி அமைதி பெறும் தருணத்தில், தளரா உள்ளத்துடன் ஒருவர் இங்கு கூறப்படும் சாதக முறையை மேற்கொள்ள வேண்டும்.

வழிபாட்டு முறையில் சில சம்பிரதாயங்களைக் கையாளுவது

தான் பக்தி என்று சிலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். எப்படியோ அவர்களுடைய மனத்தில் இக் கருத்து நன்றாகப் பதிந்து போயிருக்கிறது. எள்ளளவும் தயக்கமில்லா நம்பிக்கையுடன் சுயநல நோக்கம் எதுவுமின்றி இறைவனிடம் அன்பு செலுத்துவதே பக்தி. அன்பு காட்டுபவரும், அன்பு பெறுபவரும் இரண்டறக் கலந்து விடுவதையே அன்பின் அடையாளமாகக் கொள்கிறோம். அல்லவா? ஒருவருக்கு வரும் சுக துக்கங்கள் தமக்கும் வந்ததாக மற்றவர் நினைக்கிறார். அதுதான் உண்மையான அன்பு. அதனால்தான் ''அகந்தை தனது மெய் இயல்புடன் இரண்டறக் கலந்து விடுதலே பக்தி'' என்று சங்கரர் கூறுகிறார். இந்தச் செய்யுளிலும் பொருள் அதுதான். ஒரு சாதகர் தியான காலத்தில் இருக்க வேண்டிய நிலை என்ன? முந்திய செய்யுளில் நுணுக்கமாக விவரிக்கப்பட்ட பேருணர்வுத் தத்துவத்துடன் ஒன்றாகக் கலந்து கரைந்துவிடுவதற்குத் தயாரான நிலையில் இருக்க வேண்டும். சந்தடியற்ற மனம் அடங்கியிருக்கும் போது, அவர் தமக்குள்ளேயே ஆன்ம அனுபவம் பெற வேண்டும். மருட்சியுற்ற அகந்தை அப்போது மடிந்துவிடுகிறது.

யோக சக்தியினால் (யோக பலேன): ஒருவருக்கும் விளங்காத ஏதோ ஒரு இரகசிய சக்தியைப் பற்றி இங்கு பகவான் சொல்லுகிறாரோ என்று யாரும் திகைத்துப் போக வேண்டியதில்லை. நமக்குள் பாம்புபோல் ஒரு சக்தி சுருண்டு கிடப்பதாகவும், பக்தர்களில் கூட பொறுக்கியெடுத்த சிலரைத் தவிர மற்றவர்களுக்கு அதை சொல்லக் கூடாது என்றெல்லாம் பேசுகிறார்களே—அதைப் பற்றி எல்லாம் இச் சுலோகத்தில் இல்லை, தியானத்தில் நீண்ட நேரம் ஆழ்ந்திருக்கப் பழகியவர்களுக்கு ஒருவகை மன வலிமை உண்டாகிறது. முடிவிலாக் கலக்கங்களிலிருந்து ஒருவகை மன வலிமை மனத்தைத் திருப்பி, அறிவை அமைதிமிக்க தியானத்தில் உறுதியுடன் நிலைக்கச் செய்யும் போது, கொழுந்துவிட்டு எரியும் தீயைப் போல் அளவற்ற ஆர்வமும், மனஉறுதியும் தோன்றுகிறது. இதுதான் இங்கு கூறப்படும் ''யோக பலம்''.

பரம பொருளைக் கருதி ஆழ்ந்த தியானத்தில் ஈடுபடும் ஒரு சாதகருக்கு இது ஏறக்குறைய விரைவிலேயே வருகிறது. உள்ளத்தில் சமநிலை ஏற்பட்டவுடன், எதைச் செய்தாலும் ஒருவர் சிறப்பாகவே செய்கிறார். தியானத்தில் மனமும், அறிவும் லயித்து நிற்கின்றன. இவ்வாறு ஒருவர் தியானத்தில் ஈடுபடும்போது அவருடைய 'பிராணன்கள்' தியான இலக்கில் வந்து நிலை பெறுகின்றன. அந்த இலக்கு 'புருவங்களுக்கு நடுவில்' நிலைபெறவும் கூடும். ஏனெனில் சலனமற்ற சிந்தனைக்கு உதவுவது நமது மூளையின் முற்பகுதி, புருவங்களுக்கு நடுவிலே சற்று உட்புறமாகத் தள்ளி இருப்பது.

பிராணன் என்றால் என்ன? உயிர் இயக்கத்தின் அறிகுறிகளை உடலுறுப்புக்கள் மூலம் வெளிக்காட்டும் சக்திக்கு வேதாந்த விஞ்ஞானத்தில் 'பிராணன்' என்று சொல்லுகிறார்கள். அதாவது, உடல் இயக்கமாகத் தன்னை வெளியிட்டுக் கொள்ளும் உயிரே 'பிராணன்'. அது எவ்வகை இயக்கம் என்பதைப் பொறுத்து, அதன் பெயர்கள் மாறுகின்றன. புலன்களுக்கு உணர்வளிக்கும் சக்திக்குப் பெயர் ''பிராணன்''. கழிவுப் பொருள்களை வெளியேற்றும் போது அச்சக்தியை ''அபானம்'' என்று சொல்லுகிறார்கள். உணவு செரிக்கச் செய்யும் போது அது ''வியானம்'' என்று குறிப்பிடப்படுகிறது. அது ரத்த ஓட்டத் திற்குக் காரணமாக இருக்கும்போது ''சமானம்'' என்கிறோம். நம்மைச் சுற்றியுள்ள பொருளுலகுக்கு அப்பாலுள்ள உயர்ந்த கருத்துலகைக் காணவும், அதில் சஞ்சரிக்கவும் இயலுமாறு செய்வது ''உதானம்''. இவ் வேலைகளை நடத்துவதன் மூலம் நம்மிடமிருக்கும் உயிர்ச் சக்தி குறைந்து கொண்டே வருகிறது. ஆன்மாவின் பரிபூரணமாக ஒருங்கிணைந்து, சந்தடியற்ற அமைதி யில் மனம் லயித்து விட்டால், முற்கூறிய வேலைகள் குறைந்து, சக்தி எஞ்சி நிற்கிறது. தியான முறையை மேற்கொள்ளும் ஒரு சாதகருக்கு உடலை வருத்தும் வேறு ஆன்மப் பயிற்சி முறைகள் தேவையில்லை.

தியானத்தில் முழுமையாக ஆழ்ந்து, சலனமற்ற மனநிலையை அடையும் ஒருவருக்கு ஒரு தனி சக்தி வருகிறது. உயிரியக்கச் சின்னங்கள் கூட அவருடைய கட்டுப்பாட்டுக்குள் வந்துவிடுகின்றன. ஆர்வத்துடன், தியானத்தின் இலக்காகிய ஆன்மாவுடன் அவர் இரண்டறக் கலந்து நிற்கும்போது ''ஒப்பற்ற பிரகாசத்துடன் விளங்கும் புருஷனை (ஆன்மாவை) அடைகிறார்.''

ஓங்காரத் தியானத்திற்கு ஒரு முன்னுரையாக, பகவான் பின்கண்டவாறு கூறுகிறார்:

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விசந்தி யத்—யதயோ வீதராகா:
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷயே 8:11

வேதப் பயிற்சியில் சிறந்ததோர் அழிவிலாப் பொருள் என்று கொண்டாடப்படுவதும் வேட்கைகளை அறவே ஒழித்து புலன் களைக் கட்டுப்படுத்தியவர்கள் அடைவதும், பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்போரின் நோக்கமாக இருப்பதும் எதுவோ அந்த இலட்சியத்தை நான் உனக்கு சுருக்கமாக எடுத்துரைக்கிறேன்.

உபநிடத மந்திரமொன்றை* நினைவூட்டும் இச் சுலோகம் மனிதனின் தலைசிறந்த இலட்சியத்தை அறிவிப்பது மட்டுமின்றி, அதை அடையும் வழியை பகவானே எடுத்துரைப்பதாகவும் சொல்லுகிறது.

உள்ளத்தை அடக்கி, இலட்சியத்தை அடைவதற்குப் பொருத்தமான ஒரு கருவியாக அதை உருவாக்க ஓங்கார உபாசனையே நிச்சயமான வழி. இதை ஏறக்குறைய எல்லா உபநிடதங்களுமே எடுத்துரைக்கின்றன. அவதார மூர்த்திகளில் ஒருவரை உறுதியான நம்பிக்கையுடன், தொடர்ந்து தியானித்து வருவதன் மூலமும் அதே இலட்சியத்தை அடையலாமென்று புராண காலம் முதல் நமக்குக் கிடைத்துவரும் ஆதாரங்களி லிருந்து தெரிகிறது.

சாதகர்களின் ஆன்மிக யாத்திரை சற்று எளிதாக, இனிதே நடைபெற வேண்டுமென்ற நோக்கத்துடன் பல ஆலோசனை களும், எச்சரிக்கைகளும் இங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. தியானத்தை மேற்கொள்ளுபவர்கள், தங்களுடைய முயற்சி களுக்கு பல இன்னல்கள் வருவதாகக் கூறுவதன் காரணம் பொருளுரைகளிலிருந்து அவர்கள் போதிய அளவு தங்களை விடுவித்துக் கொள்ளாததுதான்.

முழுமை நிலை பெறுவதற்கு ஒருவர் மேற்கொள்ள வேண்டிய முறைகளைப் பற்றிக் கூறும் விஞ்ஞானமே வேதாந்தம். எனவே ஒருவர் கையாள வேண்டிய முறைகளைப் பற்றிக் கூறினால் மட்டும் போதாது. அதில் எங்கெங்கு தவறுகள் நேரக் கூடும் என்பதை சுட்டிக்காட்டி அப் படுகுழிகளிலிருந்து தப்பும் உபாயத்தையும் கற்பிக்க வேண்டும். இந்த எச்சரிக்கையை தொடக்கத்திலேயே சொல்லி வைத்திருந்தால்தான், அந்த தவறுகள் நேராமலோ, அப்படி நேர்ந்தாலும் அதிலிருந்து சமாளித்து எழுந்து முன்னேறவோ முடியும். புலன் பசியைத் தீர்ப்பதற்காக ஒருவருடைய கோரிகைகள் வெளிநோக்கிச் செல்வதை முற்றிலும் தடுக்கவேண்டும். கடுமையாகவும், இடை யறுமலும் தற்கட்டுப்பாட்டையும் பின்பற்ற வேண்டும். இந்த எச்சரிக்கைகளை கவனித்து நடந்து கொண்டால், தியானப் பாதையில் ஒருவர் முன்னேற்றம் காண முடியும்.

இந்த அத்தியாயத் தொடக்கத்திலேயே பிரம்மன் ''அழி வற்றது'' என்று பகவான் கூறினார். புலன்களை அடக்கிய தால்தான் அவர்கள் தங்களுடைய அநித்திய, மாறும் தன்மை பெற்ற பொருள்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு, கோரிக்கைகளின் சலசலப்புக்களுக்கு உள்ளாகாமல் அமைதி

---

* சுவாமிகளின் கடோபநிஷத் விரிவுரைகள், அத்—2 செய்யுள் 15 பார்க்கவும்

நிலை பெறும்போது, முற்கூறிய அழியாப் பேருண்மைப் பொருளை தம்மிடமே காண்கிறார்கள். அழிவிலாப் பரம் பொருளுடன் ஐக்கியமாகிறார்கள் என்று கிருஷ்ணர் மீண்டும் இங்கு அழுத்திக் கூறுகிறார்.

பற்றுதல்களிலிருந்து விடுவித்துக் கொண்டு (வீதராஹா): கீதை முழுவதுமே பற்றற்று இயங்குவதன் சிறப்பு பற்றிக் கூறு கிறது என்று ஒரே வாக்கியத்தில் அதன் சாராம்சத்தை எடுத்துச் சொல்லிவிடலாம். ஆனால் அது துயரமளிக்கும் கண்மூடித்தன மான அறிவு அல்ல. சிந்தனைத் தெளிவுடன், சுயநல கோரிக்கை எதுவுமின்றி, மனப்பூர்வமாகச் செய்யும் செயலே அது. அப்படி வேலை செய்வதன் மூலமாகத்தான் எந்தத் துறையிலும் வளர்ச்சி யும், முன்னேற்றமும் காண முடியும். மனத்தில் எழும் ஆவல்களை வன்மையுடன் அடக்கி ஒடுக்கி விடுவதும், பற்றற்று கோரிக்கை களைத் துறப்பதும் ஒன்றல்ல. உண்மை, போலிகளை பகுத்தறிந்து மலர்ந்த அறிவு, தானாகவே பயனற்ற போலிகளைக் கைவிட்டு ஒதுக்கி விடுகிறது. 'கோரிக்கைகளைக் கைவிடுவது' என்று இங்கு இதைத்தான் கீதை குறிப்பிடுகின்றது. உதாரணமாக, கருவுற்று காய் தோன்றும் தருணத்தில் மலர்கள் தமது எழில் கொழிக்கும் வண்ண இதழ்களை கொஞ்சம் கொஞ்சமாக உதிர்த்துவிட்டு படாடோபமின்றி நிற்கின்றன. இதைப் பற்றித் தெரியாதவர், ''அடாடா! இப்படி இதழ்கள் எல்லாம் கொட்டி விட்டதே,'' என்று அங்கலாய்ப்பார்கள். ஆனால் விவரமறிந்த விவசாயி, ''முதிர்ந்து பயனளிக்கப் போகும் நிலையில், பூக்கள் தாமாகவே தமது பகட்டுப் பட்டாடையைக் கைவிட்டு காய்க்கும் நிலையை எட்டி விட்டன,'' என்று தெரிந்து கொள்கிறான். அதைப் போலவே இந்திய முனிவர்கள் அளித்துள்ள ஆன்மிக விஞ்ஞானத்தில், துறவு அல்லது பற்றுதலைக் கைவிடுதல் என்று சொல்லும் இந்தப் பொருளிலேயே பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

கோரிக்கைகளைக் கைவிடுவதற்கு மிகவும் கஷ்டப்பட வேண்டுமென்றும், உடலை வருத்திக் கொள்ள வேண்டும் என்றும் சில மதங்கள் கூறுகின்றன. ஆனால் கீதை கூறுவது அதுவல்ல. விவேகச் சிறப்பில் விளையும் பயிர்தான் துறவு. தோற்ற மறைவு களுக்கு உட்பட்டு, இவ்வுலகத்தில் காணப்படும் சிறுமை பொருள்களில் மனத்தைப் பறி கொடுத்துத் திண்டாட வேண்டாமென்பதே ''பற்றுதல்களிலிருந்து விடுவித்துக் கொண்டு'' என்பதன் கருத்து. இது மிகவும் கஷ்டமான வேலையோ, துயர அனுபவமோ அல்ல என்று உபநிடதம் படைத்த பேரறிஞர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள். வாழ்க்கையின்

இயல்பையும், இலட்சியத்தையும் பற்றி ஆழ்ந்து சிந்திக்கும் போது, அறிவு முதிர்ச்சி தானுகவே நமக்கு ஏற்படுகிறது. இவ்வுலகத்திலுள்ள உதவாக்கரை பொருள்களின் மீதுள்ள பற்றுதலும், கோரிக்கைகளும் பூவிதழ்களைப் போல் தாமாகவே உதிர்ந்து விடுகின்றன என்று வேதாந்த விஞ்ஞானம் எடுத்துரைக்கின்றது.

மேலும் கோரிக்கைளின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க மனக் கொந்தளிப்பும் அதிகரித்து, கலக்கமே மேலோங்குகிறது. கலங்கிய உள்ளம் ஆழ்ந்த சிந்தனையில் நிலைக்காது. தியானத்திற்குப் போதிய வேகமும், விறுவிறுப்பும் அதனிடமிருக்காது. தியான யாத்திரையின் போது வரும் இடையூறுகளைத் தகர்த்தெறிய மனச் சமநிலையும், அமைதியும் மிக அவசியம். ஆகையால், கோரிக்கைகள் குறைவாக இருப்பவருக்கு ஞான மார்க்கத்தில் வெற்றி பெறும் வாய்ப்பு அதிகம் என்பதை ஒரு கொள்கையாகவே வைத்துக் கொள்ளலாம்.

உபாசனையின் தொடக்க கட்டங்களையும், அவற்றின் பயன்களையும் விளக்குவதற்காக பின்கண்ட ஆலோசனைகள் கூறப்படுகின்றன.

ஸர்வத்வாராணி ஸம்யம்ய
மனோ ஹ்ருதி நிருத்யச
மூர்த்ன்—யாதா—யாத்மன: ப்ராண—
மாஸ்த்திதோ யோகதாரணும் 8:12

எல்லா வாயில்களையும் மூடிவிட்டு, மனத்தை இதயக் குகையினில் அடைத்து, பிராணனை உள்ளிழுத்து தலையில் நிலைநாட்டி, ஆழ்ந்த தியானத்தை மேற்கொண்டு,

ஓமித்—யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன்
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம்கதிம்
8:13

பிரம்மணுகிய (பிரம்மனின் சின்னமாகிய) 'ஓம்' என்ற எழுத்தை உச்சரித்தவாறு, என்னை நினைத்த வண்ணம், இவ்வுடலைத் துறந்து புறப்படுகிறவர்கள் நிகரற்ற இலட்சியத்தை அடைகிறுர்கள்.

தியானத்தை மேற்கொண்டு, அதன் இலட்சியத்தில் வெற்றி பெறுவதற்கு, சாதகர்கள் மூன்று நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும். அவை வரிசைக் கிரமத்தில் இங்கு விவரிக்கப் பட்டிருக்கின்றன. இந்த வரிசைக் கிரமத்திலேயே சாதகர்கள் பயிற்சி செய்து வரவேண்டும்.

1. 'எல்லாப் புலன்களையும் கட்டுப்படுத்தி': உடலில் உள்ள ஒவ்வொரு புலன் உறுப்பும் ஒரு துளை. சல்லடைக் கண் போன்ற தோல், காது, மூக்கு, கண், சுவையறியும் பகுதிகளைக் கொண்ட வாய் ஆகிய ஐந்து வாயில்களின் வழியாக உலக விவரங்கள் உட்புகுந்து, மனோமட்டத்தை அடைந்து, அதில் கலக்கங்களை ஏற்படுத்துகின்றன. விவேகம், பற்றின்மை ஆகியவற்றின் உதவி கொண்டு இந்த ஐந்து வாயில்களின் கதவுகளையும் மூடிவிட வேண்டும். தியான மார்க்கத்தில் அடியெடுத்து வைப்பதற்கு முன் ஒரு சாதகர் செய்யவேண்டிய முதலாவது வேலை இது. வெளி உலகப் புயல்கள் உள்ளே புகுந்து மனக் கலக்கங்களை ஏற்படுத்துவது மட்டுமின்றி, மனம் வெளியேறி புலனின்பக் குழிகளில் விழுவதற்கும் இவ்வாயில்களே வழி வகுத்துக் கொடுக்கின்றன. இக் கலக்கக் கால்வாய்களை அடைத்து விட்டால், புது சலசலப்புக்கள் உண்டாவதை தடுத்து விடலாம்.

2. மனத்தை இதயக் குகையில் அடைத்து: புலன் பொருள்களின் வழியாக புதுத் தாக்குதல்கள் வெளியிலிருந்து உள்ளே நுழைவதை முற்கூறிய வகையில் தடுத்து விடலாம். ஆனால், ஏற்கனவே பதிந்திருக்கும் கடந்த கால 'வாசனை' களினால் உள்ளிருந்தே சலசலசலப்புக்கள் தோன்றலாம் அல்லவா? எனவே உணர்ச்சிகளின் ஊற்றுக்காலான மனத்தை இதயக் குகையில் அடைத்து விட வேண்டுமென்று ஆலோசனை கூறப்படுகிறது.

இதயமென்றால் இரத்தக் குழாய்களில் உதிரத்தை உந்தி ஓட வைக்கும் உடற்பகுதி அல்ல. வேதாந்தம், இலக்கியம், தத்துவ இயல் ஆகியவற்றில் அந்தச் சொல் வேறு பொருளில் பயன்படுத்தப்படுகிறது. அன்பு, அறம், கனிவு, நேசம், இறைவழிபாடு, சரணாகதி போன்ற பெரும் பண்புகள் ஊறிவரும் கருத்து மையத்திற்குப் பெயர் இதயம். வெளித் தூண்டுதல்களைத் தடுத்து நிறுத்திய பிறகு உள்ளிருந்து எழும் உணர்ச்சிப் பெருக்கை சாதகர்கள் ஒடுக்கி அடக்கி விடக் கூடாது. அவர்கள் அதை தெய்வச் சார்புள்ளதாகச் செய்து கொள்ள வேண்டும். இதயத்தின் மாண்பையொத்து மனமும் இயங்கவேண்டும். நல்ல சிந்தனைகள் நிலவும்போது மனக் கலக்கங்கள் மிக மிகக் குறைவாகவே இருக்கும் என்பதும் உதவாக்கரை சிந்தனைகளே வீண் பரபரப்பையும் கலக்கப் புயலையும் கொண்டு வருகின்றன என்பதும் ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது.

3. பிராணனை உள்ளிழுத்து: ''தலையில் நிலைநாட்டி பல்வேறு உடலுறுப்புக்களின் மூலம் வெளியாகும் உயிர் இயக்கத்தையே ''பிராணன்'' என்று கூறுகிறார்கள். வெளியுலகப் பொருள்களிருந்து புலன்களை உள்ளிழுத்துக் கொள்ளும் போது

நமது அறிவு கீழ்மட்டச் சிந்தனைகளிலிருந்து விடுபடுகிறது. மன—அறிவுக் கருவி அப்போதே ஆன்ம தியானத்தில் ஒருமுகமாகவும், உறுதியாகவும் நிலைக்க முடியும். புலன் தொல்லைகளிலிருந்து தப்பியவுடன் ஒரு சாதகரின் மனம் தூய்மையடைந்து, ஆன்ம சிந்தனையில் ஆழ்வதற்கான தகுதி பெறுகிறது. அந்த நிலையில் அது, முற்கூறியவாறு* இறையுணர்வு பெற்ற அறிவின் கட்டுப்பாட்டில் வரும்போது, தியானப் பயிற்சியில் ஈடுபட்டிருப்பதாக (யோக தாரணும்) சொல்லப்படுகிறது.

உடன்டியாக தம்மைச் சூழ்ந்துள்ள புலன் தூண்டுதல்களை அறவே மறந்து, தம் மனத்தை விவேகத்தின் கட்டுப்பாட்டில் வைக்க சந்தோஷத்துடன் முன்வரும் ஒரு சாதகருடைய உள்ளம் 'ஓம்' என்று சுலபமாகவும், உற்சாகத்துடனும் ஒலிக்கிறது. சந்தடியற்ற தமது உள்ளத்தில் 'ஓம்' என்ற பிரணவ ஒலிமட்டும் அலை அலையாக எழுவதை அவர் உணரலாம். ஓங்கார வழிபாட்டுக்குத் தகுந்த சாதகர் அவர்தான். இச் சுலோகத்தின் அடுத்த வரியில் இக் கருத்து தெளிவாக வெளியாகிறது.

இவ்வுடலைக் கைவிட்டுப் புறப்படும் ஒருவர்—உள்ளத்தில் ஓங்காரத்தையே ஜெபித்துக்கொண்டு அதன் மகிமை பற்றி சிந்தித்த வண்ணம் இருக்கும்போது, இப்பொருள் உறை மருட்சிகளிலிருந்து ஒருவர் முற்றிலும் விடுதலை பெறுகிறார். எனவே அவருடைய அகந்தை தனது உண்மை இயல்பை அறிந்து கொள்ளுகிறது. இதுதான் உண்மையான சாவு—''இவ்வுடலைக் கைவிடுதல் வேறு எல்லாச் சிந்தனைகளும் மடிந்து, தன் நினைவற்று ஓங்காரத்தில் ஒருவர் கலந்து விடுவதையே 'நிகரற்ற இலட்சியத்தை அடைதல்' என்று கிருஷ்ணர் குறிப்பிடுகிறார். பிறப்பு—இறப்பு என்ற ஓயா நாடகத்தை நடத்திக் காட்டுவது மனிதனுடைய மனம். அதனுடைய மருட்சித் திரைகளைக் கிழித்து, மெய்நிலை அடைந்தவுடன், ஓங்கார அடிப்படையில் எழுந்த மேடை மீது இந்த நாடகம் நடக்கிறது என்ற உண்மை வெளியாகிறது.

தியான வழியில் ஆன்ம உணர்வு பெறுதல் எல்லோருக்குமே இவ்வளவு கஷ்டமாகத்தான் இருக்குமா?

அனன்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்ய—யுக்தஸ்ய யோகின:
8:14

வேறு எதையும் பற்றிச் சிந்திக்காமல், தளரா உறுதியுடன்

---

* செய்யுள் 9, 10 பார்க்க

நாள்தோறும் என் நினைவாகவே இருந்துவரும் யோகிக்கு என்னை அடைவது சுலபம், பார்த்தா.

தெய்வீக வாழ்வு நெறியில் தளரா உறுதியுடன் நடந்து கொண்டு எப்போதும் ஆன்ம உணர்வுடன் ('என் நினைவாகவே') நாள்தோறும் இருப்பவனுக்கு—மனத்தைச் சிதற விடாதவனுக்கு ஆன்ம உணர்வு சுலபமாகக் கிட்டுகிறது. இது முந்திய செய்யுட்களில் கூறிய கருத்துதான். இங்கு அது நேரடியாகவும், அழுத்தமாகவும் சுருக்கிச் சொல்லப்படுகிறது.

பிரார்த்தனை என்பது நினைவு வரும்போது எடுத்துத் தெளிக்கும் பூச்சி மருந்தல்ல. தெய்வ சந்நிதியை ஒரு குளியல் அறையாகவும் நினைக்கக் கூடாது. அழுக்கும், வேர்வையுமாக குளிக்கச் செல்லுகிறோம். குளித்த பிறகு சுத்தமாக வெளியில் வருகிறோம். இறைவனை அணுகும் முறை அதுவல்ல. இறைப் பேருணர்வு எப்போதும், நாள் முழுவதும், ஒவ்வொரு நாளும் இடையறாது இருந்து வர வேண்டும் என்று கிருஷ்ணர் அழுத்தந்திருத்தமாகச் சொல்லுகிறார்.

அப்படி இருக்கும் ஒரு சாதகருக்கு ''என்னை அடைவது சுலபம், அர்ஜுனா,'' என்று பகவான் கூறுகிறார். அவர் இவ்வாறு அழுத்தம் கொடுத்துப் பேசுவதற்கு ஒரு முக்கிய காரணம் இருக்கிறது.

மீண்டும் பிறந்து ஏதேதோ சாதிக்க வேண்டும் என்ற கனவுகள் எல்லாம் அகந்தையைச் சார்ந்தவை, பிறவியில்லா ஆன்மா, தன்னைப் பொருளுறைகளுடன் இணைத்துக் கொள்வதால் வருபவை. பல்புகளில் புகுந்து வெளியேறும் மின்சாரமே விளக்காகி எரிகிறது. பல்புகள் உடைந்த பிறகு வெளிச்சமும், மின்சாரமும் ஒன்றாகி விடுகிறது. அதாவது காரணமும் விளைவும் இரண்டறக் கலந்து விடுகின்றன. எல்லாக் காலங்களிலும், உலகத்தின் எந்தப் பகுதியிலும், எந்த பல்பையும் ஒளிவீசச் செய்யும் சக்தியாக அது மாறிவிடுகிறது. ஆன்மாவும் அவ்வாறுதான். ஒரு குறிப்பிட்ட மன அறிவுக் கருவியுடன் இணைந்து நிற்கும்போது அது அகந்தை. இதை ஜீவன் என்று கூறுகிறோம். மறுபிறப்பு, நோய், சீர்குலைவு, சாவு முதலிய துன்பங்களை அனுபவிப்பது இவ்வகந்தையே. மன அறிவுக் கருவியாகிய அந்தக் கரணம் அமைதி பெற்று விட்டால், தானே ஆன்மாவென்று தனது உண்மை இயல்பை அகந்தை மீண்டும் கண்டு கொள்கிறது. இந்த அனுபவத்திற்குப் பிறகு மன—அறிவு சாதனத்திற்கும், தமக்கும் என்றைக்குமே சம்பந்தம் இருந்ததில்லை. என்று சாதகர் தெரிந்து கொள்ளுகிறார். கனவில் மனைவியும், குழந்தைகளும் இருப்பதாகக் கனவு கண்ட பிரம்மச்சாரி விழித்து எழுந்தவுடன், அப்படிப்பட்ட உறவினர் தனக்கு என்றைக்குமே இருந்த

தில்லை என்று தெரிந்து கொள்கிறனே—அதுபோல வாழ்வில் கரடு முரடான துயரப் பாதையைக் கைவிட்டுத்தான் பரிசுத்தமான ஆன்மா என்ற உணர்வு பெறும்போது அகந்தையின் பயணமும் முடிந்து விடுகிறது. இப்பன்மைத் தோற்ற உலகில் மீண்டும் பிறந்து, வாழ்க்கையின் கொடுமைகளை அது அனுபவிப்பதில்லை.

வாழ்நாளில் இடையறு ஆன்மத் தியானத்தின் மூலம் புலன்களை முற்றிலும் அடக்கி, மனத்தையும், இதயத்தையும் ஒருமுகப்படுத்தி, எல்லாப் பிராணன்களையும் அறிவில் நிலைக்க வைக்கும் சாதகர், தாமே அழிவிலாப் பரம்பொருள் என்ற உண்மையை உணருகிறுர். மீண்டும் வேறொரு உடலில் பிறந்து, நிலையாப் பொருளுலகில் நிறைவு தேடும் அசட்டு வேலையை அவர் செய்து கொண்டிருக்க மாட்டார்.

அப்படியானல் மிக உயர்ந்த இலட்சியத்தை அடையாமல் திரும்பி வருகிறவர்களும் உண்டா? இக் கேள்விக்கு கிருஷ்ணன் அளிக்கும் பதிலையே கேட்கலாம்.

ஆப்ரஹ்ம—புவனுல் லோகா: புனராவர்த்திேைர்ஜுன
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே

***8:16***

அர்ஜுன, பிரம்மலோகம் வரையிலுள்ள எவ்வுலகத்திற்குச் சென்றுலும், அப்படிச் செல்பவர் மீண்டும் மறுபிறவி எடுக்க வேண்டியதுதான். ஆனல் என்னை அடைந்தவர்களுக்கு மீண்டும் பிறப்பே இல்லை, கௌந்தேயா.

ஒரே கருத்தை நேர்முகமாகவும், எதிர்மறையாகவும் கூறி, கருத்துக்களை அழுத்தமாக மாணவன் உள்ளத்தில் பதிய வைப்பது கீதாசாரியன் வழக்கமாகக் கையாளும் முறை. எதிரெதிரான விளைவுகள் தரும் இரு முறைகளை இங்கு எடுத் துரைப்பதால், கேட்பவர் உள்ளத்தில் அது பசுமரத்தாணிபோல பதிகிறது. ''பிரம்ம லோகம் வரை செல்பவர்களுக்குக்கூட மறு பிறவி உண்டு,'' என்று சொல்வதையும், ''என்னை அடைபவர் களுக்கு மறுபிறவி இல்லை,'' என்பதையும் அடுத்தடுத்துக் கூறிய வுடன், நேரடியான ஆன்ம ஞான முறையினல் வரும் பயன் நிரந்தரமானதென்று தானகவே வெளியாகிறது.

படிப்படியாக விடுதலை அடையும் (கிரம முக்தி) முறையை வேதாந்தம் ஒப்புக் கொள்ளுகிறது. தியான வழிபாடு (உபாசனை) செய்வதுடன், கர்மாக்களை (வைதிகச் சடங்கு முறைகளை)யும் சேர்த்துச் செய்து வந்தால், அப்படிச் செய்பவரின் அகந்தை

பிரம்ம லோகத்தை அடைகிறது. அந்தக் கல்பம்* முடிவடையும் போது அது பரம்பொருளுடன் கலந்து விடுகிறது. பிரம்ம லோகத்தில் கூட சுய முயற்சியினுலும் பிரம்மலோக விதிகளுக்குக் கொஞ்சமும் பிறழாது வாழ்ந்து அந்த அகந்தை பூரண விடுதலேக்கு வழி தேடிக் கொள்ள வேண்டும். ''அறியாமை''யுடன் இருக்கும் தொடர்புகளே .அறவே துண்டித்துக் கொள்ள வேண்டும். பிரம்மலோகத்தை அடையாதவர்களுக்கு பரம் பொருளுடன் இரண்டறக் கலந்து விடும் வாய்ப்புக் கிடையாது. கல்பத்தின் முடிவில் இவர்கள் மீதியுள்ள வாசனேகளின் கட்டாயத்தினுல், மீண்டும் ஏதோ ஒரு உருவெடுத்து உலகில் வந்து பிறப்பதைத் தவிர வேறு வழியில்லே. இதை மனத்தில் கொண்டுதான், பிரம்ம லோகம் வரை உயர்ந்து கொண்டு சென்றவர்கள்கூட, குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு மறுபிறவி எடுக்க வேண்டியதே என்று கிருஷ்ணர் கூறுகிருர். பிரம்ம லோகத்தை அடைந்துவிட்ட பிறகு, அங்கிருந்து யாரும் திரும்பி வர வேண்டியதில்லே. அங்கிருந்தே அவர்கள் ஆன்மிகப் பொருளில் கலந்து விடுகிருர்கள்.

ஆனுல் தமது அழிவிலா இயல்பை உணர்ந்து இவ்வுலகிலேயே விழித்தெழுந்து விட்ட பிறகு (''என்னே அடைந்த பிறகு'')—அதாவது ''நானே எங்கும் நிறைந்துள்ள ஆன்மிகப் பொருள்'' என்பதை ஒருவர் உணர்ந்தவுடன், தோற்ற மறைவுள்ள மட்டத்திற்கு அவர் திரும்புவதில்லே. அவருக்கு மறுபிறப்பு இல்லே. தூக்கத்திலிருந்து விழித்து எழுந்து விட்டவன் தான் கனவிற் கண்ட உலகத்திற்கு மீண்டும் போக முடியாது. விழிப்பு பெற்ற பிறகு கனவு உலக சுக துக்கங்களே அவன் இழக்க வேண்டியதுதான். விழிப்பு நிலே ( என்னே ) அடைந்த பிறகு, கனவு (சம்சார) உலகத்திற்கு ஒருவர் திரும்புதல் (மறுபிறப்பு) இல்லே.

ஸஹஸ்ர—யுகபர்யந்த—மஹர்—யத் ப்ரஹ்மணே விது:
ராத்ரிம் யுக—ஸஹஸ்ராந்தாம் தேஹோராத்ரவிதோ ஜனு:
8:17

பிரம்மாவின் பகற்பொழுது ஆயிரம் யுகங்கள் என்றும், இரவு ஆயிரம் யுகங்கள் என்றும் தெரிந்தவர்கள், இரவும் பகலும் தெரிந்து கொண்டவர்களாகிருர்கள்.

காலத்தைப் பற்றிய பழைய கருத்துக்கள் தவருனவை என்று விஞ்ஞான மேதை ஐன்ஸ்டினுடைய 'ரிலேட்டிவிடி' தத்துவம் நிரூபித்து விட்டது. காலமும், பரப்பும் அளவுகோலின்

* உலகம் படைக்கப்படுவது முதல் அதன் அழிவு காலம் வரை உள்ள கால அளவை ஒரு கல்பம் என்று கூறுகிருர்கள்.

தன்மையைப் பொறுத்தவை என்று மேல்நாட்டினர்கூட இப்போது ஒப்புக்கொள்கிறார்கள். ஏதோ ஒன்றுக்காக நாம் காத்துக் கொண்டிருக்கும்போதும், மனத்தில் கவலை நிறைந் திருக்கும் போதும் நேரம் மிக மெதுவாக ஊர்ந்து செல்கிறது. ஆனால் களிப்பும், குதூகலமுமாகவும் இருக்கும்போது நேரம் போவதே தெரிவதில்லை. சீட்டு விளையாடும் பழக்கமுள்ளவர் களுக்கு இது நன்றாகத் தெரியும். இரவு முழுவதும் சீட்டாட்டத் திலே விட்டது, மறுநாள் காலையில் சூரியோதயத்தைப் பார்த்த தான் அவர்களுக்குத் தெரிகிறது. அதே ஆட்கள் விருப்பமில்லாத ஒரு வேலையைச் செய்யும்போது அல்லது நோயினால் அவதிப்படும் போது, ஒவ்வொரு நிமிடமும் ஒரு யுகம்போல் தோன்றுகிறது. ஒருவர் தூக்கத்திலிருக்கும்போது கால உணர்வே அவருக்கு இருப்பதில்லை.

இவற்றை எல்லாம் அடிப்படையாகக் கொண்டுதான் ''இரு மாறுபட்ட அனுபவங்களுக்கு நடுவிலுள்ள இடை நேரமே காலத்தின் உண்மையான அளவை'' என்று இந்து தத்துவம் கூறு கிறது. உள்ளத்தில் வெள்ளம்போல் பாய்ந்து மனத்தைக் கலக்கும் அனுபவங்களின் எண்ணிக்கை அதிகரிக்க, அதிகரிக்க நேரம் போவது மெதுவாகத்தான் இருக்கும். அதே அனுபவம் நீண்டு தொடர்ந்தால் காலமும் வேகமாகச் செல்லத் தொடங்கும்.

இரண்டு நிமிடங்கள் இருந்தால்தான் அவைகளுக்கு இடை யில் இவ்வளவு தூரம் என்று சொல்ல முடியும். ஒரே இடத்தை மட்டும் வைத்துக்கொண்டு தூரம் பற்றிப் பேச முடியாது. கால மும் அப்படித்தான். அதனாலேயே நமது புராண கவிஞர்கள் தேவலோக கடியாரங்களை மிகப் பெரியவையாகப் படைத் திருக்கிறார்கள். வசதிமிக்க சூழ்நிலையில் சுகமாக வாழும் ஒரு இளைஞன் முதல், பிரம்மதேவன் வரையில் ஒவ்வொருவருடைய ஆனந்தத்தின் ஆழமும் அதிகரித்துக் கொண்டு போவதாக உபநிடதங்களிலிருந்து நமக்குத் தெரிகிறது. இவ்வாறு அதிகரிப் பது அந்தந்த உணர்வு மட்டத்தில் தோன்றும் மனச்சமநிலை, அமைதி ஆகியவற்றை பிரதிபலிக்கின்றன.

நாலு யுகங்களும் சேர்ந்து ஒரு 'சுற்று' என்று வைத்துக் கொண்டால், அப்படி ஆயிரம் சுற்றுக்களைச் சேர்த்து பிரம்ம தேவனுக்கு ஒரு பகல் பொழுது, மேலும் நான்கு யுகங்கள் சேர்த்து ஒரு சுற்று பிரம்மாவுக்கு ஒரு இரவு. நம்முடைய 365 நாள் கொண்ட ஆண்டுகளை வைத்துப் பார்த்தால், பிரம்மா வுடைய ஒரு நாள் எவ்வளவு ஆகிறது? நினைத்துப் பார்த்தாலே

தலை சுற்றுகிறது.* ஆனால் பகலையும் இரவையும் உண்மையாகக் கணக்கிடத் தெரிந்தவர்கள்'' இதைக் கணக்கிட்டுச் சொல்லி யிருக்கிறார்கள்.

தனிப்பட்டவர்களைப் போலத்தான் அவர்களுடைய கூட்டமும் இருக்கும். தனிப்பட்ட ஒரு மனம் விருப்பம்போல் ஒரு கருத்தை உருவாக்குகிறது. பிறகு திட்டவட்டமான ஒன்றைப் படைக்கிறது, ஆதரித்து நிற்கிறது. பிறகு திடீரென்று எல்லா வற்றையும் கவலையின்றி அழித்துவிட்டு, புதிதாக கற்பனைகளை பகற்பொழுதிலேயே ஒருவரது மனம் உருவாக்குகிறது. அதைப் போலவே உலகீத்திலுள்ள எல்லா உள்ளங்களும் சேர்ந்த மொத்த உள்ளம்—பிரபஞ்சப் படைப்பாளி—இப் பொருளு லகத்தையும், அறிவுடன் கூடிய மனிதர்களையும் விழித்திருக்கும் நிலையில் படைக்கிறார்.

அவ்யக்தாத் வயக்தய: ஸர்வா:
ப்ரபவந்த்—யஹராகமே
ராத்ர்யாகமே ப்ரவீயந்தே
தத்ரைவாவ் யக்த—ஸ்ம்ஜ்ஞகே 8:18

வெளியாகா அருவ நிலையிலிருந்து, எல்லாம் 'பகற்' பொழுதில் உருவநிலை பெற்று வெளிதோற்றம் பெறுகின்றன. 'இரவு' வந்தவுடன் அவை வெளியாகா நிலை எனப்படுவதில் கலந்து மறைந்து விடுகின்றன.

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே
ராத்ர்யாகமே வச: பார்த்த ப்ரபவத்—யஹராகமே
8:19

இதே எண்ணற்ற உயிரினங்கள் தாங்கள் வேண்டாமென்ற போதிலும் மீண்டும் மீண்டும் பிறந்து, 'இரவு' வந்தவுடன் (வெளியாகா, அடிப்படையில்) கரைந்து கலந்து விடுகின்றன. பார்த்தா. 'பகல்' வரும்போது இவை மீண்டும் வெளித்தோற்றம் பெறுகின்றன.

ஆயிரம் யுகங்களைக் கொண்ட தமது பகற் பொழுதிலும், அவ்வாறே நீண்ட இரவிலும் பிரம்மா என்ன வேலை செய்கிறார்

---

* சத்திய யுகம் 17,28,000 ஆண்டுகளைக் கொண்டது. திரேதாயுகத்தில் 12,95,000 ஆண்டுகள். துவாபரயுகத்தில் 8,54,000 வருடங்கள். கலியுகத்திற்கு 4,82,000 வருடங்கள். இந்த நான்கு யுகங்களும் சேர்ந்தது ஒரு சுற்று. ஆயிரம் சுற்றுக்கள் கொண்டது பிரம்மாவுக்கு ஒரு பகல் பொழுது.

என்பது இவ்விரண்டு சுலோகங்களிலிருந்தும் தெரிகிறது. 'பகற்' பொழுதில் அவர் படைப்புத் தொழிலில் ஈடுபடுகிறார் என்றும், 'இரவு' நேரம் வந்ததும் அவர் படைத்தவை எல்லாம் வெளி யாகாதிருக்கும் (அவ்யக்தம்) ஒன்றுடன் கலந்து விடுகின்றன என்றும் கூட இச் சுலோகங்கள் எடுத்துரைக்கின்றன.

சாதாரண பேச்சு வழக்கில் 'படைப்பு' என்ற சொல்லை, ''புதிதாக ஒன்றை உண்டாக்குதல்'' என்ற பொருளில்தான் பயன்படுத்துகிறோம். ஆனால் அச் சொல்லில் மேலும் நுணுக்க மான, ஆழ்ந்த கருத்து பொதிந்திருக்கிறது. மண்ணை வைத்துக் கொண்டு ஒரு குயவன் சட்டி, பானைகள் 'படைக்க'லாமே தவிர லட்டு படைக்க முடியாது. ஒரு மூலப் பொருளிலிருந்து குறிப்பிட்ட தன்மையுள்ள உருவங்களையும், பெயர்களையும் உண்டாக்குவதுதான் படைப்பு. அவ்வாறு உண்டாக்கப்படும் பொருளின் பெயரும் இயல்பும், உருவும் அந்த மூலப் பொருளி லேயே வெளியாகா நிலையில் இருக்கின்றன. ஒரு படைப்பாளி அவற்றை வெளியாக்கி, நமக்குப் புலனாகும்படி செய்கிறார். மூலப் பொருளுக்கு இல்லாத ஒரு இயல்பை உற்பத்திப் பண்டத்தில் அவர் கொண்டுவந்துவிட முடியாது. சட்டியாகும் தன்மை மண்ணில் இருக்கிறது. லட்டு ஆகும் தன்மை அதில் இல்லை. அதனால்தான் மண்ணை வைத்துக் கொண்டு சட்டி பானை செய்ய முடிகிறதே தவிர, லட்டு செய்ய முடிவதில்லை. இதைப்பற்றி சிந்தித்த வேதாந்த மேதைகள் ஒரு முடிவுக்கு வந்தனர். வெளிவராது அடங்கிக் கிடக்கும் நாம, ரூப இயல்புகளை வெளி யாக்குவதே படைப்பு என்று தீர்மானித்தனர்.

இன்று ஒருவருக்கு உள்ளநிலை இதற்கு முன்பு அவர் அறிவி னால் சிந்தித்து, மனத்தினால் உணர்ந்து, உடலால் செயலாற்றி வந்ததன் பயனாகத் தோன்றியுள்ளதுதான். அவருடைய சிந்தனை, உணர்ச்சி, செயல்கள் ஆகியவை அவருடைய உள்ளத்தில் குறிப் பிட்ட ''வாசனை''களை விட்டுச் சென்றிருக்கின்றன. அவை வெட்டி வைத்த வாய்க்கால்களில், பிறகு வரும் சிந்தனைகள் பாய்ந்து வருகின்றன.

பிறவியில் குறிப்பிட்ட ஒரு இனத்திற்கு அதே இனம் பிறக்கிறது. எவ்வித மாறுதலும் இருப்பதில்லை. தவளைக்குத் தவளைதான் பிறக்கிறது. மனிதருக்கு மனிதர்களே பிறக்கின் றனர். மாமரத்தில் விளைவது மாம்பழந்தானே தவிர வேறில்லை. இவ்வாறே நல்ல சிந்தனைகளிலிருந்து நல்ல சிந்தனைகள் தோன்று கின்றன. மனத்தில் பதிந்திருக்கும் இந்த வாசனைத் தடங்கள் முதலில் வெளிப்படையாக நமது புலன்களுக்குத் தெரிவதில்லை. மனத்திற்கோ, அறிவுக்கோகூட தெரிவதில்லை. ஆனால் நமது செயல்களாகவும், கருத்துக்களாகவும், பேச்சாகவும் அவை வெளியாகும்போது, நமக்கே அவை விளங்குகின்றன. நமது

வாழ்க்கை சுகமாகவோ, கரடுமுரடாகவோ ஆவதற்குக் காரணம் அவை வெளியாகும் அளவையும், தன்மையையும் பொறுத்திருக்கிறது.

ஒரு டாக்டர் ஒரு வக்கீல், தெய்வ பக்தி மிக்க ஒருவர் ஒரு கொள்ளைக்காரன் முதலியவர்கள் ஒரு அறையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்போது அவர்கள் எல்லோரும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறார்கள். அவர்கள் சதையும் எலும்பும் சேர்ந்து உருவம் பெற்றவர்களே. மூச்சு விட்டுக்கொண்டும், உடல் வெப்பநிலை ஒரே அளவில் உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். அப்போது அவர்களிடையில் எவ்வித வேறுபாடும் காணப்படுவதில்லை. ஆனால் அவர்களுடைய தனித்தனி குணங்கள் எங்கும் போகவில்லை. நமது கண்ணுக்குத் தெரியாமல் அவர்களுக்குள்ளேயே சுருண்டு கிடக்கிறது. அவர்கள் விழித்தெழுந்தவுடன் ஒவ்வொருவருடைய இயல்பும்கூட தலை தூக்கி விடுகிறது. படுத்திருந்த இடத்திலிருந்து புறப்பட்டதும் கொள்ளைக்காரன் கொள்ளையடிக்கவும், டாக்டர் நோயாளிகளை கவனிக்கவும், வக்கீல் நீதி மன்றத்திற்கும், பக்தர் கோவிலுக்கும் போகிறார்கள். தூக்கத்தில் அவரவர்களுடைய இயல்பு வெளியாகாமல் இருந்தது (பிரளயம்) விழித்து எழுந்தவுடன் அந் நால்வரும் நாலு வகை இயல்புகளுடன் வெளியாகி விட்டார்கள். தத்துவம், மதம் ஆகியவற்றின் மொழியில் இதைத்தான் 'படைப்பு' என்று சொல்லுகிறார்கள்.

இதை நினைவு கொண்டால் 'படைப்பு', 'மறைவு' என்ற பிரபஞ்ச இயக்கத்தை சரியாகப் புரிந்து கொள்ளலாம். ஏற்கனவே உள்ள வாசனைகளை, பிரம்மா (மொத்த உள்ளம்) ஆயிரம் யுகங்களைக் கொண்ட பகல் நேரத்தில், வெளியாகும்படி செய்து கொண்டிருக்கிறார். 'இரவு' வந்ததும் இவ்வாறு வெளியானவை வெளியாகா நிலையுடன் கலந்து மறைந்து விடுகின்றன.

பிறந்து, பிறந்து வெளியாகிப் பெருங்கடலில் மீண்டும் கலந்து விடுவது அதே உயிரினங்கள்தாம் என்று கிருஷ்ணர் அழுத்தமாகக் கூறுகிறார். 'தனது சிந்தனைகளினாலும், உணர்ச்சிகளினாலும் மனிதன் கட்டுண்டு அடிமையாக இருக்கிறான் என்பது அவர் கூறுவதிலிருந்து தெளிவாகிறது. ஒருவன் புலனின்பங்களில் திளைத்துக் கொண்டும், தனது வேட்கைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக மற்றவர்களுக்குக் கொடுமை இழைத்துக் கொண்டும் மிருக வாழ்வு நடத்திக் கொண்டிருக்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் ஒரே நாளில் திடீரென்று அப்பழுக்கற்ற முழுமை நிலையைத் தாவிப் பிடித்துவிட முடியாது. மிகச் சிறந்த மகானை குருவாக அடைந்த போதிலும், எந்தச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளிலும், எவ்வளவு திருத்தலங்களுக்குப் போய் வந்தாலும் அது நடக்காத வேலை.

ஒரு சீடனை எந்த ஆசானும் திடீரென்று ஆன்மிக முழுமை பெறும் நிலைக்கு உயர்த்தி விட முடியாது. அவருக்கு அந்த சக்தி யில்லை—மாணவனுடைய உள்ளம் ஏற்கனவே தெய்வீக முழுமை பெற்று, குருவின் உதவியால் அது வெளிப்பட்டாலொழிய. ''நீங்கள் முடியாதென்று கூறுவது நடந்திருக்கிறதே'' என்று சிலர் சில உதாரணங்களைச் சொல்லலாம். ''மண்ணிலிருந்து ஒரு லட்டு செய்து விடுகிறானே ஒரு மந்திரவாதி'' என்று கூறுவது போலத்தான் அது. அது வெறும் மந்திர வேலைதான் என்றும், லட்டு அந்த மண்ணிலிருந்து வந்தது அல்ல என்றும் எல்லோருக்கும் தெரியும். உயிரியக்கத்தின் விதிகளை அறிந்த புத்தி சாலிகளுக்கும், கீதையைப் புகட்டும் ஆசானிடம் கொஞ்சமாவது பக்தியுள்ளவர்களுக்கும் முன்கூறிய திடீர் முழுமை விஷயம் நகைப்பூட்டும் கட்டுக் கதையாகவே இருக்கும். தம்முடைய குருவின் உயர்வை விளக்குவதற்கு கவிதை நயம் தோன்ற மிகைப்படுத்தி சிலர் சொல்லுகிறார்கள் என்று நினைத்து நாம் சிரிப் பைச் சற்று அடக்கிக் கொள்ளலாம்.

''அதே உயிரினங்களின் கூட்டம்தான்,'' என்றால், அதே சிந்தனைத் தடங்களின் மூட்டைதான் என்று பொருள். மனிதன் என்பது அவன் செய்யும் சிந்தனைச் சுமைகளைத் தவிர வேறென்ன? தங்களுடைய 'வாசனை'களை வாழ்ந்து தீர்த்துக் கொள்வதற்காக இவ்வுலகில் வந்து சேருகிறார்கள். வெவ்வேறு உணர்வு மட்டங் களுடன் பிறக்கிறார்கள்.

''தாங்கள் வேண்டாமென்ற போதிலும் வேறு வழியின்றி: (அவச:) என்ற சக்தி வாய்ந்த பதம் இங்கு பயன்படுத்தப் பட்டிருக்கிறது. கடந்த காலச் செயல்களை வேண்டாமென்று உதறித் தள்ளுவதற்கு யாராலும் முடியாது என்பதை இது சுட்டிக் காட்டுகிறது. கடந்த காலம் ஒரு நிழலைப்போல நம்மைத் தொடர்ந்து வந்துகொண்டுதான் இருக்கும்—ஆன்ம ஒளியை நோக்கிச் செல்லாமல், அதற்கு எதிர்ப்புறமாக நாம் செல்லும் போது அந்நிழல் நமக்கு முன்னால் விழுந்து பாதையை இருள டையச் செய்கிறது. இலட்சியத்தை நோக்கி முன்னேறும்போது, அதே நிழல் பின்னால் வருகிறது. ஆகக்கூடி, அந்த நிழல் தொடர்ந்து வந்து கொண்டுதான் இருக்கும்.

ஒருவர் இறந்தவுடன் அவ்வுடலிலிருந்த மன அறிவுச் சாதனமும், மடிந்து விடுவதில்லை. நாடகத்தில் ராஜாவாக நடித்தவர், அந்நிகழ்ச்சி முடிந்து வெளியேறிய பிறகும்கூட இருந்துதான் வருகிறார். தம் குழந்தைகளின் தந்தையாக, மனைவியின் கணவனாக, தொடர்ந்து தமது இல்லத்தில் வாழ்ந்து வருகிறார். உடலிலிருந்து வெளியேறும் மனமும், அறிவும்கூட அப்படியேதான். மன அறிவுச் சாதனம் தனது வாசனைகளுக்கு ஏற்ப, மற்றொரு உருவாக்கத்தில் வாழ்க்கை தொடங்குவதே

படைப்பு. கருத்துக்களேயும், சிந்தனைகளேயும் வெளியிடுவதற்கு ஒரு உடல் தேவை. அது இல்லேயென்ருல் மன—அறிவுச் சாதனம் வெளியாகாமல் மறைந்து கிடக்க நேரிடுகிறது. ஒரு வித்வா னுடைய சங்கீதம் அவருடைய வீணையின் மூலம் வெளியாகிறது. வீணையை எடுத்துப் பெட்டிக்குள் வைத்து விட்டால், அவரு டைய இசை, வெளியாகா நிலேயுடன் கலந்து விடுகிறது அல்லவா?

வெளித் தோற்றத்திற்குத் தென்படாது, நம் ஒவ்வொருவரி லும் இருக்கும் அக நிலேக் கருவிகள் வெளியுலகத்துடன் தொடர்பு கொள்வதால் மாற்றங்களுக்கு உள்ளாகிக் கொண்டே வருகின்றன. ஆனல் மாரு அடிப்படை ஒன்று இருந்தால்தான் மாற்றல் என்ற பிரசினேயே வருகிறது. இது நமக்கு முன்னுடியே தெரியும்.

மறைதலும், வெளியாதலுமான இவ் வாழ்க்கை—நாடகம் நடக்கும் மாற்றமில்லா நிரந்தர நாடக மேடை எது?

பரஸ்தஸ்மாத்து பாவோன்யோ
வ்யக்தோ (அ) வ்யக்தாத் ஸநாதன:
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு
நச்யத்ஸு ந விச்யதி 8:20

வெளியாகாதிருக்கும் இதைவிட உயர்ந்த வெளியாகாப் பொருள் மற்ருென்று இருக்கிறது. அது நிரந்தரமானது. (பிரபஞ்சத்திலுள்ள) எல்லாப் பொருள்களும் அழிந்த போதி லும், அதற்கு அழிவில்லே.

வகுப்பு அறையில் ஒரு போர்டு இருக்கிறது. வெவ்வேறு பாடங்களே நடத்துவதற்கு வரும் ஆசிரியர்கள் அந்த போர்டை வெவ்வேறு வேலேகளுக்குப் பயன்படுத்துகிருர்கள். கணக்கு ஆசிரியர் அதன்மீது பல கோணங்களே வரைந்து, தாம் கூறுவதை விளக்குகிருர். அடுத்து வரும் பூகோள ஆசிரியர், போர்டிலுள்ள கணக்குகளே எல்லாம் அழித்துவிட்டு நாடுகள், ஆறு, மலே, ஏரி கள் போன்றவற்றை எழுதிக் காட்டுகிருர். பிறகு வருகின்ற ரசாயன வாத்தியார் அந்த ஆறு, மலே, ஏரி, நாடு முதலியவற்றின் படங்களேயெல்லாம் துடைத்து சுத்தமாக்கிவிட்டு எந்தெந்தப் பொருளுடன் எதைக் கலந்தால் என்ன வரும் என்று ட்டி யலாகப் போட்டு பாடம் நடத்துகிருர். அவர் போன பிறகு அவ்வகுப்புக்கு வரலாற்று ஆசிரியர் வருகிருர் என்று வைத்துக் கொள்வோம். இதற்கு முன் போர்டு மீது இருந்த அவ்வளவை யும் அழித்துவிட்டு இவர் அரச பரம்பரைகள், அவர்கள் ஆண்ட

பகுதிகள், அவர்கள் மீது படையெடுத்தவர்கள் வந்த பாதைகள் முதலியவற்றை பரம்பரைகள், படம் போட்டுக் காட்டிப் போர்டை நிரப்பி விடுகிறார். இவ்வாறு ஒவ்வொரு ஆசிரியரும் தாம் புகட்ட விரும்பும் அறிவுக்கேற்றபடி வெவ்வேறு மாதிரி யான சித்திரங்களுக்குப் பயன்படுத்துகிறார்கள். ஆனால் கணக்கை யும், பூகோள விவரங்களையும், ரசாயன மாறுதல்களையும், வர லாற்று நுணுக்கங்களையும் விளக்கி நிற்கும் போர்டு மட்டும் மாறா மல் அப்படியே இருக்கிறது.

அதைப் போலவே மாற்றங்களுக்கு உள்ளாகும் வெளியாகா உலகத்திற்கு மாறாத அடிப்படை ஒன்று—'எல்லாப் பொருள் களும் (பூதங்களும்) அழிந்து விட்ட போதிலும் அழிதலில்லா நிரந் தரப் பொருள் ஒன்று—இருந்தே தீர வேண்டும். மாலை நேரமான வுடன், ஆசிரியர்களும், மாணவர்களும் வீட்டுக்குப் போன பிறகு கூட, வகுப்பிலுள்ள போர்டு எங்கும் போய்விடுவதில்லை. அது அங்கேயே இருக்கிறது. தூய உணர்வுத் தத்துவம் புலனறிவுக்கோ, மன அறிவு சாதனத்திற்கோ எட்டாதது. ஆகையால் அது 'வெளியாகாதது' என்று இங்கு குறிப்பிட்டிருக்கி றது. பிரபஞ்சத்தில் ஆயிரமாயிரம் நிகழ்ச்சிகள் மாறி மாறி நடந்த போதிலும், அவற்றிற்கெல்லாம் மாறா அடிப்படையாக இத்தூய உணர்வுத் தத்துவம் விளங்குகிறது. அதனால்தான் மீண்டும் வெளியாகும் தோன்றா நிலையைவிட உயர்ந்து, ''என்றுமே வெளியாகா நிலையிலுள்ள மற்றொன்று இருக்கிறது,'' என்று பகவான் கூறுகிறார்.

வெளித் தோற்றம் கொண்டிருந்தபோது செய்த அல்லது செய்ய நினைத்ததன் விளைவு (வாசனை)தான் ''வெளியாகும் மறை நிலை''. இதைத்தான் வேதாந்த நூல்கள் ''அறியாமை'' (அவித்யை) என்று கூறுகின்றன. இருக்கும் ஒன்றைப் பற்றித் தான் ''அறியாமை'' இருக்க முடியும். என்னுடைய வாலைப்பற்றி நான் அறியாமையில் மூழ்கியிருக்க முடியாது. ஏனெனில் எனக்கு வால் இல்லை. மாற்றங்களில்லாத, நிரந்தரமான ஒன்று இருக் கிறது என்பது இதிலிருந்து தெளிவாகிறது. அதை பேருண்மைப் பொருள் என்று சொன்னாலும், ஆன்மா என்றாலும், அழித்து அழித்து எழுதப்படும் அறிவுரைகளை எல்லாம் தாங்கி நிற்கும் போர்டு என்றாலும்—எல்லாமே ஒன்றுதான். நிரந்தரமான இந்த இறைப் பொருளின் உண்மை இயல்பைத் தெரிந்து கொள்ளாமலி ருப்பதே அறியாமை.'' பல்வேறு நாம, ரூபங்களில் மாறி மாறித் தோன்றும் இவ்வுலகத்தை உண்மை போல் நமக்கு எடுத்துக் காட்டுவதும் இந்த அறியாமையே. இப் பேருண்மைப் பொருள் (ஆன்மா) படைப்பு, இறப்பு, மறுபிறவி போன்ற மருட்சித் தோற்ற நிலவரங்களுக்கு 'அப்பாற்பட்டது' என்றும் அதையே அடைய வேண்டுமென்றும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டிருக்கி றது.

மறைந்திருக்கும் ஒன்றைவிட என்றுமே வெளியாகா உயர்பொருள் ஒன்று இருக்கிறதென்று இச் செய்யுள் குறிப்பிடு கிறதே, அதுதான் எல்லாவற்றிலும் உயர்ந்ததா? வாழ்க்கையின் இலட்சியமாகக் கொள்ளக்கூடியது அதுதானா? அல்லது அதற்கும் மேற்பட்ட உயிர்ப்பொருள் ஒன்று இருக்கிறதா?

*அவ்யக்தோ க்ஷர இத்யுக்தஸ்—தமாஹு: பரமாம் கதிம்*
*யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம 8:21*

என்றைக்குமே வெளியாகாததும், சாசுவதமானதாகவும் இருக்கும் அப்பொருளே முடிவான இலட்சியமென்று சொல்லு கிறார்கள். அதை எட்டியவர்கள் மீண்டும் (இவ்வுலகுக்கு) திரும்புவதில்லை. அது என்னுடைய பரமபதம்.

என்றுமே வெளியாகா மற்றொரு நிரந்தரப்பொருள் இருக்கிறதென்றும், அதை அடைதலே நிரந்தர வாழ்வு என்றும், இதற்கு முன்னரே அறிவிக்கப்பட்டது. அந்த அழிவிலாப் பொருளே பிரம்மன், அது பிரபஞ்சத்தின் அடிப்படை—அந்த அடிப்படை—அந்த சாசுவதப் பொருளின் குறியீடாக ஓங் காரத்தை தியானித்து வரவேண்டும்—என்ற விவரங்கள் வலியுறுத்தப்பட்டன. கேவலம் பேருணர்வு மயமாக இருக்கும் அந்த ஆன்மிகப் பொருள், தோற்றத்திலிருந்து மறை நிலைக்குச் சென்றிருக்கும் வாசனைக் கோவைகளுக்கு உயிர் இயக்கமும், உருவமும் அளித்து வெளியுலகில் நடமாடச் செய்கிறது. என்றைக்குமே தோற்றமெடுக்காத இந்த சாசுவதப் பொருளை—அழிவிலா ஆன்மாவை—அடைவதே ஒருவருடைய முடிவான இலட்சியம்.

வேறு எந்த இடத்திற்குப் போனாலும், மீண்டும் மீண்டும் அங்கிருந்து திரும்பி வந்துதான் ஆகவேண்டும். * தூக்கம் என்றால் வாழ்க்கை முடிவடைந்து விட்டதென்று அர்த்தமா? வேலை செய்து களைத்து தூங்கச் சொல்கிறோம். தூங்கி எழுந்த வுடன் மீண்டும் சுறுசுறுப்பாக வேலையில் ஈடுபடுகிறோம். மரண மும் அப்படித்தான். அது மனிதனின் முடிவு அல்ல. இங்கிருந்து மறைந்து ஓய்வு எடுத்துக்கொண்டு வேறு ஒரு உடல் எடுத்துக் கொண்டு மறுபடி புது வாழ்க்கை தொடங்குகிறோம். மிக மேலாக உள்ள உலகங்களுக்குச் சென்ற அகந்தையும் கூட, இவ்வுலகத்திற்குத் திரும்பி வந்து தனது வாசனைகளை வாழ்ந்து தீர்த்துக் கொள்ள வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. பிறவியைப் பற்றிக் கூறுகையில், ''இது துக்க ஆலயம். அசாசுவத மானது'' என்று கிருஷ்ணர் அழுத்தந்திருத்தமாகக் கூறினார்.

---

* சம்சரதி இதி சம்சாரஹ—பிறப்பு—இறப்புச் சுழல்—வெளியாகா நிலையிலிருந்து வெளியாவது வருதல் இதுதான் வாழ்க்கை.

எனவே மறு பிறவி இல்லா நிலையே நிறைவு நிலை. இவ்வுலகத்திற்குத் திரும்பி வராத இடத்தை அடைவதே உண்மையான இலட்சியம்.

ஆன்ம நிலை அடைந்த பிறகு ஏன் இவ்வுலகிற்குத் திரும்பி வரக் கூடாது என்று சிலர் கேட்கிறார்கள். அப்படிக் கேட்பது இயற்கையே என்றாலும், அர்த்தமற்ற ஒரு கேள்வி. நடப்பதற்குத்தான் 'ஏன்'? என்று காரண வேட்கை தோன்றுகிறது. நடக்காததற்குக் காரணம் கேட்க முடியாது. 'நீ ஏன் ஆஸ்பத்திரிப் படுக்கையில் இல்லை?' என்று யாராவது கேட்கிறார்களா? அங்கு இருந்திருந்தால் ஏன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டேன் என்று காரணம் கூற முடியும். முடிவு இல்லாத ஒன்று முடிவுள்ளதாக எப்படி ஆயிற்று என்ற கேள்விக்கு அர்த்தமிருக்கிறது. முடிவு இல்லாதது முடிவுள்ளதாக ஏன் ஆகக் கூடாது என்றால் அது அசட்டுக் கேள்வி. உங்களைப் பார்த்து 'நீங்கள் ஏன் சிறையில் இல்லை?' என்று கேட்டால் திடுக்கிட்டுப் போவீர்கள் அல்லவா? நடந்ததற்கு அல்லது நடப்பதற்குத்தான் காரணம் கூற முடியும். நீங்கள் சிறையில் இருந்திருந்தால் 'ஏன் உங்களை சிறையில் அடைத்தார்கள்?' என்று கேட்கலாம். ஆன்ம நிலை அடைந்தவர்கள் ஏன் திரும்பி வரக் கூடாது என்று கேட்பது ஒரு கேள்வியே அல்ல. அவர்கள் திரும்புவதற்கில்லை. அவ்வளவுதான்.

புதுமண தம்பதிகளின் முதல் இரவு அனுபவங்களை எவ்வளவுதான் சொல்லி மகிழ்ந்த போதிலும் ஒரு சிறுமிக்கு அது விளங்கப் போவதில்லை. ''நான் அம்மாவைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்'' என்று பெருமிதத்துடன் பதிலளிப்பாள். ஆனால் அவளுக்கு வயது வந்தவுடன், மற்றவர்கள் சொல்லாமலேயே எல்லாம் விளங்கிவிடுகிறது. அவளுடைய உடலிலும், உள்ளத்திலும் ஏற்படும் மாறுதல்களால் அது தானாக விளங்குகிறது. அதைப்போலவ, மன—அறிவுக் குப்பைமேட்டில் குழி பறித்துக் கொண்டு அதனுள் இருக்கும் சாதகர்களுக்கு, நீலவானின் நெகிழ்ச்சிதரும் இன்பமும், பூங்காற்றில் சிறகடித்துப் பறக்கும் ஆனந்தமும் பற்றி எவ்வளவுதான் சொன்னாலும் அது முழுமையாகத் தெரியாது. தவறான இணைப்புக்களிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு ஏற்கனவே கூறியுள்ளவாறு * தியானப் பாதையை மேற்கொள்பவர் முட்டையிலிருந்து வெளியாகும் கோழிக் குஞ்சுபோல, தம்மைத் தடுத்து வைத்திருக்கும் வரையறைகளைத் தகர்த்தெறிந்துவிட்டு, மிக நுணுக்கமான ஆன்மீக இன்பத்தை அனுபவிக்கத் தொடங்குகிறார். விழித்துக் கொண்ட பிறகுதான், ஒருவருக்கு தாம் கனவில் கண்டதெல்லாம் பொய் என்று தெரிகிறது. அதுவரை, வீண்

---

* கீதை அத். 8 செய். 12, 13, 14.

மருட்சியில் சிக்கித் தத்தளித்துக் கொண்டிருப்பது அவருக்கே தெரியாது. விழித்தெழுந்த பிறகு, கனவில் தோன்றிய நிகழ்ச்சிகளும், துன்பங்களும் அவரை பாதிப்பதில்லை.

''தூய உணர்வுமயமான ஆன்ம நிலையே எனது இருப்பிடம்,'' என்று கிருஷ்ணர் கூறுவதாக, கவிதை மொழியில் எழுதுகிறார் வியாசர். இம் மதுர கீதம் முழுவதையும் பரமாத்மாவே இசைத்து வருவதால், அழிவில்லாததும், தூய உணர்வு நிலையிலும் உள்ள தம்மை அடைவதைவிட மேலான இலட்சியம் வேறில்லை என்று அவர் கூறுவது மிகப் பொருத்தமாக அமைந்திருக்கிறது. அது அடையக் கூடியதுதான் என்பது முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அந்த முடிவான இலட்சியத்தை அடைவதற்கு ஒரு சாதகர் பின்பற்ற வேண்டிய நேர்பாதை பற்றி அடுத்து கூறப்படுகிறது.

*புருஷ:ஸபர: பார்த்த பக்த்யா லப்ப்யஸ்—த்வனன்யயா*
*யஸ்யாந்த: ஸ்த்தானி பூதானி யேன ஸர்வமிதந் ததம்.'*
*8:22*

பார்த்த, ஒப்புயர்வற்ற 'புருஷ'னையே தளரா உறுதியுடன் நாடி வழிபடுகிறவர்கள் அவரை அடைகிறார்கள். பிரபஞ்சத்தி லுள்ள எல்லாம் அவருள் இருக்கின்றன; அவர் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறார்.

''வெளியாகாததும் அழிவற்றது''மாகிய இலட்சியத்தை அடைய இந்துக்களின் தீர்க்கதரிசி கிருஷ்ணர் இங்கு வழிகாட்டுகிறார். உடல், மனம், அறிவு ஆகிய மூன்றையும் வெளியுலக நாட்டத்திலிருந்து விடுவித்துக் கொண்டு, ஆன்ம இலட்சியமே குறியாக, தியான வழிபாட்டில் ஈடுபடவேண்டும். இலட்சியத்தை அடைய வழி இது. நிரந்தரமான பேருண்மைப் பொருளில் பற்றுதல் அதிகரிக்க, அதிகரிக்க வெளியுலகப் பொய்யுறவுகளில் உள்ள தொடர்பு தானாகவே மறையத் தொடங்குகிறது. முழு மூச்சாக ஆன்ம உணர்வில் மூழ்குதல் என்றால், ''நானே ஆன்மா'' என்ற உண்மையை அனுபவ பூர்வமாக உணர்ந்து அதில் இணைந்து விடுதல் என்று பொருள். தம்முள் இருக்கும் ஆன்மீகப் பொருளுடன் கலந்தே தீருவது என்ற இலட்சிய ஆவேசத்தை மேற்கொள்ளுமாறு இங்கு வற்புறுத்தப்படுகிறது.

பொருளுறைகளினால் உருவான இவ்வுடலுக்கு இயக்க மூட்டி நிற்கும் உயிர்ப் பொறியே ஆன்மாவென்று நினைத்துவிடக் கூடாது. தனித்தே அக நாட்டத்தின் மூலமே ஒருவர் ஆன்ம உணர்வு பெறுகிறார் என்பது உண்மைதான். ஆனால் அப்

பேருண்மை பிரபஞ்ச முழுமைக்கும் அடிப்படையானதாகக் காண வேண்டும். ''எல்லா உயிரினங்களும் அவருள் அடங்கு கின்றன. அவர் எல்லாவற்றிலும் விரவி இருக்கிறார்,'' என்று, பிரபஞ்ச முழுவதையும் சேர்ந்து குறிப்பிடுவதன் நோக்கம், பரம் பொருளின் இயல்பை எடுத்துக் காட்டுவதற்காகத்தான்.

எல்லா மண்பாண்டங்களும் மண்ணிலேயே இருக்கின்றன. மண்ணே எல்லா மண் பாண்டங்களிலும் விரவி இருக்கிறது. உருவம், அளவு, நிறம் முதலியவற்றில் அவை ஒன்றுக்கொன்று வேறுபட்டாலும் மண்ணிலிருந்து அவற்றைத் தனியாகப் பிரித்துப் பார்க்க முடியாது. கடல் அலைகளில் ஒன்று சிறிய தாகவும் ஒன்று பெரியதாகவும் இருக்கலாம். ஆனால் எல்லா அலை களிலும் கடல் இருக்கிறது. ஒவ்வொரு அலையிலும் அது ஊடுருவி இருக்கிறது. உலகத்திலுள்ள எல்லாப் பானைகளையும் செய் திருக்கும் அதே பொருளினால்தான் குறிப்பிட்ட இந்தப் பானையும் செய்யப்பட்டிருக்கிறது. கடல் அலைகள் எல்லாவற்றிலும் கடல் நீரே இருக்கிறது. கடலுடைய இயல்பும், அதிலிருந்து எழும் அலை களின் இயல்பும் வெவ்வேறானவை அல்ல.

தூய உணர்வுதான் அழிவிலாப் பேருண்மை. வெளி யாகாதது வெளியாவதுபோல் தோற்றம் கொள்வது இப்பேருண்மை மூலமாகத்தான். பருத்தி இல்லாவிட்டால், அழகும், தரமும் கொண்ட ஆடைகளைத் தயாரிக்க வேண்டு மென்று கருதும் நெசவாளியின் திறன் வெளியாகாமலே நின்றுவிடும். பருத்தியை எடுத்து, நூலை நூற்று, அதை தறிக் குக் கொண்டு வந்த பிறகுதான் நெசவாளியின் கருத்து வெளியாகிறது.

'வாசனை'ப் பாத்திகளில் பாயும் பேருணர்வு, ''அறியாமை'' யினால் இறுகிவிடும் போது, நாம ரூபங்களினாலான இப்பன்மைத் தோற்ற உலகம் தென்படுகிறது. இத் தோற்றப் பொருளுக்காக போர்களும், சச்சரவுகளும் உண்டாகின்றன. கோரிக்கைகளும், ஏக்கங்களும் மனிதனுடைய உள்ளத்தை உலுக்குகின்றன. நிரந்தரமான பேருண்மைப் பொருளைத் தெரிந்து கொண்டு அதனுடன் ஒன்றுபட்டு விடுபவன், அந்த அற்புத அனுபவத்தில், பன்மைத் தோற்றக் குழப்பத்தின் காரணத்தைத் தெரிந்து கொள்ளுகிறான். தனது அசட்டு அகந்தையே அவ்வாறு சம்சார மருட்சியில் சிக்கித் தத்தளித்துக் கொண்டிருந்தது என்று இப்போது அவனுக்குத் தெரியாது.

வெளியான நிலையிலிருந்து வெளியாகா நிலைக்குத் திரும்பிச் செல்லும் இரண்டு தெளிவான வழிமுறைகளை எடுத்துரைத்த பிறகு, இவ்வழிகளில் செல்லும் சாதகர்களைப் பற்றி விவரமாக அடுத்த பகுதியில் கூறுகிறார். குறிப்பிட்ட ஒரு பாதையில்

செல்பவர்கள் இவ்வுலகில் மீண்டும் பிறவா நிலையை அடைகிறார் கள். மற்றொரு வழியைப் பின்பற்றி இலக்கை அடைபவர்கள் இவ்வுலகுக்குத் திரும்பி வருகிறார்கள். அந்த இரு பாதைகளும் பின்வருமாறு:

*ய்தரகாலே த்தனுவ்ருத்திம் ஆவ்ருத்திஞ் சைவ யோகின:*
*ப்ரயாதா யாந்திதங் காலம் வக்ஷ்யாமி பதர்ஷப* **8:23**

எந்தக் காலத்தில் (வழியில்) தமது பிரயாணத்தைத் தொடங்குபவர்கள் மறுபடி திரும்பி வருவதில்லை என்றும் எப்போது (எவ்வழியில்) செல்பவர்கள் மீண்டு வருகிறார்கள் என்பதையும் நான் உனக்குச் சொல்கிறேன் பரதர்களில் சிறந்தவனே!

வாழ்க்கையில் மனிதர்கள் நாடும் இலட்சியம் இருவகைப் படும். இது முன்னரே எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. தமது அகந்தையைத் திருப்தி செய்து கொள்வதற்காகவும், புலன் நாடும் பொருள்களிடையில் அவ்வப்போது கிடைக்கும் இடைத் துளிகளை அனுபவிப்பதற்காகவும் வாழும் இலட்சியம் ஒருவகை. இது நீடிக்கும் இன்பம் அல்லவாதலால், அதையடுத்து துன்பமும், வெறுப்பும்கூட தொடர்ந்து வருகின்றன. மாறாக, அழிவிலாப் பேருண்மையை இலட்சியமாகக் கொண்டு சிலர் வாழ்கிறார்கள். பிரபஞ்சத்தின் மாறா அடிப்படையாகத் திகழும் ஆன்மிகப் பொருள் தாமே என்று உணர்ந்து, அகந்தைக்கு முடிவு கட்டி பேருண்மையில் கலந்துவிடும் இலட்சியத்திற்காக வாழ்பவர்கள் இவர்கள்.

இவை ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. முதல் வகையினால் இவ்வுலகில் மீண்டும் பிறந்து, நிலையிலா அகந்தைமைய வாழ்வில் உழலுகிறார்கள். இரண்டாவது இலட்சியத்தை அடைபவர்கள் திரும்பி வருவதில்லை. தெய்வீக ஆனந்தக் கடலில் என்றென்றும் திளைத்து மகிழ்கிறார்கள்.

இவ்வாறு இருவகை இலட்சியங்களை அடையும் வழிகளும், திரும்ப வரும் பாதை வெவ்வேறு. அவற்றில் செல்பவர்களும் வெவ்வேறு வகையினர். திரும்பி வரும் பாதை. திரும்புதல் இல்லாத பாதை ஆகிய இரண்டையும் விளக்குவதாக ''பரத குடும்பத்தில் சிறந்த அர்ஜுனனுக்கு வாக்களிக்கிறார் கிருஷ்ணர்.

இச் செய்யுளில் வரும் 'காலே' என்ற சொல் இரு பொருள் படும் முறையில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இவ்வாழ்வு முடிந்து புறப்படும் காலம், செல்லும் பாதை ஆகிய இரண்டையும் அது உணர்த்துகிறது.

திரும்பி வருதல் இல்லாதவர்கள் செல்லும் பாதை பின்கண்ட செய்யுளில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அக்னிர் ஜ்யோதி—ரஹ: சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்யவிதோ ஜநா: 8:24

ஆன்ம உணர்வு பெற்றவர்கள் தீ, ஒளி, பகற்பொழுது, சுக்லபட்சம், உத்தராயணம் ஆறு மாதங்கள் ஆகிய வழியிற் சென்று பிரம்மனை அடைகிறார்கள்.

இங்கு கிரம முக்திபற்றி—அதாவது படிப்படியாக முன்னேறி விடுதலை பெறும் வழிபற்றி விளக்கப்பட்டிருக்கிறது. ''வைதிகச் சடங்குகள், வழிபாடு (உபாசனை) முதலியவைகளைப் பின்பற்றி வாழ்க்கை நடத்தியவர்கள் அவற்றிலிருந்து வரும் பயனை அனுபவிப்பதற்காக தேவர்களின் பாதையில் சென்று, சூரியனைக் கடந்து, அப்பாலுள்ள பிரம்ம லோகத்தை அடைகிறார்கள். என்பது உபநிடத மரபு,. அங்கு புலனின்பங்களைவிட உயர்ந்த வகை இன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்துவிட்டு பிரம்மா யுகம் முடியும்போது, அவர்களும் பிரம்மாவுடன் விடுதலை பெறுகிறார்கள்.

உபநிடதங்களிலிருந்து எடுத்தாளப்பட்டிருக்கும் இச் சொற்கள் ''தேவர்களின் வழி''யை சுட்டிக் காட்டுகின்றன. முக்காலு முணர்ந்த முனிவர்களின் அவ்வாக்கியங்களைப் படித்தவர்களுக்கு எத்தனையோ வகையான பொருள் தோன்ற இடமளிக்கிறது.*

தீ, ஒளி, பகல், சுக்லபட்சம், உத்தராயணமாகிய ஆறு மாதங்கள் இவை தேவர்களின் பாதையைக் குறிப்பிடுகின்றன. இதற்கு அதிபதி சூரியன். பிரபஞ்சத் தோற்ற வரலாறு பற்றி பிரச்னோபநிடதத்தில் மாணவர்களுக்கு எடுத்துரைக்கும் பிப்பலாதன், பிரஜாபதியே சூரியனாகவும், சந்திரனாகவும் (இயக்க சக்தி, ஜடப் பொருள் ஆகிய இரண்டுமாக) ஆனார் என்று விளக்குகிறார்.

இயக்க மையத்தை தம்மிடமே காணும் ஒரு சாதகர், தமது வாழ்வு முழுவதையுமே அப்பேருண்மை உபாசனையில் கழிக்கிறார். இறுதியில் அவர் இவ்வுடலைக் கைவிட்டுப் புறப்படும்போது, தாம் வாழ்நாளெல்லாம் எட்டிப் பிடிக்க முயன்ற இலட்சிய நினைவே அவருக்கு இருக்கிறது. எனவே அவர் இங்கு செல்லு

---

* இங்கு கூறியுள்ள இரு பாதைகளைப் பற்றி வியாசமாமுனிவர் இயற்றியுள்ள பிரம்ம சூத்திரங்களிலும், சாந்தோக்கிய, பிருஹதாரண்யக, பிரச்ன கதோபநிடதங்களிலும் விவரிக்கப்பட்டிருக்கிறது. பிரம்ம சூத்திரம் IV-2, 17, 20ல் காண்க.

கிறுர். ''சிந்தனை எப்படி—ஆவதும் அப்படி'' என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒரு உண்மையே அல்லவா? பரிணும வளர்ச்சியில் மேல்மட்டத்திற்குச் செல்வதையே கருத்தில் கொண்டு வாழ்க்கை முழுவதையும் கழித்தவர்கள், இவ்வுடலைக் கைவிட்டதும் பரிணும வளர்ச்சிப் பாதையில்—அதாவது தேவர் களின் பாதையில்—செல்வதில் வியப்பில்லை. இங்கு அப்பாதையை, ''தீயும், ஒளியும், பகலும், சுக்லபட்சமும், உத்தராயணமுமான, கதிரவன் பாதை'' என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. என்றைக்கும் அழிவென்பதே இல்லாத பிரம்ம னிடம் ஈடுபாடு கொண்ட பெரியோர் செல்லும் பாதையை உபநிடத மொழியில் ''வடக்கு நோக்கிச் செல்லும் வழி'' என்று குறிப்பிடுகிறுர்கள். கிரம முக்திப் பாதையை (படிப்படியாகச் சென்று விடுதலையடையும் வழியை) நமது வேத மாமுனிவர்கள் வடபாதை என்று கூறுவது மரபு.

இலட்சியத்தை அடைந்த பிறகு, அங்கிருந்து திரும்பி வராத இப் பாதைக்கு மாருக, இவ்வுலகுக்குத் திரும்பிவரும் பாதை பற்றி கிருஷ்ணர் அடுத்து எடுத்துரைக்கின்றுர்.

தூமோ ராத்ரிஸ்—ததா க்ருஷ்ண:
ஷண்மாஸா தக்ஷிணுயனம்

தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்
யோகீ ப்ராப்ய நிவர்த்ததே 8:25

புகை, இரவு, கிருஷ்ணபட்சம், தட்சிணுயனம், ஆகிய நிலவுப் பாதையில் செல்லும் யோகி, சந்திரனை அடைந்து, பிறகு திரும்பி வருகிறுர்.

மீண்டும் இவ்வுலகுக்குத் திரும்பி வரும் வழியை 'மூதாதையரின் பாதை' (பிதுராயணம்) என்று கூறுகிறுர்கள். இப் பாதையின் அதிபதி பொருளுலகப் பிரதிநிதியாகிய சந்திரன், உபாசனை (வழிபாடு) எதுவுமின்றி, தமது வாழ்நாட்களை நற்பணி களிலும் வேதங்கள் கூறும் சடங்குகள் செய்வதிலும் கழித்தவர் கள், பிதுருக்கள் (மூதாதையர்) இருக்கும் உலகத்திற்குச் செல்லு கிறுர்கள். இவ்வுலகையே பொதுவாக சொர்க்கம் என்று கூறு கிறுர்கள். அங்கு செல்பவர்கள் தாங்கள் செய்த புண்ணியங் களுக்கு ஏற்ப இன்பங்களை அனுபவித்து முடித்த பிறகு மீதியுள்ள வாசனைகளை போக்கிக்கொள்ள தகுந்த உருவெடுத்து இவ் வுலகுக்குத் திரும்புகிறுர்கள். வாழ்ந்து தீர்த்தாலொழிய இவ்வாசனைகள் அவர்களை உந்திக் கொண்டே இருக்கும்.

புகை, இரவு, கிருஷ்ணபட்சம், தட்சிணுயனமாகிய ஆறு மாதங்கள். இவையெல்லாம் சந்திரனுடைய பாதை மூலம்

ஒருவர் பிதுருக்களின் உலகிற்குச் செல்வதைக் காட்டுகின்றன. பொருள் உலகத்தைக் குறிப்பிடும் சந்திரன் புலனின்பங்களுக்கு கூட அதிபதி என்று சொல்ல வேண்டியதில்லை. சந்திரன் அருளால் சொர்க்க இன்பங்களை அனுபவித்த பிறகு, வாசனைகள் முற்றிலும் அகலப் பெறாதவர்கள் இவ்வுலகில் மறுபிறவி எடுக்கிறார்கள்.

தன்னை பல்வேறு பொருளுறைகளாகக் கருதிவிடாமல், அவற்றின் சிக்கல்களிலிருந்து விடுவித்துக் கொள்வதற்குக் கடுமையாக முயற்சி செய்யும் ஒரு சாதகன் மேல்மட்டத்திற்கு உயருகிறான். அங்கிருந்து ஆன்மிக நீரோட்டத்தில் கலந்து பரம்பொருளுடன் ஒன்றுபடுகிறான். ஆனால் அவன் புலனின்பக் கோயிலையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பவனாக இருந்திருந்தால், தனது நல்லுணர்வுகளுக்கு ஏற்ற பேரின்பங்களை அனுபவித்துவிட்டு மீண்டும் இவ்வுலகச் செயற்களத்தில் இறங்க வேண்டியதாகிறது. இதையே மேற்கண்ட இரண்டு செய்யுட்கள் விளக்குகின்றன. இவ்வுலகிற்குத் திரும்பி வந்த பிறகு தன்னை மேல் நிலைக்கு உயர்த்திக் கொள்வதோ, கீழ்நிலைக்கு இறக்கிக் கொள்வதோ — இந்த இரண்டுமே மறுபடி அவன் கையில்தான் இருக்கிறது.

சுக்லக்ருஷ்ணே கதீ—ஹ்யேதே
ஜகத: ஸாச்வதே மதே
ஏகயா யாத்—யனாவ்ருத்திம்
அன்யயா வர்த்ததே புன: 8:26

இந்த ஒளி வழியும், இருட் பாதையும் இவ்வுலகினருக்கு நிரந்தரமாக அமைக்கப்பட்டிருக்கின்றன என்று கருதப்படுகிறது. ஒன்றில் அதாவது ஒளிப் பாதையில் செல்பவருக்கு இங்கு திரும்பி வருதல் என்பது கிடையாது. மற்றொரு வழியில் செல்பவர் மறுபடியும் திரும்பி வருகிறார்.

முந்திய சுலோகத்தில் விளக்கப்பட்ட இரு பாதைகளும் அவை சென்று அடையும் இலட்சியத்தையொட்டி, ஒளிவழி, இருள் வழி என்ற பெயர்களால் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஒளிப் பாதையைப் பின்பற்றுபவர்கள் இறுதியில் பரிணாம வளர்ச்சியின் உச்ச நிலையை அடைகிறார்கள். இரண்டாவது வழியில் பயணம் மேற்கொள்பவர்கள் ஆழம் காண முடியாத துன்பக் கேணியில் விழுந்து விடுகிறார்கள். பொதுப்படையாக, இவ்விரு மார்க்கங்களையும் முறையே மோட்சப் பாதை, சம்சாரப் பாதை என்று சொல்லலாம்.

வரலாற்றில் எந்தத் தலைமுறையினரை எடுத்துக் கொண்டாலும், அவர்களுடைய வாழ்க்கையை இருவகையாகப்

பிரிக்கலாம். உணவு, உடை, இருப்பிடம் போன்ற வசதிகளுக்கு மிஞ்சிய இலட்சியம் வேறு எதுவுமில்லை என்று கருதுபவர்கள் ஒருபுறம். உடலுக்கும்—உணர்ச்சிகளுக்கும் இன்பமளிக்கும் பொருள்களைப் பெறுவதுடன் இவர்களுடைய வாழ்க்கை நிறைவு பெற்றுவிடுகிறது. அதைவிட உயர்ந்த புனித வாழ்வு ஒன்று இருக்கிறது என்பதை இவர்களுடைய அறிவு ஒப்புக் கொள்வதில்லை. ஆனால் இரண்டாவது வகையினர் அப்படிப்பட்டவர்கள் அல்ல. புலனின்பப் பொருள்கள் எவ்வளவுதான் இருந்தாலும், அவற்றில் அவர்களுக்கு ஈடுபாடு தோன்றுவதில்லை. மேலெழுந்த வாரியாக நடக்கும் வாழ்க்கைக்கு அப்பாற்பட்டு நிற்கும் ஏதோ ஒரு பேருண்மையை அடைய இவர்களுடைய உள்ளம் துடிதுடிக்கிறது. இந்த இரண்டு பாதைகளும், தெய்வீக வாழ்வு முறை, மதப்பற்றற்ற வாழ்வு முறையிலேயே ஆகிய இக் கருத்துக்களை மட்டுமே குறிப்பிடுவதாக நினைத்துவிடக் கூடாது. இவை முறையே பொருள் தேடுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பவர்களையும், ஆன்மிக வேட்கை கொண்டவர்களையும் சேர்த்துத்தான் குறிப்பிடுகின்றன. ''உண்மையில் இவை இரண்டும் நிரந்தரமான பாதைகள் என்று பகவான் கூறுகிறார். சம்சாரம் முழுவதுமே இந்த இரண்டு வேட்கைகளில் அடங்குவது என்று சொல்லலாம். மாறுதலும் வரையறைகளும் இவ்வுலகின் தொடர்ந்த இயல்புகளாததால் முற்கூறிய இருவகை மாறுபட்ட உணர்ச்சிகளும் நிரந்தரமாக இருந்து வருவதில் வியப்பு இல்லை. ஆனால் ஒருவர் தமது 'சம்சாரத்திற்கு' முடிவு கட்டிவிடலாம் என்பதை மகான்களும், முனிவர்களும் தங்களுடைய வாழ்க்கையின் மூலம் நிரூபித்திருக்கிறார்கள். அதை அடிப்படையாகக் கொண்டுதான் வேதாந்த தத்துவமும் அவ்வுண்மையை வலியுறுத்துகிறது.

தியான மார்க்கத்தில் உறுதியாக நிற்கும் உண்மையான யோகிகளுக்குக்கூட பயன்படும் இரகசியமொன்று இச் செய்யுளில் பொதிந்திருக்கிறது. பல ஆண்டுகள் சாதகத்தில் ஈடுபட்ட ஒருவர் அதில் முன்னேறி வருபவராக இருக்கலாம். 'வாசனை'கள் காரணமாக சில சமயங்களில் அவருடைய உள்நோக்கு கலைந்து, புலன்கள் வெளிப்புறமாகத் தறிகெட்டு ஓடத் தொடங்கலாம். இப்படி மனம் அலைபாய்ந்து, கலக்கமுறுவது பற்றி அவர் பயந்து விட வேண்டியதில்லை. ஏனெனில் வாழ்வின் உயர்நிலைக்குச் செல்லும் இலட்சியத் துடிப்பும் கீழ்மட்டத்திற்கு நம்மைப் பிடித்து இழுக்கும் சக்திகளும் ஒன்றுக்கொன்று நேர் மாறானவை. இவை இரண்டுக்கும் இடையில் இடைவிடாது போராட்டம் நடந்து கொண்டு இருக்கிறது என்று கிருஷ்ணரே தெரிவிக்கிறார். எனவே சரியான வழியில் சென்று கொண்டிருப்பவர்கள் அவ்வப்போது தோன்றும் சலலப்புக்களுக்கு அஞ்ச வேண்டியதில்லை

என்று கூட கிருஷ்ணன் இங்கு கூறுவதாகத் தோன்றுகிறது.

இந்த இரண்டு பாதைகள் பற்றியும், அவற்றின் வெளி இயல்பு பற்றியும் தெரிந்து கொள்வதால் நமக்கு கிடைக்கும் திட்டவட்டமான பயன் என்ன?

நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன்
யோகீ முஹ்யதி கஸ்சன
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு
யோகயுக்தோ பவார்ஜுன
8:27

பார்த்தா, இந்த இரண்டு வழிகளைப் பற்றியும் அறிந்த எந்த யோகியும் மருட்சியடைவதில்லை. எனவே எல்லா சமய, சந்தர்ப் பங்களிலும் யோகத்தில் உறுதியாக நிலைத்திரு அர்ஜுனா.

ஒளிவழி, இருள் வழி ஆகிய இரண்டும் மனிதனுள் இருக்கும் இரு மாறுபட்ட சக்திகள் என்றும், அவை நிரந்தரப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கின்றன என்றும் அறிந்த சாதகர்கள், தங்களுடைய மனம் கட்டுக் கடங்காமல் திமிறி எழும்போது நிலை குலைந்து விட மாட்டார்கள். இப் பாதைகளின் தன்மைபற்றி அறிந்த எந்த யோகியும் மருள்வதில்லை.

இந்த இரு வழிகளும் தெளிவாக இருக்க வேண்டும் என்ப தற்காகத்தான் கிருஷ்ணர் எல்லா விவரங்களையும் நிதானமாக எடுத்துரைத்து வந்தார். இதுவரை கூறியவற்றின் நோக்கத்தை யும் உட்கருத்தையும் சுருக்கி, ''ஆகையால் அர்ஜுனா, எக்காலும் நீ ஒரு யோகியாக இரு.'' என்று அறிவுறுத்துகிறார். பொய்யுறவுச் சிக்கல்களிலிருந்து விடுபட்டு, மனத்தை ஒருமுகமாக ஆன்ம சிந்தனையில் நிலைநாட்டிய ஒருவரை, ''யோகி'' என்று பகவான் இங்கு குறிப்பிடுகிறார்.

உலக நடவடிக்கைகளில் மும்முரமாக ஈடுபட்டிருக்கும் நேரத்தில்கூட இடையறு இறையுணர்வுடன் இருந்து வரவேண்டுமென்பது அவர் அர்ஜுனனுக்கு அழுத்தமாக அளிக்கும் புத்திமதி. தன்னை அழிவில்லா 'புருஷ'னுடன் ஒருங் கிணைத்துக்கொண்டு, தன்னலமற்ற முறையில் பணிபுரிய வேண்டுமென்று கருத்துத் தெரிவிக்கிறார்.

குறிப்பிட்ட சில கருமங்களைச் செய்வதால் கிடைக்கு மென்று சுருதியும், ஸ்மிருதியும் கூறும் புண்ணியங்களை, ஒரு யோகி வெறும் தியானத்தினால் பெறமுடியுமா?

வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ
தானேஷு யத் புண்யபலம் ப்ரதிஷ்டம்

அத்யேதி தத் ஸர்வ—மிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்த்தான—முபைதி சாத்யம் 8:28

வேதங்களைக் கற்பதாலும், வேள்வி, தவம், தானதருமங்கள் செய்வதாலும் புண்ணிய பலன் கிடைக்கிறது என்று (சாத்திரங்கள்) கூறிய போதிலும், இதை (இவ்விரு பாதைகளை) அறிந்த ஒரு யோகி, கரும முறையினால் வரும் பயன்களுடன் அவற்றைடக் கடந்து நிற்கும் ஒப்புயர்வற்ற பரம் பொருளையும் அடைகிறார்.

தியானத்தகுதி ஒருவருக்கு சிறிதளவு இருந்தால்கூட போதும்—அவர் அந்த மார்க்கத்தைக் கடைப்பிடிக்கலாம். ஏனெனில் ''வேதங்களைக் கற்பதாலும், வேள்வி, தவம், சுயநலக் கலப்பற்ற தான தருமங்கள் ஆகியவற்றைச் செய்வதாலும் என்னென்ன பலன்கள் கிடைக்கின்றன என்று சாத்திரங்கள் கூறுகின்றனவோ, அவை எல்லாம் ஒரு யோகிக்கு—தியான மார்க்கத்தில் உறுதியாக நிலைத்த ஒருவருக்கு—வருகின்றன. மேலும் அவற்றைவிட சிறப்புயர் மிக்க பலனையும் அவர் அடைவதாக கிருஷ்ணர் சொல்லுகிறார். மற்ற முறைகளைவிட, தியானம் ஒருவருடைய ஆளுமையை மிக விரைவாகவும், சுலபமாகவும், ஒருமைப்படுத்த உதவுகிறது. அதற்குப் புலனடக்கமும், விவேகமும் அவசியம் என்பது உண்மைதான். ஆனால் தியானப் பாதையில் முன்னேறும்போது, ஒரு சாதகரிடம் இவைகளும் வளர்ந்து வருகின்றன.

கரும, உபாசனை முறைகளின் பயன்களைப் பெறுவதுடன் நின்றுவிடாமல், ஒரு யோகி தமது முயற்சிகளை மேலும் தொடர்ந்து செய்யும்போது, அழிவிலாப் பரம்பொருளை 'இதை' அடைகிறார். ஒப்புயர்வற்ற இறை நிலையை எட்டிய பிறகு அங்கிருந்து ஒருவர் திரும்பி வரும் பிரச்னையே இல்லை.

## (சங்கல்ப வாக்யம்)

'அழிவிலா பிரம்மனை அடையும் வழி' என்ற பொருளில் இந்த அத்தியாயத்திற்கு 'அழிவிலாப் பிரம்மயோகம்' என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அர்ஜுனன் எழுப்பிய பிரச்னைகளுக்கு விடையளித்து வரும்போது, கிருஷ்ணனுக்கே ஒரு உற்சாக வேகம் பிறக்கிறது. இறுதி நேரத்தில்கூட இறைவன் நினைவாகவே இருந்து உடலைக் கைவிடுபவர் அப் பரம்பொருளைச் சென்றடைகிறார் என்று சொல்லியதுடன், உலக வாழ்க்கையில் எல்லாக் காலங்களிலும் பரம்பொருளின் நினைவுடன் இருந்து வாழ்க்கைப் பிரச்னைகளை சமாளிக்குமாறு அர்ஜுனனுக்கு

ஆலோசனை கூறினர்.

ஒருவர் தமது உள்ளத்தை ஒரே குறியாக இறைப் பொருள் மீது நிலைநாட்ட வேண்டுமென்றால், நம்மை பற்றியும் எடுத்துரைக்க வேண்டும். அது அவசியம் அல்லவா? ஒருவராலும் இயலாத இவ்வேலையை சில அற்புதமான சொற் பிரயோகங்களின் மூலம் இந்த அத்தியாயத்தில் 9, 10வது செய்யுட்களில் கிருஷ்ணர் குறிப்புணர்த்தினர். கடவுளின் நிரந்தர தன்மையை விளக்கிய பிறகு, 'ஒளிப்பாதை,' 'இருட் பாதை' ஆகிய இரண்டையும் குறிப்பிட்டு, ஒளிப்பாதை இறைவ னிடம் இட்டுச் செல்லுகிறதென்றும், இருள் பாதை நமது அகந் தையை, தோன்றி மறைவதும், துயரமிக்கதுமான இவ்வுலகிற் குக் கொண்டு வருகிறதென்றும் கிருஷ்ணன் தெரிவித்தார். எனவே 'அழிவிலா பிரம்மனை அடையும் வழி' என்ற பொருத்த மான தலைப்பு. இந்த அத்தியாயத்திற்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது.

# ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

(இராஜ ரகசியம்) 9

பகவத் கீதை போன்ற இந்து மறுமலர்ச்சி நூல் ஒன்றில், மதத்தை முற்றிலும் திருத்தி அமைக்கும் புரட்சிக் கருத்துக்கள் இருந்தே தீரும். சமய நெறியில் நாளடைவில் புகுந்து, வெறும் சம்பிரதாயங்களாக ஆகிவிட்ட பழக்க வழக்கங்களை அக் கருத்துக்கள் கடுமையாகத் தாக்கி, தகர்த்தெறிய முற்படு கின்றன. சமூக, அரசியல் காரணங்களினுல், மக்களுடைய வாழ்க்கை முறையும் மாறும்போது, வாழ்க்கையுடன் கலந்து நிற்கும் மதமும், தனது அடிப்படை உண்மைகளை விட்டுக் கொடுக்காமல், சிற்சில மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது. மகாபாரத காலத்தில் இந்துமதம் மடிந்து போய் விடவில்லை என்றுலும், வேதப் பேருண்மைகள் எல்லாக் காலங்களுக்கும் பொருந்தக் கூடியவையே என்பதை புதிய உதாரணங்களுடன் வலியுறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது.

இந்து தருமம் என்பது ஒரு வாழ்க்கை விஞ்ஞானம் (அறிவியல்). அதன் புனித உண்மைகள் மாறுமல், அவற்றின் மீது

எழுப்பப்பட்ட கட்டிடத்தில் மாறுதல்கள் செய்து கொள்ளலாம். இந்து மதத்தை வளர்ப்பதற்கு அதுதான் சரியான வழி. பரந்த முறையில் அதன் கொள்கைகளைக் கடைப்பிடிக்கவும், புதிய சூழ்நிலைகளுக்குத் தகுந்தவாறு வாழ அதில் இடமிருப்பதைக் காட்டவும், புதிய உதாரணங்களுடன் அக்கருத்துக்களை விளக்க வேண்டியதாக இருக்கிறது. மனித வரலாற்றின் தொடக்க காலத்தில் ஒருவர் சொல்லுவதை மற்றவர்கள் அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கலாம். இனி அதெல்லாம் நடக்காத வேலை. அறிவு பெருகிவிட்ட இக்காலத்தில் மனிதன் ஒவ்வொன்றையும் துருவித் துருவி ஆராயத் தொடங்கி விட்டான். மற்றவர்கள் சொல்லுவதைக் கொண்டு இன்றைக்கு யாரும் எதையும் நம்பப் போவதில்லை. தர்க்க ரீதியாக, அறிவுக்குப் படும் வகையில் இல்லை என்றால், அது பெரிய மேதையினுடைய கருத்தாக இருந்தாலும் மக்கள் அதை ஒதுக்கித் தள்ளிவிடுவார்கள். அதனால்தான் சிறந்த தத்துவங்களுக்கு புதுப்புது விளக்க உரைகள் வெளிவருகின்றன. இந்து மரபுக்கும் இவ்வாறு புதிய இரத்தம் பாய்ச்சியதைப் போல் புது விளக்கங்கள் அளித்து வந்த காரணத்தினால், அது கிழடு தட்டிவிடாமல் வளர்ந்து வந்திருக்கிறது; காலத்தின் முடிவிலா நெடுஞ்சாலையில், பல்வேறு இன்னல்களுக்கு இடையிலும் கூட அது வீர நடை போட்டு வருகிறது. வியாச முனிவருடைய ஒப்பற்ற திறமையினால் நமது புராதனப் பேருண்மைகள் இளமைப் பொலிவுடன் திகழ்ந்து வருகின்றன. இம்மாபெரும் நற்பணியில் அவர் கையாண்ட ம்றையை பகவத் கீதை எடுத்துக் காட்டுகிறது.

ஞான மார்க்கத் தத்துவத்தையும் அதில் வெற்றி அடையும் வழியையும் புகட்டுவதாக ஏழாவது அத்தியாயத் தொடக்கத்தில் பகவான் வாக்களித்தார். இது அவ்வளவு சுலபமானதல்ல. ஆயினும் 'செய்து காட்டுகிறேனா இல்லையா என்று பார்' என்று சவால் விடுவதைப் போல அவர் பேசினார். வகுப்புக்கு வரும் கணித ஆசிரியர் மிகச் சிக்கலான கணக்கைக் கூட படிப்படியாக எளிய முறையில் போட்டுக் காட்டி மாணவர்களுக்குப் புரியும்படி செய்து விடுகிறார். அதைப் போலவே ஆன்மிக சாதக முறைகளை கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு போதனை செய்தார். தாம் கூறுவதை கண்மூடித்தனமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று அர்ஜுனனிடம் அவர் எந்த நிலையிலும் சொல்லவில்லை. சிறு பிரச்னைகளுக்குக்கூட விவரமாகவும், பொறுமையுடனும் பதிலளித்து, ஆன்ம நிறைவு பெறுவதற்கு வேதாந்தை விடச் சிறந்தது வேறு எதுவும் இல்லை என்று நிரூபித்தார்.

அதே விவாத வேகம் இந்த ஒன்பதாவது அத்தியாயத்திலும் தென்படுகிறது. ஒவ்வொன்றையும் நுணுக்கமாக அலசி ஆராய்ந்து உண்மையை எடுத்துக் காட்டும் முறையை பகவான்

இங்கும் கையாளுகிறுர். கொள்கையை மட்டும் சொல்லி நிறுத்தி விடாமல் அதனுடைய தர்க்க அடிப்படையையும் விவரிக்கப் போவதாக எடுத்த எடுப்பிலேயே வாக்களிக்கிறுர். நல்ல ஆசிரியர் எவரும் மாணவனுக்குப் புரியாத வார்த்தைகளை முதலில் உபயோகிக்க மாட்டார், சுலபமாகப் புரியும் சொற்களையே பயன்படுத்துவார். அவ்வாறே கிருஷ்ணர், அக்கால வேதாந்த வழக்கிலிருந்த கடினமான சொற்களை கையாளாமல், அர்ஜுனனிடமிருந்த அன்பு காரணமாக, எளிய சொற்களையே இங்கு உபயோகிக்கிறுர்.

மற்றவர்களைப் போல அர்ஜுனனும் ஒரு சாதாரண மனிதன், புத்திசாலி, நல்ல கல்வி கற்றவன், ஆயினும் க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன், ஞானம், ஞேயம், புருஷன், பிரகிருதி போன்று, வேதாந்த சிறப்புச் சொற்களின் முழு ஆழமும் அவனுக்குத் தெரிந்திருக்க இடமில்லை. இப்போது கூறப் போகும் அதே கருத்துக்களை, வேதாந்த வழக்குச் சொற்களின் மூலம் வேறொரு அத்தியாயத்தில் கிருஷ்ணர் விவரிக்கப் போகிறுர். ஆனல் இந்த அத்தியாயத்தில் சாதாரண, எளிய வார்த்தைகளையே அவர் கையாளுகிறுர்.

ஒரு பிரச்னையை பல்வேறு தலைப்புகளில் பிரித்து, அவற்றில் ஒவ்வொன்றையும் மேலும் நுணுக்கமாக பாகுபாடு செய்து, அப் பாகுபாடுகளுக்கு இடையிலுள்ள உறவுகள் பற்றி ஆழ்ந்த விவாதங்கள் நடத்தி, பிறகு ஒரு கொள்கையை உருவாக்குவது தான் இப்போது விஞ்ஞான முறையாகக் கருதப்படுகிறது. அப்படிப் பார்த்தால் கீதையே ஒரு விஞ்ஞான நூல் என்று சொல்ல முடியாது. ஆனல் கீதையின் எளிய நடையும், இம்மியும் பிறழாது சாத்திரக் கருத்துக்களை விளக்கிப் பறை சாற்றும் பாங்கும், படிப்பவர்களைத் திகைக்க வைக்கிறது. ‘இது மிக இரகசியமான (கருத்தாழமுள்ள) விஞ்ஞானம்’ என்று கிருஷ்ணரே அறிவிக்கிறுர். கீதையின் விஞ்ஞான நோக்கும், கருத்துச் செறிவும், அதை ஊன்றிப் படிப்பவர்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது. அதில் பொதிந்துள்ள உண்மைகளை அதைவிட நன்ருக யாரும் விளக்க முடியாது என்ற எண்ணம் தோன்றுகிறது.

ஸ்ரீபகவானுவாச—

இதம் து தே குஹ்யதமம்
ப்ரவக்ஷ்யாம்—யனஸூயவே
ஜ்ஞானம் விஜ்ஞானஸஹிதம்
யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே(அ) சுபாத் 9:1

ஸ்ரீபகவான் கூறுகிறார்:

வீண் விதண்டாவாதங்கள் செய்யாத உனக்கு ஆழ்ந்த நல்லறிவும், அனுபவமும் (ஆன்ம உணர்வும்) பொதிந்த இப்பரம இரகசியத்தை இப்போது எடுத்துரைக்கிறேன். இதை அறிந்து கொண்டால் வாழ்வின் துயரங்களிலிருந்து நீ விடுதலை பெறுவாய்.

பரிணாம வளர்ச்சியில் மேலும் உயர வேண்டுமென்ற ஆவல் அர்ஜுனனுக்கு இருந்ததை கிருஷ்ணன் கண்டு கொண்டார். வழி காட்டுவதற்கு மட்டும் அவனுக்கு ஒருவருடைய உதவி இருந்தால் போதும். குறிப்பிட்ட ஒரு பாதை சரியானதுதான் என்ற உறுதி அவனுக்கு ஏற்படும்படி செய்துவிட்டால், பிறகு அந்த வகையில் வாழ்க்கையை அவன் தானாகவே திருத்தி அமைத்துக் கொள்ளுவான்.

வெறுப்பூட்டும் வரட்டு வாதங்களில் வீண் பொழுது போக்கிக் கொண்டிராத அர்ஜுனனுக்கு இலட்சியப் பாதையை காட்டப் போவதாக கிருஷ்ணர் வாக்குறுதி அளிக்கிறார். ''இதைத் தெரிந்து கொண்டால், தோற்றம்—மறைவு ஆகிய எல்லைகளுக்கு உட்பட்ட இவ்வாழ்வின் துயரங்களிலிருந்து நீ விடுதலை பெறலாம்'' என்றும் சேர்த்துச் சொல்லுவதால், அவர் கூறுவதை நடை முறையில் அமுலாக்கவும் வழி காட்டுவார் என்று எதிர்பார்க்க இடமிருக்கிறது.

வாழ்க்கையை சரியாக மதிப்பிடத் தெரியாதவர்கள் அதன் சவால்களைச் சமாளிக்க முடியாமல் திண்டாடுகிறார்கள். ஓயாது பெருகி வரும் சிக்கல்களினால் அவர்களுடைய வாழ்வு சுருதி கலைந்த கீதமாகிறது. புற உலகுடன் இசைந்து இயங்க வேண்டுமானால் தம்மையும், உலகத்தையும் ஒருவர் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வாறு இசைவு பெற்றால்தான் வாழ்க்கை வெற்றிகரமாகவும், மகிழ்ச்சிகரமாகவும் இருக்கும்.

அர்ஜுனன் ஒப்பற்ற வீரன். அதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆனால் உலகத்துடன் இசைந்து வாழும் உள்ளப் பாங்கு அவனுக்கு ஏற்படவில்லை. அதனால்தான் கீதையின் தொடக்கத்தில் ஆளுமை சிதறி, குழப்பத்தில் ஆழ்ந்தவனாக அவன் காணப்படுகிறான். அவனைப் போன்றவர்களுக்கு எந்தக் கடமையும் சங்கடமானதாக இருக்கும். வாழ்க்கை ஒரு பெரும் சுமையாகத் தோன்றும். இப்படி வாழ்வுச் சுழலில் அகப்பட்டு, வெளியேறத் தெரியாமல் தத்தளிப்பவர்களையே சம்சாரிகள் என்று சொல்லுகிறார்கள். சுய வளர்ச்சிக் கலையை அறிந்தவர்களுக்கு இது ஒரு பிரச்னையே அல்ல. இச்சிக்கல் களிலிருந்து விடுபடும் வழி அவர்களுக்குத் தெரியும். அவர்களே உண்மையுணர்ந்த பெரியோர், ஞானிகள், முனிவர்கள்

வாழ்க்கையை அடக்கியாளும் உற்சாகமும், தைரியமும், புத்திசாலித்தனமும் உள்ள ஒவ்வொருவரும் அப்பெரியோர்களைப் போல் ஆகலாம். அது மனிதனின் பிறப்புரிமை. அந்நிலையை எட்டியவர்களை சூழ்நிலை பாதிக்காது. எளிதில் எல்லா இடையூறு களையும் சமாளித்து அவர்கள் இறைவாழ்வு நடத்துகிறார்கள்.

வாழும் கலையை சரிவரக் கற்று ஒவ்வொருவரும் உயர வேண்டும் என்பதுதான் கிருஷ்ணருடைய நோக்கம். ஒவ்வொரு வரும் அதில் முழு மூச்சாக, உற்சாகத்துடன் ஈடுபடுமாறு செய்ய வேண்டும் என்பதற்காக, சுய முழுமை பெறும் தலைக்கு அவர் பின்கண்ட புகழ்மாலை சூட்டுகிறார்.

ராஜவித்யா ராஜகுஹ்யம்
பவித்ர—மித—முத்தமம்
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம்
ஸுஸுகம் கர்த்து—மவ்யயம் 9:2

இது இராஜ விஞ்ஞானம், இராஜ ரகசியம். ஒருவரைத் தூய்மையாக்குவதில் நிகரற்றது. உள்ளுணர்வினால் நேரடியாக அனுபவித்து அறியக் கூடியது. தருமத்திற்கு இசைந்தது. அழிவில்லாதது. கடைப்பிடிப்பதற்கு எளியது.

ஏதோ ஒரு கோயிலுக்குப் போய் உட்கார்ந்துகொண்டு, வாரத்தில் ஒரு நாள் சற்று நேரம் சம்பிரதாயச் சடங்குகளைச் செய்துவிட்டு வருவதுதான் மதம் என்றால் வேதாந்தம் இவ்வகை மதத்தைச் சேர்ந்தது அல்ல. நேர்மையான செயல் முறைக்கு வழிகாட்டும் கலையே மதம் என்று கொண்டால், உலகத்திலுள்ள எந்த மதத்தையும் விட வேதாந்தம் உயர்ந்தது. அதற்கு ஈடும் இல்லை, இணையும் இல்லை. அது விஞ்ஞான ரீதியில் சிறப்பான வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது. 'இது ஒரு இராஜ விஞ்ஞானம், இராஜ ரகசியம். தூய்மையானது, மிக உயர்ந்தது' என்று கிருஷ்ணர் அதை வாயாரப் புகழ்கிறார்.

ஒரு விஞ்ஞானம் இராஜ முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கலாம். நிகரற்ற சிந்தனைச் செறிவு பெற்றதாக இருக்கலாம். ஒருவரைத் தூயவராக்குவதில் சிறந்ததாக இருக்கலாம். ஆனால் அது நமது அறிவுக்கு எட்டாததாக இருந்தால், அவ்விஞ்ஞானத்தினால் நமக்கு என்ன பயன்? ஒரு உபயோகமும் இல்லை. அதற்காகத்தான் 'இது தெளிவாக அறிந்து கொள்ளக் கூடியது' என்று பகவான் கூறுகிறார். ஒருவர் தமது சுய அனுபவத்தில் 'நேரடியாக அனுபவித்துத் தெரிந்து கொள்ளலாம்' என்று ஊக்கமளிக்கிறார்.

இது தருமம் பற்றிய விஞ்ஞானம் (தர்ம்யம்)—தருமம் என்ற

சொல்லுக்கு ஏற்கனவே விவரமாகப் பொருள் கூறப் பட்டிருக்கிறது.* ஆன்மாவின் அருள் இல்லையேல், மனிதன் வெறும் உலோகப் பொருட்களின் சேர்க்கையே. ஆன்மாவாக விளங்கும் இப்பேருணர்வு சக்திதான் மனித தருமம். அவனுள் உறையும் உயிர் தத்துவம். நாம் பள்ளிக் கூடங்களில் உயிரியல், உளவியல் என்று படிக்கிறோமே, அதை விவரிக்கப் போவதாக நந்தகுமாரன் இங்கு சொல்லவில்லை. உயிரியக்கத்திற்கே மூல காரணமான ஆன்ம அடிப்படை பற்றி பேசப் போவதாகக் கூறுகிறார். இங்கு அவர் சொல்லப் போவது விஞ்ஞானங்களுக்கு எல்லாம் அடிப்படையான மூல விஞ்ஞானம்; ஆன்மிக விஞ்ஞானம்.

நடைமுறையில் கடைப்பிடித்து வெற்றி பெறுவதற்கு எளிதானது—உள்ளத்தை ஆன்மிகப் பயிற்சிக்குத் தகுந்தவாறு உருவாக்கும் முறைக்குப் பெயர் மதம். சுய முயற்சியினால்தான் இதில் ஒவ்வொருவரும் வெற்றி அடைய முடியும். கிருஷ்ணர் கற்பிக்க முற்படும் சிறப்புயர் பெற்ற விஞ்ஞானம், வாழ்க்கையில் அமுல் நடத்த முடியாததாக இருந்தால், அதைக் கற்பதனால் எவ்வித பிரயோஜனமும் இல்லை. ''தங்கம் குவியல் குவியலாகக் கொட்டிக் கிடக்கிறது. யார் வேண்டுமானாலும் இலவசமாக எடுத்துக் கொள்ளலாம். அது சுக்கிரனில் இருக்கிறது'' என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துச் சொல்லுவதாக வைத்துக் கொள்வோம். இதனால் மக்களுடைய ஏழ்மை நீங்கி விடுமா? அகத்துறை விஞ்ஞானத்தில் வெற்றி பெறுவது இந்த மாதிரி, சுக்கிரனில் உள்ள தங்கக் குவியல் போல் ஆகிவிட்டால் என்ன செய்வது என்ற அச்சம் சிலருக்கு வரலாம். அந்த பயம் வேண்டியதில்லை என்பதற்காகத்தான் மனப்பூர்வமாகவும், தளரா முயற்சியுடனும் சாதகம் செய்தால் ஆன்மிக இலட்சியத்தை அடையலாம் என்று குறிப்புணர்த்துகிறார்—''உண்மையான சாதகர்களுக்கு இந்த முறையைக் கடைப் பிடிப்பது சுலபம்'' என்கிறார்.

அதில் வெற்றி பெறுவது சுலபம் என்று ஒப்புக் கொண்ட போதிலும், அதனால் பெறும் பலன் தற்காலிகமானதாகவும், நிலையற்றதாகவும் இருக்குமானால், புத்திசாலிகளாக உள்ளவர்கள் அவ்வழியைப் பின்பற்ற மாட்டார்கள். எனவே சுய வளர்ச்சியும், தன்னடக்கமும் பெறும் இந்த இராஜ ரகசியத்தைப் பின்பற்றினால் அழிவிலா இலட்சியத்தை அடைவது நிச்சயம் என்று கிருஷ்ணர் பறை சாற்றுகிறார்.

ஆன்ம உணர்வு பெறுவதும், ஆன்மாவாகவே ஆகிவிடுவதும்

* ''வாழ்வு இயல் விதி'' என்பது இதன் பொருள். மேலும் விளக்கம் வேண்டுவோர் ''பொது முன்னுரையில்'' காணலாம்.

ஒன்றுதான். எல்லையற்றதும், தோற்ற மறைவுகளுக்கு உட்பட்ட இவ்வுலகின் மூலாதாரப் பொருளாக உள்ள ஆன்மீகப் பொருளை உணர்ந்தவர்கள் அப்பொருளாகவே ஆகிவிடுகிறார்கள்.

இவ்வகை இலட்சிய நாட்டமில்லாதவர்கள், கலக்க மிக்க சம்சாரப் பெருங்கடலில் தத்தளிப்பதைத் தவிர வேறு வழியில்லை. இதை பின்வ்ரும் செய்யுள் தெளிவாக்குகிறது.

அச்ரத்ததாநா: புருஷா
தர்மஸ்யாஸ்ய பரந்தப
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே
ம்ருத்யு—ஸம்ஸார—வர்த்மனி 9:3

(இறைநிலை பற்றிய) இத்தருமத்தில் சிரத்தை இல்லாதவர்கள் என்னை அடையாமல், மரண இயல்பு கொண்ட மறுபிறவிச் சுழலுக்கே திரும்பி வருகிறார்கள், பரந்தபா.

ஆன்மாவைப் பற்றி அக்கறையில்லாமல் காலங்கழித்துக் கொண்டிருப்பவர்கள் 'என்னை அடையாமல், திரும்பத் திரும்ப இங்கு வருகிறார்கள்'. வெளியுலக நாட்டம் கொண்டவர்கள் புலன் பொருள்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பதால், அவர்களுடைய உடல், மனம், அறிவு ஆகியவை, அப் பொருள்களை அடைவதையும், அனுபவிப்பதையுமே பற்றி நினைத்து, அவர்கள் சக்தியை அதற்காக செலவழித்து விடுகிறார்கள். அவர்கள் மரண இயல்புள்ள மறுபிறவிப் பாதைக்கே திரும்பி வருகிறார்கள்.

நிலையற்ற பொருள்களைப் பற்றி சிந்திப்பதிலும், அவற்றைப் பெற முயற்சிப்பதால் வரும் சுக, துக்கங்களை அனுபவிப்பதிலுமே வாழ்வு வீணாகிறது. ஆன்மாவின் கீழ்நிலை இயல்புதான் பிரகிருதி. இதிலேயே உழன்று பெரும்பாலோர் தத்தளிக்கிறார்கள். பரந்து விரிந்து கிடக்கும் கடல் இருக்கிறது. அதில் எந்தப் பகுதியிலிருந்து எடுத்து ருசி பார்த்தாலும் அதன் நீர் உப்பாகத்தான் இருக்கும். அதைப் போலவே புலன் பொருள்களை நாடுவதன் நோக்கம் எதுவாக இருந்த போதிலும் அந்த முயற்சியில் இறங்கி விட்டால் பிறகு நாமும் உப்பு நீரைக் கண்களிலிருந்து உதிர்த்துக் கொண்டு நிற்க வேண்டியதுதான்! ஏனெனில் நாம் நாடிப் பெறும் பொருள்கள் எல்லாமே சிதைவுக்கு உள்ளாகும் தன்மையுள்ளவை. எனவே அவை நமக்குத் துயரத்தைக் கொண்டு வருவதில் வியப்பில்லை.

பல்வேறு பெயர்களையும், உருவங்களையும் காட்டி நிற்கும் இவ்வுலகம், தோற்ற மறைவுகளுக்கு உட்பட்டது; கணந்

தோறும் மாறிக் கொண்டிருக்கும் இயல்பு உள்ளது. முந்திய நிலை இறந்து அடுத்த நிலை வருகிறது. எனவே இச் செய்யுளில் வரும் ''மரண இயல்பு'' என்பதற்கு, ''ஒரு நிலை முற்றிலும் மாறி, வேறு நிலை அடையும் தன்மை'' என்று விரிவாகப் பொருள் கொள்ள வேண்டும். வெளி உலகப் பொருள்களை நாடுவோர் 'மரணத்தின் துயரத்தை ஓயாமல் அனுபவிக்க வேண்டியதாகிறது.

வேதாந்தம் ஒரு அரை குறை விஞ்ஞானமல்ல. முழுமையான விஞ்ஞானம். இதில் வரும் ''சிரத்தை'' என்பதற்கு கவிஞர் தாகூர் கூறுவதைப் போன்ற ஒரு பொருளும் உண்டு.* ஆனால் அது இனம் விளங்கா உணர்ச்சிக் குவியலிலிருந்து எழுவது அல்ல; அறிவின் உறுதியான அடிப்படையில் தோன்றுவது. சாத்திரங்களும், குருவும் செய்யும் உபதேச மொழிகளில் 'திட நம்பிக்கை கொண்டு, தனது வாழ்க்கைக்குப் புத்துருவளிக்க முற்படும் உறுதிக்குப் பெயர் சிரத்தை' என்று சங்கரர் இவ்வார்த்தைக்கு விளக்கமளிக்கிறார். மனமும், அறிவும் எட்டிப் பார்க்க முடியாத நிலைக்கு சிரத்தை நம்மை இட்டுச் செல்லுகிறது. இவ்வுலகச் சிறு வாழ்விலிருந்து நாம் நிரந்தரமான பெரு வாழ்வை உருவாக்கிக் கொள்வதற்கு அது வழிகாட்டு கிறது.

சூடு இல்லாமல் நெருப்பு இல்லை. நெருப்பின் இயல்பு அது. சுடும் தன்மை இல்லையேல் அது நெருப்பு அல்ல. எனவே நெருப்பின் 'தருமம்' சுடுவது. எது இல்லாவிட்டால் குறிப்பிட்ட ஒரு பொருள் அந்தப் பொருளாக இருக்காதோ, அதை தருமம் என்று கூறுகிறோம். குளிர்ச்சி இல்லாமல் பனிக்கட்டி இல்லை. பனிக்கட்டியின் 'தருமம்' அல்லது சாராம்சம் குளிர்ச்சி என்று கூறுகிறோம். அவ்வாறே மனிதனின் தருமம் இறை பொருளாகிய ஆன்மா. ஒருவனுக்குத் தனது தெய்விக சாராம்சத்தில் நம்பிக்கை இல்லை என்றால், அவனை உணர்ச்சி வெள்ளமும், அறிவுச் சலசலப்பும், சதை இன்ப வெறியும் கவிழ்த்து விடுமென்பதில் சந்தேகமில்லை. வளர்ச்சிப் படிகளில் உயருவதற்கு பதிலாக, அவன் வெறும் இரண்டு கால் பிராணி என்ற நிலைக்குத் தாழ்ந்து விடுகிறான். ஒருவன் மனிதன் என்ற அந்தஸ்து பெறுவதற்குக் காரணம் அவனுடைய சாராம்சமாகத் திகழும் இறை இயல்புதான். பைத்தியம் பிடித்த ஒரு அரசன், தனது அந்தஸ்தை மறந்து, ஆடைகளைக் காற்றில் பறக்க விட்டு, வீடு வாசல் இல்லாத நாடோடியைப் போல தெருவில். ஓடினால் எப்படி இருக்கும்? தான் ஒரு ஆன்மா என்பதை மறந்து, சாக்கடையில் உழலும் புழுவைப் போல புலனின்பங்களில்

---

*வெளியாகா ஒளியுணர்ந்து வைகறையில் இசையெழுப்பும் பறவையே சிரத்தை—தாகூர்.

உழன்று கொண்டிருக்கும் மனிதனுடைய நிலையும் அப்படித்தான்.

மிக எளிதாகத் தோன்றும் இச்சுலோகத்தில் பற்பல கருத்துக்கள் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன. அறிவுப் பாதையையும், அறியாமைப் பாதையையும் அடுத்தடுத்து வைத்து, அவைகளுக்கு இடையிலுள்ள வித்தியாசத்தை தெளிவாக்குவதன் மூலமாக உயர்நிலை நாட்டமே—அழிவிலா இறைப் பொருளை நாடும் முயற்சியே—தலை சிறந்த சாதகம் என்பதை அர்ஜுனனுடைய உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிய வைக்கிறார் கிருஷ்ணர்.

ஒருவர் பின்பற்ற வேண்டிய வழியை கீழ்க்கண்ட முறையில் அவர் எடுத்துரைக்கும்போது, ஞான மார்க்கத்தின் உயர்வு தானாகவே வெளியாகிறது.

மயா ததமிதம் ஸர்வம்
ஜக—தவ்யக்த—மூர்த்தினா
மத்—ஸ்த்தானி ஸர்வபூதானி
ந சாஹம் தேஷ்—வவஸ்த்தித: 9:4

வெளித்தோற்றம் கொள்ளா நானே இவ்வுலகிலுள்ள எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறேன். எல்லாப் பொருள்களும் என்னுள் இருக்கின்றன. ஆனால் நான் அவற்றில் இல்லை.

இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளிலும் நான் வியாபித்து இருக்கிறேன்—ஒரு பொருள் எவ்வளவுக் கெவ்வளவு பரந்து வியாபித்திருக்கிறதோ, அதைக் கொண்டு அது எவ்வளவு நுணுக்கமானது என்று மதிப்பிடுகிறோம். மிக சூக்குமமாக இருப்பது எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கும் தன்மை பெற்றது. உருவமுள்ள பொருள்கள் நிலையாக இருக்க முடியாது. அவை அழியக் கூடிய பொருள்களினால் (திரவியங்களினால்) உருவம் பெற்றவை. எல்லா மண் பாண்டங்களிலும் களிமண் இருப்பது போல, இவ்வுலகத்தில் உள்ள எல்லாவற்றிலும், வெளியாகா ஆன்மா ஊடுருவி நிற்கிறது.

அழியும் தன்மையுள்ள பொருள்களில் அழியாத் தன்மையுள்ள ஆன்மா இருக்கிறது என்றால், அவைகளுக்கு இடையில் உள்ள உறவு என்ன? எல்லையற்ற பொருளில் இருந்து எல்லைக்கு உட்பட்ட இப்பொருள்கள் தோன்றின என்று நினைக்கலாமா, அல்லது அது அப்பொருள்களை உண்டாக்கிற்று என்று கருதலாமா, அல்லது ஒன்று மற்றொன்றாக மாறிற்று என்று சொல்லலாமா? இந்த உறவை தந்தை—மகன்—அல்லது எஜமான்—வேலையாள்—உறவுக்கு ஒப்பிடுவது சரியாகுமா?

உலகத்தில் உள்ள மதங்கள் இப்பிரச்னைக்கு பற்பல மாதிரியாக பதிலளிக்கின்றன. ஜீவாத்மாவையும், பரமாத்மாவையும் இரு தனித் தனியான உண்மைகள் என்று நினைக்கும் 'துவைத' சித்தாந்தத்தை ஏற்பவர்கள், அந்த இரண்டு மெய்ப் பொருள்களுக்கும் இடையில் ஏதோ ஒருவகை உறவைக் கற்பனை செய்துகொண்டு சந்தோஷப்படலாம். ஆனால் 'அத்வைதிகள்' அதை ஒப்புக் கொள்ளவில்லை. நிலையான பேருண்மை ஒன்றே ஒன்றுதான், இரண்டு அல்ல என்று 'அத்வைத' வாதிகள் கூறுகின்றனர்.

உண்மைக்கும், உண்மை அல்லாததற்கும் இருக்கிற ''உறவிலா உறவை'' இச் செய்யுளின் இரண்டாவது வரி மிக அழகாக விளக்குகிறது. இதைவிட நன்றாக அதை எடுத்துரைக்க முடியாது.—''எல்லாப் பொருட்களும் என்னுள் அடங்கி யிருக்கின்றன. ஆனால் நான் அவற்றில் இல்லை'. சிந்திக்காமல் படித்துக்கொண்டு போகிறவர்களுக்கு இது ஏதோ புதிர் போட்ட மாதிரி இருக்கும்; பொருந்தா வாக்கியங்களை இணைத்து வார்த்தை ஜாலம் செய்வதைப் போல தோன்றும். நமது உள்ளத்தில் தோன்றுபவைகளை மற்ற பொருட்களின் மீது சுமத்துவதால் பல விபரீதங்கள் உண்டாகின்றன. இதை அறிந்தவர்களுக்கு கீதை கூறும் கருத்து புதிராக இருக்காது. மைதானத்தில் நிற்கும் மொட்டை மரத்தை, இரவில் வரும் ஒருவர் பார்த்துவிட்டு, ''ஐயோ, பேய்'' என்று வந்த வழியிலேயே திரும்பி ஓட்டம் பிடிக்கிறார். பேய்க்கும் அந்த மரத்திற்கும் இடையிலுள்ள உறவு என்ன? அந்த மரம் பேச முடியுமானால், பகவான் இப்போது கூறியுள்ள வார்த்தைகளையே பேசும். 'நீ நினைக்கிற பேய் என்னிடம் இருக்கிறது. ஆனால் பேயில் நான் இல்லை! இவ் வழியாக வந்த யாரையும், எந்த காலத்திலும் நான் மிரட்டியதில்லை' என்று சொல்லும். இதில் புதிர் என்ன இருக்கிறது? பகவான் கூறுவதும் அதுதான். 'உருவமுள்ள எல்லாப் பொருள்களுக்கும், வெளியாகா இயல்பு கொண்ட நானே சாராம்சமாக இருக்கிறேன். எத்தனையோ நாம, ரூபங்களுடன் கூடிய படைப்புக்கள் இவ்வுலகில் இருக்கின்றன. அவற்றின் இன்ப, துன்பங்களில், தோற்ற மறைவுகளில், 'நான் இல்லை'. 'ஏனென்றால் நான் அவற்றில் உறைபவனல்லன்'.

இக்கருத்து, இதற்கு முன்னரே வெளியிடப்பட்டதுதான். இதைப் போலவே—இன்னும் அழகாக என்று கூடச் சொல்லலாம்—முந்திய அத்தியாயமொன்றில் 'நான் அவற்றில் இல்லை. 'அவை எல்லாம் என்னிடம் இருக்கின்றன'. என்றார் பகவான். பொருள் உரைகளுடன் தன்னை ஒன்றுபடுத்திக் கொண்ட ஆன்மா அவற்றில் 'வசிக்க நேரிடுகிறது' என்று அவர்

குறிப்பாகச் சொல்லுகிறுர். இவ்வாறு இணைத்துக் கொண்டிருக்கும் வரையில், ''இந்தப் பொருள் உறைகளே நான்'' என்ற நினைப்பு இருக்கும் வரை, தன்னை துன்ப வாழ்வு நடத்தும் ஒரு மனிதனுக ஆன்மா கருதுகிறது. இந்த நிலையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவுடன் அதே ஆன்மா, 'அவற்றில் நான் வசிக்கவில்லை. அழிவு இல்லாத, வெளித் தோற்றம் கொள்ளாத, இறைப் பொருள் நான்' என்று அறிந்து கொள்ளுகிறது.

அப்படியானுல் தோற்ற மறைவுகளுக்கு உட்பட்ட வைகளுக்குக் கூட ஏதோ ஒரு வகையான தனித்த வாழ்வு உண்டு என்று ஆகிறதல்லவா?

நச மத்—ஸ்த்தானி பூதானி
பஸ்யமே யோக—மைச்வரம்
பூதப்ருந் நச பூதஸ்த்தோ
மமாத்மா பூதபாவன: 9:5

(பார்க்கப் போனுல்) உயிரினங்களும் என்னிடம் உறைபவை அல்ல. அவற்றில் நான் இல்லை என்ருலும் அவற்றை எல்லாம் தாங்கி நிற்கும் எனது தெய்விக யோகத்தைப் பார். அவை எல்லாவற்றிற்கும் மூல காரணமாக இருந்த போதிலும் நான் நானுகவே இருக்கிறேன்.

முந்திய செய்யுளில் கூறியதை கிருஷ்ணர் மேலும் விளக்குகிறுர். 'அவற்றில் நான் இல்லை' என்று சொல்லிய பிறகு, 'அவைகளும் என்னிடம் இல்லை' என இங்கு கூறுகிறுர். நிலையான இறைப் பொருளிலிருந்து நிலையற்ற பொருள்கள் என்றைக்கும் உண்டானதில்லை. மரத்தில் பிசாசைப் பார்த்தவன் மறுபடி அங்கு வரும்போது, ''என்னிடம் பிசாசு என்றைக்குமே இருந்ததில்லை'' என்று மரம் சொன்னுல், அதில் தவறு ஒன்றுமில்லை அல்லவா? கேவலம் ஞானப் பரப்பாக எல்லையற்று விரிந்த உணர்வுக் கடலில் இந்தப் பன்மைத் தோற்ற உலகம், இருந்ததுமில்லை. விழித்த பிறகு ஒருவர் தாம் கனவிற் கண்ட இன்பங்களைப் பற்றி நினைப்பது போலத்தான் இதுவும். ஆன்மானுபவத்தில் ஒருவர் மூழ்கி விடும்போது நாம, ரூபங்களுடன் கூடிய இந்தப் பன்மைத் தோற்ற உலகமும் மறைந்து விடுகிறது. உண்மையில் தாம் எல்லையற்ற ஆன்மா என்பதை மறந்து விடும் போதுதான் இப்பன்மைத் தோற்றம் தலை தூக்குகிறது.

எல்லாவற்றையும் உண்டாக்கி, அவற்றை தாங்கிக் கொண்டிருப்பது ஆன்மிகப் பரம்பொருளே. கடலிலிருந்து அலைகள் உண்டாகின்றன. அவற்றைத் தாங்கி நிற்பதும் கடல்

தான். ஆனாலும் 'அலைகள் நானல்ல', என்று கடல் சொல்லலாம். எல்லாப் பானைகளும் களி மண்ணிலிருந்து தோன்றியவையே. அவைகளுக்கு உருவளித்து 'நிற்பது அதே களிமண். ஆனால் எல்லாப் பானைகளையும் சேர்த்துப் பார்த்தாலும்கூட, அது களி மண்ணின் முழு இலக்கணமாக அமையாது. அவ்வாறே கணத்திற்குக் கணம் மாறும் உலக இயக்கம் அவ்வளவுக்கும் அடிப்படையாக இருந்து, அவற்றைத் தாங்கிக் கொண்டு ஒளியுடன் திகழச் செய்வது தூய உணர்வாகிய தெய்விகப் பொருளே.

வெளியுலகப் பொருள்களின் தூண்டுதல்கள் புலனுறுப்புக்கள் வழியாக உட்புகுந்து மன அலைகளை எழுப்புகின்றன. எல்லா உருவங்களின் நிறைந்த பேருணர்வுத் தத்துவம் அந்த அலைகளை வெட்ட வெளிச்சமாக விளங்க வைக்கிறது. உணர்வுத் தத்துவம் இல்லாவிட்டால் இது நடக்காது. இடையறா அனுபவத் தொடருக்கு வாழ்க்கை என்று பெயர். முற்கூறிய பேருணர்வு இல்லையென்றால் இத் தொடர்பற்றிய செய்தியை மன—அறிவுக் கருவிக்கு வெளியுலகம் அனுப்பி வைக்க முடியாது. துணியில் பருத்தியும், நகைகளில் தங்கமும், நெருப்பில் வெப்பமும் இருப்பது போல, அழியும் பொருள்களில் அழிவிலாப் பொருள் இருக்கிறது. விழித்தவனில் தான் கனவு கண்டவனும் இருக்கிறான். கனவு அனுபவத்தில் விழித்திருந்தவன் ஊடுருவி நின்றான். ஆயினும் கனவு நேரத்தில் இருந்தவன் அவனல்ல. முற்றிலும் விழித்துக் கொண்ட நிலை வந்தவுடன் அவனிடம் கனவு அனுபவங்களும் இல்லை.

இவ்வாறு கிருஷ்ணர் முரண் இணைச் சொற்களைப் பயன்படுத்தியது அர்ஜுனனுக்குப் புதிர் போட்ட மாதிரி இருந்தது. வேதாந்த நுணுக்கங்களை அறிந்து கொள்வதற்கு வேண்டிய பயிற்சி அவனுக்கு இல்லை. அவன் முகத்தில் குழப்பக்குறி தோன்றிற்று. அதைக் கண்ட கிருஷ்ணர் மனம் கனிந்து, ஒரு உதாரணத்தின் மூலம் தமது கருத்தை விளக்க முயற்சிக்கிறார்.

யதாகாச—ஸ்த்திதோ நித்யம்
வாயு: ஸர்வத்ரகோ மஹான்
ததா ஸர்வாணி பூதானி
மத்—ஸ்த்தானீத்—யுபதாரய 9:6

எல்லா ·இடங்களிலும் வீசும் வலிமை மிக்க காற்று எப்போதும் ஆகாசத்தை உறைவிடமாகக் கொண்டிருப்பது போல், எல்லா உயிரினங்களும் என்னையே உறைவிடமாகக் கொண்டிருக்கின்றன என்று தெரிந்துகொள்.

தாம் கூறிய சொற்களைப் புரிந்துகொள்ள முடியாமல் விழித்துக் கொண்டிருந்த அர்ஜுனனுக்கு அவை புரியும் வண்ணம் படம் · பிடித்தாற் போன்ற தெளிவான உதாரணம் ஒன்றை பகவான் கூறுகிறார். ஒரு பொருள் எல்லா இடங்களிலும் பரந்து, ஊடுருவி இருக்க வேண்டும். அதில் எல்லாப் பொருள்களும் இருக்க வேண்டும். அதே நேரத்தில் அப் பொருள்களினால் பாதிக்கப்படாமல், அது அவற்றிலிருந்து உயர்ந்து நிற்கவும் வேண்டும். இப்படிப்பட்ட ஒரு உதாரணத்தைத் தேடிப் பிடித்துக் கண்டுபிடிப்பது மிகவும் கடினமான வேலை. கிருஷ்ணர் முதலில் கொடுத்த விளக்கத்தின் முழுப் பொருளை அறிந்து கொள்வதற்கு சாதாரண அறிவினால் முடியாது. உதாரணம் என்ற ஏணி ஒன்றைக் கொடுத்தால் தான் அதன் மீது ஏறி நின்று, எல்லையற்ற பரம்பொருளை எட்டிப் பார்த்து அது தெரிந்து கொள்ளும். எனவே பகவான் இங்கு காற்றை உதாரணமாகக் காட்டுகிறார்.

மிக நுணுக்கமான ஒரு பொருளை, பருப் பொருள் பாதிக்கவோ, கட்டுப்படுத்தவோ முடியாது. 'சுவர் வைத்தால் மட்டும் அது சிறையாகி விடாது' என்று கவிஞர் ஒருவர் கூறியிருக்கிறார் அல்லவா? பார்த்து, தொட்டு அறிந்து கொள்ளக் கூடியது உடல். சிந்தனையைப் பார்க்க முடியாது, அதைத் தொட முடியாது, முகர்ந்து பார்க்க முடியாது. எனவே பருப் பொருளின் தன்மை கொண்ட உடலைவிட சிந்தனைகள் நுணுக்கமானவை. ஒரு மனிதனுடைய உடலைச் சிறையில் அடைத்து வைக்கலாம். ஆனால் அவனுடைய சிந்தனைகள் சிறையின் மதில் சுவர்களைக் கடந்து, வீட்டில் இருக்கும் உற்றார் உறவினரை அடைகின்றன. பருப்பொருளாகிய சுவர், நுண்ணிய சிந்தனைகளை பாதிக்க முடியாது. இந்தக் கருத்தை நினைவு வைத்துக் கொண்டால் கிருஷ்ணர் கூறுவதன் உட்பொருள் முழுமையும் நமக்கு தெளிவாகும்.

இதைத் தெரிந்வு கொள், அர்ஜுனா. எல்லா இடங்களிலும் நிறைந்து, அவ்வப்போது மெல்லிய பூங்காற்றாகவும், புழுதியைக் கிளப்பிக் கொண்டு வீசும் புயல் போன்றும் வீசும் காற்று பரந்து விரிந்து கிடக்கும் வெட்டவெளியை உறைவிடமாகக் கொண்டிருக்கிறது. அவ்வெளிதான் காற்றுக்கு ஆதரவு. அக்காற்றைச் சுற்றி நிற்பதும் அதுதான். ஆனால் எவ்விதத்திலும் காற்று அதைக் கட்டுப்படுத்துவது இல்லை. இந்த அற்புத உதாரணத்தைப் பற்றி சிந்திக்க சிந்திக்க, சாதாரண அறிவு படைத்தவர்களுக்குக் கூட ஆன்மாவுக்கும், ஆன்மா அல்லாததற்கும் உள்ள வித்தியாசம் நன்றாக விளங்கும். பேருண்மைப் பொருள் அவ்வாறு இல்லாத பொருளைத் தாங்கி நிற்கிறது. துக்கம், துயரம், நீடித்து நில்லாமல் தோன்றி

மறையும் இன்பங்கள் முதலிய அனுபவங்களைப் போல, உண்மையில்லாத பொருள் உயிரியக்கம் பெற்ற ஒன்றைப் போல் தோற்றமளிக்கிறது. ஆயினும் உண்மைப் பொருளை உண்மையற்ற பொருள் கட்டுப்படுத்த முடியாது. காற்று கடுமையாக வீசிக் கொண்டிருக்கும்போது, ஆகாசம் (பரந்த வெளி) அசைந்து கொடுப்பதில்லை. காற்றுக்கு உள்ள எந்த இயல்பும் வெளிப்பரப்புக்குக் கிடையாது. எந்தப் பக்கம் திரும்பினாலும் விரிந்து கிடக்கும் வெட்டவெளிக்கு எல்லையே இல்லை. இப் பிரபஞ்சமே அவ்வாறு எல்லையற்றிருக்கும் வெளியில் தான் சுழல்கிறது. ஆனால் காற்றோட்டம் எல்லாம் பூமிக்கு சில மைல் தூரத்திற்குத்தான். எனவே வரையறையில்லாத பிரம்மாண்டமான இப் பேருண்மை தானாகவே படைத்துக் கொண்ட அறியாமை மூலம் ஆட்டம் போட்டுக் காட்டுவது ஓரளவுக்குத்தான். மேலும் மெய் பொய் ஆகிய இரண்டுக்கும் உள்ள உறவு சற்று நேரம் வீசி நிற்கும் காற்றுக்கும், மாறா நிலையில் எல்லையற்று இருக்கும் சுற்று வெளிக்கும் உள்ளதைப் போன்றதே தவிர வேறில்லை.

இந்த இரண்டு செய்யுட்களுக்கும் உரையாசிரியர்கள் கூறும் விளக்கம் உண்மையானதாகவும், பொருத்தமானதாகவும் இருக்கலாம். ஆனால் இவற்றின் பொருள் தெரிந்து கொண்டால் மட்டும் போதாது. ஒவ்வொரு சாதகரும் இவற்றைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

அப்படியானால், படைப்பாளி ஒருவர் தமது பகற்காலத்தில் இவ்வுலகத்தைத் படைக்கிறார் என்றும், இரவு நேரம் வந்தவுடன் அவ்வளவையும் கலைத்து விடுகிறார் என்றும் சொல்லிய அந்த மறுபிறப்பு விதிமுறை என்ன ஆயிற்று? இதற்கு கிருஷ்ணர் கூறும் பதில் பின்வருமாறு:

ஸர்வ பூதானி கௌந்தேய
ப்ருக்ருதிம் யாந்தி மாமிகாம்
கல்பக்ஷயே புனஸ்தானி
கல்பாதௌ விஸ்ருஜாம்—யஹம் 9:7

ப்ரக்ருதிம் ஸ்வா—மவஷ்ட்டப்ய
விஸ்ருஜாமி புன: புன:
பூதக்ராம—மிமம் க்ருத்ஸ்னம்
அவசம் ப்ரக்ருதேர்—வசாத் 9:8

குந்தியின் புதல்வனே, எல்லா உயிரினங்களும் ஒரு கல்பத்தின் முடிவில் எனது பிரகிருதியுடன் கலந்து விடுகின்றன. அடுத்த கல்பத்தின் தொடக்கத்தில் அவற்றை மீண்டும் நான்

வெளியில் அனுப்புகிறேன்.

எனது பிரகிருதிக்கு உயிரியக்கம் அளிப்பதன் மூலம் செயலற்றுக் கிடக்கும் இக்கூட்டத்தை மீண்டும் மீண்டும் பிரகிருதியின் மூலம் வெளியாக்குகிறேன்.

பிரபஞ்சத்தில் உள்ள மொத்த உள்ளத்தின் மூலம் இயங்கும் அழிவிலா பிரம்மன் தான் படைப்புக்குக் காரணமான இறைத் தத்துவம். அதே சுத்த சுயம் பிரகாச பிரம்மன், தனித்த ஒரு மன—அறிவுக் கருவியில் தங்கி செயலாக்கம் அளிக்கும்போது அது ஜீவாத்மா ஆகிறது, அழியும் தன்மையுள்ள அகந்தையாகிறது. இவ்வாறு ஒருவர் மீண்டும் மீண்டும் தோன்றி மறையும் தன்மை பெறுவதையே சம்சாரம் என்று கூறுகிறோம்.

நமக்கு இருப்பது ஒரே ஒரு சூரியன்தான். அமைதியான தெள்ளத் தெளிந்த ஏரி நீரில் அதன் உருவத்தைப் பார்க்கும் போது மிக அற்புதமாக இருக்கிறது. அதையே சாலையோரத்தில் கலங்கிக் கிடக்கும் குட்டை நீரில் பார்க்கும்போது, அதன் தோற்றமே மாறிவிட்டது போல் காணப்படுகிறது. இந்த வேறு பாட்டை நினைவு வைத்துக் கொண்டால் தனி அகந்தைக்கும், தூய இறைத் தத்துவத்திற்கும் உள்ள வித்தியாசம் தெரியவரும். ''தூய ஏரியில் உருக்கிவிட்ட வெள்ளியாகத் திகழும், குழம்பிய குட்டையில் மங்கலாகத் தோன்றும் ஒளிவட்டமும்—இந்த இரண்டுமே நான்தான்'' என்று வானத்திலுள்ள சூரியன் சொன்னால், அதில் தவறு இல்லை அல்லவா? அதைத்தான் பரம் பொருளாகிய கிருஷ்ணர் இங்கு கூறுகிறார். ''படைப்பாளிக்கும், படைக்கப்பட்ட பொருள்களுக்கும் உயிரியக்கம் அளித்து பேருண்மையைப் பொருளாக விளங்குவது நான்தான்'' என்று சொல்லுகிறார்.

பிரபஞ்சத்திலுள்ள எல்லா உடல், மன, அறிவுக் கருவிகளையும் மொத்தமாக சேர்த்தால், அது இறைத் தத்துவத்தின் ஒரு பகுதி ஆகிறது. ஆன்மாவின் கீழ்நிலை இயல்பு அது. அதைப் பிரகிருதி என்று கூறுகிறார்கள். 'ஊழிக் காலத்தில் எல்லா உயிரினங்களும் எனது பிரகிருதியுடன் கலந்து விடுகின்றன' பிறகு அடுத்த கல்பம் தொடங்கும்போது, ஒவ்வொருவருடைய கீழ்நிலை இயல்பின் பழங்கால வாசனைகளும் வெளியாகின்றன.

பிரகிருதிக்கு நீர் வார்த்து வளர்த்து, சம்சாரம் என்ற மர மாக்குவது பிரம்மனின் அருள். தூய உணர்வு மயமான நிலையிலுள்ள பிரம்மன், பிரகிருதி (மாயை)யுடன் தன்னை இணைத்துக் கொள்ளவில்லை என்றால் படைப்பு பற்றிய பிரச்னைக்கே இடமில்லை. பிரகிருதி வெறும் ஜடப் பொருள். தானாக அது உயிர் பெற்று இயங்காது. எனவே பழைய 'வாசனை'

மூட்டைகள் அவ்வளவையும் புது உருவங்களில் ''மீண்டும், மீண்டும் வெளியிடுவது நான் தான்.''

பரம்பொருள் பிரகிருதிக்கு உயிர் இயக்கம் அளிக்கும் போது, வாசனைகள் வெளியாகாமல் இருக்க முடியாது. ஏனெனில் அவை பிரகிருதியைச் சார்ந்திருப்பவை. ஆகையால் பிரகிருதி உயிர் இயக்கம் பெறும் வரை, வாசனைகள் 'சக்தியற்றுக் கிடக்கின்றன.'

மொத்த (சமஷ்டி) நோக்கிலிருந்தே முற்கால முனிவர்கள் இப் பிரபஞ்சத்தை விளக்குகிறார்கள். அதைத் தெரிந்து கொள்ளாமல், அவர்கள் கூறியதைப் படிப்பவர்கள் திகைப்புக்கு உள்ளாக வேண்டிய நிலை ஏற்படுகிறது. ஒவ்வொரு சாதகரும் அதைத் தனியாக (வியஷ்டி) தனக்குள்ளே பார்த்து அதன் உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் கிருஷ்ணர் இங்கு கூறியிருப்பதன் பொருள் முழுமையாக விளங்கும். ஆன்மிகப் பொருள், கீழ்நிலை இயல்புடன் இணைந்து நம்மில் இயங்கவில்லை என்றால், தனித் தன்மை பெற்ற அகந்தையை நம் ஒவ்வொருவரிலும் நமது மன—அறிவுக் கருவி உண்டாக்கியிருக்க முடியாது. அகந்தைச் சிறு வாழ்வின் துன்பங்களை அனுபவிக்கும் வாய்ப்பும். நமக்குக் கிடைத்திருக்காது.

மனத்துடனோ, அறிவுடனோ தன்னை இணைத்துக் கொள்ளாமல் ஆழ்ந்த தூக்கத்திலிருக்கும்போது, மாமுனிவரும் ஒன்றுதான், மகா அயோக்கியனும் ஒன்றுதான். இதை நாம் ஏற்கனவே பார்த்தோம். தூங்கி எழுந்தவுடன் திருடனுடைய திருட்டு உள்ளம் மீண்டும் தலை தூக்குகிறது. மற்றவருடைய தெய்விக உள்ளம் அவரை ஒரு முனிவராக வெளியிடுகிறது. அவர்கள் இருவருக்கும் இயக்கமளிக்கும் உயிர்ப் பொறி ஒன்று தான். அதுவே தூய பரம்பொருள். முனிவர் முனிவராகவும், திருடன் திருடனாகவுமே நடந்துகொள்ள முடியும். எக்காரணத்தைக் கொண்டும் ஒருவர் மற்றவரைப் போல இல்லாமல், அவரவர்களுடைய இயல்பு (பிரகிருதி)க்கு ஏற்ற போக்கில் ''வேறு வழியின்றி'' அவ்வாறு நடந்து கொள்ளுகிறார்கள். வாசனைகள், வெள்ளத்தோடு வெள்ளமாகச் சென்று மறைவதும், அவை வேறு உருவம் பெற்று வெளியாவதும்—இந்நாடகமெல்லாம் மாற்றமிலா ஆன்மா என்னும் நாடக மேடையில் நடக்கிறது. ''அவற்றை மீண்டும் தோற்றுவிப்பது நானே''.

கரும விதியை யாராலும் மாற்ற முடியாது. வினை விதைத்தவன் வினை அறுப்பான், தினை அறுக்க முடியாது. எல்லாவற்றையும் மறையச் செய்வதும், மீண்டும் அவற்றை

பன்மைத் தோற்ற உலகமாக வெளியிடுவதும் பரம்பொருளே என்றால், கரும விதி அவரை மட்டும் கட்டுப்படுத்துவதில்லையா?

ந ச மாம் தானி கர்மாணி
நிபத்னந்தி தனஞ்ஜய
உதாஸீனவ—தாஸீனம்
அஸக்தம் தேஷு கர்மஸு 9:9

அக்கறையற்ற ஒருவனைப் போல் அமர்ந்து, எவ்வகைப் பற்றுதலும் இல்லாமல் இச்செயல்களை நடத்தி வருவதால், இச் செயல்கள் என்னை கட்டுப்படுத்துவதில்லை, தனஞ்சயா.

ஒருவருடைய அகந்தை மையச் சொற்கள் அவர் உள்ளத்தில் ஆழ்ந்த தடங்களை (வாசனைகளை) விட்டுச் செல்கின்றன. அதன் விளைவுகள் அந்த அகந்தையை விடாமல் தொடர்ந்து கொண்டே இருக்கும். சுயநலக் கோரிக்கைகளிலிருந்து எழும் எல்லா அகந்தைமையச் செயல்களும் இவ்வாறு மனத் தடங்களை (வாசனைகளை) பதித்துச் செல்லுகின்றன. அகந்தையற்ற முறையில் சுயநல நோக்கமின்றி பணிபுரிவோரின் உள்ளங்களில் வாசனைத் தடங்கள் தோன்றுகின்றனவா? நன்றி கெட்ட மகன் தந்தையைக் காலால் உதைப்பதற்கும், சின்னஞ் சிறு குழந்தையொன்று அருகிலிருக்கும் அப்பாவை இரு கால்களிலும் உதைத்து விளையாடுவதற்கும் உள்ள வேறுபாடு பற்றி எடுத்துரைப்பதற்கு அறிவு நுணுக்க மிக்க பெரிய தத்துவ ஆசிரியர்கள் தேவையில்லை. சுயநலக் கோரிக்கைகளைக் கொண்டு ஒருவர் செய்யும் அகந்தை மையச் செயல்களின் துன்ப வாசனைகளை அவர் அனுபவித்தே ஆக வேண்டும்.

மீண்டும் மீண்டும் உயிரினக் கூட்டத்தை இவ்வுலகில் தோற்றுவிக்கும் இறைப் பொருளுக்கு அச்செயலில் பற்றுதலும் இல்லை, வெறுப்பும் இல்லை. அழிவிலாப் பரம் பொருளை அடிப்படையாக வைத்து, நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அதை நிகழ்ச்சிகள் பாதிப்பதில்லை. ''இச்செயல்கள் என்னைக் கட்டுப்படுத்துவதில்லை.'' ஏனெனில் அகந்தையிலிருந்தோ, சுயநலக்காரணங்களிலிருந்தோ எழுபவை அல்ல அவை.

நாம் சினிமாவுக்குப் போகிறோம். கதையில் ஆரம்பம் முதல் முடிவுரை கொலையும், கொள்ளையுமாக இருக்கிறது. கதாநாயகனும் ,கதாநாயகியும் மழையிலும், புயலிலும் சிக்கித் தவிக்கிறார்கள். இதை எல்லாம் பார்க்கும்போது நமக்கு அழுகையே வந்துவிடுகிறது. ஆனால் படம் முடிந்த பிறகு அந்தத் திரையைப் பார்த்தால், அது அப்படியே வெள்ளை வெளேரென்று இருக்கிறது. இவ்வளவு கொலைகள் நடந்தும், அதன் மீது

ரத்தக்கறை ஒரு பொட்டுக்கூட இல்லை. பெரும் புயலும், மழையுமாக இருந்ததே, அதன் விளைவாக அந்த 'வெள்ளித்திரை' கொஞ்சங் கூடக் கிழியவில்லை, நனையவும் இல்லை. படம் இவ்வளவு நேரம் அதன் மீது ஓடிக் கொண்டிருந்த போதிலும் அதில் வரும் நிகழ்ச்சிகள் திரையை கொஞ்சம் கூடப் பாதிக்கவில்லை. இறைப் பொருளின் நிலையும் அதுதான்.

உலகத்தில் நடக்கும் துயர நாடகங்கள் அத்தனையும், எதற்கும் அசைந்து கொடுக்காத ஆன்ம மேடையில் நடை பெறுகின்றன. பன்மைத் தோற்றங்கள் நம்மை பல வகைகளில் குழப்புகின்றன. ஆயிரமாயிரம் அகந்தைகள் இந்நாடகத்தில் சுதா பாத்திரங்களாக வருகிறார்கள். எத்தனையோ பிறவிகள் எடுத்தெடுத்துக் குவித்து வைத்த வாசனைகள் ஆட்டி வைக்கிறபடி இந் நடிகர்கள் ஆடிவிட்டுப் போகிறார்கள்.

ரயில் வண்டி தடம் புரண்டு விட்டால், இஞ்சினில் உள்ள நீராவியா அதற்குப் பொறுப்பு? அதற்கு யாராவது தண்டனை விதிக்கிறார்களா? அல்லது வண்டி சரியான நேரத்தில் ஊர் வந்து சேர்ந்துவிட்டது என்றால் உடனே நீராவிக்கு வாழ்த்துரை வழங்குகிறார்களா? அதன் இயக்க சக்தியின்றி விபத்தும் இல்லை, வண்டி ஊருக்கு வந்து சேரும் பிரசினையும் இல்லை. நீராவி இல்லை என்றால், இஞ்சின் இஞ்சினாக இருக்காது; சக்கரங்களும் குழாய்களும் பொருத்தப்பட்ட வெறும் இரும்புத் தொகுப்பாக இருக்கும். நீராவி அதற்கு இயக்க சக்தி அளித்து ஓடச் செய்கிறது. ஓடும் போது வண்டி சில சமயங்களில் தடம் புரண்டு விபத்துக்கு உள்ளாகிறது; பத்திரமாக ஊர் போய்ச் சேரவும் செய்கிறது. அதை ஓடச் செய்ய வேண்டுமென்ற ஆவலோ அல்லது அதை இயக்கக் கூடாது என்ற வெறுப்போ, அது ஊர் போய்ச் சேருவதில் அக்கறையோ நீராவிக்கு இல்லை. ஒரு செயலுக்கு நோக்கம் இருந்தாலொழிய, அதன் விளைவுகளில் ஒருவருக்குப் பொறுப்பு இல்லை; நோக்கமோ கோரிக்கைகளோ தான் வாசனைகளை ஏற்படுத்துகின்றன.

எல்லா இயக்கத்திற்கும் மூல காரணமாக இருப்பது ஆன்மா. மனத்திற்கு இயக்கமளிப்பது அதுதான். மனம் ஒரு வாசனை மூட்டை. அதில் நல்ல வாசனைகள் நிறைந்திருந்தால், உலகத்துடன் நல்லிசைவு பெற்று மனம் ஆனந்த கீதம் பாடுகிறது. தீய வாசனைகள் நிறைந்திருந்தால் துயரத்தில் அழுந்தித் தத்தளிக்கிறது. கிராம போன் பெட்டியிலிருந்து இனிய கீதம் வருகிறது என்றால், அதற்கு நாம் பொருத்தும் ஊசியா காரணம்? இசைத் தட்டில் இருக்கிற நல்ல பாட்டு கிராம போன் மூலம் வெளியாகிறது. ஆன்மா நிரந்தரமானது. சமநிலை வகிப்பது. எவ்வகை உலகம் தோற்றம் பெறுகிறது, அதை உயர்நிலைக்குக் கொண்டு வருவது எப்படி—இந்தக் கவலை எல்லாம் ஆன்மாவுக்கு

இல்லை. சூரிய ஒளி எதன் மீது பட்டாலும், அது பளிச்சென்று விளக்கம் பெறுகிறது. கொலைகாரன், புனித இலட்சியத்திற்காக தன் உயிரையே தியாகம் செய்யும் மற்றொருவன் ஆகிய இருவர் மீதும் சரிசமமாக ஒளி வீசி விளக்கமளிப்பது சூரியன். ஒருவன் கொடியவன் என்பதையோ மற்றொருவர் மாபெரும் தியாகி என்பதையோ கதிரவன் பொருட்படுத்துவது இல்லை. அவ்வாறே உணர்வு மயமாக விரிந்து கிடக்கும் ஆன்மா எல்லா வகையான 'வாசனை'களுக்கும், விளக்கம் அளித்து நிற்கிறது. தனது கெட்ட 'வாசனை'களினால் ஒருவன் சுய அழிவுப் பாதையில் சென்று மாய்கிறான். மற்றொருவர் தமது நல்ல 'வாசனை'களினால் மகோன்னத நிலை அடைகிறான். 'இந்த இருவரிலும் நான் அக்கறையில்லாதவனைப் போல் அமர்ந்து இயங்கி வருகிறேன்' என்று பகவான் அறிவிக்கிறார். தமது கீழ்நிலை இயல்பாகிய பிரகிருதியின் செயல்களில் அவர் திளைத்துக் கொண்டிருக்கிறார்.

எல்லையற்று எதிலும் பங்கு கொள்ளாதிருக்கும் பரம் பொருளுக்கும், வரம்புக்கு உட்பட்ட இயக்கப் பொருள்களுக்கும் உள்ள உறவுதான் என்ன? எல்லைக்குட்பட்டு இயங்குபவை எல்லாம் பரம் பொருளின் தான் இயக்கம் பெறுகின்றன என்று சொல்லிவிட்டு, பரம் பொருளுக்கும் இவைகளுக்கும் சம்பந்த மில்லை என்றும் சொன்னால் அது எப்படி?

மயாத்யக்ஷேண ப்ரக்ருதி:
ஸூயதே ஸ—சராசரம்
ஹேதுனானேன கௌந்தேய
ஜகத் விபரி வர்த்ததே 9:10

எனது மேற்பார்வையில் பிரகிருதி (இயற்கை) சராசரங்களை எல்லாம் படைக்கிறது கௌந்தேயா. அதனால் உலகம் சுழல் கிறது.

எவ்விதச் செயலும் இல்லாத ஆன்மாவுக்கும், செயல் இயக்கத் திறன் பெற்ற அனாத்மாவுக்கும் உள்ள உறவை பலவகை உதாரணங்களின் மூலமாக வேதாந்தம் விளக்கி வைக்கிறது. இப்புனித ''உறவிலா உறவு'' அந்த உதாரணங்களினால் மிகத் தெளிவாகத் தெரிய வருகிறது.

சூரியனுடைய கிரணங்கள் இடைவெளி மண்டலம் வழியாக வந்து பொருள்களின் மீது விழுந்து, அவற்றைச் சூடு பெறச் செய்கின்றன. பொருள்கள் சூடாகிறதே தவிர இடைவெளி மண்டலம் சூடாவதில்லை. செயல்புரியா ஆன்மாவின் சந்நிதானத்தில் இருப்பதால் பிரகிருதிக்கு இயக்கத் திறன் வருகிறது.

அதற்கு மற்ருெரு உதாரணமும் உண்டு. சற்று தொலேவிலுள்ள ஒரு கோயிலுக்குப் போய் வர வேண்டுமென்று நினைத்த மன்னர், குறிப்பிட்ட ஒரு நாளில் புறப்படத் தீர்மானித்து அதை மந்திரியிடம் சொன்னர். ஆனலும் பல்வேறு வேலேகளுக்கு இடையில் தாம் கூறியதைக் கூட அரசர் மறந்து விட்டார். ''நாளைக்கு யாத்திரை தொடங்குகிறது'' என்று மந்திரி நினைவூட்டிய பிறகு, அவருக்கு நினைவு வருகிறது, குறிப்பிட்டபடி அவர் யாத்திரைக்குப் புறப்படுகிருர். சாலேயின் இருமருங்கிலும், மக்கள் திரள் திரளாகக் கூடி நின்று ஆர வாரிக்கிருர்கள். நல்வரவு காட்டும் அலங்கார வளைவுகள் காணப் படுகின்றன. மன்னருடைய யாத்திரை வெற்றிகரமாக அமைய வேண்டுமென்பதற்காக எல்லா அதிகாரிகளும் அங்கங்கே உள்ள சிப்பந்திகளுக்குக் கட்டளையிட்டு, மிகச் சிறப்பான ஏற்பாடுகள் நடந்திருந்தன. அரசரும் சந்தோஷமாக யாத்திரை செய்து ஊர் திரும்புகிருர்.

எல்லோரும் பரபரப்புடன் வேலே செய்ய வேண்டுமென்று கட்டளையிடும் அதிகாரம் மந்திரிக்கும், அதிகாரிகளுக்கும் எங்கிருந்து வந்தது? அரசரிடமிருந்துதான் அவர்கள் பெறு கிருர்கள். ஆனல் அரசர் நேரில் சென்று எல்லோரையும் வேலே செய்யச் சொல்லித் தூண்டவில்லே. யாத்திரை பற்றிக் கூட அவருக்கு நினைவில்லே. ஆனல் அவருடைய அதிகாரத்தின் முன்னிலேயில் தான் மற்ற எல்லோரும் வேலே செய்தார்கள். அரசருடைய அதிகாரம் இல்லே என்ருல், மந்திரியே சொல்லி யிருந்தால் கூட எதுவும் நடந்திராது. ஆன்மா—பிரகிருதி உறவும் இப்படிப்பட்டதுதான்.

ஆன்மா இயங்குவதில்லே என்ருலும், ஆன்மாவின் அதிகாரத்தை வைத்து பிரகிருதி வேலே செய்கிறது. இதை நம்மிடமே காணலாம். ஆன்மாவினல் மனமும் அறிவும் ஒளி—பெறுகின்றன. அவற்றில் பதிநதுள்ள வாசனைகள் வெளியாவதற்குத் தகுந்த களத்தை அமைத்துக் கொடுப்பது மட்டுமின்றி, உணர்வுப் பகுதிகள், செயல் உறுப்புக்கள் போன்ற அனுபவக் கருவிகளேயும் உருவாக்கித் தந்து, ஆன்மா நமக்கு உதவுகிறது. ''இயற்கை எனது முன்னிலேயில், இவ்வுலகையும் பொருள்களேயும், உயிரினங்களேயும் படைக்கிறது.'' இங்கு இயற்கை என்ருல் ''வெளியாகாமல் இருப்பது, வெளித் தோற்றம் பெறுதல்'' என்று பொருள்.

லயக் கட்டுத் தவருது நடந்து கொண்டிருக்கும் நடனம் போல, மாற்றங்களும் அழிவும் ஆன்மாவின் 'முன்னிலே'யில் இம்மியும் பிறழாமல் நடந்தவண்ணம் இருக்கின்றன. 'அதனல் உலகம் சுழலுகிறது. இவ்வளவுக்கும் ஆன்மா எதுவும் செய்யவில்லே. தோற்றம் பெறுவதும், செயல் புரிவதும்

பிரகிருதியே. ஆன்மாவின் அருகிலேயே இருக்கும்போது பிரகிருதி உயிரியக்கம் பெறுகிறது. பிரகிருதி இருப்பதே ஆன்மாவினுல்தான். புருஷர் என்று சொல்லப்படும் ஆத்மாவுக்கும், பிரகிருதி எனப்படும் அனுத்மாவுக்கும் உள்ள உறவுபற்றி சிந்தித்துப் பார்த்தால் ஆத்மா—அனுத்மா உறவு மேலும் தெளிவாகும்.

அடிப்படையான பேருண்மைப் பொருள் ஆன்மா ஒவ்வொரு உருவத்திலும் அது இருக்கிறது. இடம், பொருள், ஏவல் போன்ற வரையறைகளுக்கு உட்பட்ட இனங்களின் சுக துக்கங்கள் அதற்கு இல்லே—சரி, இதெல்லாம் உண்மையானுல் எல்லோரும் அவ்வுணர்வுடன் இரண்டறக் கலந்து ஏன் இருப்பதில்லே?

அவஜானந்தி மாம் மூடா
மானுஷீம் தனு—மாஸ்ரிதம்
பரம் பாவ—மஜானந்தோ
மம பூதமஹேஸ்வரம் 9:11

நான் மனித உருவில் உறையும்போது முட்டாள்கள் என்னே அறிந்து கொள்வதில்லே. எல்லா உயிர் இனங்களுக்கும் மாபெரும் தலேவனுக இருக்கும் எனது உயர்நிலே இயல்பு அவர்களுக்குத் தெரிவதில்லே.

பரம் பொருளின் மேல்நிலே, கீழ்நிலே இயல்புகள் பற்றி ஏற்கனவே எடுத்துரைக்கப்பட்டு இருக்கிறது. ஆன்மாவின் உயர்நிலே இயல்பு மாற்றங்களுக்கு உள்ளாகாதது என்றும், எல்லாவற்றையும் கடந்து நிற்பது என்றும், இதை அறியா *முட்டாள்கள் ''வெளியாகாப் பொருள்'' இப்போது தோற்றம் கொண்டிருக்கிறது என்று நினேக்கிறுர்கள் என்றும் பகவான் ஏழாவது அத்தியாயத்தில் கூறினுர்.** எல்லாவற்றிற்கும் இயக்கம் அளிக்கும் உட்பொருளாக இருப்பது தாமே என்பதை விளக்கும்போது, இந்த அத்தியாயத்திலும் 'முட்டாள்கள்' என்ற அதே கடுமையான சொல்லே கிருஷ்ணர் உபயோகிக்கிறுர். உருவங்களேப் பார்த்துவிட்டு, உட்பொருளே மறந்து விடுகிறவர்களேப் பார்த்துவிட்டு, அவர் இவ்வாறு கண்டிக்கிறுர். ''எனது உயர்நிலே இயல்பை அறியாமல், குறிப்பிட்ட ஒரு உருவத்தில் தான் நான் இருக்கிறேன் என்று முட்டாள்கள் நினேக்கிறுர்கள்''

* ஒவ்வொரு மனித உருவத்திலும் நான் இருப்பதைக் கண்டு கொள்ள முடியாதவர்கள் முட்டாள்கள் என்பதும், தமது பக்தர்கள் ஒருவரை ஒருவர் வணங்க வேண்டும் என்பதும் கூட இச் சொற்களின் கருத்தாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

** கீதை—அத்—7, செய்யுள் 2.

கடவுளின் உருவச் சிலேயே கடவுள் என்று நினைத்துவிடக் கூடாது. ஊனுடல் பெற்று நம்முன் அமர்ந்துள்ள குரு வேறு, அவரிடமுள்ள பரம்பொருள் வேறு. குடமும், குடத்திலுள்ள தண்ணீரும் ஒன்ருகி விடுமா? விக்கிரகம் ஒரு குறியீடு. (பிரதிகா). உணர்வுக்கு எட்டாமல், மிக மிக நுணுக்கமாக இருக்கும் பேருண்மையை எட்டுவதற்கு அவ்வுருவச் சிலே உதவுகிறது. பால் புட்டியைக் கையில் கொடுத்தால், குழந்தையின் பசி தீர்ந்து விடாது. இலே போட்டுக் கொண்டு மணிக்கணக்கில் உட்கார்ந்திருந்துவிட்டு, உணவு கிடைக்காமல் எழுந்திருந்தால், வயிறு நிறைந்து விடுமா? நம்முடைய ஊர் போய்ச் சேருவதற்காக ஒரு சாலே இருக்கிறது என்ருல், சாலேயும் ஊரும் ஒன்று என்று அர்த்தமா? சாலே வழியாக நடந்து நமது ஊர் போய்ச் சேர வேண்டும். இதை சரியாகப் புரிந்து கொள்ளாதவர்களே வெறியர்களாக மாறுகிருர்கள். இவர்களால் போட்டியும், பொருமையும் வளர்ந்து, பொருட்சேதமும், படு கொலேகளும் நடக்கின்றன. சாமி என்ற பெயரில் கற்சிலேகளேயும், மரக்கட்டைச் சின்னங்களேயும் வைத்து இவ்வளவு அக்கப்போர் கொடுக்கிருர்கள். மூன்று நிறங்களில் கதர்த் துணி வாங்கி, கத்தரித்துத் தைத்துவிட்டால், அது தேசீயக் கொடி. ஆனல் அதுவே எனது தாய்நாடு ஆகிவிடாது. கொடியேற்று விழாவன்று அதற்கு நான் தலே வணங்கும்போது, எனது நாட்டையும் சமுதாயத்தையும் வணங்குகிறேன். அது தனது நாட்டின் கலாச் சாரத்திற்கும், இலட்சியங்களுக்கும் புனிதச் சின்னமாக விளங்கு கிறது.

இந்தக் கருத்தை நினேவு வைத்துக்கொண்டு மீண்டும் படித்தால், இச் செய்யுளின் பொருள் மிகத் தெளிவாக விளங்கும். ''எல்லா உயிரினங்களுக்கும் நான் மாபெரும் தலேவன் என்ற எனது உண்மை உயர்வு சும்மா கும்பிட்டு விட்டுப் போகிறவர்களுக்குத் தெரியாது,'' என்று கிருஷ்ணர் கூறுகிருர். மேலும், ''நான் மனித உருவில் தோன்றும்போது மருட்சியில் உழலும் முட்டாள்கள் என்னே அலட்சியக் கண்ணேட்டத்துடன் நோக்குகிருர்கள்'' என்றும் சொல்லுகிருர்.

எங்கும் விரவி இருக்கும் இறைவன், குறிப்பிட்ட ஒரு தலேமுறையைக் காத்தருளுவதற்காக அவதரிக்கும் போது, ''என்னேப் போல அவரும் ஒரு மனிதர்தானே'' என்று அசட்டை செய்து வருகிருர்கள்.

உண்மையை அறியச் சக்தியற்றவர்களாக அந்த முட்டாள்கள் ஏன் ஆகிருர்கள்? ஆன்மிக விவேகம் அவர்களுக்கு மழுங்கிப் போவதற்குக் காரணம் என்ன?

மோகாசா மோககர்மாணோ மோகஜ்ஞான விசேதஸ:
ராக்ஷஸீ—மாஸுரீஞ் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ஸ்ரிதா:
9:12

மஹாத்மானஸ்து மாம் பார்த்த
தைவீம் ப்ரக்ருதிமாச்ரிதா:
பஜந்த்யனன்யமனஸோ
ஞாத்வா பூதாதிமவ்யயம் 9:13

12. வீண் ஆசைகள், வீண் வேலைகள், உதவாக்கரை அறிவு—இவை எல்லாம் உண்மையில் மருட்சிமிக்க அரக்கரையும், அசுரரையும் ஆட்டி வைக்கும் இயல்புகள்.

13. ஆனுல், பார்த்தா, மகாத்மாக்களுக்கு எனது தெய்விக இயல்பு தெரியும். எல்லா உயிர் இனங்களுக்கும் நான் மூல காரணம் என்பதை உணர்ந்து கொண்டு, அவர்கள் ஒரு முனை நோக்குடன் (வேறு எதிலும் மனத்தைச் செலுத்தாமல்) என்னை வழிபடுகிறுர்கள்.

சொல்லுவது மற்றவருடைய உள்ளத்தில் ஆழப் பதிய வேண்டுமென்பதற்காக நேர்மாறுன இரண்டு உதாரணங்களை அடுத்தடுத்து வைத்துக் காட்டுவது கிருஷ்ணனுடைய போதனை முறை. கருப்புத் துணியின் மேல் வெள்ளை வெளேரென்றிருக்கும் வைரக் கல்லை வைத்தவுடன் இரண்டுமே விளக்கம் பெறுகின்றன அல்லவா? கீழ்த்தரமானவற்றையே நாடும் அளவுக்கு மருட்சியில் ஆழ்ந்தவர்களை (அரக்கர், அசுரர்கள்) முதலாவது செய்யுள் விவரிக்கிறது. தெய்விகத் தன்மைகள் மேலோங்கி நிற்கும் மகாத்மாக்களை இரண்டாவது செய்யுள் படம் பிடித்துக் காட்டுகிறது.

அசட்டு ஆசைகளில் சிக்கி, அவற்றின் காரணமாக படாத பாடுபட்டு, சோர்ந்துபோய், மருட்சிக் குழப்பத்தில் ஆழ்ந்து விடுகிறவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறுர்கள். சிந்திக்கும் திறனையே அவர்கள் இழந்து விடுகிறுர்கள். தெய்விக நோக்கு என்றுல் என்னவென்று அவர்களுக்குத் தெரிவதில்லை. ஆகையால் கொடிய நடவடிக்கைகளில் அவர்கள் ஈடுபடுகிறுர்கள். காலமெல்லாம் அவர்களை புலன் இன்ப நாட்டமென்ற பேய்களே சூழ்ந்து கொண்டு தாண்டவமாடுகின்றன. அப்படிப்பட்டவர்கள் அரக்கர், அசுரர், ராவண மரபில் வருபவர்கள் என்று குறிப்பிடப் படுகிறது.

இப்போது ஒருவர் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் அவருடைய மனத்தில் ஆழ்ந்த தடங்களை பதித்துச் செல்லுகின்றன. இவைகளுக்கு ஏற்றபடிதான் அவருடைய எதிர் காலக் கேளிக்கைகளும் சிந்தனைகளும் உருவாக்கம் பெறும்.

உதவாக்கரை நடவடிக்கைகளினால் ஏற்படும் தடங்கள் மிகவும் கீழ்த்தர வாசனைகளையே தோற்றுவிக்கின்றன. ஏற்கனவே மழுங்கிக் கிடக்கும் அவனுடைய அறிவு இதனால் மேலும் மாசடைந்து, புழுதிபடிந்த கண்ணாடியாகிறது. நாற்ற படுகுழியில் இவ்வாறு ஊறிய ஒருவனை அரக்கன் என்று சொல்லாமல் நல்லறிவு பெற்றவர்கள் வேறு என்ன சொல்லுவார்கள்.*

அரக்க மரபுக்கு நேர்மாறாக, நல்லறிவு பெற்றவர்களின் சிந்தனையும், செயலும் எப்படி இருக்கும்? இது அடுத்தபடியாக விவரிக்கப்படுகிறது. மனித உள்ளத்தை இப்படி அக்கு வேறு, ஆணி வேறாகப் பிரித்துக் காட்டுவது சுய முன்னேற்றம் பெற விரும்பும் சாதகர்களுக்கு மிக உதவியாக இருக்கிறது. ஒருவர் பின்பற்ற வேண்டிய சரியான வழி எது, உலகத்தில் எந்தக் கண்ணோட்டத்துடன் நடந்துகொள்ள வேண்டும் என்ற விவரங்கள் பசுமரத்தாணி போல் நம் உள்ளத்தில் பதிகின்றன.

'மகாத்மாக்கள் தெய்விகத் தன்மை பெற்றவர்கள் இறைப் பொருளை நாடி, ஆன்ம உணர்வு பெற்று, ஒரே குறியாக சுய முயற்சி செய்து, அவர்கள் அமரநிலை எய்துகிறார்கள். ''எல்லா உயிரினங்களுக்கும் மூலகாரணமாக இருப்பது இறைத் தத்துவம்'' என்று இந்து கலாச்சார மரபு ஆணித்தரமாக நிரூபிக்கிறது. இவ்வுண்மையைப் புரிந்து கொண்டவர்கள், தங்களைப் போலவே மற்றவர்களும் தெய்விகத் தன்மை பெற்றவர்கள் என்று உணர்ந்து, எல்லோரிடமும் வணக்கத்துடன் நடந்து கொள்ளுகிறார்கள். இதைவிட சிறப்பு மிக்க சோஷலிஸத்தை யாரும் இதுவரை எடுத்துரைத்ததில்லை. இந்த ஆன்மிக சோஷலிசம் எல்லா சமுதாய நோய்களுக்கும் தலைசிறந்த மருந்து. நமது தலை முறையினர் இதைப் புரிந்து கொள்ளவில்லை என்றால் அதற்குக் காரணம் முந்திய சில வரிகளில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது, அசுர சக்திகள் சமுதாயத்தில் தலைவிரித்தாடிக் கொண்டிருக்கின்றன.

''மகாத்மாக்கள் ஒரே குறியான உள்ளத்துடன், என்னை வழிபடுகிறார்கள்'' என்று இங்கு சொல்லுவதன் பொருள் என்ன?

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஸ்ச த்ருடவ்ரதா:
நமஸ்யந்தஸ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே

*9:14*

எப்போதும் என் புகழ் பாடியவாறு கடுமுயற்சியில் ஈடுபட்டு, திட விரதங்களை மேற்கொண்டு, என்னைச் சரண்

---

* இந்தக் கருத்து, தெளிவாக, கீதையில் அத்.7, செய்.15ல் விவரிக்கப் பட்டிருக்கிறது.

அடைந்து தளரா உறுதியுடன் அவர்கள் பக்தி பரவசத்தில் மூழ்கி என்னை வழிபடுகிறார்கள்.

மகாத்மாக்களைப் பற்றிப் பேசும்போது, முந்திய செய்யுளில் ஞான மார்க்கம் சுட்டிக் காட்டப்பட்டது.* சுய ஒருமைப்பாடும், பரிணாம வளர்ச்சியும் பெறுவதற்கு (1) முழு ஈடுபாடு கொண்ட பக்தி(2) வேள்வி உணர்ச்சியுடன் செய்யும் சுயநலமற்ற பணி— ஆகிய இரு மார்க்கங்களும் கூட இங்கு குறிப்புணர்த்தப்படுகின்றன.

எப்போதும் என் புகழ் ப்ாடிக் கொண்டு—பெரும் கூட்டம் கூடி, கொட்டும் முழக்குமாக, பல்வேறு வகைக் கருவிகளுடன் ஒலி எழுப்பி, காதைத் துளைப்பதே பஜனை என்று சிலர் நினைப்பதாகத் தோன்றுகிறது. கீர்த்தனத்தின் நோக்கம் மிகப் புனிதமானது. ஒரு இலட்சியத்திற்கு அஞ்சலி செலுத்துவது, எப்போதும் இறைவனைத் துதிபாடுவது என்றால் என்ன? இலட்சியத்தின் பெருமையை உணர்ந்த ஒரு உள்ளம், அதை அடைவதற்காக இடைவிடாது செய்யும் மௌன முயற்சியே கீர்த்தனம். சமுக ஊழியர்கள் சமூகத்தைப் போற்றுகிறார்கள். அறிவிற் சிறந்த பெரியோர் எல்லா உயிர்களிடமும் தொடர்ந்து அன்பும் ஆதரவும் காட்டுகிறார்கள். இவ்வகை வழிபாடுகள் கும்பல் கூடி கூச்சல் போடுவதைவிட உயர்ந்த முறைகள் சந்தேகத்திற்கு இடமளிக்கும் பலவகை வேலைகளைச் செய்துவிட்டு சிலர் இந்தப் பஜனைக் கூட்டங்களுக்கும், வரலாம். பஜனையிலிருந்து திரும்பிய பிறகாவது அவர்கள் திருந்துகிறார்களா என்றால், அதுவும் இல்லை. இப்படிப்பட்டவர்களை வைத்துக் கொண்டு சற்று நேரம் சத்தம் போட்டுக் கொண்டிருந்தால், அது சரியான வழிபாட்டு முறை ஆகுமா? உள்ளம் உருகி, இறைவனைப் பற்றிச் சிந்தனையில் ல்யித்து நிற்பதே பக்தி. அந்த நிலையில் அவருடைய வாயிலிலிருந்து வரும் இறை வணக்கமே கீர்த்தனம்.

உள்ளத்தில் உறுதி கொண்டு முயற்சித்து வரவேண்டும்— இதைப் போன்று சிறு விவரங்களை கவனிக்காமல் விட்டு விடுவதால் சாதகர்கள் ஆன்மிகத் துறையில் தோல்வி அடைய நேரிடுகிறது. குறிப்பிட்ட சில நாட்களில் வழிபாட்டு மணம் வீசும் சில செயல்களை உடல் அளவில் செய்துவிட்டால் போதும், கடவுள் மற்றவைகளைப் பார்த்துக் கொள்ளுவார். சொர்க்கத்தை லட்டு மாதிரி ஒரு தட்டில் வைத்து நம்மிடம் கொண்டு வந்து கொடுப்பார்'' என்று பெரும்பாலோர் மனப்பால் குடிக்கிறார்கள். இந்த அசட்டு, மூட நம்பிக்கைக்கும், முழுமை பெற்று உயருவதற்கு ஒருவர் என்ன செய்யவேண்டுமென்று கூறும் மத

* ''எல்லா உயிர்களுக்கும் மூல காரணமாகவும், மாறு இயல்புடனும் நான் திகழ்கிறேன் என்பதை அறிந்துகொண்டு.''

விஞ்ஞானத்திற்கும் கொஞ்சங் கூட சம்பந்தமில்லை.

அந்த விஞ்ஞானத்தின் நுட்பங்களைக் கற்றறிந்து அவற்றை இடைவிடாது பின்பற்றி வர வேண்டும். இப்போது மாட்டிக் கொண்டிருக்கும் சக்தியிலிருந்து வாழ்க்கைச் சக்கரங்களை வெளிக் கொணர்ந்து, சரியான பாதையில் பயணத்தைத் தொடர்ந்து பயன் பெறுவதற்கு இப்படிச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. வாழ்க்கை இப்போது சுருதி கலைந்த கீதமாக இருக்கிறது. அது நமது இதயத்தைத் தொடும்போது அபச் சுருதியாக ஒலிக்கிறது. வாழ்க்கையை அனுபவிப்பதற்கு நமக்கு இறைவன் அளித்திருக்கும் கருவிகள் இசைவு பெறுவதற்காக ஒவ்வொரு சாதகரும் கவனத்துடன், உறுதியுடன், மனப்பூர்வமாக முயற்சித்து வரவேண்டும்.

இவ்வாறு சுய முயற்சி செய்யும்போது, உடல் இயல்பு தன் கை வரிசையைக் காட்டி, ஒருவருடைய முயற்சிகளை திசை திருப்பப் பார்க்கலாம். இவ்வாறு தவறான பாதைகளில் ஒருவர் இழுக்கப்படும்.போது, ''இந்த மோசடிகளில் இனி நான் சிக்கிக் கொள்ள மாட்டேன். பேருண்மைப் பாதையிலிருந்து விலக மாட்டேன்,'' என்று திட விரதத்துடன் தமது முயற்சிகளைத் தொடர்ந்து செய்து கொண்டு போக வேண்டும்.

''உயிரினங்களுக்கு எல்லாம் மூலப் பொருளாக இருக்கும் என்னை'' வழிபடும் வழி என்ன? மருட்சியுற்ற அகந்தையை என்னுடன் கலந்து நிற்குமாறு செய்ய வேண்டும். அனாத்மாவிலிருந்து ஒதுங்கி ஒதுங்கி, தம்மைப் பிரித்துக் கொண்டு, ஆன்மீகப் பொருளுடன் கலந்து நிற்க முயற்சித்து வந்தால் அவர் இறுதியில் வெற்றி பெறுகிறார். அனாத்மாவிலிருந்து ஒதுங்கி நிற்கும் முயற்சி அவசியமானது. என்று சுட்டிக் காட்டுவதற்கு ''என் முன் சிரம் தாழ்த்தி வணங்கி'' என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. தவறான போக்கிலிருந்து விலகி நின்று உயருங்கள், அந்தப் போக்கு வேண்டாம் என்று கூறுவதால் இதை எதிர்மறை பாதை என்று சொல்லலாம். ஆனால் உள்ளத்தை ஒருமுகமாக ஆன்மாவில் நிலைநாட்டி, தொடர்ந்து தியானித்து வந்தால் கடைசியில் தாமே ஆன்மா என்ற உணர்வு பெறலாம். இதை நேரடி முறை என்று சொல்லலாம். இலட்சியத்தை அடையும், இந்த நேரடிப் பாதையை 'ஆழ்ந்த ஈடுபாட்டுடன் வழிபட்டு' என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன.

தவறான பொருள்களுடன் இணைத்துக் கொள்வதிலிருந்து தம்மைப் பிரித்துக் கொள்வதும், பிறகு ஆழ்ந்த தியானத்தின் மூலமாக தமது எல்லையற்ற ஆன்மீகத் தன்மையை உணர்ந்து கொள்வதும்— இந்த இரண்டுமே ''என்னில் உறுதி கொண்டு, இடையறா வழிபாடு செய்பவர்களினால்தான் முடியும்.''

மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்தல், சந்தனம் தெளித்து இறைவனை மகிழ்வித்தல் போன்ற வழிபாட்டு முறைகள் ஞான மார்க்கத்தில் இல்லை, பிரபஞ்சத்திற்கு அடிப் படையாகவும், எல்லாப் பொருள்களுக்கும் சாராம்சமாகவும் விளங்குபவர் இறைவன். மிகத் தெளிவாக, கவனத்துடன் இக் கருத்தை மனத்தில் நிலைநாட்டி, இடையருது இந்த இயல்பு பற்றி தியானித்து வருவதே உண்மையான வழிபாடு. ஒருவருடைய அகந்தை மைய வாழ்வில் தோன்றும் அரும்புகள் எல்லாம் 'தெய்வ மனிதன்' என்ற பூக்களாக மலருவதற்கு இது வகை செய்கிறது. மனித குலம் முழுவதுமே இதனுல் நறுமணம் பெற்றுத் திகழ்கிறது.

ஞானயக்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோமுகம்

*9:15*

ஞான வேள்வி மூலம் என்னை வழிபடுகின்றவர்களும் இருக்கின்ருர்கள். ஒருமையாகவும் தனிப்பொருளாகவும், பன்மையாகவும் என்னைக் காண்பதுடன், சகல உருவங்களிலும் இருந்து எல்லா திசைகளை நோக்குபவர்களாகவும் என்னை அறிகிருர்கள்.

ஞான வேள்விக்கு சடங்கு சம்பிரதாயங்கள் எதுவும் இல்லை. எத்தனை நாம, ரூபங்களில் திகழ்ந்த போதிலும், அவை எல்லாவற்றிலும் உணர்வுத் தத்துவமாக உள்ள ஆன்மா ஒன்று தான். இதை அனுபவபூர்வமாக அறிந்து கொள்வது ஞான வேள்வி. ''மாற்றமிலா ஆன்மா எல்லாவற்றிலும் விரவி, ஒவ் வொரு பொருளிலும் ஊடுருவி நிற்கிறது. நமக்குத் தென்படும் பன்மைத் தோற்றங்களையும், நிகழ்ச்சிகளையும் அதுதான் ஒருங் கிணைக்கிறது'' என்ற வேதாந்த உண்மையை ஞான வேள்வி செய்யும் சாதகர் உணர்ந்து கொள்கிருர்.

பல கம்பெனிகள் சாக்லேட்டுகள் தயாரிக்கின்றன. உருவம், மணம், நிறம், விலை முதலியவற்றில் அந்த சாக்லேட்டுகள் மாறு பட்ட போதிலும், அவற்றின் இயல்பாகிய இனிப்பு எல்லாவற்றி லும் இருக்கிறது. சாக்லேட்டை விரும்பும் குழந்தை, அது தட்டையா, உருண்டையா, அதைச் சுற்றியிருப்பது வெள்ளிக் காகிதமா, வெறும் காகிதமா என்ற ஆராய்ச்சிகளில் இறங்கு வதில்லை. இனிய சாக்லேட்டை சுவைத்து மகிழ்கிறது.

ஞான வேள்வி செய்யும் சாதகரும் அப்படியே உருவம் பெயர் முதலிய மாறுபாடுகளுக்கு இடையில் எல்லாவற்றையும் ஊடுருவி இணைத்துள்ள ஆன்மாவை எக்காலத்திலும், எந்த நிலை யிலும் அவர் அனுபவிக்கிருர். வைர வியாபாரியிடம் வைர நகை

ஒன்று வந்தவுடன், அவர் நகையை அழகு பார்த்துக் கொண்டிருப்பதில்லை. வேலைப்பாடுகளைப் பற்றிய பரிசீலனை தொடங்குவதில்லை. வைரத்தின் நீரோட்டம் எப்படியிருக்கிறது என்று கூர்ந்து கவனித்து அதை மதிப்பிட்டு விடுகிறார். இறை நாட்டம் கொண்ட சாதகர் ஆன்மாவாகிய வைரத்தையும் இவ்வாறே கண்டு கொள்ளுகிறார்.

தம்மைச் சுற்றி சதா நிகழ்ந்து கொண்டிருக்கும் நிகழ்ச்சியிலும், ஒவ்வொரு சொல்லிலும் சிந்தனையிலும் தமது ஆன்மா பிரதிபலிப்பதைக் காண்கிறார் ஞானி. உலகத்தில் எங்கு சென்றாலும் அவருக்கு இந்தக் காட்சியே தென்படுகிறது. நூறு கண்ணாடிகளுக்கு நடுவில் ஒரு விளக்கை வைத்தால் பல்லாயிரம் பிரதிபிம்பங்கள் சுடரொளி காட்டுகின்றன. அவ்வாறே ஆன்மாவில் வேரூன்றிய ஒருவர் உலகில் நடமாடும்போது, திரும்பிய இடமெல்லாம் தமது ஆன்மாவே சுற்றி நின்று தம்மை நோக்குவதைப் பார்க்கிறார். ஆயிரமாயிரம் நாம ரூபங்களில் தம்மையே அது உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்ததும் அவருக்குப் புல்லரிக்கிறது. உள்ள நிறைவும், பேரானந்தமும் பெற்று, அவர் இவ்வுலகில் வாழ்ந்து வருகிறார்.

நண்பர்களுடைய அன்புப் புன்னகையில் எதிரியின் முகச் சுளிப்பில், கொடிய பொறுமைச் சொற்களில் அன்பர்களின் நேசக் குரலில், உஷ்ண சீதள நிலைகளில், வெற்றி தோல்விகளுக்கு இடையில்—மனிதர்களிலும் விலங்குகளிலும் தாவரங்களிலும், மற்ற பொருள்களில் எல்லாம் கூட இறைவன் ஒருவனையே ஆன்ம உணர்வுடன் விளங்கும் ஞானி சத்தாகவோ, சித்தாகவா, ஆனந்தமாகவோ கண்டு களிக்கிறார். ஈசுவர தரிசனம் அல்லது ஆன்ம தரிசனம் என்று உலகிலுள்ள மத நூல்கள் குறிப்பிடுவது இதைத்தான். கோடானு கோடி நாம ரூபங்களிலும் இறைவனின் புன்னகையைக் காணப்பெற்று அனுபவிப்பது ஞான வேள்வி. அதில் ஈடுபட்டவர்களை, ''ஞான வேள்வியின் மூலம் என்னை வழிபடுகிறவர்கள்'' என்று பகவான் இங்கு குறிப்பிடுகிறார்.

இந்த இலட்சியத்தைக் கருத்தில் கொண்டு தக்க முயற்சியை சாதகர்கள் மேற்கொள்ள வேண்டும். முதலில் இது சற்று கஷ்டமாகத் தோன்றும். ஆனால் தாமே ஆன்மா என்ற உணர்வு வந்த பிறகு, அது சுலபமாக ஆகிவிடும். கோடானு கோடி உருவங்களில் ஒரே ஆன்மிகப் பொருள் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது என்று சாதகர் அறிந்து கொள்ளுகிறார். ''நான் எல்லா உருவங்களிலும் இருப்பதை அறிகிறார்கள்.''

ஆத்ம ஞானம் பெற்றவர் பன்மைத் தோற்றச் சிக்கல்களிலிருந்து விடுபடுவது மட்டுமின்றி, தமது ஆன்மா இப் பிரபஞ்சத்தி

லுள்ள எல்லா உருவங்களிலும் இருப்பதையே காண்கிறார். சூரியன் ஆயிரமாயிரம் பொருள்களில் பிரதிபலித்து, ஆயிர மாயிரம் சூரியர்களாகத் தோன்றிய போதிலும் அப்பிரதிபிம்பங் களில் தோன்றுவது ஒரே சூரியன்தான் என்று நமக்குத் தெரியும்.

தனிமையிலும், மோன நிலையிலும் மட்டுமே ஒருவர் அமைதி பெற்றால், அது ஆன்ம நிறைவின் இலக்கணம் ஆகிவிடாது. சில நேரங்களில் ஒருவருக்கு திடீரென தெய்வானுபவம் தோன்றி மறையலாம். ஞானிகள் என்று உபநிடத முனிவர்கள் குறிப்பிடு வது இவர்களை அல்ல. ஞானியைப் பொறுத்தவரை ஆன்மா ஒன்றுதான் பேருண்மை. அகத்திலும், புறத்திலும் எல்லா இடங் களிலும் ஊடுருவி நிற்கும் ஆன்மாவை அவர் அனுபவபூர்வமாக உணர்ந்தவர். ''இரண்டறத் திகழும் ஒருமைப் பொருள் எல்லா வற்றிலும் ஊடுருவி இருக்கிறது. ஆனால் அதை ஊடுருவி இருக்கும் பொருள் எதுவுமே இல்லை. ''இந்நிலைக்கு உயர்ந்து விட்ட ஞானிக்கு கூச்சமும் குழப்பமும் நிறைந்த சந்தைக் கடை யும் ஒன்றுதான். அமைதி நிலவும் இமயமலைச் சாரலும் ஒன்று தான். சத்தமே இல்லாத குகையினுள் செய்வதைப் போலவே சந்தடிமிக்க இடங்களிலும் அவர் ஆன்மானுபவத்தில் மூழ்கி இருப்பார். கண்களை மூடிக் கொண்டு, தம்முள்ளிருக்கும் தெய்வீகச் சாளரத்திலிருந்து, எங்கும் விரிந்துள்ள தமது ஆன்மாவைக் கண்டு எப்போதும் ஆனந்த நிறைவுடன் விளங்கு கிறார்.

நான் எனது கால்களிலும் இருக்கிறேன். கைகளிலும் இருக்கிறேன். அவற்றில் நான் எல்லா நேரங்களிலும், சரிசமமாக ஊடுருவி இருப்பது எனக்குத் தெரிகிறது. இவ்வாறு தெரிந்து கொண்டவுடன், என் கை கால்கள் சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்து போகின்றனவா என்ன? மறைவதாக யாராவது நினைத் தால் அது சுத்த பைத்தியக்காரத்தனம்; விஞ்ஞானத்திற்குப் பொருந்தாத கருத்து.

எனது உடலின் ஒவ்வொரு சிறு பகுதியிலும் நான் ஊடுருவி இருக்கிறேன். ஒவ்வொரு பகுதியின் மூலமும் அனுபவித்து மகிழ் கிறேன். விழித்திருக்கும் நேரமெல்லாம் இவ்வேலைகளை ஒரே சமயத்தில் செய்கிறேன். அவ்வாறே தமது ஆன்மா இப் பிரபஞ்சம் முழுவதும் விரவி இருக்கும் நினைப்பு ஞானிக்கு எப் போதும் இருந்து வருகிறது. ''தனிப்பெரும் ஒருமையாகவும், பன்மையாகவும்'' அவர் பரம்பொருளை உணர்வு மூலம் அறிந்து கொள்ளுகிறார்.

இவ் வாழ்க்கையில் தொடர்ந்து இறைவனை அறிந்து அனுப வித்துக் கொண்டிருப்பது எவ்வாறு என்பதே வேதாந்தம் விரித் துரைக்கும் கலை. ஏதோ தற்செயலாக ஒரு கணத்திற்கு அந்த

அனுபவம் ஏற்பட்டு மறைந்து போகாது. அந்தக் கணத்தை லட்டுக்கள் விநியோகித்துக் கொண்டாடிவிட்டு, பிறகு அதற்கும் தனக்கும் சம்பந்தமில்லாதது போல் வாழ்வது உண்மையான ஞானத்தின் அறிகுறியல்ல. கல்வி கற்றவனது அறிவு அவனை விட்டு நீங்குவதில்லை. வாழ்நாள் முழுவதும், எல்லா நிலைகளி லும்—கனவிலும் கூட—அது அவனிடமே இருக்கிறது. அதைப் போல, சொல்லப் போனால் ஒருவருடைய கல்வி அறிவை விட நெருக்கமானது அது. உறுதியுடன் ஆன்ம உணர்வு பெற்ற ஞானி ஆன்மாவாகவே ஆகிவிடுகிறார். அந்த நிலையிலிருந்து அவர் மாறுவதில்லை. ஐயப்பாட்டுக்கு இடமில்லாத இவ்வேதாந்த உண்மையை இந்தச் செய்யுளின் இரண்டாவது வரி பறை சாற்று கிறது. ''எல்லா உருவங்களிலும் உள்ள என்னை ஒருமையாகவும், தனிப் பொருளாகவும், திரும்பிய இடத்திலிருந்து எல்லாம் பார்க்கும் தன்மை பெற்றதாகவும் உணர்ந்து கொண்டு ஒவ்வொரு உருவத்திலும் அவர்கள் என்னை வழிபடுகிறார்கள்.''

இதுவரை நாம் சொல்லிவந்தவற்றை இச் செய்யும் உறுதிப் படுத்துகிறது. தியானத்தின் மூலம் மனம் பரிபூரண அமைதி பெறும்போது, ஒருவர் தூய ஆன்ம உணர்வு பெறுகிறார் என்பதில் சந்தேகம் இல்லை. களிமண்ணை அறிந்தவர் எல்லாப் பானைகளி லும் களிமண் இருப்பதைச் சுலபமாகத் தெரிந்து கொள்ளுகிறார். பானையின் உருவமோ, அளவோ, நிறமோ, அதிலுள்ள மண்ணின் தன்மையைப் பாதிப்பதில்லை. தனித்தனியாக ஒவ்வொருவரிலும் இருக்கும் ஆன்மா எல்லா உருவங்களிலும் ஊடுருவி நின்று, எல்லாப் பக்கங்களிலும் நோக்கிய வண்ணம் இருக்கிறது என்று கிருஷ்ணர் அழுத்தமாகக் கூறுவதன் பொருள் இதுதான். களி மண்ணின் இயல்பு, பானையின் அடியில் வலதுபுற ஓரத்தில் மட்டுமே இருக்கிறது என்று யாராவது சொன்னால், கேட்பவர்கள் கை கொட்டிச் சிரித்துவிட்டுப் போவார்கள். பானையில் அது ''எல்லாப் பாகங்களிலும் இருக்கிறது''. மண் இல்லையேல் பானை இல்லை. ஆன்மா இல்லையேல் வாழ்வின் பன்மைத் தோற்றம் பற்றிய உணர்வும் கூட அங்கு இருக்காது.

பல்வேறு உருவங்களிலும், எத்தனையோ வகைகளிலும் செய்யும் வழிபாடு ஒரே ஆன்ம வழிபாடாக எப்படி ஆகிறது?

*அஹம் க்ரதுரஹம் யக்ஞ: ஸ்வதாஹமஹ மௌஷதம்*
*மந்த்ரோஹமஹமே வாஜ்யம் அஹமக்னிரஹம் ஹுதம்*
**9:16**

நான் கிரது, நான் வேள்வி, பிதுருக்களுக்கு அளிக்கும் பிண்டம் நான், நான் மூலிகை, எல்லாத் தாவரங்களும் நான், நான் மந்திரம், நெய்யும் நானே, நான் அக்கினி, படையல்

பொருள்களும் நான்.

கீதைச் செய்யுள் ஒன்றில்* ஏற்கனவே கூறிய கருத்தை பகவான் இங்கு நினைவூட்டுகிறார். எல்லா இடங்களிலும், எல்லாச் செயல்களிலும் அவற்றின் மூல காரணங்களிலும் ஆன்மா உறைவது இங்கு வலியுறுத்தப்படுகிறது. சம்பிரதாய சடங்குகளைக் கொண்டது வழிபாடு. மகாபாரத காலத்தில், குறிப்பிட்ட சில ஹோமங்களைப் போன்ற வைதிகச் சடங்கு (யக்ஞம்)களுடனும் ஸ்மிருதிகளில் கூறப்படும் வேள்வி (யக்ஞம்) மூலமாகவும் அல்லது இறந்த மூதாதைகளுக்குப் பிண்டம் (ஸ்வதா) அளிப்பதன் மூலமாகவும் இறை வழிபாடு நடை பெற்றது. இவை எல்லாம் கூட ஒரு வகையில் ஆன்ம வழிபாடு தான் என்ற காரணத்தினால், இவற்றை அர்ஜுனனுக்குக் கிருஷ்ணர் விளக்குகிறார்.

இவை ஆன்மாவின் தலைமையில் நடத்தப்படுவது மட்டு மின்றி வேள்வியில் பயன்படுத்தும் மூலிகைகளிலும் (ஔஷதம்), ஹோமத்தில் இடப்படும் நெய்யும் (ஆஜ்யம்), படையல் பொருள் களும் (ஹுதம்) வேள்வித் தீயும் (அக்கினி) வேள்வி மந்திரங் களும் கூட ஆன்மாதான். தங்கத்தினால் எத்தனையோ வகை நகைகள் செய்கிறார்கள். அவற்றைப் பார்த்து, ''மோதிரம் நான், கழுத்துச் சங்கிலி நான். வளையல் நான். அதன் பளபளக்கும் பிரகாசம் நான். அதனதன் உருவத்திற்கும், பெருமைக்கும் நானே காரணமாக இருக்கிறேன்'' என்று தங்கம் கூறுவதில் என்ன தவறு? அதைப் போலவே எல்லா நிகழ்ச்சிகளிலும், நிலை களிலும் ஆன்மாவே இருந்து இயக்கம் அளித்து வருவதால் இச் செய்யுளை எல்லோரும் முழுமையாக ஏற்றுக் கொள்ளுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. மேலும்,

பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ:
வேத்யம் பவித்ரமோங்கார ருக் ஸாம யஜுரேவச 9:17

நான் இவ்வுலகத்தின் தந்தை, தாய், தாங்கிப் பிடிக்கும் ஆதாரம். நான் இவன் பாட்டன். அறிந்து கொள்ளவேண்டிய (ஒரே) பொருளாகவும், தூய்மை அளிப்பவனாகவும், ஓங்கார மாகவும், ரிக், ஸாம, யஜுர் ஆகவும் இருப்பவன் நான்.

ஆன்மா இனம் புரியாத ஏதோ ஒன்று என்றும், உணர்ச்சி, உறவுகளுக்கு அப்பாற்பட்டது என்றும் நினைத்துவிடக்கூடாது. ஆன்மாவின் சாராம்சமாகிய அன்பு எல்லா இடங்களிலும்

* கீதை, அத்தியாயம் 4, செய்—24

நிறைந்திருக்கிறது என்பதைக் காட்டுவதற்காக, உலக உறவு முறைச் சொற்கள் இங்கு கையாளப் பட்டிருக்கின்றன. ''இவ்வுலகின் தந்தை, தாய், காப்பாற்றுவோன், பாட்டன், தூய்மைப்படுத்துவோன் ஆகிய எல்லாமே நான்.''

''அறிந்து கொள்ள வேண்டிய ஓரே பொருள் நான்'' என்று செய்யுள் அழுத்தந்திருத்தமாகக் கூறுகிறது. எல்லா புனித நூல்களிலும் இது மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்படுகிறது. ''எதைத் தெரிந்து கொண்டால், மற்றவை தாமாகவே விளங்கிவிடுகின்றனவோ அதுவே ஆன்மா.'' முழுமை பெறவில்லை என்ற உணர்வு, அரை குறை வாழ்க்கை, கொடுந்துயரம் ஆகியவை எல்லாம் ஆன்ம ஞானம் பெற்றவுடன் தீயினிற் தூசாக கருகிவிடுகின்றன. நடமாடும் உடலாக வெறும் அகந்தை வாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பவர், தமது பிறப்புரிமையாகிய தெய்வ நிலையிலிருந்து தாமாகவே விலகி நிற்கிறார். இப்பேரானந்த நிலையை மீண்டும் கண்டு கொள்வதே வாழ்வின் சிறப்பான இலட்சியம். மலர்ந்த அறிவு அந்த இலட்சியத்திலேயே எல்லையற்ற அமைதியையும், அழிவிலா வாழ்வையும் காண்கிறது.

பிரபஞ்ச முழுவதற்கும் அடிப்படையான ஆன்மாவை ஓங்காரமென்ற வேத மந்திரத்தின் மூலம் இச்செய்யுள் குறிப்பிடுகிறது. வாழ்க்கையை விழிப்பு, கனவு, ஆழ்ந்த தூக்கம் ஆகிய நிலைகளில் பாய்ந்து செல்லும் ஒரு நீரோடையாகக் கருதுகிறார்கள். இந்த மூன்று நிலைகளுக்கும், அவற்றின் அனுபவங்களுக்கும் அப்பாற்பட்ட ஒன்றுதான் அவற்றின் அடிப்படையாக இருக்க முடியும். குதிரை வேறு, அதன் மீது சவாரி செய்பவர் வேறு. சோறும், வெண்கலப் பானையும் ஒன்றல்ல. அவை வெவ்வேறு பொருள்களாகத்தான் இருக்கமுடியும். அடிப்படை வேறு, அதன் மீது ஓடும் நீரோட்டம் வேறு.

இந்த நான்காவது நிலை மற்ற மூன்று சாதாரண உணர்வு நிலைகளை உள்ளடக்கியதாகவும், அவற்றிக்கு ஆதாரமாகவும் நம் ஒவ்வொருவரிலும் இருக்க வேண்டும். இதை 'துரிய நிலை' என்று உபநிடத முனிவர்கள் கூறுகிறார்கள். இந் நான்கு நிலைகளையும் சேர்த்துக் குறிப்பிடும் சின்னமே ஓங்காரம். பரம்பொருளை சுட்டிக்காட்டும் 'ஓம்', வழிபாட்டுத் தேவைகளை ஒட்டி, பாகவதத்தில் கிருஷ்ணரை—பரமாத்மாவை—குறிப்பிடும் சின்னமாகவும் இருக்கின்றது.

ஓங்காரம் மூலாதாரப் பொருளாகிய ஆன்மாவையே சுட்டிக் காட்டுகிறது. நிகரிலா இப்பேருண்மை பற்றி எல்லா வேதங்களும் நேரடியாகவோ, மறைமுகமாகவோ பேசுகின்றன. அதனால், ''நான் ரிக், ஸாம, யஜுர் வேதங்களாக இருக்கிறேன்'' என்று கிருஷ்ணர் இங்கு கூறுகிறார்.

கதிர்பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத்
ப்ரபவ: ப்ரளய: ஸ்தானம் நிதானம் பீஜமவ்யயம் 9:18

நான் இலட்சியம், ஆதாரமாகத் தாங்கி நிற்பவன், சாட்சி, உறைவிடம், தஞ்சம், நண்பன், தோற்றுவாய், அழிப்பவன், (எல்லாவற்றுக்கும்) அடிப்படை, கருவூலம், அழிவில்லா வித்து.

பன்மைத் தோற்ற உலகிற்குப் பின்னால் அதன் சாராம்சமாக இருக்கும் ஆன்மாவின் இயல்பு இங்கு மேலும் விவரிக்கப்படுகிறது. அறியாமையினாலும், நமது மருட்சிகளை மற்றவற்றின் மீது திணிக்கும் இயல்பினாலும் இவ்வுலகம் பன்மைத் தோற்றம் பெறுகிறது. பொருட் செறிவு மிக்க அற்புதச் சொற்களில் ஆன்மாவின் உண்மையான நிலையை எடுத்துரைத்து, பகவான் சாதகர்களுக்குப் பேருதவி புரிகிறார்.

நான் இலட்சியம் (கதி)—தேடிக்கொண்டிருக்கும் பேருண்மைப் பொருள் கிடைத்த பிறகு, தேடும் முயற்சியும் முடிவடைந்து விடுகிறது. கயிறைப் பார்த்து ஒருவன் பாம்பு என்று மருள்கிறான். அவனுடைய மருட்சி அகன்று, 'உண்மையில் அது ஒரு கயிறுதான்' என்ற உறுதி ஏற்பட்டாலொழிய அவனுடைய பரபரப்பு தீராது.துயரங்கள் நிறைந்த பன்மைப் பிரபஞ்சத்தின் அடிப்படையாக இருப்பதும் ஆன்மாவே. ஒருவர் ஆன்ம உணர்வு பெற்றவுடன், அவரை அழுத்திக்கொண்டிருக்கும் எல்லாச் சுமைகளிலிருந்தும் விடுதலை பெறுகிறார். ஆன்மானுபவம் பெற்றவருக்கு எல்லாமே தெளிவாகிறது. எனவே ஆன்மா 'இலட்சியம்' என்று இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆதாரமாகத் தாங்கி நிற்பவன் நான் (பர்த்தா)—கானல் நீரை பாலைவனம் தாங்கி நிற்கிறது என்று கூறலாம் அல்லவா? அவ்வாறே ஆன்மா எல்லாவற்றையும் தாங்கி நிற்கிறது. கேவலம் சத்து நிலையில், அது புலனறிவுக்குக்கூட ஒருவகை உண்மைத் தோற்றத்தை அளிக்கிறது. அதனால்தான் மாற்றவெள்ளமெல்லாம் .ஒருங்கிணையப்பெற்று, வாழ்க்கை நமக்கு ஒருமைத் தோற்றம் காட்டுகிறது. இவ்வாறு மாற்ற வெள்ளத்தைத் தாங்கி, அதற்கு ஒருமைத் தோற்றமளித்து நிற்பது தாமே என்று பகவான் கூறுகிறார்.

நான் பிரபு—மனத்தின் சலசலப்புக்களினால் ஆட்டம் போட்டு வரும் அரைகுறைத் தோற்றங்களுக்குக்கூட அருள் புரிவது தூய பேருணர்வாகிய ஆன்மாவேயானாலும், அதற்கும் வெளித் தோற்ற பிரபஞ்சத்தின் இன்ப துன்பங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. மின்சாரம் வெவ்வேறு கருவிகளில் பாயும் போது, தன் பெருமையை வெவ்வேறு விதமாகக் காட்டிச் செல்லுகிறது. ஆனால் எதிலும் தனது சொந்த இயல்பை அது

இழந்து விடுவதில்லை. அது தனது நிலையிலே இருந்து எல்லா வற்றையும் இயங்க வைக்கிறது.

நான் சாட்சி—கோடானுகோடி உருவ மாறுபாடுகளுக்கும், நிகழ்ச்சிகளுக்கும் தனித்தன்மை அளிப்பது அப்பரம் பொருளே என்றாலும், அது வெறும் சாட்சியாக இருக்கிறது. ஒரு நிகழ்ச்சி யில் கலந்து கொள்ளாமல் வெறுப்பு, விருப்பு எதுவுமின்றி அருகி லிருந்து அதைப் பார்க்க நேரிடும் ஒருவனை உண்மையான சாட்சி என்று சொல்லுகிறோம். ஒருவனுடைய கண்ணுக்கு முன்னால் ஒரு நிகழ்ச்சி நடக்குமானால் அதற்கு அவன் சாட்சியாகிறான். அறிவு, உடல், மனம் ஆகிய மட்டங்களில் நடப்பவைகளுக்கு ஆன்மா விருப்பு வெறுப்பின்றி ஒளி அளிக்கிறது என்ற பொருளில் வரையறைகளுக்கு உட்பட்டவைகளுக்கு வரையிலாதது சாட்சி என்று கூறப்படுகிறது.

நான் உறைவிடம் (நிவாசம்)—உண்மையே மற்றவை களுக்கு எல்லாம் இருப்பிடம். சாலை ஓரத்தில் ஒரு மரக்கம்பம் நட்டிருந்தார்கள். இரவில் அது சிலருக்கு பேயாகத் தோன்றிற்று. இரத்தம் குடித்த வாயுடன், கண்களில் தீப்பொறி பறக்க நின்று கொண்டிருக்கும் பேயாகத் தோன்றிற்று. அதைப் பார்த்துவிட்டு வந்த வேறு சிலர் ''சேச்சே, வெள்ளை வெளே லென்று ஆடையுடுத்து, நாங்கள் போக வேண்டிய வழியை கை நீட்டிக் காட்டிய நல்ல பேயல்லவா அது'' என்று சான்றிதழ் கொடுத்தார்கள். ஆகக்கூடி, எல்லோருமே தங்கள் தங்களு டைய மன மருட்சிகளை அந்த சாலையோரக் கம்பத்தின்மீது சுமத்தியவர்கள்தான். இவ்வளவு வகை உள்ளத்துடன் அந்த உறைவிடத்தைப் பார்த்தவர்களுக்கு வெவ்வேறு வகைப் பேயாகத் தோன்றி இருக்கிறது. அதைப் போல புலன்களும், உள்ளமும் எவ்வகைத் தோற்றத்தைப் பெறுகின்றனவோ, அவ் வகைத் தோற்றத்திற்கு ஆன்மா உறைவிடமாக இருக்கிறது. குறிப்பிட்ட அந்த அனுபவம் ஏற்படுவதற்கு ஆன்மா இடம் கொடுக்கிறது.

நான் தஞ்சம் (சரணம்)— மருட்சியிலிருந்து பிறப்பது துயரம், தெளிந்த அறிவிலிருந்து மகிழ்ச்சி தோன்றுகிறது. மருட்சி யினால் உருவாக்கப்பட்ட இப்பிரபஞ்சம் துக்க ஆலயமாக இருப்பதில் வியப்பில்லை. குழப்பத்தில் ஆழ்ந்த அகந்தை, சம்சாரக் கடலலைகளைக் கடந்து, அமைதி நிலவும் துறைமுகத்தை அடைய வேண்டுமென்றால் ஆன்ம அடிப்படையைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு மாறாக, அறிவு, மனம், உடல் ஆகிய கருவிகளின் மூலம், அந்த அலைகளின் ஆட்டத்தில் அகந்தையும், கலந்துகொண்டால், பயங்கரப் புயலில் சிக்கிக் கொள்ள வேண்டியதுதான். அகந்தை ஒரு சிறு படகு. அதைக் கவிழ்த்து, உடைத்தெறிவதற்கு ஆபத்துக்கள் நாற் புறங்களிலும் காத்துக்

கொண்டிருக்கின்றன. கருமேகத் திரைகள் மேலே குவிகின்றன. கீழே அலைகளின் வெறியாட்டம். சுற்றிலும் வீசும் பயங்கரப் புயலின் ஆர்ப்பாட்டம். இவைகளுக்கு நடுவில், படகிலுள்ள மாலுமியின் புகலிடம் ஒன்றுதான்— அமைதியும், பாதுகாப்பும் மிக்க ஆன்மாவே—அவனுக்குப் புகலிடம், தஞ்சம், சரணம்.

முற் கூறியவற்றை எல்லாம் சேர்த்துப் பார்க்கும்போது, இறைப் பொருள் என்பது வெளியாகாத ஒரு கருத்தின் பெயர் போலிருக்கிறது என்று சிலர் நினைத்து விடலாம். ''அது உயர்வு மிக்கதாக இருக்கலாம். ஆனால் எட்டிப் பிடிக்க முடியாத ஒரு முழுமை நிலை'' என்று சிலர் சோர்வடைந்து விடக்கூடும். அர்ஜுனனைப் போல் உணர்ச்சிவசப்பட்ட சாதகர்கள் இவ்வாறு எண்ணி தங்களுடைய முயற்சியைக் கைவிடக்கூடாது என்பதற் காக, நெருங்கிய நண்பனாக இருந்து எல்லாவற்றையும் நடத்தி வைக்கும் பரம் பொருளாகிய கிருஷ்ணர் மனிதாபிமானத்தைக் காட்டும் சொற்களில் தமது இயல்பை இப்போது வெளியிடு கிறார்.

நான் நண்பன் (சுஹ்ருதன்)— முடிவிலா இறைவன் முடிவுள்ள மனிதனின் நண்பன் ''அவரை எனக்குக் கொஞ்சம் தெரியும் பஸ்ஸுக்காக காத்துக்கொண்டிருக்கும்போது சிகரெட் பற்ற வைப்பதற்காக எனக்கு தீப்பெட்டி கொடுத்து உதவினார்'' என்ற அளவுக்குமட்டும் முகப் பரிச்சயம் உள்ளவர் அல்ல. மனிதனுக்கு மிக நெருங்கிய நண்பன் இறைவன். நமது நலத்திலும் பாதுகாப்பிலும் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருக்கும் நண்பன்.

தோற்றமும், முடிவும், அடிப்படையும், கருவூலமும் நான்— நகைகளில் எல்லாம் பொதுவாக இருக்கும் தங்கம் போலவும், எல்லாப் பானைகளிலும் விரவி இருக்கும் களிமண் போலவும் ஆன்மா பிரபஞ்ச முழுவதிலும் ஊடுருவி நிற்கிறது. ஆகையால் எல்லாப் பொருள்களும் வெளியாகா அப்பரம் பொருளில் இருந்து வெளியாகி, பிறகு மடிந்து மறையும்போது அந்த அடிப் படைப் பொருளுடன் ஒன்றாகி விடுகின்றன. அதனால் பரம் பொருளை கருவூலம் என்று குறிப்பிடுவது பொருத்தமானதே. இப் பன்மைத் தோற்ற உலகிலுள்ள எல்லாப் பெயர்களுக்கும் உருவங்களுக்கும் இயல்புகளுக்கும் கருவூலமாக விளங்குவது ஆன்மிகப் பொருள்தான் என்பது இதன் மூலம் சுட்டிக் காட்டப் படுகிறது.

நான் மாற்றமில்லாத விதை (பீஜம், அவ்யயம்)—இங்கு சொல்லப்படும் விதை மற்ற விதைகளிலிருந்து மாறுபட்டது. விதை அழிந்து அதிலிருந்து மரம் தோன்றுவதை நாம் உலகத்தில் பார்க்கிறோம். சம்சாரம் என்னும் மாபெரும் மரம் தோன்று

வதற்கு வித்தாக இருப்பது ஆன்மா. ஆனல் இந்த மரம் தோன்றும்போது ஆன்மவிதை அழிவதோ மாறுவதோ இல்லை. அழிவற்ற பொருள் தன்னைத் தானே மாற்றிக்கொண்டு வெளியுலகமாக மாறிற்று என்று நினைப்பது மனிதனுடைய சிந்தனை சக்தியையே அவமதிப்பதாகும். தத்துவ பூர்வமாகவே தவருகவுள்ள இந்தக் கருத்திற்கு வேதாந்தத்தில் இடமில்லை. இருமட்ட உண்மையை ஏற்கும் துவைத வாதிகள் இதை ஏற்க வேண்டியவர்கள் ஆகிருர்கள். ஏற்காவிட்டால் அவர்களுடைய வாதங்கள் எல்லாம் காகிதக் கப்பல் போல் காற்றில் பறந்து விடும்.

எளிய சொற்களைக் கொண்டு இறைவனின் தன்மையை இச் செய்யுள் விளக்குகிறது. சாதகர் இதில் கூறப்படும் ஒவ்வொன்றைப் பற்றியும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அவ்வாறு சிந்தித்து, தெளிவுபெற்ருல், உண்மையின் திருக்கோயில் வாயிலை சுலபமாக அடையலாம். மேலும்,

தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமிச
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச ஸதஸச்சாஹமர்ஜுன *9:19*

(சூரியனுக) நான் வெப்பம் தருகிறேன். மழையை அனுப்பு வதும் நிறுத்துவதும் நான். இறவா நிலையும், மரணமும் நான். இருப்பது, இல்லாதிருப்பது— இரண்டும் நானே, அர்ஜுனு.

நான் வெப்பும் அளிக்கிறேன்—

மின்சார அடுப்பிற்கு சூடும், பல்புக்கு வெளிச்சமும், குளிர் சாதனப் பெட்டிக்கு சீதளமும் அளிப்பது நான்தான் என்று மின் சாரம் சொல்லலாம் அல்லவா? அக்கருவிகள் ஒவ்வொன்றிலும் செல்லும் மின்சாரம் வெவ்வேறு விளைவுகளை ஏற்படுத்துகிறது என்ருலும், அவ்விளைவுகள் ஏற்படுவதற்குக் காரணம் மின் சாரமே. அவ்வாறே இருப்பது ஆன்மா ஒன்றுதான். நமது அனுபவத்திற்கு உட்பட்ட சூரியனில் இருந்துகொண்டு, அது பிரபஞ்ச முழுவதற்கும் வெப்பம் அளித்து வருகிறது.

அதை நிறுத்திக்கொண்டு மழையை அனுப்பிகிறேன்—

தற்கால வானிலை ஆய்வாளர்களுக்குமட்டுமின்றி நமது பழங்கால முனிவர்களுக்கும்கூட சீதோஷ்ண நிலை பற்றிய விவரங்கள் நன்ருகத் தெரியும். நமக்கு நன்மை வருவதும் தீமை வருவதும் சூரியனைப் பொறுத்தே இருக்கிறது என்று நமது முன்னேர் அறிந்திருந்தார்கள். உலகிலுள்ள ஜீவராசிகளின் அனுபவத்துறைகளில் எல்லாம் சூரியனின் ஆதிக்கம் இருக்கிறது. இப்போது இருப்பதைவிட அதிக வெய்யில் அடிக்கத் தொடங் கினல், நமது தாவர, விலங்கு இனங்கள் வேறு மாதிரி ஆகிவிடும்.

வெப்பம் குறைந்தால் உலகமே மாறிவிடும். வட துருவத்திலும், தென் துருவத்திலும் இருப்பவர்கள் பூமத்திய ரேகைப் பகுதியை நோக்கி கும்பல் கும்பலாக வரத் தொடங்கிவிடுவார்கள். அப்புறம் சொல்ல வேண்டியதில்லை. உலக மக்கள் எல்லாம் ஓரே பகுதியில் குவிந்து உணவுக்குத் திண்டாட வேண்டியதுதான்.

அமுதமும் மரணமும் நானே—

சுத்த உணர்வு நிலையிலுள்ள அகப்பொருளின் அருளின்றி எந்த அனுபவத்திற்குமே அர்த்தமில்லை. சாவை உண்மை அனுபவமாக்குவது உயிர்ப் பொறியாகிய ஆன்மா, அது மாற்றங் களுக்கு உட்படாதது, நிரத்தரமானது என்று தெரிந்து கொண்டவர் இறவா நிலை அடைகிறார். மாற்றமும் மரணமும் ஒன்றுதான். எனவே இங்கு கூறியுள்ள சொற்களுக்கு, ''ஆன்மா, மாறா நிலையில் இருந்துகொண்டு, மாற்றங்களுக்கு ஒளி அளித்து வருகிறது'' என்று பொருள் கொள்ளவேண்டும்.

இருப்பது, இல்லாதிருப்பது, இரண்டுமே நான்—

இருப்பது, இல்லாதிருப்பது ஆகிய இரண்டு நிலைகளையும் அனுபவிக்க வேண்டுமானால், இரண்டுக்கும் ஒளியளிக்கும் பொது வான ஒன்று இருக்க வேண்டும். அது சத்து, அசத்து ஆகிய இரண்டையும் தன்னுள் அடக்கியதாக இருக்க வேண்டும். இல்லாதிருக்கும் நிலையை நாம் முழுமையாக அனுபவித்துத் தெரிந்துகொள்ள முடியாது. ''இல்லா நிலையை அனுபவிக்கும் போது, ''இல்லாநிலையாக இருக்கும் ஒன்று'' என்ற முறையில் அதை அனுபவிக்கிறோம்.

இந்த மிக நுணுக்கமான தத்துவ விளக்கத்தைத் தவிர அச்சொற்களுக்கு எளிய விளக்கமும் இருக்கிறது. வேதாந்தத்தில் சத்து, அசத்து என்ற இரு சொற்களையும் காரணம், விளைவு வெளியாகாதது, வெளிப்படைத் தோற்றம் கொள்வது என்ற பொருளில் பயன்படுத்துகிறார்கள். ஆன்மாவின் அருளின்றி வெளியாகாததையோ (சிந்தனைகளையோ), வெளித் தோற்றம் கொண்டவற்றையோ (பொருள்களையோ) நாம் தெரிந்து கொள்ள முடியாது. வெளியாகாதவை, வெளியானவை ஆகிய இரண்டுக்குமே அடிப்படையாக உள்ளது நிரந்தர ஆன்மா. மண் இல்லாமல் பானைகள் இல்லை. மண் இருந்தால் எல்லாப் பானை களும் இருக்க முடியும். எனவே மண், ''அளவிலும், உரு வத்திலும், நிறத்திலும் எப்படியிருந்த போதிலும், அந்த சட்டி, பானைகள் அவ்வளவிலும் இருப்பது நானே'' என்று கூறலாம் அல்லவா?

சாதகர்கள் தங்கள் வாழ்நாளெல்லாம் தியான பீடத்தில் அமர்ந்து சிந்திக்க வேண்டிய அளவுக்கு இச்செய்யுளில் பொருள்

பொதித்து இருக்கிறது. பேச்சும் பெயர்களும் இல்லாத நிலையை எட்டுவதற்கு முன், இதைப் பற்றி சிந்தித்துத் தெளிவு பெறலாம்.

கோரிக்கைகளை மனதிற்கொண்டு இறைவனை வழிபடுபவர்களும் உள்ள நிறைவு பெறுகிறார்கள். அது எப்படி?

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யக்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே
தே புண்ய மாஸாத்ய ஸுரேந்த்ர லோகம்
அச்னந்தி திவ்யாந்திவி தேவ் போகான் 9:20

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி
ஏவம் த்ரயீதர்மமனுப்ரபன்னு
கதா கதம் காம காமா லபந்தே 9:21

20. மூன்று வேதங்களை அறிந்தோர், சோம பானம் செய்து பாவங்கள் நீங்கிய தூயவர்களாக, வேள்விப் படைப்புகள் அளித்து வழிபட்டு, சொர்க்க நிலை வேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள். அவர்கள் புனிதமான தேவ லோகத்தை அடைந்து, தெய்விக சுகங்களை அனுபவிக்கிறார்கள்.

21. விசாலமான விசாலமான சுவர்க்க லோக இன்பங்களை அனுபவித்து புண்ணியம் தீர்ந்த பிறகு, அவர்கள் பூவுலகிற்கு வருகிறார்கள். மூன்று வேதங்களில் கூறிய கட்டளைகளையும் நிறைவேற்றி, கோரிக்கைகளை வேண்டுவோர் 'போவதும் வருவதுமான' (சம்ஸார) நிலையை அடைகிறார்கள்.

மூன்று வேதங்களையும் கசடறக் கற்று, அவற்றில் விதிக்கப்பட்டுள்ள சடங்கு முறைகளை அறிந்தவர்கள், முறைப்படி வழிபாடுகள் செய்து, வேள்விப் படைப்புகள் அளித்து, சொர்க்க இன்பங்களை நாடுகிறார்கள். ''அவர்கள் சொர்க்கத்திற்குச் சென்று தேவர்கள் பெறும் இன்பங்களைப் பெறுகிறார்கள்.''

சோம பானம் என்பது வைதிகச் சடங்குகளில் பயன்படுத்தப்படும் ஒரு கொடியின் சாறு. பால் போல வெள்ளையாக இருக்கும். வேள்வி முடிந்த பிறகு, அதில் ஒவ்வொருவருக்கும் கொஞ்சம் கொடுப்பார்கள். எனவே 'சோம பானம் செய்து' 'வேள்விச் சடங்குகளை முடித்துவிட்டு' என்று பொருள் கொள்ள வேண்டும். இவ்வாறு சடங்கு முறைகளினால் அவர்கள் கோரிய இன்பங்களைப் பெறுகிறார்கள். ஆனால் அவற்றிக்கு முடிவு உண்டு. சொர்க்க இன்பங்களை அனுபவித்து ''அவர்களுடைய புண்ணியங்கள் தீர்ந்த பிறகு இந்த மரண உலகத்திற்கு அவர்கள் திரும்பி வருகிறார்கள்'' என்று கிருஷ்ணர் குறிப்பிடுகிறார்.

புத்திசாலிகள் முடிவடையும் இன்பங்களை நாட மாட்டார்கள். அவ்வாறு செய்பவர்களைப் பற்றி பகவானுடைய வெறுப்பு, அவருடைய வார்த்தைகளிலேயே தெரிகிறது. ''மூன்று வேதங்களில் கூறியுள்ள கட்டளைகளின்படி நடந்துகொண்டு, கோரிக்கைகளை வேண்டுவோர், மீண்டும் மீண்டும் வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள்'' என்று கூறுவது, அவருடைய வெறுப்பைக் காட்டுகிறது.

கோரிக்கைகள் எதுவுமின்றி இறைவனிடம் அன்பு செலுத்துவோர் நிலை என்ன?

அனன்யாஸ்சிந்தயந்தோமாம்
    யே ஜனா: பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபியுக்தானாம்
    யோகக்ஷேமம் வஹாம்யஹம் *9:22*

வேறு எவ்வித சிந்தனையுமின்றி, புலனடக்கத்துடன் என்னையே வழிபடுகிறவர்களுக்கு இல்லாததை அளிப்பதும் இருப்பதைப் பாதுகாப்பதுமான பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

ஆன்மிகத் துறையில் மட்டுமின்றி உலக நடவடிக்கைகளிலும் நிச்சயமாக வெற்றி பெறும் ரகசியம் இச் செய்யுளில் அடங்கியிருக்கிறது. கீதையில் இது ஏறக்குறைய மையச் செய்யுளாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.* ஆன்மிகத் துறையில் இது வெற்றிக்கு வழி காட்டுவதை விளக்கிவிட்டு, பிறகு உலக நடவடிக்கைகளிலும் வெற்றிப் பாதை வகுத்துத் தருவதை ஆராய்ந்து பார்க்கலாம்.

பிரபஞ்ச இயக்கத்திற்குக் காரணமாக இருக்கும் ஒரே பேருண்மைப் பொருள் என்ற முறையில் இறைவனை ஒருமுகமாக தியானித்து வழிபட்டு வந்தால், 'அவ்வாறு புலனடக்கம் பெற்றவர்களுடைய யோக, க்ஷேமப் பொறுப்புக்களை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்,' என்று வாக்குறுதி அளிக்கிறார். ஊக்கத்துடன் ஆன்மா ஈடுபாடு கொண்டிருப்பது யோகம். யோக நிறைவினால் வரும் மாபெரும் விடுதலையும், பேரின்ப அனுபவமுமே க்ஷேமம். ''நான் கூறிய முறையில் என்னை வழிபடு.

---

*கீதையில் 701 பாடல்கள் இருக்கின்றன. அவற்றில் இது 360வது செய்யுள். வகுத்தல் கணக்குப் போட்டுப் பார்த்தால் இது சரியான மையச் செய்யுள் அல்ல. ஆனால் மேடைகளில் பேசுவோர், இது நடுமையத்தில் உள்ள பாட்டு என்று சொல்லிச் சொல்லி, மக்களிடையிலும் அத்தகைய எண்ணம் நிலவி வருகிறது. ''ஏறக்குறைய நடுமையத்தில் உள்ள பாடல்'' என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும்.

மற்றவைகளை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்று கிருஷ்ணர் அழுத்தமாகக் கூறுகிறார்.

உலக வாழ்வில் வெற்றி பெறும் இரகசியமும் இதில் பொதிந்திருக்கிறது. ஒருவர் எந்த வேலை செய்தாலும், அதில் முழுமையாக லயித்து, சிந்தனைகளை வெவ்வேறு பிரச்னையில் சிதற விடாமல், முழு மூச்சாக உழைத்து வந்தால் அவருக்கு வெற்றி கிடைப்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் இப்படி ஒரே குறியாக வேலை செய்வதற்கு பலரால் முடியாது. குறிப்பிட்ட ஒரு வேலையைத் தொடங்குவார்கள். அதைச் செய்து வரும்போது திடீரென்று வேறு ஒன்று தோன்றும். செய்து கொண்டிருப்பதை அரைகுறையாக நிறுத்திவிட்டு, புதிதாகத் தோன்றியதைச் செய்யத் தொடங்குவார்கள். இப்படி அவர்களுடைய இலட்சியமே கணத்திற்குக் கணம் மாறுவதால் அவர்கள் எதிலும் வெற்றி பெறுவதில்லை. சஞ்சல உள்ளம் படைத்தவர்கள் எந்தத் துறையிலும் முன்னேற முடியாது.

சிந்தனை ஒரு மாபெரும் உருவாக்க சக்தி. இந்த அடிப்படை உண்மையை பெரும்பாலோர் மறந்து விடுகிறார்கள். அதைவிடப் பெரிய தவறு வேறு எதுவும் இல்லை. நடவடிக்கைகளின் தீவிரம் அவற்றின் அடிப்படையிலுள்ள வேகத்தைப் பொறுத்திருக்கிறது. போதிய சிந்தனையும், ஈடுபாடும் இல்லை என்றால், செய்யும் வேலையில் வெற்றி பெற வேண்டும் என்ற துடிப்பு குறைந்து விடும். அப்புறம் அந்த வேலை எப்படி சிறப்பாக இருக்கும்? இருக்காது. குறிப்பிட்ட இலட்சியத்திற்காக ஒருவர் பணிபுரிகிறார் என்றால், அவருடைய சிந்தனை அவ்வளவும் அதையே நோக்கி ஆவேசத்துடன் பாயவேண்டும். கொஞ்சம்கூட அப்படி இப்படி திரும்பக் கூடாது.

ஆனால் சிந்தனை மட்டும் இருந்தால் போதாது. அவற்றை நடைமுறையில் கொண்டு வருவதற்கு அயராத உழைப்பும் தேவை. தற்கால இளைஞர்களில் பெரும்பான்மையானவர்களுக்கு அறிவு மட்டத்தில் இலட்சியத் தெளிவு இருக்கிறது. அதை நிறைவேற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை உறுதியாக மேற்கொள்ளுவதில்லை. இங்கு பயன்படுத்தியுள்ள 'உபாசனை' என்ற சொல்லுக்கு 'வழிபாடு' என்று அர்த்தம். வழிபாடுகள் மூலமாக ஒரு தேவதையை—குறிப்பிட்ட துறையின் பயன் கொடுக்கும் சக்தியை—ஆராதிக்கிறோம்*. 'உபாசனை' என்ற சொல்லுக்கு 'பரி' என்ற பகுதியும் இங்கு சேர்க்கப் பட்டிருக்கிறது. மேற்கொண்ட நோக்கம் நிறைவேறுவதற்கு,

---

* எந்தப் பணியை மேற்கொண்டாலும் அதை வேள்வி உணர்ச்சியுடன் செய்ய வேண்டுமென்று 4வது அத்தியாயத்தில் விளக்கி இருப்பது காண்க.

முழு முயற்சியுடன் வேலை செய்ய வேண்டும் என்பதை அது சுட்டிக்காட்டுகிறது. செய்யாத முயற்சி இனி எதுவும் பாக்கி யில்லை என்று சொல்லும் அளவுக்கு தீவிரமாக வேலை செய்ய வேண்டும்.

வெற்றியின் அத்தியாவசிய நிபந்தனைகளில் இரண்டு இது வரை வலியுறுத்தப்பட்டிருக்கின்றன. 1. ஒருமுகமான மன உறுதியும், சிந்தனையும் 2. தனது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்குத் தேவையான தளரா முயற்சி. அதாவது எவ் வகை இடையூறு வந்தாலும் அதை எதிர்த்துப் போராடி சமாளிப்பதற்கு வேண்டிய மனோ திடம். 3. இவற்றைத் தவிர, சுய கட்டுப்பாடு அவசியமென்றும் வலியுறுத்தப்படுகிறது. எடுத்துக்கொண்ட வேலையில் முழு வெற்றியும், பயனும் கிடைப் பதற்கு சுயகட்டுப்பாடு அவசியம்.

இலட்சியம் ஒன்றையே கருதி, போர்க் களத்தில் நிற்கும் வீரனைப் போல எல்லா எதிர்ப்புக்களையும் சமாளித்து முன்னேறுகிறவருக்கு வெற்றி நிச்சயமாகக் கிடைக்கும் என்ற கருத்து இச் செய்யுளில் இருக்கிறது. ஒருவர் செயல் புரியும்போது அவரை திசை திருப்புவதற்கும் பல நிகழ்ச்சிகள் தோன்றலாம். ஆனால் அவற்றில் கவனத்தைச் செலுத்தினால் அவருடைய சக்தி வீணாகி எடுத்த காரியத்தை முடிக்க முடியாமல் ஓய்ந்துபோய் விடு வார். முன்னேறுகையில் இவ்வாறு திசை திரும்பிவிடக் கூடாது என்பதற்காகத்தான் சுய கட்டுப்பாடு, புலனடக்கம், இங்கு வலி யுறுத்தப் பட்டிருக்கிறது.

தம்மிடம் இல்லாத ஒன்று கிடைக்கப் பெறுதல் யோகம் என்றும், பெற்றதைக் காப்பாற்றி வைத்துக்கொள்ளுதல் க்ஷேமம் என்றும் சங்கரர் தமது விளக்க உரையில் பொருள் கூறுகிறார். ** உலக மட்டத்தில் இதுவரை நாம் கூறிவந்த நிலவரத்திற்கும் இது பொருந்தும். உலகில் எத்தனையோ போராட்டங்களும், போட்டிகளும், துயரங்களும் வருகின்றன. அவை வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு உருவங்களில் வரலாம். ஆனால் அவை எல்லாவற்றையும் கச்சிதமாக பின்கண்ட இரண்டு தலைப்புக்களில் பிரித்துவிடலாம்— 1. ஏதோ ஒரு பயனை அடைய வேண்டும் என்பதற்காக நடக்கும் போராட்டங்கள். 2. கிடைத்ததை நழுவவிட்டுவிடக் கூடாது என்பதற்காக நடக்கும் முயற்சிகள். வாழ்க்கையில் நிலவும் அமைதி, மகிழ்ச்சி ஆகியவற்றை இந்த இரண்டும் தவிடுபொடியாக்கி விடுகின்றன.

---

** 'யோக: அப்ராப்தஸ்ய ப்ரபன்னம்: க்ஷேம தத் ரக்ஷணம்' என்று சங்கரர் கூறுகிறார். தம்மிடம் இல்லாதது கிடைக்கப் பெறுதல் யோகம்; ஏற்கனவே கிடைத்ததை பாதுகாத்தல் க்ஷேமம்.

இந்த துடிப்புகள் இல்லாதவர்களே அதிருஷ்டசாலிகள் என்று சொல்லலாம். ஏனெனில் பெறவேண்டியவற்றை எல்லாம் பெற்றுவிட்டார்கள் அவர்கள். ஒருவருடைய வாழ்க்கையில் மேற்கூறிய துடிப்புகள் அறவே இல்லை என்றால், இந்த துயர உலகத்தைக் கைவிட்டு, அழிவிலா ஆனந்த மிக்க உலகத்தை அவர் எட்டியவர் ஆகிறார்.

வெற்றியின் அத்தியாவசிய நிபந்தனைகள் மூன்றையும் கடைப்பிடித்து வருபவர்கள், தங்களிடம் இல்லாததைப் பெற வேண்டுமே, இருப்பதைப் பாதுகாக்க வேண்டுமே என்று கவலைப் படவேண்டியதில்லை. ஏனென்றால் அந்த இரு பொறுப்புக்களையும் தாம் பார்த்துக் கொள்ளுவதாக பகவான் வாக்குறுதி அளிக்கிறார். உலக மட்டத்தில் பேசும்போது, ''பகவான் வாக்குறுதி அளிக்கிறார்'' என்பதற்கு, ''பன்மை மிகு உலகத்திற்கும், அதன் நிகழ்ச்சிகளுக்கும் அடிப்படையாக உள்ள 'விதிமுறை' அவ்வாறு வாக்குறுதி அளிக்கிறது'' என்று பொருள் கொள்ளலாம். உயர்ந்த மட்டத்திலுள்ள வயலுக்குத் தானாகப் பாய்கிறது. அது 'இயற்கையின் விதி.' அதைப் போலவே உடல், மனம், அறிவுத் துறைகளைப் பொறுத்த மூன்று மாபெரும் விதிகளையும் நிறைவேற்றி ஒருவன் தனது வேலையை சிறப்புறச் செய்து வந்தால், வெற்றி தானாகவே வரும். அவன் வேண்டாமென்றால்கூட வெற்றி அவனை விடாது தொடர்ந்து வரும். சூழ்நிலையை வென்ற அதிபதி அவன்.

எல்லைக்கு உட்பட்ட சிறு பயன்களைக் கருதி அவற்றின் அதிபதிகளாக உள்ள தெய்வங்களை சிலர் வழிபட்டுக்கொண்டு நிற்கிறார்கள். இவ்வாறு தவறு செய்பவர்கள் பற்றி அடுத்து கூறப் படுகிறது.

யேப்யன்யதேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயான்விதா:
தே பி மாமேவ கௌந்தேய பஜந்த்ய விதி பூர்வகம் *9:23*

குந்தியின் புதல்வனே, நம்பிக்கையுடன் மற்ற தெய்வங்களை வணங்கும் பக்தர்களும் என்னைத்தான் வழிபடுகிறார்கள். (ஆனால்) தவறான முறையில் வழிபடுகிறார்கள்.

உலகத்திலுள்ள அவ்வளவு பேரும் ஒரே கோயிலில் போய்க் கடவுளை வணங்க வேண்டுமென்றால், அது நடக்காத காரியம். அப்படிச் செய்வதற்கு அங்கு இடம் போதாது. மனதிலும் திருப்தி இருக்காது. ஏனெனில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் வழிபட விரும்புகிறார்கள். அவர்கள் எல்லோரையும் ஒரே கோயிலுக்குப் போகச் சொல்லுவதைப் போன்ற முட்டாள் தனம் வேறில்லை.

தாம் விரும்பும் தெய்வத்தை ஒருவர் வணங்கும்போது, படைப்புக்கு அடிப்படையாக உள்ள உயிரியக்கப் பொருளேயே வணங்குகிறுர். பலர் பற்பல தெய்வங்களைத் தொழுகிறுர்கள். அவர்களுடைய பக்தி ஆழ்ந்த நம்பிக்கையிலிருந்து பிறந்ததாக இருந்தால், அவர்களும் ஒன்றே ஒன்ருகத் திகழும் அழிவிலா மெய்ப்பொருளேயே தொழுகிறுர்கள். தங்களுக்குச் சரி என்று தோன்றும் முறையில் அதைச் செய்கிறுர்கள். இரண்டாவது எதுவுமில்லாமல், ஒன்றே ஒன்று என்ற நிலேயில் திகழும் தனிப் பெரும் பொருளே இறைவன். முக்காலங்களிலும் மாருது இருப் பவர் அவர். இதை ஒப்புக்கொள்ளுகிறவர்கள் கோடானு கோடி நாம ரூபங்களுக்கு இடையிலும், பொதுவாக இருக்கும் ஆன்மப் பேருணர்வு ஒன்றுதான் என்பதை ஏற்றுக்கொள்வார்கள். கடந்த காலத்தில் பல முனிவர்கள், ஞானிகள், தீர்க்கதரிசிகள், அவதாரங்கள் மூலமாக அந்த உணர்வு வெளியாகி இருக்கலாம். ஆனுல் ஒன்றே ஒன்ருக விளக்கும் மெய்ப் பொருளே அவ்வாறு தன்னே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது என்பதில் சந்தேக மில்லே.

இந்து தத்துவம் விசால நோக்கு உடையது. எல்லேயற்று எல்லாவற்றிலும் ஊடுருவி உயர்ந்து நிற்பதே மெய்ப் பொருள் என்று உணர்ந்துள்ள ஒரு மதம் வேறு வகையாக இருக்க முடியாது. குறிப்பிட்ட ஒரு தீர்க்கதரிசியை கடவுளாக்கிக் கும்பிடுகிறவர்களுக்கு இதைப் போன்ற பரந்த மனப்பான்மை வராது. இந்துக்களில்கூட ஒருவகை வழிபாட்டில் செய்பவர்களே மிகக் கீழ்த்தரமாகப் பேசித் தாக்குகிறுர்கள். இது அநாகரிகம், வெறுக்கத்தக்க வெறி, தரக்குறைவான போக்கு. இந்து சாத்திரங்களில் அதற்கு இடமில்லே. நமது பண்டைகால முனிவர் களின் புனிதமான கலாச்சார மரபில் வருபவர்கள் அப்படிச் செய்யமாட்டார்கள்.

கிருஷ்ணர் விசால உள்ளமும், எல்லேயற்ற அன்பும் கொண்டு ''தவருன வழிபாட்டு முறையில் ஈடுபட்டவர்களாக இருந்த போதிலும்கூட, அவர்களும் என்னே வணங்குபவர்களே'' என்று அறிவிக்கிறுர்.

உலக நடவடிக்கைகளின் மட்டத்தில் இதற்குப் பொருள் கூறுவதானுல் ''ஆன்மிகப் பேரானந்தத்தைவிட நாம் அடையக் கூடிய பெரும்பயன் வேறு இருக்க முடியாது. அது நிலேயான பயன். அதைக் கைவிட்டு, நிலேயற்ற, தற்காலிக இலாபத்திற் காக பலர் அந்தந்த இலாபத்தின் அதிபதிகளே வணங்குகிறுர்கள். ஆனுல் தவருன முறையில் வழிபாடு செய்கிறுர்கள்'' என்று பொருள் கூறலாம்.

புலனின்ப நாட்டத்திலேயே வாழ்க்கையைக் கழித்துக்

கொண்டிருப்பவர்கள் செல்வத்திற்காகவும், மற்ற பொருள்களுக்காகவும் தங்களுடைய ஆன்மிக சக்தியை ஆராதிக்கிறார்கள். ஆன்மாவின் ஆதரவின்றி நல்லதோ, கெட்டதோ எதையும் செய்ய முடியாது. ஒருவர் தற்கொலை செய்துகொள்ள முற்படும் போதுகூட அவர் தம்முள் இருக்கும் உயிர்ப் பொருளின் சக்தியைத்தான் உபயோகிக்கிறார். கத்தியை எடுப்பதற்கும், நெஞ்சில் பாய்ச்சிக் கொள்ளுவதற்கும் சக்தி கொடுப்பது அகப் பொருளே அல்லவா? ஆனால் அந்த சக்தியை அவர் தவறாகப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்.

இந்த செய்யுளில் ''தவறான முறையில் வணங்குகிறார்கள் என்றால் என்ன அர்த்தம்? இவ்வகை வழிபாடு கடைசியில் சாதகர்களை துயரப் படுகுழியில் தள்ளிவிடும் என்பது கருத்து. ஆன்மாவின் இயல்பாகிய முழு ஆனந்தத்திற்கு பதிலாக அனாத்மாவின் இருள் மிகுந்த படுகுழியில் யாராவது விழுவார்களா?

அவர்கள் பின்பற்றும் வழி 'விதி முறைகளுக்குப் புறம்பானது' என்று எப்படிச் சொல்லலாம்?

அஹம் ஹி ஸர்வயக்ஞானாம் போக்தா ச ப்ரபுரேவச
ந து மாமபிஜானந்தி தத் வேனாதஸ்ச்யவந்தி தே

*9:24*

(ஏனெனில்) எல்லா வேள்விப் படைப்புகளை அனுபவித்து மகிழ்பவனும், வேள்விகளின் தலைவனும் நான்தான். ஆனால் எனது சாராம்ச நிலையை அவர்கள் தெரிந்துகொள்வதில்லை. ஆகையால் அவர்கள் வீழ்ச்சியடைகிறார்கள். (தோன்றி மறையும் இவ்வுலகிற்கு திரும்பி வருகிறார்கள்).

எல்லா வேள்விகளிலும் சடங்குப் படைப்புகளை 'அனுபவிப்பதும், அவ் வேள்விகளுக்குப் பிரபுவாக இருப்பதும் ஆன்மாதான். குறிப்பிட்ட ஒரு உருவில் அதனுடைய ஒரு சிறப்புச் சக்தி தோன்றுகிறது. மற்றொரு பகுதியாக ஆராதிக்கும் போது வேறு ஒரு சிறப்பு தோன்றுகிறது. ஒவ்வொரு சிறப்பும் ஒரு தனிப்பட்ட தேவதை என்று நினைத்து வேள்வியில் ஈடுபடுவோர் பற்பல பண்டங்களைப் படைத்து தங்களுக்குத் தேவையான முறையில் அருள் பெறுவதற்கு அந்தந்த தேவதைகளை ஆராதனை செய்கிறார்கள். பரிபூரண நம்பிக்கையுடனும் பக்தியுடனும் செய்யும் வேள்விகளில் ஆராதிக்கப்படும் தேவதைகளுக்குப் பின்னாலிருப்பது ''மாறாப் பேருண்மையாகிய நான்தான்.'' அவ்வழிபாடு ஆலயம், மாதா கோயில், மசூதி போன்ற எந்த இடத்தில் நடந்தாலும் அதை ஏற்பது ஆன்மா. ஆனால் ''எனது இயல்பில் ஒரு குறிப்பிட்ட சிறு பகுதியையே'' அவர்கள் வேண்டு

கிறுர்கள். ஆன்மாவாக எல்லேயில்லா மாண்புடன் நான் திகழ்வது அவர்களுக்குத் தெரியாது. எனவே ஒன்றன்பின் ஒன்ருக பல வழிபாட்டு முறைகளேப் பின்பற்றி மருட்சிக் குழப்பங் களில் சிக்கிக் கொள்ளுகிறுர்கள்.

இது உலக வாழ்வுக்கும் பொருத்தமாக இருக்கிறது. மக்கள் முயற்சி செய்யும் (வேள்வி செய்யும்) எல்லாத் துறைகளிலும், வரையறைக்கு உட்பட்ட ஏதோ சிறு சிறு இலாபங்களேக் கருதி செயல்புரிகிறுர்கள். தங்களுடைய உண்மையான ஆன்மிக இயல்பைக் கண்டு கொள்ளும் முறையில் அவர்கள் முயற்சி செய்வதில்லே. புலன் இன்ப மலேச் சரிவில் தடுக்கி விழுந்து, மிருக நிலேக்குப் புரண்டு வந்து, மனிதன் என்ற பெயருக்கே அவர்கள் அவமானத்தைத் தேடி வைத்து விடுகிறுர்கள். பரிபூரண மகிழ்ச்சி யும், அமைதியும், திருப்தியும் நம்முள் இருக்கின்றன; இலாபமும், வெற்றி பெருமை, புகழ் போன்ற புறவெளிகளில் இல்லே. அகத் துறையிலுள்ள இந்த நிரந்தரமான இலாபத்தை மறந்து, ஆயிரமாயிரம் கோரிக்கைத் தேள்களிஞல் கொட்டப்பட்டு, போகுமிடம் தெரியாது நாற்புறங்களிலும் ஓடுகிறுர்கள். இதஞல் தங்களுக்கும் ஏற்படும் துயரமும், குழப்பமும் ஒருபுறமிருக்க, சாலேயில் செல்லும் வழிப்போக்கர்களுக்கும் அவர்கள் இடைஞ்சல் செய்கிறுர்கள். சற்று நிதானமாக அமர்ந்து, தங்களுடைய செயல்களே மதிப்பிடத் தெரியாதவர்கள், தங் களுடைய பலவீனங்களே வளர்த்துக் கொள்ளுகிறுர்கள். அதைப் போன்ற ஒரு தலேமுறையே தோன்றிவிடுகிறது. அக்காலத்திய வரலாறு சிதைந்து பாழடைந்த உலகத்தையும், போர்களிஞல் பெருக்கெடுத்து நிற்கும் கைம்பெண்களேயுமே படம் பிடித்துக் காட்டுவதாக இருக்கும். ''அவர்கள் இத்துயர உலகத்திற்கு திரும்பி வருகிறுர்கள் (ச்யவந்தி தே)''.

யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ரூன் யாந்தி பித்ருவ்ரதா:
பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜிஞே பி மாம்
9:25

தேவர்களே வழிபடுகிறவர்கள் தேவர்களிடம் செல்கிறுர் கள். பிதுருக்களே ஆராதிப்பவர்கள் அவர்களேச் சென்று அடைகி றுர்கள். பூதங்களே பூசனே செய்வோர் பூதங்களிடம் (மூலாதாரப் பொருள்களிடம்) போகிறுர்கள். என்னே வணங்குகிறவர்கள் என்னிடம் வருகிறுர்கள்.

ஒருவர் ஒன்றைப் பற்றி சிந்தித்துக்கொண்டே இருந்தால் கடைசியில் அவர் அதுவாகவே ஆகிவிடுகிறுர். அவருடைய சிந்தனேகளுக்கு திட்டவட்டமான உருவம் வந்து விடுவதுடன், சிந்திப்பவரின் இயல்பையும் அது வருங்காலத்தில் உருவாக்கு

கிறது. இது சாதாரணமாக எல்லோருடைய வாழ்க்கையிலும் நடைபெறக் கூடிய ஒன்று. இந்த உளவியல் விதியை ஆன்மிகத் துறையில் கொண்டுவந்து, ''தேவர்களைப் பற்றி சிந்திப்போர் தேவர்களாக ஆகிறார்கள்'' என்றும், முன்னோர்களையும், பூதங் களையும் தொழுபவர்கள் அவ்வவ்வாறு ஆகிறார்கள் என்றும் கிருஷ்ணர் தெரிவிக்கிறார். ஒரே குறியாக அவர்கள் நீண்டகாலம் அந்தந்த நோக்கங்களில் மூழ்கி விடுவதால், கருத்தில்கொண்ட நோக்கமாக அவர்கள் மாறிவிடுகிறார்கள்.

இவ்வுலக அனுபவங்களை ஏற்கும் புலனுறுப்புகளை, இந்நூல் 'தேவர்கள்' என்று குறிப்பிடுவது பற்றி ஏற்கனவே விளக்கப் பட்டிருக்கிறது. ஒரு பணி செய்ய உதவியாக இருக்கும் கருவியின் பெயரைச் சொல்லி, அந்தப் பணியையே குறிப்பிடுவது மொழி வழக்கு. 'கத்தியைவிட இலக்கியத்தின் மூலம் பெறும் வெற்றி நிலையானது' என்று பொருள் கூறுகிறோம் அல்லவா? இந்த அனுப விக்கும் எல்லா அனுபவங்களையும் மொத்தமாகக் குறிப்பிடுவ தாக வைத்துக் கொள்ளலாம். இன்பம் வேண்டும், வெற்றி வேண்டும் என்று ஆர்வத்துடன் இடைவிடாது, நாடிய வண்ணம் இருப்பவர்களுக்கு, அவர்கள் கோருவது கிடைக்கிறது.

பிதுருக்கள் என்றால் முன்னோர்கள் என்று அர்த்தம். மூதாதையரின் ஆதரவாளர் யார்? நமது முன்னோரின் புனித மரபையும் கலாச்சாரத் தூய்மையையும் விரும்புகிறவர்கள்; அதையொட்டி நடந்துகொள்ள விரும்புகிறவர்களே மூதாதையரின் ஆதரவாளர். இந்திய ஆன்மிக மரபையொட்டி வாழ்க்கை நடத்துவதற்கு முயற்சிப்பவர்கள், தமது இடையறு முயற்சியின் காரணமாக முழுமையின் எழிலும் தூய்மைப் பொலிவும் மிக்க நல்வாழ்வு பெறுகிறார்கள்.

ஆன்மிக நோக்கங்கள் ஒரு புறமிருக்க, உலகத்தில் விஞ்ஞான ஆராய்ச்சி அதிகரிக்கப் போகிறது என்றும், இயற்கை யின் ரகசியங்கள் எதிர்காலத்தில் வெளியாகலாம் என்றும் நமது முனிவர்களுக்குத் தெரியும். தீவிர சோதனைகளின் மூலம் மனிதன் அறிவை வளர்த்துக் கொள்ளுகிறான். ''பூதங்களை வழிபடுபவர்கள்'' என்று இங்கு குறிப்பிட்டிருப்பது அவர்களைத் தான். விஞ்ஞான ஆராய்ச்சியின் பயனாகக் கிடைத்த முடிவுகளைத் திரட்டி, பாகுபடுத்தி இப்போது பௌதிகம், ரசாயனம், உயிரியல், பொறியியல், அரசியல், சமூக இயல், வரலாறு போன்ற பல பிரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்கையை ஆராய்ந்து, அக் காலத்தினர் செய்த முடிவுகள் அதர்வண வேதத்தில் இடம் பெற்றிருக்கின்றன. கிருஷ்ணர் இப்பாடலில் கூறும் உளவியல் தத்துவம் மனித முயற்சியின் எல்லாத் துறைகளுக்கும் பொருத்த மானது. ஒருவர் எந்தத் துறையில் ஊக்கம்காட்டி உழைத்து வந்த

போதிலும், அவருக்குக் கிடைக்கும் வெற்றி அவர் காட்டும் ஊக்கத்தைப் பொறுத்து இருக்கிறது.

இடைவிடாது தேவர்களைத் துதிப்போர் தேவர்களையும், முன்னோர்களைத் தொழுவோர் முன்னோர்களுடைய பண்பாட்டையும், அறிவைக்கொண்டு ஆராய்ச்சி செய்வோர் இயற்கையின் ரகசியங்களையும் பெறுவதைப் போல், ''என்னை வழிபடுவோர் என்னை அடைகிறார்கள்'' என்று கிருஷ்ணர் கூறுகிறார். ஆன்மாவின் இயல்பு பற்றி ஒருமுகமான தியானத்தில் ஆழ்ந்திருக்கும் ஒருவர் நாளடைவில், அழிவோ மாற்றங்களோ இல்லாத ஆன்மாவும், தாமும் ஒன்றுதான் என்று தெரிந்து கொள்ளுகிறார். வேதாந்தத் துறையில் உள்ள பல ஆரம்ப நூல்களில், ஒரு அகந்தை இடைவிடாது ஆன்ம வழிபாடு செய்து கடைசியில் ஆன்மாவாக மாறுவதைக் காட்டுவதற்கு, குளவி ஒரு புழுவைக் கொட்டிக் கொட்டி, கடைசியில் குளவியாக மாற்றும் உதாரணத்தை எடுத்துக் கூறுவார்கள்.*

ஞானத்தை மட்டுமின்றி விஞ்ஞானத்தையும் கீதை எடுத்துரைக்க விரும்புகிறது. மிகச் சாதாரணமான இந்தச் செயல் முறையைப் பின்பற்றினால், மிக உயர்ந்த சாதனையைச் செய்து முடிக்கலாம் என்று கூறுவதே இந்தச் செய்யுளின் நோக்கம். விஞ்ஞானம், கலாச்சாரம் போன்ற எந்தத் துறையாக இருந்தாலும், அதில் மேற்கொண்ட ஒரு வேலையை முழு மூச்சுடன் இடைவிடாது செய்து வந்தால் அதில் அவர் வெற்றி பெறுகிறார். அதைப் போலவே அகத்துறையிலும், அதில் மேற்கொண்ட ஒரு வேலையை முழு மூச்சுடன் இடைவிடாது செய்து வந்தால் அதில் அவர் வெற்றி பெறுகிறார். ஆன்மிகத் துறையிலும் தளரா உறுதியுடன் தொடர்ந்து தியானம் செய்து வந்தால் ஒருவர் நிச்சயமாக வெற்றி பெறுவார். அவ்வாறு கூறுவதற்குக் காரணம் என்ன என்பது இச்செய்யுளில் விளக்கப்பட்டிருக்கிறது.

ஆழ்ந்த ஈடுபாடுகொண்டு, மனப்பூர்வமாக வழிபட்டு வருவதால்மட்டும் இங்கு கூறியுள்ள வெற்றி கிடைத்துவிடுமா? வேதங்கள் கூறும்—கட்டளையிடும் என்று கூடச் சொல்லாம்—விரிவான சடங்கு முறைகளைச் செய்ய வேண்டியது அவசியம் அல்லவா? இப்பிரச்னைக்கு பின்வருமாறு பதில் அளிக்கப்படுகிறது.

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி
ததஹம் பக்த்யுப ஹ்ருதம் அச்னாமி ப்ரய தாத்மன: 9:26

பக்தியுடன் இலை, பூ, கனி, நீர் போன்ற ஏதோ ஒன்றை

* ப்ரமர கீட நியாயம்.

யார் கொடுத்தாலும் தூய உள்ளத்துடனும் பக்தியுடனும் கொடுக்கப்படும் அதை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்.

இறைவனுக்குக் காணிக்கை செலுத்துவதை ஏற்றுக் கொள்ளாத மதம் உலகத்தில் இல்லை. எல்லா மதங்களும் அதை ஆதரிக்கின்றன. இன்றைய உலகில் கல்வி கற்றவர்களுக்கு இது கொஞ்சம் ஆச்சரியமாக இருக்கிறது. எந்த மதமாக இருந்த போதிலும் எல்லையற்ற பரம்பொருளுக்கு சிறு பொருள்களை அளிப்பது எதற்காக என்பது அவர்களுக்கு விளங்கவில்லை. கோயிலில் விளக்குக்குக் கொஞ்சம் எண்ணெய் அல்லது மெழுகு வர்த்தி, அவர் இருக்க ஒரு வீடு—ஆலயமோ, மாதா கோயிலோ, மசூதியோ ஏதோ ஒன்று—இதெல்லாம் எதற்காக? இவ்வாறு குழம்பிய நெஞ்சமே அவர்களுடைய அறிவுக்கு நஞ்சூட்டுவதால், கோயில்களை எல்லாம் மருத்துவமனைகளாகவோ, பள்ளிக் கூடங்களாகவோ, பைத்திய ஆஸ்பத்திரிகளாகவோ, பிரசவ விடுதிகளாகவோ ஆக்கி விடலாமே என்ற வெட்கங்கெட்ட ஆலோசனைகளை வெளியிடுகிறார்கள்.

[இதை ஏன் ஆதரிக்கக் கூடாது என்று எனக்குக்கூட அவ்வப் போது தோன்றுகிறது. இன்றைய சமுதாயத்தில் ஆரோக்கிய மாக இருப்பவர்களைவிட நோயாளிகளே அதிகமாக இருக் கிறார்கள். மக்கள் பெருக்கம் எண்ணிப் பார்க்க முடியாத அளவை எட்டிக் கொண்டிருக்கிறது. எழுத்தறிவை விடதப்பும் தவறுமாகப் புரிந்துகொள்ளச் செய்யும் கல்வி முறையே பரவி வரு கிறது. சரியான புத்தியுள்ளவர்களைவிட பைத்தியக்காரர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும் போலிருக்கிறது. உடல், மனம், அறிவு ஆகியவை எல்லாம் அழுது வடிந்துகொண்டிருக்கும் ஒரு சமுதாயம் காமத்திலும், உணர்ச்சிக் கொதிப்புக்களிலும் ஆழ்ந்து கிடக்கும்போது, அதற்கு கோயில்கள் எதற்கு? பெரும் பான்மையானவர்கள் மிருக வாழ்வு நடத்துகிறார்கள் என்றால் ஒரு சமூகத்திற்கு இன்னும் அதிக மருத்துவமனைகளும், பிரசவ விடுதிகளும், ஆரம்பப் பள்ளிகளும், எல்லாவற்றையும்விட பைத்திய ஆஸ்பத்திரிகளுமே உடனடித் தேவை என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் உலகம் இன்னும் பாழ்நிலையின் அடி மட்டத்தைத் தொட்டு விடவில்லை. நல்லறிவும், ஆரோக்கிய மான மனப் போக்கும் அங்கங்கே காணப்படுகின்றன. இவை இருக்கும் வரை கோயில்களுக்கும் வழிபாடுகளுக்கும் தேவை இருந்து வரும். கடவுளின் இல்லங்களில் கட்டிடத்தின் அழகோ, சடங்குகளின் செயலாக்க முறையோ, செல்வக் கொழுப்பின் சின்னங்களோ, பக்தர்களின் கியூ வரிசையின் நீளமோ முக்கிய மில்லை. கோயில்களின் முக்கியத்துவத்தை அவை எடுத்துக் காட்டவில்லை.

பிரபஞ்சத்தின் பிரவுக்கு நாம் அளிக்கும் தேங்காய் பழங்களைப் போன்ற பொருள்கள் ஒரு பொருட்டு அல்ல. மதிப்பு

அந்தப் பொருள்களில் இல்லை. அவற்றை அளிக்கத் தூண்டும் அன்பையும், ஈடுபாட்டையுமே கடவுள் ஏற்கிறார். கொடுப்பது ''இலை, பூ, கனி, நீர்'' போன்ற சிறு காணிக்கையாக இருக்கலாம். அல்லது பொற்கோயிலாக இருக்கலாம். ''நிறைந்த பக்தியுடன் யார் எதைக் கொடுத்த போதிலும் அதை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்,'' என்று பிருந்தாவனத்துப் பெருமகன் உறுதியளிக்கிறார். அன்புடன் அளிக்கும் எதுவும் ஒப்பற்ற பரிசாகிறது. 'தூய்மையான உள்ளம்' படைத்த சாதகர் மனப்பூர்வமாகக் கொடுக்கிற பரிசை பகவான் ஏற்றுத்தான் ஆகவேண்டும்.

இப்பாடலில் மிக கவனத்துடன் சொற்கள் தேர்ந்தெடுத்து வைக்கப்பட்டிருக்கின்றன. இறைவனுக்கு அளிக்கும் படைப்புகளைப் பற்றி மதங்கள் கூறுவதன் கருத்து இதில் அடங்கியிருக்கிறது. வரையறைகளுக்கு உட்பட்ட மனிதன் அளிக்கும் பொருள்களினால் எங்கும் நிறைந்துள்ள பரம்பொருள் புதிதாக நிறைவு பெற்றுவிடப் போவதில்லை—அல்லது அதன் பெருமையை தாங்கிப் பிடிக்கப் போவதில்லை—அல்லது இவ்வுலகம் என்ற கடவுளின் நந்தவனத்திலிருந்து நாம் தவறாக எடுத்துக்கொண்ட ஒன்றை அவருக்கே சமர்ப்பிக்கப் பார்க்கிறோம். ஒரு பூங்காவில் காதலர்கள் அமர்ந்திருக்கிறார்கள். காதலன் மெதுவாக அப்பூங்காவிலிருந்து ஒரு மலர் கொய்து காதலியின் முடியிற் சூடி மகிழ்கிறான். அதுபோல இறைவனுக்குச் சொந்தமான இப்பரந்து விரிந்த பூங்காவிலிருந்து ஏதோ ஒன்றை எடுத்து இறைவனுக்கே சமர்ப்பிக்கிறான் பக்தன். இதை நாம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் கடவுளுக்கு நாம் ஏதோ சமர்ப்பிக்கிறோம் என்று நினைப்பதில் சத்துமில்லை, சாரமும் இல்லை.

ஆயினும் இவ்வாறு நிவேதனம் செய்வது முக்கியம் என்று எல்லா மதங்களும் கூறுகின்றன. கடவுளுக்குப் பூவோ, பழமோ சமர்ப்பிக்கும்போது, அதை ஒரு சேவையாக பக்தன் நினைத்தால், அந்தச் செயல் தவறு ஆகிறது. பூ ஒரு ஸ்பூன் மாதிரி. சாப்பிடும் போது ஒருவர் ஸ்பூனில் உணவை எடுத்து வாய்க்கு அனுப்புகிறார். சாப்பாடு முடிந்த பிறகு ஸ்பூன் அவருடைய தட்டில் அப்படியே இருக்கிறது. அதன் வேலை முடிந்துவிட்டது. தோட்டத்திலோ, கோயிலிலோ உள்ள பூக்களும் அங்கேயே இருக்கின்றன. பக்தர் அவற்றைக் கொய்து கோயிலுக்குக் கொண்டுபோய் சமர்ப்பிக்கும்போது, தமது அன்பையும், ஈடுபாட்டையும் இதயக் கோயில் இறைவனுக்கு அவர் அப்பூக்களின் மூலம் அனுப்பி வைக்கிறார்.

இக்கருத்து, ''தூய உள்ளத்தோடு அளிக்கப்படும் அந்தப் பரிசை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்'' என்று கூறும் பகவானுடைய சொற்களில் தெளிவாகிறது.

மொத்தத்தில் நாம் சமர்ப்பிப்பது பயனுள்ளதாக ஆக வேண்டுமென்றுல் அதற்கு இரண்டு நிபந்தனைகள் இங்கு கூறப் பட்டுள்ளன. 1. பக்தியுடன் சமர்ப்பிக்க வேண்டும் 2. தூய உள்ளத்துடன் அது சமர்ப்பிக்கப்பட வேண்டும். இந்த இரண்டும் இல்லை என்றுல் நாம் சமர்ப்பிப்பது எல்லாம் வீண். மூடநம்பிக் கையை வளர்க்கும் சம்பிரதாயச் செயல்கள். சரியான முறையில் செய்தால், ஆன்மிகத் துறையில் சுய முன்னேற்றம் அடைவதற்கு அதுவே நல்ல சாதனமாகிறது.

யத்கரோஷி யதச்ஞஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத்
யத் தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம்

9:27

நீ எதைச் செய்தாலும், எதை உட்கொண்டாலும், எதை வேள்வி செய்தாலும், எதைக் கொடுத்தாலும் எவ்விரதத்தை மேற்கொண்ட போதிலும், எனக்கு சமர்ப்பிப்பதாக நினைத்துச் செய், கௌந்தேயா.

வாழ்க்கையே ஒரு வேள்வியாக, வாழ்க்கையில் செய்யும் ஒவ்வொரு வேலையும் இறைவனுக்கு அளிக்கும் ''வேள்விப் படையலாக'' நாம் வாழ முடியும். நாம் செய்யும் வேலையைவிட அந்த வேலையை நாம் எந்த மனப்பான்மையுடன் செய்கிறோம், எந்த நோக்கத்துடன் பணி புரிகிறோம் என்பதுதான் மிக மிக முக்கியமானது என்று கீதை எண்ணற்ற தடவைகள் எடுத்து ரைத்து வற்புறுத்துகிறது. பொதுவாக சாதகர்கள் இதை மறந்து விடுகிறுர்கள்.

நாம் பெறும் உணர்ச்சிகளையும், அவை செயலில் எவ்வாறு வெளிப்படுகின்றன என்பதையும் கவனித்தால் இது நன்றுகத் தெரியும். உடல், மனம், அறிவு, போன்ற எந்த மட்டத்தில் செயல்புரிந்தாலும், அவை 'இறைவனுக்கு நாம் சமர்ப்பிக்கும் மனமார்ந்த படைப்பு'க்கள் ஆகின்றன. இது நாமாகக் கற்பனை செய்து கொள்வதோ அல்லது மிகைப்படுத்திக் கூறுவதோ அல்ல. ஒருவர் இதைத் தமது வாழ்க்கையில் அமுல் நடத்துவது கஷ்டமும் இல்லை. ஒன்றே ஒன்றுகத் திகழும் ஆன்மா எல்லா இடங்களிலும் எல்லோரிடமும் இருக்கிறது. குரு, பக்தன், பக வான், எல்லோரிலும் விளங்குவது ஆன்மாவேதான், நாம் ஒவ் வொருவரும் நாம ரூபங்களுடன் உள்ள மற்றவர்களுடன் செயல் களின் மூலம் உறவு கொள்ளுகிறோம். அதுதான் வாழ்க்கை. அவர்கள் எல்லோரையும் மனிதர்களாக நடமாடச் செய்வது ஆன்மா என்பது நமக்குத் தெரிகிறது. உலக நடவடிக்கைகளில் ஆன்ம நினைவுடன் செயல்படுவது இப்பிரபஞ்சத்தின் மூலாதாரப் பொருளை நினைவுகொண்டு இயங்குவதாகும். ஒரு ஜவுளிக்

கடைக்குள் சென்றால் பருத்தியினால் செய்த எத்தனையோ வகை யான ஜவுளிகளைப் பல நிறங்களில் பல வித வேலைப்பாடுகள் கொண்டவற்றை நம்முன் எடுத்து வைக்கிறார். அவை எல்லா வற்றிலும் பொதுவாக இருப்பது பருத்திதான் என்பதை அவர் மறப்பதில்லை. அப்படி இருப்பதுதான் அவருக்கு நல்லது. அது நினைவில் இல்லை என்றால் கம்பளித் துணியின் விலையை இதற்குச் சொல்லிவிடக் கூடும். 'இதற்கா இவ்வளவு விலை' என்று நினைத்து அதை வாங்க வருகிறவர் வாங்காமலே போய்விடுவார். கடைக் காரருக்கு அது நஷ்டம். வாடிக்கைக்காரர்களை அவர் இழந்து விடுகிறார். அல்லது அது சணலால் செய்தது என்று நினைத்து மலி வாக கோணிப் பையின் விலை சொல்லுகிறார் என்று வைத்துக் கொள்ளுவோம். அதிக விலையுள்ள பொருளை குறைந்த விலைக்கு விற்றால், பிறகு கடையை மூடிவிட வேண்டியதுதான். ஒவ்வொரு பொற்கொல்லரும் தாம் தங்க வேலை செய்து கொண்டிருப்பதை நினைவுகொண்டிருப்பது அவருக்குத்தான் நல்லது.

எல்லாப் பருத்தி ஆடைகளிலும் பருத்தி இருப்பது போல, எல்லா தங்க நகைகளிலும் தங்கம் இருப்பது போல எல்லா நாம ரூபங்களிலும் ஆன்மா சாராம்சப் பொருளாக ஊடுருவி நிற் கிறது. ''எல்லா உலக உறவுகளிலும் நான் ஆன்மாவுடன் தொடர்பு கொள்ளுகிறேன்'' என்ற இடையறா நினைப்பு ஒரு சாத கருக்கு இருப்பது அவசியம். இவ்வுலக வாழ்வுக்கு நாம் எந்த அளவு மரியாதை தருகிறோமோ, அந்த அளவுக்குத்தான் அது நமக்கு மரியாதை தரும் என்பது வாழ்க்கையின் விதி. மகிழ்ச்சி யுடன் வாழ்க்கையை ஏற்றுக்கொள்ளுங்கள். வாழ்க்கை உங் களுக்கு மகிழ்ச்சியைத் தரும். வாழ்க்கையைப் பார்த்து சலித்துக் கொள்ளுங்கள், அது உங்களுக்கு அலுப்பையும் சலிப்பையும் தான் அளிக்கும். வாழ்க்கை முழுவதுமே தெய்வத்தின் சாராம்ச மாகக் கருதி மரியாதையுடனும், கௌரவத்துடனும் அணு குங்கள். வாழ்க்கையும் உங்களுக்கும் கௌரவமும், மரியாதையும் அளிக்கும்.

தான் செய்யும் எல்லா வேலைகளுமே வேள்விப் படைப்பு என்ற உணர்ச்சியுடன் ஒருவன் வேலை செய்து வந்தால், அவன் உள்ளத்தில் இறையன்பு பெருகுவது மட்டுமின்றி, அவனுடைய வாழ்வுக்கு ஒரு புனிதத் தன்மையும் வருகிறது. தெய்விக நோக்கு கொண்டு எல்லாப் பணிகளையும் செய்து வருகிறான். ஒரே குறியான உள்ளத்துடன், ஆன்மாவைப் பற்றி இடையறாது சிந்தித்த வண்ணம் எல்லா வேலைகளையும் செய்து வருமாறு கீதை மீண்டும் மீண்டும் அழுத்திச் சொல்லுகிறது. அந்த நோக்குடன் இச் செய்யுளைப் படிக்கும்போது ஒரு இரகசியம் தெரிய வருகிறது இறைவனுடைய நினைவு நம் உள்ளத்தில் இருந்துகொண்டி" வேண்டுமானால் அதற்கு நாம் காட்டுக்கு ஓட வேண்டி"

இருண்ட குகைக்குள் போய் உட்கார்ந்து கண்களை இறுக்கி மூடிக் கொள்ள வேண்டியதில்லை. வாழ்க்கைப் போராட்டங்களின் மையத்தில் இருந்துகொண்டே இறைவனை நம்முள் காணலாம். அதற்கான வழியைத்தான் இப்பாடல் நமக்கு சுட்டிக் காட்டு கிறது.

எல்லா நடவடிக்கைகளையும் வேள்விப் படைப்பாகக் கருதி நடத்தும் தூய வாழ்க்கையினால் என்ன பயன் கிடைக்கிறது?

சுபா சுப பலைரேவம் மோக்ஷ்யஸே கர்ம பந்தனை:
ஸன்யாஸ யோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி
*9:28*

இப்படியாக நல்லது கெட்டது என்ற ''பலன்''களைத் தருகின்ற செயல்வினைத்தளைகளிலிருந்து விடுபட்டு, துறவு—யோகத்தில் லயித்தவனாக, விடுதலை பெற்று நீ என்னை வந்து அடைவாய்.

ஆன்மிக இலட்சியம் ஒன்றேயானாலும், அதை அடையும் தெய்வீகப் பாதைகள் வெவ்வேறு. அவை மிகவும் மாறு பட்டவைகளாகத் தோன்றிய போதிலும், அவை ஒவ்வொன்றும் விஞ்ஞான அடிப்படையில் அமைந்தவை. எல்லாமே சரியானவை. பல இடங்களில் இந்த அடிப்படையை கீதை நேரடி யாக மாணவர்களுக்குக் கூறியிருக்கிறது. சில இடங்களில் மறைமுகமாகவும் குறிப்புணர்த்தியிருக்கிறது. கவனமாகப் படித் தால், மறைமுகமாகச் சொல்லியிருக்கும் இடங்களில்கூட இக் கருத்து நன்கு வெளியாகும். வேள்வி உணர்ச்சியுடன் செயல் புரிந்து வரும் ஒருவர், இவ் வாழ்க்கையிலேயே ஒப்புயர்வற்ற முழு மையை அடைய முடியும். தியான முறையும், வேள்வி நோக்கும் இவ்வாழ்விலேயே ஒருவர் முழுமை பெற முடியுமென்று உறுதி கூறுகின்றன. அது எப்படி என்பதைப் பற்றி இப்போது நாம் விவாதித்துக் கொண்டிருக்கிறோம்.

அகந்தையின்றி ஒருவர் செயல்புரியும்போது, அது நல்லதாக இருந்தாலும் கெட்டதாக இருந்தாலும்—அச் செயலின் விளைவு கள் (வாசனைகள்) அவரைச் சென்று அடைவதில்லை. ஏனெனில் அந்த வாசனைகளை ஏற்று இன்பமோ, துன்பமோ அனுபவிக்கக் கூடிய ஒன்று அகத்திலிருந்து புறப்பட்டு ''வெளியூர் போய் விட்டது.'' பொதுவாக ஒரு வேலையைச் செய்விப்பது அகந்தை; செய்யும் வேலைகளின் விளைவுகளை ஏற்பதும் அதுதான்.

எனவே, ''நல்லது, கெட்டது என்ற செயல் வினைத்தளைகளி லிருந்து நீ விடுதலை பெறுவாய்'' என்று பகவான் கூறுகிறார். புதிய செயல்களின் விளைவுகள் மனதில் சென்று மேலும் வாசனைத் தடங்களை ஏற்படுத்த வகையில்லாமல் போகிறது. பழைய

வாசனைகளோ நாம் பற்றற்று இப்போது இயங்கி வரும்போது கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து மறைகின்றன. வாசனைகளே இல்லாத நிலையை நமது உள்ளம் எட்டத் தொடங்குகிறது. இதைத்தான் சாத்திர நூல்கள் ''உள்ளம் தூய்மை அடைகிறது'' என்று கூறுகின்றன.* தூய்மை பெற்ற மனம், ஆழ்ந்த ஒருமுக மான கவனத்தை இலட்சியத்தில் செலுத்தும் ஆற்றல் பெறு கிறது.

இவ்வாறு மனத் தூய்மை பெற்றவர் தமது விவேக சக்தி மேலும் மேலும் பெருகி வருவதைக் காண்கிறார். அதன் விளை வாக சன்னியாச, வாழ்க்கை நடத்தத் தொடங்குகிறார். இந்த இரண்டு சொற்களையும் கீதை கூறும் பொருளில் தெரிந்து கொள்ள வேண்டும். இச்சொற்கள் மிக விரிவாக ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கின்றன. சன்னியாசம் அல்லது துறவு என்றால் காட்டுக்குப் போவது என்று அர்த்தமில்லை. 1. அகந்தைமைய நடவடிக்கைகளை அறவே விட்டு ஒழிப்பது 2. செயல்களின் பலனை அனுபவிக்கத் துடிப்பதைக் கைவிடுவது—இவற்றையே சன்னியாசம் என்று கீதை கூறுகிறது. உலகத்தில் ஊக்கத்துடன் உழைப்பதன் மூலமாக இறைவனிடம் தமக்குள்ள ஈடுபாட்டைக் காட்ட நினைக்கும் ஒருவருக்கு மேற்கூறிய இரண்டும் சுலபமாக வரும். ஏனெனில் எல்லா விளைவுகளையும், பயன்களையும் அவர் தமது எளிய 'காணிக்கை'யாக இறைவனுக்கே சமர்ப்பித்து விடு கிறார்.

கீதை கூறுகிற முறையில் சன்னியாச வாழ்க்கை நடத்தி விவேகத்தின்மூலம் பரிபூரண மனத்தூய்மை பெற்றவருக்கு யோகம் இயற்கையாகவே வந்து விடுகிறது. செயல்புரியும் நேரமெல்லாம் அவர் ஆன்மாவின், எல்லையற்ற பரம் பொருளின் நினைவாகவே இருப்பதால் யோக நிலை தானாக அவருக்கு வரு கிறது.

இவ்வளவு நாட்கள் தம்மைத் தவறான பொருட்களுடன் இணைத்துக் கொண்டிருந்தது அவருக்குத் தெரிகிறது. தாம் வரை யறைகளுக்கு உட்பட்டிருப்பதாகவும் மரணத்தையும் துன்பங் களையும் அனுபவிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றும் நினைத்ததெல்லாம் தவறு என்பது தமது தெய்விக இயல்பை உணர்த்தும் அவருக்கு விளங்குகிறது.

'பயிற்சியினாலும், துறவினாலும் நீ விடுதலை அடைந்து, என்னிடம் வந்து சேருகிறாய்.'

---

* வாசனைகள் குறையக் குறைய மனச் சல சலப்புகள் குறைகின்றன. சிந்தனை சலசலப்பு மிகக் குறைவாக உள்ள மனம் தூய்மை பெற்றமனம் என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட மனம் உறுதியான ஒரு முக தியானத்தில் ஈடுபட முடியும்.

துறவினாலும், பயிற்சியினாலும் சாதகர் பரம்பொருளை அடைகிறார் என்றால், ஆன்மாவின் இயல்பு என்ன?

ஸமோஹம் ஸர்வ பூதேஷு
நமே த்வேஷ்யோ ஸ்தி ந ப்ரிய:
யே பஜந்தி து மாம் பக்த்யா
மயி தே தேஷு சாப்யஹம் 9:29

எல்லா உயிரினங்களும் எனக்கு ஒன்றுதான். வெறுப்புக்குரியவர், அன்புக்குரியவர் என்று எனக்கு யாருமில்லை. ஆனால் ஆழ்ந்த ஈடுபாடுகொண்டு என்னை வழிபடுகிறவர்கள் என் உள்ளேயே இருக்கிறார்கள். நானும் அவர்களுள் இருக்கிறேன்.

எல்லோரிலும் உள்ள ஆன்மா ஒன்றே ஒன்றுதான். எல்லா உயிரினங்களின் உணர்ச்சிகளையும், சிந்தனைகளையும் ஒளி பெறச் செய்யும் உணர்வுத் தத்துவம் அதுவே.

''நான் எல்லா உயிரினங்களிலும் இருக்கிறேன்.''

உலகிலுள்ள எல்லாவற்றிற்கும் ஒளி அளிக்கும் சூரியன் ஒருவனே. மங்கிக் கிடக்கும் பொருளாக இருந்தாலும், கரடு முரடான குன்றுகளாக இருந்தாலும், பளபளவென்று பிரகாசமாக இருக்கும் நகைகளாக இருந்தாலும் எல்லாமே வேறுபாடின்றி அதே கதிரவன் ஒளி பெற்று விளங்குகின்றன.

''வெறுக்கத் தக்கவர், அன்புக்குரியவர் என்பதெல்லாம் எனக்குக் கிடையாது''

கிருஷ்ணர், புத்தர், சங்கரர், ஏசுநாதர் இவர்கள் எல்லோரிலும் திகழும் ஆன்மா ஒன்றுதான். பைத்தியக்காரனிடமும் கொலைகாரனிடமும், கெட்டவனிடமும் நல்லவனிடமும் அந்த ஆன்மாவே இருக்கிறது என்றால், அதன் தெய்விகப் பெருமை சிலர் மூலமே வெளியாவதும், மற்றவர்கள் புழுக்களைப் போல் உழலுவதும் ஏன்? இறைவன் அருளால் சிலரிடம் தெய்விகத் தன்மை மேலோங்கி விளங்குகிறது என்று பக்தி முறையை அடிப்படையாகக் கொண்ட சில நூலாசிரியர்கள் எழுதுகிறார்கள். அவர்களைப் பொறுத்தவரை அந்தக் காரணம் திருப்திகரமாக இருக்கலாம். மதப் பிரச்னைகளில் ஞானத்தைவிட பக்திக்கு அவர்கள் முக்கிய இடம் கொடுப்பதால் அவ்வாறு எழுதுகிறார்கள். ஆனால் இந்த மாதிரி விளக்கங்களைப் படிக்கும்போது, இறைவன் சிலரிடம் பாரபட்சமாக நடந்து கொள்ளுவதைப் போன்ற கருத்து வந்துவிடுகிறது. அறிவுக்கு அது அசட்டு வாதமாகத் தோன்றுகிறது. இக்குறைபாடுகளுக்கு இடமில்லாதவாறு, கிருஷ்ணர் தமது விஞ்ஞான பூர்வமான

கருத்தை வெளியிடுகிறார். 'ஆன்மாவுக்கு நல்லவனும் இல்லை, கெட்டவனும் இல்லை. இப்படைப்பில் ஒருவரிடம் அன்பும், மற்றொருவரிடம் வெறுப்பும் ஆன்மாவுக்குக் கிடையாது என்று பகவான் கூறுகிறார்.

இப்படிச் சொல்லியவுடன் ஆன்மா வெறும் கட்டையைப் போல உணர்ச்சிகளோ, அருள் புரிந்து உதவும் இயல்போ இல்லாதது என்று நினைத்துவிடக் கூடாது. இதற்கு சூரிய ஒளி உதாரணத்தை எடுத்துக் கொண்டால் இங்கு கூறுவது தெளிவாகும். எத்தனையோ வகையான பொருள்கள் மீது சூரிய ஒளி படுகிறது. மங்கலான ஒரு கல் மீது விழுந்தால், பிரதிபலிப்பதும் குறைவாக இருக்கும். சுத்தமான கண்ணாடி மீது விழுந்தால், பிரதிபலிக்கும் ஒளி கண்ணைப் பறிப்பதாக இருக்கும். அதற்காக கண்ணாடி மீது சூரியனுக்கு அன்பு பொங்குகிறது, சொறசொறப்பான கல் மீது வெறுப்பு என்று சொல்லுவார்களா? சொல்ல மாட்டார்கள்.

இது அகத்துறையிலும் பொருந்தும். ஆன்மிக அழகும் உறுதியும் பெரும்பாலோருடைய இரும்பு உள்ளங்களில் பிரதிபலிப்பதில்லை. பொன் உள்ளம் படைத்த வெகு சில நல்லவர்களுடைய உள்ளங்களிலேயே பிரதிபலிக்கிறது. உடனே ஆன்மாவுக்கு சிலரிடத்தில் அன்பும், சிலரிடத்தில் வெறுப்பும் இருக்கிறது என்ரு அர்த்தம்? இல்லை. அது ஒரு இயற்கையான நிகழ்ச்சி. பிரபஞ்ச விதிகளுக்கு உட்பட்டு நடந்து கொண்டிருக்கும் ஒன்று.

முதலாவது வரியைப் படிக்கும்போது ஆன்மாவுக்கும் ஆன்மா அல்லாத மற்றவைகளுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லாதது போலத் தோன்றுகிறது. ஆனல் அடுத்த வரியில் நெஞ்சை அள்ளும் கருத்து ஒன்று திடீரென்று மின்னல் அடித்ததைப் போல் வெளியாகிறது. அது முரண்பாட்டு அணியைப் பயன்படுத்தி, வாசகர்களைத் திணற அடித்து விடுகிறது. 'ஈடுபாடு கொண்டு என்னை வழிபடுகிறவர்கள் என் உள்ளேயே இருக்கிறார்கள். நானும் அவர்களுக்குள் இருக்கிறேன்.

''ஆன்மா அல்லாதவற்றிற்கு ஆன்மா ஆதரவு அல்லது வெறுப்புக் காட்டுவது இல்லை என்றாலும் அனாத்மா தன்னை ''ஈடுபாட்டுடென் வழிபடும்போது'' அது ''என்னுள் இருக்கின்றது; நான் அதில் இருக்கிறேன்'' என்று பகவான் கூறுகிறார்.

''பிசாசு அந்த மரத்தில் இருக்கிறது; மரமும் பிசாசில் இருக்கிறது'' என்று சொன்னல், அடிப்படைக்கும் அதன் மீது நாம் சுமத்தும் மற்றொன்றுக்கும் வேறுபாடு இல்லை என்று பொருள். ஆன்மாவை வழிபடுகிறவர்கள் தாங்களே அந்த ஆன்மா என்று கண்டு கொள்ளுகிறார்கள். ஒருவன் பேயைப் பார்க்கும் போது

கூட, உண்மையில் மரத்தைத்தான் பார்க்கிறுன். மரம்தான் நிரந்தரமான உண்மை. அதன் மீது ''உண்மையற்ற'' பேய் தோற்றத்தை மருட்சியுற்றவன் சுமத்துகிறுன்.

என்னை பக்தியுடன் வழிபடுகிறவர்கள்—

வைதிகச் சடங்குகளைச் செய்யும் முறை பற்றிக் கூறுகின்ற சொற்களாக இவை முதலில் தோன்றும். ஆனுல் இதிலுள்ள ஆன்மிக முக்கியத்துவத்தைத் தெரிந்து கொள்வதற்கு, இக் கருத்தை ஆழ்ந்து நோக்கி, சிந்திக்க வேண்டும். வழிபடுதல் என்பது ஒருவர் கையாளும் முறை—தொழுபவர் தம்முடைய சிந்தனை சக்திகளை எல்லாம் ஒன்று திரட்டி, தெய்வ தியான இலட்சியத்தில் நிலைநாட்டும் நுட்பமுறை. தாமும், தாம் நாடும் பேருண்மைப் பொருளும் இரண்டறக் கலந்து விட வேண்டும். என்பதற்காக நடக்கு முயற்சி அது. ஈடுபாடும் அன்பும் கொண்டு அவ்வாறு செய்தால் ஒருவர் இலட்சியத்துடன் முற்றிலும் கலந்து விடுகிறுர். *

இந்த அர்த்தத்தை நினைவு கொண்டு, இப் பாடலை மறுபடி படித்தால், கிருஷ்ணர் கூறும் தத்துவம் மிகத் தெளிவாகத் தெரிய வரும். பேருண்மைப் பொருளுக்கு யார் மீதும் வெறுப்புமில்லை, விருப்புமில்லை என்ற போதிலும், சில மகான்கள் தெய்வீகத் தன்மையை அனுபவிக்கிறுர்கள். பிறகு அவர்களிடம் அப் பேரொளி வெளிப்படையாகப் பிரகாசிக்கிறது. இதற்கு கிருஷ்ணர் காரணம் கூறுகிறுர். சிலர் தங்களுடைய ஆழ்ந்த வழி பாட்டு முயற்சியினுல் ஆன்மாவும் தாங்களும் ஒன்றே என்பதைக் கண்டு கொள்ளுகிறுர்கள். எனவே தெய்வீகப் பேரொளி அவர் களிடம் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

தனது அகந்தையை பற்றுதல்களிலேயே உழன்று கொண் டிருக்கும் ஒரு உள்ளம் முழுமையின் பேரானந்தத்தை அனுப விக்க முடியாது. ஆனுல் அதே உள்ளம் அந்த வெளி உலகப் பற்றுதல்களைத் துறந்தவுடன், இலட்சிய நாட்ட முயற்சிக்கும், தானே அந்த இலட்சியம் என்று கண்டு கொள்வதற்கும் தகுந்த ஒரு கருவியாகிறது. ஒருவர் தெளிவாக இருக்கிறுரா அல்லது குழப்பத்தில் ஆழ்ந்திருக்கிறுரா என்பதை அவருடைய மனநிலை யிலிருந்து கண்டுபிடித்து விடலாம். புற உலகில் திரியும் ஆவல் கொண்டு துடிக்கின்ற, பொருள்களைக் கொண்டு திருப்தியும் மகிழ்ச்சியும் அடைகின்ற ஒரு உள்ளம், நிலையில்லா இனங்களு டன் தன்னைப் பிணைத்துக் கொள்ளுகிறது. பிறகு ஏமாற்றமும் துன்பமும் அடைந்து ஓலமிடுகிறது. வெளியுலகப் பொருள்களை

* அன்பர் ஒருவர் தமது அன்புக்குரிய மற்றவரிடம் தம்மையே காண்பதுதான் தலைசிறந்த அன்பு என்று ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது.

உந்தித் தள்ளி, ஆன்ம நாட்டம் கொள்ளும்போது அதே உள்ளம் தானே அந்த ஆன்மிக மையம் என்பதைத் தெரிந்து கொள்கிறது.

குளிர் காலத்தில் அறைக்குள் உட்கார்ந்திருந்தால் குளிரத் தான் செய்யும். ஆனுல் வெளியில் இதமான வெய்யில் காய்ந்து கொண்டிருக்கிறது. அறையிலிருந்து வெளியில் வந்து நிற்பவன் சுகமான கதகதப்பை அனுபவித்து ஆனந்திக்கிறுன். அறைக்குள் ளேயே பதுங்கிக் கிடப்பவன் குளிரினுல் கஷ்டப்படுகிறுன். சூரிய னுக்கு வெளியில் வந்தவனிடம் அன்பும், உள்ளே இருப்பவனிடம் வெறுப்பும் இல்லை. வெய்யிலில் நிற்பவனுக்குக் கதிரவன் 'அருள்' கிடைக்கிறது. உள்ளே இருப்பவனுக்கு அது இல்லை, என்பதை இப்பாடல் எடுத்துரைக்கிறது.

பாதகமான நிலையில் தலை வணங்கிப் போய்விட வேண்டும் என்று கீதை எந்த இடத்திலும் சொல்லவில்லை. தமக்குள்ள பலவீனங்களையும், தகுதியின்மையையும் கூட எதிர்த்துப் போராடுமாறு மனிதனை இந்நூல் ஊக்குவிக்கிறது. செயலாக் கத்தையும், எதிர்காலத்தில் நம்பிக்கையையும் அதிகரிப்பதுடன், சூழ்நிலைகளை மாற்றியமைக்கும் சக்தி மனிதனுக்கு உண்டு என்பதையும் வற்புறுத்துவதே கீதையின் சிறப்பு.

தனது ஆன்ம இயல்பை அறிந்து கொள்ளுவதற்கான இந்த வழி நல்லவர்களுக்கு மட்டும்தானு, அல்லது மற்றவர்களுக்கும் உண்டா?

*அபிசேத்ஸுதுராசாரோபஜதே மாமனன்யபாக்*
*ஸாதுரேவஸ மந்தவ்ய: ஸ்ம்யக்வ்யவஸிதோ ஹிஸ: 9:30*

மிகக் கொடியவனும் கூட, வேறு ஈடுபாடுகள் எதுவுமின்றி (ஒரு முகமாக) என்னையே வழிபட்டால், சரியான முடிவுக்கு வந்துவிட்ட காரணத்திற்காக அவனையும் நல்லவன் என்றே கருத வேண்டும்.

தனது சத்துப் பொருளாக விளங்குவது இருமையில்லா பிரம்மனே என்பதை உறுதியாகக் கொண்டு, சாதகன் அதை சுயநலமற்ற முறையில், ஒருமுகமாக தியானித்து வருவதே பக்தி. பக்தி என்ற சொல்லுக்கு கீதை கூறும் சிறப்புப் பொருள் இது. இவ்வகையில் பக்தி முறையைக் கடைப்பிடித்து வருபவர் களுக்குக் கிடைக்கும் பயனை விவரிப்பதன் மூலம், பக்தியின் உயர்வை பகவான் இங்கு வெளியிடுகிறுர். தீவிரமாகவும் மனப் பூர்வமாகவும் பக்தி செய்து வந்தால், நாளடைவில் அவன் பெறும் வளர்ச்சி இங்கு படம் பிடித்தாற்போல் அமைந் திருக்கிறது.

கொடிய செயல்களில் ஈடுபட்டிருந்தவனுக்கு சமுதாயத்தில்

இடமில்லை என்றும், மேல் உலகத் தலைவாயிலை மிதிக்கக்கூட அவனுக்குத் தகுதியில்லை என்றும் ஒருவகை உணர்ச்சி சிலரிடம் இருந்து வருகிறது. வேத நூல்களை சரியாகப் புரிந்து கொள்ளாதவர்களே அப்படி நினைப்பார்கள். வேதங்கள் கண்டிப்பது பாவங்களைத்தான். அவற்றில் ஈடுபட்டவர்களை அல்ல. ஒருவனை பாவச் செயல்களில் ஈடுபடுத்துவது அவன் உள்ளத்தில் பாயும் கொடிய சிந்தனைகளே. அச்சிந்தனைகளின் இயல்பை மாற்றி விட்டால் அவனுடைய போக்கு முற்றிலும் மாறிவிடும். இறைவனைப் பற்றிய நினைப்பு உள்ளத்தில் இடையறாது இருக்கும் நிலையை ஒருவன் எட்டி விட்டால், அவனுடைய அக வாழ்வு அடியோடு மாறி விடுகிறது. செய்துவரும் கொடுமைகளை அவன் தானாகவே கைவிட்டு விடுகிறான். அவனுடைய வாழ்க்கையின் போக்கு மாறி விடுகிறது. மிகக் கொடியவன் என்னை வழிபட்ட போதிலும் பாவங்களில் மூழ்கியவர்கள் கூட, அதிலிருந்து மீண்டு நல்வாழ்வு பெற வழி இருக்கிறது என்று கூறுவதுடன் கீதை நின்றுவிடவில்லை. அவர்களைக் கரை ஏற்றியே தீருவது என்ற இலட்சியத்துடன் மிக மும்முரமாக அவ்வேலையில் கிருஷ்ணர் இறங்குவதைப் போல் தோன்றுகிறது. தீமைகள் செய்வதால் அவர்களுடைய வாழ்க்கை கறை படிந்திருந்த போதிலும், ஆன்மீக வாழ்விலிருந்து அவர்கள் விலக்கி வைக்கப்படவில்லை. ஆனால் ஒன்று மட்டும் மிக அவசியம். ''வேறு ஈடுபாடுகள் எதுவுமின்றி'' அவர்கள் ஆன்ம வழிபாட்டில் மூழ்கிவிட வேண்டும் என்ற நிபந்தனை அழுத்தமாக விழுந்திருக்கிறது. ஒரே குறியாக (அனன்ய) என்னும் சொல் வழிபடுபவனுடைய உள்ளத்திற்கும் பொருந்தும். நிரந்தரமான, இருமையற்ற மாபெரும் இலட்சியத்தில் ஒரே குறியான உள்ளத்துடன் ஈடுபடுபவர்களுக்குத்தான் வழிபாடு பயன் அளிக்கும் என்று இங்கு உபயோகித்துள்ள சொற்களிலிருந்து தெரிகிறது. அந்த இருமையில்லாத ஆன்மா தனது சாராம்ச பொருளிலிருந்து வேறுபட்டதல்ல என்ற தெளிவுடன் ஒருவன் வழிபாடு செய்ய வேண்டும்.

அவனையும் நல்லவன் என்றே நினைக்கலாம்—

இன்று வரை ஒருவன் கொடியவனாக புலன் இன்ப வாழ்வில் உழல்பவனாக, கட்டுப்பாடு இல்லா உணர்ச்சி வெறியுடன் இயங்குபவனாக குரூர உள்ளம் படைத்தவனாக இருக்கலாம். ஆனால் அவனும் கூட இறைவனை தியானம் செய்யும் அளவுக்கு மனம் மாறி, அதில் தீவிரமாக ஈடுபட்டு விட்டால், அவனையும் நல்லவனாகக் கருத வேண்டும் என்று கிருஷ்ணர் கூறுகிறார். பிறகு வரப் போகும் நிலையை முன்னடியே வந்துவிட்டதைப் போல் எடுத்துரைக்கும் வழக்கம் எல்லா மொழிகளிலும் உண்டு. மாவு கூட பிசைந்திருக்க மாட்டார்கள். 'இருங்கள், ரொட்டி சுடுகிறேன், சாப்பிட்டுவிட்டுப் போகலாம்' என்று சொல்லு

வார்கள். அடுப்பில் தண்ணீரை வைத்துவிட்டு 'இதோ டீ தயாரித்துக் கொண்டிருக்கிறேன்' என்று கூறுவதை சாதாரணமாக எல்லோரும் கேட்டிருக்கலாம். மாவைத் தட்டி போட்டுவிட்டு 'இதோ ரொட்டி தயார்' என்பதும் தண்ணீரை அடுப்பில் வைத்தவுடன் ''இதோ டீ தயாராகிறது'' என்பதும் மொழி வழக்கு—அதாவது தயாராகப் போகும் பண்டத்தை ஏற்கனவே தயாராகிவிட்டதுபோல் பேசுவது. இங்கும் கிருஷ்ணர் அவ்வாறே செய்கிறார். 'தெய்வீகப் பாதையை' மேற்கொண்ட ஒருவன் 'முனிவனைப் போன்று நல்லவனாக ஆகிவிட்டது போல் பேசுகிறார். வெகு விரைவில் ('உரிய நேரத்தில்') (அசிராத்) தனது போக்கை மாற்றிக்கொண்டு, பெருமைமிக்க ஆன்மிகச் சூழ்நிலையில் அவன் நிச்சயமாக வளர்ச்சி பெறப் போவதைக் காட்டுவதற்கு முன் கூட்டியே அவ்வாறு கூறுகிறார். அவ்வாறு கூறுவதற்குக் காரணமும் இங்கு விளக்கப்படுகிறது.

''அவன் சரியான முடிவுக்கு வந்து விட்டதால்'' அவ்வாறு கருத வேண்டும் என்று கிருஷ்ணர் கூறுகிறார். தெய்வீக வாழ்க்கை முறையில், இயந்திரம்போல் வழக்கமாக ஏதோ ஒன்றைக் கடைப்பிடித்து நடந்து வருவதைவிட. சிந்தித்து முடிவுசெய்து செயல் புரிய முன் வருவது எவ்வளவோ சிறந்தது. பஞ்சத்தில் அடிபட்ட கால் நடைகள் எதிர்ப்பட்ட தடத்தில் தள்ளாடிக் கொண்டு போய், கடைசியில் கசாப்புக் கடையில் மாட்டிக் கொள்ளுவதைப்போல், பெரும்பாலான சாதகர்கள் ஏதோ ஒரு ''மார்க்க''த்தில் காலடி எடுத்து வைத்துவிட்டு போராடிக் கொண்டு நிற்கிறார்கள். இதைப் போன்ற துயரகரமான போக்கு அவர்களை இலட்சியத்திற்கு இட்டுச் செல்லாது. காலம் என்ற கசாப்புக் கடைக்காரனுடைய கையில் மாட்டிக்கொண்டு, துண்டு போடப்படுவதைத் தவிர, அவர்களுக்கு வேறு எவ்விதப் பயனும் கிடைக்கப் போவதில்லை. சிந்தித்துச் செய்த முடிவு ஒருவனுடைய உள்ளத்திற்கு இரும்பு போன்ற மன உறுதி அளிக்கிறது. பிறகு அவன் தேர்ந்தெடுத்த வழியில் செல்வது மகிழ்ச்சிகரமாக, உற்சாகம் அளிப்பதாக, பெருமைமிக்கதாக இருக்கும். அந்த முறையில் செயல்படுபவனுக்கு வெற்றி நிச்சயம். எனவேதான் குழலூதும் பெருமகன் ''சரியான முடிவுக்கு வந்த கொடியவன் கூட, அந்தக் கணத்திலிருந்தே நல்லவனாகிறான்'' என்று கூறுகிறார். மனப்பூர்வமாக முடிவு எடுத்து, தன் வாழ்க்கையை மாற்றிக்கொள்ளும் அளவுக்கு மாறியவன் முன்பு எவ்வளவு கொடியவனாக இருந்த போதிலும் எதிர்காலத்தில் முழுமை பெற்றவனாக ஆக முடியும் என்பதில் சந்தேகமில்லை.

அர்ஜுனனுக்கு உற்சாகம் அளிப்பதற்காக கிருஷ்ணர் இப்படியெல்லாம் சும்மா சொல்லி வைக்கிறாரோ? அவர் விளையாட்டாகப் பேசவில்லை என்று நமக்கு எப்படித் தெரியும்? ஒருமுக

வழிபாட்டு முறையினால் தோன்றும் விளைவு என்ன?

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வத்சாந்திம் நிகச்சதி
கௌந்தேய பரதி ஜானீஹி ந மே பக்த: ப்ரணச்யதி

**9:31**

விரைவிலேயே அவன் தர்மாத்மாவாகி, பூரண சாந்தி பெறுகிறான். கௌந்தேயா, என்னை வழிபடும் எவரும் அழிவதில்லை என்று தெரிந்து கொள்.

தாம் சொல்லியது* வெறும் பேச்சு அல்ல; அது தர்க்க ரீதியானது என்று பகவான் இங்கு விளக்குகிறார். தீய நடத்தைகளிலேயே மூழ்கியிருந்த ஒருவன் தனது வாழ்க்கையை மாற்றிக் கொள்ளுவது என்று திட முடிவுக்கு வந்து, ஒருமுகமான வழிபாட்டில் இறங்கிவிட்டால், அவன் 'விரைவில் தர்மாத்மா ஆகிறான்.' தருமம் என்றால் 'வாழ்க்கையின் விதி,' என்று ஏற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது. சுடுவது நெருப்பின் தருமம். அந்த 'விதி'யை மீறினால் அது நெருப்பு ஆகாது. மனிதனுடைய தருமம் ஆன்மிக இயல்பு. ஆன்மிக இயக்கம் இல்லையென்றால் அவனுடைய உடல், மனம், அறிவு எதுவுமே வேலை செய்யாது. எனவே 'தர்மாத்மா' என்பதை அப்படியே உபயோகிப்பதைத் தவிர வேறு வழியில்லை. வேறு எவ்விதமாகவும் அதை மொழி பெயர்க்க முடியாது.

ஒருமுகமான வழிபாடு, உண்மையான சுய முயற்சி இந்த இரண்டும் உள்ளத்தை ஒருநிலைப்படுத்தி அறிவுக் கூர்மையை அதிகரிக்கின்றன. தியானத்தில் ஒருவன் வானளாவப் பறந்து கொண்டிருந்த போதிலும் அவனுடைய உள்ளம் சீர்குலைந்து விடுவதில்லை. நாளடைவில் அவன் அமைதிப் பேரின்ப நிலையின் எல்லைக்கு வந்து விடுகிறான். ஆன்மிக நறுமணத்தை உணர்ந்து அனுபவிக்கும் முனிவரைப் போல அவன் தனது நோக்கங்களிலும், சிந்தனைகளிலும், செயல்களிலும் இறை மாண்பு துலங்க வாழத் தொடங்குகிறான்.

வாழ்வுக்கு வலுவான அடிப்படையளித்துப் பாதுகாக்கும் இப்பெரும் அமைதி மாளிகையைத்தான் தெய்வீகமான சாந்தி நிலை என்று கூறுகிறார்கள். அந்த நிலை பெற்ற பிறகு, மனம் அசட்டு வெளியுலக இன்பங்களில் திளைத்து கலக்கமும், பரபரப்பும் அடைவதில்லை. மனிதனின் இயல்பான ஆன்ம உணர்வு பெற்று வாழத் தொடங்குகிறோம். உலகத்தில் இந்த சாந்தி நிலையை வற்புறுத்தாத மதமே இல்லை. மனம் அமைதி

---

*கொடியவனும் கூட தனது போக்கை மாற்றிக்கொண்டு சரியான வழியில் நடக்கத் தொடங்கிவிட்டால், அந்தக் கணத்திலிருந்தே அவனை ஒரு மகானாகக் கருதலாம் என்று கிருஷ்ணர் அவனுடைய வளர்ச்சியை முன் கூட்டியே முந்திய செய்யுளில் அறிவித்தது காண்க.

யுற்று அடங்கியவுடன் நாம் இலட்சியத் தெளிவு பெறுகிறோம். அமைதியடைந்த உள்ளத்தைத் திறந்த ஜன்னலுக்கு ஒப்பிட லாம். அதன் வழியாகப் பார்த்தால், பேருண்மைக் கண்ணுடியில் ஒருவர் தமது பிரதிபலிப்பையே காண்கிறுர். 'உண்மையான பக்தன் விரைவில் எல்லேயற்ற அமைதி நிலேயை எட்டுகிறுன்'' என்று சொன்னவுடன், அந்த இலட்சியம் எங்கேயோ வெகு தூரத்தில் இருக்கிறது என்று நினேத்துவிடக் கூடாது. தன் உண்மை இயல்பை ஒருவன் மீண்டும் கண்டுகொள்வதையே கீதை இவ்வாறு குறிப்பிடுகிறது.

முழுமைக்கும், முழுமை பெரு நிலேக்கும் உள்ள தூரம் விழிப்புக்கும் கனவுக்கும் இடையிலுள்ளதைப் போன்றதுதான். சரியான நோக்கில் இருந்தால் தனது ஆன்மிக இயல்பை ஒவ்வொ ருவனும் அறிந்துகொள்ள முடியும். காமிராவை குறிப்பிட்ட தூரத்தில் வைக்காமல் ஒரு காட்சியைப் படம் பிடித்தால், அப் புகைப்படத்தில் நாம் எதிர்பாராதது எல்லாம் காணப்படும் நமக்கே குழப்பமாகி விடும். பொருளுக்கும் காமிராவுக்கும் உள்ள தூரத்தைக் கணக்கிட்டு சரியாகப் படம் எடுத்தால் அது மிகக் கச்சிதமாக இருக்கும். சிறு சிறு நுணுக்கங்கள் கூட மிக நன்ருகத் தெரியும். காமிரா அதே காமிராதான்; படம் பிடித்த காட்சியும் ஒன்றுதான். ஆனுல் காமிராவைக் கையாளும் முறையி ஞல் தான் படத்தில் குழப்பமோ தெளிவோ காணப்படுகிறது. மனம் கோரிக்கை அலேகளிலும் உணர்ச்சிகளிலும் விழுந்து தடு மாறிக் கொண்டே இருப்பதால் நமக்குள்ளேயே இருக்கும் பேருண்மைப் பொருள் நமக்குத் தெரிவதில்லே. நமது மனம் என்னும் காமிராவையும் சரியாகக் கையாளத் தெரிந்தால் படம் அற்புதமாகத் தெரியும்.

கிருஷ்ணரின் உள்ளத்தில் பொங்கிவரும் பிரசார வேகத்தையும், உற்சாகத்தையும் இப்பாடலின் இரண்டாவது வரி நன்ருக எடுத்துக் காட்டுகிறது. தீய செயல்களில் ஊறிக் கிடந் தவன் கூட, தனது மனத்தை மாற்றிக்கொண்டு இறை நாட்ட யாத்திரை தொடங்கியவுடன் அவனுடைய வளர்ச்சியும் ஆரம்ப மாகிறது. அவன் நாளடைவில் அமைதி நிலே பெறுகிறுன் என்று சொல்லிவிட்டு ''எனது ஈடுபாட்டில் லயித்தவனுக்கு என் றைக்கும் அழிவில்லே'' என்று பகவான் கூறும்போது, அர்ஜுன னுடைய தோளில் தட்டிக் கொடுப்பதைப் போன்ற காட்சி நம் கண்முன் எழுகிறது.

மதிப்புக்குரிய மேலான இலட்சியத்தில் அசையாப் பற்று கொண்டு மனப்பூர்வமாகச் சுய முயற்சி செய்பவருக்குத் தோல்வி என்ற பேச்சே இல்லே. மறுக்க முடியாத இந்த உண்மையை அர்ஜுனன் கோபுர உச்சியிலிருந்து பறை சாற்றலாம் என்று நமது பழங்கால மாமுனிவர்களேப் போல் கூறுகிறுர் கிருஷ்ணர். அவர்

உபயோகிக்கும் 'பிரதிஜானீஹி' என்ற சொல்லுக்கு 'தெரிந்து கொள்' என்று பொருள் கூறுவது போதாது. இது சமஸ்கிருதம் தெரிந்தவர்களுக்கு நன்கு தெரியும். 'உறுதியாக திட்டவட்டமாக தெரிந்துகொள்' என்று பொருள் சொல்லுவது ஓரளவு பொருத்த மாக இருக்கலாம். ஆனால் கிருஷ்ணர் இதைவிட அழுத்தமான பொருளில் அச்சொல்லை உபயோகிக்கிறார்.

மொத்தத்தில், இடையறா இறைத் தத்துவ உணர்வு கொண்டு மனத்தை அவ்வுணர்வுக்கு உட்படுத்தி நடந்து கொள் பவர்கள், ஆன்மிகத் துறையில்மட்டுமின்றி வெளியுலகிலும் முன் னேற்றம் காண்கிறார்கள் என்பதை இந்த இரண்டு பாடல்களும் தெளிவாக்குகின்றன. நாம் அணிந்திருக்கும் உடையின் நிறம்எது வாக இருந்த போதிலும், நீல விளக்குக்கு அடியில் போய் நின்றால் நமது உடை நீலமாகக் காணப்படுகிறது. ஆன்மீக உணர்வு ஒளியில் ஒருவருடைய தீய எண்ணங்களும் கூட முழுமையின் தெய்வீக ஒளி பெற்றுத் திகழ்கின்றன. ஆடைகளைப் பூச்சிகள் அரித்துவிடாமலிருக்க பெட்டிகளில் நாம் அந்துருண்டைகளைப் போட்டு வைப்பதுபோல மனிதனின் தெய்வீக இயல்பு பற்றிய நினைவு மனத்தில் இடையறாது இருந்து வந்தால், அகத்துறையில் தோன்றும் எதிர்மறைப் பூச்சிகள் நமது ஆளுமையை அரித்துவிடாமல் பாதுகாக்கும் என்பதில் ஐய மில்லை.

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய
யேபிஸ்யு: பாபயோனய:
ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ராஸ்
தே பி யாந்தி பராம் கதிம் 9:32

ஏனெனில் என்னைச் சரணடைந்தவர்கள் மாதர், வைசியர், சூத்திரர் போன்ற 'பாவப் பிறவி'களாக இருந்த போதிலும், அவர்களும் ஒப்பற்ற இலட்சியத்தை அடைகிறார்கள்.

தீயவர், செல்வாக்கினாலும், சூழ்நிலை பாதிப்புகளாலும் தவறான பாதையில் சென்று கொண்டிருந்தவர்கள், தங்க ளுடைய போக்கை மாற்றிக்கொண்டு மேம்பாடு பெற இட மிருக்கிறதென்று முந்திய இரு செய்யுட்களில் வலியுறுத்தப் பட்டது. ஆன்மிக இசைவுக்குத் தேவையான உள்ளமும் அறிவும் பிறவியிலேயே பெறாதவர்களும் கூட இறை வழிபாடு மூலமாக வளர்ச்சிப் பாதையில் முன்னேற இடமிருக்கிறது என்று இங்கு எடுத்துரைக்கப்படுகிறது.

இப்பாடலில் உள்ள சொற்களும் வேதங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள் ஆகியவற்றில் இருப்பவை போலவே தோன்று கின்றன. ஆனால் மாதர், வர்த்தகர் (வைசியர்), பணியாளர்

(சூத்திரர்) போன்றவர்களை பிறவியிலேயே தாழ்ந்தவர்களாக ஒரு மதம் கருதுகிறது என்றால், அது ஒரு சிலருக்கு மட்டுமே பயன் படும் மதமாகத்தான் இருக்கவேண்டும். கிருஷ்ணர் முதலி லிருந்தே கூறி வருவதற்கு இது மாறான கருத்து, எனவே அவ ருடைய சொற்களுக்கு உண்மையான பொருள் என்ன என்று தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது.

மதம் ஒருவனுடைய உடலை வளர்க்கும் அல்லது உடல் நட வடிக்கைகளின் மூலம் நிறைவுபெறும் கலையோ அல்ல. ஒரு வருடைய உடற்கட்டுக்கும், ஆன்மிக வளர்ச்சிக்கும் சம்பந்தமே இல்லை. ஆன்மிகத் துறையிலும் சில செயல்முறைகள் கை யாளப்படுகின்றன என்றால், அவை ஒருவருடைய மன அறிவுக் கருவிகள் இசைவு பெறுவதற்காக மேற்கொள்ளப்படுபவை. அந்த நோக்கம் நிறைவேறியவுடன், அவை வாடிய மலர்களைப் போல தாமாகவே உதிர்ந்து விடுகின்றன. பிறகு அந்த சுயம் பிரகாசப் பேருணர்வு மட்டும் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. இங்கு உபயோகித்திருக்கும் சொற்கள் அவரவர்களுடைய மன—அறிவு சாதனங்களின் இயல்புகளைப் பற்றி பேசுகின்றன என் பதை முதலில் தெளிவாக்கிக்கொள்ள வேண்டும். இந்த இயல்புகள் வெவ்வேறு மனிதர்களிடம் வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு அளவுக்கு உருவாக்கம் பெறுகின்றன.

மிதமிஞ்சிய பாசமும், அளவற்ற பற்றுதலும் கொண்டவை 'பெண் உள்ளங்கள்.' சிலருடைய சிந்தனைகளும் செயல்களும் எப்போதும் லாப நோக்கத்தையே அடிப்படையாகக் கொண் டிருக்கும். இவை 'வர்த்தகக் கண்ணோட்டம்' என்று பொதுப் படையாகக் கூறலாம். மனத்தை இந்த அளவுக்கு இறைப் பணி யில் முதலீடு செய்தால் இவ்வளவு லாபம் வரும் என்று கணக்குப் போட்ட வண்ணம் இருப்பவர்கள் சுலபமாக தியான மார்க்கத்தில் ஈடுபட்டு உயர்நிலை அடைய முடியாது. பலனை எதிர் பார்க்காமல் செய்யும் பணியின் மூலமே உள்ளத்தில் சாந்தி ஏற் படுகிறது. மன அமைதியின் ரகசியமே அதுதான். அப்படி அமைதி பெற்றவுடன், ஒருவருடைய மனம் உயிரியக்கத்தின் அடிப்படை யுடன் கலந்து தூய ஆன்ம நிலை எய்துகிறது. எல்லாவற்றிலும் சிலர் லாப நஷ்டக் கண்ணோட்டம் காட்டுவதால் அவர்களுடைய ஆன்மீக வளர்ச்சி தடைப்படுகிறது என்பதை ஆன்மீக விஞ்ஞானம் சுட்டிக் காட்டி அதைக் கண்டிக்கிறது. கடைசியாக உறக்க நிலையும், மந்தப் போக்கும், உள்ளத்தில் கொண்டவர்களை 'சூத்திரர்' என்ற சொல் குறிப்பிடுகிறது.

மன—அறிவு நிலையை விளக்கும் சொற்கள் இவை. நமது சாத்திரங்கள் தோன்றிய காலத்தில் இந்த வார்த்தைகளின் உண்மையான பொருள் எல்லோருக்கும் தெரியும். ஆகையால் கிருஷ்ணரும் இவற்றை உபயோகிக்கிறார். இவற்றின் சரியான

அர்த்தத்தைத் தெரிந்துகொண்டால்தான் இப்பாடலை சரியாகப் புரிந்துகொள்ள முடியும். மனித இனத்தின் வளர்ச்சிக்கு ஆணி வேராக விளங்கும் கீதையின் சிறப்பைக் கெடுத்து விடாமலிருக்க இது மிகவும் அவசியம்.

தீமை செய்து வந்தவர்கள் மட்டுமின்றி, ''தெய்வீகப் பாதை''யை பின்பற்ற முடியாதவாறு மன—அறிவு இயல்பின் இடையூறுகளுக்கு உள்ளானவர்களும்கூட தங்களுடைய இயலாமை நீங்கப் பெற்று, மெய் வழியில் செல்லும் வலிமை பெறலாமென்று இங்கு எடுத்துரைக்கப்படுகின்றது. இந்த முயற்சியில் வெற்றி பெற விரும்புவோர் ஒருமுகமாகவும், மனப்பூர்வமாகவும் தம்முள் இருக்கும் இறைப் பொருளை தினந்தோறும் வழிபடுவதுடன் எப்போதும் அந்த நினைவாகவே வாழ்ந்து வர வேண்டும்.

பாவப் பிறவி—வேதாந்தத்தில் 'பாவம்' என்பது ஆன்மிக வளர்ச்சியைத் தடை செய்யும் தவறான மனப்போக்கையும், அதன் விளைவாக எழும் செயல்களையும், குறிக்கிறது. கடந்த கால நோய் பிடித்த சிந்தனைகளினாலும், தரக் குறைவான செயல்களினாலும் ஒருவருடைய மனத்தில் ஏற்பட்டுள்ள 'வாசனை'த் தடங்கள் முறையற்ற பாதையில் இப்போது அவரை இழுத்துச் செல்வதுடன் மற்றவர்களுடைய வாழ்க்கையிலும் குழப்பத்தைப் புகுத்துகின்றன. மனத்தின் பெண்மை இயல்பு (ஸ்திரீத்துவம்). அறிவின் வர்த்தகக் கண்ணோட்டம் (வைசியத்துவம்) அக நிலையின் மந்தப் போக்கு (சூத்திரத்துவம்), இவை எல்லாம் கடந்த கால 'வாசனை'களிலிருந்து எழுபவை. ஆன்ம உணர்வு பெறுவதற்கு இடைஞ்சலாக இருப்பவை இவை என்று குறிப்புணர்த்தப்படுகிறது. செய்யுளுக்கு வெறும் பதவுரை கூறிவரும் அசட்டுப் பண்டிதர்களுக்கு இந்த உட்பொருள் தெரியாது. வர்ணாசிரம தருமம் பற்றி கிருஷ்ணர் முன்னரே விளக்கியிருப்பதை* அவர்தள் மறந்து விடுகிறார்கள்.

உள்ளத்தில் இவ்வளவு 'வாசனை'த் தடங்கள் இருக்கும் போது வேத நூல்களைப் படிப்பதில் எவ்வித பயனும் இல்லையே என்ற கருணை பொங்க, வேதங்களைப் படிக்க வேண்டாம் என்று அவர்களிடம் நமது மாமுனிவர்கள் கூறியிருந்தார்கள். நமது புனித நூல்களைப் படித்து பயன் பெற வேண்டுமானால் முதலில் ஆன்மிகப் பயிற்சி (சாதனை) அவசியம். மனப்பூர்வமான அன்பும், ஆழ்ந்த ஈடுபாடும் கொண்டு, இறைவனை இடையறாது போற்றி வருவதே (உபாசனையே) ஆன்மிகப் பயிற்சி. உபாசனை மூலம் மனம் தூய்மை அடைகிறது என்று வேதாந்தம் பறை சாற்றுகிறது. அதாவது, மாதர், வர்த்தகர், பணியாளர் என்ற பெயர்கள் மூலம் குறிப்பிடப்படும் மனப்போக்குகள் குறைந்து,

* அத்தியாயம் 4, செய். 13—ல் காண்க.

அவ்வகை பலவீனமுள்ளவர்கள் தூய்மை பெறுகிறார்கள்.

ஒருவருடைய வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் இயல்புகளை மனத்திலிருந்து அகற்றிவிட்டால், அவ்வாறு தூய்மை பெற்ற உள்ளம் எதிலும் ஒருமுகமான, ஆழ்ந்த ஈடுபாடு கொள்ளும் வலிமை பெற்று, சிந்தனையின் தொடுவானத்தை எட்டத் தகுதியுள்ளதாகிறது. இப்படி தகுதி பெற்று மன—அறிவுக் கருவிகளுடன் யாத்திரை தொடங்கினால், விரைவில் இலட்சியத்தை அடைந்து விடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அதனால்தான் கிருஷ்ணர் ''அவர்களும்கூட ஒப்பிலா இலட்சியத்தை அடைகிறார்கள்'' என்று வாக்குறுதி அளிக்கிறார்.

இதை அடுத்து, ஆன்ம உணர்வுப் பாதையை மேற்கொள்ளுமாறு அர்ஜுனனை பகவான் தூண்டுகிறார்.

கிம் புனர்ப்ராஹ்மணா:புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா
அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் 9:33

அப்படியிருக்க புண்ணியப் பிராமணர்களுக்கும், பக்தி மிக்க ராஜரிஷிகளுக்கும் (இலட்சிய நிலையை எட்டுவது) எவ்வளவு சுலபம்? நிலையற்ற, இன்பமற்ற இவ்வுலகத்தை நீ அடைந்துள்ளதால் என்னைத் தளரா உறுதியுடன் வழிபடு.

தெய்வ நிலை அடையும் முயற்சியில் முற்கூறிய வகையினருக்கு பெரும் இடையூறுகள் தோன்றுகின்றன. ஆனால் பிராமணர்களின் அகத் தூய்மையோ, ராஜரிஷிகளின் பரந்த உள்ளம், தெளிந்த சிந்தனை ஆகியவையோ பெற்றவர்கள் ஆன்ம உணர்வும், இறை வாழ்வும் பெறுவது எவ்வளவு சுலபம்? மிக சுலபம் என்பதை விடை வினவாக, மிக அழுத்தமாக பகவான் கூறுகிறார்.

ஒரு அரசர் தமது அதிகாரத்தையும், செல்வத்தையும் நல் வழிகளில் பயன்படுத்தி ஆட்சி புரிந்து வரும்போது, இவ்வகை இன்பத்தின் இயல்பை அவருடைய விவேகமே அவருக்கு சுட்டிக் காட்டுகிறது. எனவே அதிகாரமும், செல்வமும் அவருக்குத் திகட்டிப் போகிறது உண்மையான ஆன்ம சிந்தனையினால் உள் அமைதி பெறுகிறார். இவ்வாறு ஆன்ம உணர்வுடன் ஆட்சியைத் தொடர்ந்து நடத்தி வருபவர் ராஜரிஷி.

எல்லாவிதமான சிந்தனை, உணர்ச்சிப் போக்குள்ளவர்களையும் விவரித்து, அவர்கள் தங்களுடைய தெய்வீக இயல்பைத் தெரிந்து கொள்ளுவதற்கு ஏற்ற முறைகளையும், விளக்கிய பிறகு, ''நிரந்தரமோ, இன்பமோ இல்லாத இவ்வுலகை அடைந்துள்ள இந்நிலையில் என்னை நீ ஆழ்ந்த பக்தியுடன் வழிபடு'' என்று கிருஷ்ணர் ஆலோசனை கூறுகிறார். அவர் இதை அர்ஜுனனுக்கு சொல்லுகிறார் என்றாலும், இது எல்லாருக்கும் பொருந்தும்.

கிருஷ்ணர் ஆன்மாவின் உருவகம். அர்ஜுனன் வாழ்க்கையின் சவால்களை எதிர்த்து நிற்க முடியாமல் குழம்பி நிற்கும் ஒரு மனிதன். எனவே பகவான் அர்ஜுனனுக்குச் சொல்வது, அவனுடைய நிலையிலுள்ள ஒவ்வொருவருக்கும் சொல்லும் ஆலோசனையாக நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

பொருள்கள், சாதனங்கள், மனநிலைகள் ஆகியவற்றினால் உருவாகியுள்ள உலகில் நாம் வாழ்ந்து வருகிறோம். இம் மூன்றும் மாறிக்கொண்டே இருப்பவை. ஆகையால் வாழ்க்கையில் அவ்வப்போது வரும் இன்பத் துளிகள் நிலையற்றவையாக இருப்பதில் வியப்பில்லை. ஒரு இன்ப அனுபவம் மறைந்து, மற்றொன்று தோன்றுவதற்கு முன் உள்ள இடைக் காலம் துன்பம் நிறைந்ததாக இருக்கிறது.

சிறப்புமிக்க எதிர் காலத்திற்கு வழிகாட்டும் விறுவிறுப்புள்ள தத்துவத்தை எடுத்துரைப்பது கீதை. எனவே இவ்வுலகம் ஒரு துயரக் கடல், ஏமாற்றங்களின் இருப்பிடம், இன்பமில்லா (அசுகம்) இருட்கூடம் என்பதை சுட்டிக் காட்டி, மகிழ்ச்சிமிக்க வாழ்வுக்கு வழி வகுத்துக் காட்டுகிறது.

நிலையற்ற இன்பமில்லாத இவ்வுலகை அடைந்திருப்பதால் அர்ஜுனன், ஆன்ம வழிபாடு மேற்கொள்ள வேண்டுமென்று கிருஷ்ணர் ஆலோசனை கூறுகிறார். போதிய மனப்பக்குவம் பெறாதவர்களைப்போல்* அல்லாமல், அறிவும் நிதானமும் மேலோங்கி, பரிணாம வளர்ச்சியில் முன்னேறியவர்களுக்கு (அதாவது பிராம்மணர்களுக்கும், ராஜ ரிஷிகளுக்கும்) சுலபமாகவும், நிச்சயமாகவும் வெற்றி கிடைக்குமென்று பகவான் கூறியது அர்ஜுனனுக்கு உற்சாகம் அளித்திருக்க வேண்டும். எனவே அவனை நோக்கி, ''என்னை பக்தியுடன் வழிபடு'' என்று கிருஷ்ணர் அழுத்தந்திருத்தமாகக் கூறுகிறார்.

இவ்வளவு எதிரிப் 'படைகளின் முன் நின்று போராட வேண்டிய நிலையில் நான் இருக்கும்போது, உன்னை நான் எப்படி வழிபடுவது கிருஷ்ணா?

மன்மனா பவ மத்பக்ததோ மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி யுக்த்வைவ மாத்மானம் மத்பராயண:

*9:34*

உன் மனத்தை என்னிடம் நிலைநாட்டு. என்னிடம் பக்தி செலுத்து. (எதையும்) எனக்குச் செய்யும் வேள்வியாக்கி விடு. என்னை வணங்கு. இவ்வாறு என்னை பரம லட்சியமாகக்

கொண்டு என்னுடன் முற்றிலும் ஒன்றுபடும் நீ என்னிடமே வந்து சேருகிறாய்.

இந்த அத்தியாயத்தின் கருத்து முழுவதும் ரத்தினச் சுருக்க மாக இந்த ஒரு செய்யுளில் அடங்கி இருப்பதுடன் மற்ற பாடல் களையும் விளக்கும் முறையிலும் இது அமைந்திருக்கிறது. இந்த அத்தியாயத்தின் சில பாடல்களையே இச்செய்யுள் விளக்கு கிறது.*

ஞான மார்க்கம், தியானப் பிரதை ஆகியவற்றின் மூலமாக சுய வளர்ச்சியும் முழுமையும் பெறும் முறை பற்றி எல்லா வேதாந்த (பிரம்ம வித்தை) நூல்களும் கூறுகின்றன. ''அதைப் பற்றியே தியானம், அதே பேச்சு, அதைப் பற்றி அந்நியோன்ய கருத்துப் பரிமாற்றம்,—இப்படி ஆன்மிகப் பேருண்மையாகிய இன்ப வெள்ளத்தில் எப்போதுமே மூழ்கி இருப்பதுதான். பிரம்மனை நாடும் வழி என்பதாகத் தெரிந்தவர்கள் சொல்லு கிறார்கள்''—இவ்வாறு முற்கூறிய நூல்கள் குறிப்பிடுகின்றன.** இதை மனதிற்கொண்டுதான் வியாசமாமுனிவர் இச்செய்யுளில் பக்தி மார்க்கத்தை மிக அழகாகச் சித்தரித்திருக்கிறார். இதே கருத்து பன்முறை இந்த அத்தியாயத்திலேயே தெளிவாக்கப் பட்டிருக்கிறது.

உள்ளத்தில் என் நினைவு நிரம்பியிருக்க, எனது பக்தன் எல்லா வேள்விகளும், எல்லா வணக்கங்களும் எனக்கே செய்கி றான். அவன் செய்வது எவ்வகை வேலையாயிருந்தாலும், காலம் எதுவாக இருந்தாலும் அவன் அவ்வாறு செய்கிறான். மொத்தத்தில் வாழ்வில் எல்லா ஆன்மிக சீர்திருத்தங்களுக்கும் அடிப்படையாக இருப்பது மனத்தின் வளர்ச்சிதான். நாம் இருந்துவரும் நிலைமை, சூழ்நிலை, பழக்க வழக்கங்கள் நமது கடந்த காலம் தற்கால நிலவரம்—இவற்றில் எதுவுமே நம்முடைய ஆன்மிக வளர்ச்சிக்குத் தடையாக இருக்க முடி யாது.

இடையறாத இறையுணர்வு நம் உள்ளத்தில் நிலவுமாறு வாழ்ந்து வருவதே வெற்றியின் ரகசியம்.

''ஒப்பற்ற இலட்சியமாக என்னை ஏற்றுக்கொண்டால் நீ என்னிடமே வந்து சேருவாய்,'' என்று கிருஷ்ணர் வாக்குறுதி அளிக்கிறார். நமது சிந்தனைகள் எப்படியோ அப்படித்தான் நமது வாழ்வும் இருக்கும். உயர்தரமான தெய்வீக சிந்தனைகள் இருந் தால், நாம் சிறப்பு மிக்கவர்களாக, தெய்வத்தன்மை பெற்றவர் களாக இருப்போம்.

---

* உதாரணமாக, செய். 14, 27 ஆகியவைகளுக்கு.

** 'பஞ்சதசி'யில் காண்க.

ஓம் தத் ஸத்
இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூ பனிஷத்ஸு
ப்ரம்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
ராஜவித்யா ராஜகுஹ்ய யோகோ நாம
நவமோ த்யாய:

இந்த அத்தியாயத்திற்கு ராஜ வித்தை, ராஜ ரகசியம் என்ற தலைப்பு மிகப் பொருத்தமாக அமைந்திருக்கிறது. இந்த இரண்டு சொற்களும் ஏற்கனவே விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. தூய உணர்வு நிலையே பரிபூரண அறிவு என்று இந்த அத்தியாயத்தின் தொடக்கத்திலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த அறிவே மற்ற எல்லா அறிவுக்கும் மூல காரணமாக இருக்கிறது. ஆகையால் சிறப்புமிக்க தூய அறிவு நிலையை விளக்கும் இந்த விஞ்ஞானத்தை ராஜ ஞானம், அறிவுக்கெல்லாம் அரசு போன்றது என்று எடுத்துரைக்கப்படுகிறது. இதை 'அறிவுகளின் அறிவு' என்று உபநிடதங்கள் கூறுகின்றன. இந்த ஞானம் பெற்ற பிறகு தெரிந்துகொள்ள வேண்டியது வேறு ஒன்றுமில்லை என்று முண்டக உபநிடதம் கூறுவது குறிப்பிடத்தக்கது.